உ

சிவமயம்.

சிங்காரவேலன் திருவடி துணை.

# கந்தர்புராணவாசகம்,

முன்னங்

## கச்சியப்பகுருக்கள்பாடலிற்

## செய்திருக்குங்

கந்தர்புராணச்சரித்திரஞ்

சகலருக்குமுதவியாதற்பொருட்டு

வாசகப்படுத்த

நல்வேளாளராகியநிருமயிலைகொத்தவால்சபாபதிமுதலியார்

முதலிய

பலபிரபுக்கள்கேட்டுக்கொண்டதால்

தொண்டைமண்டலம்வேளாளர்மரபினுதித்த

வாடாதூர்

## கோவிந்தப்பமுதலியார்

குமாரர்

## பரசிராமமுதலியாரார்

கூடியமட்டும் உரைசெய்து

## தேசாபிமானி அச்சுக்கூடத்திற்

பதிக்கப்பட்டது.

கலியுகாத்தசகஸு ௪௲௯௱௪௰௬

சாலிவாகனசகஸு ௲௭௱௬௰௭ ல் நிகழ்கின்ற

விசுவாவசுஸு கார்த்திகைமீ

இங்கிலீசுக்காறர் ஆண்டு ௲௮௱௪௰௫.

இரண்டாவதுபொஸ்தகம்.

1845

சிவமயம்.

# கச்சியப்பகுருக்கள்பாடிய கந்தர்புராணத்திற்குவசனகாவியம்

## உற்பத்தியாகாண்டம்.

### ஸ்ரீகயிலாயப்படலம்.

ஓ சவுனகாதிரிஷிகளே யிப்போது நாமெடுத்துச் சொல்லாநின்றசரித்திரங்களினை பத்திபூர்வகமாகக் கேட்போருக்குநேரும்புண்ணியபலத்தினை யின்னபடித்தெனச் சொல்லப்படாது ஆதலால்ஐம்புலன்வழிகளில் மனதைப்போக்காமல் ஒருமைப்பட்டசிந்தையுடன் கேழ்ப்பீராக சிவசுப்பிறமணியதேசிகர் வெளிப்பட்டகாரணத்தினைப் பேசுவதன்முன்னம் எமதுகற்தனாகிய பரமசிவம் வீற்றிருக்கப்பெற்ற வெள்ளியங்கிரியின் பெருமைகளிற் சிலதெரிந்தமட்டுஞ் சொல்லக்கேழ்ப்பீராக கங்காசடாதரர் அணியத்தக்க திருநீற்றைப்போலவும்அவரேறிநடத்தும் ரிஷபவாகனத்தினையொத்தும் அக்கடவுளினது அன்பர்கள் பவித்திரமாகிய உள்ளத்தையொப்பாயும் மகாவிஷ்ணு. பள்ளிகொள்ள நின்ற திருப்பாற்கடலானது அன்புடன் சிவபிரானுக்கு அழகியபீடமாக நிற்பதை நிகர்த்துஞ் சோடசகலைகளையுடைய சந்திரர்கள் பலஅண்டங்களினின்றும் வந்துபரமனைச்சேவிக்கக் காலம்பார்த்து நெருங்கி யிருப்பதைப்போலவுந் தவளநிறமும் நெற்றி விழியுஞ் சதுர புயங்களும் பலவளங்களும்பரமசிவத்தின் அனுக்கிறகத்தினாற்பெற்று கரத்திற்பிரம்பினைத்தாங்கி கர்த்தன்றிருவருளைச் செலுத்திவரும் நந்திதேவர் காவல்கொண்டு வீற்றிருக்கும் பெருமையினைப்பெற்று மகாவிஷ்ணு பிரமன் இந்திரன் முதலானதேவர்க்கள் சத்தரிஷிகளேமுதலிய தவத்தர்தம்மையறியும் விவேகமுள்ளமகத்துக்கள் செயசாலிகளாகிய பூதகணங்கள் முதலாகளெக்காலத்தும்நெருங்கிச்சூழ்ந்து போற்றஅரம்பாஸ்ரீதிகள் ஆடலும்,

விஞ்சையர்கள் பாடலும் ஈசானமூர்த்தியே முதலியவிண்ணவர் செயசெயவென்றுவாழ்த்துமோசையும் மிகுத்ததாய் கீழேழுலகங்களினையுங்கடந்தாழ்ந்து மேலுலகங்களினை உருவ ஓங்கி அண்டசொள்கையின் அடிமுடியினைக்கலந்து சர்வசங்காரகாலத்திற் சகலபுவனங்களுக்கும் ஆதாரசத்தியாய்த்தன்னைச்சூழவிருக்கின்ற மகாமேரு முதலிய சத்தகிரிகளும் ஒருகாலம் அழிந்தாலும் உலகங்களெவ்விடத்துந் தனதொளியினைப் பரப்பி அண்டாண்டபுவன சராசரங்களலயப்படினுங்கொன்றைமாலையணிந்த சிவக்கொழுந்தினைப்போலச் சலனமற்றதாய்ச் சகலருக்குங்காட்சிதந்து சோலைகள் நந்தவனங்கள் அருவிகள் மகத்துக்கள்வாசஞ்செய்யுங் குகைகள்மற்றுஞ்சொல்லநின்ற மகிமைகளனைத்தையும்பெற்றுவிளங்குவது திருக்கயிலாய பர்வதமானது மேலும்பொன்வரைமுதலிய சத்தகுலாசலங்களுஞ் சத்தசாகரங்களும் அதைச்சூழ்ந்த சக்கிறவாளகிரியும் அதன் புறத்திற்றோன்றும்பெரும்புறக்கடலும் அவ்வெள்ளியங்கிரியினது நாற்புறங்களினும் மதில்கொத்தளம் அகழியினைப்போல விளங்கும்பித்தகையசிறப்புகளைவாய்ந்ததிருக் கயிலாயவரையினது நடுப்பிறதேசத்திற் சொர்னமயமாகிய மேருகிரியானது வந்திருப்பதை யொப்பாய் வானத்தினை அளாவிய பொன்மதிலும் விசாலமாய் ஆழ்ந்திருக்கும்அகழிமுதலிய உறுப்புகள் தோன்றஅதன்மத்தியில் சிரோரத்தினமயமாகிய ஒருமாளிகையிருக்கின்றது முத்துப்வழம் வயிரம் நீலமேமுதலியசிறந்தயிரத்தின வகைளினுற் சித்திரப்பிறதமைகள் விளங்க எமதுகர்த்தன் அனுக்கிறகத்தின் முயர்சியினுலுண்டாகிய சிகரங்கள் அவ்வாலயத்தினைச்சூழவிளங்கும் அதன்மத்தியிற் கோடிசூரியப் பிறகாசமாய்ச் சிறந்தரத்தின வகைகளினுற் சோடித்து விசாலமாகிய மண்டப மொன்றுண்டுஅதன்முகப்பில் சிங்கங்களினுற் றுங்கப்பட்டு திவ்வியமணியினங்களினுற் செய்தமைத்த ஆசன மிருக்கின்றது அதன்மீது பரமேஸ்பரியிடப்பாகத்தில் விளங்க வேதனுயகனுகிய சிவபிரானெழுந்தருளிய காலத்திற் றும்புருநாரதாதிகள் தேவயாழினை மீட்டி விஞ்சையர் மகத்துக்களுடன் கர்த்தன் புகழின்பெருக்கினைப் பாடித்துதிக்கவும் பரமனதுசடாமகுடத்தில் வீற்றிருக்குங் கங்காபவானியை மற்றநதிகள் போற்றிவணங்குவதைப்போல கணநாதர்கள் யிருமருங்கினும்நின்று வெண்சாமரைகளைவீசவும்பலகணங்கள் ஆலவட்டங்களைத்தாங்கவுந்தவளக்குடையினைக்கவிக்கவும் யிவ்விதஆடம்பரங்கள் மென்மேலும் நடந்துவரும்போது பரமசிவத்தினைவழிபட்டு அவர்அனுக்கிறகத்தினைப் பூர்த்தியாகப் பெற்றிருக்கின்ற கணாதிபதிகள் உருத்திரர் பூதநாயகர் முதலாகிய மகத்துக்கள் கர்த்தன் புகழினைவாயாரத்துதித்து சரங்களைக்கூப்பியெதிரில்

நிற்க அவர்களின்மீது கிருபாநோக்கத்தினைச் செலுத்தினை தயாபரனாகிய பரமேஸ்பரன் கொலுவிருக்குந் தறுவாயில் நேர்ந்தசம்பவங்களிற் சிலஅறிந்தமட்டும் யினி சொல்லக்கடவோம்.

## பார்வதிப்படலம்

ஓ சவுனகாதி தவத்தரோ யித்தகையஓலக்கத்துடன் சிவபிரானெழுந்தருளியிருக்கின்ற தறுவாயில் லோகநாயகியாகிய பராபரையானவள்மனதிலொன்றினை நினைந்து திரோகம் நடுங்கச்சடுதியில் எழுந்துபரமசிவத்தின்பாதாரவிந்தங்களிற்சேவித்து ஓ கர்த்தனே அடியாள் மனக்கவலையைப்போக்கும்வண்ணம் அனுக்கிரகஞ்செய்யவேண்டும் அதாவதுதேவரீரைமதியாமலும்தான்பெற்றவளத்துக்குமூலத்தை நினையாமலுஞ்சுலபமாகவெண்ணி உம்மையிகழ்ந்த அபராதியானதக்கனிடத்திற் பலநாள்வளந்ததுமன்றியில் அவன் பெண்ணென்னும் பெயரையும் பெற்றிருக்கின்றேன் ஆதலால் அந்நாமத்தினையும் அவனாற்பரிபாலிக்கப்பெற்றயிவ்வுடலினையும் தாங்கியிருக்கப் பயப்படுகின்றேன் அக்கவலையினை நீக்கி மகிழ்ச்சியாயிருக்கும் வண்ணங் கடாட்சிக்கவேண்டுமென்று அன்பினால் எமதன்னை விண்ணப்பஞ்செய்யக்கேட்டு ஒப்புவமையற்றபரமேஸ்பரன் நகைமுகனாய் ஓ பெண்ணே உன்பத்திவிசுவாசத்துக்கு மெச்சினோம் உன்கருத்தின் வண்ணம் முடியவேண்டுமாகில் மகம்மேருவுக்கு பந்துவாய்பலராலும் புகழும் வளமைபெற்ற இமவந்தன் உன்னைப்பெண்ணாகப் படைத்துப்போற்றி நமக்குத்திருக்கலியாணஞ் செய்துகொடுக்கவேண்டுங் கருத்தினைக்கொண்டு அரியதவங்களைச் செய்து வருகின்றனன் ஆதலால் அவன்மனக்கருத்து முற்றவும் உனதுமனவாட்டந்தீரவும் நீயானவள் யிவ்வுருவினை மாற்றிக்குழந்தையாய் அவனிடத்திற்சேருவையாகில் உன்னையெடுத்துமனமகிட்சியுடன் தனக்குப்புத்திரியென்னும் யிச்சைகொண்டு சகலசீர்சிறப்புகளுடன் போற்றிவருந் தறுவாயில் உனக்கு ஐந்தாண்டுநிறைந்தபோது நமதுகடாட்சப்படிக்கு விவேகந்தோன்றி நம்மைப்பாணிக் கிரகணஞ்செய்துகொள்ளுங் கருத்தளாய்அரியதவங்களைச்செய்யக்கடவை அக்காலத்தில் நாம் அத்தலத்தில் வந்து உன்தவத்தினைச் சோதித்தபின்பு தேவர் கணநாதர் உருத்திரர் முதலாகச் சேவிக்கத்திருக்கயிலையைக்கடந்து இமையவரையைச்சேர்ந்துஉன்னைவேதவிதிப்படிக்குத் திருக்கலியாணஞ் செய்துகொண்டு பழையபடியே யித்தலத்திற் சேர்ப்போமெனத் தன்கருத்துமுற்றும் மாற்றத்தினைக் காட்

டிய பரமனைமிட்டும்வணங்கி தேவரீர்சட்டளையின்படியே நடந்துகொ
ள்வதற்குவிடைதரவேண்டுமெனத்துதித்து அவ்வாறேகற்றன்அனுக்கிரக
த்தைப் பெற்றவளாய் திருக்கயிலாயத்தைநீங்கி இமையவரையைச் சேர்
ந்தாள், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே அவ்வரையின்பெருமைகளிற்
சில கேட்பீராக-வானத்தினைத்தாவும் உன்னதமும்பாதலவரையிலாழ்ந்த
தாய் விஸ்திரணமான பரப்பினைப்பெற்று மகத்துக்கள் தபோநிதிகள் கி
ன்னரர் வித்தியாதரருக் கிருப்பிடமாக விளங்கி தேவதாருக்களுஞ் சந்த
னம் பாரிசாதம் அகில் மா பலா கொன்றை கமுகுவாழைமுதலியதோப்
புகள் சோலைகள் உத்தியான வனங்கள் மலிந்து காமதேனுவே முதலிய
தெய்விகமிருகங்கள் அன்னமாதிய சிறந்தபட்சிகள் வாசமாய் பல்லாயி
ரம்பொற்சிகரங்கள் சூரியனைப்போலப் பிறகாசிக்க விருக்கின்றது அ
தனுச்சியில் எக்காலத்தினுஞ் சத்தமேகங்களும் வாசமாய் பனித்தாவ
லினை வீசியிருப்பதால் திருக்கயிலாயத்தினையொத்தும் அவ்வரைக்கதிப
னான பரமசிவத்தை நிகரத்துங் காருண்டமேகங்கள் யிடி மின்னலைப்
பெருக்கிக் கவிந்திருப்பது இலக்குமியினை மார்பினிடத்திருத்திப் பள்
ளிகொண்டிருக்குஞ் சேஷசயனத்தைப் போன்றும் வெண்மையாய்ப்
பனிமூடியிருப்பது பூமதேவியானவள் திகிக்குப்பையைத்தனது வஸ்தி
ரத்தொங்கலினால் மறைத்திருப்பதை நிகர்த்தும் இந்திரன்முதலியதே
வர்கள்கூடி மந்தரகிரியினைமத்தாகநாட்டி திருப்பாற்கடலினைக் கடை
யுமுன்னிலையிற் றிரண்டெழுந்த வெண்ணெயினிடத்தில் அமுதத்தினை
வைத்ததைப்போன்றும் பனிப்படல மூடிவிளங்குஞ் சிறப்புகளைவாய்
ந்தஇமையமலையினதுசிகரத்தில் மதுரமிகுத்த செலசமற்றியாய்தாமரை
அல்லிமுதலிய புஷ்பவகைகள் மலிந்துமுதலை வரால் மற்ற சீவராசிகள்
பெருத்து விசாலமாயிருக்குந் தடாகமொன்றுண்டுஅதன்கரைமீதுவிள
ங்கும் புஷ்பச்சோலையினிடத்திற் பர்வதராசனானவன் தவத்திலிருந்து
பரமேஸ்பரிதனக்குப் புத்திரியாகவுஞ் சிவபிரானெழுந்தருளி விவாகஞ்
செய்து கொடுபோகவும் நினைந்து பற்பலகாலமாய் தொற்றுவருகின்ற
தறுவாயில் ஒருதினம்பிருதகாலத்தில் முற்கூறித்தகங்கையிற் றானஞ்செ
ய்தெழுந்து பார்க்குமிடத்தில் அருகிலிருந்தவெண்டாமரை மலரினைத்
தொட்டிலாகக்கொண்டு அலைகளானவைதாலாட்டச்சராசரப்பிறபஞ்சங்
களனைத்தையும் பீனறருளிய லோகமாதாவான பராபரை அஸ்தங்கள்பா
தங்கள் முகாரவிந்தஞ் செந்தாமரை மலரைப்பழித்து விளங்குந் திருக்
கோலத்துடன் சுந்தரமுள்ள குழந்தை வடிவுகொண்டு விளையாடியிருப்
பதைக்கண்டு ஆச்சிரியப்பட்டவனாய் பரமசிவம்நமது தவத்துக்கிரங்கிஅ
னுக்கிரகஞ்செய்தனர் அக்காரணத்தினால் என்னையீடேற்றும் பொருட்

டு லோகநாயகனை நீங்கி பராசத்தியானவள் யிக்கோலங்கொண்டு யெழுந்தருளினள் அடியேன் கிருதார்த்தனானேனென்று விழிகளில் ஆனந்தவாரிபெருக அன்புமிகுத்து வெளிப்பட்டதைப்போல உரோமங்கள் சிலிர்க்க ஆடிப்பாடிவணங்கிப்போற்றி பயபத்தியுடன் சமீபத்திற்போய் யிருகரங்களினாலும்லோகநாயகியையேந்திசிரத்திற்றாங்கிதிரோகபரவசத்தனாய் அத்தலத்தைவிட்டு தனதுநகரத்துக்குவந்து அரமனையிற்போய்தன்தேவியாகிய கற்புடைய மேனகையைக்கூவி நமதன்னைவந்தாள் வந்தாள் உன்விரதமும் என்தவமும் யின்றைக்கு யீடேறியது பிழைத்தோம் பிழைத்தோம் யிந்தசெகன்மாதாவைப் பதலமாகப்போற்றி வளக்கக்கடவையென்று கொடுக்கத் தேவியானவள் மயிர்சிலிர்க்க கால்கள் தடுமாறஆனந்தவாரியில் மூழ்கி என்தாய்வந்தனளோ யிவ்வரமனை என்னபுண்ணியஞ் செய்ததோ நமதுகுலத்தினர் முடித்தசத்கருமங்களினாற் கிடைத்தனளெனப் பலபலகளிப்பு வார்த்தைகளைப்பேசிப் பணிந்தமிருதுவாகிய கரங்களை நீட்டி மெல்லனவே நதிமுகத்துடன் முகத்தைச்சேர்த்து முத்தமிட்டு பலதானங்களைவழங்கி திஷ்டிபரிகாரமாகப் பலஆலங்களைச்சுழற்றி வீசியபின்பு அந்தப்புரத்துக்குக் கொண்டுபோய் தன்கணவனைப்பாத்துஅரசனே நமது குலதேவதை தேவரீருக்கு யெவ்விதமாகக் கிடைத்தனள் உமதுபாக்கியமே பாக்கியமென்று கேழ்க்கப் பற்வதராசன் சொல்லுவான் ஒ பெண்ணே யிவ்வன்னையைப் பெண்ணாகப்பெறத் தக்கதாய் பலகாலந்தவஞ் செய்திருந்தோமல்லோ கடையிற் பரமனருளினாலித்தினந் தாமரைக் கமலத்தில் யிக்கோலமாகக் கண்டு கோடுவந்தேனெனத்தெரிவித்த முன்னிலையிற்சிவத்தையிருவரும்பலமுறைபோற்றியிருக்குந்தருவாயிற் கற்புக்கரசியாகிய மேனகை அம்மனுக்குத்திரோகம் பசித்துப் பூரித்து கொங்கைகளிற்பால் ஏராளமாகச் சுரந்தொழுக குழந்தையைஅணைத்து அமுதூட்டிமிகவுங் கவலையுண்டாய் தன்பாபங்களனைத்தையும்போக்கினள் சேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளேசராசரப்பிறபஞ்சங்களை ஈன்றமாதாவாகிய பராசத்தியினைக் கரங்களார வேந்திமனமாரப்போற்றி வாயாரவாழ்த்தி திரோகம்பூரிக்க அமுதூட்டுவளாயின் அந்தமேனகையம்மன் பேற்றினை என்பொலிகளாற் புகழப்படுவதோ அரிய தவமுடையளாக வேண்டும் பின்பு பணிப் பெட்டிகளைத் திறந்து நவரத்தினமயமாகிய சுட்டியினைச்சாத்தி பஞ்சாயுதமில்லை சறப்பளிமுத்தின் கோர்வையிவற்றைக் கழுத்திலணிந்து தங்கவளையல்மோதிர விதங்களைக் கரங்களிற்பொருந்தி அரைவடஞ் சலங்கை யிடையிற்கட்டிபொற்றண்டைகெச்சைபாடகங்காலாழிமீலியிவற்றைப்பாதங்களிற் பூட்டிமற்றும் ஏனையபூஷணங்களைத் திருத்திக் கண்குளிரத் தெரிசித்து

மகிழ்ந்தபூரிப்பினாற் பெருகும் பாலைத் தெவுட்டக்கொடுத்து ஐவகைநி
றஅன்னங்களைத்திரட்டி அதுகளிற் றீபமேற்றி திஷ்டி பரிகாரமாகச் சு
ழற்றி யெறிந்தபின்பு திலதப்பொட்டுமிட்டு சீராட்டி எனதன்னை அலசி
னள்சற்றுநித்திரை செய்யவேண்டுமெனச்சிந்தித்துப்பவளக்கால்களும்
வயிரச்சட்டங்கள் நீலரத்தினப்பலகை யிவற்றினாற் சோடித்து தங்கச்ச
ங்கிலிகளிற்றொங்கும் அழகியதொட்டிலில்வளத்தித் தாலாட்டியும்பின்
பு ஆசைமிகுதியினாலேந்திக்குலவியுங் கணவன் மகிழ்ந்துநோக்கிக்களிக்
கப்பலசீராட்டி விற்தி சந்திரனைப்போல வளர்க்குமிடத்துலோக நாய
கியும் பலதிருவிளையாடல்களைச்செய்து தாய்தந்தையர் களிக்கும் விதங்
களாக அற்புதச் சின்னங்களைக் காட்டித் தவழ்ந்து தளர்நடையிட்டுப்
பொன்னூசலில் விளையாடி சப்பாணிகொட்டி அம்புலியைக்கூவிக் குத
லைமொழியினைப்பேசி வருகின்றநாட்களில் ஐந்தாண்டுகள் பூற்தியான
வுடன் முனந்தமக்கனுக்கிறகஞ் செய்திருந்த பரமசிவத்தின் கடாட்சத்
தினைநினைந்தவளாய்தன்கருத்தின்வண்ணம்யீடேறத்தக்கதாகத்தவஞ்செ
ய்யுங்கருத்தைக்கொண்டு ஒருதினந்தந்தைவதனத்தைநோக்கி அமுதமு
ங்கிளியும் நாணக்கொஞ்சிய மொழிகளினல்யிதனைச்சொல்வதாயினள்ஐ
யனே திறிநேத்திரதாரியாகிய பரமேஸ்பரனைச் சேருவதாகத்தவ்விரதங்
களைச்செய்து முடிக்கநினைத்தமையால் அதற்குத்தகுதியாகயிந்த பர்வ
தச்சாரலிலொருபர்னசாலைசெய்து அவ்விடத்துக்கென்னை அனுப்பவேண்டு
மெனச்சொல்லக்கேட்டு திகிற்பட்டு எங்கள்கண்ணே யினியதாயே அடி
யோங்களை நீங்கித்தவஞ்செய்வதற்கு யிதுபருவமல்ல ஐந்துவயது பூர்
த்தியாகவில்லை மிருதுவாகிய உமதுசரீரம் பனியினும் வெய்யலினுங்காற்
றினுஞ் சகிக்கப்படுவதோ யிந்தகியாயசத்தினை மறந்துவிடக்கடவை நீ
நினைந்தபடி முடிப்பதற்கு யின்னஞ்சிலகாலஞ் செல்லவேண்டும் அது
பரியந்தம் எங்கள் பாவத்திரத்தக்கதாக யிவ்விடத்திலிருப்பையெனப்பி
தாவாகிய மலையிறைவன் பரிவாகச்சொல்லுவதற்குச் சந்தோஷித்தவளாய்
என்னிடத்திருக்கின்ற பட்சத்தினல் நீர்பேசியது உண்மையேயாகினுஞ்
சற்வாத்துமாக்களையும் ரட்சிப்பவன் ஈசனல்லது மற்றொருவருண்டெ
னநினைக்கவும்போதுமோ அத்துணிவினல் அவனருளினைக்கொண்டு மு
டிக்கவிருக்கின்ற தவத்தைத் தடைசெய்யவேண்டாம் துரிதமாக அதற்
கடுத்த யிடமொன்றைச் செய்விக்கக் கடவையென்று சொல்லும்போது
மறுக்கவஞ்சி அதற்குச் சம்மதித்துதாயே உனது மனப்படிக்குச் செய்
யக்கடவை யிதோ முடிக்கின்றன னெனக் காரியப் பேனாத் தருவித்து
க்கட்டளையிட்டான் அவ்வாறே அவர்களும் யெத்தனித்து பலதொழி
லாளிகளைக் கொண்டு விசாலமாய் அகலநீளமுள்ளதாய்ப் பல அறைகளைக்

கொண்டு நான்குபாரிசங்களிலும் வாசல்கள் விளங்கத் தவச்சாலையினை நிருமித்து அரசனுக்குத் தெரிவித்தபின்பு தன்வற்கத்துப் பெண்கள் பலரையேவல்செய்வதாகக் கூட்டித் தவத்துக்குப்போகச் செலவு கொடுக்குந்தாய்தந்தையரைவணங்கி விடை பெற்றுப்போய் அத்தலத்தினைச்சேர்ந்து சிவனுதனைச்சித்தத்திருத்தி பஞ்சேந்திரியங்களை ஒடுக்கி அன்பைப்பெருக்கி பிராணவாயுவினை மூலாதாரத்தில் நிறுத்தி ஏகமனதாய் விரதத்தினை முடித்திருந்தனள் தாய்தந்தையரும்பிறியாவிடையாய் விசாரணைசெய்துவருவர் கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே பரமேஸ்பரனானவர் பராசத்தியினைப் பிரிந்தபின்பு நடத்திய திருவிளையாடல்களை யினி சொல்லுவோமென்றுசூதபுராணிகர் ஆரம்பித்தனர்.

---

## யோகப்படலம்

---

பார்பதியார் யிவ்விதமாகத் தவஞ்செய்திருக்குந் தறுவாயில் சூரபதுமனானவன் பரமசிவகடாட்சத்தினாற் பெற்ற ஆயிரத்தெட்டுஅண்டங்களுக்கும்யிறைவனாய்த் தேவரைவாட்டிக்கொடுங்கோல்முறையாய் அரசுசெலுத்தி வருமுன்னிலையிற் பூற்வத்திற் சிவபிரானானவர் வடவாலவிருட்ச நீழலிலெழுந்தருளி யிருந்தகாலத்திற் றம்மைப்போற்றி வணங்கிக் கேட்டுக்கொண்டபடிக்கு வேதத்தின் அந்தப்பொருளைப்போதிக்கப்பெற்ற சனகர்முதலிய நான்குதவத்தருஞ் சிலகாலம் அரியதவங்களைச்செய்தும் மனவிருத்திஒடுங்காத காரணத்தினாற் கற்தன் கட்டளையின்படிக்குத் திருக்கயிலாயத்துக்குப்போய் முதலவாய்தலில் நின்று பரமன் அருளைப்போற்றிவரும் பெருமையினைப்பெற்ற நந்திதேவரை வணங்கி விடைபெற்று ஆலயத்திற் பிறவேசித்து விஷ்ணு பிரமன் தேடிக்காண்பரிய பரம்பொருளினை ஞானநாயகனை அம்மை அப்பனைக் கண்குளிரக்கண்டுமும்முறைவலம்வந்துதீர்க்கதெண்டன்சமற்பித்துவிழிகளில் ஆனந்தவாரிபெருக மயிற்சேறிவெழ வாய்குழற அனலிற்பட்டமெழுகையொத்து மனங்கரைந்து கற்தன்பெருமைகளை பன்முறை வேதவாக்கியங்களினாற்போற்றி ஆனந்த திருத்தஞ்செய்தவர்களாய்யிந்தவிண்ணப்பத்தினைச்சொல்லுவார்கள் அஞ்ஞான மென்னுஞ் சமுத்திரத்தில் மாய்கையாகிய வாயுவினது மோதலிலகப்பட்டு பூற்வபுண்ணியப்பலத்தினால் வேதப்பொருளாகிய தெப்பத்தினைப்பற்றியுங் கரைகாணாது யிதுபரியந்தம் அலைந்திருந்தனம் போதவுணர்ச்சி யெவ்வளவேனும் அமைந்ததில்லை ஆதலாற் கற்தனே அல்லற்கடலை நீங்கிப்பிழைக்கும் உபாயமொன்றினைப் போதிக்கவேண்டுமெனப் போற்றுகின்றவர் மீது திருக்கண்சாத்

றி அன்பர்களுக் கிரங்குமவள்ளலான கற்தன் கிருபையுற்று ஓ ரிஷிசிரே ஷ்டர்களே உமது மனவிருத்தி லயப்படும்படிக்குச் சிலசாஸ்திரங்களைப் போதிப்போம் யிவடத்திருக்கக் கடவீரொன்று ஆக்கியாபித்து நந்திதே வனாத்தரிவித்துமன்மதனன்றியில் மற்றதேவர்கள் யாவராயினும் ஆலய த்தினுள் விடவேண்டுவதில்லை யெனத்திருவாய் மலர்ந்தனர் அக்கட்டளை யினைசிரத்திற்றாங்கி வணங்கிமீண்டு தமதிருப்பிடத்திற்சேர்ந்து போற் றியிருந்தனர் அதன்பின்பு சனகர் சனற்குமாரர் சனாதனர் சனந்தனர் யி ந்நால்வருஞ் சிவபிரானைவணங்கி வாய்புதைத்திருந்தகாலத்திற் பரமன் கிருபையுற்றுச் சதுற்வேதங்களினது ஆதிமத்தி அந்தமாயிராநின்ற சரி தைகிரியை யோகமென்னும் நெறிகளைச்சாத்திர யுக்த்தமாகப் போதித் து மேலுஞ் ஞானபாதத்தினது பெருமைகளையுங் கிறமாகச்சொல்லிய தைக்கேட்டரிஷிகள்மீட்டும் பரமனைவணங்கி கற்தனே ஞானயோகநி லையின்உண்மையைப்பாந்தமாக அனுக்கிறகிக்கவேண்டுமெனப்போற்று கின்றவனைப் பார்த்து நகைத்தருளி மாறுத்தரமொன்றுங் கொடாமல் அதனிலையைச்சொல்லி யறிவிக்கப் படாமையால் யிப்படித்தெனத்தெரி ந்துகொள்வீரெனக் குறிப்பினாற்காட்டி அனந்தகோடிஎனக்கோடுகளு ம்மகாவிஷ்ணு பிற்மதேவரது சிரமாலைகளும் விளங்குந்தமது மார்ப கத்தில் ஒருகரத்தினைவைத்து விரல்களினால் மோன முத்திரையைக் காட் டிவேறொருசெய்கையுமற்று யோகத்திலிருப்பதைதவத்தர்தெரிந்து ஞா னயோகம் வாக்கியத்துக் கடங்காததென நிச்சயித்தவர்களாய்ச் சிவபிரா ன்அனுக்கிறகத்தினால் மனத்தினை விடையங்களிற் செல்லாமல் வயப்ப டுத்திக் கற்தன் திருவுருவினைச்சிந்தித்து யாதொருசெய்கையுமில்லாமற் சித்திரத்தில் விளங்கும் பாவையினைப்போலத் தாமுஞ்சின்மைய முத் திரையைத்தாங்கி யோகத்திருந்தனர், இவ்விதமாகப் பரமன் யோகத்தி லிருந்த தருவாயில் ஒருகணப்போது பிரமனாதிய தேவர்களுக்குப் பல யுகங்களாயிற்று காரணகற்தனாகிய பரமசிவம் மௌனத்திருந்தமையால் தேவர்க்களும் அம்பா ஸ்ரீகளும் போகத்தை நீங்கி யிருந்தனர், மே லும் பூமியின்கண் ணிராநின்றசற்வப்பிராணிகளுங் காமவின்பக்குறிப்பி னை வெறுத்தனர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே, சிவபிரான்சனகாதி தவத்தருக்கு யோகவெல்லையைக் காட்டியிருந்த தருவாயில் ஆண்பெண் கூட்டுறவில்லாமையாற்பரமன்காரணகற்தனென்பதற்குச்சந்தேகமு மு ண்டோ யிவ்விதமாகச் சற்வத்திராளுங் காமயின்பத்தினை நீங்கிப் பேடி யனைப்போலாயினர் - ஒருகாலம் ஆண்பெண்கூட்டுறவாயினும் யின்பமி ல்லாத காரணத்தினால் மன்மதனும் இரதிபோகத்தினை மறந்தவனாய்த் தி ரிலோகங்களினுந் தன்னரசாட்சியினைச்செலுத்துவதைமறந்துகரும்புவி

ல்லெடுத்துபுஷ்பபாணங்களைச்செலுத்துந்தொழிலும்போக்கினன். நெற்பயிர் செழித்தோங்கி வளரும்பருவத்தில் மழைபெய்தலரிதாகின் அதன் விற்கியடங்கி கதிர்வாங்காமல் எரிந்துமங்குவதைப்போலக் கர்த்தன்செய்கையின் முயற்சியினுல் மன்னுயிர்கள்போகத்தினைவெறுத்து கருவிற்கியடையாமற் பிராணிகளனைத்துந் தினேதினே குறைந்துபிரமசிருஷ்டியும் மலசாமல்அடங்கிற்று - அண்டாண்ட புவன சராசரங்களும் ஒடுங்கிக் களிப்பின்றி ஊமைாயொத்துக் கிடப்பதாகப் பரமன் யோகத்தினைத்தெருட்டி யிருந்தகாலத்திற் சூரபன்மன் கொடுங்கோல் செலுத்தித் தகாதபணி விடைகளைக்காட்டிச் செய்யும் உபத்திரவத்தினுற் பொன்னுலகம் அழிபட்டது மன்றியிற் றேவருடன் இந்திரன் மகம் மேருச்சாரலில்வந்து ஒளித்திருந்தான் அத்தருவாயில் தேவதூதராற் சூரன்குமாரனுகிய பானுகோபன் தன்குமாரனையுந் தேவர்க்களைப் பெண்டு பிள்ளைகளுடனுஞ் சிறைசாயத்துப் போனதையுஞ் சொற்கலோகஞ் சாம்பலாய் உருமாறிய காரணங்களையுங் கேழ்விப்பட்டவன் புத்திர சோபத்தினுல் மிகவும் வாடிவருந்தி படாதபாடுபட்டான் பின்புவேறு கதியில்லாமையாற் சிவபிரானை நோக்கிப் பலநாள் அரியதவங்களைச் செய்து வருமுன்னிலையிற் சத்தனுனவர் கிருபையுற்று வெள்ளியங்கிரியினை நிசர்த்தரிஷபவாகனத்தில் ஆரோகணித்துப் பலகணநாதர்கள் சூழ்ந்து போற்ற வருவதைத் தெரிசித்தவுடன் மனமகிழ்ச்சியாய் எதிர்கொண்டு சேவித்துப்போற்றி நிற்கின்ற இந்திரன்மீது கிருபாளுேக்கம்பாலித்துச்சொல்லுவார், அளவிறந்தகாலங்களாக அரியவிரதங்களைச்செய்து வருகின்றனை அதற்குமெச்சினெம்,உனக்குவேண்டிய பிறையோசனங்களைக் கேட்பாயென்று திருவுளம் பற்றியபோது கரங்களைக் கூப்பிக்கொண்டு தேவரீருக்குத்தெரியாத தொன்றில்லையாயினும் அடியேன் முறைகளைக் கேட்டருளக் சூரபதுமனனவன் பெருகாலமாய் எங்களைஅலைத்துத்தகாத பணிவிடைகளைக் கொண்டுவாட்டுவதை யன்றியிற் சிலதினத்துக்கு முன்னந்தன்குமாரனுற்பொன்னுலகைக் கொளுத்திஎன்னெருபுத்திரனைமற்றதேவருடன் கொண்டுபோய் தன்பதியிற் சிறையிலிடுவித்தான் அவன்செய்யுங் கொடுமைகளை ஒருவகையாகச்சொல்லி முடியாது ஆகையாற் கர்த்தனே தினர்மீது கிருபையுற்று அவனைக்குலநாசமடையக்கொன்று எங்கள் சுதந்தரங்களைக் கட்டளையிட்டுக் காற்கவேண்டு மெனப் போற்றுகின்றவனைக் கையமர்த்தி தேவராசனே வருந்த வேண்டாம் ஆதியிற்றக்கன் நம்மையிகழ்ந்து செய்தயாகத்துக்குடன் பட்டபாதகத்தினுல் யித்துணைவருத்தங்கள் நேர்ந்தது அதுவும் நீங்குங்காலஞ் சமீபித்தது அஃ்தென்னெயெனில் யீன்னஞ்சிலயோதில் நம்மிடத் துதிக்கவிருக்கின்ற

மாரனால் உங்கள் துன்பங்களனைத்தும் நீங்கி சுகத்திலிருப்பீர்கள் தயிரி யத்தை விடவேண்டாமென்று சிலதேறுதலைசொல்லி லோகநாயகன் திருக்கயிலைக் கெழுந்தருளினார், இந்திரனும் பரமசிவ வாக்கியத்தை நினைந்து நினைந்து களித்தவனாய் மேலுஞ் சிலசங்கைமனதில் நேர்ந்தபடியால் யிதனை நினைக்கின்றான்—சிவபிரான்இப்போது கட்டளையிட்டவாறுமுடிவதற்குத்தாஞ் சனகாதியருக்கு யோகசாதனையினைக் காட்டி விருப்பை யொழிந்திருக் கின்றனர், பராசத்தியாரும் யிமையவனாயிற் றவஞ் செய்திருக்கின்றனளெனக் கேழ்விப்பட்டனம் யிவர்களிருவருங் கூட்டுறவில்லாமற் குமாரனெவ் விதமாகத் தோற்றுவன் யிந்தசந்தேகத்தினைத் தெளியவேண்டுமென்று துரிதமாய் மனோவதிப் பட்டணத்துக்குப்போய்த்தன்தேவியைச் சரஸ்வதி யம்மனிடத்தில் நிறுத்தித் தேவர்க்களுடன் சபாமண்டபத்தைச் சேர்ந்து படைப்பின் றொழிலின்றி மனவாட்டத்துடன் சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற பிற்மதேவனைக்கண்டு வணங்கி வேதவாக்கியங்களினாற் றுதித்துநிற்கின்ற இந்திரனைப்பாத்து அதிக சஞ்சலசித்தனாய் யிந்ததேவர்களுடன் வந்தகாரணமென்னென்று வினாவும்போது கர்த்தனே அடியோங்களுக் கடுத்திருக்கின்றசிறுமைகளைச்சொல்லி முடிவதோ ஆகிலும்அவற்றிற் சிலவற்றினை விண்ணப்பஞ் செய்கின்றேன் அரியதவங்களைச்செய்துமேலானபேற்றினைக்கிடைத்திருமாந் திருக்கின்றசூரன்செலுத்துங் கொடுங்கோல் முறைமையினையுங் கர்த்தன் மோகம் நீங்கிய சனகாதிமுனிவர்களுக்கு யோகத்தினைக்காட்டி யிருப்பதையுந்தான்செய்த தவத்திற்கிரங்கிகாட்சிதந்து அனுக்கிறகித்துப்போயின சேதியையும் விரிவாகச்சொல்லியினிநானுந் தேவர்களும் பிழைக்கும் எதுவையினைக்கட்டளையிட வேண்டுமெனக்கேழ்க்கப் பிரமனிரங்கி ஓ இந்திரனே தேவாதிதேவனாகியபரமசிவமானது கிருபைக்கடலுக் கொருதெப்பமா யிருப்பதினாலும் தன்னைவந்தடைந்த அன்பர்களுக்குஉதவுந்தன்மையினாலும் மலபரிபாகப் பகுப்பினையறிந்து அவற்றிற்குரிய பாகங்களைக் கட்டளையிடும் நீதியாலுங் காலமறிந்து நம்மையாளும் பொருட்டுக் கயிலையங்கிரியில் ரிஷிகளைப்போலத் தாமும் யோகத்திலிருக்கின்றனர், நானும் விஷ்ணுவும் அகந்தைகொண்டு வாதாடுமுன்னிலையில் எங்கள்மத்தியில் அனல்வடிவாகத்தோன்றிய கர்த்தன் ஆதியந்தத்தினையாங்கள் தேடிக்காணாதலைந்து அவரனுக்கிறகத்தினால் கிருதார்த்தரானோம், அத்தகைய தேவதேவனை மற்றொரு கடவுளருக்கு நிகராகச் சொல்லவும் போதுமோ ஆதலாற் சனகாதியோகிகளுக்கு மவுன நிலையினைக் காட்டியிருப்பதும் நமதுகுறைகளைமுடிக்குங் கிருபைகொண்டெனநினைக்க வேண்டும்,மேலுஞ் சந்திரசடாமண்டல தாரியாகிய பரமன் முடியில்

சிவராசிகளனைத்தையுஞ்சங்கரிப்பதை யென்னென்றெண்ணியிருக்கின்ற
ன அவைகள்வெகுகாலமாய்ப்பிறந்தும் மிறந்தும் அலைச்சற்படுந்துபர
ங்களைத்தீர்த்துச் சிலபோது சுகத்திலிருத்தக் கிருபையுற்றதாகும் அதை
ப்போலவே கொடியசூரனைக்கொண்டு நமக்கிந்த வருத்தங்களைக் காட்
டினர், அதுவும் நீத்தற்கரியபாதகங்களை யனுபவிக்கச்செய்த பின்பு சிறந்
தபதவியை அனுக்கிரகஞ்செய்யுங் கிருபையன்றோ அதற்கொருதிஷ்டா
ந்திரத்தினைச் சொல்லக்கேட்பையாக, பிதாவானவன் தன்பிள்ளைக்கொரு
நோய்சம்பவிக்கும்போதுபிறரால்வருத்திவித்து அந்நோயைத்தீர்ப்ப
ன் அதுபிள்ளைகளிடத்தன்போ அல்லது கொடுமையோ அதைப்போல
வே தேவர்களுக்குண்டாகிய பாதகங்களைப்போக்க வெண்ணி லோகநா
யகன்யிந்த தெண்டனையைக் காட்டினர், மேலும்பாசத்திற்கட்டுப்பட்
டிருக்கின்ற நமதிடத்திற்றோற்றுந் தீங்குகளனைத்தும் நீங்கும்படியா
ன காலம்நேர்ந்தபடியால் கர்த்தனெழுந்தருளிபரிவாய் உலக்கிதனை ய
னுக்கிறகித்துப் போயினர், அவ்வாறே சிவபிரான் யினிமேலும் ரட்சிப்
பர் அதற்குச்சில முயற்சியினைச்செய்து முடிக்கவேண்டியதால் மகாவி
ஷ்ணுஉடன் கலந்துபேசி நடத்தவேண்டுமென நிதானித்து பிற்மதேவ
னனவன் தன்னாசனத்தை விட்டிறங்கினகாலத்திற் றேவராசன் நாமீடே
றுங்காலம் நேர்ந்ததெனக்களித்து விண்ணவருடன்பின்பற்றிவர மனோ
வதி பட்டணத்தைக்கடந்து வைகுந்தப்பதிக்குப்போய் ஆலயவாயல்மு
முகப்பில்வருவதைச்சங்குசக்கரத்தினைத் தாங்கி நிற்கின்ற துவாரபாலகர்
கண்டுஅந்தப்புரத்துக்கோடிவிஷ்ணுவைக்கண்டு வணங்கிகர்த்தனேபிற்ம
தேவனனவன்இந்திரன்முதலாகியதேவர்க்களுடன்வருகின்றனனென்று
விண்ணப்பஞ் செய்யக்கேட்டு நல்லகாரியம் அவர்களனைவரையும் அழை
த்து வாருங்கோளெனக் கட்டளையிட்டவாறே யெதிர்கொண்டு கேசவன்
உங்களைக்காணவிருப்பமாயிருக்கின்றனன்வாருமென்றவாக்கியஞ்செவி
களுக் கினிப்பாய் மனம்பூரித்துப்போய் ரிஷிகளாற் றுதித்து வணங்கு
ம் பெருமையினையுடைய மாதவனை வழிபட்டு அவரனுக்கிறகத்தினால்அ
வர்வடிவினைப்பெற்ற கணக்கிறந்த பார்கமதர் யிருபாரிசங்களினும் நின்
றுதுதிக்க நவரத்தினமயமாகிய சபாமண்டபத்திற் சிரோரத்தினங்கள்
சொலித்திருக்கும் ஆயிரம் பணைமகுடங்களையுடைய சேஷசயனத்தின்
மீது செந்தாமரைமலர் புஷ்பித்திருப்பதை நிகர்த்துவிழிகள் கரங்கள்
பாதங்கள் விளங்கும் மகாவிஷ்ணுவானவர் லட்சுமிசமேதனாய் வீற்றிரு
ப்பதைப் பிரமனாதியர்சேவித்து வேதவாக்கியங்களினாற்போற்றி முன்
னிலையிற்றமது புத்திரனாகிய பிரமனைச்சமீபத்திலிருக்கும் பீடத்திருக்க
ச்செய்து மற்ற இந்திரன் முதலானவர்களிடத்துங் கிருபாநோக்கமபா

வித்தவராய் பின்பு குமாரனைப்பார்த்து உன்சிருஷ்டிக்கிடையூறின்றி நடந்துவருகின்றதோ ஏதேனும் விசேஷமுண்டோவெனக் கேட்டகாலத்திற்பிற்மதேவன் சொல்லுவான். ஓ கற்தனே முன்னொருகாலம் நான்சபையிலிருக்கின்ற தருவாயில் சனகர்முதலிய பிள்ளைகள் நால்வரும்வந்தனர், அவர்களைப்பார்த்து பெறுதற்கரிய யிந்த சிருஷ்டித்தொழிலை நடாத்தி யிவடத்திலிருப்பீராக வீணாய் அலைவதிற் பிறையோசனமென்னென்று சொன்னதைக்கேட்டு அதைமுக்கியமாய்மனதிற் சொள்ளாமல் நகைத்தவர்களாய்பாசமென்னுஞ்சிறையில்மூழ்கிப்படைப்பென்னும்பாரவிலங்கில் அகப்பட்டு வருந்தமாட்டோம் சிவனாதனைவழிபட்டு அவன்திருவடிநீழலைச் சேரக்கடவோமென்று என்சபையை நீங்கிப்போய் அளவற்றகாலம் வருந்தித்தவங்களைமுடித்து வருவதைக் கற்தனறிந்து ரிஷபவாகனத்தெழுந்தருளி உங்கள் தவத்தைமெச்சினோம்- உங்களுக்குவேண்டியவரங்களைத்தருவோங் கேழ்ப்பீராகவெனக் கட்டளையிட்டபோது குமாரர்கள் திடசித்தராய் கற்தனே அடியோங்கள் பாபரகிதராய் அழியாப்பதவியினைச் சேரும்பொருட்டு வேதநிச்சயங்களை அருளிச்செய்யவேண்டுமெனப் போற்றுகின்றவரிடத்திற் கிருபையுற்று அவர்களைத்திருச்சயிலாயித்துக்கு வருவித்து அதன்தென்பாரிசத்தில் வானத்தையளாவவளர்ந்து திசைகளைச்சூழத்தழைத்து குளிர்ந்த நிழலைப்பரப்பி யிருக்கின்ற வடவாலவிருட்சத்தடியில் வீற்றிருந்து வேதசாரங்களைப் போதித்து யிதனை அனுஷ்டிப்பீராயின் உங்களெண்ணப்படிக்குக் கைகூடுமெனத் திருவாய்மலர்ந்து சிவபிரான் தமதாலயத்திற்போயினர், பின்பு சனகாதிகள் கற்தனை நினைந்து வணங்கிப்போற்றி வெள்ளியங்கிரியினை நீங்கினவர்களாய்ச் சமுத்திரஞ் சூழ்ந்த பூமண்டலத்தில் வந்து பத்திவயிராக்கியங்களுடன் பலநாட்கள் அரியதவங்களைச் செய்தபோதினும் மனமொடுங்கும் வகைகாணாது வருந்தியிருக்கின்ற தருவாயில் கற்தனருளினாற் கயிலாயத்துக்குவரும்படி அசரீரிமூலமாய்த் தெரிந்தவர்களாய் சிவபிரான் கிருபைக்குமெச்சி அதிவேகமாய் அப்பதியைச்சேர்ந்து சபாமண்டபத்தில் விற்றிருக்கின்ற லோகநாயகனை வணங்கி ஓ சற்தனே தேவரீர்கட்டளையின்வண்ணம் யிதுபரியந்தம் தவங்களைச்செய்தனமாயினும் மனவிருத்திலயப்படவில்லை அதற்கொருகாரணத்தினையும் போதித்து அடியோங்களை ஆண்டருளவேண்டுமெனப் பலவாகப்போற்றுகின்றவரிடத்துக் கிருபையுற்று அவர்கள்மனம் பக்குவப்பட்டதைத் தெரிந்து சமீபத்தில் வரவழைத்து சரிதைகிரியை யோகத்தைபோதித்து அதற்குமேலாகிய ஞானப்பிறிவைச் சொல்லப் படாமையால் சின்மயமுத்திரையைக்காட்டி மவுனத்திருந்தனர், கற்தனருளினால் அவர்பாதாரவிந்தங்க

ளையிருதயகமலத்திருத்திச் செயலற்று மவுனிகளாய்த்தாமும் அவ்வாறே யோகநிலையினைச் செய்திருக்கின்றனர், யிவ்விதமாக வேதநாயகன் சனகாதிகளுக்கு ஞானயோகத்தினைக் காட்டிவருகின்றதருவாயில் அடியோங்களுக்குப் பலயுகங்கள் கடந்தது - யிப்படிக்கு எமதிறைவன் உமையவளைப்பிரிந்து யோகியர்களைப்போல் யாதொருசெயலுமற்று யிருப்பதாற் சொர்க்கமத்திய பாதலங்களேழுமுதலிய சகலபுவனங்களினுமிரா நின்ற சீவராசிகளில் ஆண்பெண்கூட்டுறவின்றி அவைவிர்த்தியடையாமலுங் கவலையுற்று வாடியிருக்கின்றது, அதினாற்படைப்பின்வீச்சமுங்குறைபட்டு நானுஞ் சரஸ்பதிதேவியை ஆலிங்கனஞ் செய்வதை யொழிந்து யோகிகளைப்போல விருக்கின்றனன் - யிவையன்றியும் பரமசிவத்தின் இறைமையினால் அகண்டசாம்பிராச்சியத்தினைப்பெற்று கொடுங்கோலினைச்செலுத்திவாழுகின்ற சூரபதுமனென்பவன் என்னைப்பார்த்து பிரதிதினமும் பிருதகாலத்திற் றன்னரமனைக்குவந்து பஞ்சாங்கஞ் சொல்லிப்போம்படிக்குங் கட்டளையிட்டான் - அவ்வாறேநடத்திவருகின்றனன்மேலும் யிந்ததேவேந்திரனையும் மற்றதிக்குப்பாலகர் தேவர்க்கள் முதலானவர்களையும் யிதக்கமில்லாமற் றகாதயேவல்களைக் கொள்ளுகின்றான் யிதுவுமன்றியிற் சயந்தனைச்சிலதேவர் அவர்கள்பெண்டீருடன் சிறைசாயத்துப்போய் கொடியகாவலிலும் அடைத்துத்துன்பப்படுத்துகின்றனன், அவன் செய்துவருகின்ற அனியாயங்களைச் சொல்லி முடியாது சூரன் கொடுமைகளிப்படிக்கிருக்க யிவை யனைத்துந் தமக்குத் தெரியாததைப்போல் பரமசிவம் யோகத்திலிருக்கின்றனர் - ஆதலாற் றேவரீர்யிந்த யேழைகள் மீது கிருபைவைத்து நாங்களினியாவது துன்பமற்றுப் பிழைக்கும் மார்க்கத்தினை யோசித்து ரட்சிக்கவேண்டு மென்று பிரமன் சொல்லிய வாக்கியங்களை விஷ்ணுவானவர் நிதானித்து ஓ தேவர்க்களே யிதனைக்கேழ்ப்பீராக - பஞ்ச பூதிகளாய் அருவமாய் உருவாய் அருவுருவாய் சகளமாய் நிஷ்களமாய் வேதப்பொருளாய் சிருஷ்டி திதி சங்காரமென்னும் மூத்தொழிலினை நடாத்த மும்மூர்த்திகளாய் மூலகாரணனாய் தேவதேவனாயிருக்கின்ற சிவபிரான் யோகநிஷ்டையினைச் சாதித்திருப்பின் எந்தபிராணிகள் யின்பத்தினை விரும்புவார்கள் பூர்வத்திற் றக்கனென்னவன் பிருத்தவினைக்கீடாய் அகந்தையுற்று தனக்குச்சகல வாழ்வினையுங் கடாட்சித்த கர்த்தனைமதியாமற் செய்யத்தொடங்கிய யாகத்தில் அவனுடன் சேர்ந்திருந்த நமதுவினையின் முயற்சிகழிய அனுபவங்களைக்கூட்டிமுடித்தபின்பு பழையவாழ்வில் நிலைபெறச்செய்யத்திருவுளங் கொண்டதால் சூரனுக்களவற்ற செல்வங்களைக் கொடுத்து அதமுற்றுப்பெறுமளவுந் தேவர்தம்மை நெருக்கிவருத்தாமல் ரிஷிகளுக்கு மோனத்தி

னைக்காட்டி சகலபிராணிகளுந் துக்கத்திலழுந்தத் தாம்பராமுகமா யிருக்கின்றது இறுமைச்குரியதன் றிவேறல்ல - ஆதலாற் சனகாதிகளுக்குக் கற்தன் காட்டியிருக்கும் மோனத்தினை நீங்கி பர்வதராசபுத்திரியை மணந்துசேருவராயில் உனதுபடைப்புவிர்த்தியாம் அவர்களிடத்தொரு குமாரனுற்பவித்தால் சூரன்குலமுற்றும் நாசமடைந்து வாடிநிற்கும் உலகங்களனைத்தும்எதாப்பிறகாரங் களித்திருக்கும் இஃதுமுற்றுப்பெறுதற்கு ஒருசூட்சியினைச்சொல்வோங்கேட்பீராக, சர்வபிராணிகளுங் காமச்சவலையிற்பட்டு யின்பமடைவதாக பஞ்சபுஷ்ப பாணங்களைப் பிறைபோகித்து திரிலோகங்களினுந் தன்னரசுசெல்ல விருக்கின்ற நமதுபுத்திரனை மன்ம னைவேண்டி பரமசிவத்தி னிடத்துக் கனுப்புவிராயின் அவன்முயற்சியினுல் கற்தன் யோகத்தினை நீங்கி பராசத்தியைக் கலந்து குமாரனைத்தருவர் - அவரால்நமது குறைகளனைத்தும் நீங்கிவாழலாம், யிதைக்கடைப்பிடியாகக்கொண்டுவினைவில்முடிக்கக்கடவீரொன்றுவிஷ்ணுவானவர் சொல்லியதை பிரமன்கேட்டு மகிழந்தவனுய் பிதாபோதித்தவாக்கியம் நன்றாகவிருக்கின்றது, அவ்வாறே முடிக்கின்றன மெனச்சொல்லிசெலவு பெற்றுக்கொண்டு வைகுந்த நகாைக்கடந்துமனோவதி பட்டணத்துக்குவந்து சகலரும் போற்றிநெருங்கத் தமதாசனத்தில்வீற்றிருந்தனர்.

---

## காமதகனப்படலம்

இவ்விதமாகத் தேவர்கள் சூழ்ந்திருக்க சிங்காதனத்தில் விளங்கும் பிற்மதேவனானவன் பஞ்சபுஷ்ப பாணத்துக்கதிபனான மன்மதனை வரநினைந்தகாலத்தில் அதனைத்தெரிந்து கொண்டவனுய்த் தெனற்றேரிலாரோகணித்து பரிவாரங்கள் சூழ்ந்துபோற்ற மனோவதி நகாைச்சேர்ந்து சபைக்குப்போய் பிரமனைவணங்கி தேவரீர்என்னைவரவழைத்த காரணமென்னென்று கேட்டமுன்னிலையிற் பிரமன் மன்மதனை யருகிலழைத்து பீடத்திலிருக்கச்செய்தபின்பு ஓ மன்மதனே உனதுபெருமைகளைப்புகழ்வதற்கு ஒருவரால்முடியாது கருப்புவில்லைக்கொண்டு திரிலோகங்களையும்வென்று உனதுகீர்த்தியை யெங்கும் நாட்டியிருக்கின்றனை ஆதலால் எங்களுக்குநேர்ந்த மனவருத்தங்களைப் போக்குவது உனக்குப்பெரிதல்ல சூரனுல்மிகவும் அலைச்சற்படுகின்றனம் அதைநீக்கும்பொருட்டு உபைசெய்துநீயானவன் திருக்கயிலைக்குப்போய் மோனத்திருக்குங் கங்காசடாதராகிய பரமசிவத்தின்மீது உன்பாணங்களைச்செலுத்தி அவர்நிலையைக்கெடுத்து விரகமுண்டாக்கிப் பர்வதராசபுத்திரியைக்

கூடும்வண்ணஞ் செய்வையாகில் நாங்களனைவருஞ் சிலகாலம் சவுக்கியத்திலிருப்போம் ஆதலால் எங்கள் நிமித்தம் விரைவிற் போகவேணுமெனச்சொல்லியவாக்கியம் லட்சுமிகுமாரன் செவிகளில் எமனைப்போல நுழைந்த மாத்திரத்தில் உள்ளமெங்கும் தகிக்கப்பட்டு வருந்தினன், கேட்டீர்களோ - சவுனகாதிரிஷிகளே - கர்த்தன்யோகத்தை அழிக்கவேண்டுமென்னும் வசனமே மன்மதன்மனதைச் சுடுமாகில் நெருங்கிபாணங்களைப் பிறையோகித்த காலத்து அவன்திரேசஞ் சாம்பலாயிற்றென்பது அற்புதமோ-யிவ்வார்த்தைகளைப் பிரமன் பேசியகாலத்தில் மன்மதனனவன் நடு நடுங்கிசெவிகளைப்பொத்தி பஞ்சாட்சரத்தினைச்செபித்து ஒருகாலத்திலுந் தீரவறியாத பாதகங்களுக்கேதுவாகிய வார்த்தைகளைக் கேழ்க்கவுமாச்சுதே என்ன அனியாயமெனக்கிலேசித்து அனலிற்பட்டபூவைப் புஷ்பத்தினைப்போல வாடினவனைப் பிற்மதேவனைப்பாத்து யிதனைச்சொல்லுவான்-பெரியோர்கள் முன் பட்டகொடியவ்வளையும் பரிபக்குவப் படுத்தி அவனீடேறும் மார்க்கங்களைக்காட்டி ரட்சிப்பர்- பிதாவைப்போல நினைந்து தேவரீரிடத்துக்குவந்தால் யித்தகையகுற்றமாகிய தொழிலையுங் காட்டலாகுமோ அடியேனிடத்திற் சற்றுங்கிருபையில்லையோ சிருஷ்டித்தொழிலைச்செய்யுந் திறமுள்ள நீர் யிப்படிக்கும் நினைக்கத்துணிவதோ என்னுடையபராக்கிறமங்கள்உமக்குத்தெரியாததல்ல அபலமான கருப்புவில்லினாலும் மிருதுவாகிய பஞ்சபுஷ்ப பாணங்களினாலும் என் பிதாவாகிய-மகாவிஷ்ணுவைவென்று லட்சுமிதேவி-பூமதேவி முதலிய கன்னியர்களைத்தழுவி யிருக்கும்படிக்குச் செய்யவில்லையோ மேலுஞ்சீதேவியைக்காமவெறியினால் மார்பின் வைத்திருக்கவுஞ்செய்துகீர்த்தி பெற்றேன் சரஸ்பதியம்மனைக்காதலித்து நாவிலிருத்த வுந்திலோத்தமையிடத்துமையல்கொண்டு அலையவுந் தேவரீரைச்செயிக்க வில்லையோ யிந்த தேவேந்திரனுனவன் இந்திராணியிடத்துவங்கணமாய்க் கூடியிருக்கவும் அகலிகையிடத்து காமுகனாய்த் திரேமெங்கும் பெண்குறிவிளங்கச் செயிதது தமக்குத்தெரியாததோ, சந்திரனைத்தவனை மதியைமயக்கிஆசரியன்தேவியை யிச்சித்துக் கலந்து புதனென்னும் பிள்ளையைப் பிறச்செய்தவனும் நானல்லவோ சதுர்வேத பாண்டியத்துவமுடைய விவேவகசாலிகளாகிய தேவர்க்களைமயக்கி அரம்பா ஸ்ரீகளிடத்தில்அதிகமையல்கொண்டு பணிவிடைகளைச்செய்து திரியச்செய்ததை அறியாதவர்களுமுண்டோ ஞான வுணர்ச்சியினாற் றன்னையறிந்து பரத்துவ நிச்சயத்தினைத்தெளிந்தசுத்தாத்துமாக்களாகிய-வதிஷ்டர் - மரிசி - அகஸ்தியர் - அத்திரி-கௌதமர்-காசிபர்-முதலிய சிறந்தரிஷிசிரேஷ்டர்கள் நிலைகளைக்குலைத்து கன்னியர் மையலிற்பட்டு வாடச்செய்தது செகமனைத்திலும்வழ

ங்கவில்லையோ-சொர்மத்தியபாதலவெல்லையில் என்னாணையைக் கடந்த
பேர்யாவரிருக்கின்றனர்,மேற்குறித்தவெற்றிகளைத்துஞ்சந்திரசடாதர
ராகிடசிவபிரானிடப்பாகத்தமர்ந்த பராசத்தியின் வல்லபத்தினன்றிஎன்கி
ருணைகொண்டுமுடிக்குந்தரமோ மேலும் மகாவிஷ்ணுமுதலிய தேவர்
க்களை செயங்கொள்ள வல்லனல்லது கங்காசடாதரக்கடவுளின் மீது புஷ்
பபாணங்களைப் பிரயோகித்து வெல்லவும்போதுமோ- அத்தேவனது
கட்டளைகளைச்செய்து வருங்கடவுளைப்போல எளிதாகவெண்ணி யிக்க
ருமத்தைச்சொன்னாய் ஒருகாலம் அதற்கிசைந்து அழலவடிவினை வாய்
ந்த சிவபிரான்மீதிற் சரங்களைச்செலுத்துவேனாயினும் எரிந்துபொடி
யாவதல்லது நெருங்கவும்போதுமோ-கையும் நகையும் விழியும் மெ
ய்யுந் தழலவடிவமாகவிளங்குஞ் சற்வேஸ்பரனைபாணங்களையேவிசெய
ங்கொள்ளப்போவேனாயினும் யிந்தபிராணனுடன் பிழைத்துமீள்வது
முண்டோ-பற்றிகலற்ற பரம்பொருளைமயக்கும் விதம்யாது ஓ பிரம
னே- அக்கடவுளினாலுண்டாகிய வர்களைப்போல அவனையும் மதிக்கின்ற
னை-அவர்வல்லபங்களை வெல்வோமென்பது எளிதாய் முடிகின்றதோ-
யிதற்கொரு திஷ்டாந்திரத்தினைச் சொல்லக்கேளுஞ் - குருவளிக்காற்று
அலைத்துப்போகின்ற முன்னிலையிற் பூளைப்புஷ்பஞ் சலனமற்று நிற்கு
மானால் நீருடியதிரோகத்தைப்பெற்றநின்மலக்கடவுள்முன்போகவல்லே
ல்மேலுஞ்சற்பாபரணக் கடவுளினுடனெதுத்தவர்களில் அழிந்துபோ
னாதல்லது பிழைத்தவர்களைக்காட்டவல்லமோ-விஷ்ணுமுதலான தேவர்
க்கள் ராட்சதப்பாதகரால் மிகவும்வருந்தி தீனசரண்ணியனே காக்கக
டவையெனத்துதிக்க அவரிடத்தன்பாய் திரிபுரங்களை நகைத்தெரித்த
தைமறந்தீரோ-மார்க்கண்டர் பத்திவயிராக்கியத்துக் கிரங்கி அந்தபத்த
ன் மீதெதிரந்த எமதருமராசனைத் திருவடிகொண்டுதைத்து வாட்டிய
சேதியின்னமும் நீர் கேட்டதில்லையோ- நேத்தியப்போதில் தேவரீரும்
மகாவிஷ்ணுவும் நாம் நாம் பரம்பொருளென்று வாதாடுகின்ற காலத்
திற் சிவபிரானெழுந்தருளிஉமது சிரங்களிலொன்றைக்கிள்ளி யெறிந்த
தைமறக்கலாகுமோசெயசாலிகளாகியசலந்திரனேமுதலாகிய சூராதிசூர
ர்கள் கர்த்தனுடனெதுத்து மாண்டதை அறியீரோ பரமனைநிந்தித்து த
க்கன்செய்தயாகத்திற் போயிருந்தவர்களனைவரையுந் தமதுகோபத்தை
வடிவாக்கியேவியவீரபத்திரக்கடவுளினது வாளினால்பலகுறைகளைப்பெற்
றுபங்கப்பட்டுமானமழிந்தோடச்செய்ததை எப்போதும்மறப்பதோ
திருப்பாற்கடலினைக் கடையுமுன்னிலையிற் கொதித்தெழுந்த ஆலகால
விஷத்தினால் ராட்சதர் விண்ணவர்முதலாகப் பயந்தோடிச்சரண்புகஅத
ற்கிரங்கி அவ்விஷத்தையுண்டுசாத்த தயாநிதியை மறக்கலாகுமோ பா

ர்பதியார் திருக்கரத்தெழுந்து சாரசரப்பிறபஞ்சங்களையெல்லாம் அதம் படுத்திப் பெருகியகங்காபவானியைத்தினையளவாக்கிச் சடையிற்றங்கிய கிருபையை நினையாம லிருக்கலாகுமோ பிச்சாடனக்கோலந்தரித்து வந்து தாருகாவன ரிஷிகள்தேவியர் கற்பினை அழித்தகாலத்தில் அத்தவத்தர்கொதித்தேவிய அழலைக்கரத்திற் றங்கியானையைப் புலியை யுரித்துப் போர்த்து உடுக்கையை கரத்திற்கொண்டு பரமன் நடித்தவிதத்தைப்பாத்ததில்லையோ மேலுந்தம்மை யாவராயினும் யிசழ்ந்ததே யுண்டாகில் அவர்கள்வலியை யொடுக்கி வாட்டுவதை துதிக்கத் தேவையில்லையோ இராவணனானவன்-மதாங்காரத்தினாற் கர்த்தனெழுந்தருளுந் திருக்கயிலையை கரங்கொண்டெடுத்த காலத்திற் பெருவிரலினாலழுத்தி பாதலவனாயிற்றள்ளிய மகத்துவத்தை நீர் மறக்கவேண்டாம் சர்வசங்கார முடிவிற் பரமன்விழியிலெழுந்த ஒருபொறியினால் நாமும் மற்றசரா சரங்களும் அனற்பட்டு சாம்பலாவதையெண்ணி பார்க்கலாகாதோ- இத்தகையபெருமைகளையுடைய பரஞ்சுடரை என்கரத்திற்கொண்ட கருப்புவில்லினாலும் புஷ்பபாணங்களினாலுஞ் செயிக்கமாட்டேன், ஆதலாற் சரீரத்தின் மீது யிச்சையில்லாதவர்கள் யிக்காரியத்துக்குச் சம்மதிப்பார்களென்று நினைக்கலாகும் ஆதியிற்சத்திசிவமாய் விளங்கி உலகங்களனைத்தையும் படைத்துக் காத்தழிக்கவல்ல தற்பரமூர்த்தியை நானேவிரகமுண்டாக்கவல்லவன் நல்லகாரியத்தை யெண்ணி எனக்குக்கட்டளை யிட்டீர் யிதனைமறந்து மற்றெதனைக்காட்டினும் முடிக்கவல்லேனென்று மன்மதனானவன் சொல்வதைப் பிற்மதேவன் கேட்டுமனங்கலங்கி பெருமூச்செறிந்து யிவனைப்பக்குவமாக வசப்படுத்தவேணுமென்றுயோசித்து மன்மதனே நீ யிப்போது பரமசிவத்தின் பெருமிதங்களைப் பேசியது உண்மையே மேலும் அத்தேவனை யெவ்விதத்திலுஞ் செயிப்பது அரிதுதான் ஆகிலுந் தம்மையடைந் தவர்களின்னலை நீக்கி ரட்சிக்கவல்ல யிறையவர் அருளினால் யிக்கருமம் உன்னால்முடியலாகும் மற்றயாவராலும் நினைக்கப்படுவதன்று சமஸ்தபிராணிகளினது செயல்கள்முற்றும் எமதிறைவன் கட்டளையன்றிவேறில்லை அவனருளின்றி ஓரணுவும் அசையவறியாது ஆதலாற் சூரனால் நாங்களனைவரும்படும் வருத்தங்களுக்கிரங்கி எங்கள்மீது கிருபைவைத்துச் சிவபிரானிடத்துக்குப் போகவேண்டும்அவர் திருவருளின்றி உன்னாற் கூடுவதொன் றுண்டோ மேலும் உருவாய் அருவாய் அருவுருவாகும் ஈசனானவர் யிவ்வுலங்களிலிராநின்ற ஆத்துமகோடிக ளனைத்தினையும் நடிப்பிக்கும்வல்லப முடையவர் அத்தேவன் முயற்சியில்லது நம்மாலொன்றுமாகாது அவரருளின்றி யிக்காரியம் எங்கள் கியாபகத்தில்வருமோ யிவ்வுண்மைகள் உனக்குத்தோற்றுத

நன்று ஆதலால் எங்கள்கோறிக்கையைமறுமற்சீக்கிரமாகப்போய்கருப்புவில்லைவளைத்து புஷ்பபாணங்களைத்தொடுத்து யிறுதியற்ற பரமசிவத்தின்மீது பிறையோகிக்கக்கடவை யிதுவும் அவனருளாகும் யிதனை நிச்சயமாகயெண்ணக்கடவை யிதற்கேதுவை தேவேந்திரனுக்குக் காட்சிதந்தபோது கற்தன் புத்திரனைத்தந்து காற்கவல்லோமென்று அருளியிருக்கின்றதாகக்கேட்டு யிருக்கின்றனம், யிவையன்றியும் யாவராயினுந் தங்களால் நீக்கிக்கொள்ளப்படாத தீங்குநேர்ந்து யித்தறுவாயில்உதவிசெய்யவேண்டுமென்றிரக்கவும் ஒருவன் அதைமறுத்துதன்னுயிரைத் தாங்கி யிருப்பது பசாசத்துவமன்றோ மேலும் உலகநடைக்கேற்பதோ- ஒருவன்உதவிகேழ்ப்பதற்குமுன்னம் அவன்கருத்தையறிந்து உதவுவது உத்தமம் கேட்டபின் வழங்குவது மத்திபம் பலநாள் மறுத்துச் செய்வது அதமம் சத்துருவேயாயிலும் ஒரிடறிற்பட்டு மானமிழந்து கேட்டுக்கொள்ளுவனுயில் அவனுக்கு அவ்வுதவியைநடத்தி அதனுல் தன்பிராணனைப்போக்கினும்பலராலும் புகழப்பட்டுமோட்சவிட்டைப்பெறுவன்-இடருற்றவன் வேண்டியும்மறுதலைசெய்தவன் சகலராலும் யிகழப்பட்டு பாபியாய்நீங்காதபழிக்குடன்பட்டு கடையில்நரகயாதனையிற்பட்டு வாடுவன் தன்பிராணனைப் பாதுகாக்கும் பொருட்டு ஒருபிராணிக்கும் ஒருசகாயத்தினைச் செய்யநினையாதவன் கழித்தனுளொருநாளோ அவன் செல்வம் வறிதாயத்தடாகத்திற் பரந்தோடியிருக்கும் பச்சைக்கொடி பிறையோசனப் படாததைப்போன்றுதோற்றும் மகாவிஷ்ணுஉடன் போராடி பத்தவதாரங்களைக்கட்டளையிட்டபிறகுமகாரிஷியினிடத்துதேவேந்திரன் தனக்கடுத்தசிறுமைகளை முறையிட்டு யிரக்கவிருத்திராசூரனைக் கொல்லும்படியாகத் தன்முதுகெலும்பை வச்சிராயுதமாகக் கொடுத்து பிராணனையிழந்து நித்தியப்பதவியைச்சேர்ந்த சரித்திரத்தினை நீ கேட்டதில்லையோ யின்னமுஞ்சொல்லவேண்டுமோ பிறப்பிறப்பிலியாகிய சிவபிரான் கடலிலுதித்த விஷத்தினைத்தாமுண்டு அமுதத்தினைத் தேவர்களுக்குக்கொடுத்தருளிய குணதிசெயத்தைச்சிறிதும் நீ யறியாயோ ஓ மன்மதனே யிக்காலத்திற் பாதகனை சூரபதுமனுல் மிகவும் வருந்தியிட்டயேவல்களை நடாத்தி துக்கசாகரத்திலழுந்தி வருந்துகின்றனம், அதனையொழிக்கும்பொருட்டு பரமன் திருக்கலியாணஞ்செய்து ஒருபுத்திரனைக்காட்சிப்பதாகப் புஷ்பபாணங்களைப் பிறையோகித்துமையல்பூட்டவேண்டும் ஆதலால் எங்கள்துன்பங்களைப்போக்கு முன்னிலையில் ஒருகாலஞ்சாவுநேர்ந்தாலும் யிகழ்ச்சியோ புகழினைவிரும்பினவர்கள் எது வந்தாலும் பின்னிடைவரோ அவ்வாறேயினிஒன்றும் யோசியாமல் எங்கள்காரியநிமித்தம்போய்வருவாயென்றுபிரமன்வேண்டிச்சொல்லமன்

மதனுக் கதிகக்லேசமுண்டாய் ஓ பிற்மதேவனே நீர்யென்ன சொன்னு லும் பரமசிவத்தை மாறுகொண்டு பாணங்களைச்செலுத்த மாட்டேன் ஆனல் எனக்கேற்ற காரியங்களைதனைக்காட்டினலும் யிதோநடக்கின் றேன் வெற்றிகொண்டு மீளவும்வல்லேன் தேவரீர் யிப்போது குறித்த கட்டளையென்னுல் முடியாது முடியாது க்ஷெமிக்கவேண்டுமென்றுபோ ற்றுகின்ற மன்மதனை பிற்மதேவன் கோபித்துப்பாத்து அடாபயலே பலருக்கும் உதவியாயிருக்கின்றநற்காரியத் தினைக்குறித்துத்தமுவியின் சொற்களாற் சொன்னதைமறுத்து ஏதோசில தெரிந்த வனைப்போலப் பேசுகின்றனை நாங்கள் குறித்தவண்ணம் விரைவிற்போய் செயஉச்சாக த்துடன் மீள்வையாகில் யின்னஞ்சிலகாலம் பிழைத்திருப்பை தடைசெ ய்வையேயானல் மீளாதகொடிய சாபத்தினைக்கொடுக்க விருக்கின்றனம் யிவைகளைத்திறகமாயோசித்துத் துணிவுகொண்டு யிவ்வொருகாரியத்தை முடிக்கவல்லேனென்று சொல்லக்கடவை யெனக்கேட்டவுடன் மன்ம தன் அதிகவிசனப்பட்டு மனந்தளந்தவனுய் யினிநான் சொல்லவேண்டி யகாரியமென்ன விருக்கின்றது யிதற்கென்செய்வேனென்று சத்துநே ரம்யோசித்து ஒருவகையாகத்துணிந்தவனுய் பிற்மதேவனைப்பாத்து நீர் சிருஷ்டிகத்தனுயிருந்தும் நான்சொல்லும் நிச்சயமாகிய காரியங்களை யெவ்வளவும்யோசியாமல் உங்களுடைய சவுக்கியங்களையே பெரிதாக வெண்ணி என்னைக்கெடுக்கநினைந்தபடியால் உன்னிடகொடிய சாபத்தி ற்பட்டு பதவிபெறுமல் துக்கசாகரத்தில்மூழ்கி அழிவதைப் பார்க்கிலுந் திரைதயாநிதியாகிய தாண்டவமூற்தி சன்னதியிற்போய்அவரிடஅக்கினி நேத்திரச் சுவாலையினுல்மாண்டு சாம்பலாய் விழுந்தபோதினும் பலரா லும் புகழ்தற்குரிய முயற்சியினைப் பெறுவதல்லாமல் மற்றொருதறு வாயிற் பிழைக்கவும் யெதுவுண்டு ஆதலாற் பிற்மதேவனே கோபிக்க வேண்டாம் மகம்மேருவைத் தனுசாகப்படைத்த சிவபிரானிடத்துக்கு யித்தினமேபோய் செயங்கொண்டு வரக்கடவேனென்று சொன்னவி சேஷத்தினை பிற்மதேவன் செவிகள்குளிரக்கேட்டு தன்கோபத்தைத்தணி ந்தவனுய் எங்கள்கோறிக்கையின்படிக்குச் சூலபாணிபக்கல் போகத்து ணிந்தது நல்லகாரியம்-ஓ மன்மதனே பயப்படவேண்டாம் நாங்களுந் தாமதப்படாமல் உன்பின்பற்றிவரக்கடவோம் நடவுமென்று சந்துஷ் டியாகப் பேசியனுப்பியகாலத்தில்தேவேந்திரனெழுந்துமன்மதனெதி ரிற்போய் கரங்களைப்பற்றினவனுய் ஐயனே நானுந்தேவர்களும் பல நாட்களாகப்படுகின்ற வருத்தமும் மானபங்கமும் உனக்குத்தெரியாத தல்ல எங்கள் வாழ்வினைத் திருப்பிக்கொடுக்க உனக்குமனமிருந்தால் உ மையவளைப் பரமசிவந் திருக்கலியாணஞ் செய்வதற்கு வேண்டியதந்தி

ரங்களைச்செய்து முடிக்கக்கடைவை யிந்தசகாயம் வீண்போகாது உலக முள்ளளவும் நிலைபெற்றிருக்குமெனப் பலவினியவசனங்களைச்சொல்லி விரைவிற்காரிய சித்தியாக்கிக்கொண்டுவரக் கடவையென்று விடைகொடுத்தான், அக்காலத்தில் மன்மதனானவன் பிற்மதேவனையும் தேவேந்திரனையும் வணங்கி அப்பதியைக்கடந்து தன்னகரத்திற் பிரவேசித்து மனவாட்டத்துடன் அரமனையிற்போய்த்தன்னைவணங்கிய இரதிதேவிக்கு யிச்சேதிகளைச் சொல்லக்கேட்டவுடன் அனலிற்பட்ட மெழுகைப்போலவாடுகின்றவளைப்பார்த்து பெண்ணரசியே என்செய்வேன் பிற்மதேவனாதியாகிய தேவர்க்கள் யிக்கட்டளையை எனக்கிட்டார்கள் யென்னால்முடியாதென்று வெகுவாய்ச்சொல்லியும் பலவந்தப் படுத்தியபடியால் உடன்பட்டுவந்தேன் யினியோசித்தும் விசனப்பட்டும் ஆவதென்னை கற்தன் செயலின்படிக்குவரும் நன்மைதின்மைகளை அனுபவிக்கவேண்டுமல்லது தடுக்கப்படுவதோ யினிநீயும் நானுங் கிலேசப் படுவதிற் பிரயோசனமில்லை தயிரியத்தினை விடாமலிருக்கக் கடவையெனப் பற்பலநீதிகளைச்சொல்லித் தேற்றினவனாய்ப் பின்பு ஆயுதச்சாலைக்குப்போய் மதுக்களைப்பெருக்கி மணம்வீசி மிருதுவாய் விளங்கும் பஞ்சபுஷ்பபாணங்களடங்கிய அம்புருத்தூணிரத்தினை முதுகிலிறுக்கி ரீங்காரத்தொனியினைவிளைக்கும்வண்டுகளினை நாரியாகக்கொண்டிருக்குங் கருப்புவில்லினைச்சேவித்தெடுத்து புசத்தில் மாட்டிக்கொண்டு தங்கத்தகட்டினைப் போலப் பிரகாசித்தசையும் மாந்தளிராகிய வாளினையிடையிற் செருகி ஷேமகவசத்தினை மார்பிற் றரித்து கிரீடம் குண்டலம் வாகுவலையும் மதாணிப்பதக்கம் சரசரடுவிரல்சாடு முதலிய பொற்கோலத்தைத் தரித்து அழகியசிறகினைவாய்ந்த கிளிகள்பூண்டதென்றற்றேரின்மீதுஇரதிதேவியுடன் ஆரோகணித்த தருவாயிற் சமுத்திரமாகிய செயபேரி முழங்கவும் குயிலினது முழக்கமாகியசாகளமூதவும் திரைகளாகிய வெண்சாய்மரைகளைவீசவும் மீனகேதனம் படபடென் றசையவும் வெண்மதியாகிய குடையினை நிழற்றவும் யிவ்வித ஆடம்பரங்களுடன் அரமனையைக்கடந்துதன்பதியைப்பிரிய மனமில்லாமல் அரிதில் நடக்குமுன்னிலையிற் பற்பல நற்சகுனங்களைக்கண்டு மனவாட்டத்துடன் அதிவேகமாகச் சென்றதேவதேவனாகிய பரமேஸ்பரர் வீற்றிருக்குந் திருக்கயிலாய பற்வதத்தைக்கண்டவுடன் திடுக்கிட்டு தேரைவிட்டிறங்கி பலதரம் வணங்கிக்கற்தன் பெருமைகளைத் துதித்தவனாய்த் தன்னுடன் வந்தபரிவாரங்களைஅடிவாரத்தில் நிறுத்திப்போட்டு தேவியாகிய இரதிபின்பற்றிப்போககருப்புவில்லினைக் கரத்திற்றாங்கி நித்திரையிலிருக்கும் புலியினையெழுப்ப நடக்கும் மானையைப்போலத் துணிவுகொண்டு சந்திரசடாதரக்கடவுள்

வீற்றிருக்கும் பெருமையினையுடைய வெள்ளியங்கிரியின்மீது மெல்ல மெல்ல ஏறிப்போய் தனுசில் நாணேற்றிட்டு பஞ்சபுஷ்ப பாணங்களினைப்பூட்டிக்கொண்டுசுற்றிலும் தன்விழியினைச் செலுத்திப் பார்த்தவனாய் அத்தலத்தில் உலவித்திரிகின்ற மான்முதலிய மிருகங்களையும் அன்னமாதிய பறவைப் பெருக்கினையும்முந்திகாமத் தழுந்தச்செய்ய நினைந்துபிறையோகித்தான், அப்பாணங்களின் முயற்சியினால் முன்னஞ்செருக்கற்றுச் சோர்ந்து நின்றயிடங்களிற் பிறுமை கொண்டிருந்த சீவராசிகளனைத்துங் காமலாகிரிமேலிட உல்லாசங்களுடன் ஒன்றையொன்றுநெருங்கி வங்கணமாகக்குலவி யிளைச்சலிடுகின்றஓசைகளைக்கத்தன் ஆலயமுகவாய்தலில் வீற்றிருந்து காத்துவரும் பெருமையினைப்பெற்ற நந்திதேவர்கண்டு சிறுநகைகொண்டுயிவ்வதிசெயங்க ளனைத்தும் மன்மதன்செய்கைகளெனத்தெளிந்தவராய்ஹுங்காரித்து ஒருகெர்சிதம்போடுமுன்னிலையில்அவ்வதிற்சினாயினால்அந்தபாணங்களானவை தம்மைவிடுத்தகுறிப்பின்வண்ணம்பாயாமல் வானத்திற் பறந்துபோயது யிவ்விதமாகத்தான்பிறையோகித்தசரங்கள் அபசெயப்பட்டுப் போயினதையும்மற்றசத்தத்தினையுங்கண்டு அம்மம்ம யிஃதென்னை நமதுவீரத்தன்மையிப்படிக்கபலமாகப்போகுங்காரணம் யாதோவெனச்சற்றுநேரம் ஆலோசித்தவனாய்ப் பொன்பிறம்பினைக்கரத்திற்கொண்டு முதற்கோபுரவாய்தலிற்சிங்காதனத்திலெழுந்தருளி ஆணை ஆக்கினைகளைச் செலுத்திவரும்நந்திதேவர் முயற்சியெனத்தெளிந்து மனங்கலங்கி கிட்டிநெருங்குவதன் முன்னம் யிப்பாடுபடலாச்சுதேயினியென்னென்ன விளையவிருக்கின்றதோ ஆதலாற்றுமசப்படலாகாதென் றெண்ணி அதிசீக்கிரமத்தில் நந்திதேவர் சன்னிதானத்திற்போய் மும்முறைவலம்வந்து பலதரம்வணங்கிப்போற்றிவாய்புதைத்துநிற்கும் மன்மதன்மீது திருக்கண்சாத்தி யிவடத்துக்குவந்த காரணமென்னை நமதாணைக்கஞ்சாமல்யிப்படிக்குஞ் செய்யத்துணிவையோவென்று கேழ்க்கும்போது கற்தனே அடியேன் குற்றங்களை க்ஷெமித்து என்முறைகளைக்கேட்டருள்கவென்று பிற்மதேவன் தன்னைவரவழைத்துக் கட்டளையிட்ட சவிஸ்தாரங்களைச் சாங்கமாகச் சொல்லக்கேட்டருளி யிரக்கமுற்றவராய்யிதனை நினைக்கின்றனர் யிவனொருகுற்றமுமில்லை பிரமன் இந்திரன் முதலாகிய தேவர்க்கள் தங்களுக்கு நேர்ந்திருக்கின்ற துன்பங்களை நீக்கிக்கொள்ளும் பொருட்டு யிவனைத் தூண்டினார்கள் மேலும் முன்னம்பரமசிவம் சனசாதிதவத்தருக்கு யோகசாதனைகளைத்தெருட்டப் போகுமுன்னிலையில் யாவர்வரினும் தடைசெய்யக்கடவை சாவுக்குத்துணிந்துவரும் மன்மதனைமாத்திரம் நாமிருக்குமிடத்திற்கு வரும்படியாய் விடக்கடவை யெனக்கட்டளையிட்டிருக்கின்றன

ர், யிதனையோசிக்குமிடத்திற் பசுவினைக்கண்டித்து யாகத்தினை நிறைவே ற்றி அதனைபழைபபடிக் கெழுப்புமாறுபோல மன்மதனைத்தகித்து பார் பதியாரைமணந்த வுடனெழுப்பக் கருத்தனெண்ணியதாகக் காணுகின் றது மேலும் யிவன்வரவும் அதற்கிசைந்ததாக விருக்கின்றதெனத் தீர் மானித்தபின்புமன்மதனைசிவபிரான் சன்னிதானத்திற்குப்போகவேண் டுமோவென்று சேழ்க்க ஐயனே கடவுளருக்குச்சம்மதித்துவந்தபடியா ல் அடியேனுக்கு யிறுதிகாலம் நேரவிருக்கின்ற தாயினும் பரமனெதி ரிற்செல்லத் துணிவுகொண் டிருப்பதால் அக்கோறிக்கையைக் கடாட் சிக்கவேணு மெனப்போற்றும்போது நந்திதேவர் நகைமுகராய் உனக் கவ்வாறு யிஷ்டமுண்டா யிருக்குமாகில் மேற்குவாயலின் மூலமாகநட ப்பாயெனக் கட்டளையிட்டனர், அத்தறுவாயில் மன்மதனுனவன் நந்தி தேவர் பாதங்களிற்சேவித்து விடைபெற்று அதிதீவரமாய் மேற்குத்தி சையைக்கிட்டி தேவாதிதேவனாகிய எமதுகர்த்தன் நீறுபூத்தநெருப்புமலையினையொப்பத்தாளி தந்திரோகமெங்கும் பிறகாசிக்க மோனத்திருக் குந்தலத்தைநெருங்கியபோது சக்கிறவாளப்பட்சியைக் கண்டசிங்கக்கு ட்டியைப்போலச் சிவனுதனைத் தெரிசித்தவுடன் மன்மதனுனவன் பயப் பிருந்திகொண்டு சரீரம்வியர்க்க மனங்கலங்கி கரத்திற்பற்றிய தனுசுட ன் பூமியில்விழுந்து சாவுக்குச்சரியாகிய சோபத்தையடைந்தான் - யித னைபக்கத்தில் நின்றதேவியாகிய இரதிகண்டகாலத்தில் நமதுகணவன்மா ண்டனனே என்னகாரணமோ என்செய்வேனெனக்கலக்குற்று செந்தா மரைமலரையொத்த கரங்களினலெடுத்து மடியில் வைத்து மாருடனணைத்தவளாய் பையட்டைத்தொங்கலினுற் சிறுகாற்றெழும்படிக்கு வீசி முகத்தில் முத்துகளைப்போல வெழும்வேயர்வையைத் துடைத்து வே ண்டியசயித்திய உபசாரங்களைச்செய்து வருமுன்னிலையிற் சற்றுநேரத் தில் மன்மதனுக்கு உணர்ச்சியுண்டாய் விழிகளைத்துறந்து சுற்றுமுற்று ம்பார்த்து யிதனைநினைப்பதாயினன் பிற்மதேவன் இந்திரன் முதலாகிய தேவர்களுக்குச் சம்பவித்த கொடுமைகளை நீக்கிக்கொள்ளும் பொரு ட்டு திரிபுரதகனராகிய பரமசிவத்தைக் காமக்கவலையிற்படும் படிக்கு வென்று வருவதாக பலவந்தப்படுத்தி என்னைச் செலுத்தினர்கள் பாபி யாகியநான் ஏன் அதற்குவுடன்பட்டேன் யித்தினம் நமக்குமுடிவுகால ம்நேருகின்றதற்கு சந்தேகமில்லை, குணக்குன்றமாகிய கர்த்தனைத்தெரி சித்தபோதே பயப்பிருந்தியினுற்பிராணனைத்தரித்திருப்பதுஅரிதாகவி ருக்கின்றதால் தனுசைத்தான் எப்படிதாங்குவேன் அல்லது மனவுறுதி கொண்டு பாணங்களைச்செலுத்தினும் அவைவெற்றி பெறவல்லவோ யிச் செயல்கள் பிரமனுதியருக்குத் தோற்றாதனவோ பிரசண்டவாயு மோத

லுக்கெதிரிற் றீபத்தைக் காட்டினால் நிற்பதுண்டோ அதைப்போலவே
கடவுளர்மனதுக் கெட்டாதபரம்பொருள் முனம்விட்டனர், யின்னஞ்ச
ற்றுநேரத்தில் அத்தேவன் பார்வைக் கனலிற்பட்டு சாம்பலாகவிருக்கி
ன்றேன் சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தையும் நாசமாக்கவல்ல முதல்வ
னைத்தேவர் புணர்ப்பிற்பட்டு பஞ்சபுஷ்பபாணங்களினால் வெல்வேனெ
ன்று நான் துணிவுகொண்டுவந்தது பலரும் யிகழ்ந்து நகைத்தற்கேது
வன்றோ மேலும்பிரார்த்தவினையின் முயற்சியைப்பிரமனாதியரால்வெல்
லப்படுவதரிதாயிருக்குமாகில் என்போலிகளாற் றடைசெய்யலாகுமோ
யிக்காலத்திற்கர்த்தன்செய லெப்படிக்கு முடியவிருக்கின்றதோ என்செ
ய்வேன் நல்லது நானிவ்விதமாக நினைப்பதிற் பிறையோசனமென்ன யிது
முன்னமேயிருக்கவேண்டும் பிரமனாதியருக்குச் சொல்லிவந்த சபதத்தி
னை மறக்கலாகுமோ துணிந்தவர்களுக்குத் துக்கமேன் கர்த்தன்கட்ட
ளைப்படிக்கு வருவதைத் தடைசெய்யவல்லனோ யினிதாமசஞ்செய்வதிற்
பிறையோசனமில்லை நினைந்துவந்தகருமத்தை விரைவில் முடிக்கக்கட
வேனென் றெழுந்து கருப்புவில்லினை வளைத்து சுரும்புகளாகிய நாரி
யைபிகிந்து பஞ்சபுஷ்பபாணங்களையும் ஒரோமுகத்திற் றொடுத்துக்கொ
ண்டு தன்னைப்பிரிந்திருக்க மனமில்லாமற் பின்பற்றிவரும் இரதிதேவி
யையும் வுடன்கொண்டுபோய் சந்திரசடாதரமூர்த்திக் கொருபாரிசத்திற்
சேர்ந்து பாணங்களைச்செலுத்துவதற்கு ஆயுத்தப்பட்டிருந்தான் யிவன்
சரித்திரம் யிப்படிக்கிருக்கபிற்மசபையைவிட்டுமன்மதன்போன சிலகா
லத்தில் தேவேந்திரனுக்கு மனந்தாபரியாமல் பிரமனை வணங்கி கர்த்த
னே நமதேவலின்படிக்குத் தடைசெய்யாமற் றிருக்கயிலைக்குச் சென்ற
மன்மதன் சேதிதெரியவேண்டும் மேலும் நாம்வருவதாகவும் அவனுக்
குச் சொல்லியிருப்பதால்அவடம்போய் மீள்வது உத்தமமாகக் காணுகி
ன்றதென்று பேசினான் அதைக்கேட்டவுடன் பிற்மதேவனுஞ் சம்மதி
த்தவனாய் அதிசீக்கிரமத்திற் சிங்காதனத்தை விட்டெழுந்து இந்திரன்
விண்ணவர் சூழ்ந்துவரத் திருக்கயிலாயத்துக்குப்போய்ச் சேர்ந்து நந்
திதேவரை வணங்கி அவரால் மன்மதன் செய்கைமுற்றுந்தெரிந்து என்
னமாக முடியவிருக்கின்றதோவென்னும் ஐயப்பாட்டுடன் மனந்தாபரி
யாமற் பரமசிவத்தை துதித்துக்கொண்டு ஒருபாரிசத்திலிருந்தனர், யிது
நிற்கமேற்குறித்த மன்மதன்யோசித்து ஓ மனதே யேன்வருந்துகின்ற
னை சாவுக்குத்துணிவுகொண்டு வந்தும் அச்சப்படுவானேன் நினைந்து
வந்த காரியத்தைமுடித்து கீர்த்திபெறுவதே மேலானதெனத் தேறுதலை
பேசி வில்லைநேராகப்பிடித்து பரமன் யிருதயகமலத்துக்குக் குறிபார்த்
து பஞ்சபுஷ்பபாணங்களையும் பிரையோகித்தான் - அதுசமயந் நமதுவி

ரங்களைக்காட்டி அதிவேகமாய்ப்போய் கர்த்தன் திரோசத்திற்ருக்கிய மாத்திரத்தில் அனல் விழியினைச் சற்றேதுறந்து மன்மதனைப் பார்த்தகாலத்தில் அதிற்பெருகிய சுவாலைதாக்கி மன்மதனுடலங்கரிந்து துகளாயெரிந்து தீயும் புகையுந் திருக்கயிலாய பர்வதமெங்கும் மூடியது இஃது எப்படிக்குத் தோற்றியதெனில் பூர்வத்திற் பிரமன் மகாவிஷ்ணு முதலாயினர் திருப்பாற்கடலினை மத்திக்கின்ற தறுவாயில் தீட்சண்ணியமுள்ள ஆலகால விஷமானது உதித்தெழுந்ததைப் போன்று காட்டியது மேற்குறித்த புகையுந் தீயும் பரந்துபெருகி வருகின்றதைக் கீழ்பாரிசத்தில் வீற்றிருந்த நந்திதேவர்பாத்து நமதிடத்திற்செலவு பெற்றுப்போனமன்மதன் யிறந்தகாரணமிதுவாகுமெனநிதானித்துத் தம்மைப்போற்றியிருக்கின்ற கணநாதர்கள் யிதென்னபுதுமையாக விருக்கின்றது சற்றதனை தெரிவிக்கவேண்டுமெனப் போற்றுகின்றவருக்கு மன்மதன் முடிவை யறிவித்து மேலுஞ் சொல்லுவார் பேரறிவினை வாய்ந்த கணாதிபதிகளே யிந்தமன்மதன் பிரமனாதியருக்கு பரமனைவென்று வரும்வன்னைச் சபதங்கள்பேசி யிவடம்வந்த தூணிகரமாகிய அகந்தையே அவனைச்சுட்டுச் சாம்பலாக்கியது யினி இரதிதேவியானவள் தன்கணவனிறந்த காரணத்தைத்தெரிந்து அனலிற்பட்ட புஷ்பமாலையைப்போல வாடி மார்பி லறைந்துகொண்டு எமதிறைவனை வணங்கிவேண்ட பழையபடியே மன்மதனை பிழைப்பிப்பன், தேவதேவனாகிய பரமசிவம் யிந்த திருவிளையாடல்களை முடிப்பது உங்களையொத்த புண்ணியவான் களுக்குக் காலபக்குவமறிந்து ரட்சிக்கும் நீதியாகுமென்று பஞ்சேந்திரியங்களையொடுக்கிச் சிவபிரானைசிந்தித்து நோற்ற நந்திதேவர்சொல்ல அவரைச்சூழ்ந்திருந்த கணத்தலைவர்கள் கேட்டபோது சகலபிறபஞ்சங்களும் பிழைத்தற்பொருட்டு எமதிறைவன் நினைந்தகிருபையிதுவோ வெனக்கர்த்தன் குணாதிசெயங்களை யெடுத்துப் போற்றினவர்களாய் யிதனைச் சொல்லுகின்றனர், கிள்ளைகள் பூண்டதென்றற் றேரில்வந்த மன்மதன் செயதொழிலுக் கடுத்ததாய் அவனை நெற்றிக் கண்ணினுலெரித்தவர் அவன்பக்கவில்நின்ற இரதிக்கொரு துன்பமும்நேராமற் காத்தனர், யிவ்வாறே பற்றிகலற்ற பரமன் பூர்வத்திலும் முப்புரத்தினை யெரித்தகாலத்தில் தமதுபத்திமான் மியத்திற் குறைவறநோற்ற மூன்றுதிறவனைப்பாதுகாத்தனனென்று மகிழ்ச்சி யாகப்பேசிக் கொண் டிருக்கமன்மதனைச் சாம்பலாக்கிய பின்பு சிவபிரான் பழையபடிக்குத் தமதுயோக நிலையிலிருந்தனர், கேட்டீர்களோ— சவுனகாதிரிஷிகளே சர்வமுந்தமதெண்ணத்தினால் முடிக்கவல்ல கர்த்தனுக்கு யிச்செய்கையரிதோ—யிவைநிற்கச் சாம்பலாய் வீழ்ந்த தன்கணவன் முடிந்ததைக்கண்ட இரதிதேவியானவள்

மனங்கலங்கி நல்லுணர்ச்சியினைப் போக்கிவிழிகளில்நீர்பெருக திரோகமாத்தியந்தமும் வியர்த்துமூக்கினிடத்திற் சுவாசமோடாது யிவளும்மாண்டனளென்றையப்படத்தக்கதாக பதைபதைத்து பூமியில் விழுந்து பெருக்கெடுத்தோடாநின்ற ஆற்றினது நீர்ச்சுழியிலசப்பட்டுச் சுழன்றலையும்மானைப்போல துக்கசாகரத்தில் மூழ்கிக் களைத்திருந்தவளாய் போனபிராணன் சிவகடாட்சத்தினுற் பொத்தியிற்சேரச் சிலநேரத்திற் சற்றுணர்வுண்டாய் கண்களைத் துறந்துபாத்து விசனமேவிட்டபடியால் கரங்களைக்கொண்டு வயற்றிலறைந்துகொண்டு யிதனைச் சொல்லிப் புலம்புவதாயினள், செந்தாமரைப் புஷ்பவாசியாகிய மகாலட்சுமியினது மனதுக்கினிய மகனே அடியாள் பிராணனுக்குப் பிராணனைப்போன்ற கணவனே சீதேவியினை மார்பிற்கொண்டு சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுவினதுமனதுக்கேற்ற குமாரனே பிராணிகளை அலைத்துத்திரிந்த சம்பராசுரனிடத்திற் பகைகொண்டு வாட்டிய வீராதிவீரனே மதுரமாகிய பசியகரும்பினை வில்லாகக்கொண்டு திறிலோகங்களையும்வென்று செயங்கொண்டதீரனே அழகியபவளக்குன்றினை நிகரத்து விளங்கும் பரமசிவத்தினது நுதல்விழிக்கனலிற்பட்டுச் சாம்பலாய் மாண்டனையோ-யிவ்விதஅபாயந் தேவரீருக்கு சம்பவித்ததால் யினியாவது தேவேந்திரன்முதலிய விண்ணவர்கள் அல்லலற்று நித்திரைசெய்வார்களோ-யிவ்வனியாயத்துக்குக் காரணமாயிருந்தபிர்மதேவனும் மனங்களித்திருப்பனோ- ஓ என்பிராணவல்லபா நீர் உத்தேசித்துவருஞ் சேதியினைக்கேட்டபோதே அடியாளுக்கு மனந்தாபரியாமல் பூர்வத்திற் றிரிபுராதிகளை நகைத்தெரித்த சுயஞ்சோதி மூர்த்தியாகிய சிவபிரானை மற்றையனைப்போல வெண்ணிச் செயிக்கப்போவது நீதியோ வேண்டாமென்று தடுத்துப்பலவாகச் சொன்னகாலத்திற் கிஞ்சற்றுவது காதுகொடுத்துக் கேட்டவரல்ல தேவர்கள் வேண்டியபணிவிடையினை முக்கியமாகவெண்ணித் துணிவுகொண்டுவந்த உமதுதிரோகஞ் சாம்பலாயிற்றே யிதனைக்கண்ட தேவர்நமது நிமித்தம் உயிரிழந்தனனேயென்னும் ஆவலுடன் பிராணனைவிட்டனரோ, அல்லது பிழைப்பிக்கவாவது எத்தனப்பட்டனரோ ஓ பிராணவல்லபா எனது உயிருக்கொப்பாகவிருந்த தேவரீர் மாண்டுபோன பின்பும் நான் தாபரித்துப் பிழைத்திருக்கவல்லனே பரம்பொருளாக விளங்குஞ் சிவபிரானிட அக்கினி நேத்திரத்தின் சுவாலைக்குச் சகிக்கப்படாமையால் உமதுவலிகுன்றி திரோகம் வெந்து நீருய் யித்தலமெங்கும் நெருப்பெழவும் யிச்சம்பவத்தினைத் தெரிந்தவுடன் தமது பிறையோசனம் வெற்றியாகாமையால் விண்ணவருஞ் சஞ்சலக்கடலிலாழவும் எக்காலத்துந் தீராதபெருந் துயர

மானது என்மனதைவாட்டி யலக்கவும் யெவ்விடத்தில் ஒளித்திருக்கின்றீர்- ஓ பிராணநாயகா அருவமாயாவது தோற்றி விசனப்பட வேண்டாமென்று ஆறுதலையாக ஒருசொல்லாவது பேசாயோ அடியாள்செய்த குற்றங்களேதேனு முண்டோ அதினாற்றான் வாய்திறவாம லிருக்கின்றீரோ என்செய்வேன் ஓ மணவாளா தேவரீர் செகதீஸ்பரனது சுடர்விழிக்கனலினால் வெந்து சாம்பலாய் மங்கவும் அவ்வபாயத்தினால் அடியாள் நைந்து நைந்து சோரவும் நேர்ந்ததிப்பழிபாதகமானது வஞ்சகநினைவைக்கொண்டு உம்மைப் போக்கியதேவர்கூட்டத்தினைச்சார்வதோ அல்லது அப்பா என்பிள்ளை அகப்பட்டுக்கொண் டிருக்கின்றான் நாங்களும் பதிவையிழந்து ஒளித்துநாளைக் கழிக்கின்றனம் ஆதலால் தயைசெய்து வெற்றியெற்று வரக்கடவையென்று பலவாகக்கெஞ்சிச் செலுத்தியஇந்திரன்பக்கலிற் சாருமோ நீர் பரமசிவத்தின் மீது தயிரியங்கொண்டு போகமாட்டேனென்று மறுத்து முறையிட்டதையுங் கேளாமற்சபிப்பேனென்று பயமுறுத்தியனுப்பிய பிற்மதேவனைத்தான் கூடுமோஅப்படிக்குத்தான் பலவந்தப்படுத்தினாலுங் காரியா காரியங்களையோசித்துப்பகுத்தறிந்து துணிவுகொள்ளாமல் லோகநாயகனை மோகிக்கவல்லேனென்று சபதங்களையாடிவந்த தீரனே உம்மைத்தானே சேர்வதோ யின்னாரைப்பற்றுமென்று ஒன்றுந்தோற்றவில்லையே எனதுபிதாவையொத்த அன்புள்ளநாயகனே மகம்மேருவினை வில்லாகக்கொண்டு திரிபுரங்களை தகித்தழித்தபுராதனக்கடவுளாகிய பரமேஸ்பரன் கொண்டிருக்கின்ற யோகத்தினைத்தவிர்த்து விரகத்தினை யுண்டாக்கித் தமது காரியசித்தியாக்கிக்கொள்ள வேண்டினால் தேவர்க்களெல்லவரும் அடியோடே மாண்டுபோயினரோ உம்மைவிடயோதான யோதிகள் அவர்களிலில்லையோ என்கணவனே நீயோ அதற்கிலக்காகவிருந்தனை சொல்லாத விரதம்பூண்டவனைப்போலவே அபாயமாற்கங்களைப் போதித்தனுப்பி உன்பிராணனைப்போக்கினரோ அஃதன்றியும் தேவரீருக்குச்சம்பவித்த யிக்கொடுமையினை யெண்ணி யெண்ணி வாடிவருந்திச் சாகும்படிக்கு என்பிராணனுக்கும் யிறுதிதேடினரோ நல்லவனைப்போற்காட்டிய கொடியவர்நினைவையறியாமல் உதவிசெய்ய ஒருவன் விரும்புவது தன்னுயிருக்கு அபாயந் தேடிக்கொண்டதன்றோ பிராணவல்லபா யிதனையறியாமல்மோசம்போனீரோ ஐஐயோ பூற்வத்தில்நான் என்னபாதகங் களினைச் செய்தேனோ என்னையொத்த தீனராகிய கன்னியர்களுக்கென்ன தீங்குகளை முடித்தேனோ அல்லது பிருர்த்தவினைப் பயனையறிபவல்லனோ உம்மையிழந்து பரதவிக்க யிப்படிக்கும் முடியவிருந்ததோ ஐஐயோ கரும்பினைத்தனுசாகப்படைத்த என்னாசைக் கணவனே உம்மைப் பறிகொடுத்

று அலற்றுவதைத்தேற்றி அடியாளைக்காக்க வாராயோ ஓ நாயகா அக்கி னிவிழியினைப்பெற்ற சிவபிரானை நொந்து முறையிடுவ தற்குக் காரண மேதேனுமுண்டோ அக்கர்த்தன் உம்மைத்தேடிவந்து யிப்படிக்குச்செ ய்யவில்லையே தேவரீர் தாமே அவர்யோகத்தைத் தவிர்க்கவந்த காரணத்தி னால் யிப்படிக்கு மூண்டதன்றி வேறுமுண்டோ ஓ பிராணவல்லபா நவ ரத்தினமயமாகிய கிரீடத்தினைத்தாங்கி பொன்னரிமாலைகளினால் அலங் கரித்திருந்த தேவரீர் முடியினைக் காணேன் சோடசகலைகளைவாய்ந்த சந் திரபிம்பம்போன்ற அழகிய திருமுகமண்டலத்தின் பிரகாசத்தினையுங் காணேன் கார்காலமேகத்தினின்றெழும் மின்னலினைப்போலச் சொலித் திருக்கும் நவமணியினுந்சோதித்த வாகுவலையங்களைப் பூண்டிருந்தபுச த்தினழகினைக்காணேன் முத்துமாலை மோகனமாலை சரப்பளிமுதலிய தையணிந்து பர்வதத்தினைபோல விசாலமாயிரானின்ற மார்பினைக்கா ணேன் திரிலோகங்களையும் மயக்கிவாட்டும் பெருமையினையுடைய பஞ் சபுஷ்பபாணங்களைக்காணேன் மதுரமாகிய கருப்புவில்லின் பொலிவி னைக்காணேன் சகலரையும் பிரமித்து யிச்சிக்கச்செய்யும் தேவரீர் அழ கொழுகிய சரீரத்தினைக்காணேன் ஐஐயோ பாபியாகியநான் யினியெ ன்னசெய்ய விருக்கின்றேன் ஓ என்னுடைக்கணவனே தேவரீனா நம்பியி ருந்த அடியாளைத்தனிமையிற் பிரிந்து எவ்விடத்திற்போ யிருக்கின்றீர் யிது உம்மையொத்த நீதிபரருக்குஅடுப்பதோ ஆதியில் என்னைவிரும்பி சகலஆடம்பரங்களுடனுந் தேவர் ரிஷிகள் பெரியோர்கள் சபைமுன் னிலையில் அக்கினிதேவன் சாட்சியாகவும் மகாவிஷ்ணு பிரமதேவனாதிய கடவுளர் ஆசிகளைச்சொல்லி நமது மங்கலக்கோலத்தினைப் பார்த்து மகி ழ்ந்திருக்க அழகியமங்கிலியத்தினை அடியாள்கழுத்திற்றரித்துமங்கலவா த்தியங்கள்முழங்க பலசடங்குகளும் முடிந்தபின்பு நாமிருவரும் திவ் வியமலரணையிற்சேர்ந்து கட்டியணைந்துயின்பமுற்றிருக்கின்ற தருவா யில் அடியாளைமுத்தமிட்டு என்னுடைப்பெண்கள் சிகாமணியேயித்தின முதல் உன்னைநிமைப்போதேனும் பிரியாமல்வங்கணமாயிருப்பேனெ ன்று வாக்குத்தந்த ஓ மன்மதராசனே ஓ என்னரசே ஓ புருஷசிகாமணி யே அத்தகையஎன்னை ஒண்டியாகப் பாதவிக்கும்படியாய் விட்டுவிட்டு தேவரீர்சத்தியந்தப்பிப்போய்விடுவதும் ஞியாயமோ சொல்வீர்எமதின் னல்நீங்கும்படிக்குப்பரமனை வெற்றிகொள்ளப் போகவென்றுசெலுத் திய தேவர்களென்ன வேரறநாசமாயினரோ யிப்போது நீர்வுயிரிழந்து சாம்பலாகியகாலத்தில் தங்கள்வல்லபத்தினால்வாவென்று விளாவிலெழு ப்ப மாட்டார்களோ யிதுவல்லாமல் உமதுபிதாவாகிய விஷ்ணு சகலவி தத்திலும் வல்லபமுடையவரென்று பலருங் கொண்டாடக்கேட்டிருப்

பேன் யிக்காலத்தில் தேவரீரைப் பறிகொடுத்து நான் ஓ வென்றலற்றிவா டுகின்றதைத் தெரிந்து சில தேற்றறவு சொல்வதாக வரவில்லையே ஆத லால் சீதேவி பூதேவி பாதங்களைப்பிடிக்க மெய்மறந்து நித்திரைசெய் திருக்கின்றனரோ-அல்லது இக்காலத்தில் யின்னவகையாய் வெந்துபோ வாயென்று செனனகாலத்தில் உமது சிரத்தில் பிரமனெழுதியிருப்பானு கில் மேற்குறித்தவர்களெவரையும் வெறுக்கத்தக்கதோ ஓ பிராணவல்ல பா பத்திவிசுவாசத்துடன் சதுர்வேதங்களையும் ஓதியுணர்ந் திருக்கின்ற சதுர்முகப்பிரமனையும் தேவேந்திரனையும் உம்மைப்பெற்ற மகாவிஷ் ணுவையும் ஐம்பொறிகளைவென்று பரமனைவழிபட்டிருக்கின்ற முனிசி ரேஷ்டர்களையும் மற்றுந்திரிலோக வாசிகளிற் சகலரையும் உமது ஒப்ப ற்ற கருப்புவில்லினாலும் புஷ்பபாணங்களினாலும் மயக்கிவென்றுவெற் றிக்கொடிநாட்டி யிருந்தீரன்றோ அப்படிக்கே சந்திரசடாதரக் கடவு ளாகிய சிவனையும்நினைந்து லோகநாயகனென்று சற்றும் யெண்ணிக்கை யில்லாமல் யிப்படிக்கு நாசமடைந்தனை யித்தையோசிக்கு மிடத்திற் கொடிய வெப்பத்தினையுடைய அக்கினிப்சொதிப்பிற்பட்ட தங்கத்தகட் டினையொப்ப விருக்கின்றதே ஓ மணவாளா நாமிருவரும் யிணைபிரியா மல் குளிர்ந்து பரிமளித்திருக்கும் பனிநீரினைத்துருத்தியிற் கொண்டு ஒருவர் மீதொருவர் தூவி விளையாடியும் திவ்வியமணங்களை வீசியிரானி ன்ற மல்லிகை முல்லை யிருவாட்சி பாரிசாதம் மந்தாரை முதலிய புஷ் பவகைகள் நெருங்கி யிரானின்ற நந்தவனங்கள் சோலைகள் யிவ்விடங் களிற் காங்களைக்கோத்துச்சென்று மனதுக்கினிய மலர்களைக்கொய்து சிகைகளிற்சூடியும் பலராலும் கொண்டாடத்தக்க சிறப்பினைவாய்ந்த பு ஷ்பசயனத்தின் மீது பவ்வுளித்து யிளந்தென்றலானதுகவரிகளைநிகர்த்து மெல்ல அசையகுங்குமங் கஸ்தூரி புனுகு சவ்வாது யித்தகைய கலவை ச்செந்திரினைப்பூசிக் கொண்டுநம்மிருவர்திரேகங்களும் ஒன்றுபடக்கட்டி ஆலிங்கனஞ்செய்து திரேகம்புளகமெழத்தக்கதாகச் சரசசல்லாபலீலைக ளைமுடித்து அவ்விளைப்பு நீங்குவதாகக்கிட்டிப்படுத்துநித்திரைசெய்தி ருந்த யித்தகைய வாழ்வினை யிக்காலத்தில் நினைந்து பார்க்கு மிடத்திற் பொய்மையாகவுங் கனவுகண்டதை யொத்துமிருக்கின்றதே ஓ நாதா தக் கனானவன் சிவபிரானைத்தனக்கு மருமகனென் றெண்ணி தான்பெற்ற செல்வப்பெருக்குக்கு மூலமின்னதென் றறியாதவனாய் கர்த்தனை யவம தித்து நீக்கிச்செய்த வேள்வியினையும் அத்தலத்தில் வந்திருந்த விஷ்ணு முதலானதேவர்களையும் விரபத்திரக் கடவுளைக்கொண்டு வாட்டியழித்த தினதயாபர மூர்த்திகொண்டிருந்த யோகநிலையை யழித்துவாக் கடவை யெனவேண்டி தேவரனைவரும் உம்மைத் தூண்டினார்களே அவர்கள்

பொருட்டு உன்னரிய பிராணனைப் போக்கிச் சாம்பலாய் மாண்டனை நீ யெரிந்ததைப்போலவே சகிக்கப்படாத மிகுத்த துன்பத்தினாற் பிராணனைப்போக்கி அடியாளும் நீர்சென்ற அத்தலத்துக்கு வருகின்றேனென்வருகின்றேன் என்னுயிரையா த்தமணவாளாவென்றுஇரதியானவள்பற்பலபன்னிப்பன்னிப்புலம்பிவருந்தியிருந்தனள்.

---

## மோனநீங்குபடலம்

---

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே சிவபிரானது நுதல்விழித்தீயினுல் மன்மதன் சாம்பலாகியதைக் கண்டவுடன் இரதிதேவியானவள் மேற்குறித்தவிதமாக பிறலாபித்திருக்கப்பாமனும்.பழையபடியே ஞானயோகநிலையில்நின்றன ரெனச்சொன்னேனன்றோ யிவைநிற்கக் கீழத்திசை வாயலினிடத்திற்சேர்ந்து பரமனைத்தெரிசிக்கக்காலம் பார்த்திருந்த பிற்மதேவனாதிய தேவர்கள்தாமேவிய மன்மதன்சாம்பலாயெரிந்துபோனசேதியினைத்தெரிந்தவுடன் மனநிலைகலங்கிரோமம்நெச்ருவிட்டுபுற்றினிடத்திருந்து சிதல்கூட்டங்கள்யெழுமாறுபோல் விழிகளினின்றும்நீர்த்துளிகளானவைமென்மேலும்பெருகப்பதலையையொப்பவாய்களைத்துநத்தபடியே விசனத்தினால் ஒவெனப்புலம்பி தேமல்பாந்ததைநிகராய்த்திரோகமெங்கும் வியர்வைகளரும்பி நடுக்கமெடுத்து புத்திவானுகவிருந்த ஒருபுத்திரன் சடுதியில்மாண்டவிடத்து பிதாவானவன் களைத்துவருந்துமாறுபோலத் துக்கசாகரத்தில் மூழ்கி வாடினவர்களாய் யிதனையெண்ணுகின்றனர், நாமெல்லவரும்வேண்டி மன்மதனை காளகண்டமூர்த்தியாகிய சிவபிரானிடத்துக்கனுப்பினோம் அவனைக் கோபித்துப்பாத்து சாம்பலாகவெரித்தனர் பின்பாவது குற்றமற்றயோகநிலையினின்றும் நீங்கினவரல்ல முற்படியே மவுனத்திருக்கின்றனர், ஐஐயோ யினிநாம்செய்யவேண்டியமுயற்சிகளேதேனுமுண்டோ என்செய்வோமென்றுதிகைத்துப்பின்னுமிதனைநினைக்கின்றனர் திரிலோகங்களையும்மெல்லியமலர்க்கணைகளால் வென்றிருந்த செயசாலியாகிய மாரனை நிமைப்போதிற் யாத்தெரித்தகடவுளை மற்றொருதந்திர உபாயங்களைக்கொண்டு வெல்லநினைப்பது மிகவும்அரிது மேலும் அறிவின்மையாகும் நமது துயரினைநீக்கிக்கொள்ள விரும்புவோமாகில் துரிதமாய் நாமெல்லவரும் ஒருமுகமாகப்போற்றி வேண்டுவதே முக்கியமாகிய காரியமென்று சகலருமொருமித்தவர்களாய் அன்னவாகன மூர்த்தியாகிய பிற்மதேவன் முதலிய விண்ணவர்களாத்தியந்தமும் பத்திவிசுவாசத்துடன் திருக்கயிலங் கிரியினது

மத்தியிற் சொர்ணமயமாக விளங்கும் ஆலயச்கிழந்திசைக் கோபுரவாய் யின்முன்னங்கூட்டமாய்நின் றவெமதுகர்த்தனாகிய பரமனைக்கல்லென்னு ம் ஓசையெழ ஒரோமுகமாய்த் துதிப்பதாயினர்-ஓ தீனசரண்ணியக் கடவு ளே இவ்வுலகங்களிலிரானின்ற சகலபிராணிகளுக்கும் யாதொருகுறை பாடுகளும் நேராமற் சுகத்திலிருப் பதாகத் திருவுளங்கொண்டு திருப் பாற்கடலினெழுந் து சகலரையும் வாட்டிவருத்திய ஆலகாலவிஷத்தினைத் தினையளவாகவேந்தி உண்டுகண்டத்திற் றரித்துஞ் சகலபுவனங்களையும் அலைத்துப் பெருகியகங்கையினை சுலபமாகக்கிரகித்து திருச்சடையிற்சூ டியும் சர்வசங்காரகாலத்திற் சகலத்தினையுந்தகித்துப் பொடிசெய்யவல் ல வடவாமுகாக்கினியை அடக்கியும் மன்னுயிர்களுக்கு உபத்திரவத்தி னைச்செய்து கொடுங்கோல் செலுத்திவாழ்ந்த ராட்சதவீரமுதலியபா தகனைக் காலமறிந்துவாட்டியும் யிவ்விதஉதவிகளைச்செய்து பயப்படா தீர்களென்று அபயஸ்தங்கொடுத்து யிதுபரியந்தரம் பாதுகாத்து ரட் சித்தீர் அத்தகைய குணக்குன்றன்ன-கர்த்தனேயித்தினம் எங்களைப்போ ற்றி ரட்சியாமற்போவீராயிற் புத்திரருக்குப்பிதாவை யல்லது வேற மொரு சார்புண்டோ குற்றமற்றமனதைக்கொண்டு பத்தியினைச்செலுத் தவல்ல அன்பர்களிடத்திற்றம்மையறியாதுசிலகுறைபாடுகள் நேருமா யினும்அதைப்பாராட்டாமல் நன்காகவே கிருபையுற்று ரட்சிக்குந்தீன தயாபரமூர்த்தியே தேவரீர்திருவடிகளையே தஞ்சமென்றெண்ணிச் சேர் த்தனம் ஐயனே நீர் கடாட்சித்த செல்வச்செருக்கினை யனுபவித்து யி றுமாந்து கொடுங்கோல் செலுத்திவருஞ் சூரபதுமனால் வருந்திமாள்வி ருக்கின்றனம் தேவரீருக்கடிமைப்பட்டும் அவமுற்றிவாசயிறந்துபோக லாகுமோ லோகநாயகனே எங்கள் துயரவருத்தங்களைச் சிறிதும் நினை ந்து காரீரோ ஓ பரம்பொருளோ செகன்மாதாவாகிய பராபரையினைப் பிரிந்து யோகநிலைமைகளைக்காட்டிநின்ற ஒப்பற்ற தமது செய்கையா னது அடிகளுக்குத்தினைந்துணையாயினும்அக்காலம் மனம்பதைத்துவா டுகின்ற எங்களுக்குப் பலயுகங்களாயிற்று யின்னமும் நீர் பராமுகமாய் யோகத்தினை முடித்திருப்பீராகில் யாமெல்லவரும் பிழைக்கும் மார்க்க மெவ்விதம் மகாவிஷ்ணுமுதலிய பிரமதேவதைகளானவர் மனம்வரு ந்தித்தவஞ்செய்து அம்முயற்சியினால் தேவரீர்திருவடிகளைப் போற்றிய ருச்சித்த பத்திமான்மியங்களுக் கிரங்கி யாமெல்லவரும் பெற்றுவாழு கின்ற செல்வங்களை முறைப்படிக்குச் சட்டளையிட்டீர் அதிர்சியமாகவி ருந்து சிருஷ்டிதிதிசங்காரந் திரோபவம் அநுக்கிரகமென்னும் பஞ்ச கிர்த்தியங்களைநடாத்திய ஆதிமூர்த்தியே தேவரீர்செய்கின்ற கிர்த்தியங்களி ன் மூலத்தினை ஆராயுமிடத்தில் அடியோங்கள் காரணமாகவே காணுகி

ன்றது ஓ சற்வபூதபரிபூரண தயாநிதியே மிகவும் யிளைத்து வாடுகின்றசி
றியர்களைக்குற்றம்பாராட்டி அனீதமாகநீக்கிவிடாமல் தினேதினேயாங்
கள் முடிக்கின்ற பிழைகளைப்போக்கி பிழைக்கும் மார்க்கத்தினைக்காட்டி
யினியாவது காத்துரட்சிக்கவேண்டும் அப்படிக்குச் சித்தமிதங்காவிடி
ன் சற்வசங்கார கிற்கியத்தினைப்போல ஏககாலத்தில் அனைவரையும் நாச
ஞ்செய்யக்கடவை தமது திருவுளப்படிக்கு மேற்குறித்த யிரண்டிலொ
ன்றினை விரைவில் முடிப்பீர் ஓ கங்காசடாதரமூர்த்தி பார்பதியாரைத் தி
ருக்கலியாணஞ்செய்து குமாரனைத்தந்து எங்கள் துக்கத்தினைப் போக்
கிப்பாதுகாக்கும்படிக்கு புத்தியினராய்ச் சந்திரவட்டக் குடையினையு
டைய மன்மதனைத் தேவரீரிடத்துக்கனுப்பினோம் அவனையுஞ்சாம்பலா
க்கிக்கொண்டீர் மேலும் பழையபடிக்கே யோகநிஷ்டையிலிருந்துவிட்
டீர் யிதனால் நாங்கள் முன்னையினும் தளர்ச்சிகொண்டு வாடுகின்றனம்
யினியாவது கிருபைபுற்று கிஞ்செத்திரங்கவேண்டும் ஓ பரம்பொருளே
பூற்வத்தில் ருருகாவன ரிஷிகளேவிய புலியானையிவற்றினை யுரித்து அவ்
வதளைபோத் தருளினீர் தம்மையிகழ்ந்து மகஞ்செய்த தக்கன் வேள்வி
யினை வீரபத்திரக் கடவுளைக்கொண்டு பொடியாக்கினீர் யிவையனைத்து
ம் பெரிதல்ல தீனராகிய தேவர் மானிடர் முதலியவரை வாட்டிங் கொடு
ங்கோலினைச்செலுத்திவரும் பாதகனாகிய சூரபதுமனைக் குலநாசஞ்செ
ய்து அடியோங்களைக்காத்து ரட்சிக்க வேண்டுமென்று கூரியபாதங்க
ளைப்பெற்ற வண்டினங்கள் றீங்காரத் தொனியினைச் செய்து மொய்த்தி
ருக்கும் ஆயிரம்பிதட்களைவாய்ந்த தாமரைப்பீடத்தினனான பிற்மதே
வன் தேவேந்திரன் மற்றவிண்ணவராதியாக அனலிற்பட்டுருகும் அரக்
கையொத்துச் சரீரம் நெக்குவிட்டு மனச்சோர்வுடன் முறையிட்டுப்
போற்று முன்னிலையில் அத்தேவர் கோறிக்கையினைச் சிவபிரான்திருச்
செவியினேற்று அவர்கள் முற்பகல்செய்த பாதகங்கள் கழியுநாள் சமீபி
த்தபடியால் கிருபைபுற்று நந்திதேவரைத் திருவுளத்தில் நினைந்தவுடன்
தமது காவலைநீங்கி பரமன் சன்னிதானத்துக்குவந்து மும்முறைவலம்
வந்து வணங்கி கரங்களைக்கூப்பி நிற்கின்றவர் மீது விழிதனைச்செலுத்தி
ஓ நந்தி நமதுதிருமாளிகைப்புறத்திலிருக்கின்றபிரமனாதியதேவரை விரை
வில்தருவிப்பாயென்றவுடன் முதற்கோபுரவாய்தலிடத்திற்சேர்ந்து ஓ
தேவர்க்களே எமது கற்தன் உங்களை அழைத்துவரச் சொல்லிக் கட்டளை
யிட்டனர் விசனமின்றி நடவுமென நந்திதேவர் சொல்லிய வாக்கியம்
அமுதத்தினுமேலாக பிரமனாதியர் செவிகளிற் புகுந்தவுடன் திரேகங்க
ள் குளிர்ந்து மனம்பூரித்து ஆனந்தக்கூத்தாடி ஏகமுகமாய் அரகரவென்
னும் ஆரவாரங்களுடன் கற்தன்குணாதிசெயங்களைக்கொண்டாடி யிங்கு

மங்கும் உலவிநின்றனர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே அத்தருவா
யில் தேவர்களிட ளியாடலை யின்னவித மென்று சொல்லிமுடியாதாயி
னும் தெரிந்தவளவையிற் கேட்பீராக பரமேஸ்வரன் உங்களிடத் தன்பு
கூர்ந்தவாக்கட்டளை யிட்டனனென்று நந்திதேவர் தெரிவித்தவாக்கிய
மானது எவ்விதமாக விருந்ததெனில் ஒருவன் பிருர்த்தவினையின் தூட
ர்பினால் மிகுத்த துன்பங்களிற்பட்டு நரகயாதனையிலழுந்தி ஆதரிப்பவ
ரின்றிவருந்து முன்னிலையிற்றெய்வகடாட்சத்தினால் அவ்வருத்தங்களைப்
போக்கிவெளிவந்து களித்தவனை யொத்தனர், மேலுந் தாங்கள் செய்ய
த்தக்கதை அறியாது ஆனந்தவாரியில் மூழ்கிக் களித்தவர்களாய் மெய்ம
றந்திருக்கின்ற தேவர்களை நந்திதேவர் அதிசீக்கிரமத்திற் கொண்டுபோ
ய்எமதையன்சன்னிதானத்தில்விட்டனர், கேட்டீர்களோசவுனகாதிரிஷிக
ளே அந்தநந்திதேவர் தவத்தின் பெருக்கினைப் புகழப்படுவதோ யில்ல
றந்தறவறமென் னும் யிரண்டுமார்க்கங்களை அனுஷ்டித்தும் மகத்துக்க
ள் கிருதார்த்தராதற்பொருட்டுங் கொடியசெய்கையினையுடைய எமதரு
மாரசன் தம்மை நெருங்கவொட்டாமலும் பூமியின்கண் அவதரித்து
அரியதவங்களைச்செய்த முயற்சியினால்திருக்கயிலாயத்தினைக்காவல்கொ
ண்டு கர்த்தன் கட்டளைகளை நடாத்திவரும் மகிமையினைவாய்ந்த புண்ணிய
சிலர் யித்தகையபுகழ்ச்சியினை வாய்ந்த நந்திதேவரது பின்பற்றிப்போ
ன தாமரைக்கமலவாசியாகிய பிரமதேவன் இந்திரனாகிய விண்ணவர் ஆ
தியிற் சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்துக்காத்தழிக்கும் பரம்பொ
ருளை ஏழையங்காளனை தேவதேவோத்தமனாகிய சிவபிரானை கண்களா
ர்த்தெரிசித்த காலத்திற் செய செய வெனப் போற்றி வாழ்த்தின
வர்களாய் யிருகரங்களினையுஞ் சிரத்திற் கூப்பிக்கொண்டு மெல்ல மெல்
லநடந்து சதுர்வேதங்களையும் திருமித்த சந்திரசடாதரமூர்த்தியினது
சமீபத்திற்கிட்டியவுடன் ஆதியில் மகாவிஷ்ணுவானவர் மனோவாக்குக்
காயம் ஒருமைப்பட வழிபட்டதைப்போல மும்முறைவலம் வந்து ஆ
னந்தநீர் பெருகிச்சொரியும் விழிகள் கர்த்தன் திருவடிகளிற் பொருந்த
ச்சேவித்து தங்கள்மனதிற் றேற்றியவாறே வேதவாக்கியங்களினாற் சற்
பக்கசினை விக்கியிருக்கும் பரமனைப்போற்றி நிற்கின்றவர்களினது ப
த்திமான் மியங்களுக்கிரங்கினவராய் பிரமனாதிய தேவர்களே நீ விரம
னவாட்டத்துடன் வருந்தி முறையிடுவதற்குக் காரணமென்ன சொல்ல
க்கடவீரெனத் திருவாய்மலர்ந்தபோது அத்தேவர்கள் வாய்களைப்போ
த்திக்கொண்டு கர்த்தனே சூரபதுமனனவன் அளவற்றயுகங்களாகவெங்களை
அலைத்து தாதயேவல்களைக் கட்டளையிட்டவாறே செய்து மானபங்க
ப்பட்டு வாடிவருந்துகின்றனங் காளகண்டமூர்த்தியே தேவரீரையல்லது

அடியோங்கள் யின்னலைவிலக்கி ரட்சிப்பதற்கு யாவரிருக்கின்றனர் ஆத லாற் கொடுங்கோல்செலுத்தி தீனரை வாட்டுகின்ற சூரனைக்குலநாசஞ் செய்வதாக லோகநாயகனே திருவுளங்கொண்டு இமையவரையினிடத்தி ல் அரியதவங்களைச்செய்து வருகின்ற மாய்கைக்கரசியாகிய பார்பதியா ரைத் திருமணஞ்செய்து ஒருபுத்திரனைத்தந்து எங்கள் குறைகளைத்தீர்க் சக்கடவீர் ஒ பத்தவற்சலனே யிவ்வரத்தினைத் தரவேண்டுமெனச்செந் தாமரையினையொத்த திருவடிகளிற்பணிந்து வேண்டுகின்ற பிரமனுதி யரிடத்துக் கிருபையுற்று ஒ தேவர்க்களே கலங்காதீர்கள் உமது கருத் தின்வண்ணம் முடிக்கக்கடவோம் யின்றுமுதல் விசனமென்பதைமறந் துவிடக்கடவீர்கள் உங்கள் நிமித்தியம்இமையவரையினிடத்திற் றவஞ் செய்திருக்கின்ற பார்பதியைத்திருக் கலியாணஞ்செய்து உங்கள் துன்ப த்தினைப்போக்கக்கடவோம் ஆதலால் நீ வீரனைவருந்தத் தமது யிடங்க ளைச்சேர்ந்து மனக்கவலையற்று சவுக்கியமாக யிருப்பீரென்று திரிகால ங்களையும் வரையறத்தெரிந்த பரமன் அனுக்கிரகஞ்செய்த தறுவாயில் தாமரைக்கமலவாசியாகிய பிரம்மதேவனும் பொலிவு நீங்கி யிருக்கின்ற பொன்னகருக் கதிபனுகிய தேவேந்திரனும் மற்றவிண்ணவருங் களிப் பிலாழ்ந்து சஞ்சலங்களைப்போக்கி மீட்டுஞ் சத்தனைப் பணிந்துபோற்றி விடைபெற்றுமீண்டு சிறந்த பொன்வரையாகிய மகம்மேரு கிரியினைச் சேர்ந்துசிவபிரானை வழிபட்டிருந்தனர், யிவ்விதமாக தேவர்க்கள் பரம ன் அனுக்கிரகத்தினைக் கிடைத்து நீங்கியதறுவாயில் ஒருபாரிசத்தில் ம னவருத்தத்துடன் காலம்பாத்திருந்த இரதிதேவியானவள் லோகநாயக னெதிரில்வந்து விழிகளில் நீரைப்பெருக்கி மிகுத்த துக்கத்துடன்வண ங்கித்துதித்து சகிக்கப்படாமையால்முறையோமுறையோ தீனதயாபர மூர்த்தியேஏழையங்காளனேசொற்னமயமர்கியமகரந்தங்களினையிறைக் குந்தாமரைக்கமலவாசியாகிய பிரம்மதேவன் இந்திரன்முதலாகியதேவர்க் கள்வஞ்சகப் போதனைக்குள்ளாகிய என்கணவன் தீர்க்கயோசனையைச் செய்யாமல் யிவடம்வந்து முன்பின்பாராமல் தகாதகாரியத்தினை முடி த்தகாரணத்தினுல் தேவரீர் நுதல்விழிக்கனலிற்பட்டு மாண்டனன் யிக்க ருமம் அவர்சுதந்திரபுத்தியினுல் நேர்ந்ததன்று ஆகலால் அவர்செய்த அ பராதத்தினைப் பொறுத்தருளி பழையபடியே சீவந்தனுக்கி புருஷபிச் சைதரவேண்டுமெனக் கரங்களை நீட்டி யிரக்குமுன்னிலையில் ஒப்புவமை யற்ற பரமேஸ்பரன் அவளிடத்திற் கிருபைகூர்ந்து பெண்ணே நீ புலம் பிவாடவேண்டாங் கடககங்கணங்களை அணிந்திருக்குங் கவுரியினை இ மையவரையினிடத்திற் பாணிக்கிரகணஞ் செய்கின்ற தறுவாயில் உனது கொழுனனுகிய மன்மதனை யெழுப்பித் தருவோம் அதுபரியந்தம் நீ

யானவள் அத்தலத்தினைச்சேர்ந்து வருத்தமின்றி யிருப்பையென்று ஒப்
பற்ற பரமன் திருவுளம்பற்றிய தருவாயில் இரதிதேவியானவள் அப்
போதே தன்கணவனைக் கண்டவளைப்போல மனமகிழ்ந்தவளாய் கர்த்தன்
பாதாரவிந்தங்களிற் றொழுது துதித்துவிடை பெற்றுப்போய்ப் பொ
ன்மயமாகிய இமையவரையினைச்சேர்ந்து காருண்டமேக வரவுக்கெதிர்
பார்த்திருக்கின்ற மயிலினைப்போல ஒருபாரிசத்திற் சிவனுதனைத் தியானி
த்திருந்தனள்— இவ்விதமாக இரதியானவள்பரமன் கட்டளையின்படி த
னிமையிலிருப்பவள் மனக்கோட்டத்தினைப்போக்கி தேவர்க்கள் துன்ப
ங்களினையொழிக்கவுந் தம்மைநோக்கித் தவஞ்செய்திருக்கின்ற பார்வ
தியாவிவாகஞ்செய்து திருக்கயிலாயத்திற் சேர்க்கவுங் கங்காசடாதர
மூர்த்தியானவர் திருவுளத்தில் நினைந்து சனகர் சனந்தனர் சனாதனர் சன
ற்குமாரரென்னுந் தவச்சிரேஷ்டரைப்பார்த்து என்றுமைக்குமாரர்களே
இதுபரியந்தங் காட்டியிருந்த ஞானயோகநிலைமைகளைப்போதிக்கப்ப
டுவதன்று முதற்சஞ்சலசித்தத்தையொழிந்து மவுனதீட்சைகொண்டு அ
ந்நிலையிற் பிசகின்றி நின்று நமது திருவடியினை யிதையகமலத்தில் நி
னைப்பதே அஃது முற்றுப்பெறுவதற்குக் காரணமெனத் தெரிவித்து
மேலுஞ் சொல்லுவார் கண்ணிமையினை யொப்பவிளங்கும் யோகநிலை
மையினைச்சுலபமாகக் குறித்துக் காட்டினோம் இதனைக்கவனித் திருக்கக்
கடவீரெனத் தெருட்டியகாலத்திற் பிரமகுமாரராகிய சனகாதிகளென்
னும் சமர்த்தர்கள் திடசித்தராய் மகிட்சியடைந்து பயபத்திவிசுவாசத்து
டன் சிவபிரான் திருவடிகளில் வேதவிதிப்படிக்குப் பணிந்தெழுந்து க
ர்த்தனே தேவரீர் கடாட்சத்தினால்அடியோங்கள் மனவியாபாரகங்களைப்
போக்கிக் கிருதார்த்தராயினோமென்று பலவாகப்போற்ற முன்னிலையி
ற்பரமன் அவர்களிடத்தில் கிருபையுற்றவராய் குமாரர்களே நாம் காட்
டியவாறே மௌன நிஷ்டையினை முடித்து மோட்சபதவியினுக்குப்
பாத்திரராய்க் கடையில் நமதிடத்திற் சேர்ந்து சுகாதீதயின்பத்தினைப்
பெற்றிருப்பீரெனத் திருவாய்மலர்ந்து விடைதந்தனுப்பினர், கேட்டீ
ர்களே—சவுனகாதிரிஷிகளே யிந்தஞானயோக முறைமைகளை மனதொ
ருமித்து பத்திவிசுவாசத்துடன் கேழ்விப்பட்ட புண்ணியவான்கள் ஆ
னந்தபரவசத்தராய்ச் சிவசாயிச்சியப் பதவியினைப்பெற்று எக்காலத்தும்
பரமனைவழிபட்டுக் களித்திருப்பரெனச் சொல்லிய சூதபுராணிகராதை

மிசாரணிய வாசிகள்வணங்கிதேவரீர் கிருபையினால் யிதுபரியந்தங்கே
ட்டறியாத புண்ணியசரித்திரங்களைத் தெரிந்துகடைத்தேறினோம்தயவுசெ
ய்துசிவனார்தன் பின்பு நடாத்திய திருவிளையாடல்களையும் பாத்தமாகப்
போதித்தருளவேண்டுமெனப்போற்றினர்.

## தவங்காண்படலம்

சூதபுராணிகர் - சவுனகாதி ரிஷிகளைப்பாத்துச் சொல்லுவார் பிர
மகுமாரர்களாகிய சனகாதிகள் சிவபிரானிடத்திற் செலவுபெற்றுப்போ
யினபின்பு பரமேஸ்பரன் யோகநிலையினை நீங்கினவராய்ப் பற்வதராச
புத்திரியாகிய பார்பதியாரிடசிறந்த பத்திமான் மியங்களையும் அம்மனு
க்குத் தம்மிடத்திருக்கின்ற அன்பின் திறங்களையும் பலருக்குங் காட்ட
த்திருவுளங்கொண்டு அவற்றினைச் சோதிக்க வேண்டிப் போவதாக வுத்
தேசித்து ரூபநாமக்கிரிகையற்ற பரமன் ஒருவேடத்தினைக் கொள்வதர
யினர் அஃதாவது புலியதளைக்கழித்து காஷாய வஸ்திரத்தினை உடுத்துஞ்
சடாமண்டலத்தினை மறைத்துச் சிகையினைமுடிந்துவிட்டும் சுபஞ்சோ
தி வடிவினைமாற்றி தாளிதம் நிறைந்தகோலத்தினைக்கொண்டும் அகண்
டாகாரமாகிய திரேகத்தினைக் குறுக்கி வாமனப்படிவந்தாங்கியும் முப்
புரிநூல் மார்பினிடத் தசையவுங்கமண்டலத்தினைக் கரத்திற் கொண்டும்
வெய்யல்பனி யிவற்றின்வருத்தங்களைப் போக்குவதாக குடையினை ஏந்
தியும் கரத்திற்றண்டொன் றூன்றியும் வேதபாரகராகிய பிராமணக்கிழ
வனைப்போலத் திருவடியெடுத்து மெல்ல மெல்ல நடந்து இமையகிரியி
னைச்சேர்ந்து அண்டாண்டபுவன சராசரங்களை யீன்றருளியலோக மாதா
வான பார்பதியார் மிகவும்வருந்தித் தவஞ்செய்திருக்கின்றசாலைக்கருகில்
வருவதைவாயல்களைக் காத்திருக்கின்ற கன்னியர்கள்கண்டு யிவர்மகாத்து
வாக விருக்கின்றரென நிதானித்தவராய் யெதிர்கொண்டுபோய்பத்திவி
சுவாசங்களுடன் பாதங்களிற்பணிந்தெழுந்து யிதனைச்சொல்லுகின்ற
னர். முதிர்ந்த வயதினைப்பெற்றுத் தள்ளாடிய நடையுடன் அருமையா
கயிப்பெரியவர் யிப்பற்வதச்சாரலின்கண் வருவதுயெளிதல்ல நாம்செ
ய்ததவமாகுமெனப்பேசி சுவாமிகள் மிகவும்வருந்தி யித்தலத்துக்கெழு
ந்தருளிய காரியம் யாதோதெரியவில்லையே திருவுளம்பற்றவேண்டுமெ
னப் போற்றமுன் னிலையில்முதியவர் நகைமுகமாய் ஓ பெண்களேமலை
யிறைவன்புத்திரி அரியதவங்களினைச் செய்திருப்பதாகக் கேள்விப்பட்
டு அந்நிலையினைகண்டு களிக்கும்படியான யெண்ணங் கொண்டுபோந்

த்தெனக்குறித்தவுடன்மகாபாக்கியமென்று அக்கன்னியரிற்சிலர் பார்பதியாரிடத்துக்கோடி தாயே யாரோ ஒருபெரியவர் உம்மைக்கண்டுவார்த்தைசொல்ல வேண்டுமென்று கடைவாய்தலினிடத்தில் வந்திருக்கின்றனரென்றபோது நல்லகாரியம் நீங்கள்குறித்தவாறே விற்றாயிருந்தால் யிவடத்துக்கழைத்து வாருமெனக் கட்டளையிட அவர்கள் கடுகிச்சென்று விருத்தப் பிராமணனை அம்மன்முன்விடக்கண்டு மகிழ்ந்தவளாய் யிப்பெரியவர் எமது கற்தனாகிய பரமசிவனுக்கு மிகவும் உகந்தபத்தராகக்காணுகின்றதென்றெண்ணி யெதிர்கொண்டு பத்திவிநயங்களுடன் பார்பதியார் வணங்கிநின்றகாலையிற் பிராணபதமாக விருக்கின்ற விசையையென்னுந் தோழிப்பெண்ணானவள் பக்கத்திலிருந்த ஒருபீடத்தினைக்கொண்டுவந்துவைத்து அக்கபடசன்னியாசியை வீற்றிருக்கச் செய்தாள் அம்மனும்பக்கத்தில் அடங்கி ஒடுங்கி நின்றனள், அத்தருவாயில் பிராமணசிரேஷ்டராக வெழுந்தருளி யிருக்கின்றகற்தனானவர் பார்பதியாரை அதிசபிரியத்துடன்பார்த்து ஒ பெண்கள்சிகாமணியேசொல்லுதற்கரிய உமதுஅழகியவடிவமானது மங்கவுஞ்சொற்னச் சாயையைப்பழிக்கும் திரேகமானது நசித்துத்தளரவும் அரியதவத்தினைச் செய்கின்றனை, ஆதலால் என்னபேற்றினை விரும்பினை உன்கருத்தியாது சொல்லக் கடவையென்று அழிவற்றசிவனாதன் குறித்தகாலையில் வல்லிசாதக் கொடியினும் மெல்லியயிடையினையுடைய அம்மனானவள் நாணங்கொண்டு பாரிசத்தில் நிற்கின்ற விசையையென்னும் பாங்கியினது முகத்தைப் பார்த்து சீக்கிரமாக யிவர்கேழ்விக்கு மாறுரைகொடுமென்று கண்சய்கையினாற் காட்டியபோது அடியாளுக்கிந்த பணிவிடையினைக் கட்டளையிட்டனளென்னுங் களிப்பினையடைந்தவளாய் ஒ பிராமணோத்தமரே கேட்பீராக இவ்வுலகங்களில் அடங்கிய பிராணிகளெவற்றினும் பிராணபதமாக வீற்றிருந்து நடிப்பிக்குந் திறிநேத்திரதாரியாகிய சிவபிரான் தம்மைக் கடிமணமுடித்துத் தமதிடப்பாகத்திற் கொண்டாளுங் கருத்தினளாய் எமதிறைவியானவள் யித்தகைய அரியதவங்களைச்செய்து வருகின்றனளென்று சிலதியானவள் சொல்லக்கேட்ட தேவதேவோத்தமனான பரமன் நகைத்து யிதனைப்பேசுவதாயினர், ஒ பெண்ணே கேட்பாயாக கங்காதரமூர்த்தியாகிய பரமசிவம் யிவளுக்கெளிதிற் கிடைக்கப்பட்டவனோ யிஃதன்றியுஞ் சகலபுவனங்களையும் படைக்கவல்ல பிற்மதேவனும் மன்னுயிரனைத்தினையுந் தாற்கும் பெருமையினையுடைய மகாவிஷ்ணுவுந் தேடிக்காணப்படாத சுயஞ்சோதி சொருபியாகிய கற்தன் யிவள்செய்யாநின்ற சுலபமாகிய தவத்துக்கிரங்கி வந்து காட்சி கொடுப்பரோ- அல்லது ஒருகாலம்வரினும் வேண்டியபேற்றினைத் தருவதன்றி யிவளையொரு

பொருளாகநினைந்து மனமகிழ்ச்சியுடன் பாணிக்கிரகணந் தான்செய்வரோ- ஆகலால் உங்களிறைவியாகிய உமையவள் அத்தேவதேவன் பெருமைகளை எவ்வளவும் அறியாதவளாதலாற் றனக்குக்கிடையாத பொருளினைவிரும்பினள், கடைப்பிடியான வார்த்தையொன்றினைச் சொல்லுவோம் அன்னபானாதிகள்முதலிய சவுக்கியங்களை விரும்பாமல் வருந்தி யிவள் தவஞ்செய்வதினாற் கிடைக்கும் பிரயோசன மொன்றுமில்லை யிக்காலத்திற் பெறுதற்கரிய பொருளானது உங்கள் நாயகிக்குமாத்திரம் லேசிற் கிடைக்குமென்று நினைக்கின்றனையோ பலகாலம்வெய்யல் மழைகுளிர் பனி யிவற்றின்கொடுமையினால்வாடி தனது தேககாந்தியும் வலியும் மங்கிப்போயினள், ஆதலால் உமையவளுக்கினி உறுதியாகியதேதெனில் விரைவில் யித்தவநிலையினை நீங்கி சவுக்கியமாகயிருப்பதே பலன்யிவளிடத்தில் நமக்குண்டாகிய யிரக்கத்தினால் யிதனைக்குறித்துக் காட்டினோமென்று சிவபிரான்சொல்லிய விசேஷங்களைக்கேட்ட உமையவளானவள் மனம்பொறாமல் யிந்த பிராமண சன்னியாசியானவர் பெரியவரொன்றும் எமது கர்த்தனுக் கன்பரொன்றும் நினைந்தோம் முநிராசவந்தயிவர் யித்தகைய கொடிய வார்த்தைகளைப்பேசுவரொன்று எவ்வளவும்நினையாமற்போனே னென்று கோபங்கொண்டு மனநொந்து பெருமூச்செறிந்தவளாய் நாணத்தினைப்போக்கி நேரில் யிதனைச் சொல்லத்தொடங்கினள் ஓ விற்கரோ யிவ்வாக்கியத்தைக்கேட்பீராக எக்காலத்துஞ்சலனமில்லாமல்நித்தியமாகவிளங்கும்பரமேஸ்பரன்யிரங்கிவந்து என்மனவிருப்பத்தினை நிறைவேற்றாமற் போவராயினும் நான் உத்தேசித் திருக்கின்ற தவநிலையினை விடுவேனோ- யின்னமும் பெருகாலங் கடினமாகிய விரதங்களினைச்செய்து பிராணனைவிட விருக்கின்றேன் வயது அதிகப்பட்டுக்கிழவனாகிய காரணத்தினால் புத்திமயங்கி யித்தகைய தகாதவார்த்தைகளினைச் சொன்னீர் உமக்கென்ன பயித்தியந் தொடர்ந்ததோ வென்றுமன்னுயிரனைத்தினையும் படைத்தலோகமாதாவாகிய பார்வதியார் சீறிச்சொல்லிய தறுவாயிற் கபடப்பிராமணரானவர் மற்றொரு தந்திரத்தினை நினைந்து ஓ பெண்கள் சிகாமணியே நீ மிகவும் அறியாதவளாதலாற் காரிய பக்குவங்களைத்தெரிந்து நடந்துகொள்ளவறியாய் நீ பெரிதா யெண்ணி ஆசைகொண்டிருக்குந் திரிநேத்திரதாரியாகிய பித்தன்வளப்பங்களினையுங் குணங்கள் முதலாகியதுகளையும் நன்றாக விசாரணைசெய்தவளுமல்லை கேள்விப்பட்டதுமில்லை போற்காணுகின்றது அவனுடைய ஆசூசிகளிற் சில வற்றினைத்தெரிவிப்பேன் கேட்பாயாக- உலகநடவடிக்கைகளிற் பட்டவனன்று உடுப்பதோ புலித்தோல் ஏறிநடாத்தும் வாகனமோ எருது அணியப்பட்ட ஆபரணங்களோவிஷசெந்துவாகியசர்ப்ப

மும் எலும்பும் கழிதலையோட்டுமாலை பன்றிக்கொடு அமுதுண்ணும் பாத்
திரமோ ஒழிபோசிப்பதோ கொடியவிஷம் வாசஞ்செய்வதோ சுடலையி
னைபேயிடமாகக்கொண்டு தாண்டவமாடியிருப்பன் - அணிவதோ அப
லமாகிய வெள்ளெருக்கு அறுகுகொன்றைப் புஷ்பமாலை நொச்சி
யே முதலியபலவுண்டு பூசுஞ்சாந்தமோ வெண்ணீறு கரங்களினேந்து
வதோ சூலம் மான்மழு உடுக்கை தீ சேனைகளோ கோரரூபங்களையுடை
ய பூதங்கள் யின்னான் யின்னமரபென்றறிவதற்கு முதற்றாய் தந்தைய
ரோ கிடையாது மேலும் ரூபநாமக்கிரிகைகளற்றவன் அவனுக்கித்தகை
ய பலவளங்களுண்டு அவையனைத்தும் உன்பட்சத்திற் சேரும்படியான
கருத்தினைக்கொண்டோ பெருராளாய் அரியதவங்களைச்செய்து வாடு
கின்றனை பழமையாகச் சகலவளங்களினையும் பெற்றிருக்கின்ற பர்வதரா
ச புத்திரியாகிய உன்னைத்தவளுக்கிந்தசுலபபிரயோசனத்தையிச்சிப்ப
தழகோவென்று திரிபுரங்களை நகைத்தெரித்த சிவபிரான்சொல்லியதைத்
தவப்பேற்றினையுடைய இமையகிரி புத்திரியாகிய பார்வதியார் கேட்ட
மாத்திரத்தில் திருக்கரங்களினால் யிருசெவிகளையும் மூடிக்கொண்டு சிவ
னாமங்களைச்செபித்து வருந்தினவளாய் அதிககோபத்துடன் துன்பத்தா
ழ்ந்து யிதனைச்சொல்வதாயினள், ஒ விற்தப்பிராமணனே கேட்பாயாக
அழிவுபடாத எமதுகற்றனிடத்தில் உன்மனதிற்சிறிதேனும் பத்திவயிரா
க்கியங்களின் திறமானது காணப்படவில்லை லோகநாயகன் திருக்கோல
த்தினை நீயானவன் கொண்டிருப்பதை யோசிக்குமிடத்திற் காட்டினிட
த்திருக்கின்ற பட்சிசாலங்களினை வஞ்சித்துப் பிடித்துக்கொள்ளும்பொ
ருட்டு வேடனானவன்சிரத்தினிடத்திற் றழைகளினைகட்டிக்கொண்டுபோ
கும்விதமாக விருக்கின்றது இஃதன்றியும் பூர்வத்திற் றக்கனானவன்
சற்றுயிரக்கமின்றிச் சகலசெல்வங்களையுந்தனக்குக் கடாட்சித்த கற்தனை
உன்னைப்போலவே உதாசினம்பேசியகாரணங்களையும் அக்கொடுமையி
னால்அவன்பட்டகேட்டையுமிதுபரியந்தம்நீ கேட்டறிந்ததில்லையோ
யிக்காலத்தில்என்முனஞ்செகதீசுரனை மதியாமற்பேசினைகுற்றமற்றவே
தாகம புராணமுதலிய சாஸ்திரங்களைச்சற்றுமோதி அவற்றின நிச்சயங்க
ளைத் தெளிந்தவனல்லபோற் காணுகின்றது மேலுஞ்சிலகாரணங்களைச்
சொல்லக் கேட்பாயாக -சாமம்- ருக்கு - எதிர் - அதர்வணமெனச் சொ
ல்லுஞ்சதுர்வேதங்களனைத்தினையுங்கற்று அதுகளிற் குறிக்கின்ற உண்
மைகளைத்தெளிந்தும் அம்மார்க்கங்களே தமக்காதாரவாகக்கொண்டு நட
ந்துகொள்ளாதவர்களாய் கொடிய மார்க்கங்களினையே மேம்பாடாகச்சி
ந்தித்துசோமசூரியாக்கினியையே திரிநேத்திரங்களாகப் படைத்த சிவ
நாதனைப் பழிகூறி மோட்ச சாம்பிராச்சியத்தினை எக்காலத்திலும் பெ

ருமல் அலைந்து பாதகராகத் திரிவொன்றுமுனம் நந்திதேவர் ததீசிமுத
லிய ரிஷிகளாற் பிராமணர் பெற்றிருக்கின்ற சாபசம்பந்தமானது அறி
வீனனாகிய உன்னையும்பற்றி மயக்காமற் போவதோ யிவையன்றியும்பி
ராமணர்முதலிய எவ்வுயிர்களுக்குந் தந்தையாக நின்று அவற்றினைப்ப
டைத்தும் அவ்வுயிர்கள் செய்யுந்தொழில்களுக்குத் துணைக்காரணமாக
விளங்கி முற்றுப்பெறக் கடாட்சித்துஞ் சற்வகாருண்ணியனாகச் செக
மனைத்தையும் நடிப்பித்தும் யிவ்வித மகிமையினை யுடைய தேவனல்
லது தங்களுக்கு அசைவின்மையாகச் சமஸ்தமுந் தமது நாடகமாக வ
கித்திருக்கின்ற மகாதேவனைக்கடைப் பிடியாகக்கொண்டு வாழவறியா
மல் அஞ்ஞானத்தினால் அவர்பத்திமையை நீங்கி யாதொரு பிறையோ
சனமு மற்றயிதர தேவதைகளைத் தொழுது நல்லொழுக்கங்களை நீங்கிய
வர்களைப்போலவும்மேற்குறித்தபடிக்குத்தக்கன்மகத்தில்பங்கட்பட்ட
பிராமணர் மாறுபாட்டினைப்போலவுஞ் செய்தனை ஆதலால் நானுன்னை
வெறுக்க வேண்டியதில்லை யென்றுபேசிமேலுஞ் சொல்லுகின்றனள்,பி
ராமணரிற் சிலர் சிறந்தவேதாகமங்களிற் சொல்லுகின்றகிறமப்படிக்கு
ச் சிவவேடத்தினைப் பவுத்திரமாகத் தரித்துக்கொண்டு அதற்குரியபத்தி
வயிராக்கியங்களிற் பிசகின்றி எமது கற்தனிடத்திற் பிறீதியுடன் பணி
விடைகளைச் செய்துவரத்தக்க புண்ணியசீலருமுண்டு ஓ விருத்தனே நீயு
ம் அவர்களைப்போலவே காஷாய முதலியகோலத்தினைப் பூண்டிருந்து
ம்நித்தியத்தினைப்பெற்ற சிவனாதனையிப்படிக்குயிகழ்ந்துபேசுவையாயி
ன் இராக்கதர் அவுணர் முதலிய கொடியவர்களிலும் உன்னையொத்தசமூ
லசித்த முடையவர்களிருக்கமாட்டார்கள் விருப்பு வெறுப்புகளற்ற அ
மலனாகிய பரமனை யிப்போது நீ நிந்தித்துப்பேசிய தனைத்தினையும்ப
கைஉறவென்னும் வேற்றுமையின்றிதமதுபுத்திரராகியமன்னுயிரனைத்தி
னையும் ஏகபட்சமாய்ரட்சிக்கும் பிறியமுள்ளசற்தனாதலால் அவ்வாறேபு
கட்சியாகவே கொள்வரல்லது திருவுளத்தில் மாறுபடாது திரிநேத்திரதா
ரியாகிய பரமேசுரர் குணாதிசெயங்களின் பெருமையினைத் தெரியாதவர்
கள் பிறபஞ்சங்களில் யாவருமிரார் வேதபாரகனான பிற்மனாதிய தேவர்
க்கள் தொண்டினைச்செய்து வாயாரப்போற்றுகின்றவனைப் போலவே
மற்றையரிடத்துங் கிருபாநோக்கத் தினைப்பாலித்து பாதுகாக்கவல்லச
ற்வக்கியனாகிய கற்தனானவர் ஓ பிராமணப்பதிதனே நீ யிகழ்தலாகவசனி
த்ததுகளையும் நன்காகவேகொண்டு கடாட்சிப்பரே அத்தேவோத்தமனு
க்குரிய சடனாகும் யிக்காரணங்களைப் புதிதாகப் பேசியதன்று பூர்விக
மாகவிளங்கும் வேதாகமங்களில் முறையிடுகின்றது· நன்மார்க்கங்களை
அனுஷ்டித்துச்செய்யவல்லகுணசம்பன்னராகிய மகத்துக்களானவர்யிக்

காரணங்களைத்தெளிந்து அவற்றிற்கு விருத்துவமின்றி கடைப்பிடியாக
க்கொள்வர் எமது கற்றனை எவ்வளவேனும் மதியாது புறங்கூறவல்ல க
டைனசித்தத் தினைப்படைத்த உன்றனைத்தவனுக்கு யித்தகைய ரகசியங்க
ளினை வெளியிடலாகாது அதனால் மிகுத்தபாதகம்நேரும் வேதவிதிப்ப
டிக்குப் பொய்மையாகிய வேடத்தினைத்தரித்துப்போந்த முநியனேயி
வடத்தில் நில்லாமல் அப்புறம்போய் விடக்கடவையென்று முப்பத்தி
ரண்டு அறங்களினையும் வளர்த்து மன்னுயிரனைத்தினையும் பாதுகாத்த
ருளிய பார்பதியார் பேகியகாலத்திற் கபடப்பிராமணர் அம்மனைநோக்
கி நகைத்தவராய் ஓ பெண்கள்சிகாமணியே ஏன் அவசரப்படுகின்றனை
உனதுமங்களகரமாகிய குணங்களைச் செழ்வியாய் அதிகமையல்கொண்
டுவந்த என்மனக்கருத்தினையும் அதன்காரணங்களையுங் கேட்டறியாது
புறமயிற்போபோவென்று சொல்லுவதென்னை தலைதாரத்தில்நின்றும்
மிகவும்வருந்தி யிவடஞ்சேர்ந்ததுயாதெனக்கேழ்ப்பையாயின் மறைச்
சடங்கின்படி பலரும்அறிய உன்னைத்திருக்கலியாணஞ்செய்துகொண்
டுபோவதற்காகும் யிந்தலாபத்தினைத் தெரியாமுனந் துரத்துகின்றனை
யென்று மாயக்கோலம் பூண்டுவந்த சிவபிரான் சொல்லியதை எமதன்
னையாகிய பார்பதியார் கேட்டமாத்திரத்திற் றிருச்செவிகளை யிரண்டுகர
ங்களைக்கொண்டு முடிசகிக்கப்படாமையால் மனம்வருந்தி சரீரந்துடி
சுகத்துக்கித்தவளாய் யிரக்கமற்ற யிந்தக்கிழப் பிராமணன் யித்தலத்தி
னைக்கடந்து செல்பவனாகக்காணவில்லை ஆதலால் நாமேபோய் விடுவது
தகுதியென்றெண்ணி செம்பஞ்சூட்டி தாமரைக்கமலத்தினும்மிருதுவா
கிய திருவடிகள்நோக அதற்கடுத்த ஒருமறைவிடத் தினைநோக்கி அம்ம
னைவள் செல்லுகின்றதறவாயிற் பரமசிவமானவர் மேகசஞ்சாரமுறும
ற் குளிர்ந்திருக்கும் இமையகிரியினிடத்திற் றவஞ்செய்திருந்த உமை
யவளினதுமனவுறுதியினையும் பத்திவயிராக்கியநிலைமைகளையுந்திருவுளத்
திற்கொண்டு மிகுத்தகிருபையுண்டாய் தாம்கொண்டகோலத்தினை மாற்
றிசிவகணங்கள் உருத்திரகோடியர் முதலாகச்சூழ்ந்துபோற்ற ரிஷபவாக
னருடராய் ஆகாயத்தினிடத்திற் காட்சிதந்தனர், யிவ்வாறு பிறப்பிறப்பி
லியாகிய தன்கணவன் வானத்தினிடத்திற் றோற்றியதை லோகமாதாவா
கிய பராபராதெரிசித்த மாத்திரத்தில் திரேகம் நடுக்குற்று நாணந்தலை
க்கொள்ளப் பத்திவிசுவாசங்களுடன் பலதரம்பூமியில்விழுந்துசேவித்
து கரங்களைச்சிரத்திற் கூப்பினவளாய் பரமன் பெருமைகளை நினைந்து நி
னைந்து போற்றிசெய்து பேறறிவினுல் ஆராய்ந்து வருந்தியுங் காணப்
படாத புராதனக்கடவுளே தேவரீரிடமாயையின் திருவிளையாடல்களைத்
தெரியாது அறிவீனளாகிய நாயினேன் சுலபமாகவெண்ணி யிகழ்ந்து

பேசிய குறைபாடுகளைப் பொறுத்தாளவேண்டும் இறைவனே யென்று மிகவும்வருந்தி வேண்டுமுன்னிலையிற் பரமேசுரர்களித்தவராய் அரியதவங்களினைச்செய்து யிளைத்திருக்கின்ற பார்பதியே கேட்பாயாக நம்மிடத்து முதிர்ந்தபத்தியினால் நீ முனப்பேசிய வாசகங்க ளனைத்தனையும் தோத்திரங்களாகக் கொண்டனங் குற்றங்களேதேனு மிருப்பினன்றோ பொறுமைகேட்டுக்கொள்ள வேண்டும் உன்னிடத்திற் குறைபாடென்பதொன்றுமில்லை ஆதலாற் சரீரம் யிளைத்துவருந்த யினி அரிய தவவிரதங்களினைச்செய்து வாடவேண்டுவதில்லை உன்னைத்திருமணஞ்செய்வதாக நமது பரிவாரங்களுடன் நாளையத்தினம் வருவோமென்று திருவாய் மலர்ந்து சர்வேசுரனாகிய பரமசிவன் தமது பத்தர்களுடன் மறைந்தனர், அக்காலத்திற் பர்வதராசபுத்திரியானவள் தன்மனது நிறைந்த களிப்பினைக்கொண்டு நித்தியமங்கள சொரூபியாகிய கணவனை நினைந்து நினைந்து அவரது மங்களகுணங்களைச்செபித்து பலதிரம்போற்றியிருந்தனள், அத்தருவாயில் யிக்காட்சிக ளனைத்தினையுந் தெரிசித்து மகிழ்ந்து மெய்மறந்துநின்றதோழியரிற்சிலர்யிந்த சந்தோஷவார்த்தையினைப்பர்வதராசனுக்குத் தெரிவிப்பதாக ஓடிதங்க ளிறைவனைக்கண்டு சேவித்து வாய்குழற மனப்பூரிப்புடன் யிதனைச்சொல்லுகின்றனர், சுவாமி யித்தினம் தேவதேவனாகிய பரமசிவம் மாறுருக்கொண்டு எழுந்தருளி சிலதிருவிளையாடல்களைக்காட்டி கடையில் நாளையத்தினம்வந்து திருமணமுடிப்பதாக நமதன்னைக்கு வாக்குக்கொடுத்து மறைந்தனனென்று சவிஸ்தாரமாகச் சொல்லிய விசேஷங்களைக்கேட்ட மாத்திரத்தில் ஆனந்தபரவசத்தனாய் அதுபரியந்தந் தனது புத்திரியானவள் தவத்தினைச் செய்துவருந்துவதற்காக விருத்தமனக்கோட்டத்தினைப்போக்கி தன்தேவியுடன் துரிதமாய் தவச்சாலைக்குப்போய் பெண்ணணைத்தழுவி முத்தமிட்டுதாயே உன்மனக்கருத்தின் வண்ணம் பரமன் காட்சிதந்தனனெனக்கேழ்விப்பட்டு மகிழ்ந்தனம் யினிஅரமனைக்குப் போவோமென்று அழைத்துவந்துசேர்த்துக் களித்திருந்தனர், கேட்டீர்களோ சவுனகாதி தவத்தரே அத்தருணத்தில் இமையராசனும் அவன்தேவியாகிய மேனகையம்மனும் எமதன்னையாகிய பார்பதியாருங் கொண்டமகிழ்ச்சியின் பெருக்கினை

யிவ்வளவென்று என்போலிகளாற் சொல்லிமுடிவதோ- இவைநிற்கயினி பரமசிவம் திருக்கயிலைக்கெழுந்தருளிய பின்பு செயததிருவிளையாடல் க ளையுஞ் சொல்லுவோம்.

---

## மணப்பேசுபடலம்

---

சூதபுராணிகர் தமதாசிரியன் திருவடிகளைச்சிந்தித்துப் போற்றி னவராய் ௳ நமிசாரணிய வாசிகளைப்பாத்து மேல்நடந்த சரித்திரங்களைச் சொல்வதாயினர், ஆதுலர்க்குச்சாலை-ஓதுவார்க்கூண் - அறுசமையத்தோ ர்க்குண்டி - மடம் - தடம் - சோலை - தண்ணீர்ப்பந்தல் - தின்பண்டம் ந ல்கல் - வதுவைமுடித்தல் - மகப்பெறுவித்தல் - மகப்பாலளித்தல் - மகச் சோறு - சிறைச்சோறு - பொருள்கொடுத்தல் - இடங்கொடுத்தல் - ஆளோ லை - நலைக்கெண்ணெ - பூணநூல் - அறுவைத்தூரியம் - பிறரகங்காத்தல் - பிறர்பறிகாத்தல் - சுண்ணம் - வண்ணான் - நாவிதன் - கண்ணுடி - கண்ம ருந்து - நோய்மருந்து - பிணஞ்சுடுதல் - பசுவுக்குவாயுறை - பசுவுணா ஞ்சுதறி விலங்குக்குணவு - இடபம்விடல் - இவ்வகைத்தாக விருக்கின் றமுப்பத்திரண் டறங்களினையும் வளர்த்த பார்பதியார் தவநிலையினைச் சோதித்துப் பரிவாய் அனுக்கிறகஞ் செய்தெழுந்தருளிய முதற்காரண க்கடவுளாகிய மயேசுரர் பிறகாசம் பொருந்திய வெள்ளியங்கிரியினை ச் சேர்ந்தவுடன் அகஸ்தியரோமுதலிய சத்தரிஷிகளையும் வரநினைந்தகா லத்திற் பரமன் கட்டளையினைத் தெரிந்தவர்களாய் மனநடுக்குற்று ச ரீரம்வியர்க்க அதிவேகங் கொண்டுசென்று திருக்கயிலையினைச் சேர்ந்து நந்திதேவர் அனுமதிபெற்று ஆலயத்திற்போய் சபாமண்டபத்திற்சி ங்காதனத்தினிடத்து விற்றிருக்கின்ற சிவபிரானைத்தெரிசித்து வணங்கி ப்போற்றி கர்த்தனே மகாவிஷ்ணு பிற்மதேவன்முதலிய சிறந்ததேவர்க் கள் தேவரீர்கட்டளையிட்ட பணிவிடைகளைச் சிரசாகவகித்து முடிக்கக்காத் திருக்க அடியோங்களை ஒருபொருளாகமதித்து திருவுளத்தில் நினைந்த ருளினீர், நாங்கள்செய்த தவமானது அவர்களினும்பெரிதோ கர்த்தனே எமதிறைபவனுகிய நீர் அடியவரா வரநினைந்தகாரணத்தினுற் கிறுதாற் தாராயினோம் நாயினேங்கள் யிதுபரியந்தந்தேடிய கொடியபாதகங்க ளனைத்தினையும் போக்கினோம் யினியெங்களுக்கொரு குறைபாடுகளும் நேரவறியாது ஒருமுகுர்த்தமாகநின்று சிருஷ்டிதிதிசங்காரந் திரோபவ ம் அனுக்கிறகமென்னும் பஞ்சகிர்த்தியங்களினையும் முடிக்கவல்லகடவு ளே எமதுதீயவினைகளைப்போக்கி ஆள்வதாகக் கிருபையுற்று சிந்தித்தரு ளினீர் ஆதலால் அடியோங்கள் செய்யத்தக்கதொண்டினை வினாவிற்கட்

டளையிடவேண்டுமென்று மிகுத்ததவமகிமையினையுடைய சத்தரிஷிகளு
ம் விண்ணப்பஞ் செய்யுமுன்னிலையில் நிர்மலனாகிய சிவபிரானை அத்த
வத்தர் போற்றிய வாசகங்களைத் திருச்செவியினேற்று நகைமுகமாய் அ
வர்கள் மீது திருக்கண்சாத்தி நீங்கள் எனக்காக இமோத்பர்வதராசன்ப
க்கற்சென்று அவன் கன்னிகையாகிய பார்பதியையித்தினமேதாராதத்தஞ்
செய்து திருமணமுடிக்கும் படியாகப்பேசி முடித்துக்கொண்டு விரை
வில் வரக்கடவீரென்று திருவுளம் பற்றக்கேட்டு சத்தரிஷிகளுஞ் சம்ம
தித்துவணங்கி விடைபெற்றுப்போய் இமையவனாக்கருகில் வருவதை
மலைஅரசன்கேழ்விப்பட்டு தன்தேவியுடனெதிர்கொண்டு வணங்கி அதி
கபிரிதிபத்தியுடன் வழிபாடுகளைச்செய்து துதித்தவனாய் கரங்களைக்கூப்
பிநின்று சுவாமிகளே தேவரீர்கள் திவ்வியசரணாரவிந்தங்களானவையி
த்தலத்தை மிதிக்கப்பெற்றமையால் இமையமானது பொன்மயமாகிய
மகம்மேருவினும் பவுத்திரமாய் முதன்மையாகப்பேசும் பிறைமேயாக
ணத்தினையும் பெற்றது அடியேன் முன்னோர்களுடன்செய்தபாதகங்கள்
முற்றினுங்கடந்து கிருதார்த்தராயினோம் ஆதலாற் சுவாமிகள் திருவடிக
ள் நேர்வதாக நாயினேனைக்கடைத்தேற்ற நினைத்துவந்த காரியத்தினைச்
சொல்லி ரட்சிக்கவேண்டுமென்று வாய்புதைத்துக்கேழ்க்க அரியதவங்க
ளைச்செய்திருக்கின்ற சத்தரிஷிகளும் அவனிடத்திற்பரிவாய் அரசனே எ
மதுவரவின் சேதியைக்கேழ்ப்பாயாக- உன்முன்னோர்களும் நீயும்வரு
ந்திநோற்ற தவப்பேற்றினால் உனக்குப்புத்திரியாக வெழுந்தருளியிரு
க்கின்ற லோகமாதாவான பார்பதியாளைத் திருக்கலியாணஞ் செய்வதாக
சகலசீவகோடிகளிடத்தும் பிராணபூதமாகவிளங்கி நடிப்பித்தருளுஞ் ச
ர்வசங்காரமூற்த்தியானவர் திருவுளத்தெண்ணி அதற்குவேண்டுஞ் சந்தி
உன்னுடன் பெசிவருவதாக அடியோங்களைச்செலுத்தினன், யிதற்குன்
சம்மதமென்னவென்று கேட்டமாத்திரத்தில் வேறொருஉரையுமாடாம
ற் கற்தன் கட்டளையின்படிக்குச் சம்மதஞ்சுபமென்று களித்துப்பேசி
மேலுஞ்சொல்லுவான்- சராசரப் பிறபஞ்சங்க ளனைத்தினையும் யீன்ற
ருளிய கன்னிகையாகிய உமையவளை வேதவிதிப்படிக்குக் கலியாணச்ச
டங்கினை முடித்துதத்தஞ்செய்து கொடுப்பதுமாத்திரமன்று அடியே
ன் வற்கத்தவரோடு கடத்தேறும்பொருட்டு நாயினேனையும் அடிமையா
கக்கொடுக்க விருக்கின்றனனெனச் சொன்னகாலத்தில் ஒருபுறத்தில்நின்
றதேவியாகிய மேனகையம்மனானவள் யிச்சேதியினைத்தெரிந்து சுவாமி
களே எனக்கொரு கேழ்வியுண்டு அதனால் மனஞ்சந்தேகப் படுகின்றது
அஃதென்னையெனில் தாமரைக்கமலவாசியாகிய பிரமகுமாரனானதக்கன்
அபராதத்தினை மன்னியாமல் அவன்சிரத்தினைக்கண்டித் தெறிந்தாரெ

ன்று சொல்லுவார்கள்- அக்காரணத்தினை நினைந்துபார்க்குமிடத்தில்ம னம்நடுங்குகின்றது ஆதலால் எங்கள் குலதெய்வமாகிய திருமகளை அவ ருக்கு விவாகஞ்செய்துகொடுப்ப தெவ்விதம் யிதனைதீர்கயோசனை செ ய்து பார்க்கவேண்டுமென்று வணங்கிச்சொல்லிய மேனகையை சத்தரி ஷிகளுங் கிருபையாகப்பார்த்துச் சொல்லுவார்கள்- ஓ பேண்களரசியே நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டுவதில்லை சுமங்கிலியாய்வாழக்கடவை ஒப் புவமையற்றபரமேசுரன் செயல்களின்றிறங்களை நன்றாக ஆராய்ந்துதெ ரிந்தவளல்லை ஆகையால் மயங்குகின்றனை தக்கனானவன் தனக்குமகதயி சுபரியங்களையுங் கடாட்சித்த கர்த்தனைமறந்து பவுத்திரமாகிய யாகத்தி னை முடிக்கவெத்தனித்தகாலத்தில் வேதங்களுங்குடிலையுந்ததீசி மகாரி ஷியேமுதலாயினர் ஓ தக்கப்பிறசாபாலகனே யாககர்த்தாவாய் காரண பூதமாய் அம்மையப்பனாய் தினசரண்ணியனாய் தேவதேவோத்தமனாய் சகலமங்களகலியாண குணங்களுக்குக் காரணனாயிரானின்ற சற்வேசுர னைமதியாதுநீக்கி மகித்தினைத்துடங்குவது உன்போலிகளுக் கழகன்று பரமனை வணங்கித்தருவித்துக் கொண்டுநிறைவேற்றக் கடவையென்று பலவாக உண்மைகளை யெடுத்துக்காட்டியுங் கேளாமல்யிகழ்ந்து தகா தனபேசியபாதகத்தினால் அவன்சிரத்தினைப்போக்கி பத்தவற்சலனாதலா ல் மீட்டும்ஆட்டுத்தலையினைத்தந்து ஆட்கொண்டனர் யிஃதன்றியுந்தம் மைச்சரணடைந்தவர்களுக்கு அனுக்கிறகத்தினைச் செய்துரட்சிப்பதும் தம்மை மதியாதவர்களைத் தண்டிப்பதுந் தகுதியாதலால் அவ்வவர்களு க்கேற்ற நியதிகளைக் கட்டளையிடுவது பரமனுக்குரிய செயல்களாகும் ஓ பெண்ணேதெளிந்தமேலையோர் யிந்தகாரணகாரியங்களை உண்மையா கவேபோற்றியிருப்பர், அவ்வாறேநீயும் மனவுறுதிகொண்டு நடந்துக் கொள்ளக்கடவை விருதாவாகியயெண்ணங்களை நினையாதேயென்றுதிறி காலங்களையுங் கணித்தறிந்த சத்தரிஷிகளும் யித்திறங்களை விரித்துக்கா ட்டியபோதுமேனகைக்குமனத் தெளிவுண்டாய்மேலுங்குற்றமற்றபற் வதராசன் தன்புத்திரியைத்தரச் சம்மதித்திருக்கின்றனனெனத் தெரிந் தும் நமதிறைவன்உடன் பாடுகளைத் தெளியாமுன்னம் சிலமறுதலை சென்னேமென்று பயந்து மனவாட்டத்துடன்மேனகையம்மனானவள் அத்தவத்தர் பாதாரவிந்தங்களிற் பணிந்தெழுந்து சுவாமிகளே பெண் களறிவானது எத்தன்மைத்தெனினும் பேதமைப்பாலதன்றோ என்கண வனது திருவுளச்செயலினை அனுப்பிரமாணமும் மறுக்கவறியேன்புண் ணியமுனிச் சிரேஷ்டர்களே அடியாள் புத்தியின்மிப் பேசியவசனத்தி னைக் குற்றமாகநினையாது பொறுத்தருளவேண்டுமென வணங்கிச்சொ ல்லிய மேனகையிடத்தில் அளவற்ற அனுக்கிறகத் தினைச்செய்து வாழ்த்

துமுன்னிலையில் யிதனைமலையிறைவன்தெரிந்துதவக்குன்றங்களன்னமு னிபுங்கவர்களே இவள்வாக்கியங்களை எவ்வளவும் நினைக்கவேண்டுவதில் லை திருக்கலியாணத்தினை முடித்துப்போக எமதுகர்த்தனை வரும்படிக் குச் சொல்லவேண்டுமென்று மேகங்கள்கவிந்து குளிர்ந்திருக்கும் ம லையிறைவன் பேசியதைக்கேட்டு சத்தரிஷிகளும் மனமகிழ்ந்தவர்களாய் அவ்வாறே செய்யக்கடவோம் நீங்கள் சுகசீவிகளாயிருப்பீரென்று வாழ் த்தி அப்பதியினைநீங்கிப்போய் தனக்கொப்பொன்றுமில்லாதபெருமை யினையுடைய திருக்கயிலாயத்தினைச்சேர்ந்து அதன்மீதுவிளங்கும் பட் டணத்துக்குள்ளே பிறவேசித்து நந்திதேவரைவணங்கி விடைபெற்று ஆலயத்திற்போய் சபாமண்டபத்திற் சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கி ன்ற சிவபிரானைத்தெரிசித்து அளவற்றகளிப்புடன் கர்த்தன் திருவடிகளி ற்பணிந்துபோற்றி எமதிறைவனே நாங்கள்போய்வந்த சேதியினைக்கே ட்டருள்கவென்று சவிஸ்தாரமாகச் சொல்வதாயினர் தேவரீர்கட்டளையி ன்படிக்கு சுபகாரியத்தினைக் குறித்துப்பேசு முன்னிலையில் இமையவ ரைக்கதிபனானவன் ஆனந்தவாரியில் மூழ்கினவனாய்த் தன்குமாரத்தியி னைத்தமக்குத் தரவிசைந்தானென்று அவடத்தில் நடந்தசேதிகளை விபர மாக விண்ணப்பஞ்செய்தகாலத்தில் அத்தவத்தரிடத்திற் கிருபைகூர்ந் து விண்ணகத்தினைப் போற்றிவருகின்ற சத்தரிஷிகளே உங்களிறைமை யினைச்செலுத்துவராகப்போய் வரக்கடவீரெனத் திருவாய்மலர்ந்த உ டன் பரமன் பாதகமலங்களிற் பணிந்துவாழ்த்தி விடைபெற்று தமது பதவிகளிற் சேர்ந்திருந்தனர் கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளேயிவ் வாறு எமது தவக்குறைகள் முற்றுப்பெற்றதென்னுங்களிப்புடன் சத்த ரிஷிகளுந்தத்தமது பதவிகளிற்போயினரெனச்சொற்றனமன்றேயிவை நிற்க இனி இமையவரைக் கதிபனானவன் தன்பதியிற்செய்யத் துடங் கிய சம்பிறமங்களினையும் உங்களுக்குத்தெரிவதாகச்சொல்லுவோம்.

---

## வரைபுணைபடலம்

---

சூதபுராணிகர் சவுனகாதிரிஷிகளைப்பார்த்து மேல்நடந்த சரித்தி ரங்களினைப் பேசுவதாயினர் — ஓ தவத்தரோ மலையிறைவனானவன் திரிநே த்திரதாரியாகிய சிவபிரானெழுந்தருளி உமையவள் தவநிலையினைச்சோதி த்துக் களித்தவராய் உன்னை நாம் பூலோகத்தார் மகிழ்ந்து கொண்டாடு ம்படிக்கு சகலசம்பிறமங்களுடனுந் திருக்கலியாணஞ் செய்யவருவோ மென்று திருவுளம்பற்றியதையும் அவ்வாறே வானத்திலுலவுகின்ற சத்த ரிஷிகளைக்கொண்டு தன்பெண்ணைக் கொடுக்கும்படிக்குக் கேட்டனுப்

பெயரையும் நினைந்து நினைந்து நமதுபாக்கியமே பாக்கியமென்று மகிழ்சிறந்தவனாய் கணக்கிறந்த சீவராசிகளிற் கலந்துஅவற்றின் உணர்வுகளிற் கூட்டுறவாகநின்று நடிப்பிக்கவல்ல பரமசிவத்துக்கு ஒப்புவமையற்ற தனதுபுத்திரியை திருமணஞ்செய்து கொடுப்பதைக்குறித்து யோசித்தவனாய்தேவர்க்கள்பணிவிடைகளைமுடித்துவருபவனாகியமயனைமனதில்நினைத்தமுன்னிலையில்அரசன் நினைவைத்தெரிந்து அதிவேகமாகவந்து இமையவனாக்கதிபனைக் கண்டுபணிந்து கரங்களைக்கூப்பினவனாய் அரசனேஎன்னநிமித்தம் நினைந்தீர் நான்செய்யவேண்டுந் தொழில்யாது அதனைக்கட்டளையிடவேண்டுமென்றுகேழ்க்க இமவந்தன்சொல்லுவான் என்னை ஆண்டுரட்சிக்கவல்ல பரமசிவத்துக்கு அரிதிற்பெற்ற தாயாகிய உமையவளைத் திருக்கலியாணஞ்செய்து தரவிருப்பதால் யிம்மலையினைச்சூழ்வரவிருக்கின்ற நகரத்தினை பொன்னுலகத்தினு மேம்பாடாக அலங்கரிக்கக் கடவையென்று பற்வதராசன் சொல்லிய மங்கள வார்த்தையினைச் செவிகள் குளிரக்கேட்டவுடன் உள்ளம்பூரித்து ஆனந்தபரவசத்தனாய் அந்நகரினை சிங்காரிக்கவெத்தனித்து வானத்தினை அளாவ உயர்ந்திருக்கின்றதாருக்கள் கால்களாகவுஞ் செழுமையாகவளர்ந்து சாய்ந்தசைந்திருக்கின்ற மூங்கில்கள் பரப்புக்கழிகளாகவும் மேகங்கள் கவிந்திருப்பதுஓலைகளினால்மூடியதைப்போலவும்அழகுபெற்றுபந்தலுக்கொப்பாகவிளங்கமத்தியிற்றோற்றநின்றஇமையகிரியின்மீதுபற்வதங்களுக்கிணையாகத்தோற்றநின்றகோபுரவாயல்கள் மாடமாளிகை மண்டபங்கள் இயானைக்கொட்டாரங்கள்பலமச்சுகளைவாய்ந்ததேர்ச்சாலைகள் குதிரைக்கூடங்கள் சேவகர்யிருக்கத்தக்கமாளிகைகள் தேன்களைச்சொரிந்து பலநிறங்களைப்பெற்ற புஷ்பவகைகளினாற் சோடித்த பந்தல்கள்முதலிய அலங்காரங்களைவிசாலமாய்நீண்டிருக்கும்வீதிகடோறுஞ்சோடித்து அளவற்ற துகிற்கொடிகளும்வானத்தினை அளாவிப்படபடவென் றசையுந் துசபடாங்களும்ஆகாயத்தைமூடவல்லசித்திரப்பந்தல்களும்விதம்விதமாக நிருமித்து அவற்றினுட்புறத்திற்பற்பலசிங்காரங்களைததோற்றச்செய்து மத்திமத்தியிற்கவரிகள்மயிற்பிஞ்சங்கள் புஷ்பசரங்கள் தண்டமாலைகள் முதலியவைத்தொங்கவிட்டுகுதிரைமுகத்தினைப்போலப் பருத்துக்குவிந்திருக்குன்குலைகளைவாய்ந்தவாழையையும்பவழக்கோர்வையினை நிகர்ந்தகாய்களைவாய்ந்தகமுகுமரங்களையும்எங்கும்அணிபடநாட்டிபரிமளமிகுத்த புஷ்பக்கொத்துக்களினாற்சோடித்த தோரணங்களைவானத்தினைமூடநிறைத்து நிதிக்கிறைவனாகியகுபேரன்வாழுஞ் செல்வவளம்பெற்ற அளகையுந் தேவர்கள் போற்றயிறைமையினைச்செலுத்திவரும் இந்திரன்பதியாகிய பொன்னாடும்நாணும்படிக்கு அளவற்றவீதிகளைத்திருத்தி அவற்றிற்குவேண்டு

ம் அலங்காரங்களை வரிசைப்படச் செய்தமைத்தபின்பு இடப்பாகத்தினை
யினிமேல் உமையவளுக்குத்தாவிருக்கின்றபரமேசுரருடன்வருபவராகிய
சிவகணங்கள் உருத்திரக்கூட்டங்கள் முப்பத்துமுக்கோடி தேவர்க்கள்
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் ப
ன்னகர்முதலாகவிருக்க யோக்கியமாகிய உப்பரிகைகளும் அவர்களுக்
குவேண்டும் உபகரணங்கள் நிறைந்தபண்டாரங்களும் கிரமப்படிக்கு
ப்படைத்தவனாய் அவற்றின்மத்தியிற் பதினாயிரயோசனை விஸ்தீரணமு
ள்ளதாய் பொன்மயமாக விளங்கும்மதிலை அரசன்மனைக்கொரு புறத்தி
ல்எழுப்பி நாற்புறங்களினும் பலநிலைகளைப்பெற்ற கோபுரவாயல்களை
த்தூக்கி அச்சூழலின்மத்தியில் மங்களகரமாகிய திருமணச்சடங்கினைச்
செய்யச் சொர்னமயமாகிய கலியாணமண்டபத்தினைச் சோடித்தபின்பு
அம்மணச் சாலையினிட முற்றினுஞ்சந்தனத் தேய்வையினையுங் கஸ்தூ
ரியினையும் புனுகுக்குழம்பிற்சேர்த்து மெழுகிட்டு அழகியகோலங்களை
யுமிட்டு பரிமளமிகுத்த புஷ்பவகைகளையிறைத்து முடித்தவுடன் திரு
க்கலியாண மகோச்சவத்தினை தெரிசிக்கவருந் தேவர்க்களாதியர் வீற்றி
ருக்கத்தகுதியாகிய சொர்னபீடங்களை வரிசைப்படப்பரப்பிமுற்றியவுட
ன் இந்திரதனுசு காளமேகமொப்ப வெண்டாமரைசெந்தாமரை நீலோற்
பலஞ் செண்பகமுதலிய பற்பல திவ்வியபரிமளமிகுத்த புஷ்பவகைக
ளினால் அளவற்றதிண்ணைகளைப் பிரமனும் நாணும்படிக்குச் செய்தமை
த்தபின்பு அழகினுக்கழகினைச்சேர்த்ததைப்போல நிலைக்கண்ணாடிகள்ப
லநிறப்புஷ்பத்தினாற்சோடித்த தண்டைமாலைகள் சவுரிமயிற்பிஞ்சங்கள்
பலவண்ணவஸ்திரத்தொங்கல்கள்செக்கடமிட்ட நவரத்தினமாலைகள்முத
லாகவேண்டும்வேண்டுமிடங்களிற்றகுதியாகத்தூக்கிபரமசிவத்துடன்வ
ருந்தேவகூட்டங்கள் விழிகளைவிருந்துகொள்வதாக அலங்கரித்தபின்பு
தேவர்கள்முனிவர்கள் இலக்குமிக்கொப்பாகியவடிவுள்ள அரம்பாஸ்ரீகள்யி
வர்கள்கோலமாகப் பாவைகளைச்சோடித்து உயிரிருக்கின்றதைப் போல
அசைவுபெறச்செய்து சிலது கவரிவீசவுஞ் சிலது புஷ்பமாலைகளை யேந்த
வுஞ் சிலது வீணைவாசிக்கவுஞ் செய்தவளாய் மேலுஞ்சர்வாபரண பூஷி
தைகளாய் சுந்தரமுள்ள பெண்பாவைகளிற் சிலதுமத்தளத்தினை முழக்க
வுஞ்சிலது தாளம்போடவுஞ் சிலது சுதிபிடிக்கவுஞ் சிலதுசின்னாரிவாசிக்
கவும் யிவற்றின் முன்னணியிற் சில சுந்தரமிகுத்த பாவைகள் பரதநாட்
டியங்களைச்செய்யவும் அதைக்கண்ட தேவர்கள் அரம்பையர் முதலாயி
னர் பிரமித்து ஆசைப்பெருக்கினாழ்ந்து யிவர்களுமொரு சித்திரங்களை
ப்போலப்பார்த்து நிற்பதாகவும்தன்வல்லவத்தினாற் படைத்தவனாய்மே
லும்பசியசிறகினையுடைய கிள்ளைக்கூட்டங்கள் அழகியதோகையினைவா

ய்ந்த மயிலினங்கள் சக்கிரவாகப்பட்சிகள் புறுக்கள் மதயானைகள்பஞ் சலட்சணமுள்ளரபுரவிகள்பலபடைகளைப்பரித்தவீரார்கள்தேவர்க்களிலிமா நில்றபற்பல வினங்கள் யிவற்றினை மணிவகைகளினாற் சித்திரங்களாகச் சோடித்து கலியாணமண்டபச் சுவர்முற்றினும் ஸ்தாபித்து யிவ்வித வி னோதங்களில் யாதங்குறைபாடில்லாமல்முற்றியசாலையின்மத்தியில்வே தவிதிப்படிக்குத்திருமணச்சடங்குகளைச் செய்வதற்குஓமகுண்டமும்அ தைச்சூழ்வாவிருக்கத்தக்க வேதிகைவிதங்களினையும் குற்றமற்றமண்ட லவகைகளையும் வரிசைப்பட வமைத்துவேள்வியினை முடித்தற்குவேண் டுஞ்சமித்துமுதலியபண்டங்களை தாராளமாகத்தத்தமதிடங்களிற்சேர்த் துஎண்வகைப்பாத்திர விதங்களையும் நிர்மித்து வைத்தபின்பு சூரியகா ந்தஞ் சந்திரகாந்தம் பளிங்குசொற்னம் அழகியபவழம் ஆணிமுத்துபி றகாசமிகுத்த வயிரம்கிரணங்களைப் பலதிசையினும்வீசும் சிமோரத்தின மேமுதலியவளங்களினால் எண்ணிறந்த மண்டலங்களைச் சுற்றினும்ப டைத்து கருங்குவளைமலர் நிராநின்ற பலகயங்கள் செங்குவளை மல ர்நிறைந்த பலஒடைகள் செந்தாமரை வெண்டாமரை மலிந்துவிளங் கும் பலதடாகங்கள் திருக்குளங்கள்யிவற்றினைநியமித்து பச்சைமரகத ம்பளிங்குவச்சிரம் குற்றமற்றவயிரம் பொன்னாதிய செல்வங்களைக் கொண்டுபற்பல சித்திரச்சாலைகளைப் படைத்து பலவகைமலர்கள் விக ஷித்திருக்கும் பொய்கைகளையுந் தேவேந்திரனைவன்ஒருகாலங்காண ப்பெறவனுபின் திகைத்தநோக்கி யிருக்கும்படியாக உண்டுபண்ணி கற்பகத்தருக்கள் சந்தனவிருட்சங்கள் அகில்மரங்கள் வாழை சமுகுப லாமாபுன்னைமுதலிய விருட்சங்களைப்பற்பல ரத்தினவிதங்களினாற்றளி ர்பூகாய் கனிகளைப்பெற்று வேண்டினருக்கு அவற்றின்பலன்களைத்த ருவதாகவும்படைத்தனன் சேட்டீர்களோசவுனகாதிரிஷிகளேமேற்குறி த்தவளங்களைமிகுதியாகத் தேவகம்மியன்மனதினால்நிருமித்துவருந்திநி றைவேற்றியவுடன் பொன்மயமாகிய இமையகிரிக்கரசனைக்கண்டுதே வரீர்சட்டளையின்படிக்குச்சகலமும்படைத்தாயிற்றென்று அறிக்கையிட் டபோது அவற்றினைமுற்றுங்கண்டு அதிசந்தோஷித்தினைப்பெற்றவனு ய்த்தேவதச்சனைக் கொண்டாடி யினிதாமசஞ் செய்யலாகாதென் றெண் ணிவேகமுள்ள பலகோடிதூதனாத்தருவித்துமகாவிஷ்ணுபிரம்மதேவன் தேவேந்திரன் முப்பத்துமுக்கோடிதேவர்க்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளாதியானவர்கள் தத்தந்தேவிமாருடன் தயைசெய்துவந்து பார்ப தாதேவியினது திருக்கலியாண மகோச்சவ சம்பிரமத்தினைத்தெரிசித்து ப்போகும்படிக்குநாம்சொன்னதாகத்தெரிவித்துவருவீரெனக்கட்டளை யிட்டு பலதிசையினுந் தூண்டினான் அவர்களும் மனோவேகத்தினும்

முந்திச்சென்றுவைகுந்த நகரம்பிர்மலோகம்பொன்னுலகமுதலாகியப
திகளிற்சேர்ந்து திருமணச்சேதியினை விண்ணப்பஞ்செய்யக்கேட்டவு
டன் மகாவிஷ்ணுமுதலிய தேவர்க்களும் நாரதாதிமகாரிஷிகளும்மேரு
வில்லினாற்றிரிபுரங்களைவென்ற சிவனுந்தன்பெருமைகளைப்புகழ்ந்து அவ
ருடன்வருவோம்யிச்சேதியைஉங்களரசனுக்குச்சொல்வீரென்று அவர்க
ளை அனுப்பிவிட்டனர், இந்தசந்தோஷச்சேதியினைத்தெரிந்தவுடன்வீரத்
தன்மையினையுடையசிங்கவாகனத்தின்மீது துற்கையம்மனும்பத்திரகா
ளியும் ஆரோகணித்து தம்மைப் போற்றியிருக்கின்ற வீரமாதர்கள் சூ
ழ்ந்துவரச்செல்லும்போது எதிர்ப்பட்டயமுனையேமுதலியசுத்தநதிகளு
டன் கலந்துபோய் இமையகிரியைச்சேர்ந்து லோகமாதாவாகிய பார்ப
திதேவியைத்தெரிசித்து வணங்கிப்போற்றி பக்கங்களிலிருந்ததறுவாயி
ல் பொன்னந்தாமரைவாசியாகிய மகாலட்சுமியும்பிரமன்னாவிடங்கொ
ண்டிருக்கும் சரஸ்பதியும்திரிலோகசாம்பிராச்சியத்துக்கிறைவியாகியஇ
ந்திராணியும் பாசபெந்தங்களினைக்கடந்தரிஷிசிரேஷ்டர்பத்தினிமார்
களும் தேவகன்னியர்களும் தமதுநாயகர்கள் அனுமதிபெற்று விமான
ங்கள்முதலியவாகனங்களிலேறிக் கொண்டுபோய்பற்வதராசன்பதியினை
ச்சேர்ந்து அந்நகரஞ்செய்தபுண்ணியபலத்தினால் எழுந்தருளியிருக்கின்
றஉமையவளைக்கண்டு விசுவாசத்துடன்நமஸ்கரித்துவாழ்த்திலோகநாய
கியைத்திருக்கலியாணத்துக்கிசைவாகஅலங்கரிக்கயெத்தனித்தவர்களாய்
மகாலட்சுமி சரஸ்பதிமுதலியர். அம்மன் தரித்திருந்த மரவுரியேமுதலி
ய தவவேடத்தினைமாற்றி சுகந்தபரிமள மிகுந்ததயிலத்தினை சடைபற்றி
யிருக்கின்ற கூந்தலிற்றிமிர்ந்து மெல்லவிலக்கிச்சிக்கறுத்துக்கோதி கல
வைச்சாந்துகளினால் அழுக்கினைத்துலக்கி சுத்தநதிகளின்சுத்தோதகங்களி
னால்முழுக்காட்டி அகில்சந்தனத் தூபங்களினால் யீரத்தினைப் புலர்த்தி
வாரிமுடித்து விலையுயர்ந்தபட்டாடையினைத்தரித்து கொண்டையினிட
த்தில் பரிமளமிகுத்த பாரிசாதமலர்களைச்சூட்டி சுட்டிமுதலிய பணிதிக
ளினால் அலங்கரித்து திலதப்பொட்டுமிட்டு முத்துமாலை சரப்பளியிவற்
றை திருக்கழுத்திற்றரித்து கடகங்கணம்வயிரமோதிரமாதியாகக் கரங்
களிற்றரித்து தண்டை சதங்கை பாடகம் யிவற்றினைப்பாதங்களிற்பூட்
டிச்செம்பஞ்சுக்குழம்புமூட்டி கண்ணடிகாட்டி திட்டிவிட்டியிப்படிக்
கு அழகுக்கிருப்பிடமாகிய பரமேஸ்பரியினது திவ்வியமங்கள சொரூப
மாகியதிரேகமெங்கணுங் குறைவற அம்மனுக் கூழியஞ் செய்யுந்தோ
ழிப்பெண்களினுமேலாகஅலங்கரித்துமுற்றியபின்புமகாலட்சிமிமுதலி
ய தேவகன்னியர்கள் பார்பதியாரைச்சூழ்ந்து மங்கலவாழ்த்துகளைப்பா
டிக்கொண்டிருந்தார்கள், யிதன்மத்தியில் ஆயிரத்தெட்டுமாத்துடைய

தங்கமயமாய் ஆயிரஞ்சிகரங்களைவாய்ந்த மகம்மேருவும் பாற்கடலைக்கடைந்தமந்தரகிரியும்மற்ற குலாசலங்களும்பின்னமும்பிராநின்றபந்துவர்க்கங்களும்சத்தசாகரங்களும்பெரும்புறக்கடலும்ஆதிசேஷன்முதலாகிய நாகராசர்களும் அஷ்டகெசங்களும் மற்றுமிராநின்றசகலருந்தங்கள்தேவிமாருடன் அதிகசந்தோஷசித்தராய்அம்மன்திருக்கலியாணசம்பிரமத்தினைத்தெரிசித்துப் போவதற்காக வந்துசேர்ந்தனர், அத்தருவாயில் இமையகிரிக்கரசனானவன் தன்னைச்சூழ்ந்திருக்கின்ற சுற்றத்தாருடன் பிறையாணப்பட்டு சிறந்தவெள்ளியங்கிரியினைச்சேர்ந்து நந்திதேவர்அனுமதிபெற்று ஆலயத்திற்போய்சபாமண்டபத்தில் உயிருக்குயிராக நின்றாட்டுகின்ற பரமசிவன் சிங்காதனத்தின்மீற்றிருப்பதை தெரிசித்துமனக்களிப்புடன்சமீபித்து மும்முறைவலம்வந்துதிவ்வியசரணாரவிந்தங்களிற்றாழ்ந்துகரங்களைக்கூப்பினவனாய் யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், சத்தனே ஆதியிற்சராசரப் பிரபஞ்சங்களனைத்தினையும்படைத்தருளிய லோகமாதாவினிடத்தில் அதிகமையல்கொண்டு திருக்கலியாணஞ்செய்யக் குறித்தமையால் சோதிஷசாஸ்திரிகளை விசாரிக்குமிடத்தில் அவர்கள்பரிசோதித்து யித்தினம் பங்குனிஉத்திரமாகும் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பொருத்தநிமித்தங்கள்முற்றுஞ், சுபகரமாகவே யிருக்கின்றது மணஞ்செய்வதற்கு யுக்தமானகாலம் யிதைவிடவேறில்லையெனக்குறித்ததால் கிருபைசெய்து அக்காரியத்தினை முடித்தற்பொருட்டு தேவரீர் இமையவரையினிடத்துக்கு எழுந்தருள வேண்டுமெனப் போற்று முன்னிலையில் காளகண்டமூர்த்தியாகிய பரமசிவன் மலையிறைவன்மீது திருக்கண்சாத்தி உன்கருத்தின்வண்ணங் கணக்கிறந்தநமது பூதப்படைகள்களுடிடதி[illegible]ளுடன் இத்தினமே இமையத்துக்கு வருகின்றனம் நீமுந்திப்போய் சர்வமும்சாக்கிறதைசெய்து வைப்பையெனத்திருவுளம்பற்றிய காலத்தில் திருவடிகளில்வணங்கிப்போற்றி விடைபெற்றுத்திரும்பி அதிசீக்கிரமத்தில் தன்பதியைச்சேர்ந்து மணப்பந்தலில் வேண்டும்வஸ்துக்களைச்சேகரித்துக்கொண்டிருந்தனன்.

## கணங்கள்செல்படலம்

நைமிசாரணிய வாசிகளானவர்கள் சூதபுராணிகனைவணங்கி மலையிறைவன் திருக்கயிலையைநீங்கியபின்பு சிவனுதன்செய்த திருவிளையாடல்களையும் போதித்துகிருதார்த்தாக்கவேண்டுமெனக் கேட்டவர்களிடத்துப் பரிவாய் அச்சரித்திரங்களைச் சொல்லத்துடங்கினர், இமவந்தனை

ப்போக்கிய பின்பு பரமசிவங்கிருபையுற்று நந்திதேவரைத் தருவித்து ந
மது திருக்கலியாணசம்பிரமங்களைத் தெரிசித்துப்போவதாக முதன்மை
பெற்ற உருத்திரர்கணாதிபதிகள் மகாவிஷ்ணு பிர்மதேவன் தேவராசன்
முதலிய விண்ணவர் அனைவரையும் வரவழைப்பையெனக் கட்டளையிட்ட
னர், அவ்வாறே நந்திதேவர் விரவில்முடிக்கவெண்ணி அவர்களனைவரை
யும்வரநினைந்தனர் அக்குறிப்பைத்தெரிந்து மன்னுயிருக்கிரங்கி எமது
கர்த்தன் திருமணமுடிக்க வெத்தனித்த அருட்டிறத்தைப் போற்றிமன
விருப்புடன் ஆனந்தபரவசத்தராய் சற்றெனழுந்தருளிய திருக்கயிலைக்
குவருகின்றவர்களின் பெருமைகளிற் றெரிந்தவரையிற் சொல்லக்கேட்
பீராக, அக்கினிச்சுவாலையாக விளங்கும் நுதல்விழியினைப் பெற்ற பஞ்
சவத்திரன் வடவாமுகாக்கினியையொத்த திரோகமுற்றுந் தீவிசுவதாகவி
ருக்கின்ற விடபகேதுமுதலிய ஆயிரங்கோடி உருத்திரர் அனல்வடிவா
கிய சூலங்களைக்கரங்களிற்றாங்கிச்சூழ்ந்து போற்றக்காலத்தீயென்னும்
பெயரையுடைய உருத்திரத்தலைவனும் சூறுவளிக்காற்றும் வடவையும்
வீறடங்கிமங்கவுஞ் சீவராசிகளனைத்தும் அலைந்துவாடவும் சுவாசங்க
ளைவிடும் வலியினையுடையபூதவீரர்கள் நாற்றுநாற்பது கோடியர்நெரு
ங்கித்துதிக்க மழுவாயுதத்தினை வலக் கரத்திற்றாங்குங் கூரமாண்டதேவ
ரும் நெற்றிவிழியினையும் பற்பல நிறத்தினையுடைய பருத்ததிரோகத்தி
னையும் வீரத்தன்மையையும்பெற்ற கோடாகோடி உருத்திரர்கூட்டத்
துடன் பாதலத்தில் வாசஞ்செய்கின்ற ஆடகேசனொன்னும் உருத்திரப்பி
றமுசருங்கோறரூபத் தினைப்பெற்று வலியிலுயர்ந்தவர்களா யிராநின்ற
பூதகணங்கள் ஆயிரகோடியர்சூழ பிர்மதேவனாதியர்பயந்தொளிக்கச்சர
பப்பட்சியாகவந்தவீரபத்திரனொன்னுந் திருநாமம்படைத்தஉருத்திரத்த
லைவரும் ஊழிகாலத்தில்மகாவிஷ்ணுவானவர்திருவயிற்றிற்கொண்டுபாது
காக்கும் உலகங்களினிராநின்ற பிராணிகளை ஒருவிரலினேந்தித்தாங்கவ
ல்ல குறியதிரோகத்தினையுடைய பூதப்படைகள் நூறுகோடியர்சூழவர பூ
ர்வத்திற்பரமசிவமும் மகாவிஷ்ணுவுங் கூட்டுறவிற்றோற்றிய செண்டு
டைய கரத்தினராகிய அரியரபுத்திரதேவரும் சிருஷ்டிகர்த்தனாகியபிர்ம
தேவன் மன்னுயிரைப் படைக்கவறியாது மயங்கியகாலத்தில் திரிநேத்
திரதாரியாகிய சிவபிரான் கட்டளையினால் பிரமனுதலினிடமாகத்தோ
ற்றி அவன் படைப்புக்கு உதவிசெய்து பேரறிவையும் அனுக்கிரகித்துக்கா
த்தபதினொருவகை உருத்திரரும் திருக்கயிலாயத்துக்குவந்துசேர்ந்தனர்
இத்தகையபெருமையினைப்பெற்ற உருத்திரரையன்றியும் மற்றபுவனங்
களிற் றலைமைகொண்டு பாதுகாத்து பரமசிவத்தினிடத்திற் பிறிதிபத்தி
யுடையவராய் வலிபெற்றஉருத்திர வீரரும் பரமன்கட்டளையின்படிக்கு

நடந்துகொள்ளவல்ல அட்டமூர்த்தியும் சகரராசாக்களினாற்கல்லிய சத்
தசாகரங்களைடம்பாதத்தினின்றெழுந்த தூளிபடலத்தினாற் றூர்க்கவல்ல
வலிபெற்ற-என்னூறுகோடிபூதப்படைகள் நெருங்கிப்போற்ற சடா
மண்டலநாரிகளாகியபவனென்னுந் திருநாமத்தினைப்படைத்தவீராதிவீர
ராகிய அஷ்டமூர்த்திகளும் யிவர்களன்றியும் ரிஷபசெற்சித்ததினும் உரு
த்திசொல்லைப்பெற்று எமதுசத்தனாகிய சிவபிரான் விழிகளினிடத்திற்
றோற்றிய நீர்த்துளியின் மூலமாகஉண்டாகிய உருத்திராக்கத்துடன்
தூளித்தினையணியும் பேரறிவாளராகிய நூறுகோடி பூதப்படைகளுட
ன்றொடிப்போதில்உலகங்களை நாசஞ்செய்யவல்லவல்லமை சாலியாகிய
குண்டோதரப்பிறமுகரும்அண்டங்களனைத்தினையும் அவற்றுளடங்கிய
சற்வபிராணிகளையும் நாசஞ்செய்துமீட்டும் பழையபடியே நிலைபெற
ச்செய்யவல்லமகத்துவமுடையபூதவீரர் இருநூறுகோடியர் நெருங்கிப்
போற்றச் கண்டகற்னனும்பினாகியும் வந்தனர். யிவர்களன்றியும் ஆயிர
முகங்களும்பிரண்டாயிரங்கரங்களும்விளங்கபொன்மயமாய்வானத்தி
னையளாவநிற்கும்மகம்மேருவுக்குச் சமதையாகியபருத்தகிரோகத்தினைப்
படைத்த நூற்றன்பதுகோடி வீரப்படைகள்சூழ்ந்துவர பானுகம்ப
னென்னும் வீராதி வீரனும் தமது பிறதாபங்களையே முக்கியமாகவெ
ண்ணிய தேவர்க்கள்சிரங்களையும் அவரதுகொண்டை மயிர்களையும் பல
படைகளையும்பறித்து அவற்றினைச்சின்னமாகத் தரித்திராநின்ற செயசா
லிகளாகிய அளவற்றகோடி பூதப்படைகள் துடர்ந்து செல்லசங்குகன்
ணனென்னும் வீரனுந் திருக்கயிலையைச் சேர்ந்தனன், யிதுவல்லாமல்கா
ளகண்டனென்பவனும் தண்டியென்பவனும் நீலனென்பவனுங் கரனெ
ன்பவனும் வாட்போரில் வெற்றிபெற்றிருக்கின்ற விச்சுவமாலியென்ப
வனும் யிவரன்றியில் யாளியையொத்த வீரத்தன்மைபெற்ற பலபூதவீ
ரரும்பற்பலகோடிசமுத்திரங்களையொத்தசேனைகளுஞ்சூழ்ந்துபோற்ற
திருக்கயிலைக்குவந்தனர், எமதருமராசன் வலியையொடுக்கவல்ல சுத்த
வீரராகிய நாற்றமுப்பதுகோடி பூதப்படைகள் சூழ்ந்துபோற்ற திரி
புரங்களையும் நிமைப்போதிற் சாமபலாக்கிய பரமசிவத்தினை வழிபட்டு
சகலராலும பூசிக்கப்பெற்ற ஈசானமூர்த்தியானவர் திருக்கயிலையைச் சே
ர்ந்தனர்பன்றிஅன்னம்யிவற்றின்வடிவெடுத்துபரமன்திருமுடியினையும்
பாதாரவிந்தங்களையுந்தேடி வருந்தியமகாவிஷ்ணுவும பிற்மதேவனும்
இந்திரனும்மற்றதேவர்க்களும் திக்குப்பாலகர்களும் சூரியசந்திரர்முத
லியநவக்கிரகங்கள்தாரகாகணங்கள் சத்தமாதாக்கள்வசுக்கள்முதலானவர்
களுங்களிப்பினையுடையகிஞ்சையர்முனிபுங்கவர்கள் யாவரும்வந்தனர்
உலகங்களுக்கு ஆதாரசத்துயாயிராநின்ற வேதங்கள் ஆகமங்கள் மந்திர

ங்கள் பூமிஅதிற்றங்கிய புவனங்கள்நகரங்கள் காலங்கள்மற்றுமிராநின்றபொருள்களனைத்தும்தெய்வப்படிவங்களைப் பெற்றுதிருக்கயிலையைச் சேர்ந்தன- இவ்விதமாகத் திருக்கயிலாய பற்வதத்திலிடத்தில் யாவரும்-யாவும்-வந்து யிடமின்றி நெருங்கியிருப்பதை நந்திதேவர்கண்டு மகிழ்ந்தவராய் அதிசிக்கிரமத்தில் ஆலயத்தினுள்ளே பிறவேசித்து கர்த்தனைவணங்கி மகாவிஷ்ணு முதலாயினர், கோபுரவாயலிலிடத்திற் சேர்ந்திருக்கின்றதை விண்ணப்பஞ் செய்தகாலத்திற் கர்த்தனானவர் அவரனைவரையும் நமது சன்னிதானத்தில் அழைத்துவரக் கடவையென்று கட்டளையிட்டமாத்திரத்திற்சிலாதரர் குமாரராகிய அருணந்தியானவர்முதல் வாயலினிடத்தில்வந்து உருத்திரப்பிரமுகாள கணாதிபதிகள் மகாவிஷ்ணுமுதலிய தேவர்க்கள் ரிஷிகள் மற்றுமுள்ளவர்களையும் பரமன் சன்னிதானத்துக்குப்போவதாக விட்டனர், யிவ்விதமாக நந்திதேவர் செலவுகொடுத்த மாத்திரத்தில் அரகரவென்னுங் கோஷித்துடன் ஆலயத்திற்பிறவேசித்து ரத்தினமயமாகச் சொலித்திருக்குஞ் சபாமண்டபத்தின் முகப்பில் விளங்குகின்ற சிங்காதனத்தில் எழுந்தருளியிராநின்ற காளகண்டமூர்த்தியினைத் தெரிசித்தமாத்திரத்தில் முதிர்ந்தபத்திவிசுவாசத்துடன் சகலரும் மும்முறைவலம்வந்து வணங்கி கர்த்தன் பெருமைகளையும் மங்களகுணங்களையும் யெண்ணி யெண்ணித் துதித்திருக்கின்ற தறுவாயில் கணாதிபதிகளில் முதன்மைபெற்று திருக்கயிலையைப் போற்றும் பெருமையினையுமுடையநந்திதேவர் பொற்பிரம்பினைத்தாங்குந் தமது திருக்கரத்தில் விளங்கும்விரலினைக்கொண்டுகர்த்தன்முனம்வந்திருக்கின்றஅதிசகீர்த்திபெற்றஉருத்திரர்களின்பிறிவுகளையும்கூட்டமாகயிராநின்ற கணநாதரை பூதவீரரை நெருங்கியிருக்கின்றதேவர்வகைகளை முனிபுங்கவர்களை வெவ்வேறாக யின்னாரின்னாரெனபரமனுக்குச் சுட்டிக்காட்டிச்சொல்லிவணங்கிநின்ற தறுவாயில் காலத்தீப்பெயர் உருத்திரர் கூர்மாண்டதேவர் வீரபத்திரக்கடவுளாதிய உருத்திரகணத்தலைவர்கள் போற்றுதல்செய்யவும் பூதப்படைவீரர் எமதுகர்த்த னிருபாரிசங்களினும் நின்று பத்திபூர்வகமாகத் தோத்திரத்தினைச் சொல்லிக்கொண்டு கண்காட்சியாகப் பரமனைத்தெரிசித்திருந்தனர், அத்தறுவாயில் பிற்மதேவனானவன் சிவனுதன் சமீபத்தில்வந்து கிரீடம் வாகுவலயங்கள்மதாணிப்பதக்கம் முத்துமாலை வயிரக்கடகமுதலான திவ்விய ஆபரணங்கள் நிறைந்திருக்கும்பொற் பெட்டியை எதிரில்வைத்துச்சேவித்துகரங்களைக் கூப்பினவனாய் யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினன், லோகநாயகனே தேவரீருக்கு விருப்பு வெறுப்பில்லை அடியோங்கள் பிழைத்தற்பொருட்டு பார்பதியாளை திருக்கலியாணஞ்செய்ய நினைத்திராயினும் மணக்கோலம்

போகவிருக்கின்றதால் கொடியவிஷச் சுவாலையைவீசுஞ் சர்ப்பாபரணங் களைநீக்கி யிந்த ரத்தினமயமாகிய பணிதிகளைத்தரித்து ரட்சிக்கவேண்டு மென்று பிர்மதேவன் பிரந்துகேழ்க்கக் கர்த்தன் திருநகைசெய்துபத்தி யுடன் நீ நமக்குக்கொடுத்ததனால் யிவற்றைத்தரித்துக் கொண்டதைப் போலக் களித்தனமென்று அழகியதிருக்கரத்தினால் அப்பெட்டியினைத் தொட்டருளிய பின்பு பிரமன்அன்புக் கிரங்கினவராய் தாமணிந்திருந் தபணியணிகளைப் பொன்னணிகளாகும் படிக்குத்திருவுளத்தில் நினைந்த மாத்திரத்தில் அவ்வாறே நவரத்தினமயமாகத் திருமேனியெங்குஞ் சொலித்துத்தோன்றியது- கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே செகங்களனைத்தினையும் ரட்சிக்கவல்ல பரமேஸ்பரருக்கு யிச்செய்கை யரியனவோ யிக்காட்சியினைக்கண்ட விஷ்ணுமுதலாகிய சகலரும் அற்புதமடைந்து சிவபிரான் மகிமையினைக்கொண்டாடித் தொழுதுபோற்றினர், அத்தறுவாயில் கர்த்தனானவர் வண்டினங்கள்மொய்த்து ரீங்காரத்தொனி விளைப் பதாக திவ்வியபரிமளமிகுத்த புஷ்பங்களைக்கொண்டையினிடத் தணிந் திருக்கின்ற உமையவளிருக்கு மிடத்துக்குப் போவதாகத் திருவுளத் தெண்ணி அக்கருத்தினைப் பக்கங்களிலிருக்கின்ற பிறமுகாளுக்குத் தோற்றக் குறிப்பினாற்காட்டி பூர்வத்திற்றேடிய மகாவிஷ்ணு பிர்மதேவ னுக்குக் காணப்படாத பரமன் சிங்காதனத்தினைநீங்கி வெளிவந்தனர்,

---

# திருக்கலியாணப்படலம்

---

கேட்டீர்களோ- சவுனகாதிரிஷிகளே அக்காலத்திற் பரமசிவத் தின் திருக்குறிப்பினைத் தெரிந்தவுடன் நான்குபுயாசலங்களையுந் திரி நேத்திரங்களையுஞ் சிவவேடத்தினையுந்தாங்கி யிராநின்ற எமது கர்த்தனா கிய நந்திதேவர் திருக்கரத்திற்பொற் பிரம்பினைத்தாங்கி பராபரிசெய்து கொண்டு பரமன் குறுதிசெயங்களினைப் போற்றினவராய் முன்னணியி ல்நடக்கவும் தேவர்களும் முனிசிரேஷ்டரும் செயசெயவென்றுபுகழ் ந்துகொண்டாடவும் சகலத்திராளாலும் போற்றும் பெருமையினையு டையதம் புருநாரதாதிகளும் விஞ்சையர் முதலாயினரும்பருந்து உல வுந்தோறும் அதனிடநிழல் தொடர்ந்துபோவதைப் போலகண்டத் தொனியும் யாழின் சுதியும் லயப்பட்டுச் சிரவணானந்தமாகப் பாடிப் போகவும் ஆதிநூலாகச்சொல்லும் பெருமையைவாய்ந்த வேதாகமபுரா ணமுதலியதகன் தோத்தரித்துநடக்கவும் யிவ்வித சம்பிரமங்களுடன் சொர்ணமயமாய் விளங்குகின்ற தமது அரசிற்குரிய பதியினைக்கடந்து அழகியதிருவடிகளை வலியுடைய குண்டோதரன் முதுகில்வைத்து ஒப்பு

வமையற்ற சின்மயசொரூபமாகிய ரிஷபவாகனத்தின்மீது சிவபிரானா
ரோகணித்து விழிகளுக்கமையாத சுந்தரவடிவுடன் தோற்றிய காலத்தில்
அக்காட்சியினை பக்கத்திற் சூழ்ந்திருந்தவர்களல்லாமலும் லட்சுமிகரம்
பொருந்திய நகரத்தினிடையில் நின்றவர்களுங் கடைவாயலின்புறத்தி
லிருந்தவர்களுந் தெரிசித்துக் களித்தவர்களாய்ச் சகலருந் தீர்க்கதெண்
டன் சமற்பித்துப் பரமசிவத்தின் புகழினைவாயார்த் துதித்து சமுத்திர
கோஷத்தினும் மேலிடும்படிக்கு அரகரவென்று ஆர்ப்பரித்துத்து
டர நந்திவாகனத்தின்மீது நந்தியென்னுந் திருநாமம்படைத்த சிவபிரா
னெழுந்தருளுமுன்னிலையில் கெசமுகாசூரனை யங்கப்பட்டுச்சின்னபி
ன்னப்படவாட்டிய விநாயகமூர்த்தியானவர் அனூற்றெழுகோடி பூத
ப்படைவீரர் சூழ்ந்துபோற்ற எதிர்கொண்டுவந்து வந்தனைகளைச்செய்
து துதித்துத் துடர்ந்துசெல்லும்போது சூரியனுஞ் சந்திரனுந் தவளவ
ட்டக்குடைகளைத் தாங்கிவரவும் திவலைகளை யலைகளினுலிறைக்குஞ் சமு
த்திர ராசனுனவன் சிற்றாலவட்டங்களை பணிமாறிவரவும் தேவர்களுக்கி
றைவனுகிய இந்திரன் விசுறியினைப்பற்றி சிறுகாற்றெழ அசைத்துப்போ
கவும்- யிவ்வாறயித்தேவர்கள் முதிர்ந்தபத்தியுடன் மேற்குறித்தபணிவி
டைகளை நடத்தி நடக்கும்போது வல்லமைசாலிகளாகிய பலகோடி பூத
வீரர்கள் மங்கலபேரிவெற்றி முரசம்கொக்கரை சல்லிகை கரடிகை பீலி
சாரிகை துடி மத்தளங் குடமுழவு தடாரி அதிகவோசையினையுடையகா
களமாதியாகச் சொல்லுகின்ற வாத்தியவிதங்களை ஆனந்தக்களிப்புடன்
முழக்கி நடக்கவும் பரமன்கட்டளையின்படிக்கு உருத்திரக் கூட்டங்க
ளும் விஷ்ணு பிற்மதேவனுந் தவச்சிரேஷ்டராகிய ரிஷி புங்கவர்களும்
இந்திரனுதிய விண்ணவர்களுந் தேர்விமானங்களுடன் அந்நமுதலிய த
த்தம்வாகனங்களிற் போகவும் இவ்வித ஆடம்பரங்களுடன் தாங்கள்செ
ய்த தவமுயற்சியினுல் கத்தனைச்சூழநின்று பணிவிடைகளைச்செய்து தெ
ரிசித்து வரப்பட்ட புண்ணியசீலர்களும் விரதமுயற்சியினுல் வயிராக்கி
யங்கொண்டிருக்கும் மனதையுடைய பூதகணங்களுஞ் மற்றசிவகணங்
களுந் திசைத்திசைகளெங்கினும் வளைந்துபோற்றிசெய்துபோவதாகப்
பரமசிவமானது திருக்கயிலாய வெல்லையைச்கடந்து சமுத்திரஞ்சூழந்
த பூலோகத்திலர் கிருதார்த்தராதற்பொருட்டு இமையவளாயினை நோக்கி
ச்செல்லுமுன்னிலையில் வார்களினுல் பிகிந்திருக்கின்ற பேரிமுதலியப
ற்பல வாத்தியங்களை பூதகணங்கள் மிகவும் முழக்குதலினுலெழுமோ
சையானதோங்கி விசாலமாகிய வானவெல்லை முற்றினும் நிறைந்ததிரவு
ம் பூதப்படைகளினுரவாரமும் தேவர்க்கள் சந்தோஷத்தினுல் அரகர
வென்னும் முழக்கமும் ரிஷிகள் செயசெய வென்று போற்றி செய்யும்

ஓசையும்மேலிட்டு சமுத்திரமுழக்கத்தினை அடக்கவும் யித்தகைய சம்பி
ரமங்களுடன் மாதுலன் பட்டினத்துக்குச் சமீபித்தகாலத்தில் மலையி
றைவன் தன்பந்துவர்க்கங்களுடன் மாப்பிள்ளையை எதிர்கொண்டு மும்
முறைவலம்வந்து வணங்கிப்போற்றி மற்றமகாவிஷ்ணுமுதலானவர்க
ளுக்கு வந்தனைகளைச்செய்து பவுத்திரமாகிய தன்பதிக்கு அழைத்துவ
ருந்தறுவாயில் நவரத்தினமயமாகிய மேடைகள் உப்பரிகைகளாதியாக
அணிபட யிருபாரிசங்களிலுந்தோற்ற விசாலமாய் நீண்டிருக்கும் வீதி
களில் வாழுஞ்சனங்கள் சற்வக்ஞியனாகிய பரமசிவத்தின் வரவினை அதி
சயிறியத்துடன் விழிகள் குளிரத்தெரிசித்து பத்திவிசுவாசத்துடன் கர
ங்களைக்கூப்பித்தொழுது வாழ்த்தினவர்களாய் அக்காலத்திற் றெருக்கள்
முழுதும்மிகுத்த களியாடலைச் செய்ததாவது அழகியவீதிகளில் நெருங்
கியிருந்த தருணமங்கையரானவர் தேவதேவனாகியபரமசிவத்தின் அற்பு
தமாகிய மிகுத்த ரூபலாவண்ணியங்களை நேத்திரோற்சவ மாகக்கண்டு
பூமியிற்படியச்சேவித்தமாத்திரத்தில் வேறொருசெய்கைகளையுமற்றவ
ர்களாய் அளவற்ற ஆசைப்பெருக்கென்னுஞ் சமுத்திரத்தில் மூழ்கி யித
னைச்செய்வதாயினர், மிகுதியாக அணிந்திருக்கின்ற ரத்தினாபரணங்களு
ம் உடுத்திருக்கின்ற பீதாம்பரமும் பூசியிருக்கின்ற பரிமளமிகுத்தகல
வைச்சாந்துந் திவ்வியசுகந்தங்களை வீசும் மலர்களாற் சோடித்திருக்கி
ன்ற தண்டைமாலைகளுஞ்சேர்ந்து சந்திரசடாதரக்கடவுளினது மிகுத்த
சுந்தரங்களைத்தெரிசிக்கப்படாமல்மறைத்ததென்று சிலகன்னியர்மனந்
தளரவும் யிதையத்திற்கொண்ட காமயின்பத்தினைக் கிடைத்துக்களிக்க
வெண்ணியித்தேவனைக்கண்டவுடன்கொடியமன்மதனானவன்பிறையோ
கித்த பஞ்சபுஷ்பபாணங்களுஞ் சுறுக்கு சுறுக்கெனத் தாக்கித் தங்கின்
றமையாற் சகிக்கப்படாமல் வெந்தொழிந்த கன்னியர்கள் திரோசம்பட்
டதாளிதமோ சத்தன்மேனியிற் பூசியிருப்பதென்று சிலபெண்கள்பே
சவும் யாழினிசையையொத்து வசனிக்கவல்ல மங்கையர் கூட்டத்தினை
நீங்கிச் சிவபிரான் அருகில்வந்தகாலத்திற் பலமணிகளினாற் சோடித்து
யிடையிலுடுத்திருந்த மேகலாபரணமானது நழுக அதுதோற்றாமல் சி
லகன்னியர் மெய்மறந்துசேவித்து நிற்கவும் அகவிதழ்விரிந்து அலங்கா
ரமாக விளங்குஞ் செந்தாமரைப் புஷ்பவாசியாகிய மகாலட்சுமிக் கொ
ப்பாகிய சுந்தரமுள்ள சிலகன்னியர் காமவெறிகொண்டு யிடையிலுடுத்
திருந்த பட்டாடை மெல்லச்சோர்ந்து நழுகி விழுந்து அம்மணமாயி
ருப்பதைப்பார்த்து மங்கையர்களுக்கு வஸ்திர மிராதோ வென்று களி
மிகுதியினாற் சிலகன்னியர்கள் வசனிக்கவும் மற்றுஞ்சில தருணமங்கைய
ரானவர்கள் சந்தோஷப் பெருக்கினால் மெய்மறந்து யிடையிலுடுத்திரு

ந்ததுகில் நெகிழ்ந்துபோன பின்பு சிலதூரம்போய் மானக்குறைவினை
த்தெரிந்தமாத்திரத்தில் ஐயன்மணக்கோலத்தினைப் பார்க்கவந்த அவச
ரத்தினாற் பிடவையை உடுக்கமறந்து வந்தனமோ வென்றையுற்று மீளத்
தங்கள் மாளிகைகளிற்போய் விலைஉயர்ந்த பீதாம்பரங்களைத்தரித்து ஆ
சையுடன் மறுபடியுந் தெருக்களில் வந்து வந்து அந்தஉடையினையும்
யிழந்து மீளத்திரும்பி யிவ்விதமாக ஊசலைப்போலச் சில வாலிபப் பெ
ண்கள் அங்குமிங்குமாய் அலையவும் மிகுத்த அழகினையும் வாலிபத்தினை
யும்படைத்த குலமாதரோ நாணத்தையிழந்து ஆலிங்கனத்தினிடத்திலிச்
சைகொண்டுவாடி மேல்விழுந்து வந்தபோது வருத்தாதீர்கள் உங்கள்ம
னயிஷ்டப்படியே ஆகுதென்று சில ஆதரவு சொல்லாமற் போவதோ ஆ
ண்திறத்தினைப்பெற்ற யிவ்வையருக் கழகென்று சிலகன்னியர் வெறுத்து
ப்பேசவும் யாகினையொத்த சொல்லினையுடைய மாதரானவர்கள் தமதி
டத்து மையல்கொண்டு வேண்டினும் அதற்கிசைந்து வருபவராகக்கா
ணப்படவில்லை ஆதலால் அரியபொன் வடிவினைப்பெற்ற நமதையருக்
கு உள்ளமானது யிரும்போ கல்லோ யிரக்கமில்லையென்று சில மாதர்
கள் சொல்லவுஞ் சர்வாபரணபூஷிதைகளாய்ப் பருத்து விம்மிநெருங்கி
ததும்பித்தேமல் பரந்திராநின்ற கொங்கைகளைப்பெற்ற தருணமங்கை
யர்களுக்கு ஆசைப்பெருக்கினை விளையச்செய்து அவர்கள்மிகவும் வாடி
வருந்துதலைச் சற்றுந் தெரியாதவராகப்போவது உயிருக்குயிராக விருக்
கின்ற யிவருக்குத் தகுவதோ வென்று சில பெண்கள் ஏசவும் முறுக்கு
ண்டு நீண்டிருக்குஞ் சடாமண்டலதாரியாகிய சிவபிரான் அழகினைத்தெ
ரிசித்து தெரிசித்து மனங்கனாந்து சிலகன்னியர்வாடவும் மங்களகரமா
கவிருக்கின்ற பரமன்வடிவின் பெருக்கினை நினைந்து நினைந்து உள்ளம்
வெம்பி தேககாந்திமங்கிக் கறுத்துச்சிலமங்கையர் சோரவுந் தங்களு
டன் தொடர்ந்துவந்த பாங்கியருடன் தாங்கள் ஐயனிடத்திற் கொண்ட
யின்பத்தினால் உண்டாகிய காமமயக்கத்தினைச் சொல்லிச் சொல்லிச்சில
மாதர்வாடவும் பக்கங்களில் நிற்கின்ற சிலதருணமங்கையர் தேகமான
து வெளுத்திருப்பதைப்பார்த்து பிறப்பிறப்பற்ற யிக்கர்த்தனை நம்மைவ
ஞ்சித்து யிவர்கள்கூடி யின்புற்றன்றோ யிவர்கள் சரீரமெங்கும் விபூதி
தூளிதம் பூசப்பட்டிருக்கின்றதென்று அக்கன்னியரை உருத்துப்பார்
த்து உங்களுக்கிவ்விடத்தி லென்னகாரியம் போம்போமென்று சிலக
ன்னியர்வாது தொடுக்கவும் சடைமுடியினிடத்தில் விளங்குஞ் சந்திர
னது கலைகளானவைமெல்லிய யிடையினையுடைய பெண்களைச்சுடுகின்ற
து யிவர்கங்காபவானியை முடியிற்றரித் திருப்பதினாற் பிறையோசன
மொன்றுங் கண்டதில்லையென்று சிலமங்கையர் நெருங்கிவிளவவுந் தா

மாமலரைப் பீடமாகக்கொண்டிருக்கின்ற பிற்மதேவன் முதலாகவிரு
க்கின்ற தேவர்கள் அபயம் அபயமென்று அடைக்கலம் புகுந்தகா
லத்தில் அவர்களிடத்திற் பரிவாய்த் தேவரீர் உண்டருளிய கொடிய ஆலகா
லவிஷத்தினுங் கொடியதோ தீனராகிய பெண்கள் கொங்கைகளின் மீது
சூழ்ந்திருக்கின்ற பையட்டையென்று சிலகன்னியர் காமக்கனல்சொரு
த்த வாடிச்சொல்லவும் மணச்சடங்கினுக்குரிய சிறந்த தொழிலாகியது
லைச்செய்வதாகக் கூட்டங்கூட்டமாய் ஆண்பிள்ளைகளானவர்கள் களிப்
புடன் தெருக்கள்முற்றும் நெருங்கியிருக்க அவர்கள்மீது உமது சவுரி
யங்களைச்செலுத்தாமல் எளியராகிய பெண்களைமாத்திரமோ தேவரீர் து
ன்பப்படுத்தவல்லீரென்று பலபெண்கள் வசனிக்கவும்- ஓ கன்னியர்க
ளே யிப்படிக்கு வீண்வார்த்தையாடுவதிற் பிரையோசனமென்னை ரிஷப
வாகனத்தின்மீது வருகின்ற யித்தேவன் நம்மைத் திருக்கலியாணஞ்செ
ய்வதற்கு ஒப்பனையற்ற பற்வதராசபுத்திரி முடித்த தவத்தினையொப்பா
க நாம் செய்ததில்லையென்று மனவருத்தத்துடன் சிலபெண்கள் வசனி
க்கவுந் தேவரனைவருந் தமது துன்பங்களைப்போக்கி சுகசீவிகளாகவாழு
ம்பொருட்டு திருமணமுடிக்க வருபவர்மெல்லிய திரேகத்தினை வாய்ந்
தமங்கையர் பிராணனைக்கொள்ளைகொள்ள விரும்பினர், யிவ்வித அநியா
யத்தினையாவர் செய்யவல்லரென்று சில கன்னியர் வசனிக்கவும் மதயா
னையையொத்தும் விரததன்மையையுடைய வேங்கையை நிகர்த்தும் வீ
றியிருக்கின்ற கொடியவரை வாட்டியடக்க மனமிசையாமல் மெல்லிய
மானையொத்த பார்வையினையுடைய மங்கையருக்கு யித்தகையதுன்பத்
தினைச் செய்வதழகோவென்று சில கன்னியர்பேசவும் நமதிறைவனாகிய
பற்வதராசன் செய்ததவமுயற்சியினாற் பெற்றிருக்கின்ற பார்பதியார்
மீது யிச்சைகொண்டு திருக்கலியாணஞ் செய்யப்போகின்றவர் மனமித
ங்கி நமக்கின்ப தலத்தினைத்தருவரோ அதிலுந் தம்மையடுத்தவர்களை ரட்
சிக்குந் தீனசரண்ணியனாகிய யிந்த சிவபிரானுக்கு யிது தகாது தகாதெ
ன்று சிலமங்கையர்பேசவும்- இவ்வாறுமங்கைப் பருவமுதல் பேரிளம்
பருவத்தினைப் பெற்றிருக்கின்ற ஸ்திரீசாதிகள் தெருக்களில் நிறைந்துநின்
று தமது மனதில் நினைந்தபடிக்குப்பேசிப்பேசி யாதொரு பிறையோ
சனத்தினையும் பெறாமல் அபலராய் வாடியபோதினுங் குற்றமற்றமன
தைப்பெற்ற பதிவிரதாசிரோமணிகள்சிலர் மெய்ப்பத்தியுடன்பரமன்தி
ருக் கோலத்தைத்தொழுது களித்திருந்தனர், யிவ்வித வைபவங்கள் பெ
ற்று சிருஷ்டி கற்தனாகிய பிற்மதேவன் வாசஞ்செய்யப் பட்ட சத்திய
லோகத்தினும் பதின்மடங்குஅதிகமாக அழகுபெற்றிருக்கின்ற பற்வ
தராசன் பட்டணத்தின்வீதிகளில் அண்டங்கள் நாணும்படிக்கு அலங்க

ரித்திருக்கின்ற சோத்திபங்களனைத்தினையுந் திரிநேத்திரதாரியாகிய சிவ
பிரானானவர் பார்த்துக்கொண்டுசெந்தாமரைக்கமலவாசியாகிய மகாலட்
சுமியும் யிச்சிக்கத்தக்க வளப்பங்களைப்பெற்றிருக்கும் நீண்ட தெருக்க
ளைக்கடந்து பராபரையாகிய பரமேஸ்பரி வீற்றிருக்கின்ற அரமனைக்கரு
கில் பரமன்வந்தகாலத்தில் பற்வதராசன் கட்டளையின்படிக்கு வேதப்பி
ராமணர் மலரநிறைந்த தடாகங்களின் செலத்தினைப் பொற்குடங்களி
ல் நிரப்பிக்கொண்டு மங்களகரமாய் எதிரில்வரவும் யிவையன்றியும் பற்
பலபிராமணச் சுமங்கலிசளானவர்கள் மகாவிஷ்ணு பிரமதேவன் யி
வ்விருவருந் தேடிக்காணவரிய பரமசிவத்தின் எதிரில் பெருமைபொரு
ந்திய சாயமரை நிறைகுடம் கண்ணாடி தோட்டி முரசு விளக்கு கொடி
இணைகயல் யித்தகைய சிங்காரமாகிய அஷ்டமங்கலப் பொருள்களைவ
ரிசைப்படக் கரங்களிலேந்தி யிருபாரிசங்களிலும் மங்களகரமாகவரவு
ம் யிவையன்றியும் அளவற்ற தருணமங்கையர்கள் அறுகு வேம்பு மஞ்சள்
அட்சதை ஆலம் சேமபஞ்சினவிளா பூரணகும்பம் யிவ்விதச் சிறப்புக
ளைத்தாங்கி வீதிகளில் எதிர்கொண்டுபோசவும் யிவ்விதமாக அளவற்றம
ங்கையர்கள் கரங்களிலேந்தி மாளிகைக்கடுத்த வீதிகளில்யிருபாரிசங்க
ளிலும்வந்துநெருங்கி ரத்தினாபரணங்களைச்சுமந்து பூரித்துப்புடைபர
ந்து நெருங்கியிராநின்ற கொங்கைகள் குலுங்கப் பிராணிகளனைத்தினு
ம்பொருந்தி நடிப்பிக்கின்ற ஆதிதேவனாகிய பரமசிவத்தினெதிரில்துரி
தமாய்வந்து பலசோபன வாழ்த்துகளைப்பாடி கெம்பீரமாகநின்று தம
து பணிவிடைகளைச்செய்பவும் கணக்கிறந்த தருணமங்கையரானவர்கள்
திருவிளக்கு கற்பூரதீபமாதியசோதிகளை வைத்திருக்கின்ற பொற்றட்டு
களை அழகியகரங்களில் ஏந்திவந்து எமதுகர்த்தனைவலமாய் எதிரில்நின்று
பத்திவிசுவாசத்துடன் மும்முறைசுற்றிவணங்கிப் போகவும் யிவ்விதம
ணக்கோலச் சடங்கினைச்செய்து வருகின்றதருவாயில் ஞானநாயகனாகி
ய சிவபிரானானவர் சிறந்தகலியாண மாளிகைக்கருகில் மகாவிஷ்ணுவா
திய தேவர்களுடன்வந்து அவர்கள்தாம் யேறிவந்த விமானங்கள் முதலி
ய வாகனங்களினின்றிழியத் தாமும்தவளநிறம்பெற்ற ரிஷபவாகனத்தி
னைவிட்டிறங்கினர், அக்காலத்தில் பற்வதராசன் பத்தினியாகிய மேன
கைஅம்மனானவள் பொற்கரகத்தினிடத்திற் பசுவின்பாலை நிரப்பிக்கொ
ண்டு பலதேவகன்னியர்கள் சூழ்ந்துபோக எதிரில்வந்து பராபரமூர்த்தி
யாகிய கர்த்தன் பாதகமலங்களின்மீது பாலைப்பொழிந்து சுத்திசெய்து
முந்தாணியினால் யீரத்தைப்போக்கிச் சேவித்து தன்மாளிகையிற் போ
னபின்பு சிவக்கொழுந்தானது நந்திதேவர் எதிரில்வைத்த பொற்பாது
கைகளினிடத்திற் திருவடிகளைச்சேர்த்து மகாவிஷ்ணு பிரமதேவன் யிரு

ண்டபக்கங்களினுங் கரங்களை நீட்டக் கைலாகுகொண்டு குற்றமற்ற பல
வகை ரத்தினங்களினாற்சோடித்து விசாலமாயிராநின்ற திருக்கோயிலிற்
பிறவேசித்த தருவாயிற் சங்கீதமேளமுதலிய மங்களவாத்தியங்கள் சமு
த்திரத்தினும் மேலிட்டு முழங்கவும் தேவேந்திரனாதிய விண்ணவர்கள்
செயசெயவெனப்போற்றிவரவும் விஞ்சையர் கருடகாந்தருவர் யாழ்க
ளைமீட்டி சிரவணானந்தமாகக் கற்தன் பெருமைகளைப் பாடிவரவுங் கணா
திபதிகள் பூதத்தலைவர் கல்லெனச்சத்தமெழ அரகரவென்று துதிக்கவு
ம் உருத்திரகோடிகள் கற்தன் மணக்கோலத்தினைத் தெரிசித்துச் சூழ்ந்
து நடக்கவும் யிவ்விதசம்பிறமமத்தியிற் சிவபிரானானவர் மெல்ல நடந்
து போகுமுன்னிலையில் மகாவிஷ்ணு பிற்மதேவன் யிவர்களிருவரும் வ
ணங்கி கற்தனே யிவ்விநோதங்களைப் பார்த்தருள வேண்டுமெனத் துதி
க்கச் சிறுநகைகொண்டு வானத்தினை அளாவி விசாலமாய்ச் சிங்காரித்திரா
நின்ற கலியாணமாளிகையிற் சோடித்திருக்கின்ற விசித்திரங்களை நோக்
குமுன்னிலையிற் சிலாதரர் குமாரராகிய நந்திதேவர்பக்கத்தில் நின்று வ
ண்டினங்கள் தொனித்திறங்காததாய்ச் செய்தமைத்த மலர்ச்சோலைகள்
தடாகங்கள் சந்திரிகையையொப்ப தெளிந்த நீராக்காட்டும் ஓடைகள்
பொய்கைகள் பலநிறம்பெறச் சோடித்திருக்கும் மண்டபங்கள் மற்று
மிராநின்ற விநோதங்களைக்காட்ட அவ்வவ்விடங்களிற் சென்று அவற்றி
ன்பெருமிதங்களைக் கற்தன்கண்டு களித்துவரும்போது பரமன் பின்று
டர்ந்துவந்த தேவரனைவரும் தமது பத்தினிமாருடன் அவ்வதிசெயங்க
ளைநேத்திரோற்சவமாகப்பார்த்து பிற்மித்தவர்களாய்ச் சிறந்தபொன்னு
லகமானது யித்தபூமண்டல வெல்லையிலிறங்கி யிருக்கின்றதாக வேண்டு
மெனநினைந்து விசாலமாகிய தடாகங்கள் நடைபாவிகள் யிவற்றிலிறங்
கி முழுகி விளையாடிக்களித்து வெளிவந்து பக்கங்களிலிராநின்ற குளிர்
ந்தபுஷ்பச்சோலைகள் உத்தியான வனங்களிற்சென்று புதியமலர்களைப்
பறித்துத் தங்களிஷ்டப்படிக்கு உல்லாசமாகத்திரிகின்றனர், கேட்டீர்க
ளோசவுனகாதி ரிஷிகளே அத்தேவர்கள் சந்தோஷப்பெருக்கினை யிவ்வி
தமெனப் பேசவும்படுமோ யிவைநிற்க நந்திதேவர்காட்டச் சிவபிரானா
னவர் சகலவளங்களையும் பார்த்துக்கொண்டுபோய் சுகந்தங்களை விசானி
ன்றபலமலர்களினால் அலங்கரித்திராநின்ற மணச்சாலையினிடத்தில் இந்
திரநீல ரத்தினவகைகளினாற்சோடித்து விளங்கி யிருக்குஞ் சிங்காதனத்
தின்மீது வேதங்கள் தேடிக்காண்பரிய கற்தனானவர் யெழுந்தருளி யிரு
ந்தனர், இம்மகோற்சவகாலத்தில் வீரபத்திரக்கடவுளுங் காலத்திப்பெ
யர் உருத்திரரும் வலியிலுயர்ந்த கூர்மாண்ட தேவரும் ஆட்கேசுரர்மு
தலிய உருத்திரர் சிவகணங்கள் பரமன் குணாதிசெயங்களைப் போற்றி

நிற்கவும்மகாவிஷ்ணு பிற்மதேவன் தேவேந்திரன் முனிபுங்கவர்கள்ம
ற்றதேவர்க்களாதியானவர்கள் தகுதியாகப் பரப்பியிருக்கின்றபொற்பீ
டங்களிற் பரமனைச்சூழ வீற்றிருந்தனர், அக்காலத்திற் சிவபிரான் திரு
மணச் சம்பிறமத்தினைத் தெரிசித்துக் கிறுதாற்தராதற் பொருட்டு மே
லைஅண்டங்களினிடத் தடங்கியிருக்கின்றபுவனவாசிகளனைவரும் ஏககா
லத்தில் அப்பதியிற் கூடியகாரணத்தினாற் சுமைமிகுதிப்பட்டு பொன்
மயமாகிய இமையவரை எல்லையானது கம்பிதப்பட்டு வருந்துகின்றத
றுவாயில் ஆதிசேஷன் சிரத்திற் றிராசுதட்டைப்போலத்தாங்கப்பட்டிரு
ந்த பூமண்டலமானது தேவர்க்கள்வருந்த வடபாரிசந்தாழ்ந்து தென்பு
றம்மிகவும் உயர்ந்தது- சேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே யிவ்விதமா
கத் தென்பிறதேசம் உயர்ந்ததறுவாயில் தேவர்க்கள் முதலானவர்கள் ஏ
க்கங்கொண்டு வாடவும் பூமண்டலத்திலிராநின்ற மானிடர் திகிற்பட்டு
எமக்கு நாசகாலமாகிய யுகமுடிவுநேர்ந்ததோ வென்று தியங்கிச்சோர
வுங் கலியாணமண்டபத்தி லிடமாகவந்திருக்கின்ற நாரதாதிகளே முத
லிய முனிபுங்கவரும் பதைபதைத்து பிற்மிக்கவும் யிவ்விதமாகச் சிவ
பிரானொருவரன்றியில் மற்றையரனைவரும் வருந்தித்தியங்கு கின்றதை
பரமசிவங்கண்டு திருநகைகொண்டு வாடுகின்றவர்கள் துன்பங்களையொழி
ப்பதாகத் திருவுளத்தெண்ணினவராய் பக்கத்திலிருக்கின்ற நந்திதேவர்
மீது திருக்கண்சாத்திச்சமுத்திரசெலத்தினைஉள்ளங்கையினிடத்தேற்று
ண்ட நாரதரிஷியை அழைத்துவரக்கடவையென்று கட்டளை யிட்டவுட
ன் நந்திதேவரானவர் கற்தனைவணங்கிப்போய் சபைமுற்றுந் தேடிக்கூ
விச்சலனமற்ற தவச்சிரேஷ்டராகிய கும்பமுனிவனைக்கண்டு அழைத்து
ப்போய்ப் பரமசிவத்தின் திருமுன்விட்டவுடன் பொதியமலைக்கதிபனா
கிய அகஸ்தியர் கற்தன் பாதகமலங்களிற் பணிந்துபோற்றுகின்ற முனி
வனைத்திருநேத்திரதாரியாகிய பரமன்பார்த்து குறியவனே திருக்கலியா
ணச்சம்பிறமத்தினைத் தெரிசிக்க வந்தசெனங்கள் அதிகரித்து நெருங்
குதலாற் சுமைமிகுதிப்பட்டு தென்பூமிமிகவும் மேனோக்கிசொற்கலோ
கவரையில் உயர்ந்தும் வடபாரிசமானதுபாதலவரையிற்றாழ்ந்துந்திற்ப
தினால் யிப்பிறதேசத்திலிருக்கின்ற பிராணிகளனைவரும் அதிசதுன்பத்தி
லாழ்ந்து தாங்கள் செய்தொழிலை மறந்துவாடிக் கலங்குகின்றனர், வான
த்தினை அளாவநிற்கின்ற மகம்மேருவும் மந்தரமேமுதலாகிய குலகிரிக
ளுந்தத்தமதுநிலைபெயர்ந்துகீழ்மேலாகநின்றது ஆதலாற் றவச்சிரேஷ்ட
னே நீ ஒருவன்மாத்திரம்யிந்த இமையவரையை நீங்கி முக்கனியின்றச
சமுதலிய தேன்கள் ஏராளமாகப்பெருகிச் செந்நெல்முதலிய பயிர்கள்
செழித்தோங்கி வளர்ந்துவரும் வயல்கள் நிறைந்தநாடுகள் அதிகாத்தி

ருக்கும் தென்பிறதேசத்தினைச்சேர்ந்து மேலோங்கிப் புடைபரந்துசகலவளங்களையும் பெற்றிருக்கின்றபொதிகை பர்வதத்தில்வாசமாய்தவஞ்செய்திருப்பையாகிற் பூமண்டலம் எதாப்பிறகாரஞ் சமமாய்த் தவறின்றி சவுக்கியமடையுமென்று சந்திரசடாதரமூர்த்தியாகிய சிவபிரான்சொல்லியகாலத்தில் வேதாகமபுராண முதலிய சாஸ்திரங்களை வரையற ஓதி உணர்ந்தமகத்துவாகிய அகஸ்தியரானவர் திடுக்கிட்டுப்பயந்துகற்தனே அடியேன் ஏதேனுங்குறைபாடுகளைச் செய்ததுண்டோ தீனதயாபர மூர்த்தி கொடியவனிடத்திற் கிருபைவைத்து அருகிலிருமென்று சட்டளையிடுவதற்குமாறாய்த் துலைதாரத்திற்போய் வாசஞ்செய்யப் பணித்தருளி நீரென்று மனவருத்தத்துடன் சோருகின்ற அகஸ்தியனைப் பரமன் பார்த்துச்சொல்லுகின்றனர், உம்மையொத்த முனிசிரேஷ்டர்கள் யிப்புவனங்களிலொருவரேனுமுண்டோ அன்னவாசனனை பிற்மதேவனையும் உனக்கொப்பாகச் சொல்லவும் போதுமோ யிதைக்கருதி நாம்கட்டளையிட்டபடிக்குப் போகத்துணிவீராகில் நீர்வேண்டிய வரங்கள் யாவையுந்தருவோம் யிஃதன்றியும் பழமையாகப் பேர்பெற்றிருக்கின்ற தபோநிதிகளினாலும் முதன்மைபெற்ற தேவர்க்களினாலும் யிக்கருமத்தினை முடிப்பதரிது சகலருக்கும் மேலான பேறைப் பெற்றிருக் கின்ற உனக்கு மாத்திரம் எளிதாயிருக்கும் யிதனால் யாதொருதடையும் பேசாமற்போய் வாருமென்று சிவபிரான் திருவுளம்பற்றிய காலத்தில்அகஸ்தியர்என் செய்வர் கற்தன் பணித்ததைக் கடக்கப்படாமையாற் சற்றேயோசித்து யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், தமதிடத்திற் பிறிதிபத்தியுடைய காளமேக வண்ணனை மகாவிஷ்ணுவுந் தேன்களைப்பெருக்கிப் பரிமளித்திருக்குந் தாமரைக்கமலவாசியாகிய பிற்மதேவனும் வேள்விக்கதிபனாகிய தேவேந்திரனுஞ் சுகசீவிகளாயிருக்க தேவரீர்குறித்ததைக்கொடியவனாகிய அடிமையை முடிக்கக்கட்டளையிட்டதால் அவரினும் நான் செய்ததவமோ சிறந்ததாகத்திருவுளத்திற் றோற்றியது எமது கற்தனே யிக்காரியத்தை நிறைவேற்றக் கடாட்சித்தீராகில் எனதப்பனாகிய தேவரீர் யிடப்புறத்திற் பராசத்தியானவள் வீற்றிருக்கச் சகலசம்பிறமங்களுடனுஞ்செய்ய விருக்கின்ற திருக்கலியாண மகோச்சவக்காட்சியை நேத்திரோற்சவமாகத் தெரிசித்து ஆனந்தத்தினை யடைந்திராமற் பிரிந்து போவதற்கு என்மனந்துணிவு பெறாது வருந்துகின்றது என்செய்வேன் கற்தனேயென்று அகஸ்தியர் விண்ணப்பஞ்செய்து கொண்டபோது திருக்கயிலாயவரைக் கதிபனாகிய பரமேஸ்பரரானவர் சொல்லுவார், சிறந்ததவநிலையை கைக்கொண்டிருக்குங் கும்பமுனிவனே நீ மனம்வாடாமல் தென்பிறதேசத்தில் விளங்கியிருக்கும் பொதியமலையிற்போ யிரு

ம்பையாகில் பராசத்தியுடன் நாம் அவடம்எழுந்தருளி திருமணக்கோலதெரிசனையைக்காட்டுவோம் அதனைதெரிசித்து ஆனந்த மடையக்கடவை யிஃதன்றியும் நமது திருவடியினைத்தியானித்து அவ்வரையிற் சிலகாலந்தவஞ்செய்திருந்த பின்பு பழையபடியே நமது சன்னிதானத்தைச்சேர்ந்துவாழ்வை தவக்கொழுந்தேயென்று நிர்மலக்கடவுளாகிய சிவபிரான் திருவுளம்பற்றியகாலத்திற் போவதற்கு மனமிசைந்தவராய்ச்சிதாகாசத்தினிடத்திற் றிருநடனஞ்செய்யும் மகிமைபெற்ற பாதாரவிந்தங்களிற் பன்முறைவணங்கிநின்று கரங்களைக்கூப்பிக்கொண்டுபரமன் பெருமைகளை வாயாரப்போற்றிசெய்து பெருமூச்செறிந்தவராய் அரிதில் அத்தலத்தைநீங்கித் தென்பிறதேசத்தினைநோக்கிக் கும்பமுனிவரானவர் அதிசீக்கிரமாக நடந்துபோகுமுன்னிலையிற் றன்னிடத்தகப்பட்டவரை மயக்கிவாட்டும் மாயையின் திறம் பெற்றகிரவுஞ்சபர்வதத்தினையும் தனக்குநிகரில்லையென்று யிறுமாந்திருந்த விந்தகிரியையும் மங்கும்படிக்கடக்கிரிஷிகளைவஞ்சித்துக்கொன்று தின்றிருந்த வில்வலன் வாதாவியென்னும் ராட்சதப்பாதகரை அதம்பண்ணினவராய்த் தன்னிடத்தில்மூழ்கியவர்களைப்பவுத்திரமாக்கி முத்தியிற்சேர்க்கவல்ல காவிரியினைக்கமண்டலத்திலேந்தி முனம் அத்தலங்களில் வாசஞ்செய்தவரைப் போலச் சாதாரணமாய்த் தென்பிறதேசத்தில் அகஸ்தியர் வரும்போது எதிரில்நேர்ந்த சில ராட்சதப்பாதகர்கண்டு திடுக்கிட்டு நடுநடுங்கினவர்களாய்வேதோக்தமாய்ப்பல வேள்விகளைச்செய்திருந்தமகாபெலிச்சக்கிரவர்த்தியினது விருப்பை அடக்கிய வாமனனைப்போல்வெகுருகுறளுமுண்டாயிருக்கின்றனனோவென்றுபயந்துஅவடத்தில் நில்லாமலோடி ஒளிக்கக் கும்பமுனிவன் நெடுந்தூரத்தினைக்கடந்துபோய் பொதிகைவரையிற்சேர்ந்து பூர்வகாலத்திற் றாமரைக்கமலவாசியாகிய பிர்மதேவன்சிரையும் வலியையுங்கெடுத்து உலகங்களை அழித்துத்திரிந்த திரிபுரங்களை வாட்டநினைந்து பூமண்டலம்-மகம்மேருதேவர்க்களாகிய ரதத்தில் எழுந்தருளி அதுபாதலத்திற்போவதாகத் திருவிரலினால்ஊன்றியசிவபிரான் திருக்கோலத்தினை மனதிற்சிந்தித்து அகஸ்தியர் அத்தலத்திலிருந்தனர், கேட்டீர்களோ- சவுனகாதிரிஷிகளே யிவ்வாறுபொதிகையில் தவசிரேஷ்டராகிய கும்பமுனிவன் ஸ்தாபிதமாக விற்றிருந்தகாலத்திற் பலராலும் புகழும்பெருமையினையுடைய வடபக்கமுந்தென்பாதியுந்திராசுதட்டினையொத்துச் சமமாகநின்றது அக்காலத்திற் சகலபிராணிகளும் பயவருத்தங்களைப்போக்கி சிவனுநன் கிருபையின் பெருக்கினைப் போற்றி மனக்களிப்புடன்யிருந்தனர், யிச்சரித்திரம்நிற்க யினிதிருமணச்சடங்கின் விபரங்களைக்கேட்பீராக- அகஸ்தியரானவர் கர்த்தன்கட்டளையி

ன்படிக்குப் பொதிகைவனாயினை நோக்கிப் போனபின்பு பழமையா
யிராநின்ற இமையகிரியினிடத்தில் வந்துசேர்ந்த ரிஷிகள் தேவர்கள்
ளசமாய்ச்சேர்ந்து சந்திரசடாதாக்கடவுளாகிய பரமன் தமதன் பரிடத்தி
லிலவந்திருக்குங் கிருபையின் பெருக்கினையும் அத்தேவன் பாதகமலங்
களை யிதையகமலத்திருத்திப்போற்றி வாழும் பத்தர்களினது பெருமை
களையுங்கொண்டாடிக் களித்திருக்கின்ற தருவாயில் மலையிறைவன் கட்
டளைப்படிக்கு எமது யிறைவியாகிய பார்பதியானவள் துற்கையம்மன்
தன்சேனைத்தலைவருடன் போற்றிவரவும் தேவராசபத்தினியாகிய இந்தி
ராணிஅடப்பையைத்தாங்கி பக்கத்திற்போகவும் கங்கையமுனை துங்க
பத்திரிமுதலிய சத்தநதிகளும் வெண்சாய் மரைகளைப்பணிமாறி நடக்க
வும் காளிக்கூட்டங்கள் சந்திரவட்டக் குடைகளைக் கவித்துச்செல்லவும்
மகாலட்சுமியானவள்காத்தினைப்பற்றிக்கொண்டு சரசபதிதேவி அருகிலி
ருந்து அம்மன் பெருமைகளைக் கொண்டாடிவர யிவ்வித ஆடம்பரங்க
ளுடன் கலியாண மண்ட பத்தினைச்சேர்ந்து பிறப்பிறப்பிலியாகிய பரம
சிவத்தின் பாதாரவிந்தங்களிற்பணிந்து நிற்கும்போது மகாலட்சுமியா
னவள் தாயே லோகநாயகன் யிடப்புறத்தில் வீற்றிருப்பையென்றுவே
ண்ட அவ்வாறே பரமனெழுந்தருளியிருக்குஞ் சிங்காதனத்தில் தேவேந்
திரன் முதலானவர்கள் செயசெயவெனப்போற்றப் பராசத்தியானவள்வீ
ற்றிருந்தனள், கேட்மீர்களோ- சவுனகாதிரிஷிகளே. அத்தருவாயில்மலை
யிறைவனானவன் ஆனந்தபரவசத்தனாய்ச் சுற்றத்துக்காதளவும் ஓடியிரா
நின்ற விழிகளைப்பெற்ற தன்குமாரத்தியாகிய பார்பதியம்மனைச் சிவபி
ரானுக்குத் தத்தஞ்செய்து கொடுக்க எத்தனித்துத் தன்தேவியாகியமேன
கைக்குக்கட்டளை யிட்டபடிக்குப்பொற்கரகத்திற்கங்காசலமுஞ்சந்தன
ம் புஷ்பந் தூப தீபமுதலிய பூசாதிரவியங்களைப் பொற்பள்ளயத்திலு
ம் ஏந்திக்கொண்டு வந்தமாத்திரத்திற் பர்வதராசன் சிவபிரானை வணங்கி
தன்தேவியானவள் கங்கைநீரைப்பொழிய ஆதிதேவன் திருவடிகளைச் சு
த்திசெய்து தன்உத்தரியத்தினுல் யீரத்தினைப் புலர்த்தி சந்தனக்குழம்
பைப்பூசி புஷ்பமலர்களினுல் அரிச்சித்து தூபதீபமுதலியசோடச உப
சாரங்களையுஞ்செய்து முடித்தபின்பு அண்டாண்ட புவனசராசரங் களை
யும் ஈன்றருளிய பார்பதியார் திருக்கரத்தினை பரமசிவத்தின் கரத்தில்
வைத்து வேதசாகைகளை ஓதிஐயனே அடியேன் அரிதிற்பெற்றபெண்கொ
டியை மனமொருமித்துத தமது பாரியாகத் தந்தேனென்று அத்தேவ
தேவனைத் தனக்குமருகனுகநினைந்து தாராதத்தஞ்செய்து கொடுத்தான்
சவுனகாதிரிஷிகளே யிவ்வதிசெயத்தினை யென்சொல்லுவேன் சர்வமுந்
தமதுமயமாய் நவக்கிரகங்கள் முதலியஎவைகளுங்கொடுப்பவனும்எந்

பவனுந் தாமேயாகவிளங்குஞ் சர்வசங்காரமூர்த்தியானவர் உலகங்களை
த்தினையும்படைத்தருளியகன்னிகையைதேவர்முனிவர்கள்சாட்சியாய்பர்
வதராசன்திருமணமுன்னிலையில் தாரைவார்த்துக்கொடுக்கப் பெற்றனெ
ன்றுசொல்லுவோமாகில் அவரிடகிருபையின் பெருக்கினையாவரால்அறி
ந்துபுகழப்படும் இவ்விதமகோச்சவ காலத்தில் அரம்பாஸ்ரீகள் நிர்த்தஞ்
செய்யவும் சித்தர்கள் ராகங்களைப்பாடவுந் தும்புருநாரதர் கந்தருவர்க
ளும் எழுதாம்பினைவாய்ந்த தேவயாழினைமீட்டி கீதங்களைப் பாடவும்
தேவர்க்கள் முனிசிரேஷ்டர்கள் மற்றையரும் வேதங்களை ஓதிக்களிக்கவு
ஞ் செந்தாமரைக் கமலவாசியாகிய மகாலட்சுமியும் வெண்டாமரைப்
பீடத்தமர்ந்த சரஸ்பதிதேவியும் மற்றதேவகன்னியர் ரிஷிபத்தினிமார்
ஏகமாகக்கூடிக்கொண்டு மங்களவாழ்த்துகளைப்பாடவும் பூதகணங்கள்
மங்கலமுரசம் சங்கம் சின்னமுதலிய பதினொண்வகை வாத்தியங்களையு
ம்முழக்கி அரகரவென்று ஆற்பரிக்கவும் யித்தகைய ஆனந்தக்களியா
ல்களைச்செய்து வருகின்றதருவாயில் இமையவரைக்கிறைவனானவன் பசு
வின்பால் மா பலா வாழைமுதலிய கனிவகைகளையுந் தேன் சற்கரை
நெய்முதலாகிய மதுரவகைகளையுந்திரட்சியாகச்சேகரித்துப்பொற்பள்
ளையங்களில்நிரப்பிக்கொண்டுபரமசிவத்தினெதிரில்அணி அணியாகவைத்
து எமதிறைவனே யிக்கனிவகை ஆதியாகிய விதங்களைக் கிருபையுற்றுப்
புசித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யக்கேட்டு காளகண்ட
மூர்த்தியானவர்அதிகயிஷ்டத்துடன் அவற்றினைத்தமதுதிருக்கரங்களினு
ற்றொட்டுமலைக்கதிபனே நீ நமதிடத்துமிகுத்தபிரியத்துடன்படைத்தப
தார்த்தவகைகள் முற்றும்நமக்குப் பிரீதியாயிற்றுயிவைகளைஎடுப்பித்து
ப்போகக்கடவையென்று திருவாய்மலர்ந்தனர், யிவ்விதமாகப்பரமன்
அதிககிருபையுடன்அருந்தினவரைப்போலத்தொட்ப்பவுத்திரமாகியசெ
டத்தினைப் பர்வதராசன் பத்தியுடன் ஒருபுறத்திற் பதலப்படுத்தினவ
னாய் புஷ்பஞ் சந்தனந் தாம்பூலமாதியான ஓமதிரவியங்களைச்சேகரித்த
பின்பு பிர்மதேவன் அதிகமகிட்சியுடன் கர்த்தன் சமீபத்தில்வந்து யித
னைவிண்ணப்பஞ் செய்கின்றனன், ஆயிரம்பணுமகுடங்களைக் கொண்டு
ஆதிசேஷன் தாங்கும் பூமண்டலத்திருப்பவர்களும்தெய்வலோகவாசிக
ளாதியாக விவாகஞ் செய்யுமுன்னிலையில் வேதவிதிப்படிக்குச் சடங்கு
களைச்செய்து முடிப்பதுபோலவே தேவரீர் திருமணச் சடங்கினைத் துவ
க்குமுன்னிலையில் நடப்பிக்கவேண்டிய கருமங்களை ஆரம்பிக்கின்றதற்
குக் கடாட்சிக்கவேண்டுமென்று போற்றுவதற்கிரங்கி திருநகைகொண்
டு பிரமனே அவ்வாறேநடப்பிக்கக் கடவையென்று உத்தரவுதரப்பெற்
று மிகுத்தகளிப்புடன் விரைவில் ஓமகுண்டத்தினிடத்திற்போய் பலி

ரவியங்களையுஞ் சேகரித்துக்கொண்டு பிரகஸ்பதி சுக்கிரன் மற்றுமிரா
வின்றரிஷிகள் பிராமணரைக் கூட்டிக்கொண்டு அக்கினியை ஓமகுண்
டத்திற்சேர்த்து மந்திர பூர்வகமாய் சமித்துகளையும் ஆவின்நெய் பொ
ரி யிவற்றை வேதவிதிப்படிக்கு பிராமணச்சடங்கின் முறையாகநடத்தி
ப் பூரணாகுதியைச்செய்தவுடன் அம்மையப்பனாகநின்று உலகங்களனை
த்தினையும்படைத்த பரமசிவத்தின் திருவடிகளில் முதல்பிர்மதேவன் வ
ணங்கப்பின்பு மகாவிஷ்ணுவும் அதன்பின்பு தேவராசன்விண்ணவர்ரி
ஷிகள் சேவித்தனர், யிப்படிக்குப் பரமசிவத்தையும் உமையவளையும்
வழிபட்டபின்பு பேரறிவினைவாய்ந்த உருத்திரகோடிகள் பரிசனராகிய
பூதகணங்களும் வணங்கிப்போற்றினர், கடையிற்பர்வதராசன் தன்ப
ந்துவர்க்கங்களுடன் திருவடிகளிற் றன்முறைபணிந்தனன், இவ்விதமா
கப்பலருஞ்சேவித்து வருமுன்னிலையிற் பரமசிவனும் உமையவளும் அ
வர்களிடத்திற் கிருபாநோக்கம் பாலித்திருக்கின்ற தருவாயில் பர்வதரா
சனானவன் யிதுபக்குவமான காலமென்றெண்ணி முன்னம் பரமசிவந்
தொட்டருளிய சேடமாகியபழமுதலிய பிரசாதங்களைப் பகுந்துகொடு
க்கும்படிக்கு நினைந்து வேதங்கள் தேடிக்காணரிய பரமசிவனதுபா
தோதகத்தினையும் மற்றகனிவகைகளையுங் கிரமப்படிக்கு பிர்மதேவன்
முதலானதேவர் ரிஷிகள் மற்றையருக்குங் கொடுத்துவரப் பத்திவிசுவா
சத்துடன் கரங்களிலேந்திப் புசித்து பவுத்திரராய் ஆனந்தத்தடைந்தன
ர், கேட்மர்களோ சவுனகாதிரிஷிகளே ஆலகால விஷத்தினை உண்டு கண்
டத்திற்றரித்த சிவநாதனுக்கு ஆராதித்த நிர்மலப்பொருள்களைப்பெற்ற
சகலருந்தமது பூர்வவினைத்தடக்கனைத்தும் வேரறப்போக்கினமென்
றதிமோகபரவசத்தராய் ஆடிப்பாடி செயசெயவென்று போற்றினர், அ
க்காலத்திற் சகலருங்கொண்டமகிழ்ச்சியின் பெருக்கினை யிவ்விதமென்
று என்போலியராற் சொல்லிமுடிவதோ யிப்படிக்குச் சகலருங்களித்
திருக்கின்ற தருவாயில் மிகுதியாகநின்றசேடத்தினை மலையிறைவன் தன்
தேவியுடன் சுற்றத்தாரும் சாப்பிட்டு பாசபெந்தங்களை நீங்கி மோட்ச
சாம்பிராச்சியத்தினைப் பெற்றவர்களைப்போல் அளவற்றமகிழ்ச்சியில் மூ
ழ்கிக்களித்தனர், கேட்மர்களோ—சவுனகாதிரிஷிகளே சகலரும்யிவ்வித
மாக ஆனந்தமடைந்திருக்கின்ற தருவாயில் தன்கணவனைப் பறிகொடு
த்து தவக்கோலங்கொண்டு துக்கசாகரத்தில் மூழ்கியிருந்த இரதிதேவி
யானவள் யிதுதருணமென்றெண்ணி மெல்லமெல்லத்தன் திருமுன்வந்து ச
ராசரப்பிரபஞ்சங்களை ஈன்றருளிய பார்பதியாரைத் திருமணஞ்செய்து
வீற்றிருக்கின்ற கோலத்தைத்தெரிசித்துத் திருவடிகளிற்பன்முறைவண
ங்கிப்போற்றி சுந்தரனே தேவரீர் திருக்கலியாணமகோச்சவத்தைக்கண்

மெகிழ்ந் திருக்கின்றவர்களைப் போலவே அடியாளுங் களிக்கத்தக்கதாக
மங்கிலியப்பிச்சை தந்தாள வேண்டுமென்று சகல சுபங்களுக்குங் கார
ணமாகிய கணவனையிழந்து வாடுகின்றஇரதிதேவியானவள் செய்தவிண்
ணப்பத்தைத் திருச்செவியிலேற்று பிராணிகளனைத்தினிடத்தும் அந்த
ரான்மாவாகநின்று அவற்றின் நன்கு தீங்குகளைத் தெரிந்து அதற்குரிய
வினைப்போகங்களைக்கூட்டி நடிப்பிக்கும்பேரருளைப்பெற்ற சிவபிரா
னானவர் இரதிதேவியினிடத்திற் கிருபையுற்று பெண்ணே மனம்வருந்
தாதேயென்று ஆதரித்து மன்மதன்வருவதாகத்திருவுளத்தில்நினைந்தனர்
தட்சணமே மகாவிஷ்ணு முதலானவர்கள் பிரமிக்கும்படிக்குந் துக்கி
த்திருந்த இரதிதேவியானவள் கண்டு கார்காலமேகத்தினை யெதிர்ந்
தமயிலைப்போல மகிழ்ச்சியடைந்து துள்ளும்படியாகவும் அச்சமையி
னிடத்திற் கருப்புவில்லைக் கரத்திற்பற்றிக்கொண்டு உம்மென்று ஆர்ப்
பரித்து மன்மதன் தோற்றினன்- இவ்விதமாகப்பரம னருளினால்வெளி
வந்த மன்மதனானவன் மூலகாரணியாகிய பார்பதியாருடன் வீற்றிருக்
கின்ற பரமேஸ்பரனது பொற்பாதகமலங்களுக்குச் சமீபத்தில் நெருங்
கிசிரத்திற்படுவதாகப் பன்முறைபணிந்து போற்றிசெய்து கொடியபா
தகன் முடித்தகுற்றங்களைப் பொறுத்தருளவேண்டுமென்று வருந்துகி
ன்றவன்மீது கிருபாநோக்கம்பாலித்து மன்மதனே நாம்உன்னிடத்திற்
கோபங்கொண்டாலன்றோ அதனைக்ஷமிக்கவேண்டியதுகுமாரனேமன
ம்நோகவேண்டாம் அக்கினிமயமாயிருக்கின்றநமதுபார்வையினால்நீமா
ண்டுசாம்பலாயினை அத்தருவாயில் பதிவிருதையாகிய உன்மனைவி இர
திதேவியானவள் வருந்திக் கேட்டுக்கொண்டதற்கு நாம் அனுக்கிரகஞ்
செய்தபடிக்கு அவளுக்குமாத்திரம்பழையபடிக்கு உருவமாய்விளங்கி
மற்றவிண்ணவர்மண்ணவர் முதலானவர்களுக்கு அரூபியாகநின்றுஉன்
பணிவிடையினைச் செய்துவருவையென்று அவன்செய்த வினைக்கீடாகத்
திருவுளம்பற்றி அவன் அரசுரிமையையுஞ் சகலசிறப்பினையும் வலியினை
யுங்கடாட்சித்து மைதிமிர்ந்த நீண்டவிழிகளைப்படைத்த இரதிதேவியு
டன்உன்னிடத்தைச்சேர்ந்து வாழக்கடவையென்று விடைதந்தபோது
மன்மதன் உமாபரமேஸ்பரரை வணங்கிப்போற்றித் தன்தேவியுடன்
அதிவேகமாய் பழையபதியிற் சேர்ந்தான்- இப்படிக்குமன்மதனும்இ
ரதிதேவியும்மனச்செருக்குடன்வங்கணமாகச் சென்றபின்பு இந்திரநீல
ரத்தினவகைகளினாற் சோதித்திராநின்ற சிங்காதனத்தில் வீற்றிருந்தசிவ
பிரானானவர் பார்பதியாருடன் தவிசைவிட்டிறங்கி தமது திருவுருவினை
ப்பெற்றசிறந்தஉருத்திரகணங்கள் தேவர்கள் முனிசிரேஷ்டர்முத
லாகியசேனங்கள் போற்றிச்சூழ்ந்துவரப் பூதகணங்கள்பலவாத்தியங்க

ளையும் மங்களாகாரமாகத் தொனித்துச் செல்ல உலகங்களில்வாசமாகியவு யிர்களுக்குயிராகநின்று நடிப்பிக்கவல்ல கர்த்தனானவர் செம்பிரநடை யினையுடைய ரிஷபவாகனத்தின்மீது ஆரோகணித்துத் திருக்கரத்தினை நீ ட்டிப்பார்பதியாரை யெடுத்து யிடப்புறத்திற்சேர்த் தணைத்துக்கொ ண்டுவாகனத்தைநடத்தி தேவர்க்கள் பழையபடிக்கு வரன்முறையாகச் சூழ்ந்து பணிவிடைகளைச் செய்துவரவும் கணபதிகள் நெருங்கித் து தித்துப்போகவும் பொன்மயமாகிய யிமையகிரியினது எல்லையைக்கட ந்துசந்திரிகையைவீசிவிளங்கும் வெள்ளியங்கிரியைச்சேர்ந்து திருமா ளிகைப்புறத்தில் வந்தவுடன் மகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் இமையகிரிக்கரசன் தேவர்க்கள் முனிசிரேஷ்டர் முதலானவர்களிடத்து கிருபானுக்கம்பாவித்து உங்கள்பதவிகளிற்போய் சுகசீவிகளாய்வாழ க்கடவீரென்று பிறப்பிறப்பில்லாத பரமசிவந் திருவுளம்பற்றி மேலு ங்காலத்திப்பெயர் உருத்திரன் கூர்மாண்டேசன் ஆடகேசுரன் வீரபத் திரக்கடவுள் முதலாகிய தமது பத்தரானஉருத்திர கோடியருக்குங்கண த்தலைவருக்கும் பூதவீரர்களுக்கும் விடைதந்தருளியபின்பு சிவபிரானு னவர் ஒப்பற்றதமது திருமாளிகையைச்சேர்ந்து நந்திவாகனத்தேவன் பிடரியினின்றும் யிறங்கிதமது நிரோகத்தில் அத்தனாரீஸ்பரம்பெற்றிரு க்கின்ற உமையவளுடன் நகர்மத்தியில் விளங்கும் அரமனையிற் பிரவே சித்து சபாமண்டபத்தில் நவரத்தினமயமாகத் தோற்றுகின்ற சிங்காதன த்தில் எதாப்பிரகாரம் திருத்தேவியாருடன் வீற்றிருந்தனர், கேட்டீர்க ளோ—சவுனகாதிரிஷிகளே அடியருக்கெளிவரும் பரமசிவம் பராசத்திச மேதராயிருந்தகாலத்திற் கூட்டுறவின்றி வேற்றுமைப்பட்டு வாடியிரு ந்த பிராணிகளனைத்துஞ் சிவமுஞ் சத்தியுஞ் சேர்ந்தமகிமையினாற்காம வின்பத் தலைக்கொண்டுபோகங்களை ஒருமைப்பட அனுபவித்து ஆனந் தக்களிப்பிலாழ்ந்துவீறிவிளங்கியது.

---

## திருவவதாரப்படலம்

---

சூதபுராணிகர் நைமிசாரணிய வாசிகளைப்பார்த்துச்சொல்லுவா ர்—இதுபரியந்தம் உமையவள் திருக்கலியாணச் சிறப்பினைக்கேட்டீரன் றோ யினிஎமறையுணரிய சிவசுப்பிரமணியதேவர் திருவவதாரச் சரித்திர ங்களைப்பேசுவோம்-பரமசிவம் பராசத்தியுடன் திருக்கயிலாய மாளி கையில் வீற்றிருந்தபின்பு பலகாலம்மன்னுயிரனைத்தும் வீறிவிளங்கிவ ருகின்றதருவாயில் ஒருதினம் சிருஷ்டிகர்த்தனாகிய பிரமதேவன் மகாவி

ஷ்ணு தேவேந்திரனாதிய திக்குப்பாலகர் தவங்களிற் சிறந்தரிஷிக்கூட்
டங்கள் மற்றுமிரானின்ற தேவரினங்கள் முழுமையுஞ் சூரபதுமன் உ
பத்திரவத்துக்கஞ்சி தமது பதவிகளையிழந்துமகம்மேருச்சாரலில்வந்து
ஒளித்திருப்பவர்கள் தம்மில்யோசிக்கின்றனர், தீனசரண்ணியனாகியசிவ
பிரானானவர் பலஅண்டங்களுடன் யிவ்வுலகினையுங் கொடிய பாதகராகி
ய அவுணருக்குச்சுதந்திரமாகக் கொடுத்துவிட்டு நமக்குத்தீராத துன்
பத்தினையுண்டாக்கித் தாம்யோகியரைப்போல மவுனதீட்சைவகித்திரு
ந்தமுன்னிலையில் நமக்குநேர்ந்த வருத்தங்களைப்பொறுக்கப் படாமை
யால்திருக்கயிலைக்குப்போய்எல்லவருக்குஞ் சம்பவித்திருக்கின்றகுறை
பாடுகளைச்சொல்லிமுறையிட்டகாலத்தில் தீனருக்கடுத்ததுயரத்துக்கிரங்
கிக்கடாட்சித்தபடிக்கு யிக்காலத்திற் றிருக்குமாரனைத்தந்து நமதுயிக்
கட்டைப்போக்கி ஆருந்தயாரசத்தினால் மலையிறைவன் புத்திரியாகியபா
ர்பதியைத் திருக்கலியாணஞ் செய்தவர் தாம்வாக்குதத்தஞ் செய்தபடிக்
குப் பிள்ளையைத்தராமல் சும்மாயிருப்பதென்னகாரணம் மேலுங் கற்
தன் குணாதிசெயங்களை நிதானிக்குமிடத்தில் விருப்புவெறுப்பின்றியா
வரிடத்திலும் ஏகபட்சமாய் அவரவர்செய்த நல்வினை தீவினைகளைச் சீர்
தூக்கிப்பார்த்து அதுகளுக்கேத்த பலப்பிரப் பத்தியைக் கடாட்சித்து
உலகங்களை நடிப்பிக்குஞ் சற்கருமியாகக் காணுகின்றது- யித்தகையச
ர்வக்கியனை நாம் விருதாவாய் வெறுத்துப் பேசுவது தகாதனவாம் மு
க்கியமாகிய தவவிரதங்களைச்செய்து அவனருளைப்பெறுமல் குற்றங்க
ளைத்தேடிக் கொண்டனமென்று நம்மையேநொந்து கொள்ளுவது நி
யாயமாகவிருக்கின்றது அப்படிக்கிருந்தபோதிலும் தேவதேவனாகியப
ரமசிவத்தின் திருவடிகளைப்போற்றிச் சரணடைவோமாகில் நன்மைகள
னைத்துங்கிடைத்து வாழலாகுந் தீங்குகளனைத்தும் வேருடன் கெடுவத
ற்கையமில்லை யிஃது உண்மையாதலால் ஆயிரங்கிரண சமோகத்தினையு
டைய் சூரியனுஞ்சோடச கலைகளைப்பெற்ற சந்திரனும் வலம்வரத்தக்க
பெருமையினைவாய்ந்த திருக்கயிலாயத்தில் வீற்றிருக்கும் எமதுகர்த்தனு
க்கு யின்னமொரு விசைநாம்படும் வருத்தங்களை விண்ணப்பஞ் செய்
துகொள்ளும்பொருட்டுப் போகவேண்டும் யிதன்றியில் முக்கியமாகி
ய நன்மைவேறில்லையென்று நிதானித்தனர், அத்தறுவாயில் பொன்னை
யொத்த மகரந்தங்களையிறைக்குந் தாமரைப்பீடத்தினனான பிற்மதேவ
ன்தேவர்க்களைப் பாத்துச் சொல்லுவான் நம்மிடசபையில் யிப்போது
தீர்மானித்த காரியந்தகுதியே ஆயினும் முந்திஒரு காரியத்தினைச் செய்
யவேண்டியிருக்கின்றது அதுவென்னெனிற் சிவபிரான் யிக்காலத்தில்எ
ன்ன அவசறத்திலிருக்கின்றனர், அதைவிசாரித்துக்கொண்டுபோவது ந

ன்காதலால் ஒருதூதனைச்செலுத்தி யறியவேண்டு மெனச்சொல்ல அதற்
குச் சகலரும்மிசைந்து யிதற்கு யாரை அனுப்பலாகுமென்று ஆராயுமி
டத்தில்பிற்மதேவனானவர்அக்கூட்டத்திலிருக்கின்றவாயுதேவனைப்பாத்
துச்சொல்லுவார்- குமாரனே உன்வல்லபத்தினை என்னென்றுசொல்லு
வேன் பூற்வத்தில் ஆதிசேஷனுக்கும் உனக்கும் வாதுநேர்ந்தகாலத்தில்
அவனாற்போற்றப் பட்டிருந்த மகம்மேருவினது கோடுகள் ஆயிரத்தி
ல்மூன்றை உன்வேகத்தினாற் பறித்துப் பிரசண்டவாயுவும் அஞ்சிவாட
த்தக்கதாகச் சமுத்திரமத்தியி லெறிந்தனை உன்வல்லபம் உனக்கே தெ
ரியவில்லை ஆதலால் யிக்காலத்தில் நமது குறைகளை நிவாரணஞ்செய்து
கொள்ளும்பொருட்டு மேல்நடக்கவேண்டிய காரியங்களைக் குறித்து
விண்ணப்பம் பண்ணவேண்டுவதற்காக நீ முந்தித் திருக்கயிலாயத்தினி
டத்தில் விளங்கும் நகரத்துக்குப்போய்ச் சந்திர சடாதரக் கடவுளாகிய
சிவபிரான்யிருக்கின்ற அவசரத்தினைத்தெரிந்து வருவையாகில் அதற்கு
த்தகுதியாகயோசித்துநடந்துகொள்ளலாகுமென்று ஆயிரம்யிதழ்க்களை
ப்பெற்ற தாமரைக்கமல பீடத்தையுடைய பிற்மதேவன் குறித்தகாலத்தி
ல் வாயுதேவன் திடுக்கிட்டு யிதனைச்சொல்லுகின்றனன், சிலதினத்துக்கு
முன்னங் கருப்புவில்லைப்படைத்த மன்மதன் எதிர்த்தமாத்திரத்திற்சா
ம்பலாகவிழித்ததேவதேவ னிடத்துக்குப்போவது யாவருக்கும் அரி
தாகும் தேவரீர் கட்டளையின்படிக்குப் போவேனாயினும் அடியேனுக்
குத்துன்பம் நேருவதன்றியிற் காரியசாதகமாவது அரிது யிதனை நினைந்
தமாத்திரத்தில்மனம் நடுநடுங்குகின்றது ஆதலால் ஒருபோதும்யிக்கா
ரியத்துக்குப் போகமாட்டேன் போனபோதிலும் முடியாதென்றும
றுத்தவாயுவை பிரமன் பரிவாகப்பாத்து நீபிறிமிக்கவேண்டாம்எவ்விட
த்துந்தடையின்றி உலவவல்ல நீ ஒருவனல்லாமல் யிதனை முடிக்கவல்லவ
ரையித்தேவகூட்டத்திற் கண்டதில்லை இஃதன்றியிற் சிலநீதிகளைக் கேட்
பாயாகத் தம்மையடுத்தவருக்கு வுதவியினைச்செய்வதே பெரிதாய்நினை
த்திருக்கின்றவருந் தேகியென்று கேட்டவருக்கு மறுமற் சகலவளனுந்
தரவல்ல தியாகிகளும் அளவற்றதவங்களைச்செய்து கைகூடியமகத்தக்
களுஞ் சமற்சனத்திற் றடைபடாமல் உயித்தியஞ்செய்யத்தக்க தீரம்பெ
ற்றவீரரும் நற்காரியங்களைச்செய்ய வருமுன்னிலையில் மற்றொருபிறை
யோசனங்களையும் அவர்களாற்பெற நினையாமல் முடித்துத்தருவர் வரு
த்தத்திற்கும் அஞ்சார்கள் பிராணன்போகவரினும் அதைப்பெரிதாகவெ
ண்ணார்கள் உதவிசெய்வதே நன்கென மகிழ்வர் ஆதலால் எங்களனைவரு
க்கும் பிராணபதமாகிய சகாயத்தினை முடிக்கும்பொருட்டு ஐயனே
அவசியம் போகவேண்டுமென்று அவனைப்புகழ்ந்து மேலும்அளவற்

றநீதிகளைப்போதிக்குமுன்னிலையில் மறுப்பதற்குநாவெழாமற்சம்மதப்பட்டு அக்கினிதேவனுக்குச் சகாயனான வாயுவானவன் பிரமனைவணங்கிவிடைபெற்றுப்போய்த் திருக்கயிலாயத்தைச் சேர்ந்தவுடன் அவ்வரையின்சாரலிற் கல்லென்னும் ஓசையுடன் பெருகுகின்ற குளிர்ந்த அருவிசெலத்திற்படிந்தும் பக்கங்களிலிராநின்ற பூங்காவுகளில் உலவிபரிமளங்களை வாரிக்கொண்டு மந்தமாருத அசைவாய் மெல்லச்சென்று ரத்தினமயமாகப் பிரகாசித்திருக்கின்ற நகரத்திற் பிரவேசிக்க வருமுன்னிலையிற் பலகோடி சிவகணங்கள் சூழ்ந்துபோற்றப் பொற்பிரம்பினைக்கரத்திற்கொண்டு முதற்கோபுரவாயலின்கண் வீற்றிருந்து ஆணை ஆக்கினையினைச்செலுத்தும் பெருமையினைப்பெற்ற நந்திதேவர் வாயுதேவன் வருங்காரணத்தினைத் தெரிந்து அதிககோபங்கொண்டுசீறி ஆரடாபயமின்றி வருபவனென்று அதட்டிய மாத்திரத்தில் மேகத்தினிடத்துண்டாகும் யிடியின் முழக்கத்தினைக்கேட்ட சர்ப்பங்களானவை படங்களைமறித்தும் புரண்டுவாடுவதைப்போல மீறிவருகின்ற வாயுதேவனுண்வன் வலிஒடுங்கி மனம்நடுங்கித் தாபரிக்கப்படாமையால்கைகால்களோய்ந்து நிலத்தில்விழுந்து களைத்திருந்து சற்றுநேரத்திற் றெளிவுண்டாய்என்னகாரியத்துக் குள்ளாய்வந்தோமென்று அதிகபயத்துடன்கிலேசித்துமெல்ல வெழுந்து தன்சுயரூபத்தினைக் கொண்டுவந்து விரவெண்டையமணிந்த நந்திதேவர்பாதாரவிந்தங்களிற் சேவித்தெழுந்துவாயினைப்பொத்திக் கொண்டு யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், கர்த்தனே அடியேன் அபராதங்களை க்ஷேமித்துஎன்வரவின்காரணத்தைக்கேட்டருள்க சூரனுக்குப்பயந்து மகம்மேருச்சாரலில்வந்து ஒளித்திருக்கின்ற மகாவிஷ்ணு பிற்மதேவன் தேவேந்திரன் முதலாகிய விண்ணவர்களனைவருங் காளகண்ட மூர்த்தியினது சன்னிதானத்துக்குவந்து தமது குறைகளை விண்ணப்பஞ் செய்துக்கொள்ள நினைந்து அதற்குமுன்னஞ் சிவபிரான் யிருக்கின்ற சமையத்தினைத் துரிதமாகப்போய்த்தெரிந்துவருவதாகக் கொடிய பாதகனாகிய அடியேனுடன்சொல்லினர் அதைக்கேட்டவுடன் தேகமெங்கும் வியர்க்கப் பயந்தவனாய் ஆலகால விஷத்தினையுண்டு கண்டத்திற் றரித்தாண்ட பரமசிவத்தின் திருவிளையாடலின் திறத்தினை யிவ்விதமென்று ஒருவராலும் நிதானிக்கப்படாது அப்படிக்கிருக்கத் தீனனாகியஎன்னால் அளக்கப்படுவதோவென்றுபலவாகச்சொல்லித்தடுத்த போதினும் தங்கள் வருத்தங்களைக் காட்டி என்னைவெறுத்துக்கொண்டு பயமுறுத்தி தங்கள்வல்லபத்தினால் பலவத்காரமாய்உடன்படுத்தி என்னை அனுப்பினார்கள் அடியேன் என்செய்வேன் தடுத்தால் என்செய்வரோ வென்னும் யேக்கத்துடன் புறப்பட்டு அஞ்சி அஞ்சிஎ

ன்சுபரூபத்தினை மாற்றி தென்றற் படிவத்தைத்தாங்கி மெல்லமெல்ல வந்தேன் என்னவிளைய விருக்கின்றதோ வென்றுங் கவலையிற்பட்டவனாதலால்யிக்காரியத்தை தேவரீருக்குமுந்தி விண்ணப்பஞ்செய்துக்கொள்ளவேண்டுமென்பதை மறந்தேன் பேதைஅறிவினையுடைய நாயினேன்பிழையினைகர்த்தனே க்ஷமித்து ரட்சிக்கவேண்டும் மேலும் அளவற்ற அவுணவீரர்கள் சூழ்ந்துபோற்ற வீற்றிருக்கின்ற ஒப்பற்ற வீரபராக்கிரமசாலியாகிய சூரபதுமனிட்ட தகாதபணிவிடைகளைச்செய்து மானமழிந்து மதிகெட்டு வருந்திவாடுகின்றவ னாதலால் முந்தி யிதனைமுடித்துப்போகவேண்டுமென்னுங் கிரமங்களொன்றுந் தோற்றவில்லைபுத்திமயங்கினேன் நானொருவன்மாத்திரமல்ல யிவ்வாறே மற்றைய தேவர்க்களும் மதிமயங்கி வாடுகின்றனர் பெருமைபொருந்திய சணுதிபதிகளில்முதன்மையாக விளங்குகின்ற கர்த்தனே தேவரீர்கோபத்துக்குயிலக்கானவர் ஒருவருமில்லை ஆதலால் சிறியனாகிய என்னிமித்தியஞ் சீற்றங்கொள்ளுகின்றீரோ பொறுத்தாள வேண்டுமென்று மிகவும் வருந்திக்கேட்டுக்கொள்ள முன்னிலையில் எமதிறைவனாகிய நந்திதேவர் மீறியெழுந்தகோபத்தினைத்தணித்து வாயுதேவனே போகவிருந்த உன்பிராணனைத்தந்தனம் யினியித்தலத்தில் நில்லாமல் சீக்கிரமத்தில் ஓடிப்பிழையென்றுசெலவு கொடுக்கப்பெற்று வாயுவானவன் பேரறிவினைவாய்ந்த நந்திதேவர் திருவடிகளிற் பலதரம்வணங்கி ஒப்பற்றதிருக் கயிலாயத்தைக்கடந்து மகம்மேருச்சாரலிற் கூடியிருக்கின்ற தேவர்கள் சமோகத்திற்சேர்ந்து மகாவிஷ்ணு பிற்மதேவன் திருவடிகளிற் பணிந்து நின்று ஐயமாரோ தங்கள் கட்டளையின்படிக்குத் துணிவுகொண்டுபோய்வெள்ளியங்கிரியினைச்சேர்ந்து மந்தமாருதவடிவுடன் மெல்லமெல்ல ஆலயத்துக்குள்போவதற்கு எத்தனப்படுமுன்னிலையில் நான்பட்ட பாட்டையென்சொல்வேன் முதற்கோபுரவாயலி னிடத்தமர்ந்து போற்றுகின்ற நந்திதேவர் காவலின் வல்லபத்தினையும் மற்றும்அவடத்தில் நடந்தசரித்திரங்களையும் சவிஸ்தாரமாகச்சொல்லி சுவாமிகளே யித்தினம்மீளத் தாய்வயிற்றிற் பிறந்ததாகநினைந்து தப்பிப்பிழைத்துவந்தேன் அம்மம்ம அந்தநந்திதேவர்கோபப்பெருக்கினையென்சொல்வேன் நினைப்பினும்மனம்நடுங்குகின்றதென்று வாயுதேவன் விண்ணப்பஞ்செய்தகாரணங்களைச்செந்தாமரைக் கண்ணனாகிய மகாவிஷ்ணுவும் பிற்மதேவனும் இந்திரனுங்கேட்டு அதிகவிசனங்கொண்டவர்களாய் மீளவும்யோசித்து ஒரு தீர்மானப் படுத்திக்கொண்டு மற்றதேவர்களனைவருங் கேழ்க்க யிதனைச்சொல்லுகின்றனர், எமதிறைவனாகிய சிவபிரான் யிருக்கின்ற நிலையினைத்தெரிந்துவரும்படிக்கு வலியிற்சிறந்த வாயுதேவனை வேண்டி அனுப்பி

னும் அவனே நந்திதேவர் ஆக்கினைக்குப்பயந்து தப்பித்துக்கொண்டு
வுயிருடன் யிவடம்வந்துசேர்ந்தான், ஆதலால் யினியாதொரு வியாயக
முங்கொள்ளாமல் நாம் எல்லவருந் திருக்கயிலாயத்துக்குச்சென்று கற்
தன்சன்னிதிக்குப்போகத்தக்க காலங்கிடைத்தபோதுபரமனைவணங்கிச்
சூரனால்நமக்கு நேர்ந்தகுறைபாடுகளை விபரமாக விண்ணப்பஞ்செய்து
கொள்வதே உத்தமமாக விருக்கின்றதென்று தெரிவிக்கச் சகலரும் ஏக
மூகமாய் யிதுதகுந்தகுமென்று ஒருமைப்பட்டனர், இவ்வாறுமகாவி
ஷ்ணு பிற்மதேவன் முதலிய தேவர்க்கள் அனைவரும் யிசைந்தவுடன்
பொன்மலையாகிய மகம்மேரு கிரியைக்கடந்துபோய் வெள்ளியங்கிரியி
ன்மீது விளங்கூர் தெய்விகம்பொருந்திய ஆலயத்துக்கெதிரிற் சேர்ந்
து சிங்காதனத்தில் வீற்றிருக்கும் நந்திதேவனைக்கண்டு வலம்வந்துசே
வித்துப்போற்றி யிதனைச்சொல்லுகின்றனர், எமதிறைவனாகிய நந்திதே
வனேகிருபையுற்றுக்கேட் டருள்சஎங்களுக்கடுத்ததுன்பங்களனைத்தினை
யுந் திருவுளத்திற்கொண்டிரங்கி தேவாதிதேவனாகிய சிவபிரானுக்குளங்
கள்வரவினைத்தெரிவித்து விடைபெற்றுவந்து சீக்கிரமத்தில் எங்களை
ப்பரமன் திருமுன்பு விடவேண்டுமென்று பலஉபசார வாற்றைகளைச்
சொல்லி வேண்டுவதற்கிரங்கி தேவர்கள் கூட்டத்தினை அத்தலத்தி லிரு
க்கக்கட்டளையிட்டு ஆலயத்தினுள் பிறவேசித்து கற்றைகற்றையாக நீண்
டிருக்குஞ் சடாமண்டலதாரியாகிய முக்கண்ணெம்பிரான் பொற்பாத
கமலங்களில் வணங்கிப்போற்றி கற்தனே தேவரீர் திருவடிகளைத் தெரி
சித்துப்போவதாக இந்திரன் முதலிய தேவர்க்கள் மகாவிஷ்ணு பிற்ம
தேவன் யிவ்விருவர்களுடன் கடைவாயலினிடத்தில்வந்திருக்கின்றனரொ
ன்று அறிக்கையிட்டகாலத்திற் சந்திரசடாதரமூற்த்தியாகிய சிவனுதன் ந
ந்திதேவனைக் கிருபையாகப்பார்த்துஅவர்களனைவரையும் அழைத்துவரக்
கடவையென்றுதிருவாய்மலர்ந்தருளியவுடன் தேவாதிதேவன் திவ்வியசர
ணாரவிந்தங்களில் நமஸ்கரித்து சீக்கிரமத்திற்றிரும்பி மகாவிஷ்ணுபிற்
மதேவன்முதலிய தேவர்க்களைக்கண்டு எமதிறைவன் சட்டளையாயிற்று
வாருமென்று ஞானவானாகிய நந்திதேவர் சொன்னமாத்திரத்தில் மேக
கெற்சித்ததுக்கு அஞ்சாதுகளித்திருக்குஞ் சாதகப்பட்சிகளைப்போலப்
பிரமன்முதலாகச்சொல்லுந்தேவரனைவருந் தேவதேவோத்தமனாகியசிவ
பிரான் சன்னிதானத்தை நோக்கிச்சென்று பராசத்தியானவள் யிடப்பா
கத்தில் விளங்கச் சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற எமதையன் திருமுன்
சேர்ந்து பொற்பாதகமலங்களிற் பன்முறைபணிந்தெழுந்து பத்திவிசு
வாசத்துடன் யிவ்விதங்களிற் போற்றுவதாயினர், ஓ கற்தனே தேவரீர்ம
கிமைகள் எப்படிக்கொத்ததென்றால் விழிகளின்றேற்றத்துக்கு அகப்

படாதவராய் மனோவாக்குக் கெட்டாதவராய்த் தியானித் தறியப்படாதவராய்யிவ்விததோற்றத்தினையுடையவனொன்றுபகுத்தறிவதற்குக் கூடாமையாய் விளங்கும்யிறைவனே தேவரீர் நடப்பிக்குந் திருவிளையாடலின் மகிமைகளை எங்களால் அறியப்படவில்லை சத்திசிவமாகவுஞ்சதாசிவமாகவுஞ் யிவ்விரண்டிக்கும் மேற்பட்டபரசிவமாகவும் யிவற்றிற்குப் புறம்பாக விளங்கியும் அச்சன்னிதிப் பெருமையினாற் சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்தும் யிவ்விதநாடகத்தினைச்செய்யும் மகத்துவமுள்ள கர்த்தனே நமது லீலாவினோதப்பெருக்கினை ஓதற்கரிய சிறந்தவேதங்களாலும் நிதானிக்கப் படுவதோ ரூபநாமக்கிரிகைக ளொன்றுமின்றிவிளங்கும்பரிபூரணமாக நிறைந்திருக்கின்ற பரம்பொருளே முற்குறித்த காரணங்களை யோசிக்குமிடத்தில் உலகங்களிற் பரவியிருக்கின்ற பிராணிகளுக்கு மோட்ச சாம்பிராச்சியத்தினைக் கடாட்சிக்கக் கிருபையுற்றதல்லது வேறுமொன்றுண்டோ அப்படிக்குத் தோற்றிய உயிர்களனைத்துந் தேவரீர் கிருபையில்லாதகாலத்தில் யாதொருதொழில்களையுஞ் செய்யவறியாமல் மயங்கியிருக்கும். ஆதலால் விருப்புவெறுப்பற்ற தேவரீர் எவ்விதமாக யிவ்வுலகங்களை நடிப்பிக்கின்றீரோ தோற்றவில்லை முதன்மையாகச்சொல்லாநின்ற வஸ்துக்களில் முத்திப்பேச லாகுமென்று நினைப்போமாகில் கடைப்பட்டபொருள்களினுங் கடையாகவசனிக்கவும் விளங்குவீர் அந்நிலைகளில்மாத்திரம் யிருக்கின்றீரெனக்குறிக்கலாகுமெனினும் மற்றவைகளனைத்தும் உமது செயலல்லது வேறுமுண்டோ ஆதலால் என்னென்று தேவரீர் குணதிசெயங்களைவற்னித்துத்துதிக்கின்றது வினைப்போகங்கள் முதலிய கருமங்களனைத்தும் நீர் கிருபைகூர்ந்து நினைக்க அக்கட்டளையின்படிக்கு நடக்குமென்று சொல்லுவோமாகில் ஆதியிற்கொடியபாதகர்வாசமாயிருந்த திரிபுரங்களைச் சாம்பலாக்கியதும் மன்மதனை நுதல்விழியினாலெரித்ததும் உமக்கொருபுகழின் பாலதோபூர்வத்தில் எங்களைநமது அங்கையிற்படைத்தருளிஎங்களுக்குத் தகுதியாகிய அரசுரிமையையுங்கடாட்சித்துபரிபாலனஞ்செய்யவும் விதித்தீர் மேலும் எங்களுடனொருவனாகநின்று அசைப்பிக்கின்றீர் அத்தகைய மகிமையினையுடைய தேவரீரிடகாரணங்களை எங்களாற்றெரிந்து போற்றவும் போதுமோவென்று யிவ்வாறுதேவர்களனைவரும் அன்பு மிகுதியினால் துதிக்கின்றதருவாயில் காளகண்ட மூர்த்தியாகிய சிவனாதன் அவர்களைக்கிருபையாகப்பார்த்து ஓ தேவர்களே நீங்கள் மிகவும்நொந்துமனம்வாடி வருந்தினீர்கள் ஆதலால் யித்தருணத்தில் உங்களுக்குவரங்கள் ஏதெனுந்தாவிருப்புற்றனம் வேண்டியதைக் கேட்டுக்கொள்ளக் கடவீரென்று பரமன் திருவுளம்பற்றியகாலத்தில் தேவர்களனைவரும் ஒருமுகமாய் வி

ண்ணப்பஞ் செய்கின்றனர், அடியோங்க ளனைவரும் யித்தினவளாயிற்
கொடிய செய்கைகளையுடைய அவுணவீரரால்படாதபாடுகளும்பட்டோ
ம் அவ்வருத்தங்களைப்போக்கி தேவரீர் பூர்விகமாக எங்களுக்குக் கடா
ட்சித்திருக்கின்ற செல்வங்களை மனக்கவலையின்றி அநுபவித்துவாழியிரு
ப்பதாகத் தம்மிடத்தில் ஒருவரம்பெறவேண்டினோம் அதனையும் விண்
ணப்பஞ்செய்து கொள்ளுவோம் பலவகைப்பட்ட சீவராசிகளைப் பெற்
றுந் தளராதகொங்கைகளைப்பெற்ற கன்னிகையாகிய பார்பதியாரை தே
வரீர் திருக்கலியாணஞ்செய்த காரணம் அவளிடத்தில்ஒப்பற்ற திருக்கு
மாரனைப்படைத்து துக்கசாகரத்திற் பட்டுவாடுகின்ற அடியோங்களை
க்கரையிற்சேர்த்து ஆளுகின்றதற் கேதுவன்றோ மேலும் யித்தகைய தி
ருவிளையாடல்களை தேவரீர் நடிப்பிக்கின்ற காரணங்களனைத்தும் அதற்
குரித்தாகவே தோற்றுகின்றது யிஃதன்றியும் ஆதிமத்தி யாந்தமும் அ
ருவமும் உருவும் ஒப்புவமையும் எதுவும்போக்குவரவும் யின்பதுன்ப
மும் யில்லாமல் சதுர்வேதங்களுக்கும் எட்டாதவராகவிளங்கும்நிர்ம
லக்கடவுளே ஒருசத்புத்திரனை தேவரீருக்கொப்பாக உம்மிடத்திற்படை
க்கவேண்டுமென்று பலதிரம்வணங்கிக் கேட்டுக்கொள்ளும் பிர்மதேவ
ன் முதலாகிய தேவர்க்கள் விண்ணப்பங்களைக்கேட்டருளி அவர்களைப்
பயப்படாதீர்களென்று ஆதரித்து உங்கள்மனக்கவலை முற்றும் பரிகரித்
துச் சுகத்திலிருத்தவல்ல திருமகனைப் பெற்றுத் தருவோ மென்று திரு
வாய்மலர்ந்தனர், அதன்பின்பு சற்றுநேரத்தில் அந்திவண்ணனாகிய பர
மேஸ்பரர் கிருபையுற்று பேரறிவாளரால் தியானிக்கப்பட்ட தமதுய
ழையகோலமாகிய சண்முகங்க ளுடன்தோற்றி எதிரிலிருக்கின்றமகா
விஷ்ணு முதலாகிய தேவர்க்களனைவருந் தமது மனந்திடுக்கிட்டு அற்பு
தத்தராய் கர்த்தன் கிருபையின் பெருக்கினைநினைந்து நினைந்து புகழ்ந்
திருக்கின்றகாலத்திற் பராபரமூர்த்தியானவர் தாம்வகித்திருக்கின்ற திரு
முகங்களாறினும் பிறகாசித்திருக்கின்ற நுதல்விழிகடோறும்ஒவ்வொரு
அனற்பொறியினை உண்டாக்கினர், யிவ்வாறுபரமசிவத்தினது நெற்றிவி
ழிகளிற் பிறந்தபொறிகளாறும் பிர்மதேவன் முதலானவர்கள் நெருங்
கப்படாமையாக அதிகச்சுவாலையைவிசி பூமண்டலம் அண்டகோளகை
முற்றுஞ்சரோலெனப்பரவி சங்கு சக்கரந் தண்டங் கட்கங் கோதண்ட
மென்னும் பஞ்சாயுதபாணியாகிய மகாவிஷ்ணு பிர்மதேவன் யிவர்களா
ற்கணித் தறிவதற்கரிய சோதிமயமாகிய பொறிகளானவை ஆலகால விஷ
ம் வடவாமுகாக்கினியும் ஏகமாய் உலவுவதைப்போல் பூமண்டலமெவ்
லைமுற்றும் விறிவானவெல்லையைமறைத்து மூதண்டகோளகை பரியந்த
ம் பரிபூரணமாய் நிறைந்தும் பார்பதியைவாமபாகத்திற் கொண்டருளி

ய சிவபிரான் கரத்திலேந்திய மழுவானது ஊழிகாலத்தில் வெளிப்பட்டு
உலகங்களனைத்தினையும் நாசஞ்செய்து நிறைந்ததை யொப்பாகவுங்க
ர்த்தன் நுதல்விழியிற்பெருகிய அனலானது சகலவஸ்துக் களையும்வாட்
டி புவனங்களனைத்தினும் ஓங்கநின்றது, யிவ்விதமாகத் தழற்புழம்பா
னவை மேலோங்கி எழுந்ததறுவாயில் அகிலசராசரங்கள் முற்றும் நிறை
ந்துலவும் பிரசண்டவாயுவே முதலாகவேசமாறிக்குன்றிலையவும் மேலு
ம் அவற்றின் வெப்பத்தினால்அலைகளைமோதிச் சுருட்டுஞ் சத்தசாகரங்க
ளுங் கொதிப்பெடுத்துச்சுவறி அடங்கவுஞ் சராசரப்பிரபஞ்சங்களைத் த
கிக்கவல்ல வடவாமுகாக்கினியுந் தன்வெப்பமும் விருப்பும் அடங்கிம
ங்கவும் பூமிமுற்றுங்கரிந்து பொரிந்து வெடித்துத் துகளெழவுங் குல
கிரிகள்முதலிய பற்வதங்களானவை படபடவெனவெடித்துக் குன்றிக்கு
றையவும் ஆதிசேஷன்முதலிய நாகங்கள் அச்சுடுகையைப் பொறுக்கப்ப
டாமையால் நெளிந்துபுரண்டு பெருமூச்செறிந்து விஷங்களைக் கக்கிக்
கொண்டுசோரவும் அஷ்டதிக்குகளைத் தாங்கிநின்ற அயிராபதமேமுதலா
கியயானைகள் வாய்விட்டாற்றித் தியங்கி ஓடவும்அண்டங்களில் அடங்கி
யிராநின்ற உயிர்த்தொகைகளானவை நடுநடுங்கிப் படாதபாடுகளைப்பட்
டுத்திகைக்கவும் யிவ்வித அனற்தங்களைச் செய்யத் துடங்கியது, சேட்டீ
ர்களோ-சவுனகாதிரிஷிகளே ஆதியந்தமறியப்படாத பெருமையினையு
டைய பரமசிவத்தின் விழிகளினின்றுப் பெருகியதீயானது எவ்வுலகங்
களுக்கும் பேருளைக்காட்டி ரட்சிக்க உதித்தகாரணத்தினால் ஏதொருபி
ராணிகளையும் வதைசெய்யாமற் சராசரங்களைப் பயமுறுத்தி அலைத்தது
யிச்சரித்திரம்நிற்க சிவபிரான் யிடப்புறத்தில் வீற்றிருந்தபார்பதிதேவி
யும் அவ்வனற்பொறியினது வெப்பமானது தாக்கச் சரீரமுற்றினும் வி
யர்த்து மனங்கலங்கிச் சிங்காதனத்தினை விட்டிறங்கித் திருவடிகளிற் ரூ
ம்நிருந்த பாதசரங்கள்சத்தித்து ஒன்றுட னென்றுதாக்கத் தக்கதாகத்
தாம்வாசஞ்செய்யும் அரமனையைநோக்கி ஓடினள் அத்தருணத்தில் எதி
ரிலிருந்தமகாவிஷ்ணு பிற்மதேவன் முதலிய தேவர்க்கள் அனைவரும்
அத்தழற்பிழம்பின் விக்கத்தைக்கண்டு அஞ்சின வர்களாய் பூற்வத்திலெ
ழுந்த ஆலகாலவிஷத்தின் கொடுமையினாற் பட்டதுன்பத் தினைப்போல
வே ஒருவருடன் ஒருவர் கூடாமல் தனித்தனியே புறங்கால் புட்டத்திற்
ருக்க வேகமாய்ப் பலதிக்குகளினுஞ்சுற்றிச்சுற்றிஓடினர்,யிவ்விதமாகச்
சொற்ணமாளிகைப்புறங்களில்மறைந்திருந்தவிண்ணவர்கள்மனதில்அன்
பானதுஅண்டப் பெருமூச்சுகளைப்பெருக்கி மெல்லமெல்லச் சபையி
ல்வந்து சேர்ந்தனர், யிவர்கள்போனதும் மீண்டதும் எப்படிக்கிருக்கி
ன்றதெனில் வலையினிடத் தகப்பட்டுப் பலதிசையினுந்தாவி யலைகின்ற

மானினங்களைப் போலத்தேவனா அனலமானது சூழ்ந்த காலத்திற் பய ந்து திருமாளிகையினை வளைய வளையஓடிப் பதுங்கினவர்கள் தன்னினத் தைப்பிரிந்த காக்கையானது மீளத்தேடிக் கூடுமாறுபோலத்திரும்பின வர்களாய்க் கிருபா நிதியாகிய திரிநேத்திரதாரியைச்சேர்ந்தனர், கேட்டீர் களோ சவுனகாதிரிஷிகளே யிவ்விதமாகக் கர்த்தன் நுதல்விழிக் கனலுக் காற்றுமற் பலதிசையினும் பாறினவர்கள் அனைவரும்மீண்டு திருச்சன் னிதானத்திற் கூடியவுடன் சதுற்புயங்களையுடையஞானநாயகனைப்போ ற்றிசெய்து யிதனைமுறையிடத் துடங்கினர், கர்த்தனேகொடியவலியினை ப்பெற்றபாதகராகிய ராட்சதரால் வருந்துகின்ற துன்பங்களைப்போக் கி ஆள்வதற்காக ஒருபுத்திரனைக் கடாட்சித்து ரட்சிக்கும் படிக்குத் தே வரீரைக்கேட்டுக்கொண்டனம் அதற்குமாறாக அளவுபடாத அனற்பொ றியினைத் தந்தபடியாற் கர்த்தனே கேட்டருள்கயாங்கள் எவ்விதத்திற் பி ழைத்துவாழ்வது மேலும் முன்னொருகாலந் தமதுயிடப்பாகத் தெழு ந்தருளியிருக்கின்ற பராசத்தியினது விரல்களிற்பெருகிய கங்கையான து அலைகளைவிசி எவ்வுலகங்களினும் பரந்து அலைத்ததைப் போலத் தம து நுதல்விழியினின்றும்எழுந்ததாபாக்கினியானது எத்தலங்களினும்பூற் தியாகமூடி சுற்றைசுற்றையாய் அதிகசுவாலையைவிச அந்தவெப்பமான து எவ்வெவ்விடங்களினும் பரந்து வாட்டுவதினால் பிராணிகள் நாசப்ப டுகின்றது ஆகையால் தேவரீர் தயைசெய்து கணப்போதில் அப்பொறிக ளைத்தருவிக்காமற் பராமுகமா யிருப்பீராகிற் சராசரப்பிறபஞ்சங்கள் முற்றுங்கேடுபடும் யிதுவல்லாமல் மிகுதிப்பட்ட அனலுக்குச் சகிக்கப் படாமையால் பயந்து பலதிசையினும் யிறைந்தொளித்த நாங்கள் மீள வுந் தேவரீர் திருவடிகளிற் றஞ்சமடைந்தோம் கர்த்தனே நீர்அறிய அடி யோங்களை ஆதரிக்கவல்லவர்கள் எங்கெனுமுண்டோ அல்லலிற் பட்டு வாடும்மனதையுடைய எங்கள் வருத்தங்கள் முழுமையும் அதிசீக்கிரம த்தில்நீக்கி ரட்சிக்கக்கடவை அல்லது எங்களிடத்தில் தயையின்றி வருத் தநினைப்பீராகில் அதைத்தடைசெய்வதற்கு யாவராலும்முடிவதன்று ஆ தலால் ஆதிசேஷன் சிரத்திற்றங்கும் பூமண்டலத்தினும் விண்ணகத்தி னும் பரந்து தகிக்கின்ற யிவ்வனலைப்போக்கி எங்கள்குறைகளைத் தவிர் த்து ரட்சிக்கவேண்டும் சந்திரசடாதரக்கடவுளேயென்று பலவாகப்போ ற்றிவேண்டினர், கேட்டீர்களோ- சவுனகாதிரிஷிகளே யிவ்விதமாக அந் தணர் முதலாயினர், வழிபடும்பெருமை யினையுடைய பிர்மதேவன் மு தலாகிய தேவர்கள் கரங்களைக் கூப்பிநின்று முறையிட்டுக் குறையிரந்த காலத்திற் குளிர்ந்த செலப்பெருக்கினையுடைய கங்காபவானியைத்திருச் சடையிற் றரித்தருளிய கர்த்தனானவர் பயங்கொள்ளாதீர்களென்று கைய

மைத்து ஆதரணைசொல்லிய பின்பு மகம்மேருவை வில்லாகக் கொண்டு திரிபுரங்களைவென்ற பரமனானவர் புதிதாகக்கொண்ட தமது திருமுகங்கள் ஆறினையும்மறைத்து எதாப்பிறகாரம்ஒப்பற்ற சிறப்பினையுடைய தமது திருமுகமொன்றினைத்தாங்கி பழையபடிக்கு அருளுருவுகொண்டு விளங்கினவராய் முனம்வசித்த சண்முகங்களினிடத்திற் பிறகாசித்திருந்த நுதல்விழிகளின்மூலமாகத் தமது அருட்டிறத்தின் மகிமையினாற் படைக்கப்பட்டு பூமிஆகாய எல்லையெங்கும் நிறைந்திருந்த அனற்பொறிகளைத் தமது திருமுன்வருவதாகக் கற்தன் திருவுளத்திற் கொண்டனர், கேண்மீர்களோ- சவுனகாதிரிஷிகளே யிவ்வாறுதேவர்கள் முதலானவர்படும் வருத்தத்துக் கிரங்கி அந்திவண்ணனாகிய சிவபிரான் கியாபகங் கொண்ட மாத்திரத்தில் அண்டாண்டங்களெங்கும் நிறைந்து உற்பாதங்களைச்செய்திருந்த பெரிதாகிய அனலமானது எதாப்பிறகாரம் ஆறு பொறிகளாக உருக்கொண்டு சொலித்து வந்து பரமன் திருமுன்நின்றதை மகிழ்ச்சியாகப்பார்த்து தமது சபையில் நெருங்கியிருக்கின்ற தேவர்கள் கூட்டத்தில்விளங்குஞ் செயசாலிகளாகிய வாயுஅக்கினி தேவர்கள் முகங்களைப்பார்த்து கிருபையுற்றுயிதனைச் சொல்லுவதாயினர், நீங்களிருவரும் யிந்தஅனற்பொறிகளை பத்தியுடன் தாங்கிக்கொண்டு போய்ச் செலப்பெருக்கினையுடைய கங்கையாற்றினிடத்தில் விடுவீராகில் அவள் அதுகளைச் சரவணப்பொய்கையிற் சேர்ப்பள் யிதுநீங்கள் செய்யவேண்டும் பணிவிடையென்று எமனை உதைத்து வாட்டிய திருவடிகளைப் பெற்ற கற்தன் திருவாய்மலர்ந்தகாலத்தில் அவ்விருவரும் எழுந்து சிவபிரான் அருகிற்போய் மும்முறைவலம்வந்து பணிந்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு போற்றினவர்களாய்த் திரேகமெங்கும் நடுநடுங்க மனவாட்டத்தினைக்கொண்டு யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், கற்தனே ஒருநொடிப்போதில் யிவ்வுலகங்களனைத்திலும் நிறைந்துசுவாலையைவீசிப்பெருகிய யிப்பொறிகளானவை தேவரீர் அனுக்கிறகத்தின்மகிமையினாற் சிறுகக்காட்டநின்றது ஆதலால் அடியோங்களால் யிவற்றினைப்பரித்துப்போவது மிகவும் அரிதரிதென்று முறையிட்டு மேலுஞ் சொல்லுகின்றனர், சற்வசங்காரகாலத்தில் உலகங்கள் அனைத்தினையும் அடக்கவல்ல மகிமையையுடைய தேவரீரிடத்தில் உதித்தபொறிகளின் மகிமைகளை நினைக்குமிடத்திற் பூமிதேவிக்குக் கணவனாகிய மகாவிஷ்ணுவுஞ் சதுற்முகப். பிற்மாவும் ஒருகணப்போதேனுந் தாங்கும் வலியினைப்பெற்றவரன்று பூற்வத்திற் திருப்பாற்கடலி னிடத்துதித்து உலகங்களைஅலைத்த ஆலகாலவிஷத்தினை பொத்துப்பெருகியசுடரினைக்கண்டமாத்திரத்தில் தாபரிக்கப் படாமையாற் கலங்கி திசைகெட்டோடி ஒளித்

தோம் யிப்பொறிகளின் சமீபத்திற்போகவும் மனம்நடுங்குகின்றது அப்படிக்கிருக்க அவற்றினை அடியோங்கள் சிரத்திற்றாங்கிக்கொண்டுபோவதற்குக்கூடுமோ அல்லது யிந்ததீட்சணியமுள்ள அனற்பொறிகளைக்கிட்டநினைக்கின்ற முன்னிலையில் மனம்வெம்பி வாடுகின்றது மல்லாமல் திரோகமெங்கும் வியர்க்கின்றது யிப்படிக் கிருப்பதால் எவ்வித தயிரியங்கொண்டு நாங்கள் தாங்கவல்லோமென்று முறையிடுகின்ற அக்கினி வாயுதேவனாக் கிருபையாகப்பாத்துச் சிவந்த சடாமண்டல தாரியாகிய சிவபிரான்சொல்லுவார், ஒருநொடிப்போதில் உலகங்கள் முற்றினும்பரந்து நெருங்கிய யிப்பொறிகளைச் சுமந்து கொண்டுபோய் சங்கையில் விடுவதற்கு உங்களிருவருக்கும் வலியுண்டாகக்கடவதென்று அருள் புரிந்தனர், யிதைக்கேட்ட மாத்திரத்தில் நல்லகாரியமெனச் சம்மதித்து பரமனைத்துதித்தனர், யிக்காரணங்களைக் கண்டவுடன் பிற்மதேவன் முதலாகிய தேவர்க்கள் மன்வருத்தங்களைப்போக்கி யின்றுடன் நமது துன்பங்களனைத்தும் நீங்கிற்றென்னுங் களிப்பினால் திரோகம்பூரித்து முகமலர்ச்சிபெற்றிருக் கின்றவர்களை தேவதேவோத்தமனாகிய சிவபிரான் பாத்தருளி யிந்தமகிமையுள்ள பொறிகளானவை சரவணப் பொய்கையிற் சேர்ந்தபின்பு வலியிற்சிறந்த குமாரனாக உருக்கொண்டு வெளிவந்து மகதயிஸ்பரியங் களைப்பெற்று உலகங்களை அலைத்திருக்கின்றசூரபதுமன் குலநாசஞ்செய்வன் ஆதலால் யினிமேற் சங்கையின்றி பலரும்போய் வருவீர்களென்று எமதிறைவனாகிய பரமன் திருவாய்மலர்ந்த வுடன் பிழைத்தோம் பிழைத்தோம் யினியாதொரு குறைகளுமின்றிவாழ்வோமென்னுங் களிப்புடனெழுந்து வீரவெண்டய மணிந்த சிவபிரான்திவ்வியசரணார விந்தங்களிற் சேவித்துப்போற்றி விடைபெற்று அத்திருச்சபையைக்கடந்து வெளிவந்திருக்கின்ற காலத்தில் வாயுவும் அக்கினியும் ஆதிதேவன் பாதகமலங்களில் வணங்கி அவனருளின் திறத்தினால் வாயுதேவன் முந்தித்தெய்வீசம்பொருந்திய அனற்பொறிகளைப் பத்தி விசுவாசத்துடன் யிருகரங்களினாலும்யேந்தி சிரத்திற் கொண்டு அக்கினிதேவன் பின்பற்றிவரப் பிறையாணப்பட்டு பரமன் வாசஞ்செய்யுஞ் சொற்னமயமாகிய நகரத்தினைக்கடந்து அப்பொறிகளைத் தாங்கிச்செல்லும் வாயுதேவனைகண்ட பிற்மதேவன்முதலாகிய தேவர்க்கள் சொல்லுதற்கரிய மகிட்சியுடன் யிதனைப் பேசுகின்றனர், சுயஞ்சோதி வடிவினையுடைய பரமனானவர் யிதற்குமுன்னமொருகாலம் நமக்கடுத்தஅகந்தையைப்போக்கி ஆளும்பொருட்டு யிவ்வுலகின் கண்படைத்தருளிய வீரபத்திரக்கடவுளைப்போலவே யிக்காலத்தில் நாமனைவரும் பிழைக்கும்படிக்குத்தமது நுதல் விழியின்மூலமாய் அனற்படிவம்பெற்ற திருக்குமா

ரணைப்படைத்தனர், மேலும் பழையபடிக்கு நமது அயிசுரியங்களையுஞ் செங்கோலின் முயற்சியையும் பெற்றுவாழ்வுஞ், சூரபதுமன் குலநாச மற்றுப்போகவும் யின்னமுஞ் சிலகாலமிருக்கின்றதாற் சிவபிரான் அதைக்கருதி தன்னையொத்த திருமகனைச் சரவணப் பொய்கையினிடத்தில் வளர்வதாக அனுக்கிரகஞ்செய்தனர், மேலும் திரிபுராதிகள் நகரங்களை எரித்தநிற்மலக்கடவுளாகிய பரமனானவர் அனுக்கிறகஞ்செய்து வருகின்றகாரணங்களை நோக்குமிடத்திற் கிருபையின்பாலதாகவே யிருக்கின்றது அதற்குத்திஷ்டாந்திரம் அனற்பொறியினைப் படைத்ததும் நினைத்தற்கரிய கடாட்ச விஷீணியத்துக் கேதுவாகவே காணநின்றதென்று தேவர்கள் சந்தோஷிப்பெருக்கினால் யிவ்விதங்களாகப் பலபலவார்த்தைகளைப்பேசினவர்களாய் யினிமேல் ராட்சதர்வகையறமாண்டு போவதற் கையமில்லை வாடிவருந்தியிருந்த நமது குறைபாடுகளனைத்துந் துலந்து நன்மையயச்குமாதலால் அதுபரியந்தம் நாமுஞ் சரவணப்பொய்கையினிடத்திற் காத்திருப்போமென்று தேவர்களனைவரும் ஒருமைப்படப் பேசிக்கொண்டவர்களாய் அதிகவெப்பத்தினைக்கொண்டு சொலித்திருக்கும்பொறிகளை வாயுதேவன் சிரத்திற்றாங்கி முன்னடக்க லட்சுமிதேவியைமார்பினிடத்தில் வைத்திருக்கும் மகாவிஷ்ணு முதலாகிய தேவர்கூட்டமானது வெள்ளியங்கிரியினைக்கடந்துபின்துடர்ந்தனர், இவ்விதமாக விஷ்ணுவாதியாகிய விண்ணவர் சந்தோஷி வார்த்தைகளைப் பேசிக்கொண்டு நடக்குமுன்னிலையில் ஒருநாழிகைப்போதாயிற்று அத்தருணத்திற் பரமன் விழிகளினுதித்த அனற்பொறிகளைத் தாங்கிச்செல்லும் வாயுதேவன் அவற்றின் வெப்பமானது சிரத்திற்றாக்கத் தாபரிக்கப் படாமையால் மிகவும் வருந்தி சந்திரசடாதரக்கடவுளினது கட்டளையின் படிக்குத்துரிதமாய் அக்கினிதேவன்வசத்தில் ஒப்பிக்கஅவனும் அதிகபிறீதியுடன் தன்சிரத்திற்கொண்டு பாதங்களைப்பெயர்த்து ஒருஅடிவைத்தமாத்திரத்தில் தீப்பொறியின் சுடுகைமேலிட்டுக் கொளுத்துவதினால் அக்கினிதேவன் தனது வெம்மையடங்கிச் சரீரம்வெம்பி வெயர்த்துத் துடிக்கத் தக்கதாகவருந்தி மற்றொருஅடிவைத்துப் பொறுக்கப்படாமையால் அதிக்கிரமத்திற்றுவி ஆரவாரங்களுடன் பெருகுகின்ற கங்கையினிடத்தில் விட்டனன் யிப்படிக்கி அக்கினிதேவன்வருந்தி அனற்பொறிகளைவெள்ளத்திற் சேர்த்தமாத்திரத்தில் பூர்வத்திற் பரா சத்தியினிடகரத்தில் நின்றும்பெருகிய நீர்த்தமானது மேலிட்டுஉலகங்களுக்குஉபத்திரவங்களைச்செய்யப் பரமனிரங்கித் தமது திருச்சடையிலொன்றை விசிமீறிவரும் பிரவாகத்தினை வறளச்செய்ததுபோலக் கங்கையின் செலப்பெருக்கானது சுவறிக்காட்டியது யித்தகைய வருத்தம் நேர்ந்தபோதினும் பரமன்

கட்டளையினால் வந்ததாதலால் அதிகவேகங்கொண்டு அலைகளென்னுங்கரங்களினால் அப்பொறிகளையேந்தி தாலாட்டிச்சென்று செந்தாமரை மலர்கள் புஷ்பித்து விளங்குகின்றதைப் போலக்காட்ட ஒருநாழிகைப் போதிற் சரவணப்பொய்கையினிடத்திற் சேர்த்தனள், அத்தறுவாயிற்பின்தொடர்ந்துவந்த மகாவிஷ்ணு பிர்மதேவன்முதலிய தேவர்க்களனைவருஞ் சரவணப்பொய்கையினிடத்தில் வந்தவர்களாய் அனற்பொறிகள் விளங்குவதைக்கண்டு மனமகிழ்ந்து நற்காரியந்தங்களுக்குச் சித்திக்க விருக்கின்ற காரணத்தினைத் தெரிந்தவர்கள் அதுமுற்றுப் பெறுமளவும்மிடைவிடாது காத்திருப்ப வரைப்போல அப்பொய்கையின் கரைமுற்றினுஞ் சூழ்ந்திருந்தனர், சேட்டீர்களோ - சவுனகாதி ரிஷிகளே யிவ்விதமாகஅதிகசந்தோஷத்தினைக்கொண்டவர்கள் கொடியராட்சதப்பாதகர்களினால் ஏதேனும் உபத்திரவம் நேருமென்னுஞ் சங்கையினால் விஷ்ணு பிரமனுந் தேவேந்திரன் முதலிய திக்குப்பாலகர்களும் விண்ணவர்கூட்டமும் மற்றையதிக்குகளில் வாசஞ்செய்பவரும் ஏகமாகக்கூடிச் செலசமற்றியாய்ப் பலமலர்கள் நிறைந்து விளங்குஞ் சரவணப் பொய்கையை அடரச்சுற்றிக் கொண்டு காத்திருந்தனர், யிவர்கள் சரித்திரம் நிற்க பார்பதியார் திருவவதாரஞ்செய்தருளிய இமையகிரியினது சாரலிற்செந்தாமரை வெண்டாமரை அல்லிமுதலிய மலர்கள் நிறைந்ததாய் அந்தங்கள் நாரைகளாதியாகிய பட்சிசாலங்கள் செவிகளுக் கினிமையாகத் தொனித்திருக்க முதலைவரால்சேற்கெண்டையினங்கள்மிகுத்துத் துள்ளவும் கரைகள்முற்றுந் தேவதாரம் பாரிசாதங் கொன்றை வில்வம் ஆல் முதலிய தருக்கள்மலிந்து விசாலமாய் மதுரமாகிய செலசமற்றிபெற்று மூழ்கினவரைப் பவுத்திரமாக்கும் மகிமையுள்ள சரவணத்திற் சோதிமயமாய் வெப்பமிகுத்த ஆறுபொறிகளுஞ் சேர்ந்தமாத்திரத்தில் அவற்றின் சுவாலையினால் அப்பொய்கையானது அல்லோல கல்லோலப் பட்டபோதினுந் தேவதேவனாகிய சிவபிரான் கடாட்ச வீட்சண்ணியமகிமையினாற் குறைவின்றிப் பழையபடியே நிறைவெய்தி யிருந்ததுமன்றியில் வெவ்வியகனலைப்போலச் சொலித்துக்கொண்டு வானவெல்லையிற்செல்லுஞ் சூரியபகவானுக்குப் பிறியமுள்ள வெண்டாமரைகளுடன் செந்தாமரைமலரையும் படைத்துத் தாங்கியிருக்குந் தன்மையைப்போலவே சரவணப்பொய்கையானது சிவபிரான் நுதல்விழியினிடத்தெழுந்த அனற்பொறிகளையுந் தன்னிடத்திற்பரித்திருந்தது யிப்படிக்கு அருவாய் உருவாய்ப் பலவாய் ஏகமாய்ப் பரப்பிரம சொரூபமாக விளங்குஞ் சோதிப்பொறிகளானவைபின்பு ஒருரூபத்தினைக்கொண்டுதிருவைவிளங்குஞ் சண்முகங்களையும்பன்னிருகரங்களையும்படைத்த ஒப்பற்றமுருகக்கடவு

வானவர்உலகங்களனைத்தும்பிழைத்தற்பொருட்டுத்திருஉருவினைப்பெற்றுவிளங்கினர். கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே யித்தகையகோலங்கொண்டுசிவசுப்பிரமணியதேவர்தோற்றப்பட்டதறுவாயில்விண்ணிடத்திற்றேவ துந்துமி முதலிய வாத்தியங்கள் பேரொலியைக்காட்டி முழங்கவும் பூர்விகமாகவிருக்கின்ற சதுர்வேதங்களுந் துதித்து ஆரவாரங்களைச்செய்யவும் மகாவிஷ்ணு பிர்மதேவன் தேவேந்திரன் முப்பத்துமுக்கோடி தேவர்க்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் நாகர் முதலானவர்கள் பரிமளமிகுத்த பாரிசாதபுஷ்பங்களை வாரிவாரிச் சொனைமாரியைப்போலச் சிவகுமாரன் மீதில் மங்களகரமாகத்தூவி கந்தனே அடியோங்களிடத்திற் கிருபையுற்றுப் பாதுகாத்து ரட்சிக்கவேண்டுமென்று பலவிதங்களிற் போற்றிச் சரவணப்பொய்கையின் கரையின்பேரில்நெருங்கி வளையவளையச் சுத்திச்சுத்திக்கரங்களைக் கொட்டிக் கொண்டு சந்தோஷமிகுதியினால் யிவ்விதக்களிபாடலைக்கொண்டாடினர், கேட்டீர்களோ- சவுனகாதிரிஷிகளே சிவசுப்பிரமணியதேவர் தோற்றத்தினைத் தெரிசித்த மாத்திரத்தில் அவர்கள் கொண்டமகிட்சியின் பெருக்கினை யிரண்டாயிரம் நாக்களைப்படைத்த ஆதிசேஷனாலுங் கண்டறிந்து சொல்லப் படுவதோ ஆதலால் ஒருநாப்பெற்ற என்னாற் கூடியவளவிற் பேசினோம் யிவ்விதமாகச் சகலருஞ் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்க் கரங்களைக்கூப்பிக்கொண்டு துதித்திருந்தனர், யிஃதன்றியும் பிரமன் விஷ்ணுமுதலிய சிறந்ததேவர்களுக்கின்றி தேவதேவனாகிய சிவபிரானுக்கு மாத்திரம் விளங்கும் ஆறுநுதல்விழிகளும் யித்திருக் குமாரனுக்குச் சண்முகங்களாகக் காட்டியதென்று பலருஞ்சொல்லிக் கொள்வதாகப் பலமலர்கள் விகஷித்திருக்குஞ் சரவணப்பொய்கையினிடத்தில் வீற்றிருக்கின்ற எமதுகர்த்தனானவர் பிராணிகளைப் பாதுகாத்து ரட்சிக்கும்பொருட்டுப் புராதனக் கடவுளுருவாகிய சண்முகங்களைப்பெற்று விளங்கினர், யிவ்விதமாகச் சிவசுப்பிரமணியதேவர் திருவுருக் கொண்ட தறுவாயிற் சகலபுவனங் களினும் நிறைந்திருக்கின்ற பிராணிகளனைவர்களுக்குந் தற்செயலாய் அதிகசந்தோஷங்களுண்டாய் பலநற்குறிகளையுங்காட்டியது அளவற்றயுகங்களாகக்கொடுங்கோலினைச்செலுத்திவருகின்ற சூரபதுமன் முதலாகியராட்சதப்பாதகர்களுக்கு மரணத்துக்கேதுவாகிய துற்சகுனங்கள் மென்மேலுந்தோற்றப்பட்டதுயிவைநிற்கவேதங்களின்பொருளாய்மனோவாக்கினால்நிதானித்தப்போற்றுதற்கரிதாய்எங்கும்பரிபூரணமாகவிளங்கும்நிர்மலக்கடவுளானவர் சண்முகங்களைப்பெற்ற குமாரனாகவுருக்கொண்டுதிருபாரோக்கத் தினைப்பரப்பி சரவணப்பொய்கையினிடத்தில் அலர்ந்தி

ருக்கும் பரிமளமிகுத்த தாமரைக்கமலத்தினைப் பீடமாகக்கொண்டு வீ
ற்றிருந்த சம்பிரமசாலத்திற் புராணிகர் சந்தோஷிப் பெருக்கினாற் அத்
தலத்திற் றோற்றுகின்ற காட்சிகளைக்குறித்துச் சிலஉவமானங் களைப்பே
சுகின்றார், பருத்துவானத்தினை அளாவஉயர்ந்து சரவணப் பொய்கையி
னைச் சூழவிருக்கின்றவிருட்சங்கள் பலகால்களாகவும் அவற்றிற்கிளைத்து
த்தழைகள் மிகுதியாய் நீண்டு ஒன்றுடனொன்று சேர்ந்து பின்னிக்கொ
ண்டு யிருக்குங்கிளைகளானவை சூரியனது வெப்பத்தினைப் போக்கிக் கு
ளிர்ந்த நிழலினைத்தருவதாக வானத்தினைமூடச் செய்தமைத்த பச்சைப்
பந்தலைநிகர்க்கவும் அதனிடையில் விளங்குந் தளிர்களும் புஷ்பக்கொத்
துகளும் பிஞ்சு காய்கனி வர்க்கங்களானவை நவரத்தினங்களினாற் சோடி
த்திருக்கின்ற சித்திரப்பெருக்கினையும் புஷ்பச்சரங்களே முதலிய வகைக
ளினால் அணிபெறத்திருத்தி யிருப்பதை நிகர்த்துக் காட்டவும் யிவ்வித
உவமை அலங்காரங்களைப்பெற்றுக் குளிர்ந்த நிழலினைப் பரப்பி யிரு
க்கின்ற மலர்ப்பந்தலின் நடுப்பிறதேசத்திற் சரவணப்பொய்கை யாகிய
திருமாளிகையில் எமதையனாகிய சிவசுப்பிரமணியதேவர் எழுந்தருளியு
ம் வானத்தினைஅளாவநிற்கின்ற அஷ்டகுலா சலங்களானவை வயிரக்கால்
களாகவுஞ் சமுத்திரஞ்சூழ்ந்த பூவட்டமானது அடிப்பீடமாகவும் வளை
ந்திருக்கின்ற கடாகளானவை நாற்புறங்களினும் அமைத்திருக்கின்ற பல
கைகளாகவும் அதன்மீதுபருத்து நீண்டுதழைத்துக் கவிந்திருக்கின்ற கு
ருந்தம் கொன்றை பாதிரிமுதலிய தருக்களின் கிளைகளினால் மூடப்பட்
டிருக்கின்ற வானமானது சித்திரித்திருக்கின்ற விதானமாகவும் பளிங்கி
னையொப்பத்தெளிந்து மதுரமிகுத்திருக்கின்ற செலப்பெருக்கானது ப
ஞ்சணையாகவும் அதன்மீது அலர்ந்திருக்கின்ற தாமரைமுதலிய புஷ்பங்
களானவை மலர்ப்பாயலினைப்பரப்பி யிருப்பதுக் கிணையாகவும்யிவ்வி
த அலங்காரப் பெருக் கினைக் கொண் டிருக்கின்ற சரவணப் பொய்கை
யென்னுஞ் சிறந்த மஞ்சத்தின்மீது பள்ளிகொண் டிருக்கின்ற குமார
தேவரானவர் தமது திருவடிகளினொன்றினையூன்றி மற்றதை அதன்மீதி
ற்சேர்த்து அசைத்துக்கொண்டிருந்தனர், யிதுவுமல்லாமற் சிரோரத்தி
னங்களானவை சொலித்திருக்கும் பணமகுடங்களையுடைய அஷ்டமா
நாகங்களும் ஆதிசேஷனுஞ்சிங்கமுகம் பெற்றதாய்அமைந்திருக்கின்ற
கால்களை நிகர்த்துக்காட்டவும் பூமிதேவியினதுமார்பிலணிந்திருக்கின்ற
வயிரப்பதக்கத்தினைநிகர்த் துவிளங்குஞ்சரவணப்பொய்கையானதுமல
ரினாலமைத்தசிங்காதனத்தைப்போற்றோன்றவும் நவக்கிரகங்கள் இராசிக
ள்முதலிய நட்சத்திரங்களானவை மேல்விளங்கும் முத்துப்பந்தலாகவு
ம் யித்தகைய வளப்பங்களைப் பெற்றிருக்கின்ற சரவணமென்னுஞ் சி

ந்ரபீடத்தின்மீது உமையவள் புத்திரனாகிய சிவசுப்பிரமணியக்கடவுளா
னவர் எழுந்தருளி சமுத்திர ராசன்பிருதகாலத்திற் சூரியனாகிய கண்ணா
டியினைக் காட்டக்கண்டு மகிழ்ந்திருந்தனர், யிவையன்றியும் பூமிதேவி
யினது யிதைய கமலம்போல் உலகமத்தியிற் றோற்றநின்ற சரவணப்
பொய்கையினிடத்திற் பரிமளமிகுத்ததாய் அலர்ந்திருக்கின்ற கமலபீட
த்தினிடத்தில் வீற்றிருக்கின்ற பாலசுப்பிரமணியதேவர் தோற்றமானது
யெப்படியிருந்ததெனில் பேருருவிலைவாய்ந்த மாய்கையானது மீதியி
ருக்கின்ற மனத்தின்கண்சூக்குமமாகக்காட்டுஞ் சுடரினது உச்சியினும்
பொருந்தி நடிப்பிக்கவல்ல பரமேஸ்பரனைப்போலவும் அலைகள்மிகுத்
து வளர்ந்திருக்குஞ் சமுத்திரமத்தியில் விளங்குஞ் சரவணப் பொய்கை
யினிடத்தில் அலர்ந்திருக்கின்ற கமலங்களினொன்றின்மீது குமாரதேவ
ர் வீற்றிருக்கின்ற காட்சியினைச் சொல்லுமிடத்திற் கோளமாகக் கவிந்தி
ராநின்ற அண்டமென்னுந்தேவனது யிதையகமலப் பதியினைவிரும்பி
தமது தாதையாகிய பரமன் ஆதியில் வாசஞ்செய்திருந்ததைப்போலவு
ம் அப்பொய்கையினிடத்திற் படர்ந்திராநின்ற தாமரையினது பசியஇலை
களின்மீது திவலைகளானவை முத்தினங்களைப் போற்காட்டுவது தாரகா
கணங்களுக்கிணையாகவும் அலைகளினாலெறியப்பட்டு அசைந்திருக்கு
ங் கொடிப்பாசிகள் காளமேகத்தினைப்போலவுஞ் சுற்றினும் அலர்ந்து
பிரகாசித்திருக்குந் தாமரைக்கமலங்கள் சாச்சல்லியமாகிய கிரணங்களை
வாய்ந்த சூரியர்களாகவும் அவற்றின் நடுப்பிறதேசத்திற் றோற்றநின்ற
மலரானது ஞானசூரியனைப்போல விளங்க அதன்கண் சிவபிரானைப்
போலச் சுப்பிரமணியதேவர் வீற்றிருந்தும் மகாவிஷ்ணுபிரமன் மேக
வாகனனாகிய இந்திரன் தேவர்கள்முதலிய சகலரும் பக்கங்களிற் காத்
திருக்க விருட்சங்கள் மிருகங்கள் பட்சிகளாதியவனைத்துஞ் சூழக்குமா
ரதேவர் தாமரைப்பீடத்தில் வாசமாயிருந்தகாட்சியானது ஆதிகாலத்திற்
பரமசிவமானது மன்னுயிரனைத்தினையுஞ் சிருஷ்டித்து கமலத்தின்கண்
ணெழுந்தருளியதுக் சோக்கவும் செலசமத்தியாய் அலைகளை எறிந்து
தெய்வத்தன்மை பொருந்திய சரவணப்பொய்கையினிடத்தில் விசஷித்
திருக்கின்ற தாமரைக்கமலத்தினிடத்தில் உலகங்களுக்கு நன்கினைக்கடா
ட்சிக்க உற்பவத்திருக்கின்ற பாலசுப்பிரமணியக் கடவுள் வீற்றிருந்த
தோற்றமானது பின்னுமெப்படிக் கிருந்ததென்றால் பிற்காலத்திற் சது
ர்முகப் பிரமனைச் சிறையிலடைத்துப் பஞ்சபூதிகளினால் உருப்பெறு
ம்பிராணிகளைப் படைப்பதாகப் பொன்னந் தாமரைப்பீடத்தில் அமர
விருக்கின்றதற்கு நிகராகவுந் தாமரைமலர்களினொன்றின்மீது எழுந்த
ருளியிருக்கின்ற முருகக்கடவுளைச்சூழ வண்டினங்கள் ரீங்காரத்தொனி

களைச்செய்து மோய்த்திருக்கச் சாவணப்பொய்கையில் அலர்ந்து விளங்குந் தாமரைமலர்களானவ்வ எப்படிக்கிருப்பதெனில் தேவதேவோத்தமனே ஓரிடத்தன்றி எம்மையெல்லாம் பீடமாகக்கொண்டு வரிசைப்படவீற்றிருக்கவேண்டுமென்னுங் கோரிக்கையினால் நீரினிடையில்நின்று அரியதவங்களைச் செய்திருப்பதைப்போலத் தோற்றவுந் தெரிசித்தவர்கள் மனங்களை வாட்டியலைக்கவல்ல வடிவினையும் பவழத்தின் பிரகாசத்தினும்மேலிட்டு விளங்குந் திருமேனியையும்பெற்று சுயஞ்சோதிவடிவமாகப் பிரகாசிக்குங் குமாரதேவரைச்சூழ மணமிகுத்த தாமரைக்கமலங்கள் அலர்ந்திருக்குந் தோற்றமானது அப்பகவனிடத் திச்சைகொண்டு அணைவதாகச் சீதளத்தினால்வருத்தும் புனலில் முழுகிச்சூரியனை நோக்கி மெல்லியயிடையினைப்பெற்ற பலதருணமங்கையர் தவங்களைச்செய்துகொண்டு வளைந்திருப்பதை யொத்துந் தவளநிறத்தினைப்பெற்று விளங்குஞ் சங்கினங்கள் தாமரைக்கமலங்களின்மீது சேர்ந்திருக்கத்தேன்களைப்பெருக்கியிருப்பது எத்தகையதெனின் தெய்வீகம்பொருந்திய சரவணப்பொய்கையாகிய பெண்கொடியானவள் தன்னிடத்தி லெழுந்தருளியிருக்குஞ் சண்முகக்கடவுளானவர் பசியின்றி அருந்தும்படிக்குப்பலசங்குகளினிடத்திற் பால் நெய் யிவற்றினைமிகுதியாகச் சேகரித்து வைத்திருப்பதுக்கொப்பாகக் காட்டவுந் தாமரைமலர்களையும் அவற்றினிடத்துதித்த முத்தினங்களையும் மகரந்தச்சேற்றினையும் பரிமளமிகுத்த புஷ்பங்களில்னின்றெழுகுந் தேன்களையும்கரங்களையொத்தரிளைகளினால்வீசிவருவது எப்படிக்குத்தோற்றவதெனில் அப்பொய்கையானது சிவகுமாரன்பாதங்களையடைந்து பேரானந்தத்தினைப்பெற்றுவாழ்வதாகநினைத்து புதியமலர் சாந்தமுதலிய பூசாதிரவியங்களைக்கொண்டு அன்புடன் அருச்சிப்பதைப் போலக்காட்டவுஞ்செந்தாமரைமலர்கள்பதனழிந்து யிறைந்திருக்கின்றயிதழ்களானவைபக்கங்களி னிருக்கின்றயிலைகளின்மீதில்விழஅவைகள்அசைந்திருக்குங்காட்சியானதுஎப்படிக்கிருந்ததெனில்பூமிதேவியானவள்சரவணமென்னும்பசியபொற்பள்ளயத்தினிடத்திற்பிரகாசம்பொருந்திய பலரத்தினதீபங்களை அணிபடவைத்துத் திரைவளாகிய கரங்களினால்மங்களகரமாகச் சுழற்றிவரும் ஆலத்தினை நிகர்க்கவும் அழகியதாமரைக்கமலங்கள்அருகுகளாகவும் உயர்ந்திருக்கின்றபசியயிலைகள்குடைகளைப்போன்றும்அரும்புகள்தீபங்களையொத்தும்வாயுமோதலினால்அசைந்திருக்கின்ற யிதட்கள்சவரிகளையொப்பவும் அன்னங்கள்முதலிய பட்சிகள் தொனித்திருப்பது பலவாத்தியங்களினது முழக்கம்போன்றும் விளங்கவும் யிவ்விதமாக உபசாரங்களைச் சரவணமங்கையானவள் பிரிதிபத்தியினால் பாலசுப்பிரமணியருக்குச் செய்வதைநிகர்த்து

ம் அக்கினிச்சுவாலை மேலோங்கியதைப்போல யிதழ்களைவிரித்து அலர்
ந்திராநின்ற செந்தாமரைக்கமலங்கள் அலைகளிற்பட்டுஅசைந் தசைந்து
நீங்காமல் வளர்ந்திருக்கின்ற காட்சியானது எப்படிக்கிருப்பதெனில் தே
வர்க்கள் சிவகுமாரன் செலத்தினிடத்தில் நழுகிவிழாமலுந் துகள்முதலி
ய அசுசங்கள் அவர்மேற்படாமலும் போற்றியிருப்பதற்கு வெண்ப
ட்டினும் பீதாம்பரத்தினாலுஞ் சோடித்த திரைச்சீலைகளை அணிபட்த்தூ
க்கி யிருப்பக்காற்றினால் அசைவதையொத்துக்காட்டவும் அழகிய சிறகி
னையுஞ் சிவந்துவிளங்குங் கால்களையும் மூக்கினையும் வாய்ந்த அன்னப்
பட்சிகளானவை சரவணப்பொய்கையினிடத்தில் வீற்றிருக்குஞ் சிவகு
மாரனைச்சூழவிருக்கின்ற தாமரைக்கமலங்களின்மீது ஒலித்திருப்பது எ
த்தன்மையதெனில் எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவர் பிற்கா
லத்திற் பிரமனைச்சிறைபடுத்தி சிருஷ்டித்தொழிலினை நடாத்தவருங்கால
த்தில் எம்மையூர்தியாகக்கொண்டு ஆளவேண்டுமென்று தனித்தனியே
யிரந்துகேட்டுக் கொள்வதைப்போலக் காட்டவும் யிவ்விதவளப்பங்கள்
மிகுந்த சரவணப் பொய்கையினிடத்தில் அலர்ந்திருக்குங் கமலங்களி
னொன்றிற் சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தினையுங் காத்தருளுவதாகத் தி
ருவுளங்கொண்ட தாற்கிருபையுற்று ஒப்பற்றகுமாரதேவரானவர் பால
பருவத்தினையுடைய பிள்ளையாகக் கிருபாநோக்கத் தினைப்பரப்பி வீற்றி
ருந்தனர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே தீர்த்தவிசேடத் தினைப்
பெற்ற கங்கையினதுபாரிசத்தில் யிவ்விதச்சிறப் பினைப்பெற்று விளங்
குஞ் சரவணப்பொய்கையினிடத்தில் எழுந்தருளியிருக்கின்ற பாலசுப்
பிரமணியக்கடவுளானவர் குழந்தைப்பருவமாகநின்று நடாத்துந் திருவி
ளையாடல்களைப்பார்த்து மகாவிஷ்ணுமுதலாகிய தேவர்க்கள் அன்புமிகுதி
யினால் கார்த்திகைமுதலிய கன்னியர்களைத்தருவித்து யிதனைச் சொல்லுவ
தாயினர் - ஓ பெண்களே சண்முகங்களைப்பெற்ற எமது கர்த்தனானவர் ஒ
ருகுழந்தையைப்போல வடிவுகொண்டு சொல்லுதற்கரிய மகிமையி
னையுடைய யிந்தசரவணப் பொய்கையினிடத்தில் வீற்றிருக்கின்றனன்,
அவருக்குஉங்கள் கொங்கைகளிற் பெருகும்பாலை உண்ணக்கொடுத்து
அன்பாகப் போற்றிவளர்க்கடவீர்களென்று சொன்னமாத்திரத்தில். மகா
பாக்கியமென்று யிசைந்தவர்களாய் குற்றமற்ற பதிவிரதைகளாகியவ
ர்கள் அனைவருஞ் செலசமற்றியினைப்பெற்ற சரவணப் பொய்கையினி
டத்திற் திருவுருப்பெற்று விளங்கும் நிற்மலக்கடவுளாகிய குமாரதே
வர் சமீபத்திற்போய் அதிகபிரியங்களுடன் ஐயனே பசித்திருக்கின்றீர்
அமுதுண்ணவாரும் வாருமென்று யிருகரங்களினையும்நீட்டி அழைத்து
வேண்டுமுன்னிலையிற் றம்மையடைந்தவர்கள் வேண்டிய பேறுகளைக்

கடாட்சிக்கும் பெருமையினையுடையவராதலாற் சண்முகங்களைப்பெற்றவொருதோற்றமாகக் காட்டியவர் ஆறுகுழந்தைகளாக நின்றனர் யிப்பிறகாரம் அறுதோற்றமாய் விளங்கி கைகால்களை உதறித் தாவும்போது காற்திகை தெரிவையருக்குத் திரேசம்பூரித்துக் கொங்கைகள் குதுகுலித்துபாலினது சுரப்பினுல் விம்மிவருந்தி அதிக மகிட்சியுடன் வெவ்வேறுசுத்தமது கரங்களைநீட்டி ஐயனே எம்மைஆளவந்த குழந்தாய் பாச்சிவுண்டு பசியாற வாவா வென்று ஆவலுடனெடுத்து முத்தமிட்டு மார்பிலணைத்து ஒப்புவமையி லடங்காத சுந்தரமுள்ள தமது கொங்கைகளிற் பெருகும் பாலினைக் கொடுக்கவரும்போது அவ்வன்னையர் முகங்களைச் சிறுபையாகப் பாத்து திருநகைகொண்டு அதிகபசியுடன் வருந்துவின்றவரைப்போலத் துரிதமாய் அவர் தனங்களைத் திருவாயினுற் பற்றிச்சப்பிச்சப்பித்தெவுட்ட வுண்டபின்பு ஆறுருப் பெற்றுநின்ற ஒப்பற்றமுதல்வனைக் குளிர்ந்த தழைகளைப் படைத்துக் கவிந்திருக்கின்ற கடப்பமரத்தினது நிழல்பரவியிருக்குஞ் சரவணப்பொய்கையினிடத்தில்வண்டினங்கள் யிடைவிடாது மொய்த்துத் தேனையருந்தி ரீங்காரத் தொனிகளைச்செய்திருக்குந் தாமரைக் கமலமாகிய தொட்டிலினிடத்தில்வளர்த்திமன்னுயிரைக்காக்கவந்த வள்ளலே உறங்குறங்கு ஏழை பங்காளனே உறங்குறங்கு எமதுகண்மணியே நித்திரைசெய்புமென் றிவ்விதங்களாகத்தாலாட்டிப்போற்றி வருமுன்னிலையில் அவ்வன்னையர் களிக்கசிறுபையுற்று யித்திருவிளையாடல்களைச் செய்யத் துடங்கினர் - ஒருருவம் மெய்மறந்து நித்திரை செய்யவும் ஒருருவந்திடுக்கிட்டெழுந்துஅமிழ்தினுமினிய குதலைச்சொற்களைப் பேசவும் ஒருருவந் தாயினது முலையினைத்திருவாயில் வைத்துப் பாலையுண்ணவும் ஒருருவம் அதிசெயமாகநகைக்கவும் ஒருருவந் திருவிளையாடலைச் செய்யவும் ஒருருவம் எவ்வளவுபோதரவுசொல்லினுங் கேளாமல் தாய்முகத்தைப் பாத்துப்பாத்து விம்மிவிம்மி அழவும் ஒருருவங் கரங்களைநீட்டித் தவழவும் ஒருருவம் மெல்லவெழுந்து தத்தடியிட்டு நடக்கவும் ஒருருவ மெழுந்துநிற்கப்படாமையாற் பொத்தென் றுவிழவும் ஒருருவம் உளுக்கார்ந்து சாஞ்சாடியிருக்கவும் ஒருருவமானது அப்பொய்கையி னிடத்திற் பாய்ந்து சுவக்கித்திரியவும் ஒருருவந் தாய்மடியிலிருந்து முலைக்காம்பினை வருடியிருக்கவும் ஒருருவமானது குதித்துக்களிக்கவும் ஒருருவந் திருக்கரங்களைக்கொட்டி அம்மானையாடவும் ஒருருவந் தன் பெருமைகளைப் பாடவும் ஒருருவம் பலதிக்கிலும் மருண்டுபார்க்கவும் ஒருருவந் தாயைத்தப்பித்துக் கொண் டோடவும் ஒருருவந் தாய்க் ககப்படாமல்ஒருமூலையில்ஒளித்திருக்கவும் ஒருருவந் தாயினைத் தேடித்திரியவும் யிவ்விதங்க

ளாக அறுவகைப்பட்ட வுருவங்களானவை ஒருகணப்போதிற். பத்துநூறுயிரபேதங்களாகத்தோற்றிப்பரம்பொருளாகவெழுந்தருளியசற்வக்ஞயனானகுமாரதேவரானவர் தாமெவ்வுயிரினிடத்தும் பொருந்தி நடப்பிப்பதைப்போல யித்தகைய அதிசெயத்திருவிளையாடல்களைதமதுமாயைப்பெருக்கினாற்காட்டினர். கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளே சிற்பராமூர்த்தியாகிய சிவசுப்பிரமணிய தேவரிடபிறபலத் திருவிளையாடல்களின் மகத்துவங்களனைத்தினையும் தெரிசித்த மகாவிஷ்ணு பிற்மதேவன்இந்திரன் ரிஷிகள் தேவர்க்கள் முதலானவர்களனைவரும் அற்புதங்கொண்டு தம்மிலிதனைப்பேசிக் கொள்ளுகின்றனர், குழந்தைப் பருவமாகவிருக்கின்ற யிவரொருவரோ பலகோடி சிறுபிள்ளைகளாகநின்று நாமனைவரும்பார்த்திருக்க ஒருநிமைப்போதில் அளவுபடாதபேதாம்சங்களைக்காட்டுகின்றனர்- யிந்தகுமாரதேவர் திருவிளையாடலின் பெருமைகளை நம்போலிகளால் அறியப்படுவதன்றுமேலும் மாயாவித்தைகளின்வல்லபங்களை மிகுதியாகச் செய்யவல்லர் கரங்களினேந்தித் தாலாட்டும்பருவம்பெற்றசிறுகுழந்தையைப்போலத்தோற்றநின்றயிக்கடவுளானவர் நடித்துவருகின்ற யித்தகைய சிறந்தமாய்கைப் பெருக்கினைப் போலமுடிப்பது எத்தகையருக்கேனும் அரிதரிது யிதனைக் குறித்துவளைத்துவளைத்துப் பேசுவதிற் பயனென்னை தேவர்க்களிற் சிறந்தவராகப்பேசப்படுகின்ற நாமேதேனுஞ் செய்ததுண்டோ ஆதலால் யிக்கடவுளானவர் ஒப்பற்ற பரமசிவத்தோற்றமேயாம் யிதற்குயாதொரு சந்தேகமுமில்லையெனப் புகழ்ந்து அவனாநோக்கிப் பலதிரந்தொழுது வாழ்த்தியிருந்தனர், யிவர்கள்சரித்திரம் நிற்கக் கார்த்திகைத் தெரிவைமார் அனைவருந் தத்தம திடத்திருக்கின்ற குமாரதேவரது அதிசெயத் திருவிளையாடல்களைப்பார்த்து மிகுத்த அற்புதமடைந்தவர்களாய் குழந்தைகளென மனதில் நினைந்திருந்ததைமறந்து சற்றேனும்பிறிய வாற்றுமையாய் தாங்கள் வழிபடுகின்ற யிஷ்டதெய்வத்தினைப்போலக்கருதி பத்திவிநயங்களுடன் போற்றியிருந்தனர், கேட்டீர்களோ நைமிசாரணியவாசிகளே சரவணப்பொய்கையி னிடத்திற்றோற்றிய சிறந்ததாமரைக் கமலத்தினை மலரணையாகக்கொண்டு சண்முகங்களைப்படைத்த குமாரதேவரீவிதிவிளங்கும் அவதாரமகத்துவங்களை யிதுபரியந்தஞ் சொன்னோம் யிவர்வெளிவந்தபின்பு திருக்கயிலாயத்தில் எமநிறைவியாகிய பரமேஸ்பரியினது அனுக்கிறகப்பெருக்கினால் பாலசுபபிறமணியதேவரது துணைவராகிய நவ்வீரரும் இலக்கத்தவருந் தோற்றிய பிறபாவங்களையும் யினிமேற்பேசுவோம் பராமுகமின்றிக்கேட்பீராக.

சூதபுராணிகர் - சவுனகாதிரிஷிகளைப்பார்த்துச் சொல்லுவார் ஆலகாலவிஷத்தினையுண்டுமன்னுயிரினைக் காத்தருளிய சிவபிரானுற் றமது நுதல்விழிகளின் மூலமாகப்படைத்த தீட்சணியமுள்ள தீப்பொறிகளினது சுவாலைக்குச் சகிக்கப்படாதவளாய் பரமேஸ்பரியானவள் பயந்து திருவடிகளிற் றரித்திருக்கின்ற சிலம்புகள் ஒன்றுடனொன்றுதாக்கி நவரத்தினங்களும்மிறையத்தமது திருமாளிகையினை நோக்கி ஓடினவள் அக்காரணங்களையோசித்து மகாவிஷ்ணுமுதலாகியதேவர்க்கள்வந்துபரமசிவத்தினை வந்தித்து நமதுகுறைகள் நிவாரணமாதற்பொருட்டு தேவரீர்கிருபையுற்று ஒருகுமாரனைத்தரவேண்டுமெனப் போற்ற அதற்கிரங்கித் தமது நெற்றிவிழிகளினிடமாக அனற்பொறிகளைத்தந்து அவைபிள்ளையுருப்பெறத் தக்கதாகச் சரவணப் பொய்கையினிடத்துக் கனுப்பினரெனப் பார்பதியார்தெரிந்து கொண்டவளாய் உடனே அம்மனுக்கு அதிகோபம்பிறவேசித்து நிர்மலக்கடவுளாகிய பரமன் என்னிடத்திற்றமதருளினைப்பெற்ற திருக்குமாரனைப்படைக்க வொட்டாமற் றடைசெய்தபொன்னகரத்துக் கிறைவனுகிய இந்திரன் பிரமன் விஷ்ணு மற்றதேவர் முதலியவர்களிட தேவிமார்களுக்குயித்தினமுதற் புத்திரசந்தானமில்லாமற் போகக்கடவதென்று சபித்தனள், கேட்டீர்களோ - சவுன்காதிரிஷிகளே அவ்வாறே விண்ணவர்ரிஷிகள் விற்தியடையாமல் அதுவனாயிற்றேற்றியதொகை முப்பத்து முக்கோடி தேவரொன்றும் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளென்றும் யித்தினவனாயிற் பேசவிருக்கின்றனர், இவ்விதமாக இமோத்பற்வதராச புத்திரியானவள் வசைசொல்லிய பின்பு மறுபடியுந் திருச்சபைக் கெழுந்தருளி சைவம் வைஷ்ணவம் சாத்தேயம் கபாலீகம் பௌத்தம் சாரவாகம் என்னும் அறுசமையங்களைப்படைத்து வீறச்செய்தருளிய பரமசிவத்தினது பவுத்திரமாகிய சன்னிதானத்தில்வந்து ஆதியில் மகாவிஷ்ணு தேடிக்காண்பரிய திருவடிகளைக் கண்கள் குளிரத்தெரிசித்து வணங்கிக்களித்தவளாய் கற்தனே தேவர்களனைவரும் பணிந்து தமது குறைபாடுகளை விண்ணப்பஞ் செய்து வேண்டியகாரணத்தினுல் தேவரீர் கடாட்சித்த சுயஞ்சோதிப் படிவமாகிய பொறிகளினது அனல்வெப்பவலியினுற் பயப்பிருந்திகொண்டு சரீரமுற்றும் வெம்பிப்பதைத்த காரணத்தினுல் தேவரீரைப் பிரிந்தோடியயான் எமது கற்தனே நீர் அப்பொறிகளைப் போக்கியபடியால் மீளத்திருச்சபைக்கு வந்தனனென்று கன்னிகையாகிய பராசத்தியானவள் விண்ணப்பஞ்செய்தகாலத்திற் சிவபிரான் அம்மனிடத்திற் கிருபையுற்று கரங்களைநீட்டி வரவழைத்து தமது யிடப்புறத்திற் சேர்த்துக்கொண்டனர், இப்பிறகாரஞ் சிங்காதனத்தில் விற்றிருந்த பார்பதியார் தாம்முன்ன மோடியகாலத்

திற் சதங்கைகளினின்று சிதறிக்கிடந்த மணிகளானவை எமதிறைவன்றி
ருமுன் பிறகாசித்திருந்தது, கேட்டீர்களோ - சவுனகாதிரிஷிகளே மாத்
தளிர்னும் மிறுதுவாகிய பாதாரவிந்தங்களிற் றரித்திருந்த சொற்னசர
ங்களிற் கிண்கிணிகளாகச் சேர்த்திருந்தவை நீங்கிச்சபையினிடத்திற் சற்
றனது அனுக்கிறகப்படிக்குப் பார்ப்பதிபார் திவ்வியசுந்தர வடிவமானது
அவற்றிற்றோற்றிய தெப்படிக்கிருந்ததெனில் ஐம்முகக் கடவுளாகிய சி
வபிரான்றிருமுகத் தினிடத்திற் சோமசூரியாக்கினியாகிய முச்சுடர்களு
ந்திரிநேத்திரங்களாக விளங்குவதைப் போலக்காட்டியது, யிவ்விதமாக
அச்சிறந்த நவமணிகளின் மூலமாகத்தோற்றநின்றஉமையவள்திருவுருவ
னைத்தினையும்பரமன்விழிகளைச்செலுத்திப் பார்த்தருளிவாருமென்றழை
த்தகாலத்தில்உலகங்களிற் புகழநின்றஒவ்வொருவகை மணிகளிடத்தில்ஒ
வ்வொருசத்தியாகத்தேவர்செய்த புண்ணியபலத்தினால்நவசத்திகளும்ஏக
முகமாய்வெளிவந்தனர், இப்பிறகாரம்பற்வதராசபுத்திரியாகிய பார்பதி
யாளையொத்தசுந்தரவடிவினைப்பெற்றுதித்தநவசத்திகளும்பரமசிவத்தி
னதுதிருவடிகளிற்சேவித்துநின்று அத்தேவரிடமங்களகரமாகிய ரூபலா
வணியங்களைப்பார்க்கப்பார்க்கமனந்தளர்ந்துமையல்கொண்டுமனப்பூ
ர்வகமாகயிச்சித்தமாத்திரத்தில் ரிஷிகள்பத்தினி மாரைப்போலத் தட்சி
ணமேகெர்ப்பங்களைப்படைத்தனர், இச்செய்கைகளைனைத்தினையும்உமைய
வள் திஷ்டாந்திரமாகக் கண்டமாத்திரத்தில் ஆதியிற் சகலபுவன சராசர
ங்களையும் படைத்தருளிய அம்மனுக்கு அவர்கள்மீது அதிகசோபம்பி
றவேசித்து எனக்குமாறுகச்சக்களத்திமாராகிய காரணத்தினால் மேலோ
ங்கிய கெர்ப்பங்களுடன் பலகாலம் யிவ்வாறே யிருக்கக் கடவீர்களென்
று சபித்தனள், யிவ்வசைமொழியைக் கேட்டமாத்திரத்தில் அவர்கள்மி
கவும் நடுங்கிப்பயப்பிருந்திகொண்ட வெம்மையினால் திரேகமுற்றினு
ம்வியர்த்தொழுகிய செலப்பெருக்கினிடையில்தேவதேவோத்தமனாகிய
பாமன் திருவருளின் முயற்சியினாற் சூரியர் கூட்டம்போலச் சலனமற்
றவீரபராக்கிரம செயசாலிகளாகிய லட்சம் பிள்ளைகள் பிறந்தனர், யிவ்
விதமாக மாவடுவினையொத்த நேத்திரங்களைப்படைத்தநவகன்னியர்வெ
யர்வையினிடத்திற் றோற்றிய பலசாலிகளாகிய இலக்கத் தவர்களுங்கோ
டையிடிகளையொத்த உரத்தசொல்லினைப்பெற்றவராய் பொன்னுடை யி
டையிற்றரித்து கரங்களிலொப்பற்ற வீரவாளினைத்தாங்கிச் சபையெங்
குமிடமின்றி நெருங்கிப் பரமனைக் கண்டவுடன் சமீபத்திற்போய் உ
பயசரணாரவிந்தங்களுஞ் சிரங்களிற்படத் தீர்கதெண்டன் சமற்பித்
து நாவினுக்கினிப்பைத்தரும் கர்த்தனது அளவற்றதிருநாமங்களைத்துதி
த்தவர்களாய்க் கரங்களைக்கூப்பி நிற்கின்றவர்களைச் சர்வஞ்ஞனாகிய பர

மன் கிருபையாகப்பார்த்து யிதனைச்சொல்லுகின்றனர், குமாரர்களே கே
ட்பீராக நீங்களனைவருஞ் செயசாலிகளாகவிறி இந்திரன் முதலாகிய தே
வர்களுக்குப் பகைவராகிய ராட்சதரோமுதலியனாக் கண்டதுண்டமாகச்
சங்கரித்து வேரறக்களைய விருக்கின்ற நமது திருக்குமாரனாகிய குமார
சுவாமிக்குப் படைத்துணைவராக விருக்கக்கடவீரென்று அனுக்கிரகஞ்
செய்து தேவாதிதேவனாகிய சிவபிரான் அவர்கள்மீது கடாட்சவீட்சணி
யத்தைச்செலுத்தி வேண்டியவரங்களையும் புசபெலபராக்கிரம சம்பத்தி
னையும் பெறத்தந்தனர், இவ்வாறுநற்றனுனவர் தயாரசத்துடன் அளவற்
றபேறைக்கடாட்சித்தவுடன் இலக்கத்தவராகிய நற்குண நற்செய்கைக
ளையுடைய பிள்ளைகளானவர்கள் பத்திவிசுவாசங்களில் மேம்பட்டவராய்
த்தமக்கேற்ற பணிவிடைகளைச் செய்துக்கொண்டுபரமன் சன்னிதானத்
தைவிட்டு நீங்காமலிருந்தனர், இச்சரித்திரம்நிற்க நீக்குதற்கரியகோப
த்தினாற் பார்பதியானவள் முன்சபித்தசாபவலியினால் நவமணிகளி
னிடத்துதித்த கன்னியர்கள் கெற்பயாதனையிற்பட்டு மிகவும் வருந்திபு
ம்அம்மனைப் பரியாதிருந்து பலவிதங்களிற்போற்றிப் பணிவிடைகளைச்
செய்துகொண்டு பெருகாலமாகச் சிசுக்களைச்சுமந்து வாடியிருக்கின்றத
ருவாயில் மணிகளினிடத்துதித்த அக்கன்னியர் உதரத்திற்பரமசிவத்தை
வழிபட்டிருக்கின்ற நந்திதேவரிட அங்கசையைக் கொண்டிருக்கின்ற க
ணத்தலைவர்கள் தோற்றிப் பத்துமாதத்துக்குமேற்படப் பலநாள்களாக
த்தாய்மார் உதரச்சிறையிற்பட்டு கைசாலாடாமற் பலதுன்பங்களை அனு
பவித்து வருந்தியிருந்தனர், கேட்டீர்களோ— சவுனகாதி ரிஷிகளே மே
ற்குறித்தவிதமாக நவமணிகளிற் பிறந்தமங்கையர் திருவயிற்றிற் கர்த்த
னைப்போற்றிவரும் நந்தியெம்பெருமான் கணத்தலைவர் பொருந்தி கா
ளையராய் சுகரிஷியைப்போலச் சிவபிரானைச்சிந்தித்து யோகசாதனைகளை
ச்செய்துக்கொண்டிருக்கு முன்னிலையிற் றாங்குதற் கரியபாரச் சுமை
யானதால் அப்பெண்கள்வருந்தி உமாபரமேஸ்பரனை வணங்கிப்போ
ற்றி அம்மையப்பனே யிதுபரியந்தம்யிந்த உதரச்சுமையினைத் தாங்கிக்க
ளைத்தனம் யினிமேலெங்களாற் பரிக்கச்சக்கியமல்ல கிருபையுற்று வெ
ளிகாணும்படிக்குக் கடாட்சிக்கவேண்டுமெனப் பலவாகத்துதிக்கு முன்
னிலையிற் பரமனானவர் அத்தெரிவையரிடத்திற் பரிவாய்த் தமதிடப்பா
கத்தமர்ந்த உமையவள் திருமுகத்தினைப்பார்த்து யிதனைச்சொல்லுகின்ற
னர், கறுத்து நீண்டுபரிமளித்திருக்கும் அளகபாரத்தினைப்படைத்த பார்
பதி உமது திருவடிகளிற்றரித்த பாதசரங்களிற் றோற்றிய யிவர்கள் உ
னது சாபசம்பந்தத்தினாற் கருவைப் பலகாலமாகச் சுமந்து மிகவும்வரு
ந்தினர், ஆதலால்யினியாவது புதல்வரைப்பெற்றுச் சிறுமைநீங்கிவாழ

படிக்குக் கடாட்சிப்பாயெனக் கட்டளையிட்டனர், பரமேஸ்பரரிப்படிக்குத் திருவாய்மலர்ந்தபோது உமையவளானவள் அதற்குச்சம்மதப்பட்டு திருநகைகொண்டவளாய் அப்பெண்கொடிகளைப்பார்த்து வலியபிள்ளைகளைப்பெற்று சவுக்கியத்தி விருப்பீரெனச்கடாட்சித்ததறுவாயில் அவர்கள் கெற்பத்திலிருந்து யோகசாதனைகளைச் செய்திருந்த பாலகர்யிச்சேதியினைத்தெரிந்து நல்லறிவினைப்பெற்றபேருணர்வினைப்படைத்திருக்கின்ற வீரர்களாதலாற் றும்வெளிப்படுவதற் சேதுவாகிய பருவத்தைநிதானித்து யோகசாதனையை நீங்கி மனமகிட் சியாய்ப் பிறப்பிறப்பற்ற பரம்பொருளினது அருட்டிறத்தினைப் போற்றிப்பணிந்து தாய்மார்கெற்பத்தினை நீங்கும் எத்தனத்திலிருந்தனர், அம்மன் பாதசரங்களின்மூலமாய் உற்பவித்தபெண்களும் பார்பதியார் கிருபையுற்றச்சொல்லியவிசேஷித்தினைக் கேட்டமாத்திரத்திற் சந்தோஷசித்தராய் மனவருத்தங்களைப்போக்கியிருந்திரவர்களையும் பணிந்துபோற்றி விடைபெற்றுத் துரிதமாய் ஒருபாரிசத்திற்போய்ச் சத்புத்திரரைப் பெற்றனர், யிப்படிக்கு நந்திதேவர் கணத்தலைமை யினைப்பெற்று பந்தபாசங்களை நீங்கியிருக்கின்ற ஒன்பது பிள்ளைகளும் ரிஷபமுகத்தினை வாய்ந்த நந்தியெம்பெருமான் உலகத்தில் அவதரித்ததைப்போல உற்பவித்தவரது வரலாற்றினையுஞ் சொல்லுவோம், சிவசுப்பிரமணியதேவர் அனுக்கிரகத்தினற் சூரன்முதலிய ராட்சதரால் தேவர்கள் யாதொரு துன்பங்களையும் பெறுமல் அவர்களை நாசஞ்செய்வதாக நாகரத்தினப்பாவை யென்னுங் கன்னிகையினிடத்தில் உலகத்தினர், அதிசெயித்து புகழ்ந்துபோற்றத்தக்கதாக வீரவாகுதேவர் திருவவதாரஞ்செய்தனர், வீரசிங்கத்தினையொத்தசவுரியவான்களாகிய சூரன் சிங்கமுகன் தாருகனென்னும் பாதகர்படைத்த அளவற்ற சேனுசமுத்திரமென்னும் யிருட்கூட்டங்களை அதஞ்செய்து உலகங்களுக்கு சவுக்கியங்களைத்தருஞ் சூரியனைப்போலச் சொக்கட்டான் காயினையொப்ப அடிபாந்து நுனிகுவிந்து பலஆபரணங்களைப்பூண்டிருக்குந் தனபாரங்களைப்பெற்ற தாளவல்லியினிடத்தில் வீரகேசரியென்பவன் பிறந்தான் மானிடர்தேவர் முதலானவர்களுக்கும் பலராட்களாகக் கொடியதுன்பங்களைச் செய்துகொண்டு வீரமாமயேந்திரபுரியில்வாழும் பாதகராகிய ராட்சதவெள்ளங்களனைத்தையுங்கண்டதுண்டங்களாகவாட்டித் தொலைக்கவல்ல அதிகமகிமையுள்ள வீரமாமயேந்திரனுனவன் புஷ்பருகக்கன்னிகையினிடத் தவதரித்தனன், ஆயிரங்கிரணசமோகங்களையுடைய சூரியனுஞ் சமுத்திரத்தினிடத் தடங்கியிருக்கின்ற வடவாமுகாக்கினியும் குளிர்ச்சிபெற்ற சோடசகலைகளையுடைய சந்திரனும் வெழ்க்கிப்போகத்தக்கதாகப் பிறகாசிக்குஞ் சுந்தரவடிவினை

ப்பெற்ற கோமேதகப் பாவையினிடத்தில் தேவர்கள்செய்த தவவிரதப லத்தினால் வீரமாமயேச்சுரன் பிறந்தான்- தெய்வலோகவாசிகளாகிய விண்ணவர் விழிவிளங்கவும் ராட்சதப்பாதகரனைவரும் அதப்பட்டுப்போகவுந் தருமந்தலையெடுத்து விற்றியாகவும் கிரணகாந்தியைப்பெற்ற வயிடூரியப்பாவையினிடத்தில் வீரவெண்டையமணிந்த பாதங்களைப்பெற்ற வீரமாபுரந்தரன்தோற்றினன், சூரபதுமன் புசபெலபராக்கிரமமும் அவனதுதுணைவர்கள் வீரத்தன்மையும் அவர்களைச் சூழ்ந்திருக்கின்ற சவுரியபராக்கிரமசாலிகளாகிய சேனசமுத்திரங்களுந் தேவர்கள் மனவாட்டங்களும் ஏககாலத்திற் றெலைத்து சீர்படும்படிக்குச் செய்யவல்ல வீரராக்கதனென்பவன் பரமசிவகடாட்சத்தினால் வயிரமங்கையினிடத்திற்றேன்றினன்- மேருவை வில்லாகக் கொண்டு திரிபுராதிகளை நிமைப்போதிற்றகித்தெரித்த சிவபிரான் கிருபையினாற்கடையுகத்தில் வடவாமுகாக்கினியானது சிறியெழுவதைப்போல மரகதவல்லியினிடத்தில் வீரமாத்தாண்டன் அவதரித்தனன், பற்வதாகிருதியாக விளங்குந் தேர்கள் மதயானைகள் தத்தித்தாவுங்குதிரைகள் ஆலகாலத்தினையொத்த கொடிய சேனசமுத்திரங்கள் முதலாகிய பலங்களையும் நிமைப்போதில் அதப்படுத்தவல்ல தீரனாகிய வீரராக்கதனென்பவன் பவழவல்லியினிடத்திற்றேற்றினன், கற்சம்பத்தினைப்பிளந்தெழுந்து இரணியனைவாட்டியநாரசிங்கமும் ஆலகால விஷமும்போலப் பாதகரைவாட்டி தீனரை ரட்சிக்கவல்ல வீரதீரனென்பவன் நீலவல்லியினிடத்தில் அவதரித்தனன், கேட்டீர்களோ- சவுன்காதிரிஷிகளே மேற்சொல்லிய நவவீரர்களும் பரமசிவத்தின் அனுக்கிரகத்தினாற் றத்தமது தாய்மாரிடமிருமும் நாமங்களையும்பெற்றுப் பீதாம்பரங்களையுடுத்துப் பலகாலந்தாய்மார் கெற்பத்திலிருந்ததற்குத் தகுதியாகிய திரேகங்களுடன் பிரமனைப்போலத்தமதன்னையர் உந்திகமலமூலமாக வெளிவந்தனர், யிப்பிறகாரம்உதித்த சவுரியுவான்களாகிய நவவீரர்களும் அச்சபையினிடத்தில்விளங்குஞ் சிங்காதனத்தின்மீது பிராட்டியாருடன் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானைக்கண்டவுடன் பயபத்திவிசுவாசங்களுடன் திருவடிகளிற் பணிந்தெழுந்து கரங்களைக்கூப்பிநிற்கின்ற தறுவாயிற் பரமன் அவர்கள்மீதிற் கிருபாநோக்கம்பாவித்து யிடப்பாகத்தமர்ந்திருக்கின்ற பார்பதிதேவியைப் பரிவாகப்பார்த்தருளி பெண்ணே யிவர்கள் வரலாற்றினைக் கேழ்ப்பையாக, அதிகவிவேகசாலிகள் வலியிலுயர்ந்தவர்கள் யிவர்களையாரொன் றிருக்கின்றனை நமது புத்திரராகவேண்டும் மேலும் நூதனமாகவந்தவர்களல்ல நம்மடியபனாகிய நந்திதேவன்கணத்தலைவராகுமென்று வேதப்பொருளாகிய பரமசிவன் அருளிச்செய்த காரணங்களைப் பார்பதியார்கேட்டு சந்தோ

ஷிப்பெருக்கினுல் அவர்களைவாழ்த்தி ஆதரித்தனள், பரமனுந் தகத்தகா யமாய் விளங்கியிராநின்ற ஒப்பற்ற வாளாயுதங்களை நிருமித்து அவர்க ளனைவருக்குங்கொடுத்துப் பிள்ளைகளே நவகன்னியர்கள்வெயர்வையினி டத்திற்பிறந்த இலக்கத்தவருடன் நீங்கள்கலந்து உங்கள் தமையனுகவு ம் இறைவனுகவுமிராநின்ற குமாரசாமியைக்கூடி பிறிபாவிடை யாய் அ வனிட்ட ஏவற்பணிவிடைகளைச் செய்துகொண்டு வாழக்கடவீர்களென் றகத்தன் திருவுளம் பற்றியகாலத்தில்அக்குமாரர்கள் பரமனைச்சேவித்து அவ்வாறே நடந்துகொள்ளக் கடவோமெனச் சம்மதித்தவர்களாய்அவ் வீரர்களொன்பதின்மர்களும் இலக்கத்தவருடன் சேர்ந்துவங்கணமாய் குலவிக்கொண்டு எமதுகற்றனுகிய சிவபிரான் வீற்றிருக்கின்றநகரத்தை நீங்காமல் அத்தலத்தில் வாசமாயிருந்து பணிவிடைகளை முடித்துவரு முன்னிலையில் நவகன்னியர்களும் உமையவளை நிமைப்போதும் பிரியா மற்காத்திருந்து அம்மனிட்ட ஏவற்பணிவிடைகளை பத்தியுடன் நடத்தி சவுக்கியமாக விருந்தனர்.

## சரவணப்படலம்

சூதபுராணிகர் - சவுனகாதிரிஷிகளைப்பார்த்துச் சொல்லுவார் சகல ராலும் புகழவல்ல தேகிப்பிறதாப சாலிகளாகிய நவவீரர்களும் இலக்க த்தவரும் பரமசிவகடாட்சத்தினுல் அவதரித்த கதாப்பிறசங்கங்களையிது பரியந்தம் பேசினேம். யினிமேற் செலசமற்றிபெற்ற சரவணப்பொ ய்கையினிடத்திற் கார்த்திகைத்தெரிவைமார் அறுவரும்போற்றி வளர்க்க வீற்றிருக்கும் சிவசுப்பிறமணியதேவர் திருக்கயிலாயத்தச்செழுந்தருளி யசரித்திரங்களையுஞ் சொல்லுவோங் கவனிப்பாகக் கேழ்ப்பீராக - ஞான வான்களாற் றெரிசித்துப் போற்றத்தக்க பெருமையினையுடைய வெள் ளிடங்கிரியினிடத்தில் வீற்றிருக்கின்ற பரப்பிற்ம சொரூபியாகிய சிவபி ரானுனவர் திருவயிற்றிற்சுமந்து பெருமல் மன்னுயிரனைத்தினையும் ப டைத்தருளிய பார்பதிதேவியைப்பார்த்து யிதனைச்சொல்லுவார் - மனக்க வலைகொண்டு வருத்தியிருந்த மகாவிஷ்ணு பிற்மதேவன் இந்திரன்முத லாகிய தேவர்க்கள் சமதிடர்களைப்போக்கிக் களிக்கத்தக்கதாக முனம் நமது விழிகளினிடத்திற் றிருவவதாரஞ்செய்து தாமரைமுதலிய புஷ்ப வகைகள் பெருத்திராநின்ற சரவணப்பொய்கையினிடத்தில் .வளருகின் றநமது திருக்குமாரனை யிந்த திருக்கயிலாயத்தி னிடத்துக்கு அழைத் துவரப்போவோம் வாருமென்று புலிஅதளுடுத்த பரமன் பேசியதைத்

தெரிந்து பார்வதியார் அதிசமகிழ்ச்சியைக் கொண்டவளாய் கற்தனே தேவரீர் திருவுளப்படிக்கு நாமிருவருமாகச் சென்று புத்திரனை எடுத்து வரும்படியாகப் பிறையாணைப்படுமென்றுவேண்டகாளகண்டமூர்த்தியானவர் கிருபையுற்று சிங்காதனத்தை விட்டிறங்கித் துரிதமாய்த்தமது திருத்தேவியுடன் ரிஷபவாகனத்தின்மீது ஆரோகணித்தனர், இப்பிறகாரம்நந்திவாகனத்தின் பிடரியில் பரமன் வீற்றிருந்தகாலத்தில் வானநாடராகியதேவர்க்களானவர்கள் நம்மை அலைத்திருந்த துன்பங்களனைத்தும் யின்றுடன் அதப்பட்டுப்போயதென்னுஞ் சந்தோஷப் பெருக்கினால்வாழ்த்திப்போற்ற நந்திதேவர் கணத்தலைவராகிய நவவீரர் இலக்கத்தவர்சூழ்ந்து கற்தன் பெருமைகளைக் கொண்டாடவும் தீட்சணிய மிகுதியாகிய ஆலகாலவிஷத்தினைத் திருக்கரத்திலேந்திவந்து பரமனிடத்தொப்புவித்த பெருமைபெற்ற ஆலால சுந்தரர்முதலியசிவகணங்களுஞ் சிவத்தின்திருக்கோலத்தினைப் பெற்றிருக்கின்ற உருத்திரகோடிகளாதியாகயிருபக்கங்களினும் நெருங்கி துதித்துவரத்தக்கதாக வெள்விடையின்மீது நடக்கும்போது யிச்சேதியினைத்தெரிந்த மகாவிஷ்ணு பிற்மதேவன்இந்திரன்முதலிய தேவர்க்கள் அதிதீவரமாகவந்து பாரிசாதபுஷ்பங்களைவாரிவாரிப் பரமன் மீதிலிறைத்து சுபங்களைக் கொண்டாடிக் கொண்டு பின்பற்றிவரவும் செயபேரிவெற்றிமுரசஞ்சங்கம் சின்னம் சல்லரிமல்லரி திமிலைதக்கையே முதலிய பதினெண்வாத்தியங்களையும் பூதவீரர்கள் அதிகஓசையெழ முழக்கிக்கொண்டு போகவும் சதுற்வேதங்களும் குடிலைமற்றுமியாநின்ற கலைகளும் ஓவென்னும் ஓசையெழக் கற்தன்குணாதிசெயங்களை விளக்கிச்செல்லவும் விஞ்சையர் கின்னரர்வீணைகளைமீட்டிதேவகானங்களை வாசித்துத்தொடரவும் சந்திரனானவன் தனதுகலைகளினொன்றாகிய மூன்றாம்பிறையினைப் பரமன் சடாமகுடத்திற் றரித்திருப்பதைபடம்பொருந்திய விடநாகம்மேவிட்டு வருத்தப்போகின்றதென்னும் எச்சத்தினாற் றன்னிலையை விட்டுவந்து கவிந்திருப்பதைப்போலவெண்பட்டுக்குடைகளைச் சூரியர்தாங்கிவரவும் சகரனென்னும் அரசர்கள்சாபசம்பந்தத்தினாற் சாம்பற்பட்டு நரகயாதனையில் வாடுவதைஅவர்கள்மாபிலுதித்த பேரப்பிள்ளையாகிய பகீரதராசன் கேழ்விப்பட்டுதன்பிதுற்களை நற்கெதியிற்சேற்க வெண்ணிப் பலகாலம் அரியதவங்களைச்செய்யுமுன்னிலையில் பரமசிவமிரங்கிக் கடாட்சித்தகாலத்திற் பெருகியசங்கையினிடத்தெழுந்த அலைகளைப்போல வெண்சாய் மரைகளைப் பலகோடிபூதகணங்கள் வீசிப்போகவும் சிங்கம் புலி யானை கரடி கடமைமான்முதலிய மிருகமுகங்களையுடைய நூறகோடி பூதவீரர்கள் பரிவட்டங்களைத்தாங்கிச் சூழ்ந்து செல்லவும் அளவற்ற சிவகணங்கள் தாங்கிச்

செல்லும் நீண்டதுசபடங்கள் அசையுந்தோறும் வானகங்கையிற்றோய்
ந்துதோய்ந்து சிதறுந்துளிகளானவை சொற்கவாசிகள் சிவபிரானைவழி
பட்டுக் கடத்தேறும்பொருட்டுசற்பகந் தாமரைமுதலியமலர்களைக்கொ
ண்டு அபரிமிதமாய் அரிச்சிப்பதை யொத்துக்காட்டவும்மிவ்விதமாகந
டக்கின்றமகோச்சவாலத்தில்அகிலசராசரங்களைப்படைத்தருளியுங்கன்
னிமையகவிளங்கும்பார்பதியாருடன்வெள்விடையின்மீதுசிவபிரான்வீ
ற்றிருந்து தமதுநகரத்தைக்கடந்து திருக்கயிலாய பற்வதத்தைத்தாண்டி
பூமியினிடத்திற் பிறபலமாகக்கொண்டாடும் இமையபற்வதத்துக் கருகி
ல்வந்து அன்னங்கள் விளையாடித் திரியுஞ் சிறப்பினை யுடைய சரவணப்
பொய்கையின் கரைக்குச்சமீபமாக எமது கர்த்தன் உமையவளுடன் வந்
துசேர்ந்தனர், கேட்டீர்களோ - சவுனகாதிரிஷிகளே யிப்பிறகாரஞ் சந்
திர சடாதரக்கடவுளாகிய பரமனும் அவனைப்பிரியா விடையாகத்துடர்
ந்திருக்கும் பராசத்தியும் அறுவகைத்தோற்றத்தினைக்கொண்டு திருவி
ளையாடல் செய்திருக்கின்ற குமாரதேவர் குறுதிசெயங்களைப்பாத்தும
னமகிழ்ச்சியாய் சலப்பெருக்கினையுடைய சரவணப் பொய்கைக் கரையி
ன்மீதிலெழுந்தருளி யிருந்தனர், அத்தருவாயில் அப்பொய்கை யினிட
த்தில் அலர்ந்திருக்குந் தாமரைக்கமலத்தின்மீது சண்முகுற்றமாக வெ
ழுந்தருளியிருந்த பாலசுப்பிறமணியக் கடவுளானவர் தேவதேவோத்த
மனையும் மன்னுயிரனைத்தினையும் யீன்றருளிய பிராட்டியாரையுந் தெரி
சித்தமாத்திரத்தில் முகமலர்ச்சிகொண்டு புன்முறுவலுடன் மனமகிழ்ந்
திருக்கின்ற சமயத்தில் எமதிறைவன் உமையவளைப் பாத்து பெண்
ணே உனதுதிருக்குமாரனை எடுத்துவரக் கடவையென்று சட்டளையிட்
டபோது அழகியரிஷபவாகனத்தினை விட்டிறங்கி மனம்பூரித்துச் சரீர
ம்புளகெழக்களிப்புடன் சரவணப்பொய்கையினிடத்திற்சென்று தமது
பிள்ளைகளாகிய அறுதோற்றங்களையும் அன்புமிகுதியினாற் கரங்களை நீட்
டிச்சேர்த்து வாரியெடுத்து மார்பினிடத்திற்சேர்த்து யிறுகஅணைத்துச்ச
ண்முகங்களும்பன்னிருகரங்களும்விளங்கும்படியான ஒருருவாகச்செ
ய்தனள். திரிலோககாரணியானவள் யிவ்விதமாகக்கூட்டியதெப்படிக்கிரு
ந்ததெனிற்சற்வசங்காரகாலத்திற்பரமன் கட்டளையின்படிக்குமன்னுயி
ரனைத்தும்ஒடுங்கிப்பரவெளியிற் சேருமுன்னிலையில்எமதிறைவருக்குரி
யசத்தியானவள்உலகங்களை விளக்கும் பொருட்டுப்பரவியிருந்த தோற்
றங்களனைத்தையுந் தன்னிடத்திற் கிரகித்துஎகஉருக்கொண்டுபராசத்தி
யாய்ப் பரமனைக்கலந்து நின்றதுபோல ஆறுஉருவுகளும் ஒன்றாகவிள
ங்கி உலகமாதாவினுல் கந்தசுவாமியென் றழைக்கப்பெற்றனன், யிவ்
வாறு கவுரியானவள் சேர்த்தொன்றுபடுத்திய திருக்குமாரன் உச்சிகனை

மோந்து பளிங்கினைப்போல விளங்கும் முதுகினைத் தடவிக்கொடுத்து வருங்காலத்திற் புத்திரவாஞ்சையினாற் பார்பதி யம்மனுக்குத் திரோகமும்பூரித்துக்கொங்கைகள் விம்மிசுரப்பெடுத்து பால்பீரிட்டோடியது - சவுனகாதிரிஷிகளே - சேட்பீராக ஒருவருக்குமனப்பூர்வமானபட்சமுண்டாகுங்காலத்தில் யிப்படிக்கல்லோவிளையவிருக்கின்றது பின்பு ஆதிதேவனாகிய பரமனது கிருபைப்பெருக்காய்ப் பவுத்திரமாக விருக்கின்றபிராட்டியார் கொங்கைகளினின்றும் ஆறிய அமுதத்தினைப் பிறகாசம்பொருந்திய இரத்தினக்கிண்ணத்திற் சேர்த்துத் தமது பிறியமுள்ள புதல்வனுக்குப் பரிந்துகொடுத்தனள், இவ்வாறு சொற்ன கலசத்துக்கொப்பாகிய திருமுலைப்பாலைத்தெவுட்ட ஊட்டிவித்தபின்பு பிறியமாய்க் குமாரசுவாமியை யிடையிலெடுத்துக் கொண்டுபோய் எமது கர்த்தனாகியசிவபிரான்முன்பு சேவிக்கச் செய்தகாலத்திற் பரமனானவர் பூரணகடாட்சம் வைத்துத்தமது திருக்கரங்களை நீட்டிக்குமாரனைப் பரிந்தெடுத்து மார்பிற்சேர்த்து முத்தாடி மகிழ்ந்தவராய்த் தமதுபக்கத்தி விருத்திக்கொண்டனர், பிறபலவாஞ்சைக் கேதுவாகிய பாலசுப்பிறமணியக் கடவுளானவர்யிவ்வாறு வீற்றிருந்தகாலத்திற் பிராணிசஎனைத்தினையும் உலகவியாபாரநிமித்தம் முன்னமே பெற்றருளிய பார்பதிதேவியையும் பரமனானவர் கரத்தினைத்தாழ்த்தி அணைத்தெடுத்து தமதிடப்புறத்திற் சேர்த்தனர், இயல்பாகப் பரிமளித்திராநின்ற கூந்தலையுடைய எமதிறைவிக்கும் எமதிறைவனுக்கும் மத்தியிற் புத்திரசிகாமணியாகிய குமாரதேவர் வீற்றிருந்தகாட்சியானது பூமியின்கண் தோற்றநின்ற யிரவுபகலுக்கு மத்தியிற் சிவந்தநிறம்பெற்ற அந்திப்போதானதுகாட்டுமாறுபோலவிளங்கியது இப்பிறகாரம்ரிஷபவாகனத்தின்மீதெழுந்தருளியஉமாபரமேஸ்பரர்மத்தியிற்செயசாலியாகியகுமாரசுவாமிவிளங்குவதைபிரமன் இந்திரன்முதலாகியதேவர்க்கள்தெரிசித்தமாத்திரத்தில் ஊழிகாலத்திற் சத்தசாகரங்களும்பெரும்புறக்கடலும்ஏகமாய் ஆற்பரித்தெழுவதைப்போலக் கல்லென்னும் ஆரவாரங்களுடன் முன்பின்மற்ற யிருபாரிசங்களினும் நெருங்கிச் சூழ்ந்துகொண்டு புகழ்வதாயினர், சரபப்பட்சியாகவெழுந்து நாரசிங்கத்தினது விருப்பையடக்கிய சிவபிரானிடதிரு நுதல்விழிகளில் அவதரித்தகுமாரதேவப் பிறவுமுகமோ கேட்டருள்க இடைவிடாமல் பாதித்தலைக்குஞ் சூரபதுமனிட்ட தகாதவினைத் தொழில்களைப் பலகாலமாகச்செய்துசெய்து தேவரொனப்புகழப்பெற்ற யாங்கள் சகலத்திராளும் யிகழ்ந்துபேசும்படியான குறைபாடுகளைப்பெற்று வாடுகின்றனம், ஆதலாற் கர்த்தனே யினிமேலாவது கிருபை செய்து எங்கள் பகைவனாத் தலைத்துபாதுகாத்து ரட்சிக்கவேண்டுந் தேவரீனாயன்றி வேறுகெதியில்லையென

ப்பரிமளமிகுந்த கற்பகம் பாரிசாதமுதலிய புஷ்பவருஷங்களைச் சொ
ரிந்து பலதரம் பணிந்தெழுந்து வாழிவாழியென்று ஆசிகளைச் சொல்லி
க்கொண்டாடுகின்ற சமையத்திற் பீதாம்பரத்தினாற் செய்யப்பட்டிரு
க்கியிராநின்ற ரவிக்கையினைப் பிறியெழுவதைப்போல விம்மிச்சொற்
ணகலசத்தை யொத்திராநின்ற தனபாரங்களையும் மயிலினிறகினடியை
நிகர்த்த தந்தபந்திகளையும் பவழத்தினைப்பழித்த சிவந்த அதரத்தினையு
ம் பூரணச்சந்திரனையொத்த அழகிய திருமுகமண்டலத்தினையும்படைத்
து பாலசுப்பிரமணியதேவனைப் புத்திரவாஞ்சையினாற் போற்றிவந்தபா
க்கியவதிகளாய் பதிவிறதா சிரோமணிகளுமாக விராநின்ற கார்த்திகைத்
தெரிவைமார் அறுவருங்குமாரதேவனாட்பிரியமனமில்லாமல்ரிஷபவாக
னத்தின்மீது வீற்றிருக்கின்ற சிவபிரான்முன்னம் பூமியிற்படிய விழு
ந்துசேவித்துநின்றனர், அக்காலத்தில் எமதுகற்தனானவர் அப்பெண்
கொடிகளின்மீது கிருபாநோக்கம்பாலித்து நீங்களறுவரும் யிந்தகந்த
சுவாமிக்கு முலைப்பால்கொடுத்து அதிகபிறியத்துடன் போற்றியிருந்த
காரணத்தினால் யிக்குழந்தை உங்களுக்குப்பிள்ளையெனப் பெயர்விளங்
கக்கடவது மேலும் உங்களுக்குரியதினங்களில் யிந்த பாலசுப்பிரமணி
யனிட திருவடிகளிற்பணிந்து விரதங்களைச்செய்து வருபவர் எத்தகைய
ரெனினும்அவர்கள் தீவினைகளைப்போக்கி விரும்பியபேறுகளையுந்தந்து
கடையில்நமதசாருபப்பதவியையுங் கொடுத்தாள்வோமென்று அனுக்கி
ரகஞ்செய்தனர், அக்காலத்தில்முன்னம்பார்பதியார் சரவணப்பொய்கை
யினிடத்தில்வந்து கந்தசுவாமியைக் கண்டவுடன் அதிகபிறியத்துடன்
சமீபத்திற்போய் ஆவலுடனெடுத்துத் தழுவியபோது கொங்கைகளிற்
சுரந்தபாலை வயிரக்கிண்ணத்திற் கறந்து புத்திரனுக்குச் சாப்பிடக்கொ
டுத்த தருவாயில் அதிகரித்தொழுகிய பாலானது ஆற்றினையொத்தோட்
டெடுத்து விண்ணகத்திற் பாயுந் தெய்வகெங்கையைநிகராய்ச்சரவணப்
பொய்கையிற் பெருகிய தருவாயிற் சதுற்வேதங்களையும் பூரணமாக
வோதி அவற்றின் முடிபினைத் தெரிந்திராநின்ற தவச்சிரேஷ்டனாகிய ப
ராசரிஷிக்குப்பிறந்த பிள்ளைகள் அறுவரும் தன்னெறிகளிற்பிசகி கொ
டியகாரியங்களைச் செய்யக்கண்டு மனம்பொறுமற் பெற்றதந்தையா
னவர் சபித்தகாரணத்தினால் மீனுருப்பெற்று அப்பொய்கையினிடத்
துலவியிருந்தவர்கள் அந்நீரிற்பாயும் பாலினையுண்டனர், இப்பிறகாரந்
திருக்கயிலைக் கிறைவியாகிய அம்மன் திருமுலைப்பாலைத் தெவிட்டக்கு
டித்தமாத்திரத்திற் சாபவலியொழிந்து நித்திரைதெளிந் தெழுந்தவனை
ப்போல ரிஷிபுத்திரர் அவ்வடிவினைப்போக்கித் தமதுபழையரிஷிக்கோ
லத்தினைப்பெற்றவராய் அவ்வறுவரும் பொய்கையைக்கடந்து வெளிவ

ந்து சிவபிரானுக்குவலம்வந்து பணிந்தபோற்றுகின்றவர்மீது கிருபை யுற்று ரிஷிபுத்திரரே நீங்கள் யிப்பாரிசத்திலிருக்கின்றபற்வதங்களில் வாசமாய் தவஞ்செய்திருப்பீராகிற் சிலதினத்துக்குப்பின்பு யிந்தபாலசுப்பிறமணியன் யிம்மார்க்கமாக வரும்போது உங்களுக்கு அநுக்கிறகஞ்செய்து ரட்சிப்பனெனத் திருவுளம்பற்றினர், அவ்வருளைக்கேட்டமாத்திரத்தில் மனமகிழ்ந்தவர்களாய் மகாபாக்கியமென்று மீளச்சேவித்து விடைபெற்று தமக்குக்குறித்த தலத்தைநோக்கிப்போயினர், பின்பு எதிரில்நிற்கின்ற காற்திகைத்தெரிவையர் மகாவிஷ்ணு பிர்மதேவன் முதலாகிய தேவர்கள்மீது திருக்கண்சாத்தி உங்கள்பதவிகளிற்சேர்ந்து வாழ்வீரெனக்கட்டளையிட்டு பொன்னையொத்த சடாமண்டலதாரியாகிய பரமன் திருக்கயிலைக்கெழுந்தருளினர். இவ்வாறுதேவரனைவரையும் பிரிந்து திரிபுரதகனராகிய சிவபிரான் வெள்ளியங்கிரியின் மீதுபோய் தமது திருமாளிகை வாயலினருகிற்சேர்ந்த மாத்திரத்தில் ரிஷபவாசனத்தைவிட்டிறங்கி ஒப்பற்றகுமாரதேவனையும் பற்வதராச புத்திரியையும் யிரக்கிக்கொண்டு மெல்லநடந்து அரமனையைச்சேர்ந்து நவரத்தினமயமாகவிளங்குஞ் சபாமண்டபத்திற் பிறவேசித்து சிரோரத்தினங்களினால் அமைந்திருக்கின்ற சிங்காதனத்தின்மீது கிருபைபானது விளங்கத்திருத்தேவியுடன் குமாரதேவர்மத்தியில்விளங்க வீற்றிருந்தனர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே - சிவபிரான் அனுக்கிறகப்படிக்கு அத்தலத்தில்வாசஞ்செய்திருந்த நவசத்திகள் சிலம்பிலுதித்த பிள்ளைகளாகிய வீரவாகுதேவர்முதலிய நவவீரர்களும் இலக்கத்தவரும் தமது முன்னவனாகியபாலசுப்பிறமணியக் கடவுளைத்தெரிசித்த மாத்திரத்தில் மனமகிழ்ச்சியுடன்வலம்வந்துபணிந்து கற்பகமலர்களைத்தூவித் துதித்தவர்களாய் தமது பிதாவைப்போலவும் உயிரையொத்தும் சிவகுமாரனைநினைந்து அவனைப்பிரியாமற் சூழ்ந்திருந்தனர்.

---

# திருவிளையாடற்படலம்

---

சூதபுராணிகர்நைமிசாரணியரிஷிகளைப் பார்த்துயிதுபரியந்தம் சிவசுப்பிறமணியக்கடவுளினது தோற்றமுந் திருக்கயிலாயத்துக்கெழுந்தருளியகதாப்பிரசங்கங்களையுஞ்சொன்னோம்யினிமேற் குமாரதேவர் நடித்த அற்புதத்திருவிளையாடலின் பெருமைகளிற் சிலவற்றையும்விளக்குவோம் அதாவது முற்குறித்தபடிக்குப் பரமசிவமும் பார்பதியம்மனுந் தமதுபுத்திரனைச் சரவணப்பொய்கையினிடத்திருந்து அழைத்து

வந்து வெள்ளியங்கிரியிற்றமது திருமாளிகையிற் சேர்த்துப் போற்றிவருகின்றகாலத்திற் குமாரசுவாமியானவர் தமது துணைவராகிய நவவீரரிலக்கத்தவர்களுடன் கூடிக்கொண்டு பாலபருவத்துக்குரிய திருவிளையாடல்களைச்செய்ய வெத்தனித்தவராய் தமதுதிருவடிகளிற் றரித்திருக்கின்ற தண்டைசதங்கை கிண்கிணியிவைக ளொன்றோடொன்று தாக்கிகலீர்கலீரென்றுசத்திக்கவும்மிடையிற்றரித்திருக்கின்றஅரைவடங்களிற்றொங்கும் மணியினங்கள் கலகலெனஅதிரவும் சிரோரத்தினக் குண்டலங்கள் செவிகளினிடத்திற் பன்னிரு சூரியனையொத்து விளங்கவும் மார்பிற்றரித்திருக்கின்ற மதாணிப்பதக்கம் முத்துமாலை மோகனமாலைகள் பின்னியலையவும் நெற்றிகளிற் றரித்திருக்கின்ற வீரபட்டமானது கார்காலத்தெழும் மின்னிலைநிகர்த்து சொலிக்கவும் திருக்கயிலாயவெல்லையெங்குமுலவி விளையாடியும் சபைகள்தோறுஞ்சென்று நடித்தும் புஷ்பங்கள்மலிந்திராநின்ற தடாகங்களில் மதயானையைப் போலத் துணைவருடன் விழுந்துகலக்கியும் சிறுதென்றற் காற்றசைந்திருக்கும் சோலைகள் நந்தவனங்கள் உத்தியானவனங்கள் முற்றும்போய் மலர்களைப்பறித்துச்சூடியும் செடிகளைக்குலுக்கியும் கனிவகைகளை யுதிர்த்தும் எக்காலத்தும் எவர்களாலுங் கண்டறியாத யிடங்களிற் பெருகுங்கான்யாறுகளின்முழுகி நீந்தியும் சரபசார்த்தூலமுதலிய மிருகங்கள்வாசமாய் வானத்தினைத்தாவவிருக்கின்ற பாரித்தபர்வதங்களின் உச்சியிலேறி ஒன்றினிலொன்றிற்பாய்ந்தும் விசாலமாயிராநின்ற குளங்கள் ஏரிகளிற்புகுந்து செலங்களைவாரிவாரிஇறைத்தும் நதிகளின்பிரவாகங்குறைந்த முன்னிலையிற்றோன்றும் மடுநீரிற்குதித்து முதலைகளைப்பற்றி வால்களைமுடிந்தெறிந்தும் ரிஷிகள் அகோரதவங்களையும் யாகங்களையும் செய்வதற்கமைத்திராநின்ற ஸ்தம்பங்களின்மீது தொம்பரவரைப்போலப் பாய்ந்து ஒருவிரலையூன்றிநின்று லகுக்கொண்டு மற்றவைகளினிடத்திற் குதித்தும் தபோநிதிகள் வாசமாயிராநின்ற பர்ணசாலைகள் முற்றும்நுழைந்து அவர்கள் க்ஷேமங்களை விசாரித்தும் உமாபரமேஸ்பருக்கினிய குமாரதேவர் அடியேன்மனத்தினையும் ஒருபொருளாகநினைந்து வாசமாய் அஞ்ஞானவிருளைப் போக்கியாண்டும் சந்திரசடாதரக்கடவுள் வீற்றிருக்கின்ற ஆலயங்கள்தோறும்போய் தெரிசித்துக்களித்தும் தமதுதந்தையாகிய உமாபரமேஸ்பரர் களித்துவங்கனமாக விருக்கின்ற திவ்வியஸ்தலங்கடோறும்உலவி திருநடனங்களைச்செய்து களிப்பித்தும்மகரந்தங்களையிறைத்துத் தேனைப்பெருக்கிப் பரிமளித்திராநின்ற புதியமலர்களை வாய்த்த கடப்பவிருட்சங்களினால் நிறைந்ததோப்புகளிற் சென்று மலர்களைப்பறித்து கொண்டையிற்சூடி சந்தோஷித்தும் வேதசாஸ்திர முத

வீய கலைக்கியானங்களை ஓதுந்தலங்களினும் மதுரமாகியயியலிசை நாடகமென்னும் முத்தமிழினங்களை ஆராயும் மன்றங்களினும் போய்த்தமதுபெருமைகளைப்போற்றுகின்ற விதங்களைச்செவிகளுக்கினிமையாகக் கேட்டும் சமுத்திரஞ்சூழ்ந்த பூவட்டத்தினிடங்களெங்குமுலவி அவ்வவ்விடங்களினிரானின்ற அதிசெயங்களை வேடிக்கையாகப் பார்த்தும் அஷ்டதிக்குகளிற்சென்றுநாடியும் அளவையில்லாதசத்தசாகரங்களினும் பெரும்புறக்கடலினும் செப்படி வித்தைக்காறனைப்போலநடந்து திரிந்தும் விசாலமாகவிளங்கும் விண்ணிடங்களிற் கந்தருவனைப்போலப் பறந்தும் கெருடகாந்தருவர் சித்த வித்தியாதரர் முதலியர் பதங்களிற் போய் அவர்களுடன் குலவியிருந்தும் திரிலோகாதிபதியாகிய தேவேந்திரன் களித்திருக்கும் சொற்கலோகமுற்றுந்திரிந்து கண்டுவியந்தும் தவங்களிற்சிறந்தயோகிகள் சத்தரிஷிகள் அஷ்டவசுக்கள் பதங்களிற்போய்கெம்பீரமாகவுலவியும் உந்திகமலவாசியாகிய பிரமன்வீற்றிருக்கின்ற மனோவதிநகரிற்போய் அவடங்களிலிரானின்ற மகத்துவங்களைப்பார்த்தும் அஷ்டலட்சுமிகளுங்குடிகொண்டிருக்குஞ்செல்வநலங்களைவாய்ந்த மகிமையுள்ளவைகுந்தநகரினைக்கண்டுகளித்தும் எமதிறைவியாகியபராசத்தி வாசமாயிருக்குந்தலத்தில் யிடைவிடாமலிருந்து விளையாடியும்மூன்றும்பிறையினைச் சடாமகுடத்திற்றரித்தருளிய பரமேஸ்பரர் வாசமாயிருக்கின்ற பதத்திற் பிரியாவிடையாகக் காட்டியும் சிவபிரான் அனுக்கிறகத்தினாலுண்டாயிருக்கின்ற ஆயிரகோடி அண்டங்கடோறும் நிமைப்போதிற் சென்று சென்று அத்தலவாசிகள் அற்புதமடையத்தாண்டவமாடியும் வருணமண்டலம் வாயுமண்டலம் அக்கினிதேவன்பதம் வானவெல்லை அண்டபித்திகையின்மேற்பட்டயிடங்களெங்கணும்நிறைந்து எங்குந்தாமாய் நடனங்களைக்காட்டியும் யிப்படிக்குத்திரிகின்ற பாலசுப்பிரமணியக்கடவுளானவர் சிலயிடங்களிற் சண்முகங்களைக் கொண்டு தோற்றியுஞ் சிலவிசை ஒருமுகத்தைத் தரித் துலவியும் சிலகாலங் காளைப்பருவனாகச் சஞ்சரித்தும் சிலகாலம் வேதபாரகராகிய பிராமணர்கோலமாகத்தோற்றியும் சிலபோது தவங்களிற்சிறந்த முனிபுங்கவர்கள்கோலத்தினைத் தாங்கிநின்றும் சிலதலங்களில் அம்புருத்தூணீரத்தை முதுகிலிருக்கிக் கரங்களிற்றனுசுகளைப்பற்றிச் சுத்தவீரனாக எதிரின்றித் திரிந்தும் சிலகாலம் பாதசாரியாகச்சென்றும் சிலகாலம் உத்தமஅசுவத்தில் விளங்கிவையாளிவிட்டும் சிலகாலம் மதயானையின்பிடரியில் வீற்றிருந்துபவனிவந்தும் சிலகாலம் நவரத்தினமயமாகிய ரதத்தில் ஆரோகணித்துத் துரத்தியும் சிலகாலம் வலிபெற்ற யாளியின்மீது தோற்றியும் சிலகாலம் முறுக்கியகொம்பினைப் பெற்றிருக்கின்ற ஆட்டுக்கடாயின் மீது

சென்றும் சிலகாலந் தங்கமயமாகிய விமானத்திற்போகியும் சிலகாலம் ஆகாயவெல்லையிற் சித்தரையொத்துலவியும் சிலகாலம் சர்வாயுதபாணியாய்ச் சூரனைப்பகைத்துச் சண்டைகொடுக்கப் பாய்ந்தும் சிலகாலம் மணிகளினைத் திருக்கரத்திற்பற்றி கலகலவென்றசைத்தும் சிலகாலம் பிள்ளாங்குழலூதியும் சிலகாலம் ஓசைமிருத்தளக்காளதுத்தாரியிவற்றைமுழக்கியும் வீணைகளை மீட்டி தேவகானங்களைப் பாடியும் தப்பட்டை உடுக்கைசிறுபறைமுதலிய வாத்தியங்களைச்செய்தும் எத்தகையோனும் அதிசெயித்துக்கேட்டிருக்கும்படிக்குருகங்களைப் பாடியும்ஆனந்தக்கூத்துகளைக்காட்டியும் யிவ்விதங்களாகக் குமாரதேவர் பற்பலஉருவங்களைக்கொண்டு எவ்விடங்களினுந் தோற்றநின்று அற்புதத்திருவிளையாடல்களைச்செய்துவருகின்ற தருவாயில் உலகங்களைப் படைத்த மாதாவாகிய பராசத்தியானவள் யிவற்றினைக்கண்டு அதிசெயங் கொண்டு மகிழ்ந்தவளாய் பிறப்பிறப்பற்ற பரம்பொருளாகிய சிவபிரானைவணங்கிப்போற்றிக்கர்த்தனே யிதுவென்னஅதிசெயம் அறுதோற்றங்களாகவிருந்து நான் சேர்த்தணைக்கஒருருவாகியநமது குமாரனானவன் சிறுகுழந்தைப்பருவத்தினைக்கொண்டு நடிக்குந் திருவிளையாடல்களைப் பார்க்குமிடத்தில்எனக்குமிகவும் அற்புதமாகவிருக்கின்றது யிவனையொத்தவர்களைத்தேடிப்பார்த்தாலும் யாவனையும் ஒப்புச்சொல்லப் படவில்லை ஆதலால் மாயவித்தைகளுக்கு முதன்மையாகவிளங்கிஅற்புதவினோதங்களைக்காட்டும் யித்தபாலன்காரணங்களை எனக்குப்போதையாகும்படிக்கு அனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்று கருத்தஅளக பாரத்தினைவாய்ந்த அம்மனானவள் தனக்கொன்றுந் தெரியாதவளைப்போலக் கேட்டபோது திரிபுரதகனாகிய பரமன் திருநகைகொண்டு பெண்ணே உனதுதிருக்குமாரன்குணாதிசெயங்களை மன்னுயிரனைத்துந் தெரிந்துபோற்றி கிறுதாந்தராதற்பொருட்டு வினவினை உத்தமியே அவன்வரலாற்றினைக்கேட்பாயென்று சிறடையுற்றத் தெரிவிப்பதாயினர், முற்குறித்தபடிக்கு நமதுநுதல்விழிகளின் மூலமாகத்தோற்றிய குமாரதேவனைக் கங்கையானவள் எந்திச்சென்று சரவணப்பொய்கையினிடத்திற் சேர்த்தகாரணத்தினுற் காங்கயனென்னுந் திருநாமத்தைப் பெற்றான் அழகிய புஷ்பங்கள் மலிந்து பொலிவாகவிருக்கின்ற சரவணத்திற் சிலகாலந் தங்கியதாற் சரவணபவனென்று சகலாலும்புகழத்தக்க திருநாமத்தினைக் கொண்டான் அத்தருவாயில் அன்னையைப்போலப் புத்திரவாஞ்சையினுற் கார்த்திகைத்தெரிவைமார் அறுவரும்பரிந்துதங்கள்கொங்கைகளிற் பெருகியபாலைத்தந்துபோற்றிய முறையினுற் கார்த்திகேயனென்னும் பெயரினைத்தரித்தான் யித்தகைய மகத்துவங்களைப்பெற்றிருக்கின்ற யிக்குழந்தை அறுவகைப்

பட்டிருந்ததை நீயானவள் சேர்த்தொன்றுபடுத்திய பெருமையினுற் கந்தசுவாமியெனத்துதிக்கும் திருநாமத்தைப்படைத்தான் யிஃதன்றியும் நமக்குப்புராதன முகங்களாறுண்டு அவைகள் யிந்தகந்தசுவாமிக்குச்சண்முகங்களாக விளங்குகின்றது மேலும் பழமையாக விளங்கி யிருக்கின்ற தாரகப்பிரமத்தின் ஓசையானது ஆறெழுத்தாகத்தோன்றும் அவை ஒன்றுபட்டு உன் திருக்குமாரனது நாமத்துக்குரிய சடாட்சரங்களாகநின்றது, ஆதலால் ஆறுமுகன் நமது சத்துவத்தினைக் கொண்டிருப்பவன் அவனுக்கும் நமக்கும்பேதமில்லை நம்மைப்போலவே சராசரப்பிரபஞ்சங்களிற் பரிபூரணமாக எவ்விடத்துந் தோற்றநின்றனன், பார்ப்பதியேயின்னமும் அவன்பெருமைகளைக் கேட்பாயாக திரிகாலங்களாதியாகிய சமஸ்தமுந்தெரிந்த சற்வக்கியன் மேலுந் தம்மைப்பத்தியுடன் பூசித்துப்பணிந்த புண்ணியவான்களுக்கு யிம்மையிற் சகலசம்பத்துகளையும் ஞானபோதகமுதலான பேறுகளையுந்தந்து மறுமையிற் சனனமற்றமோட்ச சாம்பிருச்சியத்தினையுந் தரவல்லன் யித்தகைய மகத்துவமுள்ள பாலசுப்பிரமணியனானவன் பிற்காலத்திற் பிரமனைவளைத்துக் கொண்டு வேதங்களுக்கு மூலமாகவிருக்கின்ற பிரணவத்தின்பொருளை வினுவி அவன் அதனுண்மையைச்சொல்ல வகையறியாமற் றியங்கக்கண்டு சிரங்களிற்குட்டி கொடியகாவலில் அடைத்துவைத்துத் தானேசிருஷ்டிகற்தனாகநின்று உலகங்களில்விளங்கும் பிராணிகளனைத்தினையுங் குறைவறப்பலகாலம்படைப்பன் அதன்பின்பு தமதுதுணைவருடன் வீரமாமயேந்திரபுரிக்குப்போய்த் தேவரோமுதலியனா யலைத்திருக்கின்ற சூரபதுமனையும் அவன் துணைவராகிய சிங்கமுகாசூரன் தாருகாசூரன் யிவர்கள் புத்திரமித்திரகளத் திராதிகளேமுதலிய ராட்சதர்களனைவரையுஞ் சின்னபின்னப்படவாட்டிக்கொன்று பிரமன் விஷ்ணு இந்திரன்முதலிய தேவர்க்கள் துன்பங்களைப்போக்கிப் பழையபடிக்குத் தத்தம்பதங்களிற்சங்கையின்றிச்சேர்ந்து வாழும்படிக்கு அனுக்கிரகிப்பன் யிக்காலத்தில்நான்சொல்லிய காரணங்களனைத்தினையும் நீ பிற்படியிற் றிஷ்டாந்திரமாகக்காணுவையென்று யிளையபெருமாள் வரலாற்றினைப் பரமசிவம் சவிஸ்தாரமாக எமதிறைவிக்குப் போதிக்கக்கேட்டு யிப்படிக்கோவிருக்கின்றது தம்பிசெய்கையென்று மனமகிழ்ந்தவளாய் மேல்நடக்குங் காரணங்களை எதிர்பாத்திருந்தனள், இவ்விதமாக உலகங்களெவற்றினும்பரவித்திருவிளையாடல் களைச்செய்துவருங் குமாரதேவரானவர் தாம்அதுபரியந்தம் நடத்திவந்தமகத்துவங்களுக்கு மேற்பட்டதாகவிருக்கின்ற நடனங்களைமுடிக்கத் தக்கதாகத் திருவுளத்திற்கொண்டு சத்தகுலாசலங்களையும் பெயர்த்தெடுத்து உட்டைகளைப் போலச்சேர்த்தும் மீட்டும்அ

வற்றைமாறுபடுவதாகப் பூவட்டத்தெங்கும் நாட்டியுஞ் சத்தசாகரங்களையும் அவற்றினகரைகளைக் களைந்தெறிந்து பெரும்புறக் கடலுக்குமாறுகலொன்றுபடச்செய்தும் வானத்தினை ஆளாவநிற்கின்ற சக்கிரவாளகிரியினைத்தோற்றுமற் பாதலத்திற் சேரமிதித்தும் ஆரவாரங்களுடன் பெருகுகின்றகங்கைப் பிறவாகத்தைஅணைபோட்டு ஏரிக்கொப்பாகத் தடுத்தும் இருண்டபிலத்தில்நின்று பூமிக்காதாரசத்தியாகத் தாங்கியிருக்கின்றஅஷ்டமாநாகங்களை வலிதிற்பற்றி யிழுத்துப்போய்ச் சொற்ணமயமாகிய மகம்மேருவேமுதலிய குலகிரிகளிற் பந்தித்திறுக்கிக் கிறுபைக்கடலாகிய பாலசுப்பிறமணியக் கடவுளானவர் பிராணிகளுக்குயாதொரு துன்பங்களும்நேராமல் அவற்றினைச்சிறுதேர்களைப்போல வேகமாய்கடகென்று எங்குமிழுத்தலவியும் அஷ்டதிசைகளினுந் தாங்கிநின்றஐராபதமேமுதலிய யானைகளைப்பிடித்து ஒன்றுடனொன்றை மடக்கொலுப்பிக்கண்டுகளித்தும் வானகத்திற்பரவியோடுந் தெய்வகெங்கையினது செலப்பெருக்கினுல் அதிகசுவாலையைக் கொண்டிருக்கும் வடவாமுகாக்கினியை உருத்தோற்றுமல் அவித்தும் அழகியசிறகுகளைப்பெற்றகெருடனையும் வாசுகியென்னுங் கொடியநாகத்தையும் பிடித்துவந்துபோர்செய்ய விட்டுப்பார்த்தும் பாதலத்தில்வாசஞ் செய்யாநின்ற நாகராசர்களையெடுத்துவந்து பூமியெங்கும் ஓடவிட்டும் மண்ணுலகெங்கினுமிருக்கின்ற பற்வதங்களனைத்தினையும் பாதலவெல்லையெங்கும் நிறையவடுக்கியும் ஆயிரங்கிரணசமோகங்களைப் பெற்றிருக்கின்ற சூரியனைப்பற்றிச் சந்திரன்செகியில்விட்டுங் குளிர்ச்சிபெற்ற சோடசகலைகளைப்பெற்றிருக்கின்ற சந்திரபகவானைச் சூரியநடையிலோட்டியும் இந்திரன்முதலிய அஷ்டதிக்குப்பாலகர்கள் வாசஞ்செய்திருக்கின்ற நகரங்களைப்பெயர்த்தெடுத்துப் பழையபடிக்குத்தோற்றுமல் மாறுபட்டுக்காட்டத் தலைகீழாகமாறிவைத்தும் சத்தமேகங்களையும் பிடித்து அவற்றினிடத்திராநின்ற இடிகளுடன் மின்னற்கொடிகளையுஞ் சேர்த்தெடுத்து வண்டினங்கள் மொய்க்கப்படாத மலர்மாலைகளாகத்தொடுத்துத் திருக்கழுத்தினிடத்தணிந்தும் பன்னிருசூரியர் சந்திரர்முதலிய நவக்கிறகங்கள்ராசிகள் மற்றுமிராநின்றவர் ஏறிச்செல்லும் விமானங்கள் தேர்கள் முதலானவைகளிற்பிணித்திருக்குங் கயற்றினைக்கோர்வையாகச்சேர்த்துத் துருவனென்பவன் பற்றிக்கொண்டு மகம்மேருவினது சிகரத்தில்நின்று அவற்றின்நடைகளிற் பிசிகின்றிச்சென்று காலக்கிறமங்களைக் காட்டு மாறுவிட்டுக்கொண்டிருக்கின்ற யாசங்களிற் றமக்கிஷ்டமாகிய துகளைப் பறித்துக்கரங்களிற் பற்றித்தாம் பூவட்டமத்தியில்நின்று அஷ்டதிக்குகளினும் வட்டாகாரமாக ஓடவிட்டுங் களங்கற்றிதமாகவிளங்கும் வானவெல்லை

விற்போகின்ற தனுற்ருசியினையும் இந்திரசாபத்தினையுங்கரங்களிற்கொ
ண்டு நாரிகளை வட்டாகாரமாகப்பிகிந்து நவக்கிறகங்கள்முதலிய நட்சத்
திரங்களை உண்டைகளாகப்பூட்டித் தேவர்கள் மகுடங்கள்பொருந்தியசி
ரங்கள் நெற்றி மார்பு புசங் கண்டம்யிவ்வுறுப்புகளைக்குறிகொண்டுபிச
காமறப்படச்செலுத்தி விற்சாத்துரியங்களைக் காட்டியும் யிவ்விதங்களாக
ச்சீவன்முத்தர்கள் விழிகளினன்றி எனையருக்குத்தோற்றப்படாத நிற்ம
லக்கடவுளாகிய குமாரசுவாமியார் விண்மண் பாதலவெல்லைகளி னிராநி
ன்றபிராணிகள் மதிமருண்டு திகைத்துவாடி நாசமடையாமல் மாயாவி
த்தைகளாக அளவுபடாத அற்புதத்திருவிளையாடல்களை எத்தலங்களினும்
நடாத்திவருகின்றகாலத்தில் வீரமாமயேந்திர புரியினும் மற்றயிடங்க
ளினுமிராநின்றஅவுணர் ராட்சதர்கள்மேற்குறித்த விநோதக்காட்சிகளைக்
கண்டு யிந்தமாறுபாடுகளையும் விபரீதங்களையும்யாவர்செய்தனரொன்று
அதிசெயித்து மிகவுங் கொடும்பாதசங்களுக்குட்பட்ட துற்மாற்கர்க
ளாதலால் எமதிறைவனுகிய குமாரதேவர் திருவடிவினைக் காணுமல் மய
ங்கினர், மேலும் யின்னமுஞ் சிலபகல் உயிர்பெற்று உலகங்களிற்சஞ்
சரித்து வாழவிருக்கின்ற காரணத்தினுற் சிவகுமாரன் தமதுதோற்றத்தி
னைத்தெரியக்காட்டாமல் எங்குமுலவி நடிக்கு முன்னிலையில்ராட்சதர்க
ளுக்கு யிச்செயல்களை நடத்துகின்றவனைக்கண்டு தெளியவேண்டுமென்
கிற அவாவினுற்றங்களாற்கூடியவனாயிற் றேடித்தேடித் தெரியாதவர்க
ளாய்ப் பிரமன் விஷ்ணுவினுற் றேடிக்காணப்படாத பரமேஸ்பரர் மா
யாவிலாசமென நிச்சயித்திருந்தனர், இஃதன்றியில் உலகங்களி லிருக்கி
ன்ற மனிதர் குமாரசுவாமியினது செய்கைகளைக்கண்டு பிறிமித்தவர்களா
ய்க்கொடுங்கோல் செலுத்தித்தினமா அலைத்து அரசுசெலுத்திவருகின்ற
ராட்சதர்கள் அனைவரும்மாளும் எதுவைக்குக்காரணமாகவிருக்கின்றது
மேலும் அதற்குத்திஷ்டாந்திரமாக யித்தகைய உற்பாதங்கள் தோற்று
கின்றதென்று பயப்பிருந்திகளுடன் பூலோகவாசிகள் யிப்படிக்கு வசு
னிக்கவும்- அஷ்டதிக்குப்பாலகர்சூரியன்முதலாக அவர்தோற்றத்தினைத்
தெரிசிக்கப்படாமையால்மதிமயங்கியிக்காரணங்கள் அவுணரால்முடிவ
தன்று ஆதலால்யாவர்யித்திறங்களைச் செய்கின்றனரோவென்று ஐயப்பட்
டுச்சகலரும்ஒருயிடத்திற்சேர்ந்து என்னவிளையவிருக்கின்றதோவெனவ
ருந்தினர்இப்பிறகாரம்மருண்டதேவர்கள் நமதிறைவன்மகம்மேருவினு
துசாரவிற்பதுங்கியிருப்பதாகக் கேழ்விப்பட்டனம்பிற்மதேவனும் அ
த்தலத்திலிருப்பதற்கையமில்லை ஆதலாற்ருமதஞ்செய்யாமல்நாமனைவரு
ம்மேருகிரிக்குப்போய் அவர்களைக்கண்டுயிவ்வதிசெயங்களைச் சொல்லு
வோமாகில் யிதுகள்விளைகின்ற மூலத்தைத்தெரிந்துகொள்ளலாகும்மே

னும் அதற்குவேண்டும் சாக்கிரதைகளையுஞ் செய்வனெனத் தீர்மானித்தவர்களாய் நாம்போகின்ற மார்க்கத்தில் அளவற்ற அண்டங்களுக் கிறைவனாகிய சூரபதுமனால் என்னகெடுதி நேருமோ வென்னும் மனவருத்தத்துடன் பதுங்கிப்பதுங்கிச்சென்று மகம்மேரு பற்வதத்தின்மீது போகின்றகாலத்தில் ஆறுமாமுகக்கடவுள் நடிக்கின்ற அற்புதத்திருவிளையாடல்களைப் பார்த்துப்பார்த்து அதிசெயங் கொண்டு அவர் உருவுதோற்றப்படாமல் மனவாட்டத்துடன் திகைத்துப்பலதிக்கிலும் விழிகளைப்பரப்பியிருக்கின்றதேவேந்திரனைக்கண்டு சமீபத்திற்போய்த் திருவடிகளிற் பணிந்தெழுந்து கரங்களைக்கூப்பினவர்களாய் இறைவனே எக்காலத்துமில்லாத அதிசெயங்களைக்கண்டு தேவரீருக்கு விண்ணப்பஞ்செய்து கொள்ளவந்தோம் அதாவது சமுத்திரஞ்சூழ்ந்த பூவட்டங்களினும்வானநாடுகளினும் பழமையாக நிலைபெற்றிருந்த பொருள்களனைத்தும் மாறுபட்டுஅதிசஉத்பாதங்கள் விளைகின்றது யித்தகைய திரிபுகளையாவர்செய்கின்றனரோ யிவ்விதமெனத் தெரியப்படவில்லை- யிஃது அவுணரால்முடிவதன்று யிம்மாயவித்தைகள் நேர்ந்ததற்குக் காரணமென்னே சத்தனே தெரிவிக்கவேண்டுமென்று வேண்டுகின்ற தேவர்க்கள் கோறிக்கையைக்கேட்ட இந்திரன் அதிசெயித்து நீங்கள்கண்டவாறே நானும்பார்த்துப் பிரமித்திருக்கின்றனன், யிதன்மூலஞ் சற்றுந் தோற்றவில்லை ஆதலால் நாமனைவரும்போய்ப் போற்றுமறைப் பீடத்தில் வீற்றிருக்கின்ற பிர்மதேவனைக்கண்டு யிதன்காரியங்களைத்தெரிந்து கொள்ளுவோம்புறப்படுங்கோளென்று சொல்லியதற்குச் சகலருஞ்சம்மதித்துப் பிறையாணைப்படுகின்றதறுவாயில் அவர்கள் முன்செய்த தவப்பேற்றினால் உலகங்களெங்கிலும் நடித்திருந்த அறுமுகக்கடவுள் இந்திரன்முதலாகியதேவர்களுக்குத் தோற்றத்தக்கதாக ஒருமுகத்தைக் கொண்டு சிறுகுழந்தையாய் அப்பற்வதத்தின் மத்தியிற் காணப்பட்டவராய் மனவாட்டத்தினைப்பெற்றிருக்கின்ற தேவர்க்கள் சந்தேகங்களைக்கடந்து சந்தோஷிப்பதாகத்திருவுளத்திற்கொண்டு யிவையனைத்துந் தமது செய்கைகளாகக்காட்டவெழுந்தருளிய சிவகுமாரனானவர் அப்பொன்மலையினைக் கிடுகடென்றுஅசைவதாகக் குலுக்கினவராய் மதயானையானது தடாகத்திலிறங்கிக்கலக்கித் தாமரைமலர்களைப் பறித்தெறிவதுபோல அப்பற்வதத்திற் றோற்றநின்றபொற்சிகரங்களினை ஒடித்துச் சிறுபிள்ளைகள் பந்துக்களையெறிவதுபோலவெடுத்துத்திசாதிசைகளில் வீசிநிற்கின்றகுமாரசுவாமியார்செய்கைகளை இந்திரனாதியாகியதிசைகாப்பாளரும்மற்றதேவர்கூட்டமுங்கண்டுபிரமித்தவராய் யிதுவரையில் நாங்கண்ட மாறுபாடுகளைச் செய்தவன் யிவனேயாமெனக்குறித்தவனுத்திரங்களில்எதிரின்றித்திரியும்மிறுகாரக

றிய சிங்கத்தின்மீது பகைத்தெதிர்ந்த மதயானைத்திரளினையொத்துவீ றியெழுந்து யிவனைப்பாலகனென்ன நினைக்கப்போகாது யிவன்வல்லபங் களைப்பார்க்குமிடத்திற் கொடியமனதைப்பெற்றராட்சதர்களினுங்கொ டியனுகக்காணுகின்றனன், மேலும் எவ்வேவர்களாலும் முடித்தற்கரிய மாயவித்தைகளைப் பூர்த்தியாகக்கற்றவனென்று சகலரும் ஏகமுகமாகநி ன்று யிவனைவளைந்துகொண்டு சண்டைகொடுத்து செயிக்கவேண்டுமெ ன்றும் நிதானித்தவர்களாய் அத்தலத்திலிருந்த தேவர்களனைவருஞ்சேர் ந்து பாலசுப்பிரமணியக்கடவுளுடன் உயித்தியத்துக்கு நேருகின்றதறு வாயில் இந்திரனுனவன் தனக்கு வாகனமில்லாமையால் முன்னம்பானு கோபனுற் றந்தங்களையிழந்து வருந்தியோடித்திருவெண்காடென்னுந் தலத்தினைச்சேர்ந்து அவ்வாலயத்தி லெழுந்தருளியிருக்கின்றசிவக்கொழு ந்தைப். பத்திவயிராக்கியங்களுடன் பலநாள்வழிபட்டு வருமுன்னிலையி ற்கற்தன் அனுக்கிரகத்தினுற் பழையபடிக்குத் தந்தங்களைப்பெற்றிருக் கின்ற அயிராபதத்தினை நினைந்தமாத்திரத்தில் அதிவேகமாகநடந்து மக ம்மேருவினிடத்திற்சேர்ந்து தனதிறைவனைவணங்கி நிற்கின்றவெள்ளை யானையின்மீது இந்திரனுனவன் ஆரோகணித்து வச்சிராயுதம் பிறகாசம் பொருந்திய வாள் தனுசு கெதைமுதலிய ஆயுதங்களைத்தாங்கிப் போர்க் கோலத்தனுய்த் தன்சேனைகளுடன் சிவகுமாரனை முத்திக்கை யோட்டுக் கொண்டனர், அஃதெத்தன்மையாக விருக்கின்றதெனிற் சற்வசங்கார காலத்திற் பிறசண்டவாயுவும் வடவாமுகாக்கினியும் ஆர்ப்பரித்தெழுந்த தறுவாயில் அபலமாகிய சிறுமலைகளெதிர்ந்ததுக்கொப்பாகவிருந்ததுயி வ்விதமாக நினைத்தற்கரிய மகிமையினையுடைய குமார சுவாமியின்மீது இந்திரனும் ராட்சதரால்வருந்திவந்த தேவர்களும் போர்செய்யத் துட ங்குமுன்னிலையிற் குளிர்ச்சிபெற்றிருக்கின்ற தாமரைக்கமல வாசிகளாகி ய மகாலட்சுமியையும் சரஸ்பதியையுந் தமதிரண்டு நேத்திரங்களாகப்ப டைத்திருக்கின்ற பராசத்திகுமாரனுகிய கந்தசுவாமி யானவர் தம்மைத் தேவர்க்கள் சத்துருவாகவெண்ணி வளைந்துகொண்டதைக் கண்டு திருந கைகொண்டுயிவர்களைஒருபொருளாகமதியாமற் பழையபடியே தமது திருவிளையாடல்களைச் செய்திருப்பதை தேவராசன்கண்டவுடன்சிமு ப்பத்திரண்டு ஆயுதவிதங்களையும் பாசுபதம் நாராயணுஸ்திரம் பிரமசுர முதலிய தேவாஸ்திரங்களையும் ஒன்றனந்தமாகப் பிறையோகிக்கும் போதுவிண்ணவர்களும் சொனைமாரியையொப்ப அஸ்திர சஸ்திரவகை களை எராளமாகச்செலுத்தினர், இவையனைத்தும் அதிகவேகங்கொண்டு போய்ச் சிவகுமாரனை நெருங்கு முன்னிலையிற்றமது கொடுமைகள் மா றிப்பத்தர்கள் அரிச்சிக்கும் புஷ்பங்களைப்போல மெல்லத்தாக்கித் தாங்

கொடிருகின்றதை இந்திரன்கண்டு கோபமிகுத்தவனாய் வச்சிராயுதத்தி னையெடுத்து கிறகிறெனச்சுழற்றி குறிகொண்டு எறிந்துஆர்ப்பரித்தனன் அவ்வலிபெற்ற வயிரப்படையானது அதிகமகிமைகளைக்காட்டி அதிவே கமாகவந்து சரவணபவன் மார்பிற்றாக்கினஉடன் நுண்மணலைப்போல த்துகள்பட்டுப் பறந்தது யிதனை இந்திரன்பார்த்துத் துக்கித்துச்சொல் லுவான் தேவாஸ்திரங்களைச் செலுத்தினம் அவைபிறை யோசனப்படா மற்போயிற்று கடையில்நமது பிராணபதமாக விருக்கின்ற குலிசாயுத த்தினையுங் கடாவினேம் அதுவுந்துகள்பட்டுப் பொடிப் பொடியாய்க் காற்றிற்பறந்தது யினிஎன்செய்வேன் அபாயம்நேருவதாகக் காணப் படுகின்றதென்று எண்ணுதெல்லாம்எண்ணி மதிமயங்கித் தியங்கி வாடுகி ன்றகாலத்தில் அவன்ஏறியிருந்த வலிக்கொப்பற்றவெள்ளையானையானது அதிககோபங்கொண்டு வாலைச்சுழற்றிதிக்கையினைவிசிமேகம்கெற்சித் ததைப்போல விறிட்டுக்கொண்டு முருகக்கடவுளுக்கு நேராக வருவதை உமையவள் திருக்குமாரன் பார்த்தவுடன் மனதிற்சிந்தித்து ஒப்பற்றவி ல்லினையுங் கொடியபாணங்களையும்நிற்மித்து தனுசில்நாணேற்றி அண் டங்களதிரக்குணத்தொனிகொண்டு சூரியனைப்போலப் பிறகாசித்திரு க்கும் அலகையுடைய ஒருபாணத்தினைப்பூட்டி அயிராபதத்தின் நெற்றி க்குநேராகப் பிறையோகித்தனர், அவ்வாளியானதுவெளிப்பட்டவுடன் அக்கினிப்பொறிகளை யிறைத்துக்கொண்டுபோய் தேவர்களுக்கு அதிப னாகிய இந்திரன் யேறியிருக்கின்ற வெள்ளிமலைக் கொப்பாகிய அயிராப தத்தின் நெற்றிகிழியத் தடாரித்தருவிப்பிராணனையுங்கொண்டு வெளி ப்பட்டகாலத்தில் மேகங்கள் அஞ்சிஒடுங்கும்படிக்கு மரணக்கூந்தவி ட்டுக்கொண்டு உதிரம்பெருகவிழுந்து மாண்டதுயிப்படிக்குத் தன்யா னையானது மடிந்ததை இந்திரன் கண்டமாத்திரத்தில் அதன்மீதிருந்து குதித்து அப்புறம்போய்நின்று ஐஐயோ வெகுகாலமாக நம்மையடுத் திருந்தவாகனத்தை யிழந்தோமென்று மிகவுங்கிலேசித்தவனாய் மாற்ச ல்யத்தினைவிடாமல் மின்னலைப்போலப் பிறகாசித்திராநின்ற தனது நெடியவில்லை வட்டாகாரமாக வளைத்துக்கோபித்துக்குமூரமாகிய பா ணங்களைச் சந்திக்கவெத்தனிக்கு முன்னிலையில் ஆதிதேவனுனபரமன்தி ருக்குமாரன் தமததனுசில் ஒருதீட்சணியமாகிய பாணத்தினைத்தொடுத் து இந்திரன்மார்புக்கிலக்காகப் பிறையோகிக்க அதுவும்வெகு மகிமை களுடன்சென்று மார்பைப்பிளந்து உருவியோடிய காலத்தில் மதிமயங் கி வலிகுன்றிவருந்தி விற்போனாமறந்துங் கோபத்தை விடாமல் தான் அருமையாகவைத்திருந்தவலிபெற்ற வேலாயுதத்தினைக் குமாரசுவாமி யின்மீது எறிந்தனன், அதுவும் அதிககொடுமைகளைக்காட்டிவந்து தெ

ருங்குமுன்னிலையிற் புற்றரும்பைப்போலப் பாலசுப்பிரமணியக்கடவுளினது கிரோகத்திற்றாக்கியவுடன் எரிந்து போகக்கண்ட தேவர்களனைவரும் அற்புதமடைந்தவர்களாய் யிதுவென்ன அனியாயம் உலகங்களிற் புகழநின்ற வச்சிராயுதமும் வியர்த்தமாய் அதிகவன்மைபெற்ற வேலும் பிரயோசனப்படாமற் போயதெனப்பேசிக்கொண் டிருக்கும்போது கந்தசுவாமியானவர்மற்றொருகுரூரமாகிய அர்த்தசந்திரபாணத்தினைஎடுத்து வில்லிற்பூட்டிச்செலுத்தி தேவேந்திரன் சிரத்திற்றரித்திருந்த நவரத்னமயமாகிய கிரீடத்தினைப் பொடியாகத்தள்ளிச் சிங்கநாதஞ்செய்து மேலும் ஒப்பற்ற நாராசமொன்றைக்கொண்டு மேகதுசத்தினை வெட்டித்தள்ளி மற்றொருகூரியபாணத்தினால் மார்பிலணிந்திருந்த வச்சிரக்கவசத்தைத்துகள்படுத்தி அவனுங் களைத்துவிழும்படிக்கு எழுதிவ்வியபாணங்களை ஏவினர், கேட்டீர்களோ - சவுனகாதிரிஷிகளே ஆதியிற் சலந்திரன் விஷயத்திற் சிருஷ்டித்திருந்த மகிமையுள்ள சக்கரப்படையினைப்பெற்றுக்கொள்ளவேண்டி மகாவிஷ்ணுவானவர்செந்தாமரை மலரினுக்கொப்பாகவிளங்குந் தமது நேத்திரத்துடன் புதியமலர்களைக்கொண்டு சிவசங்கரமகாதேவதேவோத்தமனேயென்று அருச்சிக்கப் பெற்ற திருவடிகளையுடைய சிவபிரானுக்கினிய குமாரசுவாமிவிடுத்த கொடியபாணங்களேழும் அதிவேகமாகச்சென்று வயிரமலைக் கொப்பாகிய மார்பகத்திற்றாக்கித் தடாரித்துருவியோடியகாலத்திற் வலியினுக் சொப்பற்ற பராக்கிரமசாலியாகிய தேவேந்திரன் பிறக்கினைதப்பி மலைபோலவிழுந்தான் அப்படிக்குத்தமதிறைவனுக்கடுத்த துன்பத்தைக்கண்டதேவரனைவரும் பதைபதைத்து வருந்தினவர்களாய்த் தாங்கள்படவிருக்கின்ற காரணங்கள் தோற்றாமல் அதிகஉக்கிரத்துடன் ஓங்காரப்பொருளாக விளங்குஞ் சிவகுமாரனைச்சகலரும் ஏகமுகமாக வளைந்துகொண்டு அஸ்திரசஸ்திரவிதங்களினால் அகோரஉயித்தியங்களைச் செய்யும்போது பாலசுப்பிரமணியக்கடவுளுந் தமதுகரத்தில்விளங்கும் வில்லினது நாரியையிறுக்கி வட்டாகாரமாகக்கொண்டு நான்குபாணங்களைச்செலுத்தி வருணனைக்கண்டித்தெறிந்து மற்றும் ஐந்துபாணங்களைக்கொண்டு எமதருமராசன்புசவன்மையையடக்கி ஒருபாணத்தினாற்சந்திரனை உருத்தோற்றாமல் வாட்டி இரண்டுவாளிகளினாற் சூரியனைப் பங்கப்படுத்தி இரண்டுபாணங்களினால் வாயுவைத்தகித்து இதோநிமைப்போதில் வெல்லுகின்றனனெனவிரங்கள்பேசிஎதிர்த்த அக்கினிதேவனை நான்குபாணங்களினாற்கெர்வமடக்கி யிவ்விதமாகச் சிறந்ததேவர்களைத் துத்தமுருகவடித்து காலாந்தகனைப்போல நிற்கின்ற பாலசுப்பிரமணியக்கடவுளினது விற்சாதுரியங்களையுங் கரவேக சரவேகத்திறங்களையுங்கண்ட மற்றதேவர்கள் அதி

செயித்து அம்மம்மயிதுவென்ன அனர்த்தமாக விருக்கின்றதுபிறமுகரா
யிருந்தவர்களே யிப்பாடுபடுவாராயின் நம்மாலாகவேண்டுங் காரியமெ
ன்னவிருக்கின்றது உயிர்தப்பிப் பிழைத்திருந்தால் பிற்படிக்குப் பார்த்
துக்கொள்ளுவோம் யினிசற்றுதாழ்ப்போமாகில் நம்மெல்லவரையும்யி
வன்கொன்றுபோடுவதற் கையமில்லையென்று நிச்சயித்தவர்களாய்ச் சர
பப்பட் சியானதுவீறிவருவதைக்கண்ட சிங்கக்கூட்டமானதுவலிகுறைந்
துநடுநடுங்கி ஓட்டமெடுப்பட்டதைப்போல மனங்கலங்கிப் பலதிசைகளி
லும் ஓடிஒளித்தனர்; இவ்விதமாகச் சிவகுமாரனுக் கிடுசெய்யாமற்பறந்
துபோனதேவர்கள் காரணங்களைப் பார்க்குமிடத்திற் பிருதகாலத்தில்உ
தயகிரியின்மீது தோன்றிய சூரியனது கிரணசமோகங்களானவை பர
வியிரவுமுற்றும் விறியிருந்தசந்திரனது சோடசகலைகளின் பிறகாசத்தி
னைமாற்றி விளங்குவதுக்கொக்கும், இவ்விதமாகத் தேவரனைவரையும் பு
றங்கண்டு செயங்கொண்டு விண்ணவர்பட்ட உயித்தியகளத்திற் குமார
தேவரானவர் தனுற்பாணியாய் எதிரின்றிநின்றனர், சவுனகாதிருஷிகளே
அக்காலத்திற் சிவகுமாரன்காட்டிய சவுரியபராக்கிரமங்களை என்போலி
களாற் சாங்கமாகச்சொல்லப்படுவதோ இப்பிரகாரம் தம்மைச்சத்துரு
வாகவெண்ணிப் பகைத்துப்போராடிய தேவர்களிற் சிலர்மாண்டுபோக
வும் மற்றையர் பிராணபீதியினால் எதிரில்நிற்கவஞ்சி ஓடிஒளிக்கவும் யி
வ்விதக்கோலங்கண்டு வீரசிங்கம்போன்று ஒப்பற்றவில்வீரரில் வீரப
ராக்கிரமசாலியாகநிற்கின்ற விசாகப்பெருமான் தோற்றமெப்படிக்கி
ருக்கின்றதெனிற் சற்வசங்காரகாலத்தில் மன்னுயிரனைத்தினையும் நாசஞ்
செய்துலவியசங்கரனை யொப்பக்காட்டியது, இவ்விதமாக உமையவள்
திருக்குமாரன் விண்ணவரனைவரும் மாளவெற்றிகொண்டுஉலவுகின்றகா
ரணங்களைத்தெரிந்த நாரதரானவர் தேவருக்கடுத்த துன்பங்களுக்கிரங்
கி அதிவேகமாகத் தெய்வலோகத்துக்குப்போய் விண்ணவர்களுக்குஆசி
ரியனாகிய பிறகஸ்பதியினைக்கண்டு மகம்மேருவி னிடத்திலிருந்த தேவ
ராசன்தனதுசேனைகளுடன் பாலசுப்பிறமணியர் பிறபாவங்களைத் தெரி
யாமலெதிர்த்து நாசமடைந்தகாரணங்கள் முற்றுஞ் சாங்கமாகத் தெரி
வித்து ஓ தேவகுருவே துரிதமாய் யிதற்கொருமார்க்கத்தினை யோசியுமெ
ன்று தவங்களிற் சிறந்தநாரதர் சொல்லியவாக்கியங்களைத் திரிகாலங்களை
யும்வரையறத்தெரிந்து நடக்கவல்ல பிறகஸ்பதி கேட்டமாத்திரத்தில் ம
னம்வாடினவராய் ஐஐயோ தேவர்கள் வாழ்வு யின்றுடன்போயிற்றே
வென்று பலபலதுக்கவார்த்தைகளைப்பேசி ஒன்றுந் தோற்றாமல் மதிமய
ங்கிக்கிலேசித்துக் கடையில் ஒருதீர்மானத்தைநிதானித்தவராய் சொர்க
லோகத்தினைக்கடந்துமேருகிரியினைநோக்கிவேகமாகப்போய் இந்திரன்

முதலிய அஷ்டதிக்குப்பாலகர் சூரியசந்திரர் மற்றதேவர்க்கள்மும்ம தங்களைப்பெருக்கி விறியிருந்த அயிராபதத்துடன் மாண்டுகிடக்கின்றசமர்க்களத்தினைச்சேர்ந்து பிராணன்களையிழந்து பிரேதங்களாக இந்திரன்முதலானவர்கள் விழுந்துகிடக்கின்ற கோலத்தினைத்தேவகுருவானவர் பார்த்து விழிகளில் நீரைப்பெருக்கித் திரிலோக சக்கிரேஸ்பரனே உனக்கும்மிப்படிக்கு நேருவதோ பரமன் செயலிப்படிக்காயதோ யின்னமொருகாலம்உன்னைப்பார்க்கக்கிடைப் பேனோஎன்செய்வேனென்றுபற்பலதுயரவார்த்தைகளைப்பேசி அதிகமனவருத்தங்களுடன் சுற்றிப்பார்க்குமுன்னிலையில் ஒப்பற்றபராக்கிரம சாலியாகிய சண்முகப்பெருமான் அவ்வாயினேரிடத்தில் வீற்றிருந்து நடத்தும் அதிசெயத்திருவிளையாடல்களைச் சற்வக்கியனாகிய பிரகஸ்பதியானவன் தெரிசித்தவுடன் திடுக்கிட்டு பயபத்திவிசுவாசத்துடன் கரங்களைக்கூப்பிநின்று சிடபநூலின் திறங்களைவரையறத்தெரிந்தவர்களாலும்மெழுதப்படாதசிறந்தவடிவினை வாய்ந்து குழந்தைப்பருவத்தினைப்பெற்று விளையாடுகின்ற சிவகுமாரனைச்சேவித்து சரவணபவன் பெருமைகளைப் பன்னிப்பன்னிப்போற்றி னவனுக்கற்றனேகிருபையுற்று அடியேன்முறைகளைக்கேட்டருள்க, பரமசிவகடாட்சத்தினல் அளவற்றசெல்வச்சம்பத்துகளைப் பெற்றுக்கொடுங்கோலினைச்செலுத்தி ஆளுகின்ற சூரபதுமன் அவன்துணைவராகியசிங்கமுகன் தாருகன் மற்றஅவுணப்பாதகர் உபத்திரவங்களிற்பட்டு இந்திரனனவன் பலகாலமாக நிலைபெறாமல்அலைந்து தன்பதத்தினையும் மிழந்துயிந்தமேருகிரியினிடத்தில் வந்தொளித்திருந்தனன், அவன்கோறியிருந்ததென்னெனில்தேவரீர்திருவடிகளிற் றஞ்சமடைந்துஉம்மைக்கொண்டுசத்துருக்களைக்கொன்றுபழையபடிக்குத்தனதுஅரசுரிமையைப்பெற்றுத் திரிலோகசக்கிரேஸ்பரனுக வாழ்ந்திருக்கநினைந்ததன்றியில்வேறொருகியாபகங்களை யெவ்வளவுங்கொண்டவனன்று மேலும் பலகாலங்களாகச்சிவவிரதங்களைமுதலிய தவங்களைச்செய்து செய்து வாடினவனுக்குப்பரமபொருளாகிய தேவரீர் உற்பவித்து சரவணப்பொய்கையினிடத்திற்சேர்ந்து வளருகின்றதைத்தெரிந்து பழமையாகவிருக்கின்ற தன்பகையனைத்தினையும் போக்கினவனைப்போல அதிகசந்தோஷத்தினைப் பெற்றிருந்தனன், கடம்புவெண்காந்தள் வெட்சிமுதலிய புஷ்பங்களைத் தரித்திருக்கின்ற குமாரசுவாமியே தேவரீர்தொண்டுகளைச்செய்துபிழைக்குங்காலம் பார்த்திருந்த தேவேந்திரன் நீர் யிவ்விதமாகத் திருவிளையாடல்களைச்செய்திருப்பதைத் தெரிந்தவனல்ல மேலும்மகாவிஷ்ணுவே முதலிய தேவர்க்கள் ஆராய்ந்தும் காணவொண்ணுத சிவபிரானும் அவரிடப்பாகத்தமர்ந்தருளிய பராசத்தியும் அவ்விருவர் கிருபாநோக்கம்பெற்ற

மகத்துக்களும் மற்றுஞ் சிவபத்திமான்களும்அன்றி தேவரீர் திருவிளையாடல்களை யிதாராற்காணக் கூடுவதோ யிடைவிடாமற் பற்றியலைக்கின்றகற்மபெந்தங்களாம் உயிரினையும் வருத்து யிவ்விதமெனத் தெரிய வகையறியோம் அஞ்ஞானத்தைக் கடந்தவர்களுமல்ல அத்தகைய சிற்றயணர்வினைப்பெற்ற பாமராளாகிய நம்மையொத்தவர்களாற் றமது அற்புதநடனங்களைக்காணப்படுவதோ ஆதலால் இந்திரனுக்குச் சற்றுஞ்ஞானமில்லாதகாரணத்தினாற் றேவரீர் நடனங்களைப்பார்த்து அவற்றைத்தியனவாகவெண்ணிக்கொடியசண்டைகொடுத்தனன், அவ்வபராதத்துக்குத்தக்கதாக அவனையும்மீறிவந்த அயிராபதத்தினையுங் கொன்றீர் மற்ற தேவர்களும் நல்லறிவுவிளங்காமையால் தேவரீரைப்பகைத்துப்போர்செய்துமாண்டனர், கர்த்தனே தந்தைக்குப் பிழைகளைமுடித்த புத்திரரிடத்திற்றயையற்று தானேகொல்லத் துணிவனாயில் மற்றியாவர் அவர்களைப் பாதுகாத்து ரட்சிக்கவல்லர், மேலும்பூர்வத்திற் சச்சிதானந்தமூர்த்தியாகிய சிவபிரான் சரபப்பட்சியாக வெழுந்தகாலத்தில் அழகிய கருடவாகனனாகிய விஷ்ணுவானவர் அவதாரங்கொண்டுவீற்றிருந்த நாரசிங்கத்தினை வாட்டினரல்லது மின்மினிப்பூச்சியினைக்கோபித்தனரோ அப்படிக்குச் சிறுவராயில் அவருக்கு அஃதுவெற்றிப்பாடாவதோ அவ்வாறேஉலகங்களைஅலத்துத்திரிகின்ற அவுணர்கள்நாசமடைய அவர்கள்குலத்தினை வேரறக்களைந்து விவேகமற்றறினராகிய தேவர்க்கள் தேவரீர்திருவடிகளை எக்காலத்துஞ் சிந்திப்பவராதலாற் கிருபாசமுத்திரத்தினையொத்தகர்த்தனே அவர்களறியாமற் செய்தகுற்றங்களைப்பொறுத்து ரட்சிக்கவேண்டும் யிவையன்றியிற் பற்பலசரக்கினைஏற்றிக்கொண்டுவியாபாரஞ்செய்துவரப் போனகாலத்திற் சுமைமிகுதியினாற் கப்பல்கவிழ அதிலிருந்த வணிகரனைவரும் ஒருமுகத்திற் கடலினமுழ்ந்தி மாண்டவரைப்போலத் தேவரீர்கடாட்சவிட்சணியத்தினாற் சகலவளங்களையும் பெற்றுவாழ்ந்திருந்த இந்திரனுதியானவர்கள் உம்முடனெதுத்து ரணக்களத்தில் யிறந்து கிடக்கின்றனர், கர்த்தனே உமதுதிருவடிகளைப் பூசித்துத்தொழுவதற்குரியஅடியாகிய விண்ணவர்செய்தகுறைபாடுகளைக் குற்றமாகக்கொள்ளாமல் எக்காலத்தும் பயபீதியினால் வாடியிருக்கும் மனதையுடைய அத்தேவர்கள் ஞானஉணர்ச்சியினைப் பெற்றெழுவதாகக் கடாட்சிக்க வேண்டுமெனப்பற்பலதரம் பணிந்துபோற்றி விண்ணப்பஞ்செய்து கொண்டனன், யிவ்விதங்களாகப் பிரகஸ்பதிபகவான் முறையிட்டுவேண்டுமுன்னிலையிற்றேவதேவோத்தமனாகிய பாலசுப்பிரமணியக் கடவுளானவர் திருநகைகொண்டு இந்திரனுதியதேவர்கள் அயிராபதத்துடன் பிராணனைப்பெற்றெழுவதாகக் கடாட்சித்தனர், இவ்வாறுசெக்கர் வானத்தினைப்போலவ்

பிரகாசிக்குந் திருமேனியையுடைய குமாரசுவாமியார் அவர்களை எழுவதா கச்சிந்தித்தவுடன் இந்திரன்முதலிய அஷ்டதிக்குப்பாலகருந் தேவர்க்க ளும் உயிர்பெற்றெழுந்து கர்த்தன்திருவருளின் முயற்சியினுற் றங்களி தயங்களில் நிச்சயஞானம்விளங்கி தாங்கள்முற்செய்த துஷ்கிர்த்திய ங்களை நினைந்து நமதிறைவனுகிய கந்தசுவாமியுடனே நாம்பகைகொண் டு சண்டைசெய்ததென்றெண்ணிச் சகலருங்கலங்கிவருந்தி துக்கித்து வாடி மனச்சோர்வினைப்பெற்று விஷத்தினைஉண்டவனாய் போலச்சோ ர்த்து அக்கினிசுவாலையிற்பட்டகொசுகுகளையொப்பப் பதைபதைத்தொ டுங்கிநடுங்கி வலியிழந்து பிரகாசித்திருக்கின்ற முகங்கள்வாடிச் சிவகு மாரனுடன் சண்டைகொடுத்த தம்மைவெறுத்துக்கொண்டு நித்திரைதெ ளிந்தெழுந்தவனாய்ப்போலப் பிராணனைப்பெற்றுநின்ற அத்தேவர்களா னவர் ஆதியில்ஈரேழுலகங்களேமுதலிய சராசரங்களைப் படைத்தருளிய பராசத்தியானவள்தந்த பாலசுப்பிரமணியக்கடவுள் ஆனந்தநடனங்களை ச்செய்திருப்பதைக் கண்டமாத்திரத்திற் சமீபத்திற்போய்ப் பலதிரம்வ லம்வந்துவிழுந்து திருவடிகளிரண்டினையுஞ் சிரங்களிற் சேர்த்துக்கொ ண்டு செந்தாமரைப் புஷ்பங்களினிடத்திற் பெருகுந் தேனைஉண்ணப் பலநிறவண்டினங்கள் மொய்த்திருப்பதைப்போலத் தேவரனைவருஞ் சூழ்ந்துகொண்டு போற்றுவதாயினர், கந்தசுவாமியே நம ஐம்முகக்க டவுளாகிய சிவபிரான் படைத்தருளிய முருகப்பெருமாளே நம பார்ப தியார்திருக்குமாரனே நம கங்காபவானிபாலா நம நவரத்தினமயமா கிய வாகுவலையங்கள் பிறகாசிக்கும்பன்னிரு புயாசலங்களையுடைய கட வுளே நம மன்னுயிரனைத்தினையுஞ் சிருஷ்டித்துப் பிதாவைப்போலரட் சிக்குந் தீனதயாபரமூர்த்தியே நம சண்முகங்களைப் பெற்றிருக்கின்ற ஆ திதேவனே நம சுயஞ்சோதிமயமாகத் தோற்றும் வஸ்துவே நமதற்பர மூர்த்தியாகிய எமதிறைவனே நம எக்காலத்தும் வாலிபத்தினைப் பெற்றி ருக்குங் குமாரசுவாமியே நம சரவணபவனே நமோநமவென்று பற் பலவிதங்களாகத்துதித்து அன்புமிகுதியினுல் மீளவும் அஷ்டாங்க பஞ் சாங்க திரியாங்க ஏகாங்கமுறையே தீர்க்கதெண்டன் சமர்பித்தெழு ந்துவாழ்த்தி மீளவும் பயபீதியினுல் தேகமெங்கும் நடுநடுங்கக்கால் களுதறநிற்பவராக் குமாரதேவர்கண்டு கிருபாநோக்கத்தினைப் பரப்பி தேவர்க்களே பயப்படவேண்டாம் பயப்படவேண்டாமென்று திருவா ய்மலர்ந்தவுடன் விண்ணவரனைவருந் தங்களைப்பாதித்திருந்த மிகுத்த விசனத்தினையும் அச்சத்தினையும் போக்கினவர்களாய்க் கரங்களைக்கூப்பி த்தொழுது யிவ்விண்ணப் பங்களைச்செய்து கொள்வதாயினர், கர்த்தனே அடியோங்கள் முறைகளைக் கேட்டருள்க அமுதத்துடன் கொடியவிஷ

த்தினையுங்கலந்து பொசித்தவர்களை விஷமல்லது அமுதங்சொல்வதுண்டோ அவ்வாறே தேவரீர் கடாட்சவீட்சணியத்தினால் நாயினேங்கள் சுதந்திரமாகிய பதவியினையுஞ் செல்வச்சம்பத்தினையும்பெற விருந்தயாங்கள் அறிவின்மையாற் புத்திமயங்கித் தேவரீருடன்போர்செய்தனம், அக்காரணத்தினால் நாங்கள் உயித்தியகளத்தில் மாண்டதை யோசிக்குமிடத்தில் தேவரீர் எங்களைமாய்த்ததன்று உமது மருத்துவங்களைத் தெரிந்துகொள்ளாமற் பகைத்ததிங்கானதே எமதுயிரைப்போக்கியது பூர்வத்திற்றக்கனானவன் பரமசிவத்தினையிகழ்ந்து செய்தயாகத்திற் றந்த அவிர்பாகத்தினைப் பெரிதாகவெண்ணிப் பொசித்தபாதகமானது யிப்பாடுகண்பட்டும் யின்னமுந்தொலைந்ததில்லை அஃதன்றியும்யிக்காலத்திற்றேவரீருடன் மாறுகொண்டு கொடியபோரைச்செய்த முன்னிலையில்மீட்டும் அளவற்றபாதகங்களைத்தேடிக் கொண்டனம், குமாரதேவரோ தேவரீர்திருவுளத்தில் அடியோங்களிடத்திருந்த கிருபையினாற் றருந்ததண்டனைகளைச்செய்து புதிதாகத்தேடியபாதகங்களைப் போக்கியாண்டனர், ஆதலாற்றேவரீர் எங்களுக்குக் கடாட்சித்தகிருபைக்கு மாறுநடத்துவதற் கேதேறுமுண்டோ அல்லதுநாங்களனைவரும் உமக்குஅடிமையாவோமெனினும் ஆதிதேவனாகிய தேவரீருக்குமுன்னமே தொண்டுபட்டிருக்கின்றயாங்கள்புதிதாக அடிமையாவதெவ்விதம் மேலும்பிதாவானவர்கள் தாங்கள்பெற்ற பிள்ளைகள் எத்தகைய தீங்குகளைச்செய்தபோதிலும்அதற்குத்தக்கதண்டனைகளைச்செய்துபாதுகாப்பது அவர்களுக்குக்கடமையாதலால் விவேகசூனியராகிய அடியோங்கள்செய்தகுற்றபாடுகளனைத்தினையுந் திருவுளத்திற்கொள்ளாமல் ரட்சிக்கவேண்டுங் கற்தனே யென்றுபலவிதங்களாகப் போற்றுகின்ற இந்திரன் முதலாகிய தேவர்கள் முறைகளைக்குமாரசுவாமியார் திருச்செவிகளினேற்று அவர்களிடத்தில் அதிகதயையினால் யிதனைச்சொல்லுவதாயினர், தேவர்களே முன்னம் நம்மைஒருகுழந்தையாகநினைந்து சண்டைகொடுத்தீர்கள் அக்காலத்திலும் நமதுவல்லபங்களைக் கண்டீர்கள் யின்னமும்நமதுவலியினையும்பெருமைகளையும் உங்களுக்குத் தெரிவதாகக்காட்டுவோம் பாருங்கோளென்று ஒப்பற்றவிசுவரூபத்தினைக் கொண்டனர். அத்தோற்றத்தில் அஷ்டதிசைகள் பதினாலுலகங்கள் அஷ்டகுலாசலங்கள் சத்தசாகரங்கள் சக்கிறவாளகிரி மற்றுமிராநின்ற சகலவஸ்த்துக்களும் அடங்கிய அண்டகோடிகளனைத்தும் அவற்றிற்பட்ட பிராணிகளினது விதங்களும்பிரமன்விஷ்ணுமயேஸ்பரன் மற்றதேவர்களுந் தோற்றத்தக்கதாகநின்று சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்டலம் பாதலங்களுந் திருவடிகள்நிறைந்து திசாதிசைகளெங்கும் புசங்கள் நெருங்கிக்காட்டவும் ஆகாயவெல்லைமுற்றுந் திரு

முடிகளாகவும் சோமசூரியாக்கினி யென்னும் விழிகள் அளவற்றவைவிளங்கவுந் திரேகமெங்கும் விபூதிதூளிதம் உருத்திராட்சத் தாவடங்கள் பிரகாசிக்கவும் வேதங்களையோதியிருக்கும் அளவற்றதிருவாய்கள் காட்டவும் யிரத்தினக்குண்டலங்க ளமைந்தபலசெவிகள் தோற்றவும் பக்கவிலாக்களனைத்தும் பிரமன் விஷ்ணு உருவங்களாகக் காட்டவும் பராசத்தியானவள் சித்தையாகவும்ஈஸ்பரன்உயிராகவும்யிப்படிக்கமைந்துவிளங்கக்குமாரசுவாமியார் நிற்கின்றகாட்சியினை இந்திரன்முதலிய தேவர்க்கள்தெரிசித்து யஃதுமிகவும் அற்புதம் அற்புதமெனச் சேவித்துச் சகலரும் ஆகாயத்தில் விழிகளைப்பரப்பிப் பார்க்கும்போது திரேகத்திற்குரிய அங்கங்களொன்றுந் தோற்றப்படாமல் முழந்தாள்வரையில் அரிதாகக்கண்டு பிரமித்தவர்களாய் யிவ்விதங்களிற் பாலசுப்பிரமணியக்கடவுளைப் புகழ்ந்துவேண்டுவதாயினர், சுயஞ்சோதிமயமாகவிளங்குஞ் சிற்பரமூர்த்திஎங்கள்விழிகள் காணத்தேவரீர் கொண்டகோலத்தினைத் தெரிசிக்கப்படவில்லை ஆதலால் அடியோங்கள் கண்டு மகிழ்ந்து பவுத்திரராதற்பொருட்டு தமதுபடிவத்தினை வெளிப்படையாகக் காட்டவேண்டுமென்று துதிக்கின்றதேவர் கோரிக்கையினை அண்டகடாகத்துக்கும் அப்புறமும் அளவைப்படாமல் வளர்ந்திருக்கின்ற சரவணபவன்தெரிந்து கிறுபையுற்று அத்தேவர்களுக்கு ஞானவிழிகளைக் கடாட்சித்தவராய் அனந்தகோடிசூரியர் ஏகமுகத்திலுதித்து விளங்குவதைப்போலச்சோதிமயமாகப் பிரகாசித்திருக்குந் தமதுதிருமேனியினை முற்றுங்காணக் காட்டியபோது மகம்மேருவின் மீதிருக்கின்ற இந்திரன்முதலிய தேவர்க்கள்விழிகளைப்பரப்பிக் குமாரசுவாமியார் தோற்றத்தினைப் பாதமுதற் சிரசுபரியந்தம் அவனருளினாற் பாந்தமாகத்தெரிசித்து அளவிறந்தகோடி அண்டநிரைகளுங் கணக்கிறந்த சிவபேதங்களுந் திரிமூர்த்திகளாகியதேவர்க்களும் மற்றுமிராநின்ற வஸ்துக்களும் அவ்வுருவத்தின் முற்றும் நெருங்கியிருப்பதை நிதானித்துத் தெரிந்தவர்களாய் இந்திரன் முதலிய தேவர்க்கள் வணங்கிப் போற்றி ஓவெனக்கூவி யிதனை விண்ணப்பஞ் செய்வதாயினர், ஒப்பற்ற சுப்பிரமணியக்கடவுளே ஈரேழுபதினாலுலகங்களேமுதலிய வடங்கியிருக்கும் அளவற்றஅண்டங்களினையும் அவ்வவ்விடங்களினிராநின்றதேவர்களையும்மற்றபிராணிகளையும் உயிரற்றபொருள்களாகிய அசரபேதங்களையும் பரமன் விஷ்ணும் பிரமன் யிவர்களும் பொருந்திநிற்பதைத் திஷ்டாந்திரமாகக் கண்டனம் - ஓ எமதிறைவனே அகிலசராசரங்கள் முற்றுந் தேவரீர்திருவுருவி லிருப்பதோ - ஓ தேவதேவோத்தமனே புவனங்கள்முதலிய வனைத்தும் நீரேயாக உருவகித்திருப்பதை யிதுவரையிற் றெரிந்திலன்று தேவரீர் உருக்கொண்டு காட்

டியமகத்துவத்தினுற் சில வற்றைக்கண்டனம்- ஓ பெருமாளே உமது தி
ருவடிவல்லனவாகிய பொருள்கள் வேறென்றுந் தோற்றவில்லை சித்தவி
ருத்தியற்ற சிறியராகிய எங்களால் அளக்கவொண்ணாத பெருமையினையு
டைய நமது தோற்றமகிமையைக்கண்டு தெளிவதற்குக் கூடுவதோ ஆதி
காலத்தில் உந்திகமலவாசியாகிய பிரமனொருவன் யிறந்தபோது மகாவி
ஷ்ணுவானவர் அதற்குவேண்டும் எத்தனங்களைச்செய்யாமல் விசுவரூப
த்தினைத்தாங்கி மமதையினுற் திருப்பாற்கடலினிடத்திற் பள்ளிகொண்
டிருந்த அகந்தையைப்போக்கி ஆள்வதாகச் சிவபிரானுனவர் சகலஅண்
டங்களுந்தமக்குத் திருவாபரணங்களாகத் தோற்றத் திரோகரோமங்க
டோறும்நிற்கவும் அக்கோலத்தினை விஷ்ணுபிற்மித்துப்பார்த்திருக்கத்த
க்கதாக மகாவிசுவரூபத்தினைக்கொண்டனர், அக்காரணங்களைத்தேவரீர்
திருவடியிற் றெரிசித்தனம் இஃதன்றியில் முற்காலத்திற் பரத்துவ நில
மையினைக்காட்ட வாதாடிய மகாவிஷ்ணுவுக்கும் பிற்மதேவனுக்கும்ம
த்தியிற்றோற்றிய சிவபிரான் அனற்றிரு மேனியினை அவ்விருவரும் பல
காலங்கள் தேடியுங்காணுமல் அலைந்தனர், அவ்வடிவினையொப்ப தேவ
ரீர்தோற்றங்காணப்படுகின்றது எங்களைப்போல அவ்விருவரும் எம
தாசத்தனுகிய தேவரீர் கிருபாகடாட்சத்தினைப் பெறுவராயிற் சங்கையி
ன்றி அடியுமுடியுங் கண்டிருப்பர் யிவையன்றியும் மற்றொருயுகமுடிவி
ற்பிரமனுனவன் சராசரப்பிறகஞ்சங்க ளனைத்தினையும்படைத்து முற்றி
னம்பார்த்தவருமுன்னிலையில் மகாவிஷ்ணு திருப்பாற் கடலிற் பள்ளி
கொண்டிருப்பதைக்கண்டு உதாசினித்தகாரணத்தினுல்வயிரமிகுத்துஅவ்
விருதிறவருஞ் சண்டைகொடுக்கின்ற தறுவாயில் அகிலங்களுடன் ஒரு
வரைஒருவர் விழுங்கி மீட்டும் உந்தியினுலும் முகத்தினிடமாகவும் அவ.
ற்றினைப்படைத்துப் போராடுகின்றகாலத்திற் சிவபிரான் அவர்களைத் த
டேப்பதாகக்கொண்டுநின்ற திருவுருவானது தேவரீர்யிக்காலத்திற் காட்டி
யகோலத்துக்கு மிகவுஞ் சிறிதாகத்தோற்றப்படுகின்றது ஆதலால்எமதி
றைவனே தேவரீர் குறுதிசெயங்களை யோசிக்குமிடத்தில் அருவுருவாக
விருக்கின்ற ஒப்பற்றகடவுளேயாக விருக்கின்றது நாங்கள்முற்செய்தத
வப்பேற்றினுல் அடியோங்கள் துக்கவருத்தங்களைப்போக்கிச் சூரன்மு
தலானவர்களைக்கொன்று பழையபடிக்கு எங்களைப்.பொன்னுட்டிற்சேர்
த்து அரசுசெலுத்தும்படிக்குக் கடாட்சிக்கத் திருவுளத்தில் நினைந்துபா
லசுப்பிறமணியக் கோலத்தினைப் பெற்றெழுந்தருளினீர் சகலஉருவுகளு
க்கும் யிடமாகவிருக்கின்ற உமது அழகியதிருவடியினைத் தெரிசித்துக்கி
ருதார்த்தராயினேம் பிராரத்தவினைகளுக்கிடாக நல்வினை தீவினைகளை அ
நுபவிக்கவெடுத்த யித்ததிரோகவருத்தங்களைப்போக்கினவர்களாய் யினி

எக்காலத்துந் துன்பத்துக்குக் காரணமாகிய பிறவியிற்பட்டுத்தடுமாறவறியோம் மோட்ச சாம்பிராச்சியத்தினைப் பெற்றுவாழ்வோமென்று யிவ்விதங்களாகப்போற்றி விண்ணப்பஞ்செய்துகொண்டவர்களாய்கோடிசூரியப்பிரகாசமாகவிளங்குந் திருவுருவினைவாய்ந்தகுமாரசுவாமியார் விசுவரூபத்தினைக்கண்டு இந்திரன்முதலாகிய தேவர்க்கள் ஆயிரங்கிரணங்களைவிசிஉதையகிரியினிடத்தெழுகின்றசூரியனது பிரகாசத்தினைக்கண்ட ஓரறிவினையுடையசிள்ளுவண்டுகளேமுதலிய உயிர்கள்வருந்துமாறுபோலமனங்கள்மிகவும் பயப்பிராந்திகொள்ளவும் விழிகள் கூசிச்சுழலமயங்கினவர்களாய் யிதனைச்சொல்லுகின்றனர், அனந்தம்விழிகளைப் பெறுவோமாயினும் எமதிறைவனே தேவரீர்மெய்புருவின் பிரகாசத்தினைப் பார்க்கமாட்டோம் யித்திருக்கோலத்தினைக்கண்டவுடன் எமதுவிழிகள் மயங்கிப் பிரகாசங்களையிழந்து வருந்துகின்றது அல்லவெனினுந்தேவரீர்பெருமிதங்களைப்பார்க்கவும் பயப்படுகின்றனம் அடியோங்கள் பிழைத்தற்பொருட்டு பழையதிருக்கோலத் தினைக்கொண்டுநின்று பாதுகாக்கவேண்டுங் கற்தனேயென்று தங்கள்வருத்தங்களை முறையிட்டுவேண்டுமுன்னிலையில் எமதிறைவனாகிய குமாரசுவாமியார் அவர்கள் படுந்துன்பத்துக்கிரங்கி அண்டகடாகத்தினை உருவநின்ற தமதுதோற்றத்தினைக்குறுக்கி எதாப்பிரகாரஞ் சண்முகப் பெருமாளாக உருவுகொண்டுநின்றகாலத்திற் றேவர்க்கள் வலம்வந்து பணிந்தெழுந்து போற்றினர்– பின்பு பற்வதங்கள் சிறகினையரிந்த இந்திரனானவன் மீட்டும்வணங்கியிதனைச்சொல்லுவான் கற்தனே சூரனானவன் பழையபடிகருத் தேவர்முதலானவர்களை அலைத்துவாட்டுவதிற் குறைவின்றிநடத்திவருகின்றனன், ஆதலால் அப்பாதகன்முதலிய கொடியராட்சதர்பிராணன்களைவாட்டித்தேவர்களும் அடியேனும் பக்கங்களிலிருந்து தமது ஏவற்பணிவிடைகளைச் செய்யத்தக்கதாக விண்ணகத்தில்விளக்குஞ் சொற்கலோகத்திற்சேர்ந்து அடியேன் அரசுரிமைகளைத்தேவரீர்கைக்கொண்டு திரிலோகங்களினுஞ் செங்கோல் செலுத்தியிருக்க விருப்புற்றனன்– எமதுகற்தனே யிதுதானெனக்குமுக்கியமாகச் செய்யவேண்டும் உதவியென்றுபலவாகப்போற்றினன், சவுனகாதிரிஷிகளே– சேழ்ப்பிராகத்தம்மைமெய்ப்பத்தியினுற்பூசித்துவழுத்தவல்ல அடியார்களுக்கு யிம்மையிற் சகலசெல்வவளங்களையுங் கடாட்சித்து மறுமையிற் கெசேந்திரவாழ்வினையுந்தந்து கடையிற்சாரூபப் பதவியையுங் கொடுக்கவல்ல சண்முகப் பெருமாளுக்குத் தேவராசனானவன் தன்செல்வங்களைத்தருவதாகவேண்டுகின்றதையார்க்குமிடத்தில் எப்படிக்கிருக்கின்றதென்றால் உலகங்களனைத்தினையுந் தரிக்கவல்ல அக்கினிதேவனுக்கு ஒருவன் ஒருஅனற்பொறியினைத் தரவேண்

டியதுக்கொக்கும் அக்காலத்தில் முருகப்பெருமாள் தேவேந்திரனைப்
பார்த்துநகைத்து நீ நமதிடத்தன்பாகக்கொடுத்த செல்வங்க ளனைத்தினை
யும்பெற்றனம் அவற்றினைமீட்டும் உனக்கேதந்தனம் மேலும் நீங்களனை
வரும்நமக்குப் படைகளாகவும் நாமுங்களுக்குத் தலைவனாகவு மிருந்து
ரானுதிய ராட்சதர்களைவேருடன் களைந்து நாசமடையச்செய்வோம்அ
துபரியந்தம் மனந்தளர்ந்து வாடவேண்டாமென்று கடப்பமாலை தரி
க்குங்கந்தசுவாமியார் திருவாய்மலர்ந்ததை அவுணப்பாதகரால் வருந்தி
யிருக்கும் அயிராபதத்தலைவனாகிய இந்திரன் கேட்டவுடன் தன்பகைவ
ரனைவரும்மாண்டு திரிலோகசாம்பிராச்சியத்தினைப்பெற்று ஒப்பற்றதி
ருமுடியினைச்சூட்டி ஆளக்கிடைத்தவனைப்போலத் தேவருடன் மனம
கிழ்ந்தவனாய்ப் பாலசுப்பிரமணியரைப்போற்றிய பின்பு இந்திரன்மீட்
டுங் கந்தசுவாமியைப்பணிந்து கர்த்தனே தேவரீர்திருவிளையாடலின் மகி
மையினால் யிவ்வண்டத்தில் விளங்குஞ் சத்தகுலாசலங்கள் சத்தசாகரங்
கள் புவனங்கள் அவைகளிற்பட்ட பிராணிகள் முதலாகக் கிரமங்கள்த
ப்பி மாறுபட்டிருப்பதினால் தேவரீர்கிருபையுற்று அவற்றினை முற்படி
யேநிலைபெற ஸ்தாபிக்கவேணடுமென்று போற்றுகின்றவன் கோரிக்கை
யினைப் பாலசுப்பிரமணியர் திருச்செவிகளினேற்று நகைத்தவராய் தேவ
ராசனே உன்னிஷ்டப்படிக்குச் செய்வோமென்று இந்தஅண்டத்தில்ந
மதாடலினால் மாறுபட்டவனைத்தும் எதாப்பிரகாரம் ஆகக்கடவதென்
று ஒருவாக்கியத்தினைத் திருவாய்மலர்ந்தமாத்திரத்திற் சராசரப்பிரபஞ்
சங்களனைத்துந்தத்தமது நிலைகளில்நின்றது,இக்காட்சியைக்கண்டதேவர்
கள்முதலாயினர் அற்புதமடைந்து சிவகுமாரனைப்பலவிதங்களிற்போ
ற்றினர்- அத்தருவாயில் மகம்மேரு பர்வதத்தின்மீது வீற்றிருக்கின்ற
குமாரசுவாமியை சொர்க்கலோகத்துக்கதிபனாகிய தேவேந்திரன் சேவித்
து யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினன், வாரணத்துசத்தினையுடைய
கர்த்தனே வேதாகமங்கள்பூசிக்கப்பெற்ற பெருமையினையுடைய தேவரீர்
திருவடிகளில் அருச்சித்துக் கிருதார்த்தராதற்கு விருப்புற்றனம்- அப்பூ
சனையைநாயினேங்கள் செய்துமுடிக்க கடாட்சிக்க வேண்டுமெனப்
போற்றுவதற்குப் பாலசுப்பிரமணியர் சம்மதித்தவராய்ப்பொன்மயமா
கிய மகம்மேருகிரியைக் கடந்துபோய் தமது பிதாவெழுந்தருளியிரு
க்குந் திருக்கயிலாயத்தின் பாரிசத்தில்விளங்கும் ஒரு பர்வதத்தின்மீதி
ற்சேர்ந்தகாலத்திற் பர்வதங்களின் சிறகுகளையரிந்த இந்திரன் முதலிய
தேவர்களுங் கரங்களைக்கூப்பித் தொழுதுகொண்டு எக்காலத்துங் கா
ளைப்பருவத்தினைப் பெற்றிருக்கின்ற எமதிறைவனாகிய குமாரசுவாமி
யின்பின்பற்றிவர்துவானத்தினையளாவவளர்ந்து அசைந்துகாட்டும்மூங்

கில்முதலிய மலிந்திருக்குஞ் சாரலினைவாய்ந்த அப்பர்வதத்தின் மத்தியிற் சண்முகப்பெருமாள் வீற்றிருப்பதைக்கண்டு இந்திரனாதிய விண்ணவர்கள் அனைவரும் எமதுகர்த்தன் திவ்வியசரணாரவிந்தங்களில் ஆகமவிதிப்படிக்கு அருச்சிக்கவெத்தனிக்குமுன்னிலையில் இந்திரன் தங்கள் மரபிற்குரிய சிற்பாசிரியனாகிய மயனை நினைந்தமாத்திரத்தில்அதனைத்தெரிந்து தேவதச்சனானவன் அதிவேகமாய்வந்து தங்களிறைவனைக் கண்டுவணங்கிகரங்களைக்கூப்பி நிற்கின்றவனைக் கிருபையாகப் பார்த்து ஓ தபதியிப்பர்வதத்தினிடத்தில் நமதுபொன்னகரத்தினும் பதின்மடங்குசிங்காரங்களைப்பெற்றதாக ஒருஆலயத்தினை விரைவிற்படைக்கக்கடவையெனக்கட்டளையிட்டவுடன் தேவசிற்பியானவன் வணங்கிப்போய்ச் தான்கற்றிருக்கின்ற சாஸ்திர வல்லபத்தினாற் பல்லாயிரகோடி அண்டங்களினிராநின்ற சூரியர்களனைவரையுஞ்சேர்த்து உருக்கிவார்த்ததைப்போலச்செகச்சோதியாகப் பிரகாசித்திருக்குஞ் சிரோரத்தினவகைகளினாற்சோடித்தஅழகிய திருவாலயமொன்றினைப் பலவளங்களுடன் நிருமித்துப்பொற்சிகரங்கள்அமைந்து வானத்தினையளாவிப் பற்பலநிலைகளைப் பெற்றிருக்குங்கோபுரவாயல்களை நாற்புறத்தினும் நிலைபெறச்செய்து முற்றியபின்பு திருமாளிகையின் மத்தியில் நவரத்தினமயமாகச் சொலித்திருக்குங் கெற்பகாத்துக்குட் பாரிசத்தில் மதயானைகளுக்கு வயிரியாய்ச் சரபப்பட்சிக்குப்பின்தாங்குஞ் சிங்கங்களேந்தநின்ற ரத்தினகசிதமாகிய ஆசனத்தினை யேர்ப்படுத்தி மற்றசிறப்புகளையுஞ் சிற்பநூலின் விதிப்படிக்கு மயனானவன்முடித்தபின்பு அச்சேதியைத்தெரிவித்தவுடன் இந்திரனானவன் கண்டுகளித் துப் பலதேவர்களையழைத்து நமதிறைவனைப் பூசித்தற்குவேண்டுந் திருமஞ்சனமுதலிய உபகரணங்களைத் துரிதமாகச்சேகரித்துவரக்கடவீரென்று கட்டளையிட்டபடிக்கு அதிவேகமாய்வானநாடுகளிற்போய் கங்காசலம் சுகந்தபரிமளமுடைய பஞ்சதருக்களின் புதிய மலர்கள்முதலிய வஸ்துக்களைக்கொண்டுவந்து சேர்த்ததைத் தேவராசன் பார்த்துச்சந்தோஷித்தவனாய்ச் சண்முகப்பெருமாளைவணங்கிகர்த்தனே தேவரீர் திருவடிகளில்அரிச்சித்து யாங்களனைவருங் கிருதார்த்தராதற்பொருட்டு யித்திருவாலயத்தி லெழுந்தருளவேண்டுமெனத் துதிக்கின்றதைஅங்கீகரித்துத் தேவரனைவருந் தொழுது வரத்தக்கதாகத் திருக்கோயிலிற் பிறவேசித்துக் கோடிசூரியப் பிரகாசத்தினைப்போல விளங்கியிருக்குஞ் சிங்காதனத்தில் வேதத்தின்முடிவாகவிராநின்ற சரவணபவன் வீற்றிருந்தகாலத்தில் இந்திரன் மற்றதேவர்க்களனைவருடன் கூடிக்கொண்டு ஞானநாயகனே நாங்களனைவருந் தமக்குச் சேனைகளாவோந் தேவரீர்எங்களுக்குத்தலைவனாகவிருந்து ஆளக்கடவீரென்றுபொற்குடங்களில் நிறைத்

ராநின்ற வானகங்கையினாற் றிருமஞ்சனமாட்டி யீரத்தினைப்புலர்த்தி
அதிசயிதமதுவாயிராநின்ற பட்டாடைஉடுத்திச் சந்தனம் புனுகு சவ்வா
து கஸ்தூரி முதலிய பரிமளத் திரவியங்களினாற் கூட்டியிராநின்ற கல
வைச்சார்த்தினை ஏராளமாகப்பூசிச் சூரியனது கிரணங்களைப்போலப் பிற
காசித்திராநின்ற ரத்தினாபரணங்களை யலங்கரித்து சுகந்தங்களை வீசாநி
ன்ற குளிர்ந்தகற்பகமலர் மாலைகளைச்சாத்தி ஐவிதத்தூபதீப வகைகளைக்
காட்டி கற்பூர நீராஞ்சனமெடுத்து யிவ்விதமாகச் சோடசஉபசாரங்களை
யும் ஆகமவிதிப்படிக்குமுடித்துயிவ்வாறுதேவ தேவோத்தமனுக்கு அர்
ச்சனைவழிபாடுகளைச் செய்தவர்களாய் இந்திரனாதிய விண்ணவர்கள் எம
திறைவனை மும்முறை வலம்வந்து திருவடிகளானவை தமது சிரங்களிற்
றொடுவதாக நிற்கதெண்டன் சமர்ப்பித்தெழுந்துகரங்களைக்கூப்பிநின்று
அத்தேவன் பெருமைகளைத்துதித்துப் போற்றுமுன்னிலையில்அத்தேவர்
மனக்கவலைகள் திரும்படிக்கு அனுக்கிரகஞ்செய்து மின்னலைப் போலச்
சடுதியில்மறைந்து அத்தலத்தினைவிட்டுத் திருக்கயிலைக்கெழுந்தருளினர்
அத்தினமுதல் பாலசுப்பிரமணியருக்குத் தேவசேனாபதி யென்னுந்தி
ருநாமம்விளங்குகின்றது, இப்படிக்குப் பரம்பொருளாகிய குமாரசு
வாமியார்திருவுருவைமறைத்துபர்வதங்களிற்சிறந்தவெள்ளியங்கிரிக்கு
ப்போயினதைக்கண்ட இந்திரனும்மற்ற தேவர்க்களும் அற்புதமடைந்
தவர்களாய்த் தாமும்அந்தபர்வதத்தை நீங்கினர், சவுனகாதிரிஷிகளே சி
வகுமாரனாகிய இளையபெருமாளானவர் தேவர்க்கள்பூசிக்கத்தக்கதாக அந்
தமலையினிடத்திற் றங்கியகாரணத்தினால் அத்தினமுதல் அதுகந்தபர்வ
தமென்று சகலருங்கொண்டாடும் பெருமைபொருந்தியதிருநாமத்தை
ப்பெற்றது,இந்திரனானவன் சிலதேவர்களுடன் பிற்மதேவன் வாசமாகி
ய மனோவதிபட்டணத்தைச் சேர்ந்தனன், மற்ற தேவர்க்களுந் தத்தம
துபதவிகளிற்போய் எதாப்பிரகாரமிருந்தனர்- கந்தபர்வதத்தினைக் கட
ந்து திருக்கயிலாயத்தினைச்சேர்ந்த கந்தசுவாமியானவர் நவவீரர்களும்
யிலக்கரும் பூதத்தலைவருஞ் சூழ்ந்துபோற்ற அவ்வரையினிடத்தமர்ந்து
திருவிளையாடல்களைச் செய்திருந்தனர்.

## தகரேறுபடலம்

சூதபுராணிகர்- சவுனகாதிரிஷிகளைப்பார்த்து யிதுவரையிற் பால
சுப்பிரமணியக்கடவுளினது அற்புதத்திருவிளையாடல்களைக் கேட்டீரன்
றோயினி அதற்குமேல்நடந்தசரித்திரங்களையும்பேசுவோம்கவனமாகக்

கேட்பீரென்று சொல்லத்துடங்கினர், சூரபதுமன் முதலிய பாதகர்பி ராணன்களையும் மாய்க்கவெழுந்தருளிய வேலாயுதசுவாமியார் சகலராலும் புகழ்ந்துகளிக்கும் பெருமையினையுடைய வெள்ளியங்கிரியி னிடத்தில் வீற்றிருக்கின்றதருவாயில் மேருகிரியினிடத்தும் விரும்பி வாசஞ்செய் யும் பரமசிவத்துக்குப் பிரீதியாகத்தக்கதாக நாரதரிஷியானவர் பூமண் டலத்தில் முக்கியமாகச்சொல்லும் ஒருயாகத்தினைச்செய்ய வெத்தனித்து பவித்திரமாகிய தலமொன்றினைக்குறித்து ஓமதிரவிய முதலிய உபகர ணங்களைச் சேகரித்துக்கொண்டு தவங்களிற்சிறந்த முனிபுங்கவர்களை யுந் தேவர்க்களையும் பூமண்டலத்தில் வாசமாயிராநின்ற சிவவிரதபரரா கிய பிராமணோத்தமனையும் மற்றுமிராநின்ற மகத்துக்களையுந் தருவித் துக்கொண்டு ஓமகுண்டத்தினைத்திருத்தி வேதவிதிப்படிக்குச்செய்துவ ருகின்ற யாகத்தினிடத்தில் மந்திரமாறுபாடுகளினுற் செக்கர்வானத்தினை யொத்த ரோகத்தினைவாய்ந்த வெள்ளாட்டுக்கடாயொன்று பிறந்தது யி வ்விதமாக அந்தஓமகுண்டத்திற் சுவாலைகொண்டெரியும் அக்கினிமத்தி யிலெழுந்த கடாவின் காரணங்களை யோசிக்குமிடத்தில் எப்படிக்கிருக் கின்றதெனில், யாகங்களெனப் பலவற்றையேற்படுத்திக் கொண்டு நம்மி டவருக்கங்களை வகையறத்தினந்தோறும் மாய்த்துத்தின் கின்றனர், இக் காலத்திற் சகலரும்ஒரிடத்திற் கூடியிருப்பதால் யிவர்களைவளைந்துகொ ண்டு கொல்வேனென நிச்சயித்து அக்கினிக்கொழுந்தாகிய குதிரைவாக னத்தின்மீது ஆரோகணித்தெழுந்ததைப்போலவிருந்தது, இவ்விதமாக ஊழிகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் நாசஞ்செய்ய வேழ நின்ற பிரசண்டமாருதமும் வடவாமுகாக் கினியும் வானத்திற் பரவிய மேகங்களினிடத்துண்டாய் முழங்குமிடிக்கூட்டமும் ஒன்றிக்கவந் து ஒருருக்கொண்டு வந்ததுக் கொட்பாசக்யடுகி ஆர்ப்பரித்துக் கொண் டெழுந்தவெள்ளாட்டுக்கடாயானது யாகத்தைச்சூழவிருக்கின்றஎழுத்த பசிகள் முதலானவர்களைக்கொல்லயெத்தனித்து கழுத்தினிடத்தணிந்தி ராநின்ற மணிகள்கலகலவெனச் சத்திக்கவும் நான்குகால்களினுமிராநின் ற கிண்கிணிகளிற் சேர்த்திருக்கும் பருக்கைகள் அசைவு கொண்டு சலசல வெனச்சத்திக்கவுங் கூர்மையாய் வயிரத்தினைநிகர்த்து வலிபெற்று முறு க்குண்டிராநின்ற கொம்புகளை புராய்ந்து கொண்டு கரியகுளம்புகளைப் பெற்றகால்களை நிலத்திற்றுக்கிச் சீறி அதிவேகமாய் மேலிட்டுப் பாயும் ஆட்டினைக்கண்டு யாகவெல்லையிற் கூடியிருந்தவர்கள் அனைவரும் அதிக பயப்பிருந்தியுடன் நடுநடுங்கி ஓடத்துடங்கினர், இவ்விதமாகப் பறக் கின்றவர்களனைவரையும் பூமண்டலம் வானுலகமெங்கும் பின்றுடர்ந் தோடுகளினுற் றுக்கியபோது சிலர் கால்களொடிந்துஞ் சிலர்விழுந்து

விலாக்கள்முறிபவுஞ் சிலர்கரங்கள்துளைபடவுஞ் சிலர்வயறுகள் பிறண்டுருடல்கள் சரியவுஞ் சிலர்மாளவும் யிப்பாடுகளைப் பட்டு வாடுகின்றமுன்னிலையில் பூமியும் அதிலிராநின்ற பற்வதங்களுந் துகள்பட்டுப்பறக்கத்தாவிச்செல்லு மிடங்களெங்கினும் எதிற்பட்ட பிராணிகள் அல்லோலகல்லோலப்பட்டு மங்குவதாக ஆக்கிறகித்துஉலவும்போது அதன்ஆற்பாட்டங்களுக்கு அஷ்டதிசைகளைத்தாங்கும் யானைகள்சகிக்கப்படாமையால் தத்தளித்தேங்கவுஞ் சந்திரன் தலைகீழாக விழுந்து நகசெகபரியந்தம் நடுங்குவதாக அவனேறிநடாத்தும் விமானத்தைமுட்டித்தள்ளியுஞ் சூரியன் ஆரோகணித்துச் செல்லுந்தேரைச் சின்னபின்னப்படப்பாய்ந்தும் அத்தேறிற்பூண்டிருக்கும் ஏழுபச்சைக்குதிரைகள் வயறுபீறுண்டு கலக்கத்தக்கதாக யிடித்தும் யிவ்விதமாக வெள்ளாடானது எவ்விடங்களிலுமுலவி அதிகடக்கிறத்துடன் மன்னுயிர்களுக் கிறுதிசெய்துகொண்டு பாய்ந்துலவுகின்ற தறுவாயில் அவ்வேழ்விக்குத் தலைவனாகவிருந்த நாரதரும் மற்றரிஷிகளுந் தேவர்க்களும் தாபரித்துநிற்க யிடமில்லாமற்பயப்பிறுந்தியினால் ஒருவர்முன் னொருவராகஓடி திரேகமெங்கும் பட்டகாயங்களில் உதிரம்பெருக்கெடுத்தோட அலைச்சற்பட்டுத் திருக்கயிலாயகிரியினைச்சேர்ந்து சிவபிரான் ஆலயத்தினை நோக்கிவருகின்றதறுவாயிற் புசபெலபராக்கிறமசாலிகளாகியநவவீரர்களும் இலக்கத்தவருஞ்சூழ்ந்துவரக் குமாரசுவாமியார் சோத்தியமாகத் திருவிளையாடல்களைச் செய்துகொண்டு எதிரில்வருவதைத் தெரிசித்தவுடன் அனைவருஞ்சேர்ந்து நாமினிபரமேஸ்பரர் சன்னிதானத்துக்குப்போக வேண்டுவதில்லை யிதோ குமாரதேவர் நம்மிடத்தன்பாய் எமக்கடுத்ததுன்பங்களைப் போக்கியாள்வதற்கு எதிர்காட்சிதந்தனர், இத்தேவனைப் பாலகனென்றெண்ணலாகாது முன்னம் மாமேருகிரியின்மீது தம்முடனெதுத்த இந்திராதியதேவர்க்களைக்கொன்று மீட்டும் பிழைப்பித்தனர், இக்காலத்தில்நமக்கடுத்திருக்கின்ற குறைபாடுகளைத்தவிர்த்து ரட்சிப்பது யிவருக்குமிகவுஞ்சுலபமாகவிருக்கும் யிதற்கையமில்லை ஆதலால் நமக்குநேர்ந்தசம்பவங்களை யிக்கடவுளுக்கு விண்ணப்பஞ் செய்துகொள்வது நன்மெனத்தங்களிற் றீர்மானித்துக்கொண்டு ரிஷிகள் முதலாகிய தேவர்க்களனைவருங்கரங்களைக் கூப்பினவர்களாய் பாலசுப்பிறமணியக்கடவுளினது மகிமைகளைப்புகழ்ந்துகொண்டுஎதிரிற்சென்று நெருங்கியவுடன்ரிஷிகள்முதலியர் அனைவரும் ஏகமுகமாய்ச் செயசெயவெனப்போற்றி யானைமுகப்பிள்ளையாருக் கிளையவராகிய சரவணபவனை வலம்வந்து பலதரம்வணக்கித்துதித்து நிற்பவர்கள் மனச்சோர்வினையும் முகாரவிந்தங்கள் வாடியிருப்பதையுந் திரேகவருத்தங்களையுஞ் சிவகுமாரன்கண்டு யிதங்கினவ

ராய் நீங்கள் மிகவும் நொந்திருக்கின்றீர் உங்களுக்குச் சம்பவித்தகார ணங்களைச்சொல்லக் கடவீர்களென்று திருவாய்மலர்ந்தவுடன் அத்தவத் தர்முதலாயினர் அதிகவருத்தத்துடன் இளைய பெருமாளே அடியோங் களுக்கடுத்த துக்கத்தினையென்சொல்வோம் அதனைக்கேட்டருள்கசிறந் தவேதங்களிற் சொல்லாநின்ற யாகங்களிலொன்றைச் சிவப்பிறிதியாகநா ங்கள் செய்யத்துடங்கி அதனைமுடித்து வருகின்றதருணத்தில்அதிகசுவா லையை வீசி யெரிகின்ற அக்கினிகுண்டமத்தியில் வளைந்தகோடுகளுடன் ஒருவெள்ளாட்டுக் கடாவானது பிறந்தது, அதன்கொடுமைகளையுஞ் சாக சங்களையுங்கண்ட யாங்கள் பயமிகுதியினால் யாகநிலையினைவிட்டு யித்த லத்தைநோக்கிஓடிப் பலபின்னப்பட்டுவந்து சேர்ந்தோம்-அதன்மத்தி யில் அக்கடாவானது சீறிப்பாய்ந்து பாய்ந்து வாட்டியதால் எங்களிற்சி லர்காயப்பட்டுஞ் சிலர்மாண்டும் யிவ்விதங்களாகப் பங்கப் பட்டனர், கர்த்தனே பூலோகத்திலும் விண்ணுலகத்திலும் அளவற்றபிராணிகள் நா சமடைந்தனர், இது ஆதியிற்றிருப்பாற்கடலினிடத்தெழுந்த கரியவிடமெ ன்று செக்கர்வானத்தினுஞ் சிவந்துகாட்டும் புதியவிடமானது ஆட்டி னுருக்கொண்டு அண்டங்களதிரயிரைந்து எவ்விடங்களினும் எதிரின்றி த்தாண்டித் திரிகின்றது யினிகணப்போது செல்லுமாயிற் சர்வசங்கார த்தைப்போலச் சராசரப் பிறபஞ்சங்களனைத்துந் தூள்பட்டுப்போம் யிதற்கையமில்லை கர்த்தனே யிப்படிக்கு அதிக உக்கிறத்துடன் மன்னுயி ரைநாசஞ்செய்துவருகின்ற வெள்ளாட்டுக் கடாவினது வீறுப்பையடக் கிஎங்களுக்குச் சம்பவித்திருக்கின்ற அச்சத்தைப்போக்கிநங்களுத்தே சித்த வேழ்வியினையுங் குறைவறமுடிப்பித்து ரட்சிக்கவேண்டு மெனப் போற்றுகின்ற தருவாயில் பாலசுப்பிறமணியக் கடவுளானவர் அத்தவத் தர்தேவர் முறைகளைக்கேட்டவுடன் கிருபையுற்று பயப்படாதீர்களென க்கையமத்தி அவர்களிடத்திற் கிருபாநோக்கத்தினைப்பாய்ச்சி யினிஉங் கள் வருத்தங்களையும் மனச்சோர்வையும்விட்டு விடக்கடவீரென்று திரு வாய்மலர்ந்து அதிகபிறியத்துடன் தம்மைத் துடர்ந்துவருகின்ற பரிக ணங்களில் வலிக்கொப்பற்றவனும் மேகத்தினை யொப்ப விளங்குந் திரு மேனியையும் படைத்திருக்கின்ற வீரவாகுதேவனைப் பார்த்து யிதனைச் சொல்லுவதாயினர், மண்டியெரியும் ஓமகுண்டத்தியினிடத் தெழுந்து யிவர்கள்செய்யும்வேழ்வியினையும்அழித்துஅண்டமுதற்சகலபுவனங்களி லும்உலவி அவற்றுட்பட்ட பிராணிகளையும் வாட்டியலைக்கின்ற வெள் ளாட்டுக்கடாவினைத் துரிதமாகத்தேடிப் பிடித்துக்கொண்டுவரக்கடவை யென்று உமையவள் திருக்குமாரனாகிய குமாரசுவாமியார் திருவாய்ம லர்ந்தனர், இப்படிக்கு உதையகிரியினிடத்தெழும் பாலசூரியனையெ

த்த திரோகசாத்தியினையுடைய சரவணபவன்கட்டளையிட்டவுடன் புசபெ லபராக்கிரமசாலியாகிய வீரவாகுவென்னும் நாமத்தினைப் பெற்றிருக்கி ன்ற காளையானவன் கர்த்தனே தேவரீர் திருவுளப்படிக்குயிதோமுடித்து வரக்கடவேனென்று சம்மதித்து கந்தசுவாமியாரிட செந்தாமரைக் கம லத்தினையொத்த திருவடிகளிற் பணிந்துபோற்றி விடைபெற்றுத் திருக் கயிலாயகிரியைக்கடந்துபோய் வீதியுலவுகின்ற வெள்ளாட்டுக் கடாவை த்தேடுவதாய் மண்டலாகாரமாகக் கடல்சூழ்ந்திருக்கும் பூவட்டத்தெல் லமுற்றினும் ஆராய்ந்துங் காணுதவராய்ச் சத்தபாதலங்களினும் போய் த்தேடி அங்குந்தோற்றப்படாமல் வானநாடுகளெங்குஞ்சுற்றி அகப்ப டாமற்கடையிற் பிரமன் வாசஞ்செய்யும் மனோவதிநகருக்கருகில் வரு ம்போது அத்தலத்திற்சிவந்த மேனியையுடைய வெள்ளாடானது யோ கின்றவீருப்பினைக்கண்டவுடன் பிராணிகளனைத்தும் ஓடியொளிக்கத்த க்கதாகப்பாய்ந்து அலைத்துவருகின்ற கடாவானது பிரமித்து வாடும் படிக்கு வீரவாகுதேவர் ஆர்ப்பரித்துநெருங்கி முறுக்குண்டு வயிரத்தி னும் வலிதாயிராநின்ற அதன்கொம்புகளைப்பற்றி வலித்துக்கொண்டு போய்த் திருக்கயிலாயகிரியினைச்சேர்ந்து எடவிழ்ந்தகடப்ப மலர்மாலை தரித்திருக்கின்ற பெருமாள்முன்னம்நிறுத்தி வணங்கிநின்ற காலத்தில் அவனிடத்தன்பாகப்பேசி எதிரில்நிற்கின்ற ரிஷிகள் தேவர்க்களைப்பாத் துவெள்ளாட்டுக்கடாவானது நம்மிடத்திற்சேர்ந்தது யினி நீவிர்வருந் திவாடவேண்டுவதில்லை நீங்களனைவருந் துரிதமாய்ப்பூலோகத்திற்சென்று ஆகவனியங் காருபத்தியம் தட்சணிய மெனச்சொல்லும் மூத்தழலைக் கொண்டுசெய்து குறைபட்டிருக்கும் யாகத்தினைச் சம்பூரணமாகமுடி க்கக்கடவிரென்று அழகியதிருமேனியையுடைய குமாரசுவாமியார் சொ ல்லியபோது அத்தவத்தர்முதலானவர்கள் யிதனைவேண்டு கின்றனர், கா ளகண்டமூர்த்தியாகிய சிவபிரானுக்கினிய குமாரதேவரோவேழ்வித்தீயினி டத்தில் உற்பவித்தெழுந்த யிந்தவெள்ளாட்டுக்கடாவை நாயினேங்கள் இறுதாற்தாதற் பொருட்டு வாகனமாகக் கொண்டு ஏறிநடத்தவேண்டு மெனமீட்டும் போற்றுகின்றவரிடத்தன்பாய்உங்கள் மனோபீஷ்டப்படி க்கு யிக்கடாவினை வூர்திபாகக் கொள்ளுகின்றனம், நீங்கள் பூமண்டலத் திற்செய்துவரும் யாகத்தைபூர்த்திசெய்யப்போய் வருவீரென்று திருவா ய்மலர்ந்தபோது யாவருக்குங்களிப்புண்டாய் ஆனந்தபரவசத்தராகும் படிக்கு வீணையினைவாசிக்கவல்ல நாரதரிஷி முதலானவர்கள் குமாரதே வர்திருவடிகளிற்பணிந்து செலவுபெற்றுக்கொண்டு திருக்கயிலாயத்தை க்கடந்துபோய் பூமியிற்சேர்ந்து குற்றமற்றமனதையுடையரிஷிகள்தே வர்க்கள் முதலானவர்களைவைத்துக்கொண்டு நாரதரிஷியானவர்தாமெத்

தனித்த வேழ்வியைப் பூர்த்தியாகமுடித்து வேதவிதிப்படிக்குக் கடவுளருக்கு அவிர்பாகங்களைக் கொடுத்து மகிழ்ந்திருந்தனன், கேட்டீர்களோ - சவுனகாதிரிஷிகளே அந்தநாரதரிஷிமுதலானவர்கள்செய்ததவமுயற்சியினுல்அன்றுமுதல் நிற்மலக்கடவுளாகியசரவணபவன் அந்தவெள்ளாட்டுக் கடாவினைவாகனமாகக்கொண்டுஏறியவனிவருவதாயினர் இவை நிற்க சிவகுமாரன் மேல்நடத்திய திருவிளையாடல்களையுங்கேழ்ப்பீரென்றுசூதபுராணிகர் சொல்லத்துடங்கினர்.

---

## அயனைச்சிறைபுரிபடலம்

---

நாரதர்முதலிய ரிஷிகள்போயினபின்புபாலசுப்பிரமணியக்கடவுளானவர் ஓமகுண்டத்தில் ஏறியெழுந்து தமக்குவாகனமாக வடங்கியிருக்கின்றவெள்ளாட்டுக்கடாவின்மீது ஆரோகணித்துதெய்வலோகங்களெங்கனும் பவனிவந்தும் பூமண்டலமுற்றுந் திருவிளையாடல்களைச் செய்துகளித்தும் வெள்ளியங்கிரியினிடத்தில் வாசமாகவும் யிருக்கின்ற காலத்தில் ஒருதினம்பிரமன் முதலாகியதேவர்க்கள் சிவபிரானை வணங்கிப்போவதாகத் திருக்கயிலைக்குவந்துயானெனதென்னுஞ் செருக்கற்றுத்தன்னையுந் தலைவனையுந் தெளிந்தஞானவான்கள் மனதைக்கோயிலாகக்கொண்டு வீற்றிருந்து அத்தகையமகத்துக்களுக்கு சாயுச்சியப்பதவியினைத்தந்தாளவல்ல பரம்பொருளாகிய சிவபிரானெழுந்தருளியிருக்கின்றசன்னிதானத்திற்சென்று பயபத்தி விசுவாசத்துடன் கரங்களைக்கூப்பிக்கொண்டு மும்முறைவலம்வந்து சாஷ்டாங்கதெண்டன் சமற்பித்துப் போற்றிக்களித்து அவர் அநுக்கிறகத்தினைப்பெற்று பரமன்சன்னிதானத்தைக்கடந்து கோபுரவாயலைத் தாண்டிமுன்னிலையிற் பன்னிருபுயாசலங்களைப்படைத்திரானின்ற குமாரசுவாமியானவர் நவவீரர்கள் இலக்கராகியபடைத்தலைவர்கள் மனமகிட்சியுடன் தம்மைச்சூழ்ந்து போற்றியிருக்கப்பொன்மயமாகிய திருமாளிகைக்கு முன்னணியில் நிற்கின்றகோபுரவாயலின்மீது நவரத்தினமயமாக விளங்குகின்ற முதல்நிலையில் களித்துவிளையாடிக்கொண்டிருக்கின்ற முருகக்கடவுளினது திருவடிகளைத்தியானித்துப் பணிந்துபோகின்ற தேவர்க்களில் முதன்மைபெற்றிருக்கும் பிரமனுனவன் அசட்டையாக நடப்பதைச் சிவகுமாரன் கண்டு ஓபிரமனே நமதுமுன்னம்வருவாயென்றழைத்த மாத்திரத்திற் றிரும்பிவந்து தாமரைக்கமலபீடத்தினனுன பிரமன் சற்று கெற்வமடைந்து தீர்க்கதெண்டன் சமற்பியாமற் கரங்களைக்கூப்பித்தொழுதகாலத்திற்றேவாதிதே

வனாகிய சிவபிரான்பெற்ற பாலனாகிய சரவணபவன் அதைநிதானித்து
நாம்சிருஷ்டிகர்த்தன் மேலுந் திரிமூர்த்திகளிலொருவனாக விருப்பவனியி
ச்சிறுபிள்ளைக்கு நமது முடியினைச்சாய்ப்பதோ வென்றுபிரமன் மனதி
ற்கொண்டிருக்கும்மமதையைத்தெரிந்துக்கொண்டவராய்ப் பிரமனே உ
ளுக்காருவாயென்றிருத்தி உன்னைப்பார்க்குமிடத்தில் நான்குசிரங்களு
ம்நீண்டதாடிகளும் கரங்களில் அக்குமணியுங் கமண்டலமுங் கொ
ண்டிருப்பதால் அதிசமகிமையினைவாய்ந்த மகத்துவாகக்காணப்படுகின்
றது, ஆதலால் நீ தினந்தோறுஞ் செய்துவருகின்ற தொழிலைச்சொல்லக்க
டவையெனக் கேட்டகாலத்திற் பிரமன் யிதனைப்பேசுவ தாயினன், ஆதி
யிற்சிவபிரான் சட்டளையிட்டபடிக்குச் சீவராசிகள் அனைத்தையும் சிருஷ்
டித்துவருவோமெனக்குறித்ததைத்தெரிந்தவுடன் முருகக்கடவுள் திரு
நகைகொண்டு நல்லகாரியம் சொற்சமத்திய பாதலங்களினிரானின்றசீவ
ராசிகளனைத்தினையும்படைத்து வருபவனாதலால் வேதசாஸ்திரங்கள் மு
ற்றும்ஓதி உணர்ந்திருப்பையோ சொல்லென்று வினவும்போது பலரு
ந்துதிக்குஞ் சிறப்பினைப்பெற்ற பிரமனானவன் மேல்நடப்பதைத் தெ
ரியாமல் ஐயனே யிதனைக்கேட்பாயாக-- ஆதிகாலத்திற் பரமசிவம் என்
னைப்படைத்தபோது காளகண்டமூர்த்தியானவர் அளவிறந்த வேதங்களை
யும் பவித்திரமாகிய ஆகமங்களையும் வெளியிட்டனர், அவற்றுட்சிலவற்
றினை நான்கிருதார்த்த னாதற்பொருட்டு எனக்குப் போதித்தனர். அதுக
ளைவாயறக்கற்றிருப்பேனெனப் பிரமன்மறுமொழி யாடியபோதுமி
கவும் நேத்திநேத்தியென்று நகைத்துநீபூரணமாகவாசித்திருப்பதிலொ
ன்றாகிய இருக்குவேதத்திற் சிலசாகைகளைஓதக்கடவை பார்ப்போமென
முருகப்பிரான்கேட்டபோது நல்லதெனப்பிரமன் சம்மதித்து வேதங்க
ளிலெதனைத்துடங்கினும் முந்திஉச்சரிக்கநின்ற ஒப்பற்ற மொழியாகிய
பிரணவமந்திரத்தினை வரன்முறையாகவெடுத்து உச்சரித்தனன், இவ்வி
தமாகத் தாமரைக்கமல வாசியாகிய பிரமனானவன் வேதங்களுக்கு மூல
மாகிய குடிலையினைஓதி இருக்குவேதத்தின் முதற்சாகையைத்துவக்குமு
ன்னிலையில் மங்களகரமாகிய திவ்வியதேசசைப்பெற்ற திருமேனியையு
டைய குமாரசுவாமியார் பிரமனே மேற்சொல்வதை நிறுத்து நிறுத்தெ
னத்தடுத்து நீ யிப்போது முந்திஉச்சரித்த ஓமென்னும் வாக்கியத்தின்
நிச்சயப்பொருளைச்சொல்லக் கடவையெனத் திருவாய்மலர்ந்தனர், கே
ட்மின்னோ-- சவுனகாதிரிஷிகளே தமது சண்முகங்களிலொன்றாக அவ்
வெழுத்தினைப்படைத் திருக்கின்ற முருகப்பெருமாள் பீசாட்சரத்தின்
பொருளைச்சொல்லக் கடவையெனக்கேட்டவுடன் பிரமனென்செய்வன்
தனது எட்டுவிழிகளையும் மிரள மிரள முழித்து அப்பதத்தின் காரணத்

தைத்தெரிவிக்க வகையறியாததால் வெழ்க்கினவனைப் பெருமூச்செறிந்துயிதற்கென்செய்வோ மெனத்திகைத்துத் தலைகளையிறங்கியிருந்தனன் அவ்வாக்கியமென்ன சுலபமாகவிருப்பதோ எத்தகையருக்கும் அரிது அதன்பெருமைகளைக் கேட்பீராக- பரமசிவம் எழுந்தருளி யிருக்கின்ற பீடமாகவும் மற்றதேவர்கள் உற்பத்திக்குமூலமாகவும் எல்லா அட்சரங்களுக்கும் வேதங்களுக்கும் ஆதியாகவுங் காசியென்னுந் தலத்தினிடத்தில் யிறக்கப்பெற்ற புண்ணியவான்களுக்கு எமதிறைவனாகிய சிவபிரானெழுந்தருளிச் செவிகளில் உபதேசித்துமோட்சவீட்டைச் சேர்க்கவல்லது, மேலும் அதன்காரணங்களை யோசிக்குமிடத்திற் குற்றமற்றதாய்ப்பிரமசொரூபமாகவும் யிருக்கின்றது ஞானவிருத்தியினைப் பெறச்செய்யும் மகிமையினைவாய்ந்த குடிலையினைப்பிரமன் ஓதப்பெற்றதல்லது அதன் பொருளைத்தெரிந்து கொண்டவனன்று ஆதியிற்பரமசிவத்தின் அனுக்கிரகத்தினால் அதன்தாற்பரியத்தைப் போதிக்கப்பெறாதகாரணத்தினால்மயங்கியிருந்தனன், சிவபிரானல்லது மற்றயாவரால் அந்த பிரணவத்தின் பொருளைச்சொல்லப்படும் பவுத்திரமாகிய வேதங்களை ஓதுமுன்னிலையில் ஆதியினும் அந்தத்தினுந் துவக்கி ஓம்என்று ஆரம்பிக்க நின்ற பீசாட்சரத்தின் நிச்சயத்தினைக் காணப்பெறாததால் தாமரைக்கமல வாசியாகிய பிரமனே மயங்கினனெனச் சொல்லுவோமாகில் மற்றதேவர்களில்யாம் சிலதறிவோமெனப் பேசுவராயில் அவரைப்பலரும் நகைக்கவரும் எத்தகையதேவர்கள் மனதினாலும் நிச்சயித்தறியவொண்ணாத பெருமையினையுடைய பிரணவப்பொருளை விரிக்கவறியாது பிரமன திகைத்தகாலத்தில் பாலசுப்பிரமணியக்கடவுளானவர் அவனைப்பார்த்து வேதங்களின்காப்பினது அர்த்தமே உனக்குத்தெரியாதபோது மற்றவைகளின் காரணங்களை நீசொல்லவறிவையோ நீ சிருஷ்டித்தொழிலைச் செய்துவருவது யிப்படிக்குத்தானோவென்று அவன்நான்கு சிரங்களுங் குலுங்கி வருந்தத்தக்கதாகத் திருக்கரத்தினைக்கொண்டு குட்டியும் மனம்பொறாமல் ஆதியில் வேதாகமங்களை நிருமித்த சிவகுமாரனானவர் உந்திகமலவாசியாகியபிரமன்விழுந்து உருளும்படிக்குத் திருவடியினைக் கொண்டுதைத்துத் தள்ளித் தமதேவற்பணிவிடைகளை நடத்திவரும் பரிசனங்களைக்கொண்டு பிரமன்கால்களுக்குப் பாரவிலங்கைப் போடுவித்துக் கந்தமாதனப் பர்வதத்தின் குகைகளிலொன்றில் அரியசிறையி லிடுவித்தனர், சமஸ்தமும் முடிக்கவல்ல பாலசுப்பிரமணியக்கடவுளானவர்பிரமனை நிகள பந்தனஞ் செய்வித்துக் காவலிற்படுத்தியபின்பு தாமுங் கந்தமாதனத்தி னிடத்திற் போய்த் தமதாலயத்தில் வீற்றிருந்து சராசரப்பிரபஞ்சங்களினைக்குறைவறச்சிருஷ்டிக்க எத்தனித்தவராய் ஒருகரத்திற்பளிங்கு மணித்தாவடத்

தினையும் ஒருகரத்திற் கமண்டலத்தினையும் மற்றயிருகரங்களையும்வரத அபயமாகக்கொண்டு ஏகமுகத்தினைப்பெற்றுப் பரம்பொருளாகியசிவ குமாரன் வீற்றிருந்து சதுர்முகப் பிரமனைப்போல மன்னுயிர் அனைத்தையும் படைக்கலாயினர், வரதஅபயமென்பதின் காரணமேதெனில், ஒருகரங் கீழ்நோக்கிக் காட்டவும் மற்றொருகரம் மேல்நோக்கமாகவுமிருக்கும் அதின்பிரயோசன மென்னெனில் தமது திருவடிகளைத்தஞ்சமாக நம்பிப் பூசிப்பவருக்கு யிகத்திற் சகலசெல்வங்களையுந் தந்து பரத்திலும்மோட்சசாம்பிராச்சிய வைபவத்தினையுங் கடாட்சிப்போமென்று அனைவருக்குந் தெரிவிக்கும்பொருட்டுக் கொண்டகோலமாம், இப்படிக்கு உயிருக்குயிராய்ச் சுயஞ்சோதியினொளியாய்ச் சிறந்தவேதங்களின் முடிவாய்ச்சிருஷ்டிதிதிசங்காரமென்னும்முத்தொழில்களுக்கும் மூலமாகவிருக்கின்றகந்தசுவாமியானவர் பிரமனைப்போலச் சராசரங்களைப் படைத்திருந்தனரென்பது அற்புதமோ-சவுனகாதி ரிஷிகளேகேட்பீராக குளிர்ச்சிபொருந்தியதாமரைக்கமல வாசியாகிய பிரமனைச்சிறையிலடைத்துச் சண்முகதேவர் அளவிறந்த உயிர்களைப்படைத்திருந்தனரன்றோ அந்தபிரமனைச் சூழ்ந்துவந்ததேவர்க்கள் யிச்சம்பவத்தினைக்கண்ட மாத்திரத்தில்நமக்கென்னவிளையுமோவெனப்பயப்பிராந்திகொண்டவர்களாய்ச்சுப்பிரமணியதேவரைப் பலதரம்விழுந்து சேவித்துப்போய்த் தங்கள்பதவிகளிலிருந்தனர்.



## அயன்சிறைநீங்குபடலம்



சூதபுராணிகர்-சவுனகாதிரிஷிகளைப்பார்த்துச்சொல்லுவார்-அவ்காலவிஷத்தினையுண்டு கண்டத்திற் றரித்திராநின்ற சிவபிரான் திருக்குமாரனாகிய சரவணபவன் யிவ்விதமாக அளவற்றகாலம் சராசரப் பிரபஞ்சங்களைப்படைத்து வருகின்ற தருவாயிற் கரியவண்ணனாகிய மகாவிஷ்ணுவானவர் யிச்சேதியைத்தெரிந்து பிரமனுக்குச் சம்பவித்த கொடுங்காவலினையும் விலங்கினையும் நீக்கவேண்டுமென்று யோசித்து பரிசுத்தவான்களாகிய தேவர்களையும் ரிஷிக்கூட்டங்களையும் வருவதாகத்திருவுளத்தில் நினைந்தனர், இவ்வாறுகேசவன் சிந்தித்ததைத் தெரிந்தவுடன் அஷ்டவசுக்கள் திசைக்காவலர் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் உவணர் நாகர் சூரியசந்திராதிய நவக்கிரகங்கள் கணங்கள் வானையளாவநிற்கும் பொதிகைப் பர்வதத்தில் வாசமாயிராநின்ற அகஸ்தியர் முதலாகியரிஷிகள் சிருஷ்டிக்குதவியாகவிருந்த நவப்பிரம்மாக்கள் காசி

கைத்தெரிவையர்முதலிய வானநாடரும் பூமியினைத்தாங்கும் பெருமை யினைப்பெற்ற ஆதிசேஷனாகிய நாகராசரும் பலதிசையினும்நின்று வருவதாயினர், சவுனகாதிரிஷிகளே- இவ்விதமாக தேவர்க்கள் முனிபுங்கவர் முதலாகியவர் அனைவரும்வைகுந்த நகருக்குவந்து சேர்ந்து கண்ணன் வாசமாயிருக்கும் நவரத்தினமயமாகிய கோயிலிற்போய்க்கண்டு சேவித்துப்போற்றி எங்களைவருவித்த காரியத்தினைச் சொல்லவேண்டுமெனக் கேழ்க்கப் பிரமனுக்குச் சம்பவித்தகாரணங்களைச்சொல்லி அதற்கொருநிவாரணத்தினைத் தேடும்பொருட்டு நாமெல்லவருஞ் சிவபிரான்சன்னிதானத்துக்குப்போய்த் தேடவேண்டுமெனத் தெரிவித்து அவர்களையும் உடன்படுத்திக்கொண்டவராய் லட்சுமிவிலாசனாகிய மகாவிஷ்ணுவானவர் வந்தவர்களுடன் கலந்துசகலருமாய்த் திருக்கயிலாயத்தைச்சேர்ந்துசபாமண்டபத்தில் வீற்றிருக்கின்ற ஒப்புவமையற்ற ஞானநாயகனாகிய பரமசிவத்தின் திருவடிகளிற் றாழ்ந்தெழுந்து துதிக்கின்ற தருவாயில் மகாவிஷ்ணுவானவர் மீளவும் அழகியபொற்பாதகமலங்களிற்சேவித்து வேதவாக்கியங்களினாற் கர்த்தன் பெருமைகளைப்போற்றி கரங்களைக்கூப்பிநிற்கின்றதருவாயிற் சிவபிரான்கிருபாநோக்கம்பாலித்து ஓ!மகாவிஷ்ணுவே உங்களுக்கு எக்காலத்துமில்லாத மனவருத்தங்களுடன் நம்மைக்குறித்துவந்த காரணமென்னமோ சொல்லுவீரென்று சிவனாசன்வினாவியபோதுமகாவிஷ்ணுவிண்ணப்பஞ்செய்வதாயினர், கர்த்தனேசிலகாலத்துக்குமுன்னம் பிரமனானவன் தேவரீர் தெரிசனைக்கு வந்துபோகின்ற முன்னிலையிற் சண்முகப்பெருமாளானவர் அவனைமடக்கிக்கொண்டுவேதங்களுக்கு ஆதியாகவிருக்கின்ற பிரணவ மந்திரத்துக்குப் பொருளைச் சொல்லுவாயென்று கேழ்க்குமுன்னிலையில் அவன்அதைத் தெரியாமல் மயங்க சிரங்களிற்குட்டிவிலங்குமாட்டிச்சிறைச்சாலையினும் அடைப்பித்து அவன்செய்துவந்த சிருஷ்டித்தொழிலையுந் தாமேநடத்திவருகின்றனர், கர்த்தனே கந்தசுவாமியைப்போலவே பிரமதேவனுந் தேவரீருக்குப்புத்திரனாதலால் அவன்முற்செய்த ஊழ்வினையிலாது முயற்சியினால் அளவற்றகாலமாய்க் கொடியகாவலிற்பட்டு மனம்நொந்து வாடிவருந்தி துக்கித்திருக்கின்றனன், தினதயாபரமூர்த்தி சரஸ்பதிக்கு மணவாளனாகிய பிரமன் சிறையினைவிடுவிக்கவேண்டுமென்று சிவபிரானுக்குதெரிவித்துவேண்டும்போது அதிககிருபையாய் நந்திதேவனைப்பார்த்து யிதனைக்கட்டளையிடுவதாயினர், நமது குமாரசுவாமியானவன் சிருஷ்டிகர்த்தனான பிரமதேவனைச்சிறையில் வைப்பித்தனனென்று யித்தேவர்கள் முறையிடுகின்றனர், ஆதலால் நீ துரிதமாய்அத்தலத்திற்குப்போய் நமது கட்டளையெனச்சொல்லி அவனை விடுவித்துக்கொண்டு வரச்

டவையெனப் பணித்தனர், இவ்விதமாக எமதிறைவனாகிய பரமசிவம்ஆ க்கியாபித்தபோது நந்திதேவர் நல்லதென்று பரமனைச்சேவித்து விடை பெற்றப்பபோதுமுன்னிலையிற் புசபெலபராக்கிரம சாலிகளாகிய அள விற்றசிவகணங்கள் சூழ்ந்துவரநடந்துகந்தமாதனவரையைச் சேர்ந்துஅ தனமீது கோடி-சூரியப் பிரகாசமாக விளங்காநின்றநகரத்திற் பிறவேசி த்தவுடன் நந்திதேவரானவர் சபாமண்டபத்துக்குப்போய் சிங்காதன த்தின்மீது விளங்குகின்ற சண்முகப்பெருமானைத் தெரிசித்தவுடன்வண ங்கிப்போற்றித் தான் வந்தகாரணத்தைச் சொல்வதாயினன், பரிமளமிகு த்த தாமரைக் கமலவாசியாகிய பிரமதேவனைத் தேவரீர் காவலிற்படுத்தி யிருப்பதாக எமதிறைவனாகிய சிவபிரான்கேள்விப்பட்டு அவனைவிட்டுவி டும்படிக்கு உமக்குச்சொல்லிவர எனக்குக்கட்டளையிட்டு யிவடத்துக்க னுப்பினர், ஆதலாற் றடைசெய்யாமல் அவனைச்சிறைச்சாலையில் அடைத் திருப்பதை நீக்கிவிடவேண்டும் எவர்களாலும் அறியவொண்ணாத பிரணவ த்தின்பொருளை அவன்வெளியிடுவதற்கு அவ்வளவு சுலபமாக விருக்கின் றதோ வெனச்சொல்லி முடிவதன்முன்னங் குமாரசுவாமியார் கோபித் து அன்னவாகனனாகிய பிரமன் சிறையினை நீக்கமாட்டோம் யிதைக்குறி த்து யின்னஞ்சிலநேரம் யிவடத்திற்பேசி யிருப்பையாகில் உன்னையும் அரிய காவலிற் படுத்துவோம் அதையோசித்துக்கொண்டு துரிதமாகப் போய்விடக்கடவாயெனச் சீறிச்சொல்லியபோது நந்திதேவரானவர்மறு மொழிபேசுவதற்கஞ்சி யிது நம்மாலாவதன்று மேலுஞ்சிலகால் நீ தாழ்ப் போமாகில் நமக்கும் என்னகெடுதிநேருமோவென்று யோசித்துச் சீக் கிரமாகச் சண்முக தேவனைவணங்கி விடைபெற்று நந்திதேவரானவர் அவ்வரையைநீங்கி தன்பரிவாரங்களுடன் திருக்கயிலாயத்துக்குவந்துது ரிதமாகத் திருச்சபைக்குப்போய் நவரத்தினமயமாக விளங்குகின்றசிங் காதனத்தில் வீற்றிருந்த காளகண்ட மூர்த்தியாகிய சிவபிரான் சன்னிதா னத்திற்சேர்ந்து கர்த்தன் பாதாரவிந்தங்களிற் பணிந்துநின்று நான்கந் தமாதன பர்வதத்துக்குப்போய்ப் பாலசுப்பிரமணிய தேவனைக்கண்டு தேவரீர் கட்டளையினைச்சொல்லும்போது அதைமறுத்ததுமன்றியில் எ ன்னையுஞ் சிறையிற்படுத்துவதாகச் சொற்றனராதலால் மாறுபேசவஞ்சி வந்துவிட்டேன் தேவரீரெழுந்தருளினாலல்லது பிரமன்காவல்நீங்கமாட் டாதென்று சவிஸ்தாரமாகச்சேதியை விண்ணப்பஞ்செய்யக்கேட்டு சிவ பிரான் திருநகைகொண்டவராய்ச் சோதிமயமாகவிளங்கியிருக்கின்றஅ ழகியசிங்காதனத்தை விட்டிறங்கி நவரத்தினமயமாக அமைந்திராநின்ற திருமாளிகையைக்கடந்துவெளிவந்துபலநிலைகளையுடையகோபுரவாயலி னிடத்திற் காத்திருக்கின்ற ரிஷபவாகனத்தின் மீது ஆரோகணித்து நடக்

சூழ்போதுகர்த்தன்திருச்சபையில்வந்திருந்தகாளமேகவண்ணனாகியமகாவிஷ்ணுவுங் கின்னரங்களை வாசித்திருக்கின்ற கந்திருவர்முதலிய தேவர்க்களனைவரும் ஆதிசேஷனாகிய நாகராசாக்களும் தவங்களிற்சிறந்தரிஷிபுங்கவர்களும் மற்றும்அக்காலத்தில் வந்திருந்தசகலருங் கர்த்தனைப்புகழ்ந்துகொண்டு பின்பற்றிநடக்கவுஞ் சர்வாயுதபாணிகளாய்ப்பலநிறச்சட்டைகளையும் வஸ்திரங்களையும் உடுத்துத் தீச்சிகையினையொப்ப விளங்குகின்ற செம்பட்டமயிரினையுடைய பலசிரங்களைப் பெற்று யிடிகளைப்போல உரத்துப்பேச நின்ற செயசாலிகளாகிய அளவற்றபூதகணங்கள் நாற்புறங்களினுஞ் சூழ்ந்துகொண்டு குடைகள் சாமரங்கள் அருகு ஆலவட்டம் மகரதோரணங் கொடிகள்முதலிய சின்னங்களையேந்தியுந் தேவமுரசம் வெற்றிச்சங்கந் திருச்சின்னமுதலிய வாத்தியங்களை முழக்கியும் பரமன்பெருமைகளைப் புகழ்ந்துபோற்றியும்வரத்தக்கதாகவும் யிவ்விதவைபவங்களுடன் சகலரும் நெருங்கிச்செல்கின்ற முன்னிலையில் அவர்கள்மத்தியில் உமையவள் சமேதனாய்ச் சிவபிரான் ரிஷபவாகனத்தினை நடத்திக்கொண்டு பவுத்திரமாகிய திருக்கயிலையங்கிரியினைக்கடந்துபோய் தமது திருக்குமாரனாகிய கந்தசுவாமியானவர் வாசமாகவிருக்கின்ற கந்தமாதன பர்வதத்தினைச்சேர்ந்து சொல்லுதற்கரிய மகிமைகளையும் பெருமிதங்களையும் பெற்றிருக்கின்ற எமதிறைவனாகிய சண்முகப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற நவரத்தினமயமாகிய ஆலயத்தின் முகவாயலினருகில் வந்தகாலத்திற் சிவபிரானானவர் ரிஷபவாகனத்தைவிட்டிறங்கி தேவர்க்கள் ரிஷிகள் முதலிய சகலரும்போற்றிச் சூழ்ந்துவரத்தக்கதாகத் திரிநேத்திரதாரியாகிய கர்த்தன் மெல்லநடந்து திருமாளிகைக்குள்ளாகப் போவதாயினர், இவ்வித ஆடம்பரங்களுடன் சிவந்த சடாமண்டலதாரியாகிய பரமன் கந்தசுவாமிக்கெதிரில் அதிகபிரியத்துடன் வருவதைக்கண்டவுடன் தமது பிதாவானவர் வருகின்[illegible]மாய் நவரத்தினமயமாகிய சிங்காதனத்தை விட்டிறங்கி எதிர்கொண்டு கர்த்தன் திருவடிகளிற் பணிந்து அழைத்துக்கொண்டுபோய் பருத்தமணிகளினாற் சோடித்திருக்கின்ற சிங்காதனத்தில் வீற்றிருக்கச்செய்து கரங்களைக்கூப்பிநின்று பிதாவே தேவரீர் யிவ்வளவுவருத்தங்கொண்டு என்னைத்தேடி வரவேண்டிய காரியமென்னோ திருவுளம்பற்றவேண்டுமெனப் போற்றுகின்ற திருக்குமாரனிடத்திற்பரிவாய்உமாபரமேஸ்பரர் சொல்லுவதாயினர், ஐயனே யிதழ்க்கள் விரிந்திருக்கின்ற தாமரைக்கமல பீடத்தனாகிய பிரமனை நீ சிறையிற்படுத்தியிருப்பதாகத் தெரிந்து நாமதைவிடுவிக்க நினைந்துவந்தோம் அவன் காவலைப்போக்கி அனுப்பிவிடக்கடவாயென்று திருவாய்மலர்ந்தகாலத்திற் சரவணபவன்

யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், வேதங்களை முதலிய சகத்துக்கும் ஆதாரசத்தியாக விருக்கின்ற பிரணவத்தின் பயனைச்சொல்ல வகையறிவாத பிரமன் தினந்தோறுஞ் சகலபிராணிகளையுங் கிரமமாகப்படைத்துவருவானெனப் பேசுவது நசாதனவாம்-மேலும் அவன்மற்ற வேதசாஸ்திரங்களை வாசித்திருப்பானென்பதும் யிதைப்போலவேயிருக்கும் அத்தகைய விவேகசூனியனுக்குயிந்த சிறந்ததொழிலைக் கொடுக்கலாகுமோ ஐயனே தேவரீர் கிருபையுற்றுப்படைத்த வேதங்களை ஆரம்பிக்குமுன்னிலையில் உச்சரிக்கநின்ற ஓமென்றும் அட்சரத்தின் பிறையோசனத்தைத் தெரிந்துகொள்ள சக்தியில்லாத பிரமன் ஏதோசில சிறந்தபூசனைகளைத் தமக்குச்செய்தானென்று நீர்தயையினால் முதற்காரணமாகிய படைப்பின்றொழிலைக் கடாட்சித்தீர் அவனோ அப்பிறையோசனமாகிய எட்டிமரமாக விருக்கின்றான் மேலுஞ் சராசரப்பிறஞ்சங்களை சிருஷ்டிக்கும்மகிமையுள்ள தொழிலைக்கிடைத்தனமென்னும் மமதையைக்கொண்டவனாய்த் தாமரைப்பீடத்தமர்ந்த பிரமன் விருப்பினையடைந்துயாவரையும் ஒருபொருளாக வெண்ணினவனன்று உயர்வுதாழ்வுகளை நிதானித்துநடந்துகொள்ளத்தெரியாத செற்வமடைந்ததினால் அவனுக்குவிழிகள் மூடியிருக்கின்றது யிதுவல்லாமற்றேவரீர் திருவடிகளைத்தினந்தோறும் பூசித்துவந்துந் தனக்கடுத்தஅகந்தை நீங்காமலிருப்பவனாதலால் அவனைப்படுத்தியிருக்கின்ற அரியசிறையை விடுவிக்கமாட்டேன் யின்னஞ்சிலகாலமிருந்தால் புத்திவருமென்று திருக்குமாரன் சொல்லியபோது சிவபிரான் யோசித்து பயமுறுத்தினல்லது யிவன்வழிக்கு வரமாட்டானெனத் திருவுளத்திலெண்ணினவராய் உருத்துப்பார்த்து குமாரனே உன்நடவடிக்கைகளைப் பார்க்குமிடத்தில் வெகுநேத்தியாக விருக்கின்றது முன்னம் நமதுகட்டளையின்படிக்கு நந்திதேவன் வந்து பிர்மதேவன்சிறையை விட்டுவிடக்கடவையெனச் சொல்லிய போதும் யெண்ணிக்கையற்று மறுத்ததுமன்றியில் அவனை அதட்டித்திருப்பிவிட்டனை சிறுகுழந்தையாதலாற் றெரியாமல் யிப்படிக்குநடத்தினனென்று அக்குற்றத்தினைமனதிற்கொள்ளாமல் நாமேவந்து பிரமனைவிட்டுவிடக்கடவையெனச்சொல்லினும் அங்கீகரித்தவனல்லை நமது கட்டளையினை மறுத்து எதிருத்தரம் பேசுகின்றனையென்று கந்தசுவாமியின்மீது கோபித்தவரைப் போலக் கிருபாசமுத்திரமாகிய சிவபிரான்கடிந்து சொல்லிய காலத்திற் பிதாவினது திருவுளத்திற் கோபங்கொண்டு சொல்லுவதைச் சண்முகப்பெருமான்யோசித்து யினி தடைசெய்யலாகா தென்றெண்ணி ஐயனே தேவரீர் அடியேன்மீது சீற்றங்கொள்ளவேண்டாம் சதுர்முகப்பிரமனை வைத்திருக்கின்ற காவலைநீக்கித் துரிதமாகத் தருவிக்கின்றனனென்று பய

பத்தியுடன்வணங்கிச்சொல்லும்போது பரமேஸ்பரர் குஞ்சிரிப்புடன்கி ருபாநோக்கம் பாலித்தனர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே ஆதியில் அழகியசிறகினைப்பெற்ற அந்தப் பட்சியானது தேடநின்ற ஒப்பற்றக டவுளானவர் தமதிடத்திற் கொண்டகோபந்தணிந்து அருள்நோக்கங்கா ட்டியபோது பாலசுப்பிறமணியதேவரானவர் தமதருகில்நிற்கின்ற பரிச னரைப்பார்த்துச் சிறைசாலைகளிலொன்றில் முன்னம்வைத்திருக்கின்ற தா மரைக்கமலவாசியாகிய பிற்மதேவனை விடுவித்துக்கொண்டு விரைவில் ந மதுமுன்கொண்டு வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டதருவாயிற் பூதக ணங்களிற் சிலரோடி அம்மலை அடிவாரங்களி னிராநின்ற குகைகளிலொ ன்றில் யாதொருசவுக்கியங்களுமில்லாமல் ஒடுங்கியிருக்கின்றபிரமனைக் கூவி அவன்காலிற்பூட்டியிருந்த பாரவிலங்கினைப்போக்கி அழைத்துவ ந்து குன்றுகள்தோறுந் திருவிளையாடல்களைச் செய்தமர்ந் திருக்கின்ற குமாரசுவாமியார் திருமுன்புவிட்டனர் அக்காலத்திற் சிவகுமாரனானவர் பிரமன்கரத் தினைப்பற்றிக் கொண்டுவந்து பரமேஸ்பரர் சன்னிதானத் தில் விட்டகாலத்திற் பிரமனானவன் பயபத்திவிசுவாசத்துடன் பரமன் திருவடிகளிற்பணிந்துபோற்றி அதிகவெழ்க்கமும் மானமும்மனதைபா திக்கத்தலையைக்கவழ்ந்திருக்கின்றவனைப்பரமன் தயையாகப்பார்த்துபிர மனேபெருங்காலமாக அரியசிறையிற்பட்டுவருந்தி வாடினையோவெனத்தி ருவாய்மலர்ந்தனர், கர்த்தனானவர் யிவ்விதமாக விசாரணை செய்துமிகவுங் கருணையாக விருக்கின்றகாலத்திற் பிரமனானவன் சிவபிரானைவணங்கித் தேவரீர்திருக்குமாரனாகிய குமாரதேவர்செய்தயிந்த தண்டனையானது நூ காதனவன்றுநல்லுணர்வினைத்தந்துயானெனதென்னும்மதாங்காரத்தை ப்போக்கி அஞ்ஞானத்துக் கேதுவாகிய் செய்கைகளைமாற்றி யினிஎக்கா லத்தினுங் கெற்வமடையாமற் புனிதனாக்கியது அவர்செய்த நன்றியினை எக்காலத்தும் நினைந்திருப்பேனென்று மனங்குழைந்துசொல்லியபோ து திரிநேத்திரதாரியாகிய சிவபிரான்கிருபையுற்றுப் பிரமனே சொற்க மத்தியபாதலமென்னுந் திரிலோகங்களினும்வாசமாயிருக்கின்றசீவராசி கள் முற்செய்தகாரணங்களுக்குத் தகுதியாகியவினைப்போகங்களைப்பா ந்தமாகப் பரிசோதித்துப்பார்த்து அவற்றிற்குத் தக்கவாறே பழையப டிக்கு யித்தினமுதலாக நீயே படைத்துவரக் கடவையென்று அருளுரு வாகவிளங்கும்பரமன் பிரமனுக்குக் கடாட்சித்தபின்பு முருகசுவாமி யார்திருமுகத்தினைப்பார்த்து நகைத்துக் கடாட்சவீட்சண்ணியத்தினைப் பாலித்தவராய் ஐயனே சமீபத்தில் வாவாவென்றழைத்துத் திருக்கரத்தி னைநீட்டிப் பாலசுப்பிறமணியனைத் தழுவியெடுத்து நமது துடையின்மீ தில் உள்க்காரவைத்துக்கொண்டவராய் அழகியதிருமேனியினைப்பெற்ற

திருக்குமாரனிட உச்சியைமோந்து முத்தமிட்டு ஆசானுபாகுவாய் செ
ந்தாமரைமலரையொத்து விளங்குங் கரத்தைக்கொண்டு யிறுகத் தழுவி
க்கொண்டு அப்பனே பிற்மதேவனை யொத்தவனால் வெளியிட வொண்
ணாவோங்காரப்பதத்தினுக்குரிய பொருளுனக்குத்தெரியுமோஅப்படிக்
குக்கூடுமாயில் அதனையிப்போது சொல்லக்கடவையென்று கர்த்தன்திரு
வாய்மலர்ந்தகாலத்திற் குமாரதேவர் குதலைமொழிகளினாலிதனைப்பே
சுவார் சர்வசாதாரணமாக உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலத்தெரி
யவல்ல ஆதிகர்த்தனே கேட்டருள்க- உலகங்களனைத்தினையும் பெற்றதா
யாகிய பார்பதியாருக்குத் தேவரீர் முன்னம் யாவருக்குந் தோற்றுதப
டிக்குப்போதித்து அத்தகையசிறப்பினையுடைய பீசாட்சரத்தின் சிறந்த
பொருளினை மறைவிடமாகவல்லது யாவரும் எளிதினுணரத்தக்கதாகப்
பாயரங்கமாக யிவ்விதமென்று சொல்லலாகுமோசுவாமிகளுக்குத்தோ
ற்றுதலை நானென்ன தெரிவிக்கப் போகின்றனனென்று குறித்தகாலத்
திற்சிவபிரானவர் நகைத்துக் குமாரனே அவ்வாறே நமக்குரகசியமா
கத்தெரிவிக்கக்கடவையென்று தமது திருச்செவியினைத் தாழ்த்தியபோ
து சண்முகதேவர் குடிலையெனச் சொல்லநின்ற ஒப்பற்றபதத்தின் நிச்
சயத்தினைத்தெரிவித்தனர், அதனைக்கேட்டவுடன் ஞானநாயகனாகிய சிவ
பிரான் மனமகிழ்ந்தவராய்ப் பூரணகடாட்சத்தினைச்செய்து எமது கர்த்த
ன் கிருபையுற்று அத்தலத்திற்றலைமை பெற்றிருக்கும் படிக்குத் திருக்
குமாரனை நிறுத்தி என்னையுமொருபொருளாக அடிமைகொண்டிருக்கு
ம்பரமனானவர் பழையபடிக்கு விஷ்ணு முதலியதேவர்க்கள் சிவகணங்
கள் பூதவீரர் சூழ்ந்துபோற்றித் தங்களுக்குரிய செய்கைகளை நடத்திப்
போக ரிஷபவாகனரூடராய் அவ்வரையினைக்கடந்து சிறந்ததிருக்கயிலை
க்கெழுந்தருளி எதிர்த்துதித்து நிற்கின்ற பிரமன் விஷ்ணு ரிஷிகளாதி
யானவர்களுக்குச் செலவுகொடுத்தனுப்பிவிட்டு தாமுந்திருமாளிகையிற்
போய்ச் சிங்காதனத்தில் வீற்றிருந்து சகலரும்போற்றக் கிருபாநோக்
கத்தினைப் பாலித்திருந்தனர், இவ்விதமாகச் சிவனுதன் தம்மைநீங்கிய
காலத்திற் கந்தசுவாமியார் கந்தமாதன பர்வதத்தினிடத்தில் நவவீரர் இ
லக்கர் பூதகணங்கள் சூழ்ந்துதுதிக்கச் சிங்காதனத்திலமர்ந்து திருவிளை
யாடல்களை நடத்தியிருந்தனர்; இப்படிக்கிருக்கின்ற தருவாயில் அகஸ்
தியர் யிச்சேதியினைத்தெரிந்துவந்து சரவணபவனை வணங்கிப்போற்றி
வேண்டுமுன்னிலையில் அரியவேதங்களுக்கு ஆதியாய்ச் சிறந்தபொருள்
களெவற்றிற்கும் முக்கியமாகவிளங்கின்ற பிரணவப்பொருளினது நிச்ச
யத்தைப்போதித்து மேலும் ஆதியிற்பரமசிவமருளிச்செய் திராநின்றஆ
கமசாஸ்திரத்தின் மகிமைகளையும் வரையற உபதேசித்தமுன்னிலையில் அ

கஸ்தியர் பாந்தமாகத் தெரிந்துகொண்டு பாலசுப்பிறமணிய தேவனைவணங்கிவிடைபெற்றுத்தம்திருப்பிடத்தைச்சேர்ந்துகளித்திருந்தனர்.

---

## விடையேறுபடலம்

---

சூதபுராணிகர்- சவுனகாதிரிஷிகளைப்பார்த்துச்சொல்லுவார் யிப்பிறகாரம் பாலசுப்பிறமணியக் கடவுளானவர் அகஸ்தியருக்கு ஓங்காரப்பொருளைத் தெருட்டி யனுப்பிவிட்டபின்பு கந்தமாதன பற்வதத்திலிருக்கின்றதருவாயில்மகாவிஷ்ணுவானவர் பெற்றெடுத்தகன்னியர்களிருவர்சொல்லுதற்கரியஅதிகசுந்தரவதிகளாய்ச் சுந்தரிஅமுத வல்லியென்றுந்திருநாமங்களைப்படைத்திருப்பவர்கள்கந்தசுவாமியார்பெருமைகளையும் ரூபலாவண்ணியச் சிறப்புகளையுந் தினந்தோறுங்கேழ்விப்பட்டுமையல்கொண்டு பற்வதாகிறுதியாக விருக்கின்ற அவர்புசங்களை யிறுகத்தழுவி யின்பத்தினை அடையவதற்கு யிச்சைகொண்டவர்களாய்ப் பிதாவின் அனுமதியினாற் சரவணப் பொய்கைக் கருகில் அரியதவங்களைச் செய்துவருமுன்னிலையில் என்னையுமொருபொருளாக ஆண்டு ரட்சிக்குந்தீனதயாபரக்கடவுளாகிய சண்முகப் பெருமானானவர் அவ்விரண்டு பெண்கொடிகளும் ஒருமித்து அகோரதவவிரதங்களைச்செய்துவருவதைத்திருவுளத்திற்கொண்டு அவர்கள் மனோயிஷ்டப்படிக்குக் கடாட்சிப்பதாக நிச்சயித்தவராய் கந்தமாதனபற்வதத்தினை நீங்கி. தமதுதாயாகியபார்பதியார் திருவவதாரஞ்செய்தருளிய இமையகிரிச்சாரலினிடத்தில் வந்து ஒப்பற்ற சிறப்புகளையுடைய அப்பற்வதத்தின் ஒருபாரிசத்தில் விளங்கநின்றசரவணப் பொய்கையைநோக்கி வருவதை தவங்களைச் செய்திருந்தஅம்மங்கையர் கண்டவுடன் அதிகபயபத்தி விசுவாசங்களுடன் எதிர்கொண்டுபோய் பற்பலதிரம்வணங்கிக் கரங்களைக்கூப்பிநின்றுபோற்றுகின்றதருவாயில் அவர்கள்பத்திவயிராக்கியங்களுக்குக்குமாரதேவர்மெச்சினவராய் உங்கள்தவங்களை அங்கீகரித்தனம்வேண்டியகோரிக்கைகளைச்சொல்லுவீராயிற் றருகின்றனமெனத் திருவாய் மலர்ந்தபோது அத்தருணமங்கையர்கள் சேவித்து கர்த்தனே திருமணமுன்னிலையில்எங்களைக்கலந்துகளிப்பிக்கும்பொருட்டு தேவரீரைநோக்கிவெகுகாலமாகத்தவங்களைச் செய்துவருகின்றனம் அவ்வாறே கடாட்சிக்க வேண்டுமெனப் போற்றுவதைக்கேட்டவுடன் சண்முகப்பெருமாள் அவர்கள்மீதுகிருபாநோக்கம்பாலித்தவராய் யிதனைச் சொல்லுவார்- உங்களிருவரில் அமுதவல்லியெனப் பெயர்பெற்ற மூத்தவள்போய்த் திரிலோகசக்கிறேஸ்வர

னாகிய தேவேந்திரனுக்குப் பெண்ணாக்வளர்ந்திருப்பை சுந்தரி யென்னும் யிளையவளானவள் சமுத்திரஞ் சூழ்ந்த பூமண்டலத்தில் அரியதவங்களைச்செய்திருக்கின்ற சிவமுனிபுத்திரியாகச் செனித்து வேடர்கள்மூலமாகவளர்ந்திருப்பை யிப்பிரகாரம் நீங்களிருவரும் மேற்குறித்த யிடங்களிலிருக்கின்ற தருவாயில் நாம் அவடங்களி னெழுந்தருளி உங்கள்கருத்தின்வண்ணம் பலருமறிய திருமணமுன்னிலையிற்சேர்ந்து களிப்பிக்கக்கடவோம் மனதில்யாதொரு சந்தேகங்களுங் கொள்ளாமற்போய் வருகீர்களென்று எமதிறைவனாகிய குமாரசுவாமியார் திருவாய்மலர்ந்தபோதெதிரில்நிற்கின்ற அவ்விரு மங்கையரும் மனங்கள் பூரிப்புடன் சிவகுமாரனைப் பணிந்துவாழ்த்தி விடைபெற்று கட்டளையின் படிக்கு மேற்குறித்தயிடங்களை நோக்கிப் போயினர், இப்படிக்கு பாலசுப்பிரமணியக்கடவுளினது அனுக்கிரகத்தினைப்பெற்று நடந்தவர்களில் மூத்தவளாகிய அமுதவல்லியென்பவள் அதிசுந்தரமுள்ள பெண்குழந்தையாக வுருக்கொண்டு தேவேந்திரன்முன்னம்போய் பொன்னுலகத்துக்கரசனே என்னைப்புறத்தியாரென் றெண்ணவேண்டுவதில்லை உனக் கிளையவராகிய உபேந்திரருக்குப் புத்திரியாகவிருப்பவள் ஆதலால் நீ எனக்கு மூத்தபிதாவாகும் உன்னிடத்திற் சிலகால மிருப்பதாக விரும்பி வந்தேன் என்னைப்போற்றிவளர்க்கக் கடவையென்று அமுதத்தினுமினிய குதலைச்சொற்களினாற் பேசுவதைக்கேட்ட மாத்திரத்தில் மகம்மேருவி னிடத்திலிருக்கின்ற யிந்திரனானவன் அதிக சந்தோஷித்துடன் குமாரத்தியைக் கிருபையாகப்பார்த்து என்னைப்பெற்றதாயே வருகவருகவென்றழைத்து தன்மனயிஷ்டப்படிக்கு நடந்துகொள்ளவல்ல அயிராபதத்தினைக்கூவி எதிரில்வந்துநிற்கின்ற அந்தவெள்ளையானையைப்பாத்து யிதனைச்சொல்லுவான், இந்தபெண்பிள்ளையானது நமது திருக்குமாரத்தியாகும் மனதிலன்பாகயிவளைச் சவாட்சணை செய்துவரக் கடவை யிந்த அம்மாள் மூலமாகயினி சிலதினத்தில் நமக்குஅளவற்றசிறப்புகள் வரவிருக்கின்ற தென்று தனதிறைவன்சொல்லியபோது மகாபாக்கிய மென்றுவணங்கி அயிராபதமானது துதிக்கையைநீட்டி திருக்குமாரத்தியை மெல்ல வெடுத்துப் பிடரியில்வைத்துக் கொண்டுநடந்து கொவ்வைக் கனியினுஞ் சிவந்திராநின்ற அதரத்தினையுடைய கன்னிகையைப் பிரமன் வாசமாயிராநின்ற மனோவதிப்பட்டணத்துக்குக் கொண்டுபோய் வைத்திருந்துபெற்றதாயினும் பதின்மடங்கதிகமாகச் சகலசிறப்புகளுடன் சீராட்டிவளர்த்துவந்தது, அக்காரணத்தினாற் றெய்வயானையென்னும் ஒப்பற்ற திருநாமத்தினையும் படைத்தவளாய் யாதொருகுறைபாடுகளுமில்லாமற் குமராசுவாமியைத் துதித்துக்கொண்டு அத்தலத்தில்வாசமாக விருந்தனள்,

பெருமையிற்சிறந்த திருப்பாற்கடலானது மகாலட்சுமியைப்பெற்றுப் பாதுகாத்திருந்ததைப்போல வலியிலுயர்ந்த சிறப்பினைவாய்ந்த அபிராயதமானதுகாலங்களில் வேண்டும்பணிவிடைகளைச்செய்துக்கொண்டுவளர்க்கத்தக்கதாகதெய்வயானையம்மனிருந்தனள், இச்சரித்திரம் நிற்கயிவளுக்கிளையவளாகிய விவேகசாலியான சுந்தரியென்னும் பெண்கொடியானவள் முருகப்பெருமாள் கட்டளையிட்ட காரணத்தினை மனதில்நினைந்து பூமண்டலத்திற் சிரேஷ்டமாகக்கொண்டாடப் பலவளங்களைப்பெற்றிருக்குந் தொண்டைமண்டலத்தில்வந்து வள்ளியர்வதத்தினை நோக்கி அதனருகிற் றவஞ்செய்திருக்கின்ற சிவமுனிவனுக்குப் புத்திரியாகவேண்டுங்கருத்தினளாய் நடந்தனள், கேட்டீர்களோ-சவுனகாதிரிஷிகளே தந்தைதாயில்லாத சிவபிரானைத்தமக்குப் பிதாவாகப் பெற்றும் முன்னம் பலகாலஞ்சிருஷ்டிகர்த்தனாகவிருந்து மன்னுயிரனைத்தினையும் படைத்தருளிய கந்தசுவாமியானவர் மேற்குறித்தபடிக்கு அவ்விரு கன்னியர்களுக்கும் வேண்டியவரங்களைக் கொடுத்தனுப்பியபின்பு எதாப்பிரகாரங் கந்தமாதன பற்வதத்தில் விளங்குந் தமது ஆலயத்தைச் சேர்ந்து கிருபாநோக்கத்தினைப்பரப்பி சிங்காதனத்தில் வீற்றிருந்தனர், இப்பிரகாரங் கந்தமாதன பற்வதத்திற் பன்னிருபுயாசலங்களைப்படைத்த கந்தசுவாமியானவர் சிலபகலிருந்தபின்பு திருக்காயிலாயத்தில் வீற்றிருக்கின்ற தாய்தந்தையர் திவ்வியசரணாரவிந்தங்களிற் பணிந்துபோற்றித் தெரிசித்திருக்கவேண்டுமென்னும் நினைவுகொண்டு நவரத்தினமயமாக விளங்குஞ் சிங்காதனத்தைவிட்டிறங்கிய காலத்திற் சிவகுமாரன் கருத்தறிந்து நவவீரர்கள் இலக்கர்முதலிய பரிசனங்கள் சூழ்ந்துகொண்டு துதித்துநடக்கவும் சணக்கிறந்த பூதவீரர்கள் கொடை வெண்சாமரை ஆலவட்டம் கொடிமுதலிய சிறப்புகளைத்தாங்கிப்போகவுஞ் சிலர் தேவமுரசம்வெற்றிச்சங்கம் சின்னமுதலிய வாத்தியங்களைமுழக்கிவரவும் அவர்கள்நடுப்பிரதேசத்திற் பாலசுப்பிரமணியக் கடவுளானவர் அமர்ந்துகந்தமாதன பற்வதத்தினைக்கடந்து சிலநேரத்தில் வெள்ளியங்கிரியைச் சேர்ந்து அதன்மீது சோதிமயமாகவிளங்குகின்ற திருவாலயத்திற்போய் சபாமண்டபத்திலிருக்கும்சிங்காதனத்தி லெழுந்தருளிய தாய்தந்தையரைப்பணிந்துபோற்றி உமாபரமேஸ்பரர் ஆசீர்வதித்துத்தழுவியெடுக்கஅவர்கள்மத்தியில் வீற்றிருந்தனர், இப்பிரகாரம் பாலசுப்பிரமணியக் கடவுளானவர் திருக்கயிலாயத்தில் வாசமாயிருக்கின்றதறுவாயில் தேவர்க்களுக்கு அரசனாகிய இந்திரன் தங்களுக்கு சூரபதுமன்முதலிய அவுணரால் சம்பவித்திருக்கின்ற கொடுமைகளையும் வருத்தங்களையும் மகாவிஷ்ணுவுக்கும் பிரமதேவனுக்கும் பல்திரம்முறையிட்டுவருபவன் ஒருதினம் மிகவும்

வருந்திச்சொல்லி. அவர்களைஉடன்படுத்தி முன்னடத்திக்கொண்டு திருக்
கயிலாயத்தைச்சேர்ந்து திருச்சபைக்குப்போகநடப்பவர்களைச் சிவபிரா
னெழுந்தருளிய ஆலயமுகவாயலைக் காவல்கொண்டிருக்கின்ற நந்திதே
வர்கண்டு நில்லுங்கோள் நில்லுங்கோளென் றதட்டித்தடுத்தபோதுமன
த்தளர்ந்து பலகாலங்களாக அலைத்திருக்கின்ற துயர்மானதுமேலிட்டுவ
ருத்த உள்ளேபோவதற்கஞ்சி நின்றுவிட்டனர், இப்படிக்குச் சமையங்
கிடையாமல் அனேகநாட்கள் அத்தலத்திற் காத்திருந்தவர்கள் ஒருதினம்
பரமன் அனுக்கிரகத்தினாற் சர்வஅதிகாரங்களையும்பெற்று ஆணைஆக்கி
னையைச்செலுத்திவருகின்ற சிலாதர்புத்திரராகிய நந்திதேவர் முன்னம்
போய் வணங்கினவர்களாய்த் தங்கள்மனதை அலைத்துவருத்தியிருக்கின்ற
துன்பங்களைச் சவிஸ்தாரமாகச்சொல்லி யிக்காரணங்களையும் எங்கள் வர
வையுங் கற்தனுக்குத்தெரிவித்து விடைபெற்று எங்களைத் திருச்சபைக்கு
ப்போக விடவேண்டுமென்று போற்றுகின்றகாலத்தில் நந்திதேவர் அவ
ர்களிடத்திற் கிருபையுற்று ஓ தேவர்க்களே உங்களுக்கடுத்திருக்கின்ற த
ளர்ச்சிகளை யின்றுமுதல் விட்டுவிடக் கடவீர்கள் உங்களுக்குச் சவுக்கிய
மாகியகாலம் நேரவிருக்கின்றதென்று தேறுதலைசொல்லி உங்கள் கருத்தி
ன்வண்ணங் கங்கையினையும் பிறையையுஞ் சடாமகுடத்திற் றரித்திருக்கி
ன்ற சிவபிரான் சன்னிதானத்திற்போய்ச் சூரனால் உங்களுக்குச் சம்பவி
த்திருக்கின்ற குறைபாடுகளை சவிஸ்தாரமாகத் தெரிவித்துச்செலவுபெற்
றுவந்து அதிசீக்கிரமத்தில் உங்களை உள்ளேபோக விடுகின்றனன் அதுப
ரியந்தம் பொறுமைகொண்டு யித்தலத்தி லிருப்பீர்களெனக் கட்டளை
யிட்டு பரமன் வீற்றிருக்கின்றதிருச்சபையைச்சேர்ந்தவுடன் திரி
நேத்திரதாரியைவணங்கித் துதித்துக் கரங்களைக் கூப்பி நின்று கற்தனே
மகாவிஷ்ணு பிற்மதேவன் இந்திரன் முதலியதேவர்க்களனைவருந் திரு
க்கோவில் முதல்வாயலினிடத்தில்வந்து தேவரீர் தெரிசனைக்குக் காலம்
பாத்திருக்கின்றனரென்று விண்ணப்பஞ்செய்யக் கேட்டவுடன் தயாநி
தியாகிய எமதிறைவனாகிய சிவபிரான் அவர்களிடத்தில் மிகவும் அன்பு
கூர்ந்து நந்திதேவனே அவர்களனைவரையும் நமது முன்கொண்டுவந்து
விடக்கடவையெனக் கட்டளையிட்டகாலத்தில் அதிசீக்கிரமத்திற் றிரும்
பிவந்து தேவர்களைப்பார்த்து சயஞ்சோதிவடிவினனான பரமன் உங்களை
வரக்கட்டளையிட்டனரென்று ரிஷபமுகத்தினைப்பெற்ற நந்திதேவர்சொ
ல்லிய வாக்கத்தினைச் சகலருங்கேட்டவுடன் அதிசீக்கிரமத்திற் கற்தன் ச
ன்னிதானத்தைச்சேர்ந்து கிருபைக்கடலாகிய சிவனுதனைத்தெரிசித்தவுட
ன்செயசெய வெனப்போற்றிச் சென்றுசமீபித்து மும்முறை வலம்வந்
து தீர்க்கதெண்டன் சமர்ப்பித்துத் துதிப்பவர்களில் அதிக அலைச்சற் பட்

டுமனம்வருந்தியிருக்கின்ற இந்திரனுனவன் துணிவு கொண்டு சகலருஞ் சூழுந்திக்கற்தனைவந்தித்து யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன். உலகங்களனைத்தினையும் பரிவாய் ஈன்றருளிய பராசத்தி சமேதனுகிய கர்த்தனே யென்முறைகளைக்கேட்டருள்க அளவற்ற யுகங்களாய் சூரபதுமன் முதலிய அவுணப்பாதகரால் அதிகவருத்தங்களை அனுபவித்து ஒடுங்கித்தேவரொன்னும் பெருமைகளையும் யிழந்ததன்றியில் மிகுத்த ரூபலாவண்ணியங்களைப் பெற்றிருக்கின்ற அரம்பாஸ்ரீகளும் எனது அருமையாகியபிள்ளையும் மற்றதேவகுமாரர்களும் அளவற்றவிண்ணவர்களுங் கொடியசெய்கைகளை பெற்றிருக்கின்ற அவுணருக்கிறைவனுகிய சூரனுக்கிருப்பிடமாய் சமுத்திரமத்தியிற் றோற்றநின்ற வீரமாமயேந்திர புரியில்சிறையிற்பட்டு வருந்தியிருக் கின்றனர், மேலும் யிழியாகிய தொழில்களைச்செலுத்திவருகின்ற அவுணரால் எக்காலத்துஞ் சலனமற்றுவிளங்கா நின்ற என்பதியாகிய பொன்னுலகமானது சகலவளங்களுடனுங்கொளுத்தப்பட்டு அழிந்து நாசமாய்ப்போயது, அவ்வனியாயங்களை அடியேன்யிச்சன்னிதானத்திற் சொல்லவும் வேண்டுமோ அவையனைத்துந் தேவரீர்திருவுளத்துக்குப்பாந்தமாகத்தெரிந் திருப்பதன்றேயித்தகையதுன்பங்களிற்பட்டுக் கிலேசிக்கின்ற யான் முன்னம் அரியதவங்களைச்செய்திருந்த முன்னிலையில் தேவரீர் கிறபையுற்றெழுந்தருளி என்குறைகளைத்திருச்செவிகளினென்றுப் பயங்கொள்ள வேண்டாம் யின்னஞ்சில தினத்தில் நம்மிடத்தில் ஒருகுமாரன்தோற்றவிருக்கின்றனன், அவனைக்கொண்டு அவுணர்களைக் கொல்லுவித்து உங்கள் துன்பங்களைப் போக்கிப்பழையபடிக்கு நிலைபெறச்செய்வோமென்று எமதுகர்த்தனே கடாட்சித்திருந்தீர் அவ்வாறே குமாரசுவாமியுந் திருவவதாரஞ் செய்திருக்கின்றனர், இத்தினவரையில் அடியோங்கள் துக்கவருத்தங்களை ஒழித்தவரல்லபுவனங்களனைத்தினுமிராநின்றபிராணிகள் முற்றும்வணங்கிப்போற்றத்தக்க பெருமையினையுடைய மூலகாரணக் கடவுளே தீயபாதகராகிய யாங்கள் செய்திருக்கின்ற வினைப்போகமாகியது யிப்பாடுகள்பட்டும்யின்னமுந் தொலையவில்லையோ சூரபதுமன் புசபெலபராக்கிறமங்களை அடக்கி எங்களைரட்சிக்க வல்லவரா யாரையுங் காணவில்லை கங்காவானியைச்சடாபாரதத்தில் வைத்திருக்கின்றதேவரீருடனல்லதயினிமேல்என்குறைகளை யாவருடன் முறையிட்டுக்கொள்ளப்போகின்றனன், யாதோவேன் திவலைகளிறைய அலைகளை வீசாநின்றசமுத்திரத்திற்சென்றகாக்கையானது நிற்கயிடங்கிடையாமல் அதனிடத்தோடுங் கப்பலின்மீதிறங்கிக் களித்திருப் பதுபோல யிடறிற்பட்டு வாடுகின்ற எங்களுக்குத் தேவரீர் எழுந்தருளியிருக்கின்ற திருக்கயிலையல்லது சோபந்திரப் பேறு

சத்தக்க யிடமொன்றுமில்லை யிப்பாதகர்படுந் துன்பங்களை மாற்றிரட்சி
ப்பதற்குத் துணையாக விருப்பவர்களுந் தம்மையன்றியில் மாறுகண்டி
லம்.கடையுகத்தில்உலகங்களை அழிக்கவல்ல வடவாமுகாக்கினியின் மீது
ஒருகாலம் பள்ளிகொள்ளலாகுந் திருப்பாற் கடலினுதித்த ஆலகாலவி
ஷத்தினையும் சிலபரிகாரங்களைச்செய்து பொசிக்கவும் படும் சத்திராதிக
ள்அலைத்து வாட்டுவதினால் எங்களுக்கடுத் திருக்கின்ற கொடியதுயரங்க
ளைச்சகித்திருப்பது மிகவும் அரிதரிது மிகவுங்கடினமாக விருக்கின்றது
சுத்தனே ஒருவருக்குநேர்ந்த துக்கவருத்தங்களைப் போக்குவதற்குமுய
ற்சிசெய்வதும் அவன்வீறி விளங்கி யிருக்கத் தக்கதாகச் சகலசெல்வங்க
ளையும்பெறத்தேடுவதும் பிதாவுக்குரியகடமையல்லது மற்றொருவருக்
கு அத்தகையசிறத்தையுண்டாவதோ ஆதலாற்றேவரீர் குழந்தைகளாகி
யஎமதுதுன்பங்களை அவ்வாறே திருவுளங்கொண்டு பாதுகாத்துரட்சி
க்கக்கடவை யின்னமும் பராமுகமாயிருப்பீராகில் அவுணரால்நோகவி
ருக்கின்ற துக்கங்களைச் சகிக்கமாட்டோம் தீனதயாபர மூர்த்தியே என்
றுதேவராசனானவன் வணங்கி தங்களுக்கடுத்திருக்கின்ற வருத்தங்களைச்
சொல்லி முறையிடுகின்றதறுவாயில் மகாவிஷ்ணுவும்பிற்மதேவனும்யி
ருபாரிசங்களிலும்நின்று தேவராசனைக்குறித்து சுத்தனேகொடியசெய்
கைகளையுடைய சூரபதுமனானவன் யிவனைஅலைக்கின்றதையும் மற்றைய
பிராணிகளைக் கொன்றுகொன்று தொலைக்கின்ற காரணங்களையும் யின்ன
விதமென்று எங்களாற்சொல்லிமுடிவதன்று யினிசணப்போதெனுந்தா
ழ்க்காமல் யிந்தநிமிஷத்தில் அதற்கொருநிவாரணத்தினை அனுக்கிறகிக்
கவேண்டுமென்று வணங்கிச்சொல்லி வேண்டினர், தம்மைவந்திப்போ
ருக்கு யிம்மையிற் சகலசெல்வங்களையுந் தந்து மறுமையினும் மோட்
சசாம்பிருச்சியத்தினைக் கடாட்சிக்கவல்ல சிவபிரானானவர் யிவர்கள்சொ
ல்லிய காரணங்களைக் கேட்டவுடன் மிகவும் யிரங்கினவராய் தேவர்க்க
ளே யினிமனவருத்தங்களை விட்டுவிடக்கடவீர்களென்று திருவாய்மல
ர்ந்து பக்கத்தில்வீற்றிருக்கின்ற குமாரசுவாமியார் முகாரவிந்தங்களைப்
பார்த்து யிதனைச்சொல்லுவதாயினர், ஐயனே உலகங்களை சின்னபின்னப்
படஅலைத்து அவற்றிற்றங்கிய பலபிராணிகளுக்குங் கொடியதுன்பங்க
ளைச்செய்துவாட்டி தேவர்க்கள்வாசமா யிருக்கத்தக்க பெருமையினைவா
ய்ந்த பொன்னுலகத்தினையும் அக்கினிக் கிரையாகக்கொடுத்து நீருக்கி
யிந்றஇந்திரன்முதலாகிய விண்ணவர்களுக்குப் பலயுகங்களாகத் தகாத
வல்லமையிட்டு தீங்குகளைச்செய்து கொடுங்கோல் செலுத்தி வருகின்ற
புசபெல்பராக்கிறம சாலியாகிய சூரபதுமனை அவுணக் கூட்டத்துடன்வ
ேரயறக்கொன்று வேதமார்க்கமாகச் சகலமும்நடத்துவர நிலைபெறச்செ

யீது தனக்குரிய சுதந்திரங்களையிழந்து பதிநனைய் நிலைபெறாமல் அலைந்திருக்கின்ற இந்திரனுக்குப் பழையபடிக்குத் திரிலோகச் சம்பத்தினையுங்கொடுத்துத் தேவர்கள் முதலானவர்கள் கிலேசங்களைப்போக்கிச் சவுக்கியத்திலிருத்துவதாகப் பிறையாணைப்பட்டுப்போய் செயங் கொண்டுவரக்கடவையென்று எமதிறைவனாகவுந் தந்தையாகவு மிராநின்ற சிவபிரான் அனுக்கிரகித்தனர், முன்னமே அத்தேவர்களிடத்திற் பூரணகடாட்சத்தினைச் செய்திருக்கின்ற குமாரசுவாமியார் பிதாவின் வாக்கியத்தினைக் கேட்டவுடன் மனமகிட்சியாய் தேவரீர் கட்டளையின்படிக்குத் தடையின்றி முடித்துவரக் கடவேனென்று சொல்லிய பின்பு அதிசீக்கிரமத்திற் பதினொருஉருத்திரரைத் திருவுளத்தில் நினைந்தமாத்திரத்தில் அவர்களும் வந்துசேவித்துத் துதித்திருப்பவர்கள்மீது கிருபாநோக்கத்தினைப்பரப்பி நீங்கள் யிந்தபாலசுப்பிறமணியன் கரங்களிற்படைகளாகச்சேர்ந்திருப்பீர்களென்று அவர்களைப் பதினொருவகை ஆயுதங்களாக நிருமித்துச் சரவணபவன் திருக்கரங்களிற் கொடுத்தனர், பூற்வத்திற்பரமசிவகடாட்சத்தினாற்றோற்றி அவர் திருநாமமும் உருவமும் பெற்றிருக்கின்ற உருத்திரத்தலைவர்கள் பரமன் அனுக்கிறகப் படிக்குச் சொல்லுதற்கரிய வலிபெற்ற தோமரம் கொடி வாள் குலிசம் பாணம் அங்குசம் மலர்மாலை மமலம் தண்டம் வில் மழுவாயுதம் யிவ்வகையாகச் சண்முகதேவர் திருக்கரங்களில் விளங்கினர், அதன்பின்பு பல்லாயிரகோடி அண்டங்களிலிராநின்ற பஞ்சபூதங்களையும் வாட்டும் முயற்சிபெற்றதாயும் சகலபிராணிகளையும் ஏககாலத்தில் நாசஞ்செய்யத் தக்கதாயும் எத்தகையர்மேல் விட்டபோதினும் அவர்கள் புசபெலபராக்கிறமங்களையும் வரமுயற்சிகளையும் அதப்படுத்திப் பிராணனைவாங்கத்தக்கதாயும் எவ்வுலகங்களுக்கும் நாயகமாகவும் யிராநின்றதாய் வலியும் வீரமுங் கொடுமையும் பெற்றிருக்கின்ற ஒப்பற்றவேலாயுதத்தினைப்படைத்துத்திருக்குமாரன் கரத்திற்கொடுத்தபின்பு எமதிறைவனாகிய சிவபிரான்சன்னிதானத்திற் காத்திருந்துயிட்ட பணிவிடைகளைச்செய்துவருகின்ற நவவீரர்களாகிய பிள்ளைகளைப்பாத்துத் தேவரோமுதலிய சகலருக்கும் முதன்மையாக விருக்கின்ற யிந்தகுமாரசுவாமியைக் கலந்துபோய் அவுணர் குலநாசஞ்செய்துவரக் கடவீரொனக்கட்டளையிட்டுப் பற்பலசிறந்த ஆயுதங்களைப்படைத்து அவர்களுக்குக்கொடுத்துப் பாலசுப்பிறமணியனுக்குப் படைத்துணையாகத் தந்து-அதன்பின்பு-அண்டர்பார்ணன்-நந்தி-உக்கிரன்- தண்டன்- திக்கண்ணன்-சிங்கன்-முதலாகிய பூதகணத்தலைவர்மீது திருக்கண்சாத்தி உங்கள்வசத்திலிராநின்ற இரண்டாயிர பூதவெள்ளங்களையுங் கூட்டிக்கொண்டுசென்முகனுக்குச் சேனைகளாகப்போய்ச் சத்துருக்களைச் செயித்துவ

நக்கடவியெனப்பணித்து அவர்களைக் குமாரனுக்குச் சேனைத்தலைவராகக் கடாட்சித்து மேலும் பஞ்சபூதங்களுக்கும் மேலானவல்லபங்களும் எத்தலங்களினும் பரவியிருக்கின்ற பொருள்களின்வலியும்தாமரைக்கமலவாசியாகிய பிர்மதேவன் முதலாகிய தேவர்க்கள் பலங்களும்ஒன்றுபட்டேப்பொன்னுலாய உருளைகள் நவரத்தினமயமாக விளங்கும் அச்சுமச்சு-குத்துக்கால்-கொடுங்கை-சிகரம்-சொடை-கொடிகள்-முதலிய சிறப்புகளைப்பெற்றதாய்ச் சுழிசுத்தங்கள் வாய்ந்திரானின்ற உத்தமஅசுவங்கள் கோடிபூண்டதாய் மனோவேகத்தினுமுந்தி ரதிகன் எண்ணப்படிக்கு நடப்பதாய்பற்பலபடைகளைப்பரித்திருப்பதாய்க்கோடிசூரியப்பிறகாசமாகவும் விளங்கும் ஒப்பற்றஇரதமொன்றினைச் சிவபிரான்மனதிற்சிந்தித்துப்படைத்துத் திருக்குமாரனுக்கு வாகனமாகக்கொடுத்துச்சகலமும்முடிந்தவுடன் குமாரனே யிந்தபோரணிகளுடன்போய்ச் சத்துராதிகளைச்செயித்து வரக்கடவையென்று ஆசீர்வதித்தகாலத்திற் குமாரசுவாமியானவர் சிங்காதனத்தைவிட்டிறங்கி அதிகபயபத்தி விசுவாசங்களுடன் மையிட்டு நீண்டிரானின்ற விழிகளையுடைய உமையவளையும் பரமேஸ்பரனையும் மும்முறைவணங்கிக்கரங்களைக்கூப்பிநின்றுவேதவாக்கியங்களினூற்போற்றுகின்றதிருக்குமாரன்மீதுதிருவுளத்தில்அதிகபிரீதியாகப்பரமன்இருகரங்களைக்கொண்டெடுத்துமார்பிற்சேர்த்தணைத்து துடையினிடத்தில்வைத்துஉச்சியைமோந்து முத்தமிட்டுமுதுகைத் தடவிக்கொடுத்துகிருபாநோக்கத்தினைப்பாலித்தபின்பு யிடப்பாகத்தில்வீற்றிருக்கின்றலோகநாயகி திருக்கரத்திற்கொடுத்தனர், இப்பிறகாரந்திருக்குமாரனிடத்திற் பரிவாகக்குலவி நீட்டியபோது அறுசமையங்களுக்கும் மூலகாரணியாகவிளங்கி நடிப்பிக்கும் பார்பதியார் அதிக ஆவலுடன் செந்தாமரைமலரைப்பழித்து விளங்குந்திருக்கரத்தினலேந்திபக்கத்தில்வைத்துக்கொண்டு அன்புடன் அணைத்துக் குமாரசுவாமியினது உச்சியைமோந்து முத்தமிட்டு அப்பனே ஐயனே பிள்ளாயெனப் பரிவாய்முத்தாடி நமதிறைவன் கட்டளைப்படிக்கு உன்னுக்கினைக் குட்பட் டிருக்கின்றநவவீரர்கள்-இலக்கர்-பூதகணங்கள்-முதலானவர்களைச் சேனைகளாகக்கொண்டுசத்தன் கடாட்சித்த யிந்ததேரிலேறிப்போய்யாவராலுஞ் செயித்தற்கரிய புசபெலபராக்கிறமசாலிகளாய் மாயவித்தைகளிற் சிறந்தவர்களாயிரானின்ற அவுணவற்கங்களை வகையறக்கொன்று நீனாகிய யிந்ததேவர்களுக்குச் சம்பவித்திருக்கின்ற துன்பங்களைப் போக்கி பழையபடிக்கு அவர்கள் அரசுரிமைகளைக்கொடுத்து நிலைபெறச்செய்து வரக்கடவையென்று மங்களாசீர்வாதங்களைச் செய்தனள், பரமேஸ்பரியானவள் யிப்படிக்கிவாழ்த்தி விடைதந்தகாலத்திற் சண்முகப்பெருமானானவர் வெளி

வந்து அம்மையப்பனை வணங்கிச் செலவுபெற்றுக்கொண்டு பிறையாணைப்படிமுன்னிலையிற் சேனைத்தலைவர்களாகப்பெற்ற வீரவாகுதேவர்முதலிய நவவீரர்கள் - இலக்கர் பூதகணத் தலைவர்கள் முதலாக உமாபரமேஸ்பரனை வலம்வந்து மும்முறைவணங்கிப்போற்றி விடைபெற்று பாலசுப்பிரமணியக்கடவுளைச் சூழ்ந்துகொண்டு அதிக உச்சாகங்களுடன் நடந்தனர், அத்தருவாயிற் திருச்சபையிலிருந்த மகாவிஷ்ணு பிர்மதேவன் தேவேந்திரன் யிவர்களெழுந்து எமதிறைவனே தேவரீர் எங்களுக்கடுத்திருந்த சகலதுன்பங்களையும்போக்கி ரட்சித்தீர் யிதுபரியந்தம் அலைத்திருந்த பகைவரைமுற்றினும்போக்கிறோம்- யித்தினம்பிழைத்தோம்பிழைத்தோமென்று அழகிய திருமேனியையுடைய உமையவளுடன் சிவபிரான் பொற்பாத கமலங்களில்வணங்கிப் போற்றுகின்றவரைப் பரமன் கிருபையாகப்பார்த்து உங்களுக்கு நன்மைசெய்யும் பொருட்டுப்பிறையாணைப்பட்டு நடக்கின்றகுமாரசுவாமிக்கு மந்திராலோசனைக்குரியராகவிருந்து சகலகாரியங்களையுஞ் சீராய்முடித்துக் கொண்டுவரக்கடவீர்களென்று செலவுகொடுத் தனுப்பினர்.

---

## படையெழுபடலம்

---

சூதபுராணிகர் - சவுனகாதிரிஷிகளைப்பார்த்துச்சொல்லுவார் - மேற்குறித்தபடிக்குத் திரிநேத்திர தாரியாகிய பரமேஸ்பரரிடத்தில் அனுப்பிவித்துக்கொண்டு திருச்சபையைக் கடந்து வெளிவந்த மகாவிஷ்ணு பிர்மதேவன் இந்திரன்முதலாகிய தெவர்க்களுந் துரிதமாகக் குமாரதேவனைச்சேர்ந்தகாலத்தில் விஷ்ணுவானவர் தங்களுடன் வருகின்ற வாயுதேவனைப் பார்த்து நமதிடத்திற் பிரியமாக வெழுந்தருளுகின்ற சண்முகப்பெருமாள் ஆரோகணிக்கத்தக்கதாக யிந்ததிவ்விய ரதத்தின்பேரில் நீ சீக்கிரமாகவேறி முற்றட்டிலிருந்து குதிரைகள் வார்களையுஞ் சவுக்கினையுங்கரத்திற் பற்றிக்கொண்டு பாசறைகத் தேரைநடத்திச் சிவகுமாரனெதிரில் நிறுத்தக் கடவையெனக் கட்டளையிட்டனர், இப்பிறகாரங் கேசவன்அன்பாக ஆக்கியாபித்தவுடன் வாயுதேவன் அதிகஉச்சாகத்துடன் அதற்கிசைந்து வானத்தினை அளாவநிற்கின்ற சொர்ணமயமாகியதேரின்மீதிற்பாய்ந்து தனக்குதவியாக விருக்கின்ற மற்றஒன்பதுவாயுக்களுடன் வீற்றிருந்து குதிரைகள் வார்களைத்திருத்தமாகப் பற்றிக்கொண்டுமனப்பூரிப்புடன் நடத்திவந்து சண்முகப்பெருமாள் திருமுன்நிறுத்தினமகாசத்தனே யிந்தரதத்தின்பேரில் எழுந்தருளவேண்டுமென்று விண்

ணப்பஞ்செய்தனன்-இந்தப்பிரகாரம் வாயுதேவன் கரங்களைக் கூப்பித்தொழுது சொல்லியபோது அவன்சாரத்தியஞ் செய்கின்றகிரமங்களைப் பார்த்து அதிக திறமையைக் கடாட்சித்தவராய் உதையகிரியினிடத்திற் பாலசூரியனானவன் தோற்றியதைப்போல ரத்தினமயமாகச் சொலித்திருக்கின்ற ரதத்தின்பேரில் குமாரதேவர் வீரசிங்கத்தைப் போலத்தாவியேறி அரியணையில்வீற்றிருந்த தருவாயிற் சூரபதுமன் குலநாசமாய் மாண்டனன் மாண்டனனென்று இந்திரனுந்தேவர்களுங் குதித்துக்குதித்தார்ப்பரித்தனர், இவையன்றியில் பற்வதாகிருதியாக விளங்குகின்றதேரின்மீதிற் குமாரசுவாமியார் விளங்குவதைக் கண்டமாத்திரத்தில்அவர்அனுக்கிரகத்தினைப் பூர்த்தியாகப் பெற்றிருக்கின்ற புசபெலபராக்கிரமசாலிகளாகிய வீரவாகுதேவர் முதலிய துணைவர்கள்வந்துநாற் புறங்களிலுஞ்சூழ்ந்துபோற்றிவரவும் முனிசிரேஷ்டர்கள் தேவர்கள் அத்தேவனைநீங்காமற் சுத்திக்கொண்டு மங்களஆசீர்வாதங்களைச்சொல்லிக் கற்பகமலர்களைச் சொனைமாரியைப்போல விறைத்துத் துடர்ந்தனர், இவ்விதமாகச்சகலரும் முருகப்பெருமானைக்கூடிய தருவாயிற் கங்காசடாதரக் கடவுளாகிய சிவபிரான் தாமெழுந்தருளி யிருக்கின்ற திருக்கயிலாயத்தில் நெருங்கியிருக்கின்ற அனந்தவெள்ளப்பூதப்படைகளில் இரண்டாயிரத் தொகைகொண்டவர்கள் தங்கள்தலைவர்கள் கட்டளையின்படிக்கு வீராவேசங்களுடன்வந்துசூழ்ந்தனர்- அவர்கள்பெருமைகளைக்கேட்பீராக— எழுவாயுதம் மழுவாயுதம் வச்சிராயுதம்கெதை சக்கரம் வாளாயுதம் எறிவேல்முதலாகிய ஆயுதவிதங்களைக் கரங்களிற்பற்றி வலியினுக் கொப்பற்றவர்களாய்ப் பிறகாசம்பொருந்திய மூன்றாம்பிறையினையிரண்டாகத் துண்டித்து பதிந்துவைத்திருப்பதைப்போல் விளங்குகின்ற கோறதந் தங்கள் பிறகாசித்திருக்க அனற்பொறிகளையிறைத்துச் சிவந்து சுழலும் முண்டைக்கண்களைப்பெற்றும் யிடியைப்போல உரத்தசொல்லினால் வீரங்களைப்பேசியும் வானத்தினையளாவுங்காத்திர்திரேகத்தைப் படைத்தும் குறளுருவினராயும் குறியதிரேகராயும் ஐவகைதிறங்களும் வீற்றுவீற்றாகக் காட்டுந்திரேகத்தைப் படைத்தவராயும் நீண்டசடைகளையுடைய சிரத்தராயும் செம்பட்டமயிர் விரித்தலைய பாரித்திருக்குந் தலையராயும் ஒருமுகத்தையும் பற்பலமுகங்களையும் படைத்தவர்களாயும் பாதகமிற்பாதகராயினுந் தம்மைச்சரணமடைவராயின் அவர்களைஆதரித்து வேண்டிய உதவிகளைச்செய்யவல்ல குணசம்பன்னராயும் விபூதி ருத்திராட்சம்விளங்குந் திரேகத்தராயுங் காளகண்டமூர்த்தியைப் பூசித்துப்போற்றி வணங்குவதல்லது மற்றதேவரைஒருபொருளாக மதியாத பத்திவைராக்கியங்களைப் படைத்தவராயும் எத்தகையரோனுந் தங்களைப்பகைகின் அவ

ர்களைப்பிடித்துப் பிசைந்துகொன்று நாசஞ்செய்யும் வீரபராக்கிரமசாலிகளாயும் மன்னுயிர்களைக்கொண்டு போகவல்ல எமன் கரத்திற்பற்றி விறியிருக்கும் சூலத்தைப்பறித்து முறித்தெறியும் செயசாலிகளாயும் சகலஅண்டங்களையும் அவற்றுட்பட்ட பிராணிகளனைத்தினையுங் கவளீகரமாக விழுங்கிமீளக் கக்கவல்ல மகிமையினைப்பெற்றவர்களாயும் அன்றியும் உதரத்திற்சுடர்விட்டெரியும் பசித்தீயானது தணியும்பொருட்டு அவற்றினைப் பொசித்தும் மீட்டுஞ் சிவபிரான் அனுக்கிரகத்தினால் எதாப்பிரகாரம் நிலைபெறப்படைக்கும் மகத்துவங்களைப் பெற்றவர்களாயும் முன்புகழ்முடிவுகளில் பிறந்த இந்திரன் முதலாகிய தேவர்க்களினது சிரமாலிகைகளைக் கழுத்தினும் மார்பினுஞ் சிரத்தினுஞ் செவிகளினுங்கரங்களினும் மிடையினும் பாதங்களினும் பொன்னணிகளுடன் களித்துத் தரித்திருப்பவர்களாயும் இவ்விதவீரபராக்கிரமங்களையும் மகத்துவங்களையும் பெற்றிருக்கின்ற இரண்டாயிரவெள்ளம் பூதவீரர்கள் நெருங்கித் தத்தமதுதலைவர்களுடன் வந்து சரவணப்பெருமானை வணங்கிச் சர்வசங்காரகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஏககாலத்திற்பெருக்கெடுத்தொலிப்பதுபோலவும் அண்டகோளகைவெடித்ததுக்கொப்பாகவுஞ் செயசெயவெனப்போற்றி ஆற்பரித்து எமதிறைவனைச் சூழ்ந்துகொண்டனர், அவர்களில் அண்டத்தினையளாவ ஓங்கியிராநின்றபர்வதத்துக்கொப்பாகப் பாரித்திருக்குந்தேகத்தினைப் படைத்தபெரியபூதகணங்களானவர் வார்களினாலிறுக்கியிராநின்ற மத்தளங் - குடமுழா தப்பட்டை வெற்றிமுரசம் - காகளம் - சின்னம் - வெற்றிச்சங்கமுதலாகிய பதினெண்வாத்தியங்களை முழக்கியுங் கொடை - வெண்சாமரை - அருகு - ஆலவட்டம் - கொடி - மகரதோரணம் - இவ்விதச் சிறப்புகளைக்கொண்டுபணிவிடைகளைச்செய்து போகின்றதறுவாயில் ஆறுமுகச்சுவாமியார்யிச்சம்பிறமங்களைப் பாத்துக்கொண்டு அண்டங்கள் முற்றினும்பரிபூரணமாக நிறைந்திருக்கின்ற கிருபாசமுத்திரமானது ததும்பி ஓங்கிச் சூழ அதன்மத்தியிற் சொலித்தெழுகின்ற ஞானசூரியனைப்போலத் திசாதிசைகளெங்கணும்பரந்தொலித்திருக்கின்ற பூதசேனாசமுத்திரம்வளைந்துகொண்டுபோற்றத்தாம்மத்தியில்விளங்கித்திருக்கயிலாயவெல்லையைக் கடந்து பூமண்டலத்தினிடத்தில் வந்தகாலத்திற் கோபமேலிட்டு உரத்துவசனிக்கும் வீரத்தினைப்படைத்த இரண்டாயிரவெள்ளம் பூதச்சேனைகளுடன் கந்தசுவாமியார் மண்ணுலகில் நடக்கின்றதறுவாயிற் பூதவீரர் பாதங்களைப் பெயர்த்துவைக்கும் உறுதியினாலெழாநின்றதூளிப்படலமானது பூமியெங்கணும்மூடிக்கொண்டது அதுஎப்படியிருந்ததென்னில்வஞ்சகமே குடிகொண்டிருக்குங் கரியநிறம் பெற்ற அவுணவெள்

ளங்கள் ஏகமாகச்சேர்ந்து சுத்திக்கொண்டதைப்போலவிளங்கியது;இஃதன்றியிற்செயசாலிகளாகிய அப்பூதவீரர் நடக்கும்வேகத்திலோங்கியபூமிகளானது விறி அஷ்டதிக்குகளிலும் பரவி நிறைந்ததன்றியிற் பென்றுலகத்திலும் அடர்ந்து அத்தலவாசிகளைத் திகைக்கச் செய்யப் பூதப்படைகளினது ஆரவாரங்கள் அத்துகளினுமுந்தி விண்ணகத்திலொலித்திருப்பதை யோசிக்குமிடத்திற் றூளிபடலமானது மேலோங்கிவருகின்றது விழிகளையடைத்து வாதைப்படுத்துவதன்முன்னம் யிமையாநாட்டங்களைமூடிக் கொண்டிருப்பீரெனத் தேவர்களிடத்திற் பிரியமாகமுந்தியெச்சரிப்பதையொத்துக் காட்டியது யிவையன்றியும் அப்படிக்கதிகரித்துப்பலகழிகளைப்பெருக்கி யிராநின்ற சத்தசாகரங்களையும் மேலுலகமார்க்கங்களையுந் தூர்த்துவருத்துகின்ற துகட்பெருக்கமுஞ் சேனையினொலியுமொன்றுபட்டுமன்னுயிர்கள்விழிகளைமூடியும் நாசிகளை அடைத்தும் பேசப்படாமல் வாயினைநிறைத்தும் ஒருவர்வசனிப்பது ஒருவருக்குக்கேளாமற் செவிகளைத்துத்தும் யிவ்வித உற்பாதங்கள் தோன்றய ற்வதாசிறதியாகப்பாரித்த திரோகத்தைப்பெற்ற பூதர்கள்போமுன்னிலையில் பூமியெங்கனும் நிறைந்து யிடம்பெறுமல் மேகங்கள் சஞ்சரிக்கப்பட்டவானவெல்லையினும் அடர்ந்து பார்த்தவர்கள் மண்விண்ணெவ்விடங்களினுஞ் சற்றிடமில்லாமற் பரந்துபோகின்றதென்று அற்புதமாகவசனிக்கத்தக்கதாக நடக்கின்ற சயின்னியங்கள் மூலமாகப்பெருகிய தூளானது வானவெல்லையை மூடிக்கொண்ட காரணத்தினுற் பலருந்திகைக்கவிருளோங்கியிருப்பதுபோன்றும்பிருதகாலத்தில்உதையகிரியின்மீதெழுகின்றதனது தேஜாமூடிப்பெருகியபனிப்படலங்களைச்சூரியனுளவன்தனதுகிரணசாந்திகளைப்பரப்பிவாட்டிவிளங்கியெழுவதுபோலப்பாலசுப்பிரமணியக்கடவுளினதுதிரோகசாந்தியினுல்அடிபட்டுமுன்னினும்அதிகவெளிச்சமாகத்தோற்றியது. கேட்டீர்களோ-சவுனகாதிரிஷிகளே அந்தபூதவெள்ளங்கள் நடக்கும்போ துண்டாகிய சிறப்புகளை யிவ்விதமென்று ஒருநாவைப்படைத்த என்னுற் புகழப்படுவதோ- யிவைநிற்க மற்றச்சரித்திரங்களையுங் கவனமாகக் கேட்பீராகவென்று சூதபுராணிகர்சொல்லத்தொடங்கினர்,



## தாருகன்வதைப்படலம்

சவுனகாதிரிஷிகளே-இப்பிரகாரம்சோதிமயமாகவிளங்குந்திருமேனியையுடைய பாலசுப்பிரமணியக்கடவுளானவர்வீரபராக்கிரமசாலிகளாகிய பூதப்படைகளுடன் திருக்கயிலாய பர்வதத்தினைக் கடந்துபூ

லோசம்பவுத்திரமடையும்படிக்கு வந்திறங்கி ஆரண்ணியங்கள் மலைகள் சான்யாறுகள் - நாடு - நகரங்கள் முதலாகக்கடந்து அதிவேகமாகவரும் போது முன்சென்றதாசிப்படையானது சூரபதுமனுக்குச் சகோதரனு ய்ப்புசபெலபராக்கிறமத்துக் கொப்பற்றவனுயு மிரானின்ற தாருகாசு ரனுக்குக் கெடிஸ்தலமாய்த் தன்னிடத்திற் சேர்ந்தரிஷிகள் தேவர்க்கள் முதலானவர்களை அலைத்துக்கொன்றுதின்னும் மாயாவலிபெற்றகிறவுஞ் சபற்வதத்தினைச்சேர்ந்தது, அத்தறுவாயிற்சிவகுமாரன்பின்பற்றிவருகி ன்ற தேவர்க்கள் வானத்தினையளாவ நிற்கின்ற கிறவுஞ்சகிரியைக் கண்ட மாத்திரத்தில் மனநடுக்குற்று திரேகம் பதைபதைத்துவியர்சுக யிப்பா தகனால் என்னவிளையுமோவென்று காலெழாமற் பின்வாங்கவும் இந்திர னனவன் பயப்பிருந்தியினால் மதிமயங்கிநின்றுவிடவும்- இப்படிக்குத் தியங்குகின்றதறுவாயிற் கலகப்பிறியராகிய நாரதரிஷியானவர் துரிதமா கவந்து குமாரதேவனைத்தெரிசித்துச் செந்தாமனாமலரினு மிருதுவாக ப்பிறகாசித்திருக்குந் திருவடிகளிற் றீர்க்கதெண்டன் சமற்பித்தெழுந் துகரங்களைக் கூப்பிப்போற்றி யிதனைச்சொல்லுவார், சுந்தனேயிதோ திரிக்காணப்படுகின்ற பற்வதத்தின் சரித்திரங்களைக் கேட்டருள்க- சூர னுக்குப்பந்துவாய் மாயைவித்தைகளிற்சிறந்த கிறவுஞ்சனென்னும் பெ யரைப்பெற்ற ராட்சதனனவன் யிக்சோலத்தைக்கொண்டு பவுத்திரமாகி ய சதுற்வேதங்களையும் ஓதநின்ற பிராமண சிரேஷ்டர் ரிஷிபுங்கவர்கள் ஆகியாகயிச்சாரலின் மாற்கமாகப் போகப்படுகின்றவர்களுக்குச் சாதா ரணமாகிய பலவழிகளைக்காட்டி அதன்மூலமாக நடக்கின்றவர்களைத்த ன்மாய்கையிற்படுத்தித் திகைக்கச்செய் தலைத்துக்கொன்று நாசஞ்செய் திருப்பவன் ஒருதினஞ் சிவபிரான் கட்டளையின்படிக்குஅகஸ்தியர்பொ திகைவரைக்குப்போக வருமுன்னிலையில் அவரையுந்தனக்குள் வருவித் துப்பற்பலவஞ்சகங்களைக் காட்டும்போது யிது ராட்சத மாய்கையென் றறிந்து அம்முனிவன் கோபித்துச் சபித்தகாரணத்தினால் அன்றுமுதல் யிந்தரூபத்தினையே பெற்றிருக்கின்றனன், அக்காரணத்தினால் யிதற்கு க்கிறவுஞ்சபற்வத மெனப்பெயர் விளங்குகின்றது யிந்தமலைக்சப்புற த்தருகிற் பலவரண்களையுங் கட்டுக்காவல்களையுங் கொண்டிருக்கின்ற மா யமாபுரியென்னுஞ் சிறந்தபட்டணத்திற் செயசாலியாகிய சூரனுக்கு யிளையசகோதரனாய் முன்னொருகாலம் யிந்த மகாவிஷ்ணுவுடன் சண் டைகொடுக்கும்போது யிவர்கோபித்தேவிய சக்கரப்படையைப்பற்றித் கழுத்தணியாகத்தரித்து வெற்றிகொண்டபுசபெலபராக்கிறமத்தைப்பெ ற்றவன் தேவர்க்களை முதலியசகலரையும் அலைத்துவருகின்ற கொடிய பாதகன் தாருகாசுரனென்னும் பெயரினைப்பெற்றவன் வாசமாய்அரசு

செலுத்திவருவன் குமாரதேவரோ யித்தகையவல்லப சாலியைக்கொல்லு
வாராயின் யிவனுக்கு மூத்தவனாகிய சூரபதுமனை வெல்வது வெகுசுலப
மாகும் முக்கியமாய் யிவன்வலியைக்கொண்டு சூரன் அரசாட்சிசெ
ய்துவருகின்றனனென்று நாரதரிஷிசொல்லியதைப்பிறகாசம்பொருந்தி
யவெற்றிவேலாயுதத்தினைத் தாங்கியிருக்கின்ற பாலசுப்பிறமணியக் கட
வுளானவர்கேட்டுத் திருநகைகொண்டு முனிவனே நீ குறித்த அப்பாதக
னையித்தினமேமுடித்து உங்கள்வருத்தங்களைப் போக்குவோமெனத்தி
ருவாய்மலர்த்தனர், இப்பிறகாரம் நாரதருக்கு அனுக்கிறகஞ்செய்தவாக்
கியத்தைக்கேட்டமாத்திரத்தில் இந்திரனும் மற்றதேவர்கூட்டமுந்தங்
கள்மனதில்நிறைந்துபாதித்திருந்த வருத்தங்களைப்போக்கினவர்களாய்
யின்றுடன் தாருகனிறந்தானென்னும் நிச்சயத்தைக்கொண்டு அதிகசந்
தோஷித்தையடைந்து யிவ்விதமாகச்சகலரும் மிகுத்தவுச்சாகங்களைப்
பெற்றிருப்பதைப் பன்னிரு புயாசலங்களையுடைய குமாரசுவாமியார்க
ண்டவுடன் தமது கிருபையைப்பூர்த்தியாகப் பெற்றுச் சமீபத்திலிருக்கி
ன்றவீரவாகுதேவனென்னுஞ் செயசாலியைப்பார்த்து யிதனைச்சொல்லு
வதாயினர், வீராதிவீரனே அதோஎதிரிற் காணப்படுகின்றமலை கிறவுஞ்
சபர்வதமாகும் அதற்கருகிற் பலவளங்களைப்பெற்றுக் கடினமாகியகா
வலையுடைய மாயமாபுரியென்னும் பட்டணத்திற் செயசாலிகளாய் வலி
யிலுக்கொப்பற்ற அளவற்றஅவுணப்படைகளுடன் புசபெலபராக்கிற
மசாலியாகிய தாருகாசூரன் வாசஞ்செய்கின்றனன், ஆதலால் நிகரற்றச
வுரியத்தினைப்பெற்ற நீயானவன் உன்னுடையதுணைவர் எண்மரையும்இ
லக்கரையும் நமதுபூதசேனைகளில் ஓராயிர்வெள்ளப் படைகளையும் அவ
ர்களுக்கதிபராகிய பூததாதரையும் கூட்டிக்கொண்டுபோய் அப்பதியை
முற்றிக்கைபோட்டுக் கொள்ளக்கடவை அக்காலத்தில் உங்களுடனெது
த்துசண்டைகொடுக்கவருகின்ற அவுணச்சேனைகளைச் சின்னபின்னப்பட
க்கண்டித்துக் கொல்லும்போது தாருகனாகியபாதகன் சீறிமேல்வருவா
னாயிற் பின்னிடையாமற் போர்செய்யக்கடவை ஒருகாலம்உனக்கருமை
யாகக்காணுமாயினும் அவனைக்கொல்ல நாம் உங்கள் பின்னாகவருவோ
ங்காலதாமதஞ்செய்யாமல் முந்திநடக்கக்கடவையென்றுகிருபாசமுத்
திரமாகிய குமாரசுவாமியார் கட்டளையிட்டபோது சகலராலும் புகழத்
தக்கசிறப்பினையுடைய வீரவாகுவானவன் மகாயாக்கிய மென்று அப்ப
ணிவிடைக்கிசைந்து சிவகுமாரன் திருவடிகளிற்பணிந்தெழுந்து கரங்க
ளைக்கூப்பி நிற்கின்றகாலத்திற்றேவதேவோத்தமனாகிய பாலசுப்பிறமணி
யக்கடவுளானவர் அவனுக்குத்துணைவராகிய எண்மரையும்இலக்கரையும்
பூததாதரையும் கிருபையாகப்பார்த்துச் செயசாலியாகிய யித்தவீரவாகு

வுடன்கூடியெழுத்தராட்சதனை வாட்டத்தக்கதாகப் போய்வரக்கடவீரெ
ன்று ஆக்கியாபித்தவுடன் அவர்களனைவரும் எமதிறைவனைவலம்வந்து ப
ணிந்துபோற்றி விடைபெற்றுப் பிறையாணத்துக்கு ஆயுத்தப்படுமுன்
னிலையிற் பிராணனுக்குப் பிராணனுசப்பொருந்தி உலகங்களை அசைப்
பிக்கின்ற சிவகுமாரன் தமதருகில் நிற்கின்ற தேவதச்சனைப்பார்த்து ஒப்
பற்றபுசபெலபராக்கிரம சாலியாகிய வீரவாகுமுதலிய படைத்தலைவர்க
ள்வந்நடத்தத்தக்க சிறப்புகளைப்பெற்றதாய் ஆயுதசவுரட்சணைகளுடன்
பலதேர்களைப்படைத்துக் கொடுக்கக்கடவையெனச் 'சராசரப்பிறபஞ்ச
ங்களனைத்தையும் படைக்கவல்ல சிவசுப்பிறமணியதேவர் திருவாய்மலர்
ந்ததைத் தேவசிற்பியானவன் கேட்டவுடன் ஒருமாத்திரைப்போது கழி
வதன்முன்னம் உத்தம அசுவங்கள் - வீரசிங்கங்கள் - பூதங்கள் - யிவற்றி
னைப்பூட்டிப் பொன்னுருளைகள் - நவரத்தினமயமாகிய - அச்சுமச்சு - குத்
துக்கால் கொடுங்கை முதலியஉறுப்புகளைவாய்ந்த பலதேர்களை நிருமித்
து அவற்றினை எமதிறைவனுய்ப் பிறகாசம்பொருந்திய வேலினைத்திருக்
கரத்திற்கொண்டிருக்கும் வீரவாகுதேவருக்கும் அவர்தம்பியர் இலக்கர்
பூதசேனைத்தலைவர்களுக்கும் தருதியாகக்கொடுத்தனன், சாரதிகளும்அவ
ற்றினைநடத்திவந்து தமதிறைவர்முன்னம் நிறுத்தியபோது வெற்றிமா
லையணிந்த வீரவாகுதேவர் முதலிய தொரனாகள் அத்தேர்களின் மீது ஆ
ரோகணித்துச் சொற்னமயமாக விளங்கும் இமையராசபுத்திரியாகிய பா
ர்பதியார் திருக்குமாரனைத்தொழுது போற்றி எமதாண்டவனை மும்மு
றைவலம்வந்து அவர் அனுக்கிறகத்தினையும் விடையையும்பெற்றுக்கொ
ண்டு சுத்தவீரராகிய ஆயிரவெள்ளம் பூதப்படைகள் ஆர்ப்பரித்து எங்
கும்நிறைந்துவரச் சிவகுமாரனுக்கு முந்திநடக்கின்ற தருவாயிற் பூதப்
படைகள் தலைவர்களுக்கும் இலக்கர் எண்மர்யிவர்களுக்கும் நாயகமாய்
வீரவாகுதேவர் நடுப்பிறதேசத்திற் பலதிசைகளினும் விழிகளைச்செலுத்
திப்பார்வையிட்டுக்கொண்டு சென்றனர், இப்பிறகாரம் மாயமாபுரியை
ச்சூழ்ந்து சண்டைசெய்வதாக வீரவாகுவைப்படைகளுக்குத் தலைவனா
கி அனுப்பியபின்பு அலைகளைவீசிஒலிக்குஞ் சமுத்திரத்தினையொத்து ஆ
ர்ப்பரித்து மற்றஆயிரவெள்ளம் பூதசயின்னியங்கள் மொய்த்துவரவுந்
தேவர்களுக்கதிபனாகிய இந்திரனாதியர் தொழுதுபோகவுங் குமாரதேவ
ரானவர் பின்னணியிற் சென்றனர், இப்பிறகாரம் எமதிறைவன் பின்ப
ற்றிவரும்போது கந்தன் கட்டளையின்படிக்கு முன்னம்போகின்ற வீர
வாகுதேவனைச் சுத்திக்கொண்டு தூளிபடலமானது எங்கும் பரந்தலைக்
கச்சேனைகள்போவது எப்படிக்கிருந்ததெனில் ஆதிகாலத்திற் சிற்பரமூ
ர்த்தியாகிய சிவனாதன் நகைபழலானது புகையைவீசிக்கொண்டு திரிபுரங்

களின்மீது நடந்ததைநிகர்த்துக் காட்டியது யிவ்வித ஆரவாரங்களுட
ன் போகின்றசேனைப்பெருக்கிற் சிங்கங்கள் பூண்டதேர் அனந்தம் பூத
ங்கள் பூண்டதேரனந்தம் பஞ்சலட்சணங்களையுடைய புரவிகள் பூண்ட
தேர்கள் அனந்தமாகச் செல்லுகின்றதின்சாட்சி எப்படிக்குக் காட்டிய
தெனில், விரிந்தசெல்வப்பெருக்கைவாய்ந்த சமுத்திரத்தினிடத்தில் மே
கசாலங்களுநங் கப்பல்களும் போவதையொத்து விளங்கியும் சேனைகள்
அடர்ந்துபோவதினால் ஓடயிடங்கிடையாமல் நெருங்குந்தேர் உருளை
களுடன் உருளைகள் தாக்கவும் வீரர்கள் நெருக்கத்தினால் அவர்கள் கரங்
களிற்பற்றியிருக்கின்றஆயுதவிதங்கள்ஒன்றுடனொன்றுதீயெழஉராய்ந்து
ம்பலநிறத்துசபடாங்கள்காற்றினால் அசையுந்தோறும்ஒன்றையொன்றுபி
ன்னிப்புரள்வதினாலும் அவ்வெல்லைஎப்படிக்குக் காட்டியதெனில்பூதவீர
ர்கள் சத்திராதிகளுடனெதுத்துப் பொருகின்றதையொத்தது யித்தகை
யஆடம்பரங்களுடன் போகின்ற சேனாசமுத்திரத்தின் யிடையிடை
யில்-வெற்றிச்சங்கங்கள் ரணபேரி செயபேரிகள் மத்தளம் உடுக்கை வ
ககாளம்சின்னங்கள்-முதலிய பதினெண்வகை வாத்தியங்களும் - மிகுத்
தொலிக்கும் ஓசையும் அவர்கள் நடக்கும்போதெழுகின்ற துகட்பெரு
க்கும் ஓங்கிச் செந்தாமரைக் கமலவாசியாகிய பிரமன் பதத்தையும் மூ
டியது, கேட்டீர்களோ - சவுனகாதிரிஷிகளே மேற்குறித்த சம்பிரமங்க
ளுடன் நடக்குஞ் சேனைவீரர்களுங் கோபமேமேலிட்டு உரத்துப்பேசு
ம் பூதர்களும் போற்றிச்செல்ல அவர்களுக்குத் தலைவனாகிய வீரவாகு
தேவரானவர் செயசாலியாகிய தாருகன்வாசஞ்செய்யும் மாயமாபுரத்தை
ச்சேர்ந்தபோது பூதப்படைகள் வீராவேசங்களுடன் அப்பட்டணத்தி
ற்பிறவேசித்து எதிர்த்த அவுணவீரர்களை வளைத்துக்கொண்டு கொடியச
ண்டையினைச்செய்து சாடுவதைக்கண்டதூதர்கள் அதிவேகமாய்ஓடி தம
திறைவன் அரமனையைச்சேர்ந்து சபாமண்டபத்தில் விளங்குஞ் சிங்கா
தனத்தின்பேரில் வீற்றிருந் தரசுசெலுத்தும் தாருகாசூரனைக்கண்டுசேவி
த்துக்கரங்களைகூப்பிநின்று யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், மகத
யிஸ்வரியங்களை அனுபவித்து வீற்றிருக்கின்ற எமதிறைவனே மனவரு
த்தமாகிய சமாச்சாரமொன்றைக் கேட்டருள்க உமது தமையன்சூரபது
மன் முன்னஞ்சிறைசாலையில் அடைத்துவைத்திருக்கின்ற தேவர்க்கள்கா
வலைவிடுவித்துக்கொண்டு போவதாக வெத்தனித்துப் பரந்தசடாமகு
டத்தினையுடைய பரமசிவகுமாரன் கந்தனென்பவனொருவன் வருகின்ற
னனென்று அந்தரவாசிகளாகிய சிவதேவர்க்கள்வசனித்துக்கொள்ளக்கே
ட்டோம் நமக்குப்பயந்தொளித்துத் திரிகின்ற விண்ணவர் என்னமோ
பிளத்துகின்றனரென்று அதைஒருபொருளாகமதியாமல் அசட்டையாக

விருந்தோம் அவ்வாறே இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகள் சூழ்ந்து
வரப்பாலசுப்பிரமணியன் திருக்கயிலையைவிட்டு வெளிப்பட்டனன், அ
வனுக்கு முன்வருகின்ற தூசிப்படையானது சலனமற்றகாவலையுடைய
நமதுபட்டணத்திற் பிறவேசித்துபலராட்சதவீரரைக்கொன்று அல்லோ
லகல்லோலப் படுத்துகின்றது யிதுசேதி தேவரீர் சித்தமறிகவென்று வி
ண்ணப்பஞ்செய்தனர், இப்பிறகாரஞ் சவிஸ்தாரமாகத் தூதர்கள் அறிக்
கையிட்டமாத்திரத்தில் உலகங்களை அழிக்கவெழுந்த வடவாமுகாக்கினி
யின்மீது நெய்சமுத்திரம் பெருகுமாயின் அத்தீயானது அதிகரித்தெழு
மாறுபோலத் தட்சணமேகோபமேலிட்டு நவரத்தினமயமாகப் பிறகா
சித்திராநின்ற சிங்காதனத்தை நீங்கிக் குன்றுக் கொப்பாகப் பாரித்து
விளங்குகின்ற கிரீடமானது அண்டகோளகையை முட்டக்குதித்தெழு
ந்து விழிகள் சிவந்து தீப்பொறிகளை யிறைப்பதாகச்சீறி பக்கத்தில் நிற்
கின்றதூதரைப்பார்த்துகொஞ்சமாவது பயமில்லாமல் லட்சுமீகரம்பொ
ருந்திய யிந்தபட்டணத்தின்மீது வந்துவருத்துகின்ற பூதச்சேனைகளை
யும் மற்றவீரர்களையும் புற்கள்செழித்து வளர்ந்திருக்கின்ற காட்டினிட
த்திற் றீயானது மீறிப்பாவி அழிப்பதுபோலக்கொன்று நாசஞ்செய்ய
க்கடவேன் யிந்தநிமிஷத்தில் நம்மிடசேனைகளனைத்தையும் அதிவேகமா
கக்கொண்டுவந்து சேர்க்கக்கடவீர்களென்று கட்டளையிட்டனன், அப்
பணிவிடையின்படி முடிப்பதாகவணங்கித் தூதர்கள் போனபின்பு அவ
ர்கள்வருகிறபரியந்தம் தாருகாசூரனுக்குத் தரித்திருக்கப்படாமையாற்
பக்கத்திற்காத்திருக்கின்ற வேற்படையைத்தாங்கிய பரிசனங்களைப்பார்
த்து யிந்தநிமிஷத்தில் நமதுதேரைக்கொண்டு வருவீரெனப்பணித்தவு
டன் அவர்களோடி நிமைகொட்டுவதன்முன்னந் துரத்திவந்து யெதிரி
ல்நிறுத்த வீரசிங்கத்தைப்போலத்தாவி அதன்மீதேறி வீற்றிருந்துசபை
யிலிருந்த மந்திரிகள் பிறதானிகள் போற்றிச் சூழத்தக்கதாக அவர்களு
டன்நடக்கும்போது தாருகன்யித்தினம் சாகப்போகின்றனனெனத்தெ
ரிந்து அதுவனாயில் அவன்பெற்றிருக்கின்ற கீர்த்திகளனைத்தும் யேகமா
கச்சேர்ந்து துரிதமாகவந்து பரிந்து புரண்டுபுரண்டு அழுதுச்சோர்வதை
ப்போல அவுணவீரர்கள் பலவெண்சாமரைகளை யிருபக்கங்களிலும்
வீசிவரவும் வெள்ளாடைத்தொங்கல்களை அசைக்கவுந் திருச்சின்னங்களை
ப்பிடிக்கவும் சோடசகலைகளைவாய்ந்த சந்திரனைப்போலவிளங்கும் வெ
ண்பட்டுக் கொடைகளைக் சவிக்கவும் வலம்புரிச் சங்கங்களைப் பொம்
பொம்மென் றூதவும்ரணபேரிசெயபேரி துடுமுதப்பட்ட முதலியவா
த்தியங்களை சமுத்திரகோஷ்டியினும் ஓசையெழமுழக்கவும் யித்தியாதி
வசம்பிறமங்களுடன் பொன்னூருகள் பூண்டதாய் மணிகள் கொடிகு

டைமுதலிய சிறப்புகளைப்பெற்றுப் பலசிங்கங்கள்பூண்டு மேகத்தினும் வேகமாய்ச்செல்லுஞ் சேமத்தேரின்மீது சற்வசங்காரகாலத்தில் மண்ணுயிரனைத்துந் தமது நுதல்விழித் தீயினாற்றகிக்கப்பட்டுக் கிடக்கின்ற சுடலையினிடத்தில் நிருத்தஞ்செய்யும் பெருமையினையுடைய பரமேஸ்பரர் திரிபுரதகனஞ்செய்ய வெழுந்ததறுவாயிற் றேவர்கள் அமைத்தபேரணிகள்பலவற்றுள் ஒன்றாகச்சேர்ந்திருந்த மகம்பேருவென்னுந் தனுவை எடாமல் நகைத்தெரித்தனர், அந்தமேருவைப்போலவுந் திருப்பாற்கடலை மத்திக்குமுன்னிலையில் மத்தாகநாட்டப்பட்டுக் கவழ்ந்தகாலத்தில் மகாவிஷ்ணுவினால் நிலைபெறநாட்டப்பெற்ற மந்தரகிரியினை நிகர்த்தும் முழுமணியினாற் செய்யப்பட்டுபாரித்திருக்கின்றதெண்டாயுதமொன்றினைச்சுமந்து ஒருபாரிசத்தில்வரவும் மற்றதேவாஸ்திரங்கள் முதலிய சிறந்தபடைகள் அனந்தம் நிறைத்திருக்கின்ற தேர்களும் பின்றுடர்ந்து போகவும் யிப்படிக்கு உத்தசன்னத்தனாய் நடக்கும்போது தாருகன்கட்டளையின்படிக்குத் தூதர்போய் அறிக்கையிட்ட மாத்திரத்திற் புயங்கள்வானத்தோங்க அதிககளிப்புடன் சற்வாயுதபாணிகளாய் விரங்களைப் பேசியெழுந்த அவுணச்சேனைகளும் அலைகளைப்போலத்தாவுஞ் சத்தியையுடைய புரவிகளும் மலையையொத்த பாரித்ததேர்களும் கிம்புரிக்கோடுகளைப்பெற்ற மதயானைகளும் ஏகமாய் சத்தசாகரங்களைப்போல யிரைந்துவந்துநிறைய அவர்களுக்குத்தலைவராகிய அவுணவிரர்கள் பற்வதாகிருதியாகிய பலரதங்களினேறி மகம்மேருவினைச் சூழவிருக்கின்ற அஷ்டகுலாசலங்களைப்போலத் தாருகாசுரனுக்கு நாற்புறங்களினும் போற்றிச்செல்லவும் யிவ்வித ஆடம்பரங்களுடன் நவரத்தினமயமாகிய கிரீடங்களைத்தரித்த அவுணத்தலைவர் முதலாகிய சதுரங்கவெள்ளங்களும் விரைந்துபோகின்றமுன்னிலையிற் றெருத்தெழுந்த தூளியடலமானது மண்ணுலகமெங்கணும்பரந்து மீறி விண்ணுலகங்களினும் நிறைந்து வருத்தியது அதஎப்படிக்கிருந்ததெனில் நெருங்கிய சத்திராதிகளுடன்சண்டைகொடுத்து வெல்லத்தக்க போரணிகளைத்தாங்கித் திறிநேத்திரதாரியாகிய சிவபிரான் முப்புராதிகளின்மீது சென்றகாலத்தில் ஆயிரம்பணமகுடங்களைக் கவித்திருக்கின்ற சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும்மகாவிஷ்ணுவாகிய பாணத்தினைச்செலுத்த அதின்மூலமாக மூண்டெழுந்தஅக்கினிச்சுவாலையானது பாதகராகிய ராட்சதர் திரேகங்களைச் சுட்டெரித்தகாலத்தெழுந்த புகைப்படலமானது எங்குமூடியதைப்போல விளங்கவும் நீலகிரியைப்போலப்பாரித்த கருத்ததிரேகத்தினைப்பெற்றுமும்மதங்களையும் ஒழுக்கிவருகின்ற யானைகளின்மீதுந் தத்தித்தாவிநடக்கும் புரவிகளின்மீதும் பற்வதாகிருதியாய் வேகங்கொண்டு செல்லும்

ரதங்களின்மீதும் செயசாலிகளாகிய அவுணவீரர்கரங்களினுங்கொண்டி
ருக்கின்ற துசபடங்கள்மேலோங்கிப் படபடவென அசைந்திருப்பது
எப்படிக்குக்காட்டுவதெனில்-அழகியபொன்னாட்டிற் பெருகிப்படிந்த
துகட்களைத்துடைத்து சுத்திசெய்வதைப்போல விளங்கவும் யிவ்விதச்சி
றப்புகளுடன் பலவாத்தியங்களும் முழங்க - ராசாதிராசனாகிய தாருக
ன்பதியைக்கடந்து வெளிவந்ததைக் கண்டமாத்திரத்திற் சமுத்திரத்தின்
மீது பலநதிகள் பெருகியதைப்போலப் பருத்தகிளைகளைப்பெற்று வான
த்தினையளாவநிற்கின்ற மராமரங்களை வேருடன்பிடுங்கியும் பலஆயுதங்
களையுங் குன்றங்களையும் நீண்டு பருத்திரானின்ற கரங்களிற்கொண்டு பு
சபெலபராக்கிரமசாலிகளாய் சோபமேமேலிட்டிருக்கும் பூதச்சேனை
கள் உச்சாகங்களுடன் ஆர்ப்பரித்து எதிர்கொண்டு தேவர்க்கள் முதலிய
சகலராலும் பூசித்துவணங்கும் பெருமையினையுடைய குமாரசுவாமியா
ர்பாதாரவிந்தங்களைத் தியானித்துப் போற்றினவர்களாய்ப் பராக்கிரம
சாலிகளாகிய சிவகணங்கள் குன்றுகள் தழைத்தோங்கியிருக்கும் மாமம
ரங்கள் பாரித்தகதைகள் எழுமழுசூலமுதலிய ஆயுதங்களையுஞ் சத்துரா
திகளின்மீது கோபித்துச்செலுத்தவும் அதைக்கண்ட கொடியமனதைப்
பெற்றராட்சதர்கள் அதிகவீராவேசங்களுடன் சீறி மந்தரத்தையொத்
த தனுசுகளைவட்டாகாரமாகவளைத்து கொடியதிட்சண்ணியமுள்ள பாண
ங்களைப்பிறையோகித்துங் கூரியவேல்களையெறிந்தும் சக்கரங்களைச்செ
லுத்தியும் மற்றஆயுதவிதங்களையும் ஒன்றனந்தமாகப் பிறையோகித்து
அகோரயுயித்தியங்களைச்செய்யவும் யிப்பிறகாரம்யிருதிறத்துச்சயின்னி
யங்களும் அஸ்திரசஸ்திரங்களை அமோகமாக ஒருவர்மீதொருவர் வலி
செயிக்கவேண்டுமெனனும் வயிரங்களுடன் மேலிட்டுப் போராடுகின்ற
தறுவாயிற் பெருத்தெழுந்த துகளானது புகையைப்போல வானநாடெ
ளிற்பரவி தேவர்க்கள் விழிகளில் நிறையும்போது அருகலெடுத்துச் சகி
க்கப்படாமையால் கண்களில்நீரானது தாரைதாரையாகச் சொரிவது எப்
படிக்குத்தோற்றியதெனிற்,சமர்க்களத்திற் பெருக்கெடுத்தோடும் உதிர
த்தினை அனலாகவெண்ணி அதைமேலெழாமல் அவிப்பதற்கு வானகங்
கையைச்சொரிவதுபோலக் காட்டியது அத்தறுவாயில் அவுணவீரரும்
பூதவீரரும் பின்னிடையாமற் பலவிதபோரைச் செய்வதினால் யிரத்தம்
பீரிட்டொழுகத் தோள்களற்றுஞ் சிரங்கள் கண்டித்தத்தள்ளியும்வயறு
பீறுண்டு குடல்களிறைத்து மாப்புகளையொத்துப் புரளவுங்கால்கள்கண்
டிக்கப்பட்டும் யிப்படிக்குத் தானவர்களிற் பலர்பின்னப்பட்டு மாண்ட
னர், போர்த்தொழிலிற் சூராகவிருக்கின்ற பூதவீரர்களினுஞ் சிலர் அத
ப்பட்டனர், இப்படிக்குப் போராடுகின்றவர்களிற் சிவகுமாரன் சேனை

ன் கையிஞ்சி எதிரிகள் ஏறிவந்த பாரித்ததேர்களையெடுத்து மற்றொன்றி
ற்ருக்கி ஒடைத்தும் வாயுவேகத்தினு மேலிட்டுச்செல்லும் வேகத்தினை
யுடைய குதிரைப் பந்திகளைக் கண்டதுண்டங்களாகச் சிதைத்துஞ்சின்ன
பின்னப்பட்டுக் கிடக்கின்ற ரதங்களிற்பூட்டியிருந்த பொன்னுருளைக
ளை அழகியகரங்களினலெடுத்து விரல்களிற்கோத்து சக்கரத்தைப்போல
க்கிறுகிறெனச்சுழற்றிச் செயசாலிகளாகிய அவுணவீரர் நாசமடையவே
கமாய்ச்செலுத்துங் காரணத்தினுற் கறுத்ததிரோகத்தினைப் பெற்ற சிவக
ணங்களிற் சிலர் மகாவிஷ்ணுவைப்போல விளங்கினர், இவையன்றியும்
வெற்றிவேலாயுதக்கடவுளினது படைவீரர்செய்த அதிசெயச்சண்டைகளை
யுங் கேட்பீராக- சிவந்தருளம்பினையுங் கறுத்தவாலையு முடையகுதிரை
களை ரதங்களிற்பூட்டிச் செலுத்தும்போது பூமியினன்றி வானவெல்லையி
ற்பாய்வதைப்போனா விரும்பியிருக்கின்ற பூதவீரர்கண்டவுடன் தங்க
ள்கரங்களிற்பற்றிய விருட்சங்களினுல்மோதிப் பூமிபாரந் தீர்வதாகநில
த்திற்கிடத்தியும் எழுகுகம்பியைப்போன்ற வாலினைப்பெற்ற மதயானை
களைக்கரங்களினெடுத்து அம்மானையைப்போலத் திசாதிசைகளினெறிந்
தும் பொன்னுருளைகளைப்பெற்ற தேர்களைப் பாதங்களினு லுதைத்துரு
ட்டியும் சவுரிகளைப்போல அழகாய்அசைகின்ற.வால்களையுடைய புரவிக்
கூட்டங்களைக் கால்களைக்கொண்டு தேய்த்தும் சித்திரமுகபடாம் விளங்
கும் மத்தகத்தினைப்பெற்ற மதயானைகளைக்கொன்று வாட்டியும் யிவ்வி
தமாக மாண்டபிணங்கள் அணையைப்போல உயர்ந்து விழுந்து கிடக்கி
ன்றதின்மத்தியில் உதிரமானது தேங்கியிருப்பதுயெட்டடிக்கிருந்தசெ
வில்பிரகாசம்பொருந்திய சூரியனை மண்டலம் வளைந்திருப்பதைப்போ
லக்காட்டியது,இதுவுமல்லாமல் வீராவேசங்களுடனெதுத்துக் கொடிய
போரினைச்செய்கின்ற கறுத்ததிரோகத்தையுடைய அவுணவீரரைபூதகண
ங்கள் வளைத்துக்கொண்டு திகைக்கும்படிக்குச்சாடி அவர்களைக்கரங்களி
னுற்பிடித்து கிறுகிறெனச்சுழற்றி வீசியபோது வானவெல்லை முற்றினு
ஞ்சென்று கரங்களிற்பற்றிய பிரகாசம் பொருந்திய வாளாயுதங்களுட
ன்மீண்டுவந்து விழுவதைப்பார்க்குமிடத்தில் வானத்திற்பரவி யிருக்கி
ன்ற மேகங்களானவை தங்கள் நிலைகளிற்றப்பி மின்னலுடன் பூமியை
நோக்கிவருகின்றதை யொத்துக்காட்டவும் யிவையன்றியும் ஆயிரவெள்
ளம்பூதவீரரானவர்கள் சிலரோங்கி பக்கங்களில் வானத்தைஅளாவ ஓங்கி
யிருக்கின்றபர்வதங்களைப் பறித்தப்பறித்து ஒன்றனந்தமாக நிவ்வுதி
க்வெனறெதிர்த்து புசபெலபராக்கிரம சாலிகளாகிய ராட்சதவெள்ளங்க
ள்பலவற்றைச் சின்னபின்னப்படக்கொன்று திரிவதுயெப்படிக்கிருக்கி
ன்றதெனில் ஊழிகாலத்திற்பெருகிபர்வதங்கள்முதலிய தனைத்தையும்புர

ட்டிவுலகங்களை அழிக்கும் பிறசண்டவாயுவைப் போலக்காட்டியது, இவ்விதமாகப்பூதப்படைகள் கைமிஞ்சி தாருகன்சேனைகளாகிய ரதசெசதுரகபதாதிகளை மடக்கிக்கொண்டுதம்சம்பண்ணுகின்றதருவாயில்சின்னபின்னப்பட்டு ரணக்களத்தில் யிறைந்துகிடக்கின்ற பிணங்களைத்தெவுட்டவுண்டு உதிரபானங்களைச்செய்து திரிகின்றநாய்கள் ஒருபாரிசத்தில் ஆளமிட்டோடவும் பூதபசாசங்கள் டாகினி காளிக்கூட்டங்கள் கொழுத்த மாம்சங்களைத்தின்று ரத்தங்களைக்குடித்து வெறிகொண்டு ஒருபாரிசத்திற் குதித்துக்குதித்துக் கொண்டாடவும் பருந்துகள் கூளி காக்கை முதலிய பட்சிகள் பிணங்களைப் பிடுங்கித்தின்று வானத்திற் பந்தலிட்டுலவவும் யானை குதிரை ராட்சதர் அளவற்றுமாண்டு விழுந்துகிடக்கின்ற பிணமலைகளானது யிருதிறத்துப் படைகளின்மத்தியில் ஓங்கியிருப்பதினால் வீராவேசங்களுடன் தாராளமாகச்சண்டைசெய்வதற்குக்கூடாமையால் பூதர்களும் ராட்சதர்களும் மனவருத்தப்பட்டு அதன்மீதேறிவாதாடவும் யிப்படிக்குப்பொருகின்றவர்களிற் சுப்பிறமணியதேவர் சேனைவீரர்கள் மீறிச்செய்த சண்டையின் பிறபாவத்தை என்னென்றுசொல்லுவேன் யிந்தபூமியே அம்மியாகவும் புசபெலபராக்கிறம சாலிகளாகிய சிவகணங்களின்து பாரித்தகால்களேபருத்த குழவிகளாகவும் எதிர்த்தராட்சதர்களைப் பற்றிப்பற்றித் தேய்த்துத்தேய்த்து உதிரவெள்ளமோட அரைத்துக்கொன்று திரியும்போது ராட்சதவீரரும் பின்னிடையாமல் அதிககோபத்துடன் பூதப்படைகளைவளைத்துக்கொண்டு சின்னபின்னப் படவாட்டிக் கொடியபோர்செய்து மேலிடுவதைக்கண்ட பூதவெள்ளமானது கொக்கரித்துக்கொண்டு சிலரோங்கி வானத்தினையளாவவோங்கித் திசாதிசைகளிற்கிளைகளைப்பரப்பி யிராநின்ற மராமரங்களை வேருடன்பிடுங்கிக்கொண்டு கிறுகிறெனச்சுழற்றி ஒவ்வொருமேர்தலினுற்றத்தித்தாவிச்செல்லும் பலகுதிரைகளைப் பூட்டியிருக்கும் பாரித்ததேர்களைத்தம்நுறுங்கிப் பொன்னுருளைகள்வேறு அச்சுவேறுமச்சுகுத்துக்கால்கொடுங்கை வெவ்வேருகவிழமோதியும் மதயானைகள் ஆயிரம் பதினாயிரம் துதிக்கை கோடுகள் உரலையொத்தகால்கள் முதலிய உறுப்புகள்சின்னபின்னப்பட்டு யிறையத்தாக்கியும் சூலங்களைவீசியும் யிருப்புலக்கைகளைக்கொண்டுமோதியும் யிடியைப்போலக் கைக்குத்துகளினால் யிடித்தும்யிவ்விதமாக ராட்சதரை அலைக்கும்போது சிரங்கள் கரங்கள் கால்கள் பின்னப்பட்டுமாளவும் கொடியபோர்செய்து பூதவீரர் கைமிஞ்சி தாருகன் நால்வகைச்சேனைகளையும் வெகுவாய்மாண்டு பின்னிடையும்படிக்கு விழிவலவும்போது ரணக்களவெல்லைமுற்றும் பிணமலைகளாக விழுந்ததருவாயில் பலகவந்தங்கள் கூத்தாடவும் ஆற்றின்பெருக்கைப்போ

உதிரவெள்ளமானது மேலிட்டு யினாச்சலிட்டோடி பிணங்களானவை மச்சங்களையொத்து அழுந்தியும்மேலெழுந்தும் வருவதாகப்பாய்ந்து சமுத்திரத்திற்பெருகிக் கறுத்தநிறத்தைமாற்றி சிவந்தகடலாக்கவும் பிணங்களையும் உதிரங்களையுந் தொப்பைகள் நிறையவுண்ட வெறியினால் பூதபசாசக்கூட்டங்கள் சிவகுமாரன் சித்திரங்களைப்பாடிப்பாடிக்குதிக்கவும்உதிரமாமசங்களை ஏராளமாகத்தின்று அத்தலத்தை நீங்க மனமில்லாமல்பட்சிசாலங்கள் வானத்தில் வட்டமிட்டுத்திரியவும்யிப்படிக்குத்தன்சேனைப்பெருக்கானது அதப்பட்டுப்போனதை புசபெல பராக்கிரமசாலியாகியதாருகாசுரன்கண்டமாத்திரத்தில்வடவாமுகாக்கினிசீறியெழுவதைப்போலக்கோபங்கொண்டுவிழிகளில் அக்கினிப்பொறிகள்சிதறப்பாரித்ததேரிலிருந்து அதிவேகமாய் நிலத்திற்பாய்ந்து சேமத்தேரில்வருகின்றமந்தரகிரியையொத்தவலியவயிரத்தண்டாயுதத்தைக்கரத்திற்பற்றிக்கொண்டுகிறகிறெனச் சுழற்றி அண்டங்க ளதிரத்தக்கதாக ஆர்ப்பரித்துக்கோடானகோடி பூதச்சேனைகள் மாண்டுருளமோதியும் வலியபாதங்களினுத்றேய்த்துக்கொன்றும் யிவ்விதமாகயிருளைப்போலக்கறுத்தகிரோசத்தினைப்பெற்றதாருகனானவன் கரத்திற்கொண்டிருக்கின்ற பாரித்ததண்டாயுதத்தினால் பூதர்மீது மோதியகாலத்திற் சிரங்கள் பிளந்தும் பற்களுதிர்ந்தும் புசங்கள்சரிந்தும் கால்கள்முறிந்தும் சின்னபின்னப்பட்டு அக்காலத்திற் பெருகியோடும் உதிரநிணங்கள் பிசறியிருக்கின்ற சேற்றினிடத்தில் அழுந்தினர். கேட்டீர்களோ— சவுனகாதிரிஷிகளே அவுணராசன் கரத்தில்விளங்கும் வயிரத்தண்டமானது பெரும்புறக்கடலை நிகர்த்துப் பரந்திருந்த பூதவெள்ளத்தைக்கண்டதுண்டப்படவோட்டியதெனச்சொல்வது அதற்கொருபுகழோ புசபெலபராக்கிரமசாலியாகிய தாருகன் பூதப்படையைக் கொல்லச்சுழற்றி ஓங்கியகாலத்தில் அஷ்டதிக்குகளும் அண்டகோளகையும் நெக்குவிட்டுவெடித்தும் மோதியகாலத்திற் பூமியுத்தல்பத்தலாகவெடித்தும்யிப்பாடுபடுமாயின்மற்றவைகளின்கேட்டைப்பேசவும் வேண்டுமோ வெற்றிமாலை புரளும் விசாலமாகிய மார்பையுடைய ராட்சதராசன்பற்றிய வயிரத்தண்டமானது சமர்க்களத்திலெதிர்ந்தவர்கள் சிரங்கள் புயங்கள் மார்புகள் கால்களானவைதறிபட்டு கருடனைக்கண்ட சர்ப்பங்களைப்போலத் துடிதுடித்துக் களமெங்கும்புரளக்கொன்று பூதப்படைவெள்ளத்தையும் பூமியில் அரிக்கிடையாகத்தள்ளியது யிப்படிக்கு அதலகுதலப் படுகின்ற தருவாயில் பூர்வத்தில் மகாவிஷ்ணுவானவர் கோபித்தேவிய சக்கரப்படையினைக் கழுத்தணியாகத் தரித்தபாதகன் பூதப்படைகளில் மிகுதியாகக்கொன்ற விதத்தையும் தப்பினவர்கள் பகைவன்மீது போகவிருக்கின்ற தங்களிடத்தில் நில்லாமல் பலதிசை

யினும் ஓடி ஒளிப்பதையும் சேனைத்தலைவர்கள்பார்த்து நகைத்து யினி ந
ம்மாலாவதொன்றில்லை சற்றுமிவடத்தில் நிற்போமாகில்படாதபாடுகள்
படவருமென்று மனஞ்சலங்கி தங்கள்சேனைகளுக்கு முன்னம் அவர்க
ளும்பறந்தனர், இவ்விதமாகச்செயசாலிகளாகிய பூதகணத்தலைவர்பின்னி
ட்டதை எண்மரும் இலக்கருங்கண்டவுடன் மானம்பாதிக்கக்கோபமே
லிட்டு தங்கள்தேரைத் துரத்திவந்து ராட்சதராசனை வளைந்துகொண்டுவீ
ராவேசங்களுடன் தங்கள்சரத்திற் பற்றியிருக்கின்ற பாரித்ததனுசுக்களை
வட்டாகாரமாக வளைத்துத்திசைகளதிரக்குணத்தொனிகாட்டிக்கூரிய அல
கையுடைய அளவிறந்ததிவ்விய பாணங்களைக்கார்காலவருஷித்தினைப்போ
லப்பலதிசையினும்நின்று விடுகின்றவைகள் சீறி அனலையிறைத்துக்கொ
ண்டு அதிவேகமாகவந்து யானைமுகத்தினைப்பெற்ற அவுணராசன் திரே
கத்திற்றாக்கிப் பிளவாமலும் யாதொருகாயங்களையுஞ் செய்யாமலும்மு
னைகளொடிந்து வேகமாறி பலபலெனபூமியில் விழுந்தது, அதுஎப்படி
க்குக்காட்டியதெனில் புத்தியீனனாய் கொடியதரித்திரத்தை அனுபவித்
திருந்த ஒருவனுக்கு மகதயில்பரியம்வந்து நேர்ந்தகாலத்திற் பெரியோ
ர்கள் நீதிகளைச்சொன்னால் அவ்வாக்கியங்கள் அவன்செவிகளில் நுழையா
மல் அப்பிறையோசகமாகப் போவதைநிகர்த்தது, இஃதன்றியும்புசமெ
லபராக்கிரமசாலிகளாகிய வீரவாகுதேவர் துணைவர்கள்தாண்டிய குரூ
ரமானசரங்கள் முற்றும்பிரைந்து புகைந்துபோய் அண்டாண்டபுவன
ங்களெங்கனும் கொண்டாடத்தக்க செயத்தைநாட்டியிருக்கும் தாருக
னிடவிசாலமாகிய மார்பிற்றாக்கித்துளைக்க வலியில்லாமற் சலசலெனவி
ழுகின்ற தோற்றமெப்படிக்கிருந்ததெனிற் கோடைகாலத்திற்கல்மழை
யானது பாறையினிடத்திற் பெய்தகாலத்திற்சிதறிப் பலதிக்கினும் யிறை
யுமாறுபோலக்காட்டியது, இப்பிறகாரந்தாங்கள் செலுத்திய பாணகோ
டிகளானவை சின்னபின்னப்பட்டுப் பிறையோசனப்படாமற் திரும்பிய
தைஎண்மர்இலக்கர் கண்டவுடன் மனஞ்சகியாமற் கோபதீபிதர்களாய்த்
தேவாஸ்திரங்களையெடுத்து தங்கள் விற்களிற்சந்தித்து அபிமந்திரித்து அ
ப்பகைவன் கண்டத்துக்கும்மார்புக்குந் தோளுக்குங்குறிபார்த்துச்செலு
த்தினர், அவைகள்வெளிப்பட்டவுடன் பலரும் நடுங்கத்தக்கதாக அதிக
மகிமைகளைக்காட்டி பற்பலபடைகளைப்பெருக்கித் தீயையும் புகையை
யும் வீசிக்கொண்டுபோய் தாருகப்பாதகனைக்கிட்டியவுடன்வலிகுறைந்
து நாணிமறிந்துவிட்டது, இப்படிக்குக்கடவுளர் பாணங்கள் மங்கிய
தைக்கண்டதேவர்க்கள் மருண்டு கரங்களைப் பிசைந்துகொண்டு யிதுவெ
ன்னஅனியாயம் முக்கியமாகிய தேவாஸ்திரங்களே அபலமாகுமாயின்
யிப்பாதகனை மற்றெவ்விதத்திற் கொல்லுவர் யிதற்கென்னசெய்வோமெ

ன்றுபிலேசித்து தங்களுக்கென்ன அனர்த்தம்விளையுமோவெனவருந்தித் திகைத்துப் பார்த்திருக்கின்ற தறுவாயில் புசபெலபராக்கிரமங்களுக்கு நிகரற்றதிரனுன தாருகாசூரன் வடவாமுகாக்கினியைப்போலக் கொதித்துத்தன்காத்திற் பற்றியிருந்த வயிரத்தண்டத்தினைக் கரகரெனச்சுழற்றி வேகமுள்ள குதிரைகள்பூண்டு பர்வதத்துக் கொப்பாகக்காட்டத் தன்னைச்சூழநின்ற ரதசமோகங்களின் மீதில் மோதினுன் அத்தாக்கலினுல்அதுகள் நுறுங்கி சின்னபின்னப்பட்டு பூமியிலிறைந்தது உடனே தன்னிடநீண்டதுதிக்கையைநீட்டித் தனுற்பாணிகளாய் நிலத்திற்றிகைத்து நிற்கின்ற இலக்கனாப்பற்றியெடுத்துச் செண்டுகளைப்போலச் சமுத்திரத்தின் மீதில் விசினுன் அவர்களுஞ் சுழன்றுகொண்டுபோய்க் கரைகளின்மீது நிறைந்தோங்கிநின்ற தெங்கின் கனிகளானவை முதிர்ந்தபோது பெருங்காற்றின் மோதலிற்பட்டுக் குலைகள் குலுங்கித் தடாகத்திற் சலசலென உதிருமாறுபோலக் கருங்கடலில்விழுந்து அலைச்சற்பட்டுமெல்லவெளி வந்து அதன்கரையோரங்களிற் சேர்ந்து யாதுந்தோற்ருமற் றிகைத்துவருந்தி யிருந்தனர், இந்தஅபசெயத்தினை எண்மரிலொருவனுகியவீரகேசரியென்பவன் கண்டவுடன் மனம்பொருமற் கோபமேலிட்டுச் சீறி தன்தேரை அதிவேகமாகத்துரத்திவந்து பகைவன்முன்னம்நிறுத்திப்பாலசுப்பிரமணியதேவர் திருவடிகளை மனதிற்றியானித்துத் தன்கரத்திற்பாரித்துவிளங்குந் தனுசையிருகுதையும்ஒன்றுபடவளைத்து நாணேற்றிக் குணத்தொனிகொண்டு விஷித்துவையவிட்ட அலகுகள் தகத்தகாயமாகவிளங்குங்கொடியபாணங்கள் நூற்றினையெடுத்துச் சந்தித்து ஆசரணுந்தபரியந்த மிழுத்துச்செலுத்தினன், அதுகள்வெளிப்பட்டவுடன் வடவாமுகாக்கினியைப்போலச் சீறிப் புகையையும் அனலையும் யிறைத்துக்கொண்டு அதிவேகமாய்வந்து அவுணராசன் சிரத்திற்றரித்திருந்த நவரத்தினமயமாகிய கிரீடத்தினைத் துகளாக்கித்தள்ளியது அத்தறுவாயில் வானத்திலிருக்கின்ற தேவர்க்கள் வீரகேசரி வெற்றியையும் தாருகன்பங்கத்தையுந்தெரிந்து சந்தோஷிப்பெருக்கினுற் கற்பகமலரையெராளமாவொரிவாரிசெயாவிசைபவாவெனவாழ்த்திசோனைமாரியைப்போலஅவ்வீரன்மீதிலிறைத்துக் கொண்டாடினுர்கள், அக்காலத்திற் றேவர்களுக்குண்டாகிய களிப்பையுந் தன்பகைவன் செயத்தையுந் தாருகன்கண்டவுடன் கோபமிகுதியினுற் சரீரமுற்றிலும் வியர்க்கவும் மானமொருபுறத்திற்பாதிக்கவும்வருந்தி ஆக்கிறகித்துத் தன்கரத்திற்பற்றியிருந்த வயிரத்தண்டத்தினை கிறகிறெனச்சுழற்றித் தன்பகைவனுக்குயிலக்காய் விசிப்போட்டுத்திரும்பிப் பர்வதத்துக்கொப்பாகப் பாரித்து விளங்குந் தன்ரதத்தின் மீதிற் பாய்ந்து சிரோரத்தினங்களினுற் சோதித்திராநின்ற கிரீடமொன்

றையெடுத்துச் சிரத்திற்றரித்துக்கொண்டு மண்டிபோட்டு வீற்றிருந்த
காலத்தில் அவன்செலுத்திய தண்டாயுதமானது மணிகள்சத்திக்கஅதிவே
கமாகப்போய் வலியினுக்கொப்பற்ற வீரகேசரியினிட அழகியமார்பினி
டத்திற் கோடையிடியைப்போலத்தாக்கிய மாத்திரத்தில் மனங்கலங்கிப்
பொறிகள்நிலைதப்பிக் கண்கள்சுழல அடியற்றபனையை நிகர்த்துக் களைத்
துத்தேரின்மீதில் விழுந்தான் அதனைபுசபெலபராக்கிறம சாலியாகியவீ
ரவாகுதேவர்கண்டு அதிககோபங்கொண்டு குன்றுக்கொப்பாகப் பாரி
த்தோங்கியிராநின்றபுசங்களைப்பெற்ற தாருகாசுரனுடன்சண்டைகொ
டுத்து அவன்கெற்வத்தை யடக்கநினைந்து அதிவேகமாகத் தன்ரதத்தை
த்துரத்திவந்து அவுணராசனெதிரில் நிறுத்தித் தேன்களைத்துளித்து பரி
மளித்திருக்கும் வெற்றிமாலைதரித்து கிண்கிணிகள் யிருபாரிசங்களினு
ந்தொங்கவிட்டிருக்கும் ஒப்பற்றதன்தனுசையெடுத்து நாணேற்றி அ
ண்டமதிரக்குணத்தொனிசெய்து கூரிய அலகையுடையதாய் கழுகிறகு
கள்பூண்டு அனலையிறைக்குங் கொடிய சரவருஷிங்களைத் தாருகன்றேக
த்திற்ருக்கிப் பிளக்கும்படிக்கும் பிறையோகித்துச் சிங்கநாதத்தினைச்செ
ய்தனன், அவைகள்விடுபட்டவுடன் சகலரும் பிறமிக்கும் படிக்குப் பு
கைந்தெரிந்துகொண்டு விழிவருவதையுந் தன்னெதிரியினது மனத்து
ணிவையும் ராட்சதராசன்கண்டவுடன் வடவையைப்போற் சீறி நல்லகா
ரியங்கொஞ்சமாவது பயமில்லாமல் என்னெதிரினும் நிற்கத்தக்கமனவு
றுதிபெற்ற உன்னுணவத்தை யடக்குகின்றனனென்று மேருவையொத்
ததன்காண்டீபத்தையேந்தி நாட்டி நாரியைப்பிகித்து அண்டகோளகை
அதிர்ந்து வெடிக்கத்தக்கதாக டங்காரசத்தங்காட்டி விஷத்தொகையவி
ட்டு அதிகமகிமைகளைப் பெற்ற பாணங்கள் ஒன்றனந்தமாகப் பூட்டிச்
சொனைப்பெய்யலைப்போலச் செலுத்தும்போது சேனைகளுக் கதிபனான
வன்கொதித்துப் பராக்கிறமத்தில்மிகுத்த எழு அர்த்தச்சந்திரபாணங்களை
ப்போக்கி எதிரிவிட்டசரங்களனைத்தினையும் சின்னபின்னப்படக் கண்டி
த்தெறித்து கியாவுமெனச் சிங்கநாதஞ்செய்தனன், அதைக்கண்டதாரு
கனனவன் ஆலத்தையொப்பச்சீறி என்னையொத்தவனுடன் எதுத்த நீயா
னவன் யித்துடன்ஞசமாகப் போகக்கடவையென்று சபதம்பேசி முத்த
லைச்சூலமொன்றையெடுத்து மார்புக்குக்குறித்து வீசினான், அதுவும்
வெளிப்பட்டவுடன் அனலையிறைத்துக்கொண்டுவந்து அழகியமார்பக
த்திற்ருக்கிய மாத்திரத்தில் வலிகுன்றித்திகைத்து அதிக களைபட்டுநின்
றுவிட்டனன், அதைஅவனுக்குப் படைத்துணையாகவந்த சகோதரர்கள்
எழுவருங்கண்டவுடன் மனம்வருந்தி வடவையைப்போற்கொதித்து வி
ழிகள்சிவக்க அதிவேகமாய்த் தங்கள் கரங்களில் விளங்கும் விற்களைவட்

டாகாரமாகவளைத்துக் கோடையிடிகளைப்போன்ற தீட்சணியமாகிய சர
வருஷிங்களைப்பொழிந்து பகைவன் திரேகத்தைமூடி ஆற்பரித்தார்கள்
அவர்கள்செருக்கையும் படைகள்வரும் மகிமைகளையுந் தாருகன்கண்டு
தடசினமே தன்காண்டீபத்திற் கணக்கிறந்த குரூரமாகிய சரங்களைச்
செலுத்தி மீறிவருகின்ற பாணங்களை நடுவதுபாதியிற் கண்டித்துத்தள்
ளி அத்துடன்போகாமல் மீளவும்அளவற்ற கொடியஅஸ்திரங்களைக் கா
வேகமாகத்தூண்டித் திரேகங்களெங்கலுங் காயப்படுத்திக் கைகாலாட
வொட்டாமல் அலைக்கும்போது அவ்வருத்தங்களுக்கு எழுவருஞ்சகிக்
கப்படாமையால் பின்னிடைந்தனர், இப்படிக்குத் தனதுதம்பிமார்கள்
எண்மரும் சத்துராதியின் முன்னின்று போராடுவதற்கஞ்சிவாடிப்போ
னதையும் பகைவன் தீரனாய்ச்சிவமோங்கி பூதச்சேனைகள் முதலாக மங்கு
ம்படிக்குச் சரவருஷிங்களைப் பொழிந்துகொண்டு எதிரின்றி ரணக்கள
மெங்கும் உலவுகின்றதையுங் கந்தசுவாமியார் திருவடிகளைச் சிரத்துக்க
ணியாகக்கொண்டிருக்கும்வீரவாகுதேவர் கண்டவுடன் துணைவர்களுக்கு
நேர்ந்ததுன்பங்களுக்கு மனம்வருந்தி உடனேகோபமானது மேலிட
ச்சீறி நம்மவர்கள் யிப்பாதகனுக்கஞ்சித் திரும்புவதோவென்று ஆக்கிற
கித்துத் தன்தேரை அதிவேகமாகத் தூரத்திப்போய் செயவுச்சாகத்துட
ன்பொருகின்ற தாருகாசூரனெதிரில் நிறுத்தி வெற்றிமாலைதரித்திருக்கு
ம்பாரித்ததனுசை எடுத்துநாட்டி நாணேற்றிக் குணத்தொனிசெய்தகா
லத்தில் அவ்வதிற்சியினால் நிலைபெற்றிருக்கின்ற பற்வதங்கள்பெயர்ந்து
தூறுமாறுகவும் ராட்சதச்சேனைகள் செவிகளிற்பட்டமாத்திரத்திற்பொ
றிகலங்கிப் பயப்பிரூந்தியினாற் செவிகளைமூடிக்கொண்டுபலதிசையினு
ம்ஓடிஒளிக்கவும் அந்தரவாசிகளாகிய தேவர்க்கள் மகிழ்ச்சி ஒருபுறத்தில்
மீறிக்காட்டவும் அவ்வதிற்சிக் காற்றுமல் மனங்கலங்கித் திகைக்கவுமா
யினர், இதையோசிக்குமிடத்தில் எப்படிக்கிருக் கின்றதெனில், மழை
பெய்யலைவிரும்பினவர்கள் மேகங்கள் வானத்திற்பரவியபோது களித்து
ம்பின்பு அதனிடையிற் பெருத்தெழுந்த யிடியின்முழக்கத்துக்குப்ப
யந்து வருந்துமாறுபோன்றது, இவ்விதமாகச்சகலருந் திப்பிறமைசொ
ள்ளத்தக்கதாக டங்காரஒலியைக்காட்டி ஞானவான்களாற் கொண்டாட
வல்ல பெருமையினையுடைய வீரவாகுதேவரானவர் வில்லைவளைத்துகா
த்திற்பற்றிக்கொண்டு வெற்றிமாலை தரித்திருக்கும் பாரித்தபுசங்களையு
டையவீராதிவீரனான தாருகாசூரனைப்பார்த்து ஆலகாலவிஷத்தினைப்போல
க்கொதித்து யிதனைச்சொல்லுவதாயினர், உன்னுடன் போராடிய அபல
ராகிய சிலபூதச்சேனைகளையும் தனுர்வித்தைகளை யின்னமும் பூரணமாக
க்கற்கவேண்டியசேனைத்தலைவர்முதலியவீரரையும் உன்புசவன்மையினால்

ணாட்டினமென்று செருவித்திருக்கின்றதுபோற் காணப் படுகின்றது, ஆதலால் உன்னை நிமைப்போதிற் சின்னபின்னப்படக் கண்டித்துக்கொன்று உன்பிராணனை வீரசொற்கத்துக் கனுப்புவேனென்று சபதங்கள் பேசியதைத்தாருகன்கேட்டு மறுமொழிசொல்லுவான் சிறுபிள்ளாய் இதனைக்கேழ்ப்பாயாக திரிமூர்த்திகளி லொருவனாகிய மகாவிஷ்ணுவுடன் போராடி வெற்றிகொண்டு அவனேவியசக்கரப்படையை யிதோகழுத்தணியாகத் தரித்திருக்கின்றனன் மற்றதேவரை ஒருபொருளாகமதியாமற்சகலபுவனங்களினும் வெற்றிக்கொடியை நாட்டி வீராதிவீரர்களால் மெச்சிப்புகழத்தக்க செயத்தினைப் பெற்றிருக்கிறேன் அத்தகையவன் சாமர்த்தியங்களைச்சற்றும் மதித்துப்பாராமல் ஏதோவாயில் வந்தபடிக்குச் சில வார்த்தைகளைப்பேசினை வீரபராக்கிரமத்தினைப்பெற்றிருக்கின்ற சிங்காரசனைப் புதருகளிற் பதுங்கிக் காலங்கழிக்கின்ற குறுநரி வெல்லவல்லதோ அதையும் ஒருவர் நம்பப்படுமோ மேலும் உன்கண்முன்னம் சமுத்திரத்தினையொப்ப யிரைந்து வீறியிருந்த பூதப்படைகளனைத்தினையும் சின்னபின்னப்படக்கண்டித்து அதப்படுத்தினேன் அவர்களுக்கதிபதிகளாகவிருந்த சூரர்கள் என்னுடனெதுத்து நான்செலுத்திய பாணங்களுக்காற்றுமல் பின்னிடைந்தனர்- உன்னை நினைக்குமிடத்தில் முன்னமே என்கைவாளிகளின் குரூரத்தினால் வாடியிருக்கின்றனை அப்படிக்கிருக்க இப்போதுமீட்டும் நீயானவன் என்முன்வந்தது எப்படிக்கிருக்கின்றதெனில் திருவிளக்கு அணையுந்தறுவாயில் அதிகசோதியைக் காட்டி ஒடுங்குவதை நிகர்த்துக் காட்டநின்றது, அவ்வாறே ஏதோசில வீரங்களைப்பேசுகின்றனை சற்றுநேரத்தில் என் புயவன்மையினால் உன் பிராணனையும்வாங்கவிருக்கின்றேன் அதையும் நீயேபார்ப்பையெனத் தாருகன் ஆணிப்பாடாகச்சொல்லிய விசேஷத்தினை வீரவாகுதேவர் கேட்டவுடன் விடைசற்பத்தை யொப்பச்சீறித் தன்வில்லில் ஆயிரம் கொடியபாணங்களைச் சந்தித்துப்பகைவன் றேகந்தெரியாமல்மூடி ஆர்ப்பரித்தனர்- அவ்வாளிகள் அதிகஉக்கிரத்தினைக்காட்டிவரும்போது தாருகன் அதிசீக்கிரமத்திற் றன்காண்டீபத்தை யெடுத்துவளைத்து நாணொலிகாட்டிஆயிரந் திவ்விய பாணங்களைப்பூட்டி வேகமாகப்பிறையோகித்து தன் பேரிற்சீறிவருகின்ற சரங்களைச் சின்னபின்னப்படக் கண்டித்தெறிந்து மேலும் நூறுகுமாரமாகிய சரங்களைத் தூண்டி ஆர்ப்பரித்தான்- அப்பாதகன்செலுத்திய சிலீமுகங்கள் அனலையிறைத்துப் புகைந்துக்கொண்டு வருவதை வீரவாகுதேவர் கண்டமாத்திரத்திற் றரிதமாய் அத்தொகை வாளிகளைச்செலுத்தி எதிர்வரும்பாணங்களை நடுவதுபாதியிற் கண்டித்துத்தள்ளியதையுங் காவேகத்தினையுந் தாருகன்கண்டு வீரவாகுதேவர் தனு

த்வித்தையின்வல்லபத்துக்குமெச்சியிவன்விற்றிறத்தில்முக்கியனுகக்கா
ணுகின்றதால் யிவனைச்சுலபமாக நினைக்கப்போகாது.யிக்காலையைத்தே
வாஸ்திரங்களைக்கொண்டு முடிப்பேனென மனதிலெண்ணி தன்முதுகிற்
கட்டியிருக்கின்ற அம்புறாத்தூணியிற் கரத்தைச்செலுத்தி அக்கினியாஸ்
திரத்தையெடுத்து வில்லிற்பூட்டி மந்திரபூர்வகமாகப் பிரையோகித்தா
ன் அவ்வாளியானது வெளிப்பட்டவுடன் அனலை யிறைத்துக்கொண்டு
சிடசிடத்த தொனகளுடன் அதிவேகமாய் மேல்வருகின்றதை வீரவாகு
தேவர்கண்டு வெகுண்டு தனக்குச்சிவனுதன் கொடுத்திருக்கின்ற அனற்ப
டையை யெடுத்துப் பூசித்து வில்லிற்சந்தித்துக்கரவேகமாகத் தூண்டி
எறிவருகின்றபாணத்தின் வலியையடக்கினன்- அதைக்கண்டு தாருகன்
செறித்து வருணுஸ்திரத்தை யெடுத்துத்தொழுதுபிரையோகித்த கால
த்தில்வானவெல்லையிற்சென்று மேகசாலங்களைப் பெருக்கி யிருள்மூட
யிடிமின்னல் மழை யிவற்றினைஏராளமாகப் படைத்து வருவதைத்தெ
ரிந்து நகைத்துத்தானும் வருணப்படையைக்கடாவி யெதிரிபாணத்தி
னை அடக்கினன்- இதைக்கண்ட தாருகன் ஆக்கிறமித்து சூரியாஸ்திரத்தி
னை வணங்கித்தூண்டினன் அதுவெளிப்பட்டுச் சகலரும்பிறமிக்கும்ப
டிக்கு அதிகசோதியைக்காட்டிக் கொடியபாண விதங்களைப்படைத்துஆ
க்கிறமித்துவரும்போது வீரவாகுதேவரும் அந்தப்படையினை யெடுத்
துத்தொழுதுபோக்கி எதிரிபாணத்தினைக் கண்டித்தகாலத்திற் தாருக
ன் மனம்பொருதவனுய்க் கோபித்து வாயுவாஸ்திரத்தினைக் கரத்திற்
கொண்டுவழிபட்டு விடுத்தகாலையிற் பிரசண்டமாருதத் தினைவிசிப் பர்
வதங்களைமுதலியவைகளை வேருடன்கெல்லிக்கொண்டு மேலிட்டுவரு
ம்போதுகந்தசுவாமிக்குப் பிரியத்தனுய் அவனருளைப் பூர்த்தியாகக்கி
டைத்ததொண்டனுகிய வீரவாகுதேவர்அந்தப்படையினைக் கொண்டுஎதி
ரிபாணத்தின் செருக்கையழித்தனர்- இப்படிக்குக் காற்றினபடை வேக
மழிந்ததைத் தாருகன்கண்டு வடவையைப்போற்சீறி பிர்மாஸ்திரத்
தினைப்பூசித்து வில்லிற்பூட்டித் தோள்பிரளவாங்கிச் செலுத்தினன் அ
துவிடுபட்டவுடன் பற்பலதிவ்விய சரங்களையும் அனற்பொறிகளையும்
யிறைத்துக்கொண்டு பகைவனெங்கே எங்கேயெனத்தேடி அதிகவுற்
பாதங்களைவிளைத்துவேகமாய்வருவதை வீரவெண்டையங்கள் சத்திக்கு
ம்பாதங்களையுடைய வீரவாகுதேவர்கண்டு அச்சரத்தைக்கொண்டேஅத
ன்வலியையடக்கினர்-கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே-இவ்விதமாகச்
செயசாலியாகிய வீரன் வெற்றியைக்கண்ட தேவர்க்கள் பலா பலாவெ
னப்புகழ்ந்து கற்பகமலர்களைவாரிவாரிசெயாவிசையபவாவெனத் தூவிக்
கவிபாடலைச்செய்தனர்- அக்காலத்திற் குருகாசுரனனவன் தானேவிய

இறந்தபடைகளனைத்துக்கும் மாறுசெலுத்தி வாட்டியதைக்கண்டு அற்
புதமடைந்தவனாய் நாம் அரியதவங்களைச் செய்துபெற்று யிதுபரியந்
தம்போற்றிவந்த கடவுளர்படைகளைக் கிறமப்படிக்குச்செலுத்தினோம்,
அவற்றினையிந்தவீரன்கணப்போதில்வென்றனன் ஆதலால்யினிமாய்கை
யின்முயற்சியினால் யிவன் வீருப்பினையடக்கி வெல்லவேண்டுமெனத்
தாருகப்பாதகன்மனதில்நிச்சையித்து அதற்கடுத்ததந்திரங்களையும்முடித்
துக்கொண்டுதனக்கினிய தாயாகியமாயைஆகியிற்றங்களுக்குப்போதித்
திருந்தசவறவமென்னும் மாயமந்திரத்தினை விதிப்படிக்கு வுச்சரித்து
அதின்முயற்சியினால் முனம்ஒருவனாக விருந்தவன்அளவற்றஉருவினைத்
தாங்கிஅஸ்திரசஸ்திரங்களை ஒன்றனந்தமாகப் பலதிசையினுமிருந்து எ
ங்கும்பரந்திருக்கின்ற யிருட்கூட்டங்களனைத்தும் ஒருமுகத்திற்சேர்
ந்துவருத்துவதைப்போல ஒப்பற்றபுசபெலபாரக்கிறமசாலியாகியஅவு
ணராசன்சண்டைகொடுக்கின்றதை தேவர்க்கள்கண்டு மனமருண்டுஎன்
னவிளையவிருக்கின்றதோவென்னும் எக்கறவினால் மனங்கலங்கிப்பாத்தி
ருக்கின்றதருவாயில் யிதற்குமுன்னமே அப்பாதகனால் அடிபட்டுக்களை
த்துநீளிடையில்நின்ற பூதப்படைகள்யிந்தஉற்பாதம்விளைந்தபோது அ
திகபயபீதியுடன் அவ்விடங்களினும் நில்லாமற் றொலைதூரத்தில் ஓடி
யொளிக்கவும் அவர்களுக்குத்தலைவர்களாகவிருந்த வீரர்களும்திகைத்து
அவர்களுக்குமுன்னம் பறக்கவும் யிதுவுமன்றியில்அகோரஉயித்தியங்க
ளைச்செய்து தாருகனால்வாடியிருந்தஎண்மரும் மருண்டு ஏங்கிநிற்கவும்
யிவ்விதமாகச் சிவசுப்பிறமணியர்சேனைகள் அல்லோல கல்லோலப்பட்
டுவருந்துவதை அவுணப்படைகள் கண்டகாலத்திற் கரங்களைக்கொட்டி
கெக்கலிகொட்டி நகைத்துவசித்துரத்துவதாயினர், இப்பிறகாரம்ராட்சத
ர்செலிப்புடன்துள்ளும்படிக்குத் தாருகனானவன்மாயை விஞ்சையின்
வல்லயத்தினால் செய்துவருங் கொடியபோரினையும் தன்படைத்தலைவ
ராகியாக அச்சங்கொண்டுவாடி மறைவதையும் புசபெலபராக்கிறம சா
லியாகிய வீரவாகுதேவர்விழிகளில் அனற்பொறிகள் குபீல்குபீலெனக்
கொட்டும்படிக்கு அதிகஉக்கிறமாகப்பாத்துநல்லகாரியம் யிந்தமாயை
யின்பெருக்கினை நிமைப்போதில்மாற்றுவேனென்று அதிசீக்கிரமத்தில்
வீரபத்திராஸ்திரத்தினைச்செலுத்துவதாக அம்புறாத்தூணிரத்தில்நின்றும்
எடுத்தனர், கேட்டீர்களோ - சவுனகாதிரிஷிகளே பவுத்திரமாகியமனதைப்
பெற்றவீரவாகுதேவர்வெற்றிமிகுத்த வீரபத்திரப்படையைக்கரத்திற்ப
ற்றியபோதுதாருகன் மந்திரஉச்சாடனத்தினால் அதிகவல்லயத்தினைக்கா
ட்டிப்பரந்திருந்த மாய்கையானது நடுநடுங்கிவெருந்திச் சூரியனெழுச்சி
யைக்கண்ட யிருட்கூட்டத்தினைப்போலதட்சிணமே அதப்பட்டுப்போ

யதுஅக்காலத்திற் றுன்செயித்திருந்த மாந்தரிய வியாபாரத்தினால் மூடி
யிருந்தமாய்கை பறந்துபோகப் பழையபடியே தனியனாய் எதிரிற்றோ
ற்றிய தாருகனானவன் பராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவனை மற்றொ
ருமாய்கையிற்படுத்தி வஞ்சிக்கும்படிக்கு ஒருதீர்மானத்தை நினைந்து
நவரத்தினமயமாகப் பிரகாசித்திராநின்ற பாரித்ததேரைவிட்டு நிலத்தி
ற்குதித்து அதிவேகமாய் ஓடினன், இவ்விதமாகச் சண்டைகொடுப்ப
தைநீங்கிப் பின்னிட்டபோது தனக்கொருவரும் நிகரற்றசெயசாலியாகி
யவீரவாகுதேவர்யோசித்துப் போரழிந்து முதுகுகாட்டிப் போகின்ற
வன்மீதில் அதிகசெயத்தைப்பெற்றவீரபத்திரக்கடவுளினது படையை
விடுவது வீரத்தன்மையன்றெனத் தீர்மானித்தவராய் அழகியதமது தூ
ணியில் அப்படையினைச்செருகிச் சண்டையிலழிந்து யிதோ ஓடுகின்ற
தாருகன்பின்பற்றி விரைவிற்சென்றுபிடித்து நாரியினால் யிருதோட்க
ளையும் யிறுகக்கட்டிக்கொண்டு அடியேனுக் கிப்பணிவிடையைக் கடா
ட்சித்தேவிய வெற்றிவேலாயுதமூர்த்தியினது சன்னிதானத்திற் சேர்ப்ப
து உத்தமமென்று யோசித்தவராய் அவ்வாறேதமது ரதத்தினைவிட்டிழி
ந்து யானைமுகவிநாயகருக்கிளவலாகிய சண்முகதேவர் திருவடிகளைமன
திற்றியானித்துத் தாருகன்பின் தொடர்ந்து உலகங்களை அழிக்கவெழும்பெ
ரும்புறக்கடலைப்போல ஆரவாரித்து அவுணருக்கரசே ஓடாதேஓடாதே
நில்நில்லும் பற்பலவளங்களுடனும் ரதகெசதுரகபதாதிகளாகிய சது
ரங்கவெள்ளப் பெருக்குடனும் விருப்பையடைந்துவந்த உன்னையொ
த்தருரான் பற்பலராசசின்னங்களேமுதலியவளங்களனைத்தையும்பறிகொ
டுத்து நீனாப்போல உலகமுள்ளளவுந் தீராதபழிப்புக்குள்ளாய் சவுரி
யத்தைமறந்து புறந்தந்தோடுவதோ செயசாலியாகிய சூரபதுமனுக்குத்
தம்பியென்றும் மகாவிஷ்ணுவேமுதலிய சவுரியவான்களைவெற்றிகொண்
டதீரனென்றும் பலராலுந் துதிக்க வாழ்ந்தனை அத்தகைய செயசாலியா
கிய நீ யிக்காலத்தில் அபலனாய் பூதருக்கழிந்து புறங்கால்புட்டத்திற்று
க்கப்பாததசாரியாக ஓடுகின்றனை உன்சரீரத்தில் உதிரமற்றனையோ மான
த்தைநினைக்காயோ யிப்படிக்குப் பலருமேசப்பதுங்கிக் காலங்கழிப்
பதிலும் நாக்கைப்பிடுங்கிக் கொண்டுசாவது உத்தமமாகக் காணுகின்ற
து அவுணராசனே திரும்புதிரும்பென்று பற்பலவசை மொழிகளைப்பே
சிக்கொண்டு வீரவாகுதேவர் விரைந்துசமீபிக்குமுன்னிலையிற் றாருகனா
னவன் மாய்கைத்திறங்களுக்கு மூலமாகவும் மாதற்ஸ்தானமாகவும்யி
ராநின்ற கிரவுஞ்சபர்வதத்துக்குச் சமீபத்திலோடி அவ்வரையிற்றோன்
றநின்ற குகைகளிலொன்றில் நுழைந்து மறைந்தனன், அதனைவீரலட்சு
மிகுடிகொண்டிருக்கும் புசபெலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவர்,

கண்டு அவன்சென்றஅப்பூழையின் மூலமாய்விரைந்து சிலதூரம்போகின்ற தறுவாயிற் சூரியனானவன் உலவப்படாத யிருட்பூமியைப்போல யாதுந்தோற்றப்படாமற் கறுத்து யிருளோங்கி யிருப்பதைத்தெரிந்து சிலதூரம்பாதங்களினால் நிலத்தைத்தடவிக்கொண்டுபோய்க் கரங்களை நீட்டி ஆராய்ந்தும் தாருகனைக்காணாதபடியால் வெளியில் வருவதற்குநினைந்து திரும்புமுன்னிலையில் அவ்வளையின் வஞ்சகத்தினாற் புறத்தியில் வருவதற்கு ஒருமார்க்கமாவது காணாமல்வளையவளைய வருவதைச்செயசாலியாகிய வீரவாகுதேவர்யோசித்து யிவ்வளைமாய்கைக் கிருப்பிடமாக விருக்கின்றது யிதன்காரணங்களைமுன்னமே நாரதர் எமதிறைவனாகியசிவசுப்பிறமணியதேவருக்குச் சொல்லியிருக்கின்றனர், அவ்வாறே நம்மையும் அலைக்கின்றதெனக்கோபித்து வடவையைப் போலச்சீறி யிவ்வளையின்முயற்சியைஅதப்படுத்திவெளிப்படக்கடவேனென்று ஆலோசிப்பதை மலையுருப்பெற்றிருக்கின்ற கிறவுஞ்சப்பாதகன் தெரிந்தவுடன்வீரவாகுதேவர் மதியைமயக்கியதன்றியில் முன்னம் யியலிசைநாடகமென்னும் முத்தமிழைவளர்த்த அகஸ்தியர் சபித்திருந்தகாரணத்தினாற் புயவன்மைக்கொப்பற்றவீரனை அம்மலையானது மையலிற்பட்டுச்சோரும்படியாகிய பற்பலமாயைகளைச்செய்தகாலத்தில் அதன்வயப்பட்டுமயங்கிதனக்குணர்ச்சி எவ்வளவுமில்லாமல் நிலத்தில்விழுந்து மெய்மறந்து நித்திரையிற்பட்டிருந்தனர், இப்பிறகாரந் தமது முன்னவனாகியவீரவாகுதேவர் அவ்வளையினுள் உறங்கியிருக்க அவருக்கிளையவர்களாகிய எண்மருந் தங்கள்வருக்கமாகிய இலக்கரும் பூதப்படைவீரரும் அதிகக்லேசத்திற்பட்டுச் சிறகற்றபட்சிகளைப்போல மிகவும் வருந்தினவர்களாய்ச் சண்டைகொடுக்கப்பயந்து முதுகிட்டோடிய தாருகப்பாதகனை நமதிறைவன் தொடர்ந்துபோயினன், திரும்பிவெளிவரவில்லை யிந்தபற்வதத்தினுள் அவனைக்கண்டு மல்லுயுத்தியஞ் செய்கின்றனரோ- யாதோஒன்றுந்தோற்றவில்லையே என்செய்வோம் அவரைத்தனிமையில்விட்டு நாமிவ்விடத்திலிருப்பது தகுதியல்ல நாமனைவரும் யிதனுள்ளேபோய் எது காரியங்களையுங் கண்டறியவேண்டுமெனப் பலரும் எண்ணித்துணிவுகொண்டு எண்மரும் இலக்கரும் பூதகணத்தலைவருந் தங்கள்கரங்களிற்பற்றியிருந்த விற்களைவளைத்து திவ்வியபாணங்களைப் பூட்டிக்கொண்டுங் கதைமுதலிய பற்பலஆயுதங்களைக் கரங்களிற்பற்றிக்கொண்டுந் தாங்கள் நின்றதலத்தைநீங்கிவானத்தினையளாவிநிற்கின்றகிறவுஞ்ச பற்வதத்தின்சமீபத்திற் றுரிதமாகவந்துபுசபெலபராக்கிறமசாலியாகிய வீரவாகுதேவர் நுழைந்தகுகையின்மூலமாக ஆற்பரித்துச் சகலரும்போகுமுன்னிலையில்அக்கொடிய பற்வதமானது அவர்களுக்குத்தலைவனுக்குச்செய்ததைப்

போலவே பற்பலமாய்கைகளைக் காட்டியபோது அதன்முயற்சிக்குள்ளா
ய்த்தங்கள் அறிவையும் வீரத்தையும்மறந்து திகைத்துச் சோர்ந்து யா
தொருபிறக்கினையு மற்றுத்தாமும்மயங்கிவிழுந்தனர், இப்பிரகாரம்செ
யசாலியாகிய வீரவாகுதேவரும் மற்றவீரர்களனைவரும்வஞ்சகன்மாய்கை
யிற்பட்டுச்சோர்ந்த பிரேதங்களைப்போல விழுந்துகிடக்கின்றமுன்னி
லையில் தாருகாசுரன் அவ்விடம்வந்துபார்த்து நமதுதந்திரமுயற்சியினு
லிவர்களனைவரும் ஏககாலத்தில்மாண்டு அரிக்கிடையாகக்கிடக்கின்றன
ரெனநினைந்து அதிகமகிட்சியைக் கொண்டவனுய் வஞ்சகத்துக்குமாது
ற்ஸ்தானமாகவிருக்கின்ற கிறவுஞ்சபற்வதத்தின்உச்சியிற்போய்யிறுமா
ப்புடன் நின்றனன் அக்காலத்தில் வானவெல்லையிலிருந்து சமர்க்களத்
தில் நடக்கின்றவேடிக்கைகளைப் பார்த்திருந்த தேவர்க்கள் யிக்காரணங்
களைத்தெரிந்தவுடன் விழிகளிற்றாரைதாரையாக நீர்பெருகக் கோவென்ற
ழுது மனங்கலங்கி விசனமிகுதியினுற் திரோகம்நடுநடுங்கபயபீதியானது
மனதைஅலைக்கயிதனை நினைக்கின்றனர், இவடத்தில்யினிநிற்போமாகில்நம
க்கென்னகெடுதிவிளையுமோவென்னும்எக்கறவானது தங்கள்மனதைவா
ட்டஅதிவேகமாய்மேலுலகங்களில்ஓடிஒளித்தனர், பூதப்படைகளுந்தம்
மைஆதரிக்கவல்லதலைவர்கள் ஒருவருமில்லாதகாரணத்தினுற் பாதகனெ
ன்செய்வனோவென்று அச்சங்கொண்டு திகைத்துச் சுற்றுமுற்றும்பார்த்
திருக்கின்ற தறுவாயிற் கிறவுஞ்சபற்வதத்தின்மீது நின்றதாருகனுனவன்
சிங்காசனைப்போலக் கெற்சித்து விரபராக்கிறமசாலியாய்ச் சண்டைக்
காயுத்தப்படுமுன்னிலையில் முன்னம் சிவகுமாரன் படைவிரர்போருக்க
ஞ்சிஓடிஒளித்த அவுணர்கள் அனைவரும் பலதிசையினுமிருந்துவந்து ஏ
கமாகச்சேர்ந்து பெரும்புறக்கடலைப்போல ஆர்ப்பரித்துத் தமதிறைவ
னைச்சூழ்ந்து நிராகநிற்கின்ற தறுவாயிற் றுருகனுனவன் பொன்மணிக
ள்யிருகுதையினும் சத்தித்திராநின்ற வலியவில் லொன்றினைக் கரத்திற்
கொண்டு சமர்க்களத்தைச்சேர்ந்து ரதாரூடனுய்ச் சிலையைவளைத்துச் சக
லருந்திடுக்கிட் டஞ்சும்படிக்கு நாணொலிகாட்டி விஷத்தவையவிட்டு
ப்பிறகாசித்திருக்கும் அலகையுடைய கொடியபாணங்கள் கோடாகோ
டியாக ஒவ்வொருதிரந்தொடுத்து எத்தலங்களினும் பாணமயமாகச்சொ
னைப்பெய்யலைப்போலச் சொரிகின்றதறுவாயில் அதுகள் அனலையிறைத்
துகுதுகுறெனவந்துசுறுக்குச்சுறுக்கென்றுதிரோகமாத்தியந்தமுந்தைத்
துச்சல்லடைக்கண்களாகத்துளைக்க அவ்வருத்தங்களுக்குச் சகிக்கப்படா
மையால் பூதச்சேனையானது நிலைகெட்டுச் சின்னபின்னமாய் மாண்டது
போகமற்றவைதிசாதிசையினும் மற்றத்தலங்களினும் ஓடிப்பதுங்கின
ர், இப்படிக்குச் சிவகணங்கள்முற்றும் அல்லலிற்பட்டுமறைந்துபோன

வதையும் ராட்சதர்விருப்பையும் நாரதரிஷியானவர் தெரிந்தமாத்திரத்தி
ல்துக்கித்துத் திரோகமாத்தியந்தமும்வியர்க்கநடுநடுங்கித்தம்மைப்போ
லவேவாடிவருந்தி மனக்கோட்டத்துடன்துரிதமாகப்போகின்ற மகாவி
ஷ்ணு பிர்மதேவன் தேவராசனுடன்கூடி அதிதீவரமாகநடந்து தேவ
சேனாபதியாகிய குமாரசுவாமியார் எழுந்தருளியிருக்கின்றபின்னணியை
ச்சேர்ந்து அரியதவவிரதங்களைச்செய்து பலராலும் பூசிக்கவிருக்கின்ற
நாரதரிஷியானவர் ஆயிரவெள்ளம்பூதசேனாசமுத்திரத்தின்மத்தியிற்கிரு
பாநோக்கத்தினைப்பரப்பிஞானசூரியனைப்போலப் பிறகாசித்திரானின்ற
சண்முகப்பெருமானை விழிகள் ஆனந்தமடையத்தக்கதாகத் தெரிசித்து
த்தம்முடன் கலந்துவந்த தேவர் சமோகங்களுடன் திவ்வியசரணாரவி
ந்தங்களிற்பணிந்துபோற்றி யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், ஐய
னே தேவரீர் கட்டளையின்படிக்குச்சென்ற வீரவாகுதேவர் முதலாகிய
படைவீரரும் பூதவெள்ளமும்சவுரியபராக்கிறமங்களுடன்நின்று தங்க
ள்பேரில்பகைகொண்டு மேலும்மேலும் வந்தெதுத்தராட்சதவெள்ளங்
களைக்கண்டதுண்டமாகத்திகைக்கும்படிக்குக்கொன்றும் அவர்களுக்கு
உதவியாகவந்தசேனைத்தலைவர் மந்திரி பிறதானிகளுடனும்போராடி அ
வர்களையும் வாட்டிக்கடையிற் செயசாலியாகிய தாருகனுடனும் அகோ
ரயுத்தியங்களைச்செய்து வருமுன்னிலையில் வீரவாகுதேவர்பாணங்களி
ன்கொடுமைக்காற்றாதவனாய்ப் புலைத்தொழிலை விரும்பிநடாத்தும்பாத
கனானதாருகன் ஒருவஞ்சகத்தினை நினைத்து பயந்தவனைப்போலக் காட்டி
முதுகிட்டோடிக் கிறவுஞ்ச பற்வதக்குகையிற் புகுந்தான் அதனைக்க
ண்டு செயசாலியாகிய வீரவாகுதேவர்சீறி அவனைக்கைப்பிடியாகத்தமதி
டத்துக்குக் கொண்டுவர நினைந்து பின்தொடர்ந்து அவ்வளாயி னுள்ளே
போய்த் திரும்பிவாராமையால் அவர்துணைவரும் இலக்கரும் சேனைத்த
லைவரும் பூதவீரரிற்சிலரும் அக்குகையின் மூலமாகச்சென்றனர், அக்
காலத்திற் கிறவுஞ்சப்பாதகன் தான்கற்றிருக்கின்ற மாயவிஞ்சைகளினா
ல்அவர்க ளனைவரையும் மயங்கச்செய்ததருவாயில் அறிவிழந்து பித்தரை
ப்போலச்சோர்ந்து நின்ற நின்ற யிடங்களிற்களைத்துக் கிடப்பதாகக்
காணுகின்றது யிச்சம்பவங்களைத்தெரிந்த தாருகாசூரனானவன்செயசாலி
யாய் ரணக்களத்தில்வந்து வில்லைவளைத்துச் சோனைமாரியைப்போல அ
ளவற்ற கொடியபாணங்களைச்செலுத்தி நமதுபூதப்படைகளைச்சின்னபி
ன்னப்படக்கண்டித்தகொடுமையை என்சொல்வேன்-மிகவும் அநீதமா
கவிருக்கின்றது அவன்போருக்கஞ்சி நமது சேனைகளில்மாண்டதுபோ
கமற்றவைபலதிசையினும் ஓடிஒளித்தது தாருகன் தன்சேனைகளுடன் தீ
ரனாய்எதிரின்றிரணகளமெங்கனும் உலவுகின்றனன். சற்வப்பிராணிகளி

டத்தினும் பரிபூரணமாகவிளங்கி நடிப்பிக்கவல்ல கர்த்தனேதேவரீருக்கு வையனைத்துந் தெரிந்திருப்பதாயினும் நடந்தசவிஸ்தாரங்களைச் சன்னிதானத்தில் விண்ணப்பஞ்செய்துகொண்டனம், யிதனைதிருவுளத்திற்கொண்டுதுரிதமாய் வேண்டியமுயற்சிகளைச் செய்யவேண்டுமென்று நாரதரிஷியானவர்சொல்லிய சேதிகளைத்திருச் செவிகளினேற்றவராய் அவர்கள்மீதுகிருபாநோக்கத்தினைப்பரப்பி யிவ்விற்றாந்தங்களைத் தெரிவித்த நாரதரிஷியினது மனக்கோட்டத்தினையும் தேவர்கள் முகங்கள்வாடிவருந்துகின்றதையும் யிவர்களுக்கிறையவனாகிய இந்திரன் பதைபதைத்துவாடுகின்ற சோபத்தினையும் பிரமதேவனாதியர் துக்கவருத்தங்களையுந் தீர்க்கமாகத்தெரிந்துகொண்டு அவர்களிடத்திற் பரிவாய் சண்முகப்பெருமாள் யிதனைச்சொல்லுவதாயினர் சகலரும்யிதனைக் கேழ்ப்பீராக—யிந்த நிமிஷத்திற் சமர்க்களத்தைச்சேர்ந்து நமதுகரத்தில்விளங்கும்வெற்றி வேலாயுதத்தினால்தாருகனைப்பிளந்துகொன்று அவுணர்வாசஞ்செய்வதற்குக்கோட்டையாகவிருந்துரிஷிகள்முதலியபெரியோர்களைவஞ்சித்துபாதைசெய்திருக்கின்ற கிறவுஞ்ச பர்வதத்தினையுங் கண்டித்துவாட்டிவீரவாகுமுதலிய நம்மவரைக்கணப்போதில் மீட்டுத்தருவேன் நீங்கள்விசனப்படாமல் தயிரியமாகவிருப்பீரென்று பாலசுப்பிரமணியக்கடவுள்திருவாய்மலர்ந்த அனுக்கிரகத்தினைச்செவிகள் குளிரக்கேட்டு மனதைவாட்டிவருத்திய கிலேசங்களைப்போக்கி அளவற்றமகிட்சியடைந்து கிரோகபரவசத்தராய் ஆனந்தக்கூத்தாடி பலவிதங்களிற் றுதித்துக் கந்தசுவாமியார் திருவடிகளிற்பணிந்து மனமகிழ்ந்திருக்கின்ற தருவாயில் முருகப்பெருமானானவர் தமக்குச்சாரதியாகவிருக்கின்ற வாயுதேவனைக்கிருபையாகப்பார்த்தருளி மனோவேகத்தினுந் துரிதமாக நமதுதேரைச்சமர்க்களத்தினெல்லையிற் சேர்க்கக்கடவையெனக்கட்டளையிட்டவுடன்கர்த்தனே யிதோகொண்டுபோவனெனத் தனக்குத் துணையாகவிருக்கின்ற எழுவருடன் குதிரைவார்களைத் திருத்தமாகப்பற்றி சவுக்கினைக்கரங்களிற்கொண்டு அசுவசாஸ்திரப்படிக்குப் பஞ்சலட்சணங்களைப்பெற்று வாயுவேகத்தினுமேவிட்டுப்பாயவல்ல புரவிகளை அதட்டிக்கரகொன்றோடவிட்டு ஆர்ப்பரித்தனன், அக்காலத்திற் பெருத்தெழுந்த அதிர்சியினால் அண்டமும் பூமியும் அதிர்ப்பட்டசத்தகுலாசலங்கள் முதலியவனைத்தும்சத்தசாகரங்களும் அஷ்டதிசையினுமிருந்து போற்றிவரும் அயிராபதமாதியாகிய யானைகளும் நடுநடுங்கித் திகைக்கத்தக்கதாக அலைகளைப் போலப்பாயும்அசுவங்களைத்தாண்டி தேவர்க்கள் சிறையினைநீக்கவரும் குமாரசுவாமியார் வீற்றிருக்கின்ற ரதத்தினைஆகாயமார்க்கமாகச் சகலரும்புகழும்படிக்கு நடத்தினன், இப்படிக்கிஆதிதேவனாகிய சிவகுமாரனானவர் வான

வெல்லையின்மூலமாய் சொற்னத்தேரின்மீது போகின்றதருவாயில் மேகங்களானவை பற்பலஉருவங்களைக்கொண்டுவருவதைப்போலப்பூதவெள்ளமானது ககனமார்க்கங்களெங்கனும்நிறைந்துஆர்ப்பரித்துப்போகுமுன்னிலையில் முனந்தாருகன் சண்டைக்குப்பயந்து ஒடிப்பதுங்கியிருந்தபூதவீரர்களனைவரும் கந்தன்வரவைத்தெரிந்தவுடன் மனக்கவலைகளைப் போக்கிக் களிமிகுதியினால் ஆரவாரித்துக்கொண்டு பலதிசையினுமிருந்துவந்துசேர்ந்து சிவகுமாரனைவணங்கிப்போற்றித் துட்ரவும், இவ்விதமாக மகாவிஷ்ணுவுக்கினிய மருகராகிய குமாரசுவாமியார் சகலஆடம்பரங்களுடனும்போகத் தாருகன்செயசாலியாய்த் தன்சேனைகளுடன்நிறியிருக்கின்ற ரணக்களத்தைச்சேர்ந்த தருவாயிற் சிவகுமாரன் சேனைவீரர்கள் பிரசண்டமாருதத்தைப்போலக் கொக்கரித்து பெரும்புறக்கடலைநிகர்த்து எங்கும்பரந்து ஆரவாரங்களைச்செய்து வருகின்றதை ராட்சதச்சேனைகள்கண்டவுடன் றவுத்திராகாரமாகமண்டியெரிந்து அணிவகுப்பாய் எதிரேறிநடந்தனர், இவ்விதமாக எத்தலங்களினும் புகழத்தக்கபெருமையினையுடைய பூதப்படைகளும் அகந்தையிற் சிரேஷ்டராகியராட்சதச்சேனைகளும் அதிகவீரங்களுடன் ஒருவரைஒருவர்வெற்றிகொள்ளவேண்டுமெனகின்ற தீரங்களுடன் யெதிர்த்து அதிககோபங்களுடன் போர்த்தொழிலைச் செய்யத்துடங்கிய முன்னிலையிற் செயசாலிகளாகிய ராட்சதச்சயின்னியங்கள் வடவையைப்போலச்சீறித் தங்கள்கரங்களிற் பற்றியிருக்கின்ற சக்கரங்கள் சூலங்கள் எழுவாயுதம் மழுவாயுதங்களைச்சிலர் பகைவர்மீதில் அதிவேகமாகச் செலுத்தவும் பலர்விற்களை வட்டாகாரமாகவளைத்து அனலையிறைக்கவல்ல கொடியபாணங்களை ஒன்றனந்தமாகப்பிறையோகிக்கவும் அதைக்கண்ட வீராதி வீரர்களாகிய பூதப்படைகள்ஆலகாலவிஷத்தைப்போலக் கொதித்து வானத்தையளாவநின்ற பற்வதங்களைப்பெயர்த்துச் சத்திராதிகள் அதப்பட்டுப்போகவெறிந்தும் திசாதிசைகளிற் கிளைகளைப்பரப்பி ஓங்கியிராநின்ற மராமரங்களைவேருடன்பிடுங்கிக் கரகரெனச்சுழற்றிச்சாடியும் யிருப்புலக்கைகள் வளைதடிமுதலியபடைகளைக்கொண்டு வீசியும் யிப்படிக்குச் சிவகணங்கள் அதிககெலிப்புடன் மேவிட்டுச்சண்டைகொடுக்கும்போது தாருகனிடநால்வகைச்சேனைகளும் அல்லோலகல்லோலப்பட்டு அளவற்றதேரணிகளானவை உருளைகள் அச்சு மச்சு சூத்துக்கால் கொடுங்கை கொடி குடைமுதலிய உறுப்புகள் பின்னப்பட்டுப் புரவிகள் அதப்பட்டு உருளவும் யானைக்கூட்டங்கள் உரலையொத்தபாதங்கள் வேறு எமதண்டம்போன்ற யிருப்புலக்கைகளைப்பற்றிச் சுழற்றிவரும் துதிக்கைகள் வேறு ரத்தினமுகபடாமணிந்த மத்தகம் வேறு வேறாகக்கண்டித்தும் புரவிப்பந்திகளானவை

கண்டமற்றுஞ் சவுரிகளை திசர்த்தசையும் வால்களற்றும் பொன்வெண்டையங்கள் கலிக்கும் கால்கள் கண்டிக்கப்பட்டும் யிவ்விதமாக அதப்பட்டும் அவுணப்பாதகர்கள் சிரங்கள் நுறுங்கியும் மூளைகள்சிதறியும் பற்களுதிர்ந்தும் தோள்கள்சரிந்தும் மார்புகள்கிழிந்தும் வயறுபீறுண்டு குடல்கள்யிறைந்து சற்பங்களைப்போலப் புரளவும் பருத்தகால்கள் தறிபட்டும் யிவ்வாறுநால்வகை ஸ்தோமங்களில் வெள்ளக்கணக்காகமாண்டமுன்னியில் அவுணர்பின்னிடையாமல் அதிக்கிறமித்து வாட்டும்போது பூதச்சேனைகளினும் பலர்தலைகள் நுறுங்கியும் தோள்கள்சரிந்தும்கால்கள் துண்டித்தும் உடல்கள்நகசெகபரியந்தம் சிதைந்தும் மாண்டனர், அக்காலத்திற்பெருகிய உதிரப்பிறவாகமானது அலைகளைவீசி யினைந்து களேபரங்கள் முதலானதைப்புரட்டிக்கொண்டு சமுத்திரத்திற்பாய்ந்து மகரமச்சங்களுக்கு விருந்திட்டது கழுகுபருந்து காக்கை முதலியபட்சிசாலங்கள் நிணமாம்சங்களைத்தெவுட்டவுண்டு உதிரபானஞ்செய்துவானத்திற்பந்தலிட்டு வட்டம்வரவும் பூதபசாசடாகினிகாளிகளாதியகணங்கள் பண்டிகள் நிறையக்கொழுப்புகளையும் ரத்தங்களையும் தின்றவெறியினுல்முருகன்புகழைப்பாடிநித்தோமென்றுநடிக்கவும் கோடானகோடிகவந்தங்கள் ரணக்களமெங்கனுங் கூத்தாடவும் பிணமலைகள் வானத்தினையளாவக்குவித்திருக்கவும், இவ்வித்ங்களாகயிருதிறத்துச்சேனைகளும்ஒருவருக்கொருவர் மாற்சல்லியங்களுடன் பின்னிடையாமல் வீரங்களைப்பேசிக்கோபித்துப் போராடுகின்ற தறுவாயில்வெற்றிமாலைதரித்திருக்கின்ற பூதவீரர்கள் செயவுச்சாகங்களுடன் கைமிஞ்சி வீராவேசங்களுடன் முன்பின்பாராமல் கொண்ட கொண்டமட்டும் சாடும்போது அவ்வருத்தங்களுக்குச் சகிக்கப்படாமையால் ராட்சதர் வலிகுன்றிஎதிரில் நிற்கப்பயந்து மாண்டவர்கள்போகநின்ற சேனைகளனைத்தும்பயபீதியினுற்பலதிசையினும் ஒடிஒளித்தனர், இப்படிக்குத் தன்படைவீரர்கள் தலைவிரிகோலமாய்ச் சமரவெல்லையில் ஒருவராவது நில்லாமற் புறங்கொடுத்துமறைந்ததைத் தாருகன்கண்டமாத்திரத்திற் கண்டவர்கள் அஞ்சியோடும்வெற்றிமிகுத்த தன்கிலையவளைத்து மின்னலைப்போலப் பிறகாசிக்கும் அலகைப்பெற்ற கோடாகோடி சொடியபாணங்களை அமோகமாகத்தொடுத்துப் பிறையோகித்துப் பூதப்படைகளைக் கண்ட துண்டங்களாகச் சங்கரித்துக்கொண்டு மேல்நடந்து எதிர்ப்பட்டசிவகணங்களைவளையுந் தொடர்ந்துதொடர்ந்து பற்பலதிவ்விய பாணங்களைப்போக்கிச்சூரியனெதிரிற்பட்ட பனிப்படலத்தைப்போலப் பூதரைவாட்டி விலக்கிக்கொண்டு மேகசஞ்சாரங்க ளுமல் விளங்கியிருக்கும் இமையராசபுத்திரிதிருக்குமாரனுகிய பாலசுப்பிறமணியக்கடவுளினது சமீபத்தில்

வர்துசேர்ந்து தேசோமயமாகச்சொலித்துத் தன்னெதிரில் விளங்குகி
ன்றகுமாரதேவனைப்பார்த்துத் தன்னருகில் வருகின்ற தூதனைக்கூவிச்
சற்றும் நீதியற்ற கொடியமனதைப்பெற்ற தாருகப்பாதகனானவன் அதிக
கோபக்கனலானது மனதில்மூண்டு விழிகளிற் றீப்பொறிகள் பறக்கத்
தக்கதாக யிவன்றானே சிவகுமாரனென்று கேட்டனன் - அப்போது அ
ச்சாரணர்வணங்கி ராசாதிராசனே யிப்பாலனைத்தான் சிவன்பிள்ளையெ
னச்சொல்லுகின்றனரெனப் பேசிமுடிவதன்முன்னந் தன்றேரைமனோ
வேகத்திலும் முந்தச்செலுத்தி வித்துக்கொண்டு சகலதேவர்க்களுக்கும்
முதன்மையாகவிருக்கின்ற பரமேஸ்பரருக்கினிய திருக்குமாரனுக்குச்
சமீபத்திற்போய்நின்று சோடசகலைகளையுடைய பூரணச் சந்திரோதயத்
தினும் பதின்மணங்கதிகமாகப் பிறகாசித்திருக்கின்ற சண்முகங்களின்
பொலிவையும் செந்தாமரைமலரைப்பழித்து விளங்குகின்ற கிருபாநோ
க்கங்கள் பன்னிரண்டினையும் ஆசானுபாகுவாகப்பருத்து நீண்டிருக்கி
ன்ற பன்னிருபுயாசலங்களின் சேனாயுமகரகமலங்களிற் பற்றியிருக்கின்
றவெற்றிவேலாயுதமுதலிய படைகளின் வீரபராக்கிரமச் சிறப்புகளையு
ம்பொற்றண்டை சதங்கைகள்கலித்திருக்கும்பவித்திரமாகியதிருவடிகளி
ன்பெருமிதங்களையும் நேரிற்றெரிசிக்கப்பெற்றான் ஆதலால் அவன்செ
ய்ததவப்பேற்றின் முயற்சிகளையிப்படித்தென்று என்போலிகளாற்புகழ
ப்போதுமோ சவுனகாதிரிஷிகளே - சிவகுமாரன் திருநோக்கம்பட்டவு
டன் ஞானவுணர்ச்சிவிளங்கிச் சிற்பரமூர்த்தியாகிய சிவசுப்பிறமணியதே
வர் கொண்டிருக்கின்ற திருக்கோலத்தினைப்பார்த்து அற்புதமடைந்
தவனாய் நம்மையொத்த வீரன்மீதிற்பகைத்துச்சண்டைகொடுக்கவந்தா
னாதலாற் கற்பனைகளைக்கடந்த ஆதிதேவனே யிவனாகுமென அற்புதம
டைந்தனன், இப்பிறகாரம் அதிசெயித்தவன் ஒருயிறுமாப்பினைக்கொ
ண்டனன், அதுவென்னையெனின் தேவதேவோத்தமனாக விளங்கியிருக்
கின்ற பரமேஸ்பரன் தங்களுக்குக் கடாட்சித்திருக்கின்ற வரமுயற்சிக
ளையும் அகண்ட சாம்பிறுச்சியச்செல்வச்சம்பத்துகளையும் அழிவற்றவ
யிரத்திரோகத்தின் வன்மையையும் புசபெலபராக்கிறமத்தினையும் வீரத்
தன்மையையும் ஆதியிற்றாங்கள் பெற்றிருப்பதைநினைந்தமாத்திரத்தில்
முனந்தோற்றிய நல்லறிவினைப்போக்கிக் கோபமேலிட்டுவடவையைப்
போற்சீறிக் கந்தசுவாமியைப்பார்த்து யிதனைச்சொல்லுவதாயினன், இவ்வு
லகத்தில் மகாவிஷ்ணுவுக்கும் பிற்மதேவனுக்கும் வெள்ளையானைவாகன
னான இந்திரனுக்கும் மற்றதேவர்களுக்கும் எங்களுக்கும் பகையுண்
டல்லது சந்திரசடாதர மூர்த்தியாகிய சிவபிரானுக்கு நம்மிடத்தில் வி
ரோதங்கிடையாது அப்படிக்கிருக்க குமாரனே நீ வந்தகாரணமென்ன

மோ எனக்கொன்றுந்தோற்றவில்லை அதனைவிளாவிற் சொல்லவேண்டு
மெனக்கேட்டமுன்னிலையிற் குமாரசுவாமியார் தாருகன்மீதில் விழிகளை
ச்செலுத்தி ஓ அவுணராசனே நீ வினவியதற்குக் காரணமேதெனில் எம
துதந்தையானவர் ஆதியிற் றாம்படைத்திருக்கின்ற வேதங்களிற் குறித்
திருக்கின்றபடிக்குத் தர்மத்தினைபரிபாலனஞ் செய்வதாகத் திருவுளத்தி
லெண்ணிச் சர்வசீவதயாபரமூர்த்தியாதலால் மன்னுயிர்கள்செய்தநன்கு
தீங்குகளுக்குத்தகுதியாகிய வினைகளைப்பொசிப்பித்துப் பாதுகாத்துந்
தண்டித்தும் வருகின்றமுறையினால் எமதிறைவனாகிய பரமனானவர்உங்
கள்கிற்தியங்களைத் திருவுளத்தில்மதித்து வெகுகாலங்களாக நீங்கள்தேவ
ர்க்கெல்லாமதியாமற் றகாதபணிவிடைகளையிட்டு வருத்தியதன்றியில்அவர்
கள்பெண்டுபிள்ளைகளுடன் அரியசிறையில் வைத்திருக்கின்றதைக்குறித்
துஉங்கள்வீரபராக்கிரமங்களையும் செல்வச்செருக்கினையும் அழித்துத்
தினராகிய தேவர்க்கள் காவலைவிடுவித்து உலகங்களுக்கு சவுக்கியங்களை
ச்செய்து வருவதாக நம்மைச்செலுத்தினனொன்றுகூரியவேலாயுதத்தினை
த்திருக்கரத்திற் படைத்திருக்கின்ற குமாரதேவரானவர்கிருபைக்குப்பா
த்திரமாதலால் அவர்கள் பிழைக்கும்பொருட்டு யிவ்விதங்களாக விரித்
துக்காட்டியகாலத்தில் அவ்வனுக்கிரகத்தின் நன்கினைச்சற்றும்யோசியா
மற் சண்டைசெய்வதேமுக்கியமாக வெண்ணிய யானைமுகத்தினைப்பெ
ற்றதாருகனானவன் யிதனைப்பேசுவதாயினன், ஓ பாலனே நமது சவுரிய
பராக்கிரமங்களைச் சற்றுந்தெரியாதவனாதலால் யிப்படிக்குச்சொல்லுகி
ன்றனை, அவற்றுட்சிலதைக் கேழ்ப்பையாக — லட்சுமிதேவியை மார்பி
ல்வைத்திருக்கின்ற மகாவிஷ்ணுவானவன் ஒருகாலம் அழகியசிறகினைவா
ய்ந்த கெருடன்மீதில் ஆரோகணித்துவந்துஎன்னுடனெதத்துத்தன்னா
ற்கூடியவனாயிற் சண்டைகொடுத்துவெல்லக் கூடாமையாற் கடையில்
வானத்திற்செல்லுஞ் சூரியனையொப்பச்சொலித்திருக்கும் சக்கரத்தினை
பிறையோகித்தனன், அதுவும் அதிகமகிமைகளைக்காட்டி என்னருகில்வ
ந்தபோது சுலபமாகஅதனைப்பற்றி யிதோஎன்கழுத் தணியாகத்தரித்தி
ருக்கின்றதைநீ பார்த்ததில்லையோ- யிவையன்றியும் யிதுபரியந்தம்எங்
களுடன் பகைகொண்டு போராச்செய்யவந்தவர்கள் நிமைப்போதில்யி
றந்தும் முதுகுகாட்டியோடியும் போனதல்லது செயித்தவர்களொருவ
ருமில்லை அதைக்கேழ்விப்பட்டதில்லையோ யிதுவன்றியும் என்னுடன்ச
ண்டைசெய்து வெல்லும்படிக்கு முன்னணியிற் செலுத்திய சேனைகளை
வெற்றிகொண்டு அவர்களுக்குத் தலைவராகவந்த வீரனாக்கிரவுஞ்சப்பற்
வதத்திற்கிடத்தியதையும் பலகோடிபூதவீரரைச்சின்னபின்னப்படக்கொ
ன்றதையும் யிக்களத்தில் நீபார்த்ததில்லையோ- சதுர்வேதங்களைப் பூரா

மோகக்கற்று தவங்களிற்சிறந்திருக்கின்ற ததீசிமகாரிஷியின்பேரில்மகாவிஷ்ணுகோபித்தேவிய சக்கரப்படையானது என்றிரோகத்திற்பட்டமாத்திரத்தில் அதன்கூர்மழுங்கிக் குசவன்சக்கரத்தைப்போலக் கட்டையாய்ப்பிறையோசனப் படாமற்போனதை உனக்கொருவருஞ் சொன்னதில்லையோ இன்னமும் பற்பலசெயங்களைப் பெற்றிருக்கின்றனன், அதலாற்பாலனே யித்தகையவீரங்களைப் பெற்றிருக்கின்றஎன்னுடன்போர்செய்துவாடிவருந்த வேண்டாம் சூலபாணியாகிய சிவபிரானிடத்துக்குப் போய் பலசிறப்புகளையும் அனுபவித்துச் சுவுக்கியமாக யிருப்பையென்றுதாருகன்சொல்லி முடிந்தவுடன் வெற்றிமாலையினைத் தரித்திருக்கின்றகுமாரசுவாமியார் மறுமொழிபேசுவார், அவுணராசனே யிதனைக்கேட்டையாக — காளமேகவண்ணனான மகாவிஷ்ணுவினது செந்தாமரையையொத்த கரத்திற்படைத்த சக்கரத்தைப்போல படைகளுக்கரசாக நமது கரத்தில்நிற்கின்ற வெற்றிவேலானது பழிபடுமென்றிருக் கின்றனையோ உன்னரியபிராணனை நிமைப்போதில்வாங்கி வீரசொற்கத்திற் சேர்க்கவல்லது இதுவுமல்லாமல் யிதுபரியந்தமும் சகலபுவனங்களையும் வெற்றிகொண்டு பிறகாசித்திருந்த உங்கள் புசபெலபராக்கிறமமானது நாம்வந்தமாத்திரத்தில் உலகங்களைச்சூழ்ந்து வருத்தியிருந்தயிருளானது சூரியனதுஉதையத்தினைக் கண்டமாத்திரத்தில் அதப்பட்டுப் போவதைப்போலமங்கியடங்கியது மேலும்பற்பல காலங்களாகக்கற்றிருந்த மாய்கையின்பெருக்கினைக்காட்டி மயக்கியிருக்கின்றயிந்த்கிறவுஞ்சபற்வதத்தையும் வஞ்சகனாகிய உன்னையும் கூரியவேலாயுதத் தைக்கொண்டு பிளந்துகொன்று நமதுசேனைகளையும் அதிசீக்கிறமத்தில் வெளியிடவல்லேனென்று பாலசுப்பிறமணியக்கடவுள் பேசியதைக்கேட்டவுடன் தாருகனனவன் கோபமிகுதியினால் வடவையைப்போலச்சீறி மந்தரகிரியைப்போலதன் கையில்விளங்கும்பாரித்தவில்லைநாட்டி நாணேறிட்டுகுணத்தொனிசெய்தகாலத்தில்அவ்வதிற்சியினால்அந்த்ரவாசிகளும்மற்றையருந்திகிற்பட்டு மிசவும்வாடிமயங்கினர், இப்பிறகாரம்பலரும் வாடும்படிக்குத்தாருகனுனவன் தன்வலியைக்காட்டியபோதுசரவணப் பெருமாளுந்தமதுதிருக்கரத்தில்விளங்கியவில்லை நிறுத்தி நாரியைப்பிகிந்துஒருதிரம்டங்காரஒசையைக்காட்டியபோதுபெருத்தெழுந்த அதிற்சியினால்அண்டங்க ளனைத்தும்அதலகுதவப்பட்டு அவற்றுட்பட்டபிராணிகள் பொறிமயங்கித்திப்பிறமைகொண்டு நின்றநின்றயிடங்களிற்சோர்ந்ததுகள்— இவ்விதமாகக் குமாரதேவர் நாணொலியைக்காட்டியபோது வேதபாரகனானபிற்மதேவன்முதலாகியபிறதமதேவதைகளும் அச்சங்கொண்டுவருந்தினர், இக்காரணங்களைத்தெரிந்ததாருகனும் மெச்சிச்சிரக்கம்பஞ்செய்தவனாய்த் தன்

சாத்திற்பிடித்திருக்கின்ற வில்லென்னும் மேகமானது மழைத்தாவலைப் பெய்ததுபோல அதிகக்குரூரமாகவுங்கொடுமைகளையும்பெற்றிருக்கின்ற வயிரவாளிகளை அமோகமாகச்செலுத்தி ஆர்ப்பரித்தனன் அவைகள்வெளிப்பட்டவுடன்புகைந்தெரிந்து அனலைவீசி எங்கும்பரந்து அதிவேகமாக வரும்போது குமாரதேவருந்தமது காண்டீபத்தில் ஆயிரங்குரூரமாகிய சரங்களைப்பூட்டிப் பிறையோகித்துத் தாருகனேவிய பாணங்களின்விருப்பையடக்கி அதப்படுத்திபதைக்கண்ட அவுணராசன் வடவையைப் போலக்கோபித்துத் துரிதமாக ஆயிரந்திவ்விய பாணங்களை யெடுத்துப் பூட்டிச் சிவகுமாரன்மீதில் விடுத்தனன், அதுகள்வரும் மகிமைகளைக்கந்தசுவாமியார்தெரிந்து நூறு சுடுரமாகியவாளிகளைப்போக்கியெதிர்பாணங்களைக் கண்டதுண்டப்படுத்தி நகைமுகராயிருப்பதைத் தாருகன்தெரிந்தவுடன் நல்லகாரியம் யிந்தபாலன்செருக்கையிதோ நிமைப்போதில் அடக்குவேனெனத் துணிவுகொண்டு தான் அருமையாகத்தேடிவைத்திருக்கின்ற அதிகதீட்சண்ணியமுள்ள அளவற்றபாணங்களைத் தனுசிற்பூட்டி விடுவதற்கு உத்தேசிக்குமுன்னிலையிற் கந்தசுவாமியார் ஒருஅர்த்தசந்திரபாணத்தைத்தூண்டிப் பற்வதத்தைப்போல அவுணராசன் கரத்திற்பற்றியிருந்தவில்லை யிருதுணிவாகக்கண்டித் தெறிந்தனர், உடனேதாருகனவன் மற்றொருபாரித்தவில்லையெடுத்து வளைக்குமுன்னமேஎமதிறைவனாகிய சிவகுமாரன் தமதுகரத்திற்கொண்டிருக்கின்ற காண்டீபத்திற் கொடியபாணங்கள் ஆயிரவற்றைச் சகலருங்கொண்டாடத் தக்கதாகப் பூட்டிக்கொடுங்கோலை நடாத்துந் தாருகப்பாதகன்பேரில்பிறையோகித்த தருவாயில் வெற்றிமாலையணிந்திருக்கும் பாரித்தபுசங்களையும் நவரத்தினமயமாகிய கிரீடத்தினையும்பெற்றிருக்கின்ற அவுணராசனானவன் சத்திராதிகள் கொண்டாடவல்ல சாமாத்தியபரனாகிய பாலசுப்பிறமணியர் செய்கையினைப்பாத்து அதிசீக்கிரமத்தில் ஆயிரந்தீட்சண்ணியமாகிய கோல்களைச்செலுத்தித் தனக்குநேராகவெரிந்து புகைந்துகொண்டுவருகின்ற சரங்களைத்துகள்படக் கண்டித்ததுமன்றியிற் பாதகனாகியதாருகன்மேலும் அனந்தகோடிபாணங்களைத் தூண்டி ஆர்ப்பரித்த தருவாயிற் சர்வகாருண்ணியனாகியசிவகுமாரன் பற்பலபாணங்களைக்கொண்டுமீறிவருகின்றசரங்களை அதப்படுத்திமீளவும் அதிவேகமாய் சூரியகோடிகணைகளைவில்லிற்பூட்டிப் பிறையோகித்து மையைப்போலக்கறுத்த திரேகத்தினைப்பெற்றிருக்கின்ற அவுணவீரராற்புகழ்ந்து போற்றவல்லபெருமையினைப்படைத்ததாருகன் யானைவடிவைப்பெற்றிருப்பதை வெளிப்படையாகக்காட்டுமாறுபோல அவன்திரேகத்திலிராநின்றமயிற்கால்கடோறுந்தைக்கும்படிசெய்தனர், இவ்விதமாகக்கொடியபாணங்கள் ரோமங்க

ளைப்போலத் திரோகமெங்கும் பதிந்துவருத்துகின்றகாலத்திற் சண்டாள
னாகிய அவுணராசன் வடவையைப்போலச்சீறி அதிவேகமாயிரண்டுகோ
டிகோடியபாணங்களைக் கந்தசுவாமிபேரிற்செலுத்திச் சிங்கனாதஞ்செ
ய்தனன், அவற்றின்வேகத்தை எமதிறைவன்கண்டு சிறுநகைகொண்டு அ
த்தொகைசரங்களைப்பிரயோகித்துமேல்வருவதைத்துகள்கண்டதுமல்
லாமல்வெற்றிமாலைபுரளும்புசங்களையுடைய தாருகன்முகத்திற்றொங்கி
யிராநின்றதுதிக்கையினையும் யிரண்டுதந்தங்களையுங்கண்டித்துத்தள்ளு
ம்படிக்குயிரண்டு வீரவாளிகளைத் தொடுத்துவிட்டபோது அப்படைகள்
குறுகுறென்னும்ஓசையுடன் அதிகமகிமைகளைக்காட்டிவந்து மாயைபுத்
திரனானதாருகனைநெருங்கிப் பனையைப்போல அசைந்திருக்கின்றதுதிக்
கையினையும் மூன்றாம்பிறைக்கொப்பாக வளைந்திருந்த தந்தங்களையுங்
கண்டித்து நிலத்திற்றள்ளியது அக்காலத்தில் உதிரமானது பெருக்கெடு
த்தோடுவதினால் அதிகவருத்தமும் பலயீனமும் நேர்ந்தபோதினும் ரவு
த்திராகாரமாக மண்டியெரிந்து ஆயிரங்கோடியபாணங்களைப் பொறு
க்கியெடுத்து வில்லிற்பூட்டி அதிவேகமாய்ச் செலுத்தியபோது அவைக
ளிரைந்துபுகைந்துவந்து கந்தசுவாமியார் தேரின்முகப்பிற்படபடெ
னஅசைந்திருக்கின்ற வெற்றிக்கொடியை வெட்டித்தள்ளியது. தமதுவி
ருதுக்கொடி அற்றதைக்கந்தசுவாமியார்கண்டவுடன் சற்றுகோபங்கொ
ண்டுவஞ்சகமே குடிகொண்டிருக்குந் தாருகப்பாதகன் கரத்திற் பற்றி
யிருந்தவில்லை எட்டுபாணங்களினாற்பிளந்து மேலும் ஆயிரம்பாணங்
களைப்போக்கி அவுணராசன் யேறிவந்த நவரத்தினமயமாகிய தேரைப்
பொடிபடுத்திச் சாரதியைக்கண்ட துண்டமாக்கிப் புரவிகளைச்சின்னபின்
னப்படவாட்டியகாலத்திற் தாருகனானவன் மாற்சல்லியத்தைவிடாமற் சி
ங்கராசனைப்போலப் பக்கத்தில்நிற்கின்ற சேமத்தேரிற்பாய்ந்து மண்
டிபோட்டு உளுக்கார்ந்து மற்றொருவலியவில்லையெடுத்து நாரியைமிகித்
துகுணத்தொனிகாட்டி கரவேகமாய் ஆயிரந்தீமுகப் பாணங்களைத்தொ
டுத்து தமக்கொப்புவமையின்றிவிளங்கும் பரமசிவத்தினது வடிவாகஅ
வதரித்திருக்கின்ற கந்தசுவாமியார் எழுந்தருளியிருக்கின்ற தேரைச்செ
லுத்தும்சாரதியாகியவாயுதேவன்புசங்களுக்குக் குறியாத்துப்பிரயோ
கித்தான், அதுகள்எரிந்துபுகைந்துவந்துதாக்கி யிருபுசங்களையுந்துளைத்
துக்கொண்டு புறம்பிற்போயின தறுவாயில் உதிரமானதுபெருக மிகவு
ம்வருந்தினன், இப்படிக்குச்செயசாலிகளாகிய வீராரம்புசழப்பெற்ற கு
மாரதேவர் தேரை நடத்தஒட்டாமற் பாகனைக்காயப்படுத்தியதைச்சிவகு
மாரன்தெரிந்து அதிசீக்கிரமத்திற் றமதுவில்லில் ஆயிரங்குறாமாகிய
பாணங்களைப்பூட்டி யானைமுகத்தினைப்பெற்ற தாருகன்நெற்றியிற்பட்

நெருவும்படியாகப் பிறையோகித்தபோது அவைகள் கிடுகிடுத்ததொனிக ளுடன்வந்து வீரபட்டமணிந்திருக்கும் நுதலிற்பட்டு உருவிப்போன தருவாயில் அவ்வருத்தத்துக்குச் சகிக்கப்படாமையாற் புலம்பிச்சோர்ந் துஅடியற்றபனையைப்போல நவரத்தினமயமாகிய தேரின்மீதுவிழுந் துழற்சித்தனன், இப்படிக்குவிழுந்தபோது உதிரமானதுபெருக்கெடு த்தோடிப் பூமியிற்பரந்ததெப்படிக்குத்தோற்றியதெனில்வடவாமுகா க்கினியானது கடலிற்பட்டகாலத்தில் அக்கொழுந்தானது அஷ்டதிசை களிற் காவல்கொண்டிருக்கும் களிற்றினமத்தகத்திற் பாய்ந்ததைப்போ லக்காட்டியது யிப்படிக்கு ராசாதிராசன் மயங்கிவிழுந்ததை அவன்சே னைவீரர்கள்கண்டவுடன் கிலேசித்து உடனேஅதிககோபம் பிறவேசித்த படியால் சண்டைகொடுக்க யெத்தனித்தவர்களாய்ச் சிவபிரான் அக்கினி விழியின்மூலமாக உற்பவித்தசரவணபவனைச் சூழ்ந்துகொண்டு சூலாயு தம் சக்கிராயுதம் தோமரம் பிண்டிபாலம் கப்பணம் வேலாயுதம் எழு வாயுதம் தண்டாயுதம் வச்சிராயுதம் பாணவிதங்கள் முதலாக நாற்றிசை யிலும் நெருங்கிப்பிறையோகித்தனர் இவ்விதமாக சறுத்ததிரோகத்தினை ப்பெற்ற அவுணவீரர்கள்செய்யுஞ் சேவகங்களைச் சிவகுமாரன்பாத்து தன்காண்டீபத்தை நிறுத்திவளைத்து அமோகமாகச் சரங்களைச்சொனை மாரியைப்போலச்செலுத்திச் சூரியன்முன்பட்ட பனியைப்போல அவு ணப்படைகள் யேவியபாணங்களையும் அவர்கள்சேவகங்களையும் அடக் கிமேலும் அதிகஉக்கிரமுடைய சரங்களைமிகுதியாகப்போக்கிக் கபடம னதைப்பெற்ற அவுணவீரர் சிரங்களைக்கண்டித்தும் மார்பைபிளந்தும் கொடியசொற்களைப் பேசும்வாயைக்கிழித்தும் கரங்களைக்கண்டித்தும் புசங்களைச்சரித்தும் கால்களைவெட்டியும் யிப்படிக்குக் கண்டதுண்டப் படுத்தியபோது உதிரமானது பெருக்கெடுத்து சமுத்திரத்தைப்போல யிளைத்தஓடியது யிவ்வாறுவீரர்களாற்றுதிக்கவல்ல செயசாலியாகிய சர வணபவன் விடுக்கும் பாணங்களின் கொடுமையினால் வஞ்சகமே குடி கொண்டிருக்கும் மனதைப்பெற்ற அவுணச்சேனைகளிற் பல்லாயிரகோ டியர் சின்னபின்னப்பட்டு மாண்டுபோக மீந்தவிவர் ரத்தப்பிறவாகத்தி ல்விழுந்துமாண்டும் நீந்திப்போய்த் தங்கள் பிராணனைத் தப்பித்துக் கொண்டு பலதிசையினும் ஓடிஒளித்தனர், அத்தருவாயிற் காளமேகமா னது சிவந்தகாட்டுமாறுபோலத் திரேகமெங்கனும் ரத்தமானதுதோய் ந்து காட்டக்களைத்து விழுந்திருந்த தாருகனனவன்பிறக்கினையுண்டாய் மெல்லவெழுந்து சுற்றுமுற்றும்பாத்துச் சமுத்திரத்தைப்போல ஆர்ப் பரித்துச் சூழ்ந்திருந்த தன்சேனைவீரரில் ஒருவனாயாவது காணுதவனாய் அதிகதுக்கசாகரத்திலழுந்தி நகைத்துத் தன்சேனைகள்பட்டகேட்டையும்

தனக்குநேர்ந்த அவமானத்தையும் எண்ணியெண்ணி யிதனைப்பேசிச் சொல்லுவான் செக்கரஞ்சடைமுடியையுடைய சிவபிரான்பெற்ற சிறுபிள்ளையானவனொருவன் சண்டைகொடுக்க அதனைக்காக்கவகையில்லாமற் றுதிக்கையினையுந் தந்தங்களையும் போக்கி வாடுகின்றனன், மேலும் சொரணையற்றுப் பிரேதத்தைப்போலக்களைத்து விழுந்தேன் பெரும்புறக்கடலைப்போல என்னைச்சூழ்ந்துவந்தரதகெசதுரகபதாதிகளையும்பறிகொடுத்ததுமன்றியிற்சூரராகிய சேனைத்தலைவரையும் விவேகசாலிகளாகியமந்திரி பிரதானிகளையும்போக்கி யிக்காலத்திற் றனிமையாசுயாதொருசகாயங்களுமின்றி இரோகவுபாதியினால் மிகவும் வருந்திவாடுகின்றனன் வெகுகாலமாகப் பலரையும் வெற்றிகொண்டு அரசுசெலுத்திவந்த என்னுண்மைத்திறம் வெகுநேத்தியாகவிருக்கின்றது யின்னமும்நமதுவிற்றிறத்தினால் அரியபாணங்களைத் தயிரியங்கொண்டு செலுத்துவேனாயினும் பகைவனதுபிராணனை வாங்குவதும் அல்லது வெல்வதும் மிகவும் அரிது ஆதலால் வீண்யோசனை செய்வதிற்பிறையோசனமில்லை- யினிநாம் அரிதாகத்தேடிவைத்திருக்கின்ற தேவாஸ்திரங்களைச்செலுத்தி யிப்பாலன் ஆணவத்தையடக்கி வீறியிருக்கின்ற பூதசேனைகளையும் சாம்பலாக்க வேண்டுமெனத் தீர்மானித்துச் சுத்தவீரர்களாற் கொண்டாடவல்ல சவுரியபராக்கிரமசாலியாகிய தாருகாசூரனனவன் யிதனைச்செய்வதாயினன், முன்னஞ்சிவகுமாரனாற் றுண்டாட்டமானபங்கத்தினை நினைந்துநினைந்து அதிககோபங்கொண்டு மண்டிபோட்டு உளுக்காந்து மந்தரகிரியைப் போலப் பாரித்திராநின்ற வில்லையெடுத்து வட்டாகாரமாகவளைத்துக்கரத்திற்பற்றிப் பாதகனாகியதாருகன் அரியதவங்களைச்செய்த மகிமையினாற்பெற்றுப் பிராணபதமாக வைத்திருந்த நாராயணாஸ்திரத்தையெடுத்துப்பூசித்துப் பிறையோகித்தும் பின்பு பிரமாஸ்திரத்தையும் மற்றதேவர்படைகளையுந்தொழுது ஒன்றின்பின்னொன்றினைச் செலுத்தியபோது அவைகள்வெளிப்பட்டவுடன் அதிசமகிமைகளைக்காட்டிக்கொண்டுபோய் ஒப்பற்றமுதல்வனாகிய பாலசுப்பிரமணியதேவருக்குச்சமீபித்தகாலத்திற்றமதுவலிகுன்றிப்பயந்து எதிரிலும்நில்லாமல்வணங்கிப்பக்கங்களிற் போற்றியிருந்தது, இப்படிக்கு மகாவிஷ்ணு பிரமதேவன் மற்றதேவர் படைகளனைத்தும் அதிகவெற்றியும் வேகமும்பெற்றுப் போனவைஅனைத்தும்வேலாயுதமூர்த்தியைக்கண்டவுடன் நடுநடுங்கிவழிபட்டுச்சூழ்ந்திருப்பதை அவுணருக்கரசனாகிய தாருகன்கண்டவுடன் சிவகுமாரன்மகிமையையுஞ் சேவகத்திறத்தையும் மதித்து அதுபரியந்தம் வீறியிருந்த ஆணவமலத்தைப்போக்கி நிமைப்போதுமனதில்பயங்கொண்டுமிகவும் அதிசெயித்திருந்தவன் பிறார்த்தனையின்படிக்கு தனக்கடுத்ததுன்பஞ்

கனைநினைந்து மானமானதுபாதிக்க விழிகளிற் நீயெழக்கோபித்து யித்
னைஎன்னுவான் வெகுகாலமாகப் பெற்றிருந்த செயங்களையும் வீரத்
ன்மைகளையும்போக்குநாள்வந்து சம்பவித்திருக்கின்றது அதற்குத்திஷ்
டாந்திரம் யிந்தசிறுபிள்ளையை வெல்வது அரிதாக விருக்கின்றது யினி
யென்செய்வோமென்று சற்றுநேரம்யோசித்து முன்னம்நாம் அரியத
வங்களைச் செய்ததற்காகவிரங்கி யிடப்பாகத்திற் பார்பதியாரை வைத்தி
ருக்கின்ற சிவபிரான் அனுக்கிறகித்திருக்கின்ற பாசுபதாஸ்திரத்தை யினி
பிறையோகித்து யிப்பாலன் புயவன்மையை அடக்குவேனெனத்தீர்மா
னித்தவனாய் அந்தசிறந்தபாணத்தினையெடுத்து மனப்பூர்வகமாக தூப
தீபமுதலிய உபசாரங்களினால் அருச்சித்து அதிககோபங்கொண்டுநீண்
டதன்வில்லிற்பூட்டி அதற்குரியமந்திரத்தை உச்சரித்துத்தோள்புரளஆ
காணுந்தபரியந்தமிழுத்துப் பிறையோகித்து ஆர்ப்பரித்தகாலத்தில்அந்
தஒப்பற்றபாசுபதமானது வெளிப்பட்டவுடன் பக்குபக்குமென்றெரி
ந்து ஆலகாலவிஷத்தைபபெருக்கிதேவாஸ்திரவிதங்களை அபரிமிதமாகப்
படைத்து அளவிறந்தபூதகோடிகளை சிருஷ்டித்து அவர்களுக்கு வேண்டி
ய அஸ்திரசஸ்திரங்களையும் உண்டுபண்ணிக்கொடுத்து அளவற்றசூலங்க
ளையும் அனல்சமோகங்களையும் மற்றுமிரானின்றகொடுமைகளனைத்தை
யும் படைத்துக்கொண்டு பிரசண்டமாருதமும் ஆலகாலவிஷமும்அஞ்ச
த்தக்கதாக ஆரவாரங்களைச்செய்துபோயது, இவ்விதமாகச்சந்திரசடாதர
மூர்த்தியாகிய சிவபிரான் திருநாமம்பெற்றிருக்கின்ற படைகளுக்கரசா
னது அளவிறந்த சீவகோடிகளுக்கும் அண்டாண்டபுவனங்களுக்கும் அ
திவுற்பாதங்களைக்காட்டி உருத்து அதிவேகமாய்ச் சீறிவருவதைப்பிற
காசம்பொருந்திய அலகினைப்பெற்ற வெற்றிவேலாயுதத்தினைத் திருக்கர
த்திற்படைத்தருளிய எமதிறைவனாகிய பாலசுப்பிறமணியதேவர்கண்டு
அப்படையின்மகிமைகளை நிதானித்தவராய் தமதுபிதாவாகிய ஒப்பற்ற
பரமனை மனதிற்றியானித்துப்போற்றிச் சிவகுமாரன் தமது திருக்கரத்
தைநீட்டி உற்பாதங்களைக்காட்டிவந்த பாசுபதத்தைக் கொடுத்தவன்வா
ங்குமாறுபோலச்சுலபமாகப்பற்றினன். இப்பிறகாரம் நுதல்விழியைப்
படைத்தசிவகுமாரன் எத்திபபடையினைமற்ற ஆயுதங்களுடன்சேர்த்து
த்திருநகைகொண்டிருப்பதைச் செயசாலியாகிய தாருகாசூரன்கண்டவு
டன் திகைத்துமதிமயங்கி வாடினவனாய் நமதுவீரமும் செல்வப்பெரு
க்கும் யினிவிற்றியடையாமல் யித்தினமுதல் மங்கிப்போகும் காலமும்
நேர்ந்ததே- என்செய்வோமென்று மிகவுங்கிலேசித்து யிதனை நினைப்
பதாயினன். நாங்கள்செய்த அரியதவத்துக்கிரங்கிச் சிவபிரான்கடாட்சி
த்திருந்த சிறந்தபாசுபதாஸ்திரத்தையும் பிறையோகித்தேன் அதனையும்

எளிதாகக்கரத்திற் பற்றிக்கொண்டான் ஆதலாற் சண்முகங்களைப்பெற்றயிந்ததேவன் பெருமிதங்களையும் வீரபராக்கிரமத் தன்மைகளையும் எத்தகையருக்கும்நினைந்து துதிக்கப்படுவதோ ஆகிலுஞ் சூரபதுமனுக்குத்தம்பியாய்ப் பலவாயும்வெற்றி கொண்டுயிதுவரையிற் சகலருந்துதிக்கவாழ்ந்த நான்பின்னிடைவேனாகில் யினிஎன்னையாவர்தான்மதிப்பார்கள் ஆதலாற்சிவகுமாரன் தனுர்விஞ்சையிற்சொல்லநின்ற நீதியாகியசண்டையல்லது தீங்காகிய வஞ்சகப்போரைச் செய்யவறியான் யிக்காரணத்தினால் யினிமேல்மாயவித்தைகளைக்காட்டி மறைவிடமாகவிருந்துதிகைக்கும்படிக்குப்போரைச் செய்துவென்று செயசாலியாகத் திரும்பக்கடவேனென்று ஒருகுருட்டுஆலோசனையைஎண்ணி முடித்துக்கொண்டானன், இப்படிக்கு வஞ்சகனாகியதாருகன்மனதில் உறுதியாகத்தீர்மானித்தவனாய்த் தன்தேரை அதிசீக்கிரமத்திற் கிறவுஞ்சபர்வதத்தினருகிற் செலுத்தி ஓ துணைவனேயிதுநல்லதருணமாதலால் உன்னாற்கூடியமாய்கைப்பெருக்கினைக்காட்டி எனக்குவெற்றி கிடைக்கும்படியாய் பாலசுப்பிறமணியனை பிறுமிக்கச்செய்து உதவக்கடவையென்று கூவிச்சொல்லியபோது அதைக்கேட்டமாத்திரத்திற் கிறவுஞ்சன் தான்அதுபரியந்தங்கற்றிருக்கின்ற மாயையின்பெருக்கினைப் பரப்பிச் சிவகுமாரனைவஞ்சிப்பதாகவெண்ணிச் சிலமந்திரங்களைச் செபித்துப் பூர்வத்திற் சிவபிரான்நெற்றிவிழிக்கனலினாற் சாம்பலாய்அழிந்த திரிபுரங்களைப்போல வடிவுகொண்டுதிரியும்போது புசபெலபராக்கிரமசாலியாகிய தாருகாசுரனவன் அப்புரங்களில் வாசஞ்செய்திருந்த ராட்சதரைப்போலப் பற்பலஉருக்களைக்கொண்டுநின்று அமோகமாகப் பாணங்களைப்பொழிந்துவரவும் கிறவுஞ்சபர்வதம் மற்றொருமாயைவித்தையினால் ஊழிகாலத்தெழும்மேகங்களின் வடிவுகொண்டு எங்குமிருள்மூடப் பிரந்தகாலத்தில்ஒப்பற்றசூரனுக்கிளவலாகிய தாருகனானவன் அவற்றுட்கலந்துவிழிகள்பிறமிக்கமின்னியும் பூமிமுதலாக அதிர்ந்து வாடத்தக்கதாக யிடியின்முழக்கங்களைக்காட்டவும் கிறவுஞ்சன் பெரும்புறக்கடலாகிய சாகரங்களையொப்ப அலைகளைமோதிப் பெருகியகாலத்தில் வெற்றிமிகுத்தஅவுணராசனும் சர்வசங்காரகாலத்தில் உலகங்களை அழிக்கவெழும் வடவாமுகாக்கினியின் கொடுமைகளைக் காட்டித்திரியவும் பாதகனான கிறவுஞ்சன் சக்கிரவாள பர்வதத்தைச்சூழவிருக்கின்ற காடாந்தகாரமாகியயிருளின்படிவத்தினைத்தரித்து யாவருக்கும் விழிகளினொளிதோற்றாதுமுடியதருணத்தில் யானைமுகத்தினைப் பெற்றிருக்கின்றதாருகன் பற்பலகோடிபூதகணங்களின்வடிவுகொண்டு ஆர்ப்பரித்துப் பலபடைகளைவீசித்திரியவும் கிறவுஞ்சன் யிந்திரன்முதலாகிய திக்குப்பாலகர் வாசஞ்செய்கின்,

நபதவிகளினிருக்கின்ற திக்செசங்களின் வடிவுகொண்டு துதிக்கைகளில் யிருப்புலக்கைகளைப்பற்றிச் சுழற்றிவிட்டு உலவுமுன்னிலையிற் றாருகனும் எண்டிக்கில்நிற்கின்ற அஷ்டகுலாசலங்களின் கோலங்கொண்டுசடசடத்தபேரொலியைக்காட்டி அசைந்துபோகவும்- கிறவுஞ்சன் பிரசண்டமாருதத்தைப்போல ஓ வென்னுமிரச்சலிட்டுப் பெருகியபோதுமதயானைவடிவைப்பெற்றதாருகன் அக்கினிவுருக்கொண்டுதகித்துலவவும் உடனே அவ்வரையானது அவ்வுருவைமாற்றி அனற்பொறிகளையிறைக்குங் கொள்ளிகளாகி வானகமெங்கும் நிறைந்தகாலத்தில் தர்மமென்பது எவ்வளவும் விளங்காதகொடியமனதைப்பெற்ற தாருகனும் ஆயிரகோடி சூரியரைப்போலத்தோன்றிச் சகிக்கப்படாதவெப்பத்தைக்காட்டி விண்ணகத்திற்றிரியவும் யிவ்விதங்களாகத் தங்கள் நிசரூபத்தை எவ்வளவுங்காட்டாமல் மாற்றித்தாங்கள் கொள்ளுகின்றகோலத்துக்குத் தகுதியாகிய நடைகளைக்காட்டித் தாருகாசூரனும் கிறவுஞ்சபர்வதமும்கோபித்து அளவிறந்தமாயப்படிவத்தைக்கொண்டு எவ்விடங்களினும் நெருங்கிஅதிகஉபத்திரங்களைக்காட்டி மன்னுயிரைவருத்தித் திரியும்போது எமதிறைவனாகிய சிவசுப்பிரமணியதேவர் அவ்விளையாடல்களைக்கண்டு மோகனவித்தையைக்கொண்டு விண்வாதுகொடுக்கின்ற யிவன்பிராணனைவாட்டி அதப்படுத்தவேண்டுமென்று மனதில்நிச்சயித்தவராய்த் தமதுதிருக்கரத்திற்கோடிசூரியப்பிரகாசமாகச் சொலித்திருக்கின்றவெற்றிவேலாயுதத்தைப்பார்த்துயிவ்விதமாகச்சிலவாக்கியங்களைச்சொல்லுவதாயினர் படைகளுக்கரசேயிதனைக்கேழ்ப்பையாகத்தாருகாசூரனென்னும்பெயரையுடையவனையும் மாய்கைகளிற்சிறந்தகிறவுஞ்சபர்வதத்தினையும் ஒருகணப்போதுசழிவதன்முன்னம் உடலையிருகூறாகப்பிளந்து தள்ளிப்பிராணனை உண்டபின்புவெளிப்பட்டுஅவ்வரையின்வஞ்சகத்தில் அகப்பட்டுமயங்கியிருக்கின்றவீரவாகுதேவன்முதலாகிய நவவீரரையும் இலக்கரையும்பூதவீரரையும் மீட்டுக்கொண்டு அதிசீக்கிரமத்தில் யிவ்விடம்வரக்கடவையெனக்கட்டளையிட்டு வேலாயுதத்தினைப்பிரயோகித்தனர், இப்படிச்சுப்பிரமணியதேவர் யோகித்துத்தூண்டிய ஒப்பற்றவேற்படையானது வெளிப்பட்டவுடன் அளவற்றமகிமைகளைக்காட்டித் துரிதமாகப்போய் வஞ்சகப்போரைச்செய்திருக்கின்ற தாருகனுங் கிறவுஞ்சகிரியும் நடத்திவருகின்ற மாய்கையின்பெருக்கனைத்தினையும் ஊழிகாலத்திற் பரமன் நுதல்விழித்தீயிற்பட்டு அவன்மாயாவினோதங்களினால் விளங்கிய உலகங்களும்அவற்றுட்பட்டு பிரார்த்தவினையின் சம்பந்தத்தினால் மயங்கிபிறந்தும்பிறந்தும்அலைகின்றபிராணிகளும் சாம்பலாய் மங்குவதைப்போல நிமைப்போதில் அதப்படுத்தித்தேவர்கள் போற்றிவாழ்த்த மேவிட்டுஅடி

யவர்களுக்கு முத்தியைத்தரவல்ல திருவடிகளைப்பெற்ற பாலசுப்பிரமணியர் சண்முகங்களினும் விளங்கிய விழிகளினெழுந்தகோபக்கனலானது ஏகமாய்ப்பெருகியதைப்போலவும் பர்வதங்களுக்கிணையாகப்பாரித்தசதுர்ப்புசங்களைப்பெற்ற சிவனுதன்கரத்தில் விளங்கும் முத்தலைச்சூலமானது விடுபட்டுஅத்தியுடன் கலந்தொன்றாய்வருவதைநிகர்த்தும் அவ்வெற்றிவேலானதுபாய்ந்து மாயாசமுத்திரங்களைவரளவுண்டு சமீபத்தில்வருவதை மூன்றாம்பிறையையொப்ப விளங்குங் கோரதந்தத்தையும் பகுவாயையும்பெற்ற தாருகாசூரனானவன்கண்டு யிதைப்பற்றிச் சுள்ளியைப்போல முறித்தெறிகின்றனனென வீரங்களைப்பேசிக்கொண்டு ஆக்கிறகித்துத் தாண்டிப்பாய்ந்து சற்றும்பயமற்றவனாய்ப் பட்சிகளுக்கரசாகிய கருடன்மீதிற் செல்லுஞ்சர்ப்பத்தைப் போலக்கொதித்து எதிர்ந்தபோது வயிரமலையின்பேரில் கோடையிடிவிழுந்ததைப்போலக்கடப்பமாலைதரித்தபுயாசலங்களைப்பெற்ற சிவகுமாரன்செலுத்திய வேலானது விசாலமாய் வயிரத்தினும்வலியுடைய தாருகன்மார்பினிடத்திற் றாக்கிப் பிளந்து தடாரித்துருவிவெளிப்பட்டு மாய்கைக்கிருப்பிடமாகவிருந்த கிறவுஞ்சபர்வதத்தினைக்கிட்டி யிருகூறாகக்கண்டித்துத்தள்ளி அப்படையின்வீரபராக்கிரமமும் புகழும்விளங்குவதுபோல அவ்விருவர்பட்டகாலத்தெழுந்த உதிரத்திற்றோய்ந்து தூளிபடலத்திற் றிமிர்ந்துவேகமாகப்போய்க் கிறவுஞ்சத்தின்குகையில் நித்திரைசெய்திருந்த வீரவாகுதேவர்முதலிய செயசாலிகளைநெருங்கி அவர்கள் கொண்டிருந்தமையலைப் போக்கி எழுப்பினதாய்க் காற்றினுங்கடுகி வானவெல்லையைக்கடந்துஆகாயகெங்கையில்முழுகிப் பவுத்திரமாய்த்திரும்பி எமதையனாகியசிவகுமாரன்பிறையோகித்த திருக்கரத்தில் எதாப்பிரகாரம் நின்றுவிளங்கியது சவுனகாதிரிஷிகளே- வெற்றிவேலானது விவியினுக்கொப்பற்ற அவுணராசனையும் மாய்கையிற்சிறந்த கிறவுஞ்சத்தையும் பிளந்துகொன்றகாலத்திற் புராணிகர்பேசிய உவமானங்களையும் உலகினர், வழங்கிக்கொண்டதையுங்கேட்பீராக- கொடியவர்களுக்குத் தகுதியாகிய தண்டனைகளைச்செய்யவல்ல கூரியவெற்படையானது தாருகன்மார்பையும் பூர்வீசமாகத் தவத்தர்முதலிய பெரியோர்களைவஞ்சித் தலைத்திருந்த கிறவுஞ்சபற்வதத்தையுங் கண்டித்த காலத்தெழுந்த பேரொலியானது சகலபுவனங்களினுமிரா நின்றவர்கள் செவிகளிற்பட்டபோது திகிற்பட்டுத் திரோகம்நடுக்குற்றுக் கூட்டங்கூட்டமாகச்சேர்ந்து யிதுவென்ன உற்பாதமாகவிருக்கின்றது எக்காலத்திலுமில்லாத யிந்தசத்தமெழுவதற்குக் காரணமென்னோவென்று ஐயப்பட்டுவாடினவர்களாய்ப் பூமிபிளந்ததோவெனச் சிலர்சொல்லவும் பொன்மயமாகிய மேருகிரிவெடித்ததோவெனச் சிலர்

பேசவும் அண்டகோளகை நெக்குவிட்டதோவெனப் பலர்குறிக்கவும் உண்மையாகிய விளைவைத்தெரியாமல் யிப்படிக்குப் பேசிக்கொண்டனர், இவைநிற்க அதிக கூர்மைபெற்றிருக்கின்ற வேலானது மார்பிற்பட்டுப்பிளந்துருவிப்போகியகாலத்திற் பாரித்தகிரோகத்தைப்பெற்ற தாருகனானவன் அனந்தகோடி யிடிக்கூட்டங்கள் ஒருகாலத்திற் பெருத்தெழுமாறுபோல ஓவென்றிரைந்து உம்மெனத்துள்ளியெழுந்து பூமியில்விழுந்து பதைபதைத்துப் புரண்டு பிராணனைவிட்டனன், பற்வதாகிருதியாகியமார்பில் வெல்பாயத்தாருகன் நிலத்தில்விழுந்து பிராணன்போகுமுன்னிலையில் அவனுடலமானது சமோவெனவானத்திற்றுள்ளியெழுந்து கடலுடைந்துபெருகுவதைப்போல ஆர்ப்பரித்தகாலத்தில் நட்சத்திரராசிகளானதுகலங்கி நிலைதப்பிப் பலபலவென உதிர்ந்தும் சூரியனானவன் மனங்கலங்கி பயபீதியினால்தன்கதியைமறந்துஓட்டமெடுக்கவும் எத்தகையருக்கும் பின்னிடையாமற் போராடவல்ல தாருகன்பிளக்கப்பட்டுவானத்தெழுந்து மறிந்துவிழுந்தகாலத்திற் பூமியானது பத்தல்பத்தலாகப்பிளந்தும் சத்தபாதலஅடுக்குகளழிந்து பின்னப்பட்டும் சத்தகுலாசலங்கள்முதலிய சிறந்தமலைகள் நுறுங்கியிறைந்தும் அண்டப்பித்திகைகலகலெனவதிர்ந்தும் திசைகளைத்தாங்கி நின்றயானைகள் மனநடுக்குற்றுத் தங்களிருப்பிடங்களையும் விட்டுப்பறக்கவும் யிவையன்றியிற்சிவகாருண்ணியமாகிய பூததயவுபச்சியாத் தாபமென்பதுஎவ்வளவுங்கிடையாததாருகன் மேலெழுந்து வானவனாயிற்போய் மீட்டும் மண்ணகத்தில்விழுந்தது எப்படிக்குக்காட்டியதெனில், பூற்வத்தில் இந்திரன்வச்சிராயுதத்தினாற் சிறகுகளறுபட்டகாலத்திற் பாரித்திராநின்ற மகம்மேருவானது பழையபடிக்குப் பறக்கலாகுமோவெனச்சோதனைபார்க்கும்பொருட்டு விண்ணிடையெழுந்து கூடாமையால் தொப்பெனப்பூமியில் விழுந்ததைப்போலவிருந்தது, மேலும் வெற்றிமாலை தரித்திருக்கின்ற சூரியவேலானது கிறவுஞ்சபற்வதத்தைச் சின்னபின்னப்படப் பிளந்தபோது அதப்பட்டெழுந்த அளிபடலமும் அனற்பொறிகளும் எவ்விடங்களிலுஞ்சிதற அதனிடத்திற்பெருகிய புகைப்படலமுங்கலந்து அண்டவெல்லைமுற்றும் அடர்ந்தகாரணத்தினால் எக்காலத்தும்பெருக்கருதவானகங்கை கொதிப்பெடுத்து வறளவும் சத்தசாகரங்களும் சுவறவுமாயிற்று மேலும் சிவகுமாரன்வேலானது அவ்வரையைக்கண்டித்த முன்னிலையிற்பெருகிய நிணதிப்படலமெனப் பேசலாகுமோ தெரிந்தவர்கள் யோசிக்குமிடத்தில் அவ்வரையானது அவுணனுதலாத் திரேகம்பிளப்புண்டகாலத்திற் பெருத்தெழுந்த உதிரமாகநினைக்கப்படும், இஃதன்றியும் அப்பொறிகளின்விளை வெப்படிக்கிருந்ததெனில் யாமிருந்தபற்வ

திக்ஷைதக் கண்டித்தனராதலால் யிந்தவேலாயுதக்கடவுள் ஆதியில்வாசமா
யிருந்தகங்கையை வாட்டுவோமெனச்சீறிவந்ததுபோலச் சத்திராதிகள்
நிணங்களிற் பழகியவேலானது கிரவுஞ்சனைப்பிளந்தமுன் னிலையிலோங்
கிய பொறிகளின் வெப்பத்தினால் வானத்திற்பெருகும் கங்கையும்வறள
ப்பட்டது மேலும் அப்பொறிகளுடன் துகளானதும் பொள்ளெனவெ
ழுந்த ஓசையுடன்கலந்துபெருகுவது எப்படிக்குக் காட்டியதெனிற்சத்
தசாகரங்களும் அவர்றினிடத்தடங்கிய வடவாமுகாக்கினியும் ஊழிகால
த்தில்உலகங்களை அழிக்கவெழுந்ததைப்போன்று மிருந்தது யிதுவல்லா
மல்யானைமுகத்தினைப்பெற்ற தாருகன்மார்பிற்குமிளியிட்டெழும் உதி
ரமானது பெருக்கெடுத்து அலைகளைவீசிப்பாய்ந்து வெற்றிவேல் கிரவு
ஞ்சபற்வதத்தைத் துளைத்துப்போகிய மாற்கமாகவோடி திசைகளைமோ
திச்சுருட்டும் கடலினிடத்திற்பாய்ந்து கருநீரைச்செந்நீராக்கியது, இ
ப்படிக்கொத்த ரணக்களச்சிங்காரங்கள் பெருந்திருக்கின்ற தறுவாயில்
வேலாயுதக்கடவுள்விடுத்த சத்திவேல்சீறிப்போய் அதிசீக்கிரமத்தில்மீண்
டுபழையபடிக்குக் குமாரசுவாமியார் கரத்தில்நின்றதையும் கொடியபா
தகனானதாருகன்பட்டதையும் கிரவுஞ்சவரையானது அழிந்தகாரணங்க
ளையும் அவுணவீரர் நால்வகைச்சேனைகளுடன் மாண்டகோலத்தையும்ம
ற்றுகாரணங்களையும்மகாவிஷ்ணு பிர்மதேவன் மனக்கோட்டம்நீங்கிக்
களித்திருக்கின்ற இந்திரனும்முனிக் கூட்டங்களும் தேவர்களும் திஷ்
டாந்திரமாகத்தெரிந்தமாத்திரத்தில் செயஉச்சாகங்களுடன் ஆர்ப்பரித்
துசந்தோஷமிகுதியினால் கிரோசபரவசத்தராய் ஆடிப்பாடிக் கரங்க
ளைச்சிரங்களிற் கூப்பிக் குமாரதேவனைப்போற்றிக் குளிர்ந்தபரிமளங்
களைவீசும் கற்பகமலர்களைச் சோனைப்பெய்யலைப்போலத்தூவிச் சிவகு
மாரனைச்சூழ்ந்து சந்தோஷ சாகரங்களில் மூழ்கினவர்களாய்க் கரங்க
ளைச்சிரங்களிற் கூப்பித்தொழுது பலகாற்றிருவடிகளிற் பணிந்தெழுந்
துவிழிகளில் ஆனந்தவாரி பெருக்கெடுத்தோட நிற்கின்றதறுவாயில்அ
ளவற்றமாய்கைகளைவல்ல கிரவுஞ்சம் அதப்பட்டுவெற்றிவேலானதெழு
ப்பியபோது அதனிடத்தில் அடங்கியிருந்த வீரர்களனைவரும் தங்களை
வாட்டியிருந்த மயக்கங்களை நீங்கி வுணர்ச்சிபெற்றெழுந்து துரிதமாக
வந்துவேலாயுத மூர்த்தியினது திவ்விய சரணாரவிந்தங்களிற் றொழுது
போற்றிப்பக்கங்களில் நிற்கின்ற தறுவாயிற் சிவசுப்பிரமணியதேவரா
னவர் வெண்டையமணிந்த பாதங்களையுடைய வீரவாகுதேவர் முத
லானவீரர்களை கிருபையாகப்பார்த்து தாருகன்வஞ்சகத்தினாற் கிரவுஞ்ச
பற்வதத்தின் மாய்கையிற்பட்டு நீங்களனைவரும் பிறக்கினைதப்பி வாடி
யிருந்தீர்களோவென்று குமாரதேவர் கிருபையுற்று விசாரித்த காலத்தி

ல் அவ்வீரர்களனைவரும் யிதனைச்சொல்லுவார்கள் - ஐயனேதேவரீர்கிரு பைஎங்களிடத்திற் பூர்த்தியாகவிருக்கின்றமையால் அடியோங்கள் துன் பப்படுவதுமுண்டோ அதிகநித்திரைமயக்கத்தினால் உறங்குகிறவரைப் போல யிளைப்பாறப்படுத்திருந்த தல்லது கொடிய பர்வதத்தின் மாய் கையினாற் கர்த்தனே வருந்தவில்லையென்று விண்ணப்பஞ்செய்தனர், இ ப்படிக்குச் சகலரும் வணங்கிச் சொல்லியபோது சரவணபவனானவர் வீரவாகுதேவனை அருகிலழைத்துச் செயசாலியாகிய சூரமதுமனுக்கிளை யதாருகன் முன்னந் தம்மிதுவிடக் கரத்திற்கொண்டிருந்தபடைகளுக் கரசாகிய பாசுபதாஸ்திரத்தை அவர்கரத்திற்கொடுத்து யிதனைப்பத்திரியா ய்ப்போற்றிவைத்துச் செயசாலியாய்ப் போனவிடங்களினெங்கும் வெ ற்றிகொண்டு வாக்கடவையென அனுக்கிரகஞ் செய்தபின்பு தாருகன்ச ண்டையிற் சின்னபின்னப்பட்டு மாண்டுகிடக்கின்ற பூதவீரரனைவரையு மெழுந்துவரக்கடவீர்களென்றுயரிவாய்ஒருதிரம்அழைத்தகாலத்தில்அவ ர்களனைவரும் நித்திரைதெளிந் தெழுந்தவர்களைப்போல செச்சலிகொட் டிக்கொண்டு வெளிவந்து குமாரதேவனைவணங்கித் துதித்துச் சமுத்திர த்தைப்போல ஆர்ப்பரித்துச் சூழ்ந்துவரவும் தேவர்க்க ளனைவரும்வாழ் த்திப்போகவும் சேனைத்தலைவர்க ளாதியாக நெருங்கிச்செல்லவும் ரண பேரிசெயபேரி முதலாகியவாத்தியங்கள் கணகணென்றுமுழங்கவும் இ வ்விதஆடம்பரங்களுடன் குமாரதேவரானவர் சமர்க்களவெல்லையைக்க டந்துஅப்புறம்போவதாயினர்.

---

# தேவகிரிப்படலம்

---

சூதபுராணிகர் நைமிசாரணிய வாசிகளுக்கு அப்புறத்துக்கதை யைச்சொல்லியதாவது- மேற்குறித்தபடிக்குத் தாருகனையும் கிறவுஞ்ச பர்வதத்தையும் அதப்படுத்திச் சகலருஞ்சூழ்ந்துவரக் குமாரதேவரான வர்பூதபசாசங்கள் பறையையொப்ப ஆர்ப்பரிக்க நாடகரைப்போலப் பற்பலகவந்தங்கள் கூத்தாடவிருக்கின்றசமரவெல்லையைக் கடந்து அது வரையிற்றங்கள் மனதைவாட்டியிருந்த சோபங்களுக்குத் தாருகனிறத் தலாகிய முடிவைக்கண்டு களித்திருக்கும் தேவர்களுடன் பூதசேனைக ள் செயவுச்சாகங்களுடன்வரப் பலதேசங்களைக்கடந்து வளங்களிற்சிற ந்த இமையகிரியைத் தாண்டினவராய் மகாவிஷ்ணு பிரமதேவன் இந் திரன்தேவர்கள் நவவீரர்கள் இலக்கர் சேனைத்தலைவர் மற்றபூதப்படை கள் யாவரும்போற்றிவர வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் தென்தேசத்

தைநோக்கிநடந்து மேற்றிசையிற் சூரியனானவன் போகின்ற தருணத்தி
ற்றேவகிரியென்னும் சிறந்தபர்வதத்தைச்சேர்ந்தனர், ஒப்பற்றஞானக்
கிளவலாகிய தாருகனைச் சிவகுமாரன்விடுத்த வேல்கொன்றசேதியையயிப்
பாரிசங்களினிரா நின்ற உலகவாசிகள் சகலருந்தெரிந்து களித்தனர். அவ்
வாறே அப்பிறதேசத்திலிருப்பவரும் அறிந்துசந்தோஷத்தையடைவதா
கத்துரிதமாய் நானேபோய்ச்சொல்லிவருவேனென்றுபோனவனைப்போ
லச்சூரியபகவான் மேற்பாரிசக்கடலில் மறைந்தனன், அத்தருணத்திற்
செக்கர்வானந்தோற்றிய தெப்படிக்கிருந்ததெனிற், முச்சுடரிலொன்று
கிய அக்கினிதேவன்மனம்பொறாமல்நம்மிற்சேர்ந்தசூரியனென்னும்அ
ரசன்பகற்போதனத்தையுங் கைவசப்படுத்திக்கொண்டு அரசாட்சிசெய்
துவருகின்றனன், மற்றசந்திரனானவன் இராக்காலத்துக்கதிபனாய் ஆவ
விருக்கின்றான் ஆதலால் நான்அவ்விருகாலங்களுக்கும் மத்தியில்விளங்
கும்அந்திப்போதையாவது அரசுசெலுத்துவேனென நிதானித்துப்பிற
முகனாய் வெளிப்பட்டதைப்போல மாலைப்போதில் செவ்வானம்விளங்
கியது - உடனேமூன்றாம் பிறையானது தோற்றியகாட்சி எப்படிக்கிரு
ந்ததெனிற்,றேன்களைத்துளித்துப் பரிமளித்திருக்கும் அல்லிமலர்களா
னவைமலரும் படியாகியமாலைப்போதில் மன்மதனானவன் உலகங்கள்மீ
திற் புஷ்பபாணங்களைப் பிறையோகித்து தன்னரசுசெலுத்த வெழுந்த
தால் தான்முன்பிறந்த சமுத்திரமானது பேரியாகமுழங்குகின்றது அ
வ்வாறே நானும்வெற்றிக் கொம்பாகச் செயத்தைக்குறிப்பேனென்று
எழுந்ததைப்போல பாலசந்திரன்தோற்றினன், யிதுவுமல்லாமற் சூரிய
னானவன்தன்பேரிற் பகைத்தெதிர்ந்தபராக்கிரமசாலிகளாகிய அவுணவீர
ர்மீதுசீறி வாயுவினுங்கடுகித்தேரைச்செலுத்திக் கொடியபோரைச்செய்
துகொண்டு போமுன்னிலையில் அவன்அழகியமார்பினிடத்தில் விளங்கி
யவயிரப்பதக்கமானது அற்றுமேற்றிசையில் விழுந்ததைப்போலவும்வி
ளங்கியது, இஃதன்றியும் மாலைப்போதிற் கறுத்தெழுந்த விருளானது
வானகத்திற் சஞ்சரிக்கும் பன்றியைப்போற்காட்ட அதன்கோறதந்தத்
தையும்போன்றது அக்கோட்டினைமுனந்தரித்த பரமனைநிகர்த்து அண்
டமானது விளங்கியது அக்கோடுகளினின்றும் உதிருகின்ற முத்துக்களை
யொப்ப வானமெங்கனும் நட்சத்திரராசிகள் தோற்றநின்றது, இவ்வித
ச்சிறப்புகளைக்காட்டி யிருளானதுநெருங்குமுன்னிலையில் முத்துத்தாவ
டத்தைப்போலக் கல்லெனனும் ஓசையெழஅருவிகள் பெருத்திருக்கும்
தேவகிரிக்கொருபாரிசத்தில் எழுந்தருளியிருக்கின்ற பாலசுப்பிறமணிய
தேவரைச்சூழ்ந்திருந்த மகாவிஷ்ணு பிற்மதேவன் இந்திரன்மற்றதேவ
ர்க்களனைவரும் சிவகுமாரனைவணங்கிப்போற்றி யிதனைச்சொல்லுகின்ற

ளர், கர்த்தனே கொடியசெய்கைகளையுடைய சூரபதுமனுக்கிளைய தாருக
னால் இதுபரியந்தம் மிகவும் வருந்தி துன்பங்களை யனுபவித்திருந்தன
ம், அப்பாதகனையுங் கிரவுஞ்சகிரியையும் அதப்படுத்தி எங்கள் கிலேச
ங்களைப்போக்கினீர் - யினியாதொருகுறைகளுமில்லை - இவ்விதமாகக்க
ளித்தஅடியோங்கள் வேதவிதிப்படிக்குத்தேவரீர் திருவடிகளில் அருச்சி
த்துவழிபடவிரும்புகின்றன மாதலால் யிந்தசிறப்புள்ள பர்வதத்தின்மீ
திருவையுற்று எழுந்தருளவேண்டும்கர்த்தனேயிந்தவரத்தைக்கடாட்சி
யுமென்றுமெய்ப்பத்தியும் அன்பும்விளங்க தேவர்கள் யிதனைவேண்டு
முன்னிலையில் வெற்றிவேலைப்பரித்த சரவணபவன் அவ்வளையிற்றங்க
ரினைந்து தேவர்க்களே உங்கள் கருத்தின்வண்ணஞ் செய்வோமெனக்கடா
ட்சித்தவாக்கியத்தைக்கேட்டவுடன் கிரோகங்கள்பூரித்து மயிர்சிலிர்க்க
ஆனந்தபரவசத்தராய்க் களித்திருக்கின்ற தறுவாயிற் கோடிசூரியப்பிற
காசமாக விளங்குகின்ற வேலாயுதமூர்த்தியானவர் ஆரவாரித்திருக்கின்ற
சேனசமுத்திரத்துடன் மகாவிஷ்ணு முதலியதேவர்க்கள் போற்றிவரத்
சகலவளங்களையுங் கொண்டிருக்கின்ற தேவகிரியின்மீதிற்போய்ப் பக்க
த்திற்றொழுதுநிற்கின்ற தேவதச்சனை அழைத்து யிதனைச்சொல்லுவார், வி
வேகசம்பன்னனான சிற்பாசிரியனே-தேவர்க்கள் கணத்தலைவர்கள் நமது
துணைவர்கள் மற்றசேனைகள்முதலாக வாசஞ்செய்வதற்குத் தகுந்தவிடு
திகள்குறைவறவிருப்பதாக ஒருநகரத்தினை விசாலம்பெற்ற யிந்தவனா
யினிடத்திற் றுரிதமாகமுடிக்கக்கடவையென வேடமங்கையர் கூழாங்
கற்களைக்கொண்டு அம்மானையாடும் வேடிக்கைகளைக்கண்டு களித்திருக்
கும் குமாரதேவர்கட்டளையிட்டபோது சிற்பியானவன் கரங்களைக்கூப்
பிக்கொண்டு கர்த்தனே தேவரீர் திருவுளப்படிக்கு யிதோமுடித்தேனெ
னத்தண்டை சிலம்பு கொஞ்சுந் திருவடிகளிற்பணிந்து விடைபெற்றுப்
போய் நாற்றிசையினும் விழிகளைப்பரப்பிப்பார்த்து நிதானித்தவனாய்
ப்பருத்துவானத்தை யளாவநிற்கும் பொன்மதில்களை யெழுப்பிப்பலநி
லைகளையுடைய கோபுரவாயல்களைத்தூக்கி அதனுள்பற்பலவீதிகளைப்பிறி
த்து யிருபாரிசங்களினும் போற்சிகரங்கள் மகரதோரணங்கள் சித்திரச்
சன்னல்கள் நவரத்தினமயமாகிய அறைகள் முதலியசிங்காரங்களைக்கொ
ண்டிருக்கும் மாடமாளிகைகள் மண்டபங்கள் சித்திரக்கூடங்கள் உப்
பரிகள் அங்காடிகள்முதலாகியவாசயோக்கியமாகப்படைத்துத் தாமரை
முதலிய மலர்நிறைந்த தடாகங்கள் பொய்கைகள் ஓடைகள் விதங்களையு
ம் புஷ்பச்சோலைகள் தோப்புகள் வகைகளையும்நிருமித்துமுடித்தவுடன்
அந்நகரமத்தியிற் சிற்பநூலிற் றிறம்பெற்ற மயனானவன் தேவதேவோ
த்தமனாகிய பாலசுப்பிரமணியக்கடவுள் வாசஞ்செய்வதற்குப் பவுத்திர

மாகிய ஆலயமொன்றினை நவரத்தினமயமாகவும் பலருங்கொண்டாடத்தக்கசிறப்புமுள்ளதாய்ப்படைத்துச் சொர்ணவளையாகிய மகாமேருவின்மீது வயிரக்குன்றமொன்று நிற்பதுபோலஅவ்வாலயத்தின்மத்தியிற் சிரோரத்தினங்களினாற் பற்பலசித்திரங்களைப் பொருத்திய சிங்காதனமொன்றைச்சோடித்து மற்றும்வேண்டுவனயாவையும் சாஸ்திரப்படிக்குமுடித்தபின்பு மனுவின்பிதாவாகிய மயனானவன் மிகுந்தசந்தோஷத்துடன் வேகமாகப்போய்ச் சிவகுமாரனைப்பணிந்து கர்த்தனே திருவுளப்படிக்கு நகரஞ்செய்தாயிற்றென்று விண்ணப்பஞ்செய்தவுடன் வேலாயுதக்கடவுளானவர் பிரமனாதியதேவர்கள் படைவீரர் துணைவர் யித்தகையபிறமுகாளுடன் அப்பதியைச்சேர்ந்து கடலையொப்ப ஆர்ப்பரித்திருக்கும் பூதச்சேனைகளை அவர்களுக்குச் செய்திருக்கின்ற விடுதிகளிற் போயிருப்பதாகக்கட்டளையிட்டு அனுப்பியபின்பு தமக்கேற்படுத்தியிருக்கின்ற ஆலயமுகவாயலினிடத்திற்குமாரசுவாமியார்வந்தவுடன்பொன்னாற்சோடித்திராநின்ற தேரைவிட்டிறங்குமுன்னிலையிற் பரிசனர்பரப்பியபொற்பாதுகைகளின் மீதிற் திருவடிகளைச்சேர்த்து மெல்லநடந்துநவவீரர்கள் இலக்கர் மற்றதேவர்க்கள்போற்றிவர ஆலயத்திற்பிறவேசித்துஅளவற்றசூரியனைச் செக்கடமிட்டுப் பொருத்தியிருப்பதுபோல விளங்குகின்ற சிரோரத்தினமயமாகிய சிங்காதனத்திற் சிவகுமாரன்வீற்றிருந்தனர், அத்தருவாயில் பிற்மதேவன் முதலானவர்கள் ஏகமாகக்கூடிக்கொண்டு குமாரசுவாமியைப்பூசித்து வழிபடவெத்தனித்தவர்களாய்ப் பூர்வத்திற்பரமசிவத்தின்விழிகளைமூடிய பார்பதியார் திருக்கரத்தில்நின்றும் பெருகியகங்கையைப் பிரமனாதியர் நினைத்ததைத்தெரிந்து அந்நதியானதுவேகங்கொண்டு அத்தலத்திற் பெருகியது அதன்பின்புநவரத்தினமயமாகிய ஆபரணாதிகள் பொன்னாடைகற்பகமலர் சந்தனக்கலவை தூபதீபமுதலிய பண்டங்களை அருச்சனைக்குயோக்கியமாகச் சேகரித்தவர்களாய்ப்பூர்வத்திற்றேவர்களுக்கு அமுதம்பகிர்ந்த பாத்திரத்தைக்கொண்டு செங்காசலத்தைநிரப்பி சிவகுமாரன்சன்னிதானத்திற்போய்ப்பிரமன்முதலிய தேவர்க்களும் ரிஷிகளுங் குமாரதேவர் திருநாமங்களை மந்திரவிதிகளினால் ஓதிக்கொண்டு திருமஞ்சனமாட்டியவுடன சரீரத்தைப்புலர்த்தி முன்னம் அணிந்திருந்த பொன்னாடையைநீக்கி மிருதுவாகியசொர்ணப்பட்டாடையையுடுத்தி மற்றொரு திவ்வியசிங்காதனத்தில்எழுந்தருளச்செய்து சகஸ்திரத்திருநாமங்களை ஓதிஓதிப்பரிமளமிகுத்தபாரிசாதபுஷ்பவிதங்களினால் அருச்சித்துமுடிந்தவுடன் பஞ்சகற்பகப்புதியமலர்களினாற்சோடித்த தண்டைமாலையினைச்சாத்தி ஸ்ரீகந்தத்தெய்வையைப்பூசி பச்சைகற்பூரப்பொடியை அதனிடத்தில்அப்பி. புனுகுசவ்வாது

கஸ்தூரிமுதலிய திவ்வியபரிமளக் கலவைகளையுஞ்சாத்தி முடிந்தபின் நவரத்தினமயமாகியகிரீடம் மகரகுண்டலம் வாகுவலயம் முத்துமாலைமோகனமாலை பொன்னரைநாண் வயிரமோதிரமுதலிய ரத்தினாபரணவிதங்களைத்திரேகம்தோற்றுமல் வகைவகையாக அணிந்ததுவாயிற்பொற்றட்டங்களில் பழவகைகள்முதலிய நைவேத்தியங்களைச்சேர்த்து எதிரிற்படைத்தவர்களாய்ச் சகலருங்கரங்களைக் கூப்பிக்கொண்டு சன்னிதானத்தில்நின்று சாம்பிராணித்தூபங்களையும் சந்தனம்அகிற்பொடிகளினாற் பெருகும்தூபங்களையுங்காட்டி கற்பூரநீராஞ்சனத்தை மணிகளை ஆட்டி அவ்வவர்களும் சுற்றினவர்களாய் ஆகமவிதிப்படிக்குச் சோடசஉபசாரங்களைச்செய்து பத்திவிசுவாசங்களுடன் மும்முறைவலம்வந்து அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்க ஏகாங்கவிதங்களிற் குமாரசுவாமியார்திருவடிகளிற் தீர்க்கதெண்டன் சமர்ப்பித்துச் சித்தசங்கற்பங்களைசுமரித்துச்செயசெயவெனப் பற்பலவிதங்களிற்போற்றி யிவ்விதங்களில் உபசரித்து நேத்திரோற்சவமாகத் தெரிசித்துக் களிப்படைந்தனர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே மகாவிஷ்ணு பிற்மதேவன் இந்திரன் முதலானவர்கள் மேற்குறித்தபடிக்குச் சிவகுமாரனைத்தேவகிரியினிடத்தில்மனதொருமித்துப் பூசனைவழியாடுகளை நடத்திவருவதைச் சண்முகப்பெருமான் பரிவாரஅங்கீகரித்துத் திருவிழிகளைச்செலுத்திப்பார்த்திருந்தனர் ஓ ரிஷிகளே-வெற்றிவேலாயுதர் தேவகிரியினிடத்திற் சேர்ந்தவனாயில்நடந்ததாற்பிரசங்கங்களைச் சொற்றனம், இனிசமர்க்களத்திற் குருகன் மாண்டசமாசாரந்தெரிந்தவுடன் அவன்பிள்ளைவந்து முடித்தகாரணங்களையும் மற்றசரித்திரங்களையுந் தெரிவிப்போமென்றுசூதபுராணிகர் ஆரம்பித்தனர்,



## அசுரேந்திரன்மகேந்திரஞ்செல்படலம்



நைமிசாரணியவாசிகளேகேட்பீராக- எமதிறைவனாகிய சரவணபவன்கோபித்தேவிய வேலாயுதத்தினால் யானைமுகத்தினைப்பெற்றதாருகாசுரன் மாண்டவுடன் அவ்விடத்திலிருந்த ராட்சதத்தூதர் புலம்பிக்கொண்டு அதிவேகமாய்ஓடி மாயமாபுரியைச்சேர்ந்து பொலிவழிந்திருக்கின்ற பலவீதிகளைக்கடந்து அந்தப்புரத்தைச்சேர்ந்து விழிகளில்தாரைதாரையாக நீர்சொரியப்பிரவேசித்து ராசபத்தினிபாதங்களில்விழுந்து தாயேமோசம்நேர்ந்தது அதுவென்னவெனில் உன்கணவன் பாலசுப்பிரமணியர்கரத்தில்விளங்கும் வேலினாற் பிளப்புண்டுமாண்டனனென்ற

வார்த்தையைக்கற்புக்கரசியாகிய சவுரியென்னும் பட்டபுஸ்ரீயானவள்கேட்டவுடன் திப்பிரமைகொண்டு மெய்மறந்து அடியற்றபனையைப்போல நிலத்தில்விழுந்துபுரண்டு முகத்தினும் மார்பினும்அறைந்துகொண்டு விழிகளில் நீர்ஆற்றெடுத்துப்பெருக வாயில்அடித்து ஐஐயோயிந்தஅநியாயமும் விளையுமோ என்செய்வேனெனக் கோடுகோடெனப்புலம்புகின்றதருவாயில் தாருகனுக்குரிய மற்றதேவிமார்கள் யிதென்னவற்பாதமாகவிருக்கின்றதெனப் பறந்துவந்து சேதிதெரிந்தவுடன் அவர்களும் வாயிலும் வயற்றினும்மோதி தலைமயிர்களைவிரித்து ஓவெனப்புலம்பிதங்களுக்கு மூத்தவளாகிய சவுரியைக்கட்டிக்கொண்டுபதைபதைத்துவிம்மியழவுகொண்டாடினார்கள் அத்தருவாயில் பட்டபுஸ்ரீயாகியசவுரிக்குமணத்தாபரியாமல் மற்றதேவிமாருடன் அழுதுகொண்டுஅந்தப்புரத்தைக்கடந்துபாதசாரியாய்த் தெருக்களிற்போகுமுன்னிலையிற் புரசனங்கள்தத்தமக்கு அடுத்திருக்கின்றவிசனங்களுடன் அரசனுக்கு நேர்ந்தசம்பவத்தைக்கேட்டவுடன் படாதபாடுகளைப்பட்டு வந்துகூடிப்புலம்பிப் போசப் பட்டணத்தைக்கடந்து பிணமலைகளைத்தாண்டி ரத்தஆறுகளை நீந்தி ரணக்களவெல்லையைச்சேர்ந்து வச்சிரகாயம்பெற்றதன்கணவன்யிருதுண்டமாக நிலப்பாயலிற்கால்போனது தலைபோனது தெரியாமல்மாறுபட்டு விழுந்துகிடைப்பதைக்கண்ட மாத்திரத்தில் ஆழ்ந்தகடலில் அகப்பட்டுவருந்தும் மயிலைப்போலச் சவுரியானவள் பதைபதைத்துத்துடிதுடித்து மேல்விழுந்து மெய்மறந்து மூர்ச்சித்தவளாய் மற்றகன்னியர்செய்த உபசாரங்களினாற் சற்றுநேரத்திற் களைதெளிந்து எழுந்துபிரலாபித்துப் புலம்புவதாயினள், ஓ என்பிராணநாயகனே- புருஷரத்தினமே ராசாதிராசனே என்செய்தீர் தேவரீருக்கும் யிப்படிக்குநேருவதோ தெய்வச்செயலும் யிப்படிக்கிருந்ததோ ஓ என்னுயிரே அடியாளைத்தனிமையில்விட்டு என்னிடத்திலிருந்தபிரீதியை மறந்துபோய்விடுவதுஉம்மையொத்த அன்புள்ளகணவனுக்குநீதியோ- அல்லதழகோ- ஐஐயோ எவ்விடத்திற்போயிருக்கின்றீர் யிவ்வுலகத்தின்வாழ்வையும் மற்றசம்பத்துக்களையும்வெறுத்துச் சங்குசக்கரதரனாகிய மகாவிஷ்ணுவாசஞ்செய்கின்ற வைகுந்தநகரைச்சேர்ந்து சகலசம்பிரமங்களையும் அநுபவித்திருக்கின்றீரோ-அல்லது பிர்மலோகத்திற்றான்போய்க் களித்திருக்கின்றீரோ- அன்றியுந்தேவரீர் ஆதியில்வருந்திச்செய்த தவத்துக்கிரங்கி பற்பலவரங்களைக்கடாட்சித்த கங்காசடாதரர் அநுக்கிரகத்தினைப்பூர்த்தியாகப்பெற்ற நீர் அக்கர்த்தன்வீற்றிருக்கின்ற வெள்ளியங்கிரியிற்போய்த்தேவதேவனை வழிபட்டிருக்கின்றீரோ- என்பிராணபதமாகிய மணவாளா எவ்விடத்திலிருக்கின்றீர்- பூர்வத்தில்உம்முடனேதுத்துப்பிறகாசம்போ

ருத்திய சக்கரப்படையைக் கழுத்தணியாகக் கொடுத்துவிட்டுப் பின்னி
டைந்துபோகிய மகாவிஷ்ணுவும் தமது பணிவிடைகளைச்செய்து காத்
திருந்தஇந்திரனும் தினமும்பஞ்சாங்கஞ்சொல்லிவந்த பிரமனும் மற்ற
தேவர்களும் நமதுநகரத்திற் கால்வையாமல் யிடைந்திருந்த எமதரும
ராசனும் மற்றுமுண்டாகிய சகலரும் தங்கள் மனதைவாட்டியிருந்தகவ
லைகளைப்போக்கி அல்லலற்றுக் களித்துநித்திரைசெய்வரோ ஒ என்கண்ம
ணியே பொன்னகரவாசிகளனைவரும் புலம்பிவாடவும் அவுணராசாக்கள்
முதலாகச்சூழ்ந்து போற்றவும் பற்பலராசசின்னங்களுடன் அடியாளி
ருக்கின்ற அந்தப்புரத்துக்கு எழுந்தருளும்வைபவங்களைக்காணமற்கழு
கு பருந்து காக்கைவட்டமிட்டுலவவும் பூதபசாசங்கள்நடிக்கவும் யிவ்
விதஆடம்பரங்களின்மத்தியில் கால்மாடுதலைமாடாய் விழுந்துகிடக்கும்
அகோரத்தையும்பெருமானே யிந்தபாழத்த கண்களாற் பார்ப்பேனோ
நான்மிகவும்வருந்தி தேவரீரைக்காணவந்தேன் பழையபடிக்கு ஆசையு
டனெழுந்து நன்மொழிகளைப்பேசி அணைத்து ஆதரிக்காமலிருக்கின்றீர்
பலருங்காணத் தழுவினால்பழியெனநினைந்திருப்பீராயினும் வெற்றிமா
லைபுரளும் வலியபுசங்களையுடைய கணவனே யிக்காலத்தில்வாடிவதங்கு
கின்றஎன்மனங்குளிர ஒருவார்த்தையையாவது பேசாமல் வாயடங்கிநித்
திரைசெய்கின்றீர் அடியாளிடத்திற் கோபமேதேனுமுண்டோ-என்னர
சேநீலமணியைப்போலப் பிரகாசித்திருக்குங் காளகண்டமூர்த்தியானவ
ர்தேவரீரிடத்திற் கிருபையுற்றுக்கடாட்சித்த வரமானது ஒருகாலத்தும்
அழிவின்றிநிதியிருக்கும் நாமுஞ் சகலசெல்வங்களையும் அனுபவித்து
உம்முடன்வங்கணமாயிருந்து நாளைக்கழிக்கலாகுமென்று யிதுபரியந்
தம்எண்ணிக்களித்திருந்தேன் யின்றுஅவ்வரமுயற்சிகளனைத்தும் மங்கி
ப்பொய்யாகமுடிந்ததே என்னாசைக்கணவனே சகலரையும்வென்றுஎதி
ரின்றியிருந்த நீயும்மாண்டனையோ-ஐஐயோ யிந்தஅற்பவாழ்வினைப்
பெறவோ முன்னம்அரியதவங்களைச்செய்து வருந்தினை தமக்கொருவ
ருந்நிகரற்றத் தாமேமுதற்காரணக்கடவுளாகவிருக்கின்றதேவதேவோ
த்தமனாகிய சிவபிரான்பெற்ற சிறந்தபாலசுப்பிரமணியக்கடவுள்வந்தா
ல்அவருடன் எதிர்த்துச்சண்டைகொடுத்தீர் யினிப்பிராணனைமாளக்
கொடுத்தீர்உம்மைவெறுப்பதுநீதியன்று விதிவலிமையைமதியினால்வென்ற
வர்களியாவரிருக்கின்றனர், சந்தனக்குழம்புதோய்ந்த விசாலமாகியபுயா
சலங்களைப்பெற்ற அவுணவீரர்மந்திரி சாமந்தாமுதலாகிய பிரமுகர்கள்
சூழ்ந்து கட்டளைகளுக்கெதிர்பார்த்திருக்கஅரம்பையர் நடிக்கப் பட்டு
வர்புகழமங்களவாத்தியங்கள் முழங்க யித்தகையவைபவங்களைப்பெற்றி
ருக்கின்ற சபாமண்டபத்தில் நவரத்தினமயமாகிய சிங்காதனத்தில்ராசா

திராசனாகவிற்றிருந்து அரசுசெலுத்திவந்த தேவரீர் யிந்தபறந்தலையிட
த்திற் பற்பலபேய்க்கூட்டங்கள் களித்துலவபிணமலைகள்பெருத்து உதி
ரப்பிரவாகமானது யிரைச்சலிட்டுஓட அஸ்திரஅணையில்வருந்திப் பள்
ளிகொண்டுதுஞ்சுகின்றீரோ-எமதையனே அரசேஆவியே ஒருவார்த்தை
யையாவதுஆடாயோ-யிதுவுஞ்சிலநாளோ- வெற்றிமிகுத்தமழுப்படை
யைத்தாங்கி யிருக்கின்ற நிர்மலக்கடவுளாகிய சிவபிரான் உமக்கநுக்கிர
கஞ்செய்தவரத்தின் முயற்சியையும் புயவன்மையையும்முக்கியமாகவெ
ண்ணிமோசம்போனீர்- காலங்களுக்கடுத்த தந்திரஉபாயங்களை நினைந்
துதப்பித்துக்கொள்ள வகையையோசியாமல் அநீதமாக யிறந்தீர்ஒபி
ராணநாயகனே உம்மை யினி எக்காலத்திற்காணப்போகின்றனன், அக்
கினிவிழியைப்படைத்த சிவகுமாரன் சண்டைகொடுக்க வெதிர்ந்தகால
த்திற் பழமையாகவிருந்த உமதுவலிகுன்றி மாண்டனையெனக் கேழ்வி
ப்பட்டும் யின்னமும் பிராணனைவைத்துக்கொண்டிருக்கின்றேன்- ஆத
லால் என்னினும் உம்மிடத்திற் பிரியபத்தியிருக்கின்றவர்கள் யாவரிருக்
கின்றனர், இனியான்யென்செய்வேன் மணவாளாவென்றுபற்பலவிதங்
களாகப் பன்னிப்பன்னிப் பிறலாபித்துத் துக்கசாகரத்தில் அழுந்திவாடு
கின்றதருவாயில் மற்றையதேவிமார்களும் அவுணராசனைச் சூழ்ந்துகொ
ண்டுகட்டிமுத்தமிட்டும் முகத்துடன் முகத்தைச் சேர்த்தும் சிகையைக்
கோதிமுடித்தும்முந்தாணிகளினால் முகத்தைத்துடைத்தும்வஸ்திரத்தை
ச்சீராய்உடுத்தும் பணிதிகளைத்திருத்தியும்தலைகளைமோதியும்நீண்டஅளக
பாரங்களைவிரித்துச் சின்னபின்னப்படப் பிடுங்கியெறிந்தும் யின்னமு
ஞ்சொல்லநின்ற துக்கத்துக் கேதுவாகிய காரணங்களைச் செய்து கடலு
டைந்ததைப்போலக் கோவெனப்புலம்பி வாடுகின்றதருவாயில் யிச்சம்
பவம்நேருவதற்குமுன்னம்பெரியதந்தையாகியசிங்கமுகாசூரனைப்பார்த்
துவருவதாக அவன்வாசஞ்செய்யும் ஆசுரமென்னும் பட்டணத்துக்குப்
போயிருந்த தாருகன்குமாரன் அசுரேந்திரனென்பவன் பிதாவுக்குநேர்
ந்தகொடுமையைக் கேழ்விப்பட்டுவருந்தி மனோவேகத்தினுங் கடுகிஓ
டிவந்து ரணக்களத்தைச்சேர்ந்து புசபலபராக்கிரமசாலியாகிய தந்தை
மாண்டுவிழுந்துகிடக்கின்ற கோலத்தைக்கண்டவுடன் பெருமூச்செறிந்
துகோடுகோவென்றழுது கரங்களைப்பிசைந்து அளவுபடாத துக்கசாக
ரத்திலழுந்தினவனாய்க் கொடியகனலிற்பட்டவனைப்போலப் பதைபதை
த்துத்துடிதுடித்துச் சோர்ந்துநிலத்தில் விழுந்துகளைத்துத்தேறிஎக்கால
த்திலும் பெருந்தியிலேசத்திற்பட்டவளாய்க் கணவன்மீதில்விழுந்து அல
ங்கோலமாய் புரண்டுவாடுகின்ற தாயினருகிற்போய்ப் பாதங்களில்வண
ங்கி என்னாசைத்தாயே உன்காந்தனெங்கே எத்தலத்திற் போயிருக்கின்

றனர், என்னஅனியாயம் உனக்குச்சம்பவித்தது மாதாவே என்செய்வேன்ராசாதிராசனாகவிருந்த பிதாபட்ட பிரகோரத்தையும் நீராதஉன்னிடதுக்கத்தையும் எப்படிபார்த்துச் சகிப்பேனென்று பற்பலவிசனவாசகங்களைச்சொல்லி அரற்றினவனாய் மேல்நடக்கவேண்டிய காரியங்களைச் செய்து முடிக்கவெத்தனித்துத் தாய்மாருக்குப் பற்பலதேறுதலைகளைச் சொல்லி ஒருவகையாய் அவர்கள் துக்கங்களை ஆத்தி பக்கத்திலோரிடத்தில்அவர்களனைவரையுங் கொண்டுபோய்ச்சேர்த்து அத்தருணத்தில்நேர்ந்தஅவுணவீரரைக்கொண்டு தகனத்துக்குவேண்டும் சந்தனக்கட்டைகள் முதலாகிய வஸ்துக்களைத் தருவித்துக்கொண்டவுடன் ரணக்களத்திற்கிடக்கின்றபிதாவையெடுத்துப் பழையபடிக்குச்சேர்த்து முழுககாட்டி வஸ்திராபரணங்களைக்கொண்டு அலங்கரித்து புஷ்பத்தினாற்சோடித்ததேரினபேரிலேற்றி சுடலையெல்லையிற்கொண்டுபோய்ச் சந்தனக்கட்டைகளினால் அடுக்கியிருக்கின்ற அணையின்மீதில்வளத்தி ஈமவிதிப்படிக்குச் செய்யவேண்டுஞ் சடங்குகளைமுடித்து ஓமத்தியைக்கொண்டு தகனஞ் செய்வித்து வருகின்றதருவாயில் தாயாகியசவுரியென்பவள் அவசம்வந்துதன்குமாரனைப்பாத்து ஐயனே என்புருஷனுடன் நான்போவதற்கு மிகவும் விருப்பமாயிருக்கின்றனாதலால்அதற்குவேண்டும்முயற்சிகளைத்துரிதமாகமுடிக்கக்கடவையென்று சொல்லிய நற்றாய்வாக்கியங்களைக்கேட்டவுடன் நடுநடுங்கிஅழகிய பாதங்களில்விழுந்துவணங்கித்தாயே பிதாவைப் பறிகொடுத்துவாடுகின்ற அடியேனைப்போற்றிரட்சித்திருக்கவேண்டுமென்று பேசியமுன்னிலையில் அதைமறுத்து நிமைப்போதும் இந்தபூமியிலிருக்கமாட்டேன்நான்குறித்தபடிக்குச்செய்யக்கடவையெனக்கோபித்துச்சொல்லும்போது அசுரோத்திரன்பயந்து மாதாவேஅந்தப்படிக்கு இதோமுடித்தேனென்று சம்மதித்த பிள்ளையைப்பரிவாகப் பாத்து குமாரனேநானும்மற்ற உன் தாய்மாரும்கணவனுடன் வானத்தைச்சேர்ந்து களித்திருக்கத்தக்கதாகத் தழலைமூட்டிவையெனக் கட்டளையிட்டபடிக்குவானத்தை அளாவுஞ்சுவாலையையெழுந் தீக்குண்டமொன்றை விசாலமாகச்செய்வித்துமுடித்தவுடன்மானையொத்தசாயலையுடையதாருகன்தேவியர் அனைவரும் ஸ்நானஞ்செய்து பட்டாடையுடுத்துப் பரிசுத்தராய்மும்முறைவலம்வந்து அனலிற்பாய்ந்தனர், இப்படிக்குத்தாய்மார்அனைவருஞ்சாகுமானமாகியபின்பு தந்தைதாயாருக்குச்செய்யவேண்டுங்கிரிகைகளைமுடித்துஅசுரோத்திரனானவன் கிலேசத்துடன்புலம்பிக்கொண்டுதன்பட்டணத்திலும் போகாமல் தட்சிணமே அத்தலத்தைநீங்கி சேர்ந்த சுற்றத்தார்சிலர்சூழ்ந்துவரக் கடுகிநடந்து கருங்கடலின் மத்தியிலிராநின்ற வீரமாமயேந்திரபுரியைச்சேர்ந்து மனவாட்டத்துடன் ம

ழையமுகப்பொலிவுநீங்கி மேனிகரிகரிந்து புழுதிமூடக்கொடிய தரித்தி ரனைப்போலப் பாதசாரியாய்த் தாருகன்பிள்ளை அசுரேந்திரன்போகுமு ன்னிலையில் அப்பதங்கோலத்தினை மயேந்திரபுரியின் வீதிகளிலிருக்கின் ற அவுணவீரர்களாதியர்கண்டு அந்தட்சிணமே அதிககிலேசசித்தராய்வா டிநடுநடுங்கி கரங்களைவிரித்துக்கொண்டு விழிகளிற்பெருகும் நீரானது ஓடிகால்களின் மூலமாகப்பாயப் பெரும்புறக்கடலுடைந்ததுபோலமி கவும்வருந்திப் புலம்பினவர்களாய் யிந்தராசகுமாரன் வறியனாய் யிப்ப டிக்குத்திகைத்து ஓடிவருவதற்குக் காரணமென்னோவெனக் கும்புகும் பாய்ச்சேர்ந்து பேசிக்கொள்ளுகின்றனர், இந்தஅசுரேந்திரன் கொலைக ளவுகட்காமமெனநின்ற கொடுமைகளைச்செய்வதற்குச் சகியாமற் றரும த்தையேவிரும்பி யிருப்பவனென்றுயாவரும்வசனித்துக்கொள்ளக்கேட் டிருப்போம் ஆதலாற் றன்குலவிருத்திக்கடுத்த நடையில்லையென்று பி தாவானவன் கோபித்துத் துரத்திவிட்டனனோவென்று சிலர்சொல்லவும் அல்லது பழிபாதகங்களை அஞ்சாதுசெய்துவருந் தாருகன்நடவடிக்கை களைப்பார்க்கமுடியாமல் யிந்தகுமாரன் தானேதூறிக்கொண்டுவந்து விட்டதாகவேணுமென்று சிலர்சொல்லவும்- இந்திரன் தெய்வலோகவா ழ்வையுந் திரிலோகஅரசினையும்யிழந்து தனதுருவத்தைமறைத்துவேறு ருக்கொண்டு பூலோகத்திற் சஞ்சரிக்கின்றனனெனச்சொல்லுவர், அவன் ஒருகாலம் பரமசிவத்தைநோக்கி அரியதவங்களைச்செய்து அவரனுக்கிர கத்தினாற் புசபெலபராக்கிரமமும் மாயைப்பெருக்கையும் பெற்றுத் த ன்சேனையுடன்கோபித்து வந்தெதுத்துக் கொடியபோரைச் செய்துவா ட்டுமுன்னிலையில் அவன்பாணங்களுக்குச் சகிக்கப்படாமல் தாருகன்யி றந்தனனோ- அக்கொடுமைக்கஞ்சி யிக்குமாரன் யிவடம்ஓடிவந்து விட் டனனோவென்று சிலர்சொல்லவும்- வீராதிவீரனானதாருகன் சிலபகைவ ருடன்போராடித் திருணையில்லாமல் அவர்கள்கையில் மாண்டனனென் பதற்குச்சிலதிஷ்டாந்திரத்தைக் கண்டிருக்கின்றனம்- அஃதென்னையெ னின் வானத்தையளாவநின்ற கிறவுஞ்சபர்வதமானது யிதுபரியந்தம்எ வ்விடத்தில்நின்றுபார்க்கினுந்தோற்றப்படும்· இப்போது அதனுருவையு ம்அதன்மீது உலவித்திரியும் அவுணராகிய நம்மவர்களையுங் காணவில்லை தூளிபடலமாத்திரம்பெருத்து விளங்குகின்றது யிதைவிடவேறொருகா ட்சியும் வேண்டுமோவெனச் சிலர் வசனிக்கவும்- ஆயிரம்பணாமகுடங்க ளையுடைய சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுசெலு த்தியசக்கரப்படையைப் பசியபொன்னணியாகக் கண்டத்திற் றரித்திரு க்கின்ற செயசாலியுடன் தயிரியங்கொண்டெதுத்து சண்டைகொடுப்ப வர் யாவரிருக்கின்றனர், அல்லது அவன்முனையில்நின்றுசற்றுநேரம்வா

துகொடுத்தபோதினும் ஈஸ்பரவரப்பிரசாதி யாதலால் மாள்வது அரிது யிதைநிச்சயமாக நம்பவேண்டுமெனப் பலர்பேசவும்- சிலநாட்களுக்குமுன்னம் நமதிறைவனாகிய சூரபதுமன்றங்கை அசமுகியென்பவள் விரமாகாளனென்னும் சவுரியபரனால் தன்கரத்தை யிழந்துவந்து அரசன்முன்விழுந்து முறையிட்டகாலத்திற் சூரன்கோபித்துப் பலதேவர்களைப்பிடித்துவரச்செய்து சித்திரவதையாகிய தெண்டனைகளைச்செய்துங் கோபந்தணியாமல் இந்திரகுமாரனாகிய சயந்தனையும் தேவர்களையும் அவர்கள்பெண்டுபிள்ளைகளையும் யித்தினவரையில் அரியசிறையில்வைத்திருக்கின்றனன், இக்காலத்திலும் யிந்தராசகுமாரன் யிக்கோலமாய்த் துன்பக்கடலிலாழ்ந்து கிலேசித்துப்போகின்றனன், யிதைக்கண்டவுடன் நமது அரசன் வடவாமுகாக்கினியைப்போலப்பொங்கிபழையபடிக்குத்தேவர்கூட்டங்களைத் தொந்தரைசெய்வதற்கு ஐயமில்லையெனச் சிலர்வழங்கிச்சொல்லவும்- நீலமேகவண்ணனான மகாவிஷ்ணுவானவன் நமது அரசன்தாருகனுடன் போர்செய்ய நினைக்கவேமாட்டான் சிருஷ்டிகர்த்தனான பிரமதேவன் யிக்கருமத்தைக் கனவிலும்மதியான் ஆதலால் புசவன்மைக்கொருவனாகிய தாருகாசூரனுடன் வாதாடுவதற்கு பார்பதியாகனான ஈஸ்பரனல்லது மற்றொருவராற் கூடுவதோவெனச் சிலர்கூறவும் தேவர்க்கள் கருடகாந்தருவர் சித்தர்வித்தியாதரர் பன்னகர் வுவணர் முதலிய அந்தரவாசிகள் நம்மவர்கள்காட்டிய பணிவிடைகளைச்செய்து வருகின்றனர், அவர்களாலொன்றும் நேரவறியாது ஆதலால்யிந்தராசகுமாரன்வாடிவருவதற்கு ஏதோ ஒருமுக்கியமாகிய காரணமிருக்கவேண்டும் வெகுநாளாய்எதுத்துச் சண்டைகொடுப்பவரின்மையாற் புசங்கள்தினவெடுத்துச்சோம்பலாய்வாடி யிருக்கின்றனம், சந்தேகமில்லாமல் யினிமேற்சண்டைக்கெதுவுமுண்டு சந்தோஷமாயிருங்கோளெனச் சிலவீரர்கள்சொல்லவும்- இந்தராசபுத்திரன் அல்லலிற்பட்டுப் போகின்ற காரணத்தினால் யிதைக்கண்டவுடன்நமது சக்கிரேஸ்பரன் சீறிக்கட்டளையிட்டனுப்புவதற்குமுன்னம் துரிதமாய்த் திரண்டசேனைகளுடன் பிறையாணப்பட்டு மாயமாபுரிக்குப்போய் நடந்தகாரியங்களைத் தெரிந்து நம்மாற்கூடிய முயற்சிகளைச்செய்து திரும்புவோம் வாருமெனச் சிலசெயசாலிகள் துரிதப்படவும்- இவ்விதங்களாக அவுணவீரர்கூடி மனவருத்தங்களுடன்வசனித்துவரும்போது அசுரேந்திரன் வீரமாமயேந்திரபுரிவீதிகளைக்கடந்தவீரவெண்டையங்கள்சத்திக்கும் பாதங்களையுடைய சூரபதுமன்வாசஞ்செய்யும் அரமனையைச்சேர்ந்து அவுணவீரர்மந்திரிபிரதானிகள்முதலாகநெருங்கியிருக்கின்ற நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தில் விளங்குஞ்சிங்காதனத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்தும் ராசாதிராசனானசு

ரமகாராசனைக்கண்டு ஓவெனப்புலம்பிக்கொண்டு சமீபத்திற்போய்பாத
ங்களில்விழுந்து தன்கரங்களினால் அவற்றைப்பிடித்துக்கொண்டு மிகவு
ம்புலம்பி ஏங்குவதை அவுணருக்கரசன்கண்டவுடன் மனவருத்தத்துட
ன்ஐயனே கிலேசிக்கவேண்டாம் யிப்படிக்கு அலங்கோலமாகவருவதற்
குஉனக்குச்சம்பவித்த காரியங்களை விரைவிற்சொல்லக்கடவையெனக்கே
ட்டபோது அசுரேந்திரன் ஒருவகையாய்த் தேறினவனாய்பெரியஅப்பா
நானென்னசொல்லுவேன் வாயெழவில்லை- தேவேந்திரன் தந்திரவஞ்சக
த்தினால் யில்லாதுகளையெல்லாஞ்சொல்லி முறையிட்டுக்கொண்டு சிவகு
மாரனாகிய பாலசுப்பிரமணியனென்பவனை உடன்படுத்தியதால் அப்பா
லன்பலபூதப்படைகளுடன் மாயமாபுரிக்குவந்து உன்தம்பியையவளைத்
துக்கொண்டு அகோரஉயித்தியங்களைச்செய்து சேனைகளனைத்தையும்து
ம்சம்பண்ணிக்கொன்று கடையில்தாருகவீரனுடன் கிறவுஞ்சபற்வதத்
தையும் வேலினாற்பிளந்துவதைத்து யிப்பூமண்டலத்திலிராநின்றநம்ம
வரைத்தேடிக்கொண்டு வருகின்றனனெனச்சொன்னகொடியவசனங்களை
ச்சூரன்கேட்டபோது குமாரனேநீபேசுவதுமெத்தவும் அதிசெயமாகவி
ருக்கின்றதெனக் கோபநகைகொண்டவனாய்ச் சலனமற்ற புசபெலபரா
க்கிறமசாலியாகிய தாருகாசூரனையும் மாய்கைக்கரசனானகிறவுஞ்சனையும்
சாளகண்டமூற்திகுமாரனோ வெல்பவன் யிதுசுத்தபொய் அப்பனே நீ
ஏதோசிலதுன்பங்களிற்பட்டுத் திகைத்துவர்திருக்கின்றனை ஆதலால்மன
ச்சஞ்சலமற்று நடந்தசேதியை எதாற்தமாய்ச்சொல்லக் கடவையெனக்
கேட்டபோது அசுரேந்திரன் விழிகளில் நீரைப்பெருக்கிப் பிதாவேகே
ட்பீராக- இப்போதுநான் விண்ணப்பஞ்செய்தது சத்தியமானவாக்கி
யம் என்பிதாவையும்மாய்கையிற்சிறந்தகிறவுஞ்சவரையையும்சிவகுமார
ன்வேலினாற்கொன்றனன், அந்தசம்பவத்தைநான் ஆசுரத்திற்கேழ்விப்ப
ட்டு வேகமாய்ப்போய் எதாற்தமாகக்கண்டு பிதாவைத் தகனஞ்செய்து
தாய்மார் மனயிஷ்டப்படிக்குச் சாகுமானத்துக்கு வேண்டிய தீக்குண்
டமுடித்து அவர்களையும்பறிகொடுத்து வழியனாய் அத்தலத்தினும் நிற்க
மனமில்லாமல் தேவரீருடன் யிந்தமனவருத்தத்தைச்சொல்லி ஆற்றிக்
கொள்ளவந்தேன்- இதுஉண்மையானது நம்புமெனப்பேசிய வாசகஞ்
செவியிற்பட்டவுடன் தன்வலதுபுசத்துக்குச் சமதையாகவிருந்து சகல
செயங்களையும்பெறச்செய்து கொண்டுவந்த வீரனாகிய துணைவன்மாண்
டனனென்பது நிச்சையப்பட்டகாலத்திற் சூரபதுமன் மனதில்கோபா
க்கினியானதுமூண்டு மேலிட்டு விழிகளிற் குபீல் குபீலெனத்தீப்பொ
றிசிதறவும் நாசிகளிற் புகைப்படலம்பெருகிச் சரீரத்திலிராநின்ற ரோ
மத்துவாரங்கள்முற்றினும் அனற்சுவாலைவீசவும் புருவமானதுஉயர்ந் த

நெற்றிமேலேறவும் பற்கள் கடகடெனக்கடித்து உதட்டைஅதுக்கி படப
டெனவாய்துடிக்கவும் மனமானது அண்டமுதலிய புவனங்களனைத்தை
யும்அதப்படுத்தநினைக்கவும் யிப்படிக்குக்கோபக்கனலானது மீறியலை
கரும்போது அதன்மத்தியிற் பிராணபதமாகவுஞ் செயசாலியாகவுமிரு
ந்த தாருகன்பேரிலிருந்த பட்சத்தினால் உண்டாகிய துக்கசாகரமானது
பெருகி அத்தியையவிக்கவும் பக்ஷத்தினுஞ் சிவந்திருந்தவிழிகள்கலங்கி
செலமானதுபெருகி நதியைப்போல ஓடிஒளிக்கவும் துக்கசாகரமெனவ
ழுங்கிக்கொள்வது உண்மையெனக் காட்டுமாறுபோலத் திரேகமெங்க
ணும்வியர்த்தொழுகிப் பாயவும் இவ்விதமாகத் துன்பக்கடலில் அகப்
பட்டுஐம்புலன்களும் நிலைகலங்கி அறிவுசோர்ந்து சிங்காதனத்தில்நின்
றுந்தவறி நிலத்தில்விழுந்து கோடையிடியைப்போலப் பிறலாபித்தகா
லத்தில் எழுந்தஓசையினால் பூமிகிடுகிடெனநடுங்கி அதைச்சூழவிருந்தச
முத்திரமானது கொதிப்பெடுத்து அதலகுதலப்படவும் மன்னுயிர்களை
க்கொண்டுபோகுந் திரம்பெற்றஎமதருமராசனும் கிடுகிடாயித்துச்சோ
ரவும் சமுத்திரத்தில் அடங்கியிருந்த வடவையானது குலைகுலைந்துமங்
கவும் பிறசண்டவாயுவும் பயந்தொளிக்கவும் சூரியசந்திரர்முதலிய நவக்
கிரகங்கள் மற்றநட்சத்திரராசிகள் நிலைதப்பிப்பூவட்டமெங்கும் பலப
லெனஉதிரவும் யிந்தமண்ணுலகை ஒருதலைப்பாரமாகத் தாங்கியிருக்கி
ன்றஆதிசேஷின் ஆயிரஞ்சிரங்களைக்கொண்டு சுமந்துங்கூடாமையால்வ
ருந்தித்திகைக்கவும் அச்சபையிலிருந்த வீரராகிய அவுணரும் அரசன்ப
டும்வருத்தங்களுக்குமனந்தாபரியாமற் கிலேசத்தில்ஆழ்ந்து ஏங்கிவிழு
ந்து அரற்றிச்சோர்ந்து படாதபாடுகள்படவும் யிப்படிக்குச்சமஸ்தமு
ம்ராசபரமேஸ்பரனுக்குநேர்ந்த மனவருத்தத்தைக்குறித்து வாடுகின்ற
தருவாயில் அந்நகரவாசிகளனைவருந் தங்கள் தங்களுக்குவந்த யிடையூ
றைப்போலக் கொடியதுன்பத்திற்பட்டுப் புலம்புமோசையானதுபெ
ருத்துப்பொலிவற்றுவாடினர், அத்தருவாயில் துக்கித்திருந்தசூரபதும
னுக்குமுன்னமெழுந்த கோபக்கனலானது விசனத்தினால் அடங்கியிருந்
தது மீறியெழுந்து அதினும் பதின்மணங்கு சுவாலையைவீச மானமும்
நாணமும் மனதைத்தூண்டச் சரேலென்றெழுந்து பக்கங்களிற்சூழ்ந்
திருக்கின்ற தன்பரிசனரைப்பார்த்து யிதனைச்சொல்லுவான், ஆயிரத்தெட்
டுஅண்டங்களையும் ஏகச்சக்கிறமாகஆண்டுவரும் ராசாதிராசனாகியநமது
துணைவன்தாருகனைக்கொஞ்சமாவது எண்ணிக்கையில்லாமற் கொன்று
ம்மேலிட்டுவருகின்ற கந்தனென்பவன் புயவன்மையைவாட்டி வெற்றி
கொண்டுவாரதினைத்தனுதலாற் கணப்போது கழிவதன்முன்னம்நமது
இந்திரஞாலத்தேரையும் வயிரகவசத்தையும் வில் தேவாஸ்திரங்கள் முத

லிய பற்பலஆயுதங்களையும் கொண்டுவரக்கடவிரெனக் கட்டளையிட்ட
னன். அரசன்வாயிலிருந்து யிந்தஉத்திரவுபிறந்தவுடன் ஆடியப்பேர்கள்
மனோவேகத்திலும் முந்தியோடி அவற்றினைத்துரிதமாகக் கொண்டுவர
ப்போயினர், அத்தருவாயில் சபையிலிருந்த வீரவெண்டையமணிந்த அ
வுணவீரர் அரசன்மனக்குறிப்பைத் தெரிந்து சடுதியிற்போய் ஆயுதபா
ணிகளாய்ச் செயசாலிகளாகிய நால்வகைச்சேனைகளுடன் வந்துகடைவா
யலின்புறத்திற் சூழ்ந்தனர், இப்படிக்குச்சூரன்கோபித்துப்பிறையாண
ப்படுவதையும் சேனைகள்வந்து நெருங்கியிருப்பதையுங் கண்டவுடன்ச
பையிலிருந்த மந்திரிகளில் அதிகவிவேகசாலியாய்த் தீர்க்கயோசனையர
னாகிய அமோகனென்பவன் சமீபத்திற்போய்ச் சூரன் அழகியபாதங்க
ளிற்பணிந்து அரசனே நானொருமந்திராலோசனையைச் சொல்லுவேன்
கோபியாமற் கேட்டருளவேண்டுமெனப் பேசத்துடங்கினன், விஷத்
தொவ்வையிட்டுக் கூர்மையொருந்திய திவ்வியபாணங்களைச் செலுத்து
ந்தனுர்வித்தைகளைப் பூரணமாகக்கற்று நேர்ந்தசத்துருக்களைவளைந்து
கொண்டு பின்னிடையாமற் சயதப்படிக்கு வெற்றிகொள்ளவல்ல சுத்த
வீரராயிருக்கின்ற அரசர்களாயினும் பரராசர்கோபித்துத் தங்கள்நகரத்
தின்மீதுவந்து சூழ்ந்தெதுத்தகாலத்திற் துரிதப்படாமல் விவேகசாலி
களுடன்கூடி மந்திராலோசனைகளைச்செய்து ஒருகருமத்தைத் தீர்மானித்
தல்லது வெவ்விதாகியகோபாக்கினிமேலிடச்சீறியெதுத்துச்சண்டைகொ
டுக்கப்போகார்கள் மேலும் வந்தபகைவன் குலகோத்திரங்களையும் யின்
னமரபில் யின்னானுக்குப்பிறந்தவனென்றும் விசாரணைசெய்தும் மற்
றும் அவனுக்கிருக்கின்ற சேனைகளின்வலியையும் எவ்வகையிடம்பொரு
ளேவல்களைப்பெற்றிருக்கின்றவனென்றும் அவன்முன்னவர்கள் சவுரிய
பராக்கிறமங்களையும் தன்பேரில் யின்னகாரணத்தைக்குறித்துக் கோபி
த்துவந்திருக்கின்றனனென்பதையும் போருக்குவந்திருக்குஞ் சேனைக
ளின் வீரபராக்கிறமங்களையும் பகைவன் புசபெல வலியினையும் பூர
த்தியாகத்தெரிந்தல்லது ஒருகாரியங்களையும் மனதிற்றீர்மானிப்பபோ
யின்றியும் பகைவன்தேவர்க்கள் வரப்பிறசாதங்களைப்பெற்ற வல்ல
பமுடையனென்றும் மாப்பைகளிற் சிறந்தபராக்கிறமசாலியென்றும் தி
வ்விய அஸ்திர சஸ்திரவிதங்களைப் படைத்திருக்கின்றவனென்றும் அவற்
றிற்குரிய மந்திரதந்திரங்களைக்கற்றுக் கரவேகமாகச் செலுத்தவல்லதீர
னென்றும் திரோகசம்பந்தமாகிய வலியில்முக்கியனென்றுமதருணத்து
க்கடுத்தஉபாயங்களைச் சீர்தூக்கிநடத்தத்தக்கவிவேகசம்பன்னனென்று
ம்விசாரணைசெய்து அவற்றின்திறங்களை ஆராய்ந்தபின்புமேல்நடத்தவே
ண்டுவதற்கு முயற்சிசெய்வர், இத்தகையஆராய்ச்சிகளைமுடித்தபோதிலு

ம்நம்பிக்கையுள்ள சிலதூதரைச் செலுத்திப் பகைவருடன் வந்திருக்கின்
ற சதுரங்கச்சேனைகளின் திறங்களையும்வல்லபங்களையும் பூர்த்தியாகத்தெ
ரிந்துகொண்டபோதினும் அதினால்நிச்சயப்படாமல் மேலும்முன்னி
னும்மனதுக்குச் சம்மதமாகவிருக்கின்ற வேவுகாறரைத்தூண்டி அவர்க
ளிதிஷ்டாந்திரமாகத்தெரிந்துவந்தபின்புயிரண்டுசேழ்விகளையுஞ்சீர்தூ
க்கிப்பார்த்து வித்தியாசங்களைத்தெரிந்து ஒன்றைமனதில் நிச்சையப்ப
டுத்துவர், இவையன்றியும் பகைவனைப்போற்றிவந்த ரதகெசதுரகபதா
திகளின் பெருக்கன்றியும் பின்பலமேதேனுந்துலதூரத்தில் வைத்திரு
க்கின்றனரென்பதையும்நம்பிக்கையாகவிசாரணைசெய்துகொள்வர்மேலு
ம்தன்மீதிற்பகைத்துவந்தபகைவன் பலம்எளிதாகக் கண்டபோதினும்
அதைச்சிறிதாகநினையாமற் பெரிதாகவேமதித்தும் சேனைகள் சுலபமாக
விருப்பினும் அவற்றினையும்அவ்வாறேதிரண்டதாகவெண்ணியும்தங்கள்
வலிக்குப்பகைவன்தாழ்ந்தவனாகிலும் பராக்கிரமசாலிகளாகிய மேம்பா
ட்டையுடையவர்களைப்போலமதித்து சாமபேததானதண்டமெனச்சொ
ல்லும் சதுர்விதத்திரங்களில் முதற்குறித்த மூன்றுஉபாயங்களினால்
வயப்படுத்திக்கொள்ளவேண்டும்- அஃதாவன சமாதானத்தோடாயினு
ம்பகைவன் கூட்டத்திலிருக்கின்ற வீரரைத்தந்திரத்தினாற்கலைத்து தம்மி
ற்சேர்த்துக்கொண்டு வலிகுன்றிப்போகச் செய்தாயினும், சிலஉலுப்பை
முதலிய பொருள்களைக்கொடுத்தாயினுங் காரியசாதகப்படுத்துவதாம்இ
வ்விதமுத்திறங்களினாற் கூடாதாயின் நான்காவதாக விருக்கின்ற அரசர்
களுக்குரிய தண்டத்தினால்வெல்லத்தகும் அதுவாவது நால்வகைச்சயின்
னியங்களைக்கூட்டிக்கொண்டுபோய் இராசதருமப்படிக்கு றவுத்திராகா
ரமாகிய கோபத்தைப்பெற்றவர்களாய் முத்திக்கைப்போட்டுத் தயிரிய
சாலிகளாகிய சேனைகளைக்கொண்டும் தான்படைத்திருக்கின்றஆயுதவகை
புயவன்மையினாலும் எதிரிகள் காரணங்களைமதித்துச் சுற்றிக்கொண்டு
வெற்றிபெற்று திரும்புவர், இவையன்றியும் அரசனேயின்னமொருநீதி
யைச்சொல்லக்கேளும் தம்முடனெதிர்த்துச் சண்டைகொடுக்க வலியற்ற
வர்களையும் உயிற்றிய முகத்திற்பயந்து அடைக்கலம் புகுந்தவர்களையு
ம்புறந்தந்தபேர்கள்மீதினும் சுத்தவீரர்களாகவிருக்கின்றஅரசர்கள்போ
ரைச்செய்ய அவர்கள் மீதிற்போவதும் சேனைகளைச்செலுத்தித் துரத்து
வதும் நிராதபழிபாதகமாம் வீரத்தன்மைகளைப்பெற்றவர்களுக்கு அழ
குமன்று ராசாதிராசனே மேற்குறித்த பிரகாரங்கள் உலகத்திருக்கின்ற
அரசர்கள்நடந்துகொள்ளவேண்டும் நீதியாகும் ஆதலால்தேவரீரைப்பா
ர்க்குமிடத்தில் அழிவற்ற வச்சிரதேகத்தைப்பெற்றவன்மேலும் ஆயிர
த்தெட்டு அண்டங்களுக்கும் ராசபரமேஸ்பரனாகவும்விதுவனாயிற்குறை

பாடுகளொன்றினையும் பெறுதவனாய் இந்திரனாகிய தேவர்க்களைவென்று
அடிமைகொண்டு ஆள்பவன் பிற்மதேவன்காலங்களிற்பஞ்சாங்கஞ்சொ
ல்லிவாழ்த்தவும் மகாவிஷ்ணுவானவன் புகழ்ந்துபோற்றவும்வாழுகின்ற
னையித்தகையசெயங்களையும் புயவன்மைகளையுங் கீற்திப்பிறதாபங்களை
யும்பெற்றிருக்கின்ற தேவரீர் அபலனைத் தமக்குப்பயந்தொளித்துத்தி
ரிகின்றஇந்திரன் சொல்லைப்பெரிதாகக்கேட்டு அவனுக்காளாய்ப் புல்லிய
பூதங்களைச் சேனைகளாகக்கொண்டு ஈஸ்பரன் நேத்தியத்தினம்பெற்ற சி
றுபிள்ளைவந்தால் அவனைஒருபொருளாகமதித்து நீரேபோய்வென்றுவா
நினைந்தீர் அரசனே ஞானென்சொல்வேன்- அவ்வாறேநடப்பீராயின்பி
னுவனாயிற்பெற்றிருக்கின்ற கீர்த்திகளும்மங்கிப் பலராலும்யிகழும்படி
யாகிய வசையைக்கிடைப்பதல்லது வேறொன்றினைக்காணேன் எமதிறை
வனே யிப்போதுவருகின்றபகைவன் சவுரியபராக்கிறமங்களை நிதானித்
துப்பார்த்தவனல்லை மேலும் அவன்படைவீரர்களினது பெருமைகளையு
ம்வீரத்தையும் மதித்ததில்லை -தேவர்க்கள்- அவுணர் - இராக்கதர்- முதலி
யசவுரியவான்களாற் புகழநின்ற உமதுமேம்பாட்டைமறந்தனை நீர்யெ
த்தனித்துச் செய்யப்போகின்ற காரணங்களை உமதுவெற்றியைக்கோறி
க்காத்திருக்கின்றமந்திரி பிரதானிகளுடனும்சொல்லி யோசித்துமேல்ந
டக்கவேண்டியமுடிவைத்தீர்மானித்ததுமில்லைகாரியாகாரியங்களைமதித்
துப்பாராமல் விறுதாவில்ரோகஞ்சூடெழும்பும்படிக்கு அதிககோபத்
தைக்கொண்டுபோகத்துணிவது உம்மையொத்தசூரனுக்குவெற்றிக்குரிய
தோ இவையன்றியும்வீரபராக்கிறமசாலிகளாயிருந்தபோதினும்பூர்த்
தவினைவந்துகூடுமாயின் யிப்பூமியின்கண்வலியில்லாத ஒருவன்கையில்
அகப்பட்டுமாள்வர் உம்மைப்போல அசைவற்றஉறுதிபெற்ற வச்சிரகா
யத்தினைப்பெறுத குறையினால் தாருகாசூரன் யினைத்து மழலைச்சொல்ல
ருதசிறுபிள்ளையினாற் கொல்லப்பட்டிறந்தான்- மேலும் ஒருகாரண
த்தைச்சொல்லக் கேட்பீராக - கலகலெனச்சத்திக்கும் தண்டைசதங்கை
யணிந்திருக்கும் பாதங்களையுடைய சிறுபிள்ளையினால் யானைமுகத்தி
னைப்பெற்ற உன்சகோதரன்மாண்டதை அற்புதமாக நினைக்கவேண்டுவ
தில்லை புசபெலபராக்கிறமசாலிகளேயாயினும் ஒருகாலம்தங்கள்வல்லப
ங்களையிழந்து வாடவரும் அவ்வாறே அபலராயிருப்பவரும் அதிசூர
ராய்ப் பலராலுந்துதிக்கவாழ்வதுமுண்டு ஆதலால் நிகரற்றசெயசாலி
யாயிருக்கப்பட்ட அரசனே சொற்களையின்னமுந் திருந்தமாகப் பேச
வறியாதசிறுகுழந்தையின் பேரிற்கோபித்துப் போரினைச்செய்யநினைந்
துபோவது ஒருபோதும் புகழுக்குரியதன்று யிதனையோசித்து அக்கு
மாரன்சிறப்பினையும் வல்லபத்தையும் சேனைத்திறங்கள் முதலாகிய

ளையுந்தீர்க்கமாய் விசாரணைசெய்து தெரிந்தபின்பு அவனைப்பாற்சிவுந்தி ராகவிருக்கின்ற புயவன்மைபெற்ற அவுணத்தலைவரிற் சிலரைச் சதுரங் கசேனைகளுடன் அனுப்பிப் பகைவரைச்செயித்து வெற்றிபெற்றிருப் பிரெனச்சொன்னன்- இப்படிக்கு விவேகசாலிகளாகிய மந்திரிகளிற்சி றந்தயோசனைபரனுகிய அமோகனென்பவன் அரசர்களுக்கடுத்தநீதிகளை எடுத்துக்காட்டியபோது சூரபதுமனுனவன் அவைகளையோசித்து யிஃ துண்மையாகிய காரியமெனத்தெளிந்தவனுய் மீறியிருந்தகோபத்தைத் தணிந்து நவரத்தினமயமாகிய சிங்காதனத்தின்மீதில் வீற்றிருந்துசபை யிலநெருங்கியிருக்கின்ற மந்திரிகளிற்சிலரைப்பாத்து யிதனைசொல்லு வான். ஓ அறிவாளிகளே- நீங்கள் விரைவிற்போய்-பகன்-மயூரன்-செர ர்னபருதி-சரபன்-சுகன்-முதலிய வேகமுள்ளதூதரை அதிசீக்கிரமத்தி ற்றருவிரெனக்கட்டளையிட்டவுடன் செயசாலியாகிய சூரனைவணங்கிப் போற்றியோடி அரசன்குறித்ததூதரைத்தேடிக்கொண்டுவந்துசேர்த்தன ர், மேற்குறித்தவேவுகாரர் அதிவேகமாய்வந்தவுடன் ராசபரமேஸ்பரன் பாதாரவிந்தங்களிற்பணிந்துநிற்கச் சூரனுனவன் அவர்களைப்பாத்துயிந் தட்சிணம் நீங்கள்துரிதமாகஓடித் திருக்கயிலாயத்தைநீங்கியிந்தபூமண் டலத்தில்வருகின்ற கந்தனென்பவனிட காரணகாரியங்களையும் அவனு டன்சூழ்ந்திருக்கின்ற பூதச்சேனைகளின் பெருக்கையும் அவர்கள்பராக் கிரமங்களையும் மற்றமிராநின்றசேதிகளையும் விபரமாகத்தெரிந்துகொ ண்டு விரைவில்யிவடம்வந்து சேரக்கடவிரெனப்பணித்தனன், அவர்களு ம்ராசாதிராசனைப்போற்றி அவர்பணிவிடையைச் சிரசில்வகித்துபூமண் டலத்தைநோக்கியோடினர், அவர்கள்போயினபின்பு ஒப்பற்றசூரபது மனுனவன் செயசாலிகளாகிய அவுணவீரர் முதலாகிய பலருஞ்சூழ்ந்து போற்ற அரசாட்சிசெய்திருந்தனன், சவுனகாதிரிஷிகளே அகண்டசாம்பி ராச்சியச்செல்வங்களை அனுபவித்திருக்கும் சூரபதுமன் தன்துணைவ னுகியதாருகன் யிறந்தசேதியைத்தெரிந்து துக்கசாகரத்திலழுந்தி வருந் தியகாரணங்களையும மேல்நடத்திய சேதிகளையும் யிதுபரியந்தஞ்சொ ன்னேம்- இனி ஆதிதேவனுகிய சிவகுமாரன் தேவகிரியைநீங்கி பூவட்ட த்தெல்லையில் வந்ததொம்பிரசங்கங்களையும் பேசுவோம்கேட்பீராகவெ ன்றுஆரம்பித்தனர்.

———— ———— ————

## வழிநடைப்படலம்

———

சூதபுராணிகர்- நைமிசாரணியரிஷிகளைப்பாத்துத் தவச்சிரேஷ் டரே முன்னம் நாம்சொல்லியிருந்த தேவகிரியில் மயனுனவன்செய்த நகரத்தின்கண் யிராக்காலத்தைக் கழிப்பதாகச் சிவகுமாரன் தன்சேனை

களுடன் தங்கியிருந்தனரெனப் பேசியிருந்தோம். அவ்விரவுநீங்கிப் பிருதகாலத்திற் சூரியன் உதையமாகியகாட்சி எப்படிக்குக்காட்டியதென்றால், சிரோரத்தினங்களினாற் சோதிக்கப்பட்ட கிரீடங்கள் ஆறும்வயிரகுண்டலங்கள் பன்னிரண்டும் அதிகபிரகாசங்களை வீசத்தக்கதாகப்பலவகை ரத்தினங்களிழைத்திராநின்ற தேவகிரியில் வீற்றிருக்கின்றவெற்றிவேலைக் கரத்திற் படைத்தசண்முகப் பெருமானுக்கு முத்தினங்களை அலைகளினாற்கொழிக்கும் பெருமையினையுடைய சமுத்திரராசன் திரைகளாகியகரங்களினால் ஒப்பற்றமணியொன்றினையேந்தி பெருமதிகொடுக்கநீட்டியதைப்போலச் சூரியபகவான் உதையகிரியிற்றோற்றி மேகங்கள்சஞ்சரிக்கும் வானத்தெழுந்து அடியார்கள் கரங்களைக்கூப்பித்தொழுவதுபோலக் கிரணங்களானவை சிவகுமாரன் திருவடிகளிற் றவழ்ப்பிரகாசித்தெழுந்தகாலத்திற் சண்முகப்பெருமாள் பள்ளியைவிட்டெழுந்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு தேவர்க்கள் நவவீரர்கள்முதலாகிய சேனைகள்சூழ்ந்துபோற்றிவரத் தேவகிரியைநீங்கி நடந்து பற்பலதேசங்கள் வனங்கள் நதிகள் முதலானவைகளைக்கடந்து தவச்சிரேஷ்டராகிய பிருங்கிமகாரிஷியானவர் ஒருகாலந்திருக்கயிலையிற் பத்திபரவசராய்ச் சிவம்ஆதியெனத்தெளிந்தவராதலாற் கர்த்தனைமாத்திரம் வலம்வந்து பணிந்து பராசத்தியைதெரிசித்தவனாய் நடிக்கும்போதுஅம்மன்கோபித்துத்தன்மயமாகிய உதிரமாம்சங்களைக் கிரகித்தகாலத்திற் சத்தியற்றுத்தள்ளாடி வருமுன்னிலையிற் பரமனிரங்கி மூன்றுவதுபாதத்தைஆதரவாகக்கடாட்சித்தகாலத்திற் பார்பதியார் தனதுகணவன் வேதங்களின் அந்தமாய் மூலகாரணனெனத்தெளிந்தவளாய்என்னுண்டவனைப்பிரியாவிடையாகக்கலந்திருந்து பத்தர்செய்யும் வந்தனைவழிபாடுகள்தமக்குங் கிடைக்கவிருப்புற்று இமையராசபுத்திரியானவள் அரியதவங்களைச்செய்து பரமன்வாமபாகத்தைப்பெற்ற சிரேஷ்டமாகிய கேதாரமென்னுந்தலத்தைச்சேர்ந்து உமாபரமேஸ்பரமுகுற்தமாக எழுந்தருளியிருக்கின்ற பரமசிவத்தைப்பணிந்துபோற்றி அத்தலத்தைக்கடந்துபோய்ஆயிரம்பணாமகுடங்களையுடைய சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுவுக்கும் பிர்மதேவனுக்கும் முதன்மையாகவிருக்கின்றபார்பதிபாகனாகிய சிவபிரானே பரம்பொருளென்னுங் காரணத்தைமயக்கவாசனையைப்பெற்ற மானிடர்முதலாகத் திடமாய்த்தெரிந்துவழிபடும்படிக்கு வேதவியாசரானவர் மயக்குற்று நாரணனே பரத்துவமெனநீட்டிக்காட்டியகரமானது அவ்வாறே வெறித்துநின்றுவிடச்செய்தசிறந்தகாசியென்னுந் தலத்தைச்சேர்ந்து விசுவநாதனைவழிபட்டு அப்புறப்பட்டுப்போய்ச் சிலாதரரிஷி விரதமுயற்சியினாற் கிடைத்தபிள்ளையாகியநந்

திரேவர் தேவதேவோத்தமனாகிய சிவபிரான் வீற்றிருக்கத்தக்க பர்வதவடிவைப்பெறநினைந்து அரியதவங்களைச்செய்து சிவகடாட்சத்தினாற் பர்வதமாய்க் கர்த்தனைச்சிரத்திற்றாங்கியிருக்கின்ற பருப்பத கிரியைவணங்கி அத்தலத்திவிரானின்ற சிறப்புகளைக்கண்டு களித்தவராய் அவ்வெல்லையைக்கடந்து அண்டாண்டபுவனசராசரங்களையீன்றமாதாவாகிய பார்பதியாருடன்பிணங்கி பத்திவயிராக்கியங்களைப்பெற்றதொண்டர் யிதையகமலத்தில் யிடைவிடாமல் வாசஞ்செய்யும் சிவபிரானெழுந்தருளியிருக்கின்றசுவாமிமலையைப்போற்றிச்சென்று தாம்திருவிளையாடல்களைச் செய்துவருங்காலத்திற் பாதலத்திற்போய்ஒருபிலத்துவாரமூலமாய்வெளிப்பட்டுநின்ற திருவேங்கிடமலையைப்பார்த்துக் கொண்டுபோய்ச் சிலந்தி-சர்ப்பம்-மும்மதங்களைப் பெருக்கும் யானை-சிவகோசரென்னும் பிராமணசிரேஷ்டர்-கானகத்திற்சஞ்சரிக்கின்றமிருகங்களைவேட்டையாடிப்பாகஞ்செய்து பதறினந்துபடைத்தவேடர் பெருமானாகிய கண்ணப்பநாயனார், புலவர்பெருமானாகியநக்கீரதேவர்முதலானபத்தர்கள்முன்னஞ்சிலதேவகன்னியர்முத்தியைப்பெறவிரும்பி வழிபாடுகளைச்செய்யவெழுந்தருளியசிவக்கொழுந்தைப்போற்றிச் சாரூபப்பதவியைக்கிடைத்துவாழ்ந்ததென்கையிலாயமெனப்புகழுங்காளத்திமலையைவணங்கிப்போய்த்தனக்கொருவரும் நிகரில்லையென்னும் மமதையினால்மீறிஅதிககொடுமைபற்றியகோபத்தைக்கொண்டு காளியானவள் யிப்பூமண்டல முதலானவைகளை நாசமடையச் செய்வேனென்று சீறி எழுந்தகாலத்திற்றாமரைக்கமலவாசியாகிய பிற்மதேவன் முதலானவர்களனைவரும் அவ்வுக்கிரத்துக்குச் சகிக்கப்படாமையால் வாடிவருந்துவதை அறிவுற்றசிவபிரான்தெரிந்து மகாகாளிகெற்வத்தைப் பங்கப்படுத்த திருவுளத்திற்கொண்டுவந்து அவளெதிரில்நின்று மாறிநடனங்களைச்செய்துவென்று அடக்கியதெய்வீகஸ்தலமாகிய திருவாலங்காடென்னும் பதியைத் தெரிசித்துப்போற்றி வழிக்கொண்டு பிரளயகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும்ஏகமாய் மலைகளைப்போல அலைகளைமோதிப் பெருக்கெடுத்தோடி உலகங்களையிடித்துக் கரைத்துக் கலக்கி அழித்துச் சூழ்ந்தகாலத்திலுஞ்சலனப்படாமல் மகாவிஷ்ணு பிற்மதேவன் தேவர்க்கள் ரிஷிகள்முதலானவர்களுக்குப் பரமனைவழிபட்டு வருந்தாமலிருக்கத்தக்க கெடில்தலமாகவுந் திருக்கயிலையைப்போலச் சிறந்து எமதுகர்த்தன்மாவடியின்நிழலில் எழுந்தருளப்பெற்று கம்பாநதி சூழ்ந்துவரும்மகிமையையும் வாய்த்திருக்கின்ற திருக்காஞ்சிபுரத்தைத்தெரிசித்துப் பரிமளமிகுந்தபுஷ்பங்களையணிந்திருக்கும் அளகபாரத்தினைப்பெற்ற உமையவள்பூசித்துப்போற்றிய மூலகாரணக்கடவுளாகிய ஏகாம்பரவாணர்வீற்றிருக்

ளும்ஆலயமும் மகாவிஷ்ணு பிற்மதேவன் முதலாகிய தேவர்கள்ரிஷிக
ள்இராசாக்கள் வழிபட்டுப்போற்றிய மற்றசிவாலயங்கள்முற்றுந்தெரிசி
த்துஅத்தலத்தைக்கடந்துபோய் எமக்குநிகர் ஒருவருமில்லை நாமேபர
மென்றுகருதிய அஞ்ஞானகெற்வத்தினால்மகாவிஷ்ணுவும்பிற்மதேவனு
ம்ஒருவருக்கொருவர் வாதுபேசிச்சபையில் அதிககோபங்கொண்டுதங்
களிற்பரத்துவத்தை ஸ்தாபிக்கும்பொருட்டு கொடியபோராச்செய்து
வருமுன்னிலையில் மன்னுயிர்வருந்தி வாடுவதைச் சிவபிரான்தெரிந்துயி
ரக்கமுற்று அவ்விருவர்மயக்க வாசனையைப்போக்குவதாகத் திருவுளத்தி
ற்கொண்டு அவர்கள்மத்தியில்ஆதிபந்தங்களைக்காணப்படாமல் ஓங்கிநி
ன்றுதடுத்துநல்லுணர்வைத்தந்துரட்சித்தும் மெய்ப்பத்தியுடன்தியானி
த்துப்போற்றும் அடியவர்களுக்கு முத்தியைத்தந்தாண்டுந் தனக்கொப்
பொன்றில்லாமல்நின்றஅருணசயிலத்தையுந்தெரிசித்துவணங்கிப்போ
ய்நரசிங்கமுனையரென்னும் அரசன் அபிமானபுத்திரனாகக்கொண்டுபரு
வகாலத்தில்அருந்ததியையொத்த ஒருகன்னிகையைத்தேடித் திருக்கலி
யாணஞ்செய்யவெத்தனித்து அந்தணர்கோலமும் ராசபரிவட்டணைகளு
ம்பெருத்துவிளங்க மணப்பந்தலில் வீற்றிருந்து சடங்குகள் நடத்திவ
ருகின்றதறுவாயிற் சிவபிரான் ஆதியிற்சொல்லி யிருந்தபடிக்கு அந்தவி
வாகத்தைத்தடுத்தாட்கொள்ளநினைந்து விற்தபிராமணனாகவந்து ஆளோ
லைகாட்டிஅச்சபையிலிருக்கின்றவர்களை மெய்ப்பித்து வழக்கில்வென்று
சுந்திரமூர்த்திகளைத் தமக்கடிமையாகக்கொண்ட பதியாகிய பெண்ணைந
திபெருகும் வளமிகுத்த திருவெண்ணைநல்லூரையும்பார்த்து அப்புறம்
போய்முத்தாலைத்தொங்கலினால்அன்னபூரணியம்மன்வீசத்திருத்துடை
யிற்கிடத்தி நித்திரைசெய்வித்துக் குற்றமற்றபிராணிகளுக்குப்பஞ்சாட்
சரவுண்மைகளையும்போதித்து ரட்சிக்கும்பரமசிவம் தமதுகோலத்தை
க்கடாட்சித்து முத்தியிற்சேர்க்கும் பெருமையினையுடைய வாரணாசியை
ப்பார்க்கினுஞ் சிறந்தமகிமையுள்ள திருமுதுகுன்றமென்னும் பதியைக்
கண்டுசேவித்துப்போய் ஓங்கிஎரியும் யாகத்திற் றமதுசிரேஷ்டமாகிய
சிரத்தையரிந்து பூரணாகுதிகொடுத்துஒப்பற்றதவத்தைமுடித்த பதஞ்ச
லிவியாக்கிறமபாதர்யிவ்விருமகத்துக்களும்ஞானஉணர்ச்சியினாற்றெரிசித்
துக்களிக்கத் தக்கதாகச் சிவபிரான்கிருபையுற்றுத் திருநடனதெரிசனத்
தைக்காட்டியசிதம்பரதலத்தைக்கண்டு குளிர்ந்தசையுந்தளிர்கள்வாய்ந்த
சோலைகள் நந்தவனங்கள் சூழ்ந்திருக்கும் அப்பதியினுள்ளேபோய்க்
கனகசபையினிடத்தில் கோவைக்கனியைநிகர்த்தஅதரத்தைப்பெற்றபா
ர்பதியார் எக்காலத்துந்தொழுதுபோற்ற விராட்புருடனாகிய சிதம்பரே
ஸ்பரர்தேவர்களாலுங் கண்டறியாத ஆனந்தநடனஞ் செய்திருப்பதைத்

குமாரசுவாமியார்தெரிசித்து அன்புமிகுதியினால்உள்ங்கனிந்துகளிக்கத் தக்கதாக வணங்கிப்போற்றி அப்பதியைக்கடந்து அகஸ்தியர் கரத்திற் றுங்கிவந்த கமண்டலத்தில் நின்றும்வெளிப்பட்டுபூமியின்கண் பலமுக மாகப்பாய்ந்து வெவ்வேறுநாமங்களைப்பெற்றுக்கடல்பெருகியதைப் போல ஆர்ப்பரித்துப்போகும் பிரவாகத்தையுடைய காவிரிநதியினைக்க டந்து அதன்வடபாரிசத்திற்பெருகும்மண்ணியாற்றங்கரையிற்கிறுபரு நதியாகியபாலசுப்பிரமணியதேவர்வந்துசேர்ந்தனர்.

---

## குமரபுரிப்படலம்

---

சூதபுராணிகர் - சவுனகாதிரிஷிகளைப்பார்த்துச் சொல்லுவார் குமாரதேவர்மேற்குறித்த சிவஸ்தலங்களைத் தெரிசித்துக்கொண்டு மகா விஷ்ணுமுதலாகிய தேவர்களும் அளவற்றபூதப்படைகளும் சூழ்ந்து வரத்தக்கதாக மண்ணிநதியென்னும் ஆற்றங்கரையில்வந்துசேர்ந்ததறு வாயிற் பெருகியதூளிப்படலமானது வானவெல்லையெங்கும்பரந்துஆ யிரங்கிரணங்களை வீசிப்பிரகாசித்திருந்த சூரியன்திரேகத்தைமூடி விழி களினும்படிந்ததால் அதைசுத்திசெய்துக்கொள்ளும்பொருட்டுஓடிக்கட லிற்குளிக்கின்றவனைப்போலப்பகற்போதுகழிந்து அந்திசாலம்நேர் ந்தபடியால் மேற்குசமுத்திரத்தில் ஆதித்தன்மறைந்தனன் - யிவ்விதமா கப்பகலவன் கடலில்முழிகியகாலத்தில் மாலைப்போதும் அதைத்துடர் ந்தயிருளும் பாலசந்திரோதயமும் நட்சத்திரங்களும் வானமுதலியயி டங்களெங்கும் நிறைந்துதோற்றுவது எப்படிக்கிருந்ததெனில், இவ்வு லகங்களைஏகசக்கிறத்தைச்செலுத்தித் துஷ்டநிக்கிறகசிஷ்டபரிபாலனஞ் செய்து நீதிபரனுய் அரசுசெலுத்திவந்த சக்கிறவர்த்தியானவன் காலாதிக ளில்யிறந்ததறுவாயில் அதுபரியந்தம் அவனுக்குப்பயந்து ஒளித்துக்கா லம்பாத்திருந்த பகைவராகிய குறுநிலமன்னர் பலதிசையினும் வீறிவந் துவளைத்துத்தங்கள் வசப்படுத்திக்கொண்டதை யொப்பக்காட்டியது,இ வையன்றியும் பலவளங்களைக்கொண்டிருந்த தாருகாவனத்தைப்போல வானத்தில்பரந்தெழுந்த யிருளானதுவிளங்கவும் அவ்வனத்தில்வாழ்ந்த ரிஷிபத்தினிகளை நிகர்த்து நட்சத்திரங்கள்சொலிக்கவும் அதனடுவில்விள ங்கும் அந்திவானமானது பிச்சாடனமூர்த்தியாகவந்த பரமனைப்போல த்தோற்றவும் அம்மங்கையர்படைத்தஅன்னம்நிறைந்திருக்கின்றகபால த்தைப்போலமூன்றும்பிறைபானதுவிளங்கியது,அன்றியும்கலைகளின்வி ளக்கமானது பெருத்தவெண்மைதங்கிய வானமென்னும்விரிந்ததிருப்

யார்ந்தகடலில் மேகபுருஷனாகிய வணிகன் அதனிடமுதலிய தலங்களிலிரு க்கும்பொருள்களனைத்தையும்நிரப்பிக்கொண்டுபோய் உலகங்களில்விற் பனைசெய்வதாகச்செலுத்துந் தோணியைப்போலவும் பிறையானதுதோ ற்றியது,இவ்விதசிறப்புகளுடன்விளங்கியமாலைப்போதிற் காடாந்தகா ரமாகிய யிருள்மூடியபோது சண்முகப்பெருமாளினது சுயஞ்சோதிவு டிவினின்றெழுந்தவொளியானது யிருட்பிழம்பின் வீக்கத்தையும் பாலசந் திரன்தோற்றத்தையும்அடக்கிச் சூரியனுதையத்தைப்போலப் பிறகாசிக் குந்தன்மையினாற் பரம்பொருளாகிய சிவபிரான் வீற்றிருக்கப்பெற்ற வெள்ளியங்கிரியை நிகர்த்துபூவட்டமெங்குந் துலங்கிக்காட்டவும்பிறதி பிம்பித்திராநின்ற ஒளியைப்பெருக்குந் திரோசுத்தைப்படைத்தசவுரியவ ானாகிய குமாரதேவர்பவுத்திரமாகிய மண்ணியாற்றங் கரையினிடத்தில் எழுந்தருளியிருக்கின்ற தருவாயில் மகாவிஷ்ணுபிற்மதேவனாதியாகக்கூ டிபரமசிவத்தோற்றமாகிய பாலசுப்பிறமணியனைத்தொழுது யிதனைச் சொல்லுவதாயினர், கர்த்தனேயிந்த சிறந்தநதியின் விசாலமாயகரைமு ற்றினும் துல்லியமாகத்தோற்றநின்ற மணற்றிட்டைகள் கண்காட்சியா கமலிந்து பற்பலகனிவகைகள் பெருத்திருக்குந்தோப்புகள் சோலைகள் திவ்வியமலர்க்காவுகள் நெருங்கியிருக்கின்றதுமன்றியிற் சந்திரசட்டாதர க்கடவுளாகிய சிவபிரானெழுந்தருளும் ஒப்பற்றஸ்தலங்களும் மிகுதியா கவிருக்கின்றதினால் யித்தகையயிடங்கிடைப்பது மிகவும் அரிது ஆதலாற் கர்த்தனே யிவ்விரவுநீங்குகின்றபரியந்தம் யித்தலத்தில்எழுந்தருளவேண் டுமெனப் பிரமன் விஷ்ணு முதலானவர்கள் விண்ணப்பத்தைச்செய்தகா லத்தில் யாவரினும் முதன்மைபெற்றிருக்கின்ற சரவணபவன் அவர்கள் சோபிக்ஷையின்படிக்குச் சம்மதித்துபடைக்குந் திறத்திற் சிரேஷ்டனாகி ய விசுவகர்மனை அழைத்து யிதனைக்கட்டளையிடுகின்றனர், சிருஷ்டித் தொழிலிற் பிற்மதேவனைப்போல நிருமிக்கவல்ல திறமையுள்ளவனே ஒ ருக்ஷணப்போதில் யிந்தநதிக்கரையினிடத்தில் தேவர்க்கள் பூதப்படைக ள்முதலானவர்கள் தங்குவதற்குத் தகுதியாகியவிடுதிகளும் நாமிருப்பத ற்குயோக்கியமுடைய மாளிகைமற்றும்வேண்டுவன அடங்கியிருக்கும் ஒருநகரத்தை அழகுபெறச்செய்து முடிக்கக்கடவையெனப் பணித்தவு டன் மகாபாக்கியமென வணங்கிப்போய் ஒருயிடத்தைக் குறித்துநாற் புறங்களினும் மதிலும் அதன்மத்தியிற்சிவகுமாரன் தேவர்க்கள்படைவீ ரர்சேனைகள்தாராளமாகயிருக்கத்தக்க மாடமாளிகைகள் கூடகோபுரங்க ள்முதலிய சிறப்புகளைப்பெற்றவீதிகள்முதலியவளங்களைக்கொண்டிருக் கும்நகரத்தைமனதிற்குறித்துச் சிருஷ்டித்து அதனதிசெயங்களைக்கண் டசகலரும்மயன்வல்லபத்துக்கு மெச்சிக்கொண்டாட முற்றியவுடன்

தேவதச்சனானவன் திரிபுரதகனராகிய சிவபிரானுக்கினியகுமாரனாய்த்தேசோமயமாகிய திரோகத்தையும்படைத்த கந்தசுவாமியைக்கண்டு வணங்கிஆதிகர்த்தனே தேவரீர்கட்டளையின்படிக்கு நகரமாயிற்று கிருபையுற்றுஅசனிடத்தெழுந்தருளவேண்டுமென விண்ணப்பஞ்செய்யக் கேட்டவுடன் சிவசுப்பிரமணியக்கடவுள் தேரைவிட்டிறங்கி விஷ்ணு பிரமன் இந்திரனாதியதேவர்கள் ரிஷிகள் சேனைத்தலைவர்கள் பூதவெள்ளங்கள் சூழ்ந்து துதித்துவர அந்தபட்டணத்திற் பிறவேசித்து மேகங்கள்சஞ்சரிக்கத்தக்க உன்னதமுள்ள மதில் கோபுரவாயல்கள் மேடைகள்உப்பரிகள் மாளிகைமுதலிய வளங்களைத்திருத்தமாகச் செய்தமைத்தநகரத்தின் சிங்காரங்களைவிவேசம்பன்னராகிய குமாரதேவர்பாத்து நாம்வாசஞ்செய்வதற்குயோக்கியமாகிய பதியிதுவெனமதித்து தேவதச்சன் செய்பாகத்தினைப்புகழ்ந்துகொண்டாடிப்பேசிய முன்னிலையிற்சமீபத்திலிருக்கின்றசகலரும்வெற்றிவேலாயுதக்கடவுளினது வாக்கியத்தைக் கேட்டமாத்திரத்திற் பற்பலசிங்கார வளப்பங்களைப்பெற்றிருக்கின்ற அப்பதிக்குத்திருச்செஞ்சூரொன்றும்சிறந்தபெயரையிட்டனர், அந்நாமத்தைக்கொண்டே யிந்தகாலத்திலும் விளங்குகின்றது- இப்படிச்சகலருங்களிக்கத்தக்கதாகவிளங்கும் வீதிகளைக்கடந்து சேனைகள்போற்றவுந் துணைவர் விஷ்ணு முதலானவர்கள் வாழ்த்தவுங் குமாரதேவரானவர் தமக்கேற்படுத்தியதிருமாளிகையில்எழுந்தருளி சபாமண்டபத்தில்விளங்குஞ்சிங்காதனத்தில் வீற்றிருந்ததறுவாயிற்றம்மைப்புகழ்ந்து நிற்கின்றமகாவிஷ்ணுமுதலிய தேவர்களுக்குச் செலவுகொடுக்க அவர்களும் பன்னிருபுயாசலங்களையுடைய சிவகுமாரனைவணங்கிப்போய்த் தத்தமக்குநியமித்திருக்கின்ற விடுதிகளிற்சேர்ந்து களித்திருக்கவும் பூதப்படைகளும் சமுத்திரத்தைப்போல ஆரவாரங்களைச் செய்துகொண்டு நடந்து விசாலமாகவிருக்கின்ற சாலைகளில்யிறங்கி வாசஞ்செய்தனர், அக்காலத்தில்நவவீரர் இலக்கர் வழிபட்டுப்போற்றத்தக்கதாக அடியேனையும்ஒருதொண்டனாகக்கொண்டு ரட்சிக்குந்தீனதயாபரமூர்த்தியாகிய சிவகுமாரன்செஞ்சூரிலிருக்கின்றதறுவாயில்எமதிறைவனிடத்தில் விடைபெற்றுப்போனதேவர்களிலொருவனாகிய இந்திரன்செய்கைகளைச்சொல்லுவோம், சகித்தற்கரிய கொடுமைகளைச்செய்து புயவன்மையிற் சிறந்தவனாகவிருந்ததாருகாசூரனும் அவனுக்குதவியாகநின்று மாயவித்தைகளினால் வருத்தியிருந்த கிரவுஞ்சகிரியும் அதப்பட்டுப்போன காரணத்தினால் இந்திரனானவன் அதுவவாயிலிருந்த மனச்சஞ்சலங்கள் முற்றும்போக்கி மகிட்சியுடன் நகைமுகனாய்ச் சிறந்த தேவாமுதத்தை மீளவும் பொசித்தவனைப்போலத் திரோகங்குளிர்ந்து யிருக்கின்றதறுவாயில் நினைந்தவர்களு

க்குமுத்தியைத்தரும்பெருமையினையுடையசீகாழித்தலத்தைச் சூழ்ந்தவனத்தில் வாசமாயிருக்கின்ற தேவதைவந்து இந்திரனைச்சேவித்து மேகங்கள்சஞ்சரித்திருக்கும்விண்ணாட்டுக் கதியன் அணியத்தக்கதவரத்தின ஆபரணங்களும் கலவைச் சாந்தினைப் பூசப்பட்டு விம்மிப் பருத்திருக்குங்கொங்கைகளைப்பெற்ற இந்திராணி தரிக்கும் திவ்விய பூஷணங்களும் பொன்னாடை பீதாம்பரங்கள் அடங்கிய பெட்டியைத் தன்வசத்தில்முன்னம்அடைக்கலமாக வைத்திருந்ததை அகில்சந்தன விருட்சங்கள்மலிந்திருக்கும் அவ்வனத்தேவதை எடுத்துவந்து எதிரில்வைத்ததாய் தேவராசனே கேட்டருள்க- சிலதினங்களுக்குமுன்னம் அவுணருக்கஞ்சி நீயுமுன்பத்தினியும் சீகாழித்தலத்தைச்சேர்ந்து மறைவிடமாகத் தவவிரதங்களைச்செய்யப் போகுமுன்னிலையில்என்னிடத்தில்வைத்துப்போன பணிதிகளிவையாகும் யினிஉமக்குச் சவுக்கியகாலமாதலாற் கொடுக்கின்றேன்வாங்கிக்கொள்ளுமென்று சொல்லிநின்றதறுவாயில் மகாவிஷ்ணு அவ்சையிற்றோற்றிய உபேந்திரனுக்கு மூத்தவனாகிய இந்திரன்தனக்கு ஆதியில்பிரமதேவன் படைத்துக்கொடுத்த அபரணமுட்டையைக்கற்புத்தன்மையைப்படைத்த அயிராணிவிருந்து தினகாட்சியாகப்பாத்துப் பிறகாசத்தைதவீசும் வயிரங்களினாற் செய்யப்பட்டபூண்கள் நிறைந்திருக்கின்றவஸ்திரமுடிச்சை மகாலட்சுமிவாசஞ்செய்யும்செந்தாமரைக்கமலமானதுவண்டினங்கள்மொய்க்க அலர்ந்ததைப்போலத் துரிதமாகஅவிழ்த்துமூடியிருந்த சீலையைச்சடுதியில் விலக்கியமாத்திரத்திற் பிறகாசம்பொருந்திய நுதலைப்பெற்ற தன்னாயகியணியநின்ற பூஷணங்கள்மேல்வரிசையிற் காணப்பட்டபோது விழிகளார்க் கண்டமாத்திரத்தில் இந்திராணியினிடத்தில் நினைத்தற்கரிய யின்பசுகங்களையனுபவித்தவனாதலால் அவளைமனதில்நினைந்து யானைக்கோடுகளையொத்து நிமிர்ந்திருக்குந்தனபாரங்களைவாய்ந்த பொற்பாவைக்கு நேராகஉவமிக்குந் தன்தேவியிடத்தில் யிச்சைகொண்டு பெருகாலமாக அவளுடன் வங்கணமாகக்கூடியில்வாழ்க்கையிலிருந்த காரணங்கள் அனைத்தையும்சிந்தித்து நோக்கியகாலத்திற் காமக்கவலைவலிபெற்றலைக்க அதன்வயப்பட்டுநெய்யை அதிகரித்துவிடவெழும் அக்கினியைப்போலக் காமக்கனலானதுசடுதியில்மீறியதறுவாயிற் சுரதலீலைகளையேயிச்சித்திருக்குங்கருத்தினனாதலால்வருந்தியங்கிபெருமூச்செறிந்து வெதும்பிக் களைத்து வாடிச்செக்கிலிட்டாட்டிப்பிழிந்தெறிந்த பிண்ணாக்கைப்போல உதிரமாம்சத்தினால்விளங்கியிருந்ததிரேகமானதுபொலிவற்றுச்சுருங்கிக்காட்டமெலிந்துகைவன்மைபெற்றசித்திரக்காறன் எழுதும்பதுமையைப்போல அசைவற்றுதெய்வமருள்பிடித்தவனையொப்ப பிறமைகொண்டிருந்தனன், கேட்டீர்களோ

சவுனகாதிரிஷிகளே மயிலிறகின் அடியைநிகர்த்து அணியபடவிருக்கின்ற
வெளுத்தபலவரிசையினைப்படைத்த இந்திராணியினது தனபாரங்கள்அ
ழுந்தக்கட்டியணைந்து நாள்தோறும் யின்புற்றிருந்தவன் யிப்படிக்கு
ப்பிரிந்து தனிமையிற்சோருவனாகில் அவன்வருத்தங்களைச்சொல்லி மு
டிவதோ, இவ்விதமாகத் திரோகம்மாறுபட விரகதாபமேலிட்டு இந்திரா
ணியைநினைந்து வருந்துகின்றதேவராசன் எதிரிலிருக்கின்றபொன்னணி
களைத்தரித்துக்கொள்ள விரும்பாமல் தன்பரிசனனைப்பார்த்து யிதனைச்
சொல்லுவான், யிந்தமுடிச்சைஎடுத்து முன்போலச்சேர்த்துக்கட்டிமுத்
திரிதருஉங்களிடத்திற் பதலமாகவைத்திருக்கக்கடவீர்களெனக்கட்டளை
யிட்டமாத்திரத்தில் வணங்கி அவ்வாறேமுடிக்கின்றனமென அந்தநிமி
ஷத்தில் அதனைச்சீர்பெறபந்தித்துத் தகுந்தயிடத்திற்சேர்த்துப்போற்றி
யிருந்தனர், அத்தருவாயிற் கூரியவச்சிரதானான இந்திரனானவன் வனதே
வதையைநோக்கி யிதுபரிபந்தம் யிப்பணிதிகளைப்பதலப்படுத்தி வைத்தி
ருத்தற்குக்களித்தனம் உனதுவனத்தைச்சேர்ந்து போற்றியிருப்பை
யெனச்சொல்லியபோது நல்லதென்று அரசனைவணங்கிச்செலவுபெற்று
க்கொண்டுபோயது, இப்படிக்குப்பரிசனரும் வனதேவதையும்நீங்கிய
தருணத்தில் இந்திரன்தனியனாய்ப் புலோமிசையை நினைந்துநினைந்து
காமநோயானது அதிகரித்து அவ்வெப்பத்தின்கொடுமையினால் மனங்க
லங்கிஎரியுண்டு திரோகமுற்றுத் தீயெழக்களைத்து அவளிடத்தில்மனதை
ப்பூர்த்தியாகவைத்து எங்கிளவரும் பிறகாசம்பொருந்திய ஆபரணங்களை
யணிந்திருக்கும் பள்ளமங்கையர் கரியஅளகபாரத்திற் சூடியிருக்கும்
புதியமலர்களிற்பெருகுந் தேன்களை அருந்தியிரவிற் புஷ்பசயனங்களி
ற்றுஞ்சும் சோலைகளுக்கடுத்த யிடமொன்றைச்சேர்ந்து அவடத்திலிரா
ணின்றமணற்றிட்டைகளிலொன்றின்மீது விற்றிருந்தனன், அத்தருவாயி
ற்சூரியனது கொடியகிரணங்களினால் வெப்பமிகுத்துக்காய்வதினும் அ
திகமாய்த்தனக்கு நீஷித்துக்காட்டும் யிராக்காலத்திற் சந்திரகலைகள்தாக்
குந்தோறும் புஷ்பக்கொத்துகளிறைந்திராநின்ற மணல்மேடானது இ
ந்திரனுக்கு மிகவும்வெப்பத்தைக்காட்டிக் காருண்டமேகப்பெய்யலைச்
சுவற்றிக்கொதித்திருக்கும் பாலைநிலத்திற் பரந்திருக்கும் பரல்கள்திரண்
டோங்கியிருக்கும் மலையைப்போற்காட்டும் மணற்றிட்டையின்மீதிற்
பள்ளிகொண்டிருக்கும் இந்திரன் சந்திரப்பிறகாசமானது தன்பேரிற்
ருக்கியமாத்திரத்தில் வேறொருதுணையும் மற்றவனுய்ச்சகிக்கப்படாமற்
புரண்டுபுரண்டு வருந்தினன்; இப்பிறகாரஞ்சந்திரன்தகிக்கமற்றொருபு
றத்தில் வெற்றிபானுபெமன்மதன்செலுத்தும் புஷ்பபாணங்கள் முதலா
னவைவரும்த்தலைக்கின்றகாரணத்தினால்புத்திமயங்கிக் காமமிகுதியினால்

தேவராசன் புலம்புவதாயினன் - நிலவின்வெப்பத்துக்காற்றுமற்றிகைத்
து ஓ சந்திரனே உன்னுண்டிறத்தை என்சொல்வேன் புதியமலர்களினால்
அலங்கரித்திராநின்றஅளகபாரத்தைவாய்ந்தஇந்திராணியாளவள்முன்ன
மேனதுடலிற் பிறவேசித்துப் பிராணனைக்கிறிகித்துக் கொண்டுபோகநி
ன்றதிரோகத்தையுஞ் சுட்டுவாட்டுகின்றனை நன்மரபிலுதித்த திங்களே ஒ
ருவிதவருத்தத்திற் பட்டுவாடுகின்றவர்களைப் பேரறிவாளராக விருப்ப
வர்மேலுஞ் சிலகொடுமையைச்செய்து வாட்டுவரோசொல்லுவையெனத்
தூறியும் அழிவுபடாத அமுதத்தினைச்சகலருக்கும் பகிர்ந்துகொடுக்கநி
ன்ற நீவிஷச்சுவாலையை வீசுவதென்னகாரணம் யிவன்சத்திராதிகளுக்கு
த்தப்பிப்பிழைத்திருக்கின்றனன், இவன்பிராணனைவாங்கவேண்டுமென
த்தீர்க்க சபதங்கொண்டனையோ வெனச்சோர்ந்தும் தினேதினேவிந்தி
யாகவளரும் பெருமைபெற்ற நீயிட்படிச்சூத் தயைதாட்சணியமென்ப
தைச்சற்றுமில்லாமல் வருத்துகின்றனை மேலும் யிதுதருணமென்றறிந்
தெதிர்ந்தனை யிந்தருதுகளையாவருடன்கூடிச்சற்றினை திருடனேயென
க்கெஞ்சியும் சுந்தரவதிகளாகிய மங்கையரிடத்தில் உண்டாகும் சாமமு
ம்அதினாற்பெருகும் விரகமும் உனக்குமுண்டன்றோ அச்சாரணத்தினு
ற்றக்கன் உன்னைச்சபித்ததைமறந்து முன்பின்யோசியாமல் அலைவி
றைத்துக்கொல்லுகின்றனை குளிர்ந்தகலைகளைப்பெற்றவனுக்கு யிது தரு
தியோவென்றிரந்தும், இதுபரியந்தம் அரியதவங்களைச் செய்துவருந்
தியதினால் எலும்பல்லதுமாம்சச்சாரமெவ்வளவுங்கிடையாததிரோகத்தை
யுடையவனைக் கிருபையற்றுச் சுடுவதிற்பயனென்னை யிதையோசித்துப்
பாத்து என்னொருவனைமாத்திரம் விட்டுவிடக்கடவையென்று கரங்களை
நீட்டிவேண்டுவன் ஓ சந்திரனே அண்டவெல்லையிற் றிரிவையாதலாற் பூ
மண்டலம் அஷ்டதிக்குகள் வானவெல்லையில்நடக்கின்றசேதிகளனைத்து
ம்உனக்குத்திற்கமாகத்தெரியும் மெல்லியயிடையினைப்பெற்ற ஒருபெ
ண்கொடிஎன்னுயிரைக் கிறிகித்துக் கொண்டு போயினள், சந்திரபகவா
னே அவளையெவ்விடத்திலாவது நீபார்த்ததுண்டோசொல்லெனப்போ
ற்றுவன், இவ்விதமாகச்சந்திரனைத்தூறிய இந்திரன் அத்தருவாயில்மன்
மதன்செய்யும் போருக்கு ஆற்றாதவனாய் யிதனைச்சொல்லுவான், நான்
முன்பிறந்தேன் எனக்குப்பின்னவனாகிய உபேந்திரனுக்குப் பிறந்தகு
மாரனாகிய மன்மதனே நீயிதுபரியந்தங் கற்றவித்தைகளினாற்பற்பலவி
தங்களிற் பெரியதந்தையென்பதையும் யோசியாமல் வருத்துவது பழி
யல்லது மேம்பாட்டுக்குரியதோ சொல்லென்று வினவுவன், இதுவல்
லாமற்சடுதியில் உன்திரோகத்தைச் சாம்பலாகவெரித்த திரிநேத்திரதாரி
பெற்ற சிவசுப்பிரமணியதேவர் யித்தலத்துக்கடுத்திருக்கின்றனர், இத்

தகையகொடுமைகளை நீசெய்வது தெரியுமாகில் கணப்போதில் உன்பிராணனைவாட்டுவதற்கு ஐயமில்லை- அதைநினைந்துஎன்மீதிற்பகைத்துப்பாணங்களைச்செலுத்திச்சண்டைகொடாமற் றுரிதமாகப்போய்விடு போய்விடுஎன்னிடத்திரக்கமுற்றுயிதனைச்சொன்னேனெனப்பயமுறுத்துவன் அக்காலத்தில் அசைந்துவருந் தென்றலைச்சிறி வானத்திற் சஞ்சரிக்கின்ற சந்திரன்செலுத்துங் கலைகளாகிய அனலானது தாக்கிக் கன்றியிருக்கின்ற திரேகத்தில்மன்மதன்விடுத்தபாணங்கள் நாராசங்களைப்போலத்தைத்துத்தைத்துக்காயப்படுத்தியவிடங்களில்ஈக்கள்மொய்த்துவருத்துவதைநிகர்த்துவாட்டுகின்றனை இதுவுமல்லாமல் உன்செய்கைகளைப்பார்க்குமிடத்திற்கடினசித்தமுடைய வேடர்வலைகளைவீசி மானைப்போல வஞ்சகவோசையைக்காட்டி அதனைக்கேட்டுத் தன்னினமிருக்குதென்று வந்துசேர்ந்த மான்கூட்டங்களில் ஒன்றொழியாமற் பிடித்துக்கொண்டு போவதைப்போல யிக்காலத்தில் நீ மெல்லஎன்சுவாசமூலமாகத் திரேகத்திலுள்ளே பிறவேசித்துப் பஞ்சப்பிராணனையும் வலித்துவருத்துகின்றனை, ஓதென்றலேஎக்காலத்திலாவது உனக்கேதேனுங் குறைபாடுகளைச் செய்ததுண்டோ அதைநினைந்து யிப்படிக்குக்கொல்லுகின்றனையோவெனப் புலம்புவன், ஆந்தையொலிப்பதற்குச் சகிக்காமல்,மிகுத்தரூபலாவண்ணியத்தைப் பெற்ற தருணமங்கையர்களினால் உண்டாகும் காமக்கவலையென்னுங் கொடியசமுத்திரத்தில் அகப்பட்டுவருந்துகின்றவர்களை யிறத்தலுக்கேதுவாகவிருக்கின்றவர்களிற் கூட்டிக்குறித்துக் கூவுங்கொடியபட்சியே என்செய்வேனென்று வாடுவன், குயில்கூந்தலைக்கேட்டுவருந்தி ஓ குயிலேநமது உருவைஒருகாலந்தேவராசன்பெற்றனன், இவனைவருத்தலாகாதென்றழைப்பதிராமல் அரிசவோசையைச்சிலகாலங்காட்டியுஞ் சிலபோது வநிதாயிருந்தும் யிப்படிக்குமன்மதனுக்குதவியாகநின்றது உனக்கழகோவென்றேங்குவன். பொழுதுவெடியாததைக்குறித்து ஓ சூரியனே பூர்வத்தில் நீயும் நானுமாய்க் கூட்டுறவாக ஒருபெண்கொடியைச் சேர்ந்துகளித்துயிடைவிடாமற்சினேகத்தைக்கொண்டாடியிருந்தனம், இந்தசேதி தேவர்களும்அறிவர், அக்காலத்தில் நடந்ததுகளில் எதையாவது வித்தியாசமாகநினைந்து கோபங்கொண்டிருக்கின்றனையோ நான்யிப்பாடுகள்படுவதற்கிரங்கிவந்து தேறுதலைசொல்ல உதியாமல்சூரியபகவான்மறைந்திருக்கின்றனனே. இதுமிகவும் அநியாயம் அநியாயமெனச்சோருவன். அனதில்ஒலிப்பதற்காற்றாமல் செழித்த யிதழ்களைப்பெற்றதாழைகளின்பொத்தில் வாசமாயிருக்கும் அழகியமூக்கினைவாய்ந்த அனறிற்பட்சிகளானவை வலியகருப்புவில்லைப்படைத்தமாரன் வெற்றியைக்குறிக்கும்எக்காளத்தைப்போல யிரவுமுற்றும் சற்றுவதா ஒய்வின்றிஒலித்திருத்

நின்றது உறக்கம்வாராதோ, இதுமிகவுங்கொடுமைஎன்பன் சமுத்திரஓசைக்காற்றுமல் எனக்குச் சத்துராதிகளாகவிருக்கின்றராட்சதரைதன்னிடத்தில் ஒளித்துவைத்துக்கொண்டு என்னைமுன்னம் மிகவும் வருத்தியது அத்துடன் போகாமல்யிக்காலத்திலும் என்பிராணனைவாங்கநினைந்துமமன்மதன் வெற்றிமுரசமாக ஒலித்துநின்றதேவாயடங்காதோவென்செய்வேனென்பன். சவுனகாதிரிஷிகளே தேவராசனானவன் யிப்பிறகாரம்அவ்விரவுமுற்றும் நித்திரையில்லாமல் விரகாக்கினியுற்றியலைங்கவாடிக் கிலேசித்ததல்லது எவ்விதத்திலாவது சவுக்கியத்தைப்பெற வருகாரணங்களையுந்தேடவகையற்றவனாய்மனமானது அதிககவலையிற்பட்டுவாடினன் அவன்பட்டதுயரத்தை ஒருவிதமாகச்சொல்லிமுடியாது, அத்தருணத்தில்ஆதித்தன் உதையமானத்துக்கு சில வுவமானம்சொல்லக் கேட்பீராக- இந்திரனானவன் இந்திராணியினிடத்திற்பெற்று வருந்துகின்ற காமநோயைத்தெரிந்து பழையநட்பைக்கருதி மனமிரங்கி அவ்வருத்தங்களைஒழித்துச்சவுக்கியத்தில்வைக்க எத்தனித்தவனைப்போல ஒற்றைவண்டியும் நவரத்தினமயமாகிய அச்சு மச்சு குத்துக்கால் கொடுங்கை முதலிய சிங்காரங்களைக்கொண்டு ஏழுபச்சைக்குதிரைகளைப்பூட்டி அருணன்செலுத்தும் ரதத்தின்மீதில் ஆரோகணித்து ஆயிரங்கிரணங்களைப் பரப்பிச்சூரியனானவன் கீழ்த்திசையிலிருக்கின்ற வுதயகிரியின் மீதிற்றோற்றி வெளிப்பட்டகாட்சியாவது அடர்ந்துஉலகங்களை வருத்தியிருந்த யிருட்கூட்டமாகிய ராட்சதவெள்ளத்தைக்கண்டித்து வானத்தில்வீறியிருந்த சந்திரனாகிய சிங்கத்தைக்கண்டுசீறி அழகியகிரணசமோகங்களாகிய ஆயுதங்களைப்பலதிசையிலும்போக்கி அந்தமிருகராசன் ஆணவத்தைஅடக்கும் சரபப்பட்சியைப்போலவெழுந்தசூரியனானவன் சொலித்துவீசுங் கிரணப்பெருக்காகிய தூசிப்படையானது பரந்தலைப்பதால் அதற்காற்றுமல் நிலவின்வீக்கமாகிய சேனைகள்முற்றும் முதலணியில் மாண்டமுன்னிலையில்- அவனைச்சூழவிருந்த நட்சத்திரங்களாகிய படைத்தலைவரும்பட்டுபோகச்சமர்க்களத்திலெதிர்ந்த அரசன் தன்படைகள் பின்னப்பட்டுத்தானும்வருந்திய காலத்தில் முதுகிட்டோடுகின்றவனைப்போலச் சந்திரன்தன்காந்திகள் அடங்கி ஒடுங்கி மறைந்தான், இப்பிறகாரம் விரிந்தபலகிரணங்களாகிய சேனைகளைச் சூரியராசன்செலுத்த மீறியிருந்த சந்திரிகைகளாகிய படைகளைவாட்டியபோது அவற்றிற்குத்தலைவனாகவிருந்தசந்திரராசனும் புறங்காட்டி மங்கியடங்கியதால் சூரியன்பின்றுடர்ந்து போனவனன்று அதேனெனில் சமர்க்களத்தில் அஞ்சியோடுகின்றவரைச் சுத்தவீரராகவிருப்பவர்கள் துடர்வரோ. அவ்வாறே சூரியன்மெல்லத்தன் வழியிற் சென்றனன், அக்காலத்திற்றாமரைக்கமலங்கள் அலர்ந்தகாட்சி

யும்அல்லிமலர்கள் குவிந்ததோற்றமும் எப்படியிருந்ததெனில், தங்க
ளுக்குபகைவனாக விறியிருந்தசந்திரனுக்குத் தங்கள் கணவன் சூரியன்
வெளிப்பட்டகாலத்திற் சம்பவித்தகுறைபாடுகளைக்கண்டு வாய்விள்ளாந
கைக்கின்றதைப்போல தாமரைகள் அலரவும் தங்கள்கணவனுக்குச் சம்ப
வித்ததன்பத்தைத்தெரிந்து மேலும் ஒருகெடுதிநேராமல் மன்னித்து
ப்புருஷபிச்சை தாவேண்டுமென்றிரந்து கரங்களைக்கூப்பிச் சூரியனைத்
தொழுவதுபோல அல்லிகள்குவிந்தது, இவ்விதஅதிசெயக் காட்சியுடன்
சூரியபகவான் வெளிப்பட்டகாலத்திற் சமுத்திரமுதலியசெலப்பெருக்
கைவாய்ந்ததடாகங்கள்முற்றும்அலைகளைவிசிக் களிக்கவும்தாமரைமுதலி
யமலர்கள் அலர்ந்து தேன்களைப்பெருக்கிப்பரிமளம் வீசியிருக்கவும்வ
ண்டுகள் தயதுபள்ளிகளைநீங்கித் தென்னு தென்னுவென்ராகங்களைப்பா
டிக்கொண்டு சோலைகள்முதலிய விடங்களிற்போய் மதுக்களை யருந்தி
த்திரியவும் சிங்கமுதலியமிருகங்கள் தங்கள் படுக்கைகளைநீங்கிக் கெற்சி
த்தயிரைதேடிப்போகவும் அழகியசிறகைவாய்ந்த அந்தப்பட்சிகள்தா
மரைச்செக்கையைப்பிரிந்து வுலவவும் மற்றபட்சிசாலங்கள் காவுகூவு
மெனக்கூந்தலிட்டுப் பறக்கவும்·மானிடரும் நித்திரைநீங்கிக்களிக்கவும்
இவ்விதமாகச் சகலசெந்துக்களும் விழிக்களித்தன - சவுனகாதிரிஷிக
ளேயிச்சரித்திரம் நிற்க யினிதேவராசன் காரணங்களைச்சொல்லுவோம்
சூரியபகவான் உதித்ததறவாயில் சராசரங்கள் அடங்கிச் செழித்திருக்கு
ம்உலகங்களெங்கனும்பரந்து அடர்ந்து வீறியிருந்தயிருள் அனைத்தும்
சூரியகிரணகாந்திக்குப்பயந்து ஒளித்திருப்பதைப்போலச் செவ்வரிபா
ந்துவிசாலமாய்காதளவும்ஓடியிராநின்ற மருண்டவிழிகளைப்பெற்ற இந்
திராணியானவள் கொடுத்தகாமவின்பமயக்கத்தினுற்பெருகியிருந்தசஞ்
சலவிருள்கள் முற்றுந்தன்மனதில்அடங்கியபோது இந்திரனானவன்தெ
ளிவுண்டாய் ஒருமைப்பட்டசிந்தையைப்பெற்று ஐம்புலன்களும்தன்வ
சத்தில் அடங்கிநில்லாமல் மீறிப்போய்த்தேடிவந்து நிரப்பித்தஅபிரா
ணனை அலைத்திருந்தகாமக்கனலின் பெருக்கானதுசீறியாடுஞ்சர்ப்பமான
து மாந்தரிகன்வல்லபத்தினுல் தட்சணத்தில் படத்தைநிலத்திற்சேர்த்து
ஒடுங்குமாறுபோல மூலாதாரத்தில் அடங்கியவுடன் நல்லுணர்வுதோற்
றத்தன்னிலையைக்கண்டு சடுதியிலெழுந்து தான்பட்டபாட்டையுங்கெ
ட்டகேட்டையும் எண்ணிஎண்ணிப் பதைபதைத்துநகைத்து மிகவும்வெ
ட்கினவனுய் ஐயோயித்தகேடுசகலபோகங்களையும் யிழந்துவறியனுயி
ருக்கின்றஎனக்கும்வந்ததேருவதோவென்றுபற்பலவிதங்களிற்பன்னி
ப்பேசிக்கொண்டுதன்னைவெறுத்துச்சிறந்தவிவேகசம்பன்னராகியதேவ
ர்களுக்கரசனுகவிருக்கப்பட்டஎன்னைத்தவலையெயிப்பாடுபடுத்துமாயி

ற்காமமென்பதுஉலகத்திலிருக்கின்றதீமைகளனைத்தையுங்கிடைக்கச்செ
ய்தும் கேடுபடாதசெல்வத்தையும் பலராலும்புகழநின்றகீர்த்திச்சம்பத்
தையும்அழித்து நல்லுணர்வைப்போக்கிச் சாச்விதமாகிய மோட்சசாம்
பிருச்சியத்தைப்பெற வொட்டாமற்றடுத்து மேலும் யிருண்டநரகத்தி
னுந்தள்ளுமாதலால் யதைநினைக்குமிடத்திற் காமத்தைவிடவேறொருப
கையானது உலகத்தில் ஒருவனுக்குண்டோவென்று இந்திரன்நினைந்து
வருந்தினவனாய்த் தான்அவ்விரவுமுற்றுமிருந்த மணற்றிட்டையைநீங்கி
தன்விடுதியைச்சேர்ந்து அத்தருவாயில் வந்துசேவித்த தேவர்க்களனைவ
ருஞ்சூழ்ந்துவரப் பத்தியுடன் சண்முகப்பெருமாள் வாசஞ்செய்யுந் தி
ருமாளிகையிற்போய்ச் சபாமண்டபத்திற் சிங்காதனத்தின்மீது வீற்றி
ருக்கின்ற சிவகுமாரனைத்தெரிசித்து ஆனந்தபரவசத்தினால் றோமம்பூ
ரித்து மயிர்ச்செறிவெழக் கரங்களைக்கூப்பி அடங்கி ஒடுங்கி வஸ்திர
த்திலெழுதிய சித்திரத்தைப்போல ஐம்புலன்களும் ஒருமித்தவனாய்ச்ச
மீபத்தில்வந்துசேவித்துப் புழுதியானது றோமமெங்கும் படிந்து வெ
ளுத்துக்காட்ட வேதசாகைகளைஓதி கர்த்தனைத்துதித்துக்கொண்டு எதிரில்
நிற்கின்றதேவராசன்மீதிற்கிருபாநோக்கத்தினைப்பாலித்துச் சமீபத்தில
ழைத்துயிதனைச்சொல்லுவார், வேதங்கள் தேடிக்காண்பரிய சிவநாதன்
திருவடிகளில் நாம்அருச்சிக்கவிருப்புற்றனமாதலால் அதற்குவேண்டும்
உபகரணங்கள் அனைத்தையுந் துரிதமாகத் தருவிப்பையெனக் கட்டளை
யிட்டவுடன்வணங்கிப்போய்ச் சிலபரிசனரை அழைத்துப்பலதிசையினு
ஞ்செலுத்தி கங்காசலம்புதியமலர் சந்தனம் தூபதீப நைவேத்தியமுத
லிய பலவளங்களையுந் தருவித்துக்கொண்டு சண்முகமூர்த்தியைக்கண்டு க
ர்த்தனே பணித்தபடிக்கு ஆராதனைக்குவேண்டுவனவனைத்தும் சேர்ந்திரு
க்கின்றதென இந்திரன் விண்ணப்பஞ் செய்தகாலத்திற் சரவணப்
வான்தேவதச்சனைக்கொண்டு ஒருஆலயத்தை உண்டுபண்ணிக்கொண்டு
சைவாகமவிதிப்படிக்கு எக்காலத்தும்நிலைபெற்றிருக்கும்பிதாவின்கோ
லமாகிய சிவலிங்கத்தைப்படைத்துச் சிரோரத்தினமயமாகிய சிங்காதன
த்தில் எழுந்தருளச்செய்தவராய்ப் பசுவின் பால் தயிர் நெய்முதலியஐ
வகைத்திரவியங்களினாலும் கங்காசலத்தினாலும் திருமஞ்சனமாட்டிப் ப
வித்திரமாகிய வஸ்திரத்தைக்கொண்டு யீரத்தைப்போக்கிப் பீதாம்பரத்
தைஉடுத்துக் கற்பகமலர்மாலை சந்தனக்குழம்பு முதலியவற்றினுடன் சி
றந்தஅணிகளையுஞ்சூடிமுடிந்தபின்பு தேவாமுதத்தினுமினியபிரசாதவ
கைகள் கனிவிதங்கள் கச்சாயங்கள்மற்றுமிராநின்றவைகளையும் பொற்ப
ள்ளயங்களிற்சேர்த்துச்சிவபிரான்முன்னர்வைத்து நிவேதித்துமுடிந்தவு
டன்மந்திரமூலமாய்த்திவ்வியபரிமளமிகுத்தகலவைச்சாந்துடன்புனுகு

வாதமுதலியபரிமளதிரவியங்களைப்பூசித்தாம்பூலவகைகளைப்படைத்த
பின்புசாம்பிராணிதூபத்தைக்காட்டிகற்பூரநீராஞ்சனத்தைக்கொடுத்து
மற்றுமிரானின்ற சோடசவுபசாரங்களையுஞ்செய்து முற்றியபின்புமும்
முறைவலம்வந்து பணிந்தெழுந்து வேதவாக்கியங்களினாற் போற்றின
ர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே பிரமன் விஷ்ணு தேடிக்காண
ரியசிவபிரான் திருவடிகளைச்சரவணப்பொய்கையில் வளர்ந்தருளிய திரு
க்குமாரன்பூசித்த பத்திவயிராக்கியங்களுக்கிரங்கியிடப்பாகத்திற்பார்வ
தியார்வீற்றிருக்க அருளுருவாகிய ரிஷபவாகனத்தின்மீது ஆரோகணித்
துச்சிவபிரான்தோற்றிய காலத்திற் கார்த்திகைத்தெரிவையர் புத்திரனாகிய
சரவணபவன் காளகண்டமூர்த்தியானவர் நல்லருளைச்செய்துயோகமெழு
ந்தருளியதைக்கண்டமாத்திரத்திற் கொப்பெனவெழுந்து தீர்க்கதெண்ட
ன்சமற்பித்துக்கரங்களைச் சிரத்திற்கூப்பி எதிர்கொண்டு கர்த்தன்பெரு
மைகளைப்புகழ்ந்து போற்றுகின்றதருவாயில் குற்றமற்றநந்திதேவர்அ
ங்கையில் அவதரித்திருக்கின்ற நவவீரர்களும் நவகன்னியர்வேயர்வை
யிற்றோற்றிய இலக்கரும்சேர்ந்து சேற்கெண்டையைப்போலப் பிற
ழுந்திருவிழிகளைப்படைத்த உமையவள்கணவனைத் தெரிசித்தமாத்திரத்
தில் ஆனந்தவாரியில்மூழ்கித் திரோசபரவசராய்ப்புளகிக்க நிலத்தில்விழுந்
துசேவித்துவாழ்த்து முன்னிலையில் யிக்காட்சியைத்தெரிந்த பிரமனு
ம்செயசாலிகளாகிய பூதவீரர் முதலானவர்கள் கரங்களைக்கூப்பித்தொழு
துமும்முறைநீற்கதெண்டன்சமற்பித்துஅஷ்ட திக்குகள் முதலா
கச்செவிடுபடும்படிக்கு அரகரவெனப்போற்றினர். இப்பிறகாரம்சகல
ரும்ஆனந்தக்களிப்பில் மூழ்கியிருக்கின்ற தருவாயில் அருவுருவாகும்
பரமசிவன் குமாரசுவாமியைக்கிருபையாசப்பார்த்து உன்னுடையபூசனை
வழிபாடுகளுக்குக் களித்தனம், ஆதலால் நீ யிதனைப்பெற்றுக்கொள்ளக்
கடவையென்ப் படைகளுக்கரசாகவிருக்கின்ற பாசுபதாஸ்திரத்தைத்தந்
துகுமாரனேயிப்படையானது நமது தோற்றமாகும் யிதனைப்பிரமன்
விஷ்ணுமுன்னம் பூசித்துப்பெற்றனர். மற்றவர்களால் யிந்தஒப்பற்ற
அஸ்திரத்தைப் யாதுகார்க்கும் வல்லபமிராது - பிராணிகளை அலைத்திருக்
கின்ற கொடியசூரன்பெற்றிருக்கின்றபடைகளின்வலியையழிப்பதர்க்கு
க்குமாரனே யிதைப்பதலமாக வைத்திருப்பையென்று அனுக்கிறகஞ்
செய்து திருக்கயிலைக்கெழுந்தருளினர், இப்படிக்குக் கிருபாநோக்கம்
பாலித்து நிர்மலக்கடவுளாகிய சிவபிரான் வானத்தில்மறைந்தகாலத்தில்
அருட்கடலாகிய பாலசுப்பிறமணியதேவர் அத்திசையைநோக்கித்தொ
ழுதுபோற்றினவராய் பிரமன் நவவீரர் இலக்கர் முதலானவர்கள் சூழ்ந்
துதுதித்துவர பொன்னுருளைகளைப்பெற்ற விசாலமாகிய ரதத்தில்

வீற்றிருந்தனர், அத்தருவாயில் வாயுதேவன் தன்துணைவருடன் குதிரைகளை அதட்டிச்செலுத்துமுன்னிலையிற் பிரகாசம்பொருந்திய கிரணங்களையுடைய சூரியனுதையமான காலத்திற் களித்தெழுந்து ஆரவாரித்திருக்கும் பிராணிகளைப்போல ஒவென்னும் யிரைச்சலைக்காட்டி பூதவெள்ளங்களானது செயவுச்சாகங்களுடன் தொடர்ந்து பூமியெங்கும் நிறைந்து போர்க்கோலங்களைத்தாங்கி யிராநின்ற நவவீரர் இலக்கர் மற்றசேனைத்தலைவர்களுடன் கூடிப்போகப் பிரமனாதியதேவர்க்களும் நெருங்கிவரும்போது வானத்தையளாவியிருக்கும் உன்னதமுள்ள தேரினிடத்தில் அவர்கள்மத்தியிற் குமாரசுவாமியார் வழிக்கொண்டு மண்ணியாற்றங்கரைக்குத் தென்புறத்திற் படைத்திருக்கும் திருச்செஞ்ஞலூரைக்கடந்துபோய் நினைந்தவளங்கள் முற்றினுந்தரவல்ல வளமிகுந்த வயல்கள் பெருத்து மயிலினங்கள் தோகையைவிரித்தாடுங் குளிர்ந்ததோப்புகள் முதலிய செழிப்பைவாய்ந்த திருப்பயறியலூரும் மற்றசிவஸ்தலங்களையுங்கண்டு திரிநேத்திரதாரியாகிய சிவனாதனைவணங்கிப்போற்றி அவ்வெல்லைகளைக்கடந்து மனக்களிப்புடன் போகுமார்க்கத்தில் மகிழ்மரச்சோலைசூழ்ந்த திருநல்வேலித்தலத்தைத்தெரிசித்துக் கர்த்தனைவழிபட்டவராய் வெண்டாமரைப்பீடத்தினளாகிய சரஸ்பதியம்மன் ஒருகாலம் சகலவளனும்பெற்று தீர்க்கசுமங்கிலியாயிருக்கவிருப்புற்றுத்தவவிரதங்களைச் செய்து பேறுபெற்ற சிரேஷ்டமாகிய திருவாரூரைச்சேர்ந்தனர்.

---

## சுரம்புகுபடலம்

---

சூதபுராணிகர்- சவுனகாதிரிஷிகளுக்கு மேல்நடந்தசரித்திரங்களைச்சொல்லுவார், சிவசுப்பிரமணியதேவர் திருவாரூரைச்சேர்ந்தவுடன் தேவேத்திரன்முன்னம் வழிபட்டுப்போற்றியதற்கிரங்கிக் கடாட்சித்த சிவபிரான்புற்றிடங் கொண்டெழுந்தருளியிருக்கும் ஆலயத்திற்போய் வணங்கித்துதித்து வெளிவந்து அந்தலத்தைச்சூழ்ந்திருக்கும் ஸ்தலங்களையுந்தெரிசித்துக்கொண்டுபோய்க் கொல்லனுலையிற் காயப்பட்டுச்சிவந்திருக்கும் யிரும்பைப்போல அழன்றிருக்கும் பாலைநிலத்தில் வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் தேவர்களாதியானவர்களுடன்சேர்ந்தனர், நைமிசாரணியவாசிகளே அந்தபாலைநிலத்தின் பிறபாவங்களிற் சிலசொல்லுவோங்கேட்பீராக- பிரளயகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஏகமாகக்கலந்து பெருகியெழுந்து அஷ்டதிக்குகளைச்சூழ்ந்து நிறைவெய்தி அலைகள்மோதியிருக்குந் தருவாயில் தன்னிடத்தில்வரு

ஞ்செலப்பெருக்கினல் எவ்வளவும் அழிவுபடாமற் பழையபடியேகாந்திக்கொண்டுகடலினடங்கிய வடவாமுகாக்கினியைப்போல அந்நீரைக்கிரித்துச் சுவாலையைவிசி ஊழிகாலத்திலும் நிலைபெற்றிருக்கும் யிவையன்றியும்விண்ணகத்துக்கு அரசன்வாழும் பொன்னுலகமானது யாகத்துக்குவேண்டும் திரவியங்களடங்கிய தலமாகவும் பிராணிகளனைத்தும் அவிற்பாகத்துக் குதவியாகும் பசுக்களாகவும் செலசமற்றியாகியசமுத்திரங்கள் ஆகுதிக்குஉடையையோகமாகும் நெய்ப்பதலைகளாகவும் பூமண்டலமானது யாகவெல்லையாகவும் அதன்மத்தியில்விளங்கும் முத்தழல் பெருத்தோங்குமோமகுண்டத்தைப்போலச் சதிரக்கள்ளிகள்பெருத்து வெப்பமிகுந்த பாலையானதுகாட்டியது -அன்றியும் அழகியதிருவெண்ணீற்றினை அணிந்ததிருமேனியைப்படைத்த சிவபிரான் சற்வசங்காரகாலத்தில் மன்னுயிரனைத்தையும் நுதல்விழித்தியினற்றகித் துக்கனலெழநின்றாமவெல்லையைப்போலவும் சமுத்திரஅலைகளைப்போலக் கானலைப்பெருக்கியிரண்டுசிரங்களும் எழு நாவினையும்படைத்தஅக்கினிதேவனுக்கு யிருப்பிடமாகவும்தோற்றுகின்றது, மேலும் அப்பாலையை வடவாமுகாக்கினியானதுதன்னிலமெனச்சேழ்விப்பட்டு அதனைக்கண்டுபூற்வீகமாக யிருக்கின்ற உறவைப்பாராட்டிப்போவதாகநினைந்து அப்பாலையினிடத்துக்குவந்து சற்றுநின்றமாத்திரத்தில். அந்நிலவெப்பமானது தன்கொடுமையை ஆத்தித்தாபத்தைஉண்டாக்கிய காரணத்தினல் நடுநடுங்கிப்புகையையுமிழ்ந்து அரற்றிநாப்புலர்ந் தோடிக்கடலில்விழுந்து யிதுபரியந்தம் அந்நீரையருந்தியும் வெப்பமாருமல் சொதித்திருக்கின்றது. ஆயிரங்கிரணங்களைவிசி உலகங்களைவிளக்கிவருஞ் சூரியனுஞ் சந்திரனுந்தங்கள் செநியிற் போகும்போது அப்பாலைநிலத்தைச் சமீபித்தமாத்திரத்தில்அதன்வெப்பத்துக்காற்றுமல்பயந் துசுற்றிக்கொண்டுபோவதல்லதுநேராக்செல்லார்கள்-அந்தரவாசிகளாகிய தேவர்க்கள்முதலானவர்களும்அவ்வாறேஅதனைநெருங்கவும்பயப்படுவார்கள்மேகங்களும் வாயுவுமெக்காலத்தும்அவ்வெல்லையைநோக்கிப்போகச்சம்மதப்படாமற்றுலைதூரத்திற் சஞ்சரிப்பர், அக்கினியிற்றோற்றிய பொருள்கள் அதன் வெப்பத்தினல் நிரோகங்கன்றிவாடியிருப்பதல்லது மாளாத்தைப்போல அந்நிலத்திற் சஞ்சரிக்கின்றயானை பன்றி கொடியவிஷத்தைப்பெற்ற சற்பம் கற்பூர செந்நாய் கலைமான் முதலிய மிருகங்கள் அந்தபாலைநிலத்தில்வாசமாயிருந்தபோதிலும் பிராணனைப்போக்காமல் வருந்தித்திரியும் யிதற்குச் சிலதிஷ்டாந்திரஞ்சொல்லக் கேட்பிராக- வசனுபியிற்பிறந்தபுழுக்கள் அதன்வேகத்தினல் மாளாமல் நிறுவகித்திருப்பதுபோலாயிற்று-ஆகாயமானதுநீலநிறமாகவும் செக்கர்வானமாகவுங்காட்டுவதை

ஏன்னென்றிருக்கின்றீர்கள் நினைப்பினுஞ் சுடும்வெப்பத்தினைப்பெற்ற பாலைநிலத்தினின்றெழுகின்ற அழலானது தாக்குவதினாலும் புகைப்படலம்பெருத்துநிறைவதினாலும் அப்படிக்குக்காட்டுகின்றதுசூரியனுஞ்சந்திரனும் அவ்வெப்பத்தினால்வெடித்தபுண்ணாகும்நட்சத்திரங்கள் கன்றியெழுந்தகொப்புளங்களாகும் யிதற்குயாதொரு சந்தேகமுமிராது, அதற்குச்சிலதிஷ்டாந்திரங் காட்டுவோம்- கணப்போதில் ஆயிரக்காதவெல்லைநடக்கும் வேகமுள்ளசூரியன் பக்கமாகப்போவதைமறந்து ஒருதினம்நிமைப்போது அப்பாலைக்குநேராகச் சென்றகாலத்தில் அதனிடத்தெழுந்தசுவாலையினால் தன்தேர்வண்டியொன்றுபற்றி எரிந்துங் காலநீட்டிக்கொண்டுகுதிரைகளைச்செலுத்தியிருந்தசாரதியாகிய அருணனுக்குமுழந்தாள்வரையில்வெந்தொழிந்துகுதிரைகளுங்கருகினசூரியனும்வருந்தித்தன்கிரணங்கள் கொதிப்பெடுத்து அக்கினிசுவாலையாய்வீசநாளதுயரியற்றமிருக்கின்றனன் இத்தகையகொடுமைநேராவிடிற்சந்திரனைப்போலக்குளிர்ந்திரானோ இவையன்றியும் பூர்வவினையின் தொடர்பை நீக்கிக்கொள்ள வறியாமல்அல்லலிற்பட்டிருக்கின்றசிலதேவதைகளைக்கோறிச்சாச்விதமாகியமோட்சசாம்பிராச்சியத்தைப்பெறவிருப்புற்றுச்சேர்ந்துவாடுகின்றவரைப்போலத்திரேகமுற்றும்வெந்து தங்களைப்போலவேவருந்தித்திரிகின்றபருந்தினது நிழலைத்தேடிச் சிலமான்கள் அங்குமிங்குமாய் உழலும்சூரியனுஞ் சந்திரனும் பிருதகாலத்தினும் அந்திப்போதினும் யிரவுமுற்றினும் சமுத்திரத்திற் படிந்துபடிந்து வருவதையோசிக்குமிடத்திற்கொடியவெப்பத்தைப்பெற்ற பாலைநிலத்தெழும் அக்கினிச்சுவாலையினாற்றுக்குண்டு அந்ததாபத்தைப் பொறுக்கப்படாமையாற் கருநீரில்முழுகுகின்றனர், இதைக்கருதியிரக்கமுற்று பிராமணர் திரிகாலங்களினும் நீரையிறைத்துக் குளிரச்செய்துவருவர், தேவர்கூட்டம்ஒருகாலம்அந்நிலத்தேவதையாகிய துற்கையம்மனை வழிபட்டுச்சேவித்துவருவதாகப்போனவர்கள் கொடியபாலையின் வெப்பத்தையறியாமல் அதனிடத்தில்நடந்தகாரணத்தினால் பாதங்கள்வெந்துசிவந்து படாதபாடுகள் பட்டுவாடி அமுதமுண்டமுயற்சியினால்பிராணன்தப்பி அன்றுமுதற்பூமியிற்கால்களைவைக்கப்பயந்து விண்ணினிடத்திற்றிரிவர் நற்குலத்திலுதித்து அகண்ட அயிச்பரியச் செல்வங்களை அனுபவித்திருந்த மேலோர்களாயினும் உலகமிகழும் தரித்திரம் வந்தகாலத்திற் குலயீனராயிருக்கின்றஅற்பரிடத்திலும் ஒருபிறையோசனத்தை விரும்பிப்போவர் அதைப்போலவே சிறந்தமதயானைகள் பாலையின்றீட்சணியத்துக் காற்றாமல் அந்நிலத்தில் உலர்ந்து காந்திக்கொண்டிருக்குங் கள்ளியினது நிழலைத்தேடிப்போய் ஒதுங்கிநிற்கும்யிவையன்றியும் சூரியனாகியதட்டான்

கிரணங்களாகியகுறட்டினல்மணிகள்பரல்களாகியநெருப்பை பாலையாகி
யிரும்பட்டியிற்கூட்டிகரிகளானவற்றை கரிகளாகச்சேர்த்து அவற்றின்து
ருத்தியாகியஒருகுழையினாற்காற்றெழவூதியதனறிந்துகானலென்னுஞ்
சலத்தைவார்த்தத்திருப்பிச்செய்யும்பொன்னாபரணங்களைப்போலப்ப
டங்கள்பொருந்திய சற்பங்கள் புரளும்பூமியிற்பெருகும்பிறவாகத்தை
யும்பாதலகங்கையின்பெருக்கையும் உண்டபாலைத்தீயானது அந்நீரைக்க
க்கியதைப்போல அந்நிலத்திலெழுங்கானலானது அசைந்துகாட்டும் யி
ப்படிக்குப்பெருத்திருக்குப் பெயத்தேனைநதியெனக்கருதி மான் மரை
யானை பிடி முதலாகிய மிருகங்கள்தாகசாந்திசெய்ய விருப்புற்று அங்கு
மிங்கும் உலவிவருந்தும் அந்நிலத்திலெழுங்கொடிய அழலுக்காற்றும
ற்சற்பங்களானவை கக்கநின்றவிஷத்தைக்கண்டநாயானதுதாகவெடாயி
னுற் பிராணனுக்குத் துணிந்து நக்கிச்சோரும் சூரியன் உலவப்படா
மல் சொலித்துக்கொண்டிருக்கும் பாலையினிடத்திற்பெருத்தசையும்கா
னலானது பூமிதேவிவருந்தாமல் நதிபெருகுவதைப்போலத் தோற்று
ம்அத்தழலுக்காற்றுமல் சற்பங்கள் கக்கிய விஷமும் சிரோரத்தினங்களு
ம்எப்படிக்குக்காட்டுவதெனில், அதனிடத்தெழும் அழலும் புகையையு
ம்நிகர்த்து விளங்கும் அதைச்சூழவிருக்கின்ற மூங்கில்கள்வெடித்து உதி
ரும் முத்துகளும் பொரியைப்போற்சாந்திச்சிதறும்பரல்களும் நாகங்க
ள்கக்கிய சிரோரத்தினங்களும் பெருத்து எங்கும்பிரகாசித்திருப்பது
எப்படிக்குக்காட்டுகின்றதெனில், சலனமற்றுச் சொலித்திருக்கும்பாலை
யினிடத்தெழும்தீயானதுசுடப்பூமிதேவியினது திரேகங்கள் திக்கொப்பு
ளித்ததுக்கொப்பாகவிருக்கின்றது,கள்ளிகள்கரிந்து பாலைத்தருக்கள்தீய
முள்ளிப்புதர்கள்காய்ந்து குராமரங்கள்பற்றியெரிந்து அகில்விருட்ச
ங்கள் வெடித்தெங்கும் கொள்ளிகளைப்போலப் பிரகாசித்திருப்பதைப்
பார்க்குமிடத்தில் கொடியபாலைநிலத்திற் புள்ளிபட்டதையொத்துவிள
ங்கும், கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே, இவ்விதச்சிறப்புகளைவாய்ந்த
பாலைச்சுரத்தினிடத்தில் எமதுகற்றனுகிய சுப்பிரமணியக்கடவுள் துணை
வர்பூதப்படைகள் முதலானவர்களுடன் வந்தமாத்திரத்தில்மின்னல்யிடி
களுடன் மேகங்கள் யிடைவிடாமல் வருஷித்தபின்பு குளிர்ந்து சகலவி
ருட்சங்களுந்தழைத்து நிழலைக்காட்டுங்குறிஞ்சித்திணையைப்போலவெ
ப்பந்தணிந்து தண்மையாய்விளங்கியது மந்திரியிற் குமாரதேவர் சிறு
மையுற்றுச்சகித்தற்கரிய தீட்சண்ணியமுள்ள அக்கினிதேவனுக்கு அப்
பாலைநிலத்தை அரசுசெய்யக்கொடுத்திருந்த அதிகாரத்தைமாற்றி வரு
ணராசனுக்குப் பட்டாபிஷேகத்தைச்செய்ததுபோலக் கொடியவெப்ப
மொழித்து சகலருங்கொண்டாடத்தக்க நற்குணங்களைக்காட்டிக் குளிர்

நீதிருந்தது- பெண்டு பிள்ளைகளென்றும் தன்பொருளென்றும் மான
ம்பாரிக்க ஆசைச்சாவலையிற்பட்டு உழலுகின்ற பிராணிகள் பூர்வவினைத்
தடக்கினாற் பரமேஸ்பரன் திருவருளைக்கிடைத்து முற்குறித்தபெந்த
ங்களைப்போக்கி நல்லறிவுவிளங்கிப்பதவியைப்பெறுமாறுபோலச்செல
ப்பரிசமென்பது எவ்வளவுங்கிடையாமற் றழல்பட்டிருந்த கொடியசு
ரமானது சியகுமாரன் போகப்பெற்ற மகிமையினாற் பரிமளமிகுத்தபு
ஷ்டவனத்துக்குச் சமதையாகக்குளிர்ந்துகாட்டியது,மேலுஞ்சைவத்துக்
குப்புறம்பாகியயிதரசமையங்களைமுக்கியமாகவெண்ணிஅவற்றைத்துட
ர்த்துயாதொருபிறையோசனங்களையும் பெறாமல் அலைந்துவாடியிருந்
தவர்கள் சிவகடாட்சம்பெற்றகாலத்தில் அறிவுங் குணமுங் குறியும்வயி
ராக்கியமும் வேறுபட்டு நன்மாற்கத்திற்றுடர்ந்து கிருதார்த்தராகுவதை
ப்போல யாதொருபிறையோசனத்துக்கும் உதவியில்லாமற் றீப்பட்டுக்
கிடந்த அக்கொடிய நிலமானது வேலாயுதமூர்த்திவந்த சிறப்பினாற்சுகந்
தமிகுத்த குளிர்ந்த நந்தவானத்தைப்போன்றும் பலருக்கும் யினிமை
யுண்டாக்கியது. கேட்டீர்களோ-சவுனகாதிரிஷிகளே நீர்ப்பசுமைகிடை
யாமல் அனலைவீசிக்கொண்டிருந்த பாலைநிலத்திற் சண்முகதேவர் வருவ
தைத் திருப்பரங்குன்றச் சாரலிற்றவஞ்செய்திருந்த பராசரிஷிகுமாரரா
கிய-தத்தன்-அனந்தன்-நந்தி-சதுமுகன்-பருதிபாணி-மாலி-என்னும்
அறுவரும் ஞானயோகத்தினாற்றெரிந்தவுடன் ஆதியிற்கர்த்தன் தங்களு
க்குப்பணித்திருந்ததைநினைந்தவர்களாய்த்தவநிலையைவிட்டுஉத்தரதிசை
யைநோக்கிப் பூவலம்வருவதைப்போல அத்திசையைநாடி விரைந்துபா
லைநிலத்துக்கருகில் வருமுன்னிலையிற் பூதவெள்ளங்கள் முதலானவர்கள்
சூழச் சூரபதுமன் செயஉச்சாகங்களை பழிக்கவெழுந்தருளிய சுப்பிரம
ணியதேவரைத்தெரிசித்துச் சூரியனைப்போலபிறகாசிக்கும் மகுடங்கள்
விளங்கிய சண்முகங்களின் பொலிவையும் ஆசானுபாகுவாய்ப் பருத்தி
ருக்கும் பன்னிருபுயாசலங்களின் பெருமைகளையும், செந்தாமரைக்கம
லங்களைப்பழித்துப் பிறகாசிக்குந் திருக்கரங்களையும் அவைகளிற்சொ
லித்துக்கொண்டிருக்கும் வெற்றிவேல்முதலிய படைகளின் சீரையும் சி
ரோரத்தினாபரணங்கள்புரளும் வயிரமலைக்கொப்பாகத்தோற்றும் மார்
பின்வனப்பையும் பீதாம்பரம்தரித்திருக்கும் யிடையின்சுந்தரத்தையு
ம்விழிகள் களிக்கக்கண்டவுடன் திரோகம்பூரித்து ஆனந்தபரவசத்தராய்
மும்முறைவலம்வந்து பாதாரவிந்தங்களிற் பணிந்தெழுந்து வண்டின
ங்கள் புஷ்பங்களிற்பெருகுந் தேனையுண்டுகளித்துச்சத்திப்பதைப்போ
லவேதவாக்கியங்களினாற் கர்த்தன்பெருமைகளைப்போற்றிக் கரங்களைக்
கூப்பிநின்று தேவாதிதேவனே அடியோங்கள் அஞ்ஞானங்களைப்போ

க்கித் திருவருள்செய்து ரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்கின்றதறுவாயில் உயிருக்குயிராய் உணர்வாய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்து சராசரப்பிரபஞ்சங்களை நடிப்பிக்கும்நிர்மலமூர்த்தியாகிய பாலசுப்பிரமணியதேவர் பக்கத்தில்நிற்கின்ற தேவேந்திரன் அந்தரிஷிகுமாரர் சரித்திரங்களைச் சொல்வதாயினன், சத்தனே யிவ்வறுவருந்தவங்களிற்சிறந்த பராசரிஷிகுமாரர்களாகும் யிவர்கள் பாலபருவத்தில் விளையாடித்திரிகின்ற தறுவாயில் ஒருதினம் சௌசமற்றிபாய் புஷ்பங்கள் செழித்தலர்ந்திருக்குஞ் சரவணப்பொய்கையில்விழுந்து முதலையைப் போலத் தனித்தனியே முழுகிக் கலக்கிவருமுன்னிலையில் மிகவும்ஆழமுள்ளதாய் ஒருவராலும் நீந்தவரிய அப்பொய்கைநீரானது பஞ்சேந்திரியங்களுந் தற்மார்க்கமூலங்களிற்சென்றகாலத்தில்உயிர்கள்கவலையிற்பட்டு வாடுமாறுபோலக் கலங்கிக்கொதிப்பெடுத்து அலைகள்மீறிக் கரைகளில் மோதுகின்ற தறுவாயில் அந்நீரிலிருந்த சலசரங்கள்பயத்தினுற் றுள்ளிக்கரைகளின்மீது விழுந்து துடிக்கின்றதை யிவர்கள்பார்த்து வெளிவந்து அம்மச்சங்களைப் பற்றியெடுத்துக்கோரைகளில் அணிபடக்கோத்துக்கொண்டு கரங்களிற்பற்றினவர்களாய் உல்லாசமாக அந்தத்தோப்பினிடத்திலவிவரும்போது சூரியன் வானவெல்லைமத்தியில்வர மத்தியானகாலமாதலாற் றவச்சிரேஷ்டராகிய பராசரிஷிகாலைக்கடனைக்கழித்துப்போகச் சரவணப்பொய்கைக் கருகில்வரும்போது சலங்கலங்கி வெளிகளில்நிறைந்திருப்பதையுஞ்சலசரங்கள்வெய்யல்சுடுகையிற்பட்டுபதைபதைத்தவாடுவதையும் தன்பிள்ளைகள் அவற்றைப்பற்றித்திரிவதையுங்கண்டமாத்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போற் கோபித்துக் குலவண்மையைக்கெடுக்கத்தோன்றியபிள்ளைகாள் நீங்கள்செய்ததுஷ்கிருத்தியங்களுக்குத்தக்கதாய்த் துள்ளித்திரிகின்றமீன்உருக்களைப்பெற்றுவருந்திஉழலக்கடவீர்களென்றுசபித்தனர், அவ்வாக்கியம்வெளிப்படுவதன்முன்னம்யிவர்கள் ஊழ்வினைத்தொடர்பினுல் மீன்களாய் நடுநடுங்கிப் பிதாவின்பாதங்களிற்சேவித்துப் பால்லியச்சேஷ்டையினுல் மதிமயங்கிச்செய்த பிழையினைப்பொறுத்து யிப்புல்லிய பிறவிக்கு நிவாரணகாலத்தைஅநுக்கிரகஞ்செய்யவேண்டுமென்று மிகவும் பரிபவப்பட்டியிரந்தனர், அக்காலத்திற்பராசருக்கு அவர்களிடத்திற் கிருபையுண்டாய் ஞானஉணர்ச்சியிற்றெரிந்து ஓ குமாரர்களே சிலகாலங்களுக்குப்பின்பு சிவபிரான் திருநுதல்விழிகளிற் சண்முகப்பெருமான்தோற்றி யிப்பொய்கையிற்றிருவிளையாடல்களைச்செய்துவருந்தறுவாயிற் சகதீஸ்பரியாகிய பார்பதியம்மன்யித்தலத்தக்கெழுந்தருளித் திருக்குமாரனைத் தழுவியெடுக்குமுன்னிலையிற்றிருக்கொங்கைகளி னின்றெழுகுஞ் ஞானஅமுதானது பெருக்கெடுத்

அப்புனலிற்பாயும் அதனை ஆவலுடன் நீங்கள் உண்டமாத்திரத்தில் யிச்சாபசம்பந்தம்நீங்கி பழையவுருவைப் பெறுவீர்களென்று பிள்ளைகளுக்குச் சாபவிமோசனத்தைச்சொல்லி மாத்திரியான கிரிகைகளைமுடித்துக்கொண்டுதமது ஆசிரமத்திற்போயினர், கர்த்தனே அவ்வாறேயிந்தரிஷிபுத்திரர்கள் மச்சங்களாய் அளவற்றகாலம்வருந்திச் சரவணத்திலிருக்கின்றகாலத்தில் ஐயனேதேவரீர் அப்பொய்கையிற்சேர்ந்து திருவிளையாடல்களை நடத்தும்போது பராசத்தியானவள் வந்து ஆவலுடன்தேவரீரை எடுக்கு முன்னிலையில்ஊற்றெடுத்து ஆருசப்பெருகிய ஞானவமுதையுண்டு தங்களிபாவத்தைப்போக்கிப் பழையரிஷிக்கோலத்தைப் பெற்றுப் பரமனை வழிபட்டகாலத்தில் அவர் அனுக்கிரகஞ்செய்தபடிக்குத் திருப்பரங்குன்றத்தில் வாசமாய்த்தவங்களைச் செய்துவந்தனர், இக்காலத்திற் றேவரீர்யித்தலத்திலெழுந்தருளிய சேதிதெரிந்து திருவடிகளிற்பணிந்து கிருதார்த்தராகும் யெண்ணங்கொண்டுவந்தனர், கர்த்தனே யிவர்கள்பெருமைகளைக்கேட்டருள்க- பரிபக்குவப்பட்டமனதையும் ஞானவுணர்ச்சியையும் சிறந்ததவங்களையும்பெற்ற புண்ணியவான்களெனத் தேவராசன்விண்ணப்பஞ்செய்ததை பிள்ளைகள் மழலைவார்த்தைகளைப் பிதாவானவன்விரும்பிக்கேழ்ப்பதுபோலத் திருச்செவிகளினேற்றுத்திரிகாலவர்த்தமானங்களையும்வரையறத்தெரிந்தசிவகுமாரன் பராசர்பிள்ளைகளிடத்திற் பரிவாய்க்கிருபாநோக்கம்பாலித்து குற்றமற்றகுணங்களைப்பெற்றரிஷிபுத்திரர்களே நம்முடன் வருவீர்களெனத் திருவாய்மலர்ந்தனர், அவ்வாக்கியத்தைக் கேட்டமாத்திரத்தில் ரிஷிபுத்திரர் களிசிறந்து வெற்றிவேலாயுதமூர்த்தியினது திருப்பாத சேர்வைக் காளானோமாதலால் யினிசகலதுன்பங்களையும்போக்கிக் கிருதார்த்தராயினோம்- பிழைத்தோமென்னும் மனவுச்சாகங்களுடன்போற்றித்தொடர்ந்துவரும்படிக்குக் குமாரசுவாமியார் அக்கினிகளுக்குக்களித்திருக்கும்ராசதானியாகச்சுவாலையைப்பெருக்கிவைத்த கொடியபாலை நிலத்தைக்கடந்து தமது துணைவர் தேவர்களமற்றசேனைப்பெருக்குடன் அப்புறம்போவதாயினர்.

## திருச்செந்திற்படலம்

சூதபுராணிகர்- சவுனகாதிரிஷிகளுக்கு மேல்நடந்தசரித்திரங்களைச்சொல்லுவார், வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் பாலைநிலவெல்லையைத் தாண்டிப்போகுமார்க்கத்திற்கங்காசடாதரராகியசிவபிரானெழுந்தருளிய திருச்செங்குன்றூரைத் தெரிசித்துப்போற்றி அத்தலத்தைக்கடந்து பற்பலதேசங்களையும் நாடுகளையுந்தாண்டி முத்துபவழம் வயிரமாதியவை

ங்களைத்திசைகளினுஞ் சொழிக்குஞ் சமுத்திரக்கரையில் விளங்குந்திருச்செந்திற்பதியிற்பிறவேசித்தவுடன் பக்கத்திற்சேவித்துவருகின்ற விசுவகர்மனைப்பாத்து யிதனைப்பணிக்கின்றனர், தேவதச்சனேயித்தலம்வாசயோக்கியமாக விருப்பதால் நமதுபடைவீரர்சேனைவெள்ளங்கள்தேவர்க்கள் முதலாகக்களித்திருப்ப தற்குத் தகுந்தவிசாலமாகியபட்டணமொன்றைத்துரிதமாகப்படைக்கக் கடவையெனக் கட்டளையிட்டவுடன்மகாபாக்கியமென்று வணங்கிப்போய்ச் சிற்பநூலின்வல்லபத்தினால் மனதிற்குறித்துக்கோபுரபிரகாரமாடமாளிகை மண்டபம் கூடகோபுரங்கள் தோப்புகள்சோலைகள்தடாகங்கள் முதலியசிறப்புகளனைத்தும்பெருத்து பொன்னுலகமும்நாணும்படிக்கு அலங்காரம்பெற்றபட்டணத்தை நிருமித்துசற்றனைவணங்கிக்கட்டளையின்படிக்குநகரமாயிற்றென்றுவிண்ணப்பஞ்செய்தவுடன் விசுவகர்மனைக்கொண்டாடிக்கொண்டுநவரத்தினமயமாகியதேரைவிட்டிறங்கி மகாவிஷ்ணு பிர்மதேவன் இந்திரன் தேவர்க்கள் பூதவீரர்கள்போற்றிச் சூழ்ந்துவரப் பட்டணத்தினுள்ளேபிரவேசித்துத்தமது திருமாளிகையிற்சேர்ந்து சகலரும்போற்றிவாழ்த்தச்சபாமண்டபத்தினிடத்தில் விளங்குஞ் சிங்காதனத்தின்வீற்றிருந்தனர், அத்தறுவாயில் மதுரமாகிய யிசைகளைக்காட்டுந் தேவயாழினைமீட்டிக்கந்தருவர்சிரவணானந்தமாகப்பாடவும் வேதபாரகனான பிரமன் இந்திரன் ரிஷிகள் முதலாகக் கற்பகப்புதிய மலர்களையிறைத்து வாழ்த்திக்கொண்டு யிருபாரிசங்களினும் நிற்கவும் பவுத்திரமாகிய வானகங்கையாதிய நதிகள் குமாரதேவர் சுந்தரவடிவைக்கண்டு ஆனந்தக்கூத்தாடுவனதப்போலபூதவீரர்கள் வெண்சாமரைகளைப்பற்றிஅணியணியாகநின்றுவீசவும்-சோடசகலைகளையுடையசந்திரன் யிருதோற்றமாக உபையபாரிசங்களினும்நின்றசுப்பிரமணியக் கடவுளினது திருமுகாரவிந்தத் தழகைக்கிரகித்துப் போகக்காலம்பார்த்திருப்பதுக்குச்சமதையாக அக்கினிதேவனும்வருணராசனுங்குளிர்ந்தநிழலைப்பரப்பும் முத்துக்குடைகளைத்தாங்கிநிற்கவும் விஷதந்தங்களைப்படைத்தஅஷ்டமாநாகங்கள் முதலாகியசற்பங்கள்பத்திவிசுவாசங்களுடன்சிவகுமாரனைநெருங்கிப்பணிவதுச்சொப்பாகத்தேவர்க்கள் ஆலவட்டங்களை அசைக்கவும் பற்வதாபிறதியாகவிளங்கும் புசங்களைப்பெற்றவீரவாகுதேவர் உடைவாளைப்பற்றிக்கொண்டு பக்கத்திற்போற்றியிருக்கவும் மற்றத்துணைவர் எண்மரும் இலக்கரும் கரங்களைக்கூப்பிதுதித்துச்சூழ்ந்திருக்கவும் பூதவீரர்கள் மங்கலவாத்தியங்களைத் திசைகளெங்குஞ் செவிடுபடத்தக்கதாக முழக்கவும் இவ்விதஓலக்கத்துடன் சிவசுப்பிரமணியதேவர் கொலுவிருந்தனர்.

உற்பத்தியாகாண்டம் - முற்றிற்று.



உ
சிவமயம்.

# மகேந்திரகாண்டம்.

## வீரவாகுகந்தமாதனஞ்செல்படலம்

சூதபுராணிகர்- நைமிசாரணியவாசிகளுக்கு மேல்நடந்த கதாப் பிரசங்கங்களைச் சொல்லுவதாயினர், தவங்களிற் சிறந்தரிஷிகளேமேற் குறித்தபடிக்கு இந்திரன் முதலிய தேவர்க்களும் வீரவாகுவாதியாகிய துணைவரும் மற்றையருஞ் சூழ்ந்துபோற்றி யிருக்கத்தக்கதாகத் திருச் செந்தில் நகரத்தில் தேவதச்சன் படைத்திருக்கின்ற சபாமண்டபத்தில் நவரத்தின கசிதமாகப் பிறகாசித்திருக்குஞ் சிங்காதனத்தில் வீற்றிரு க்கின்றகந்தசுவாமியார்மன்னுயிர்களிடத்திற்பெற்றிருக்கின்றகிருபைப் பெருக்கினால் யிதனையோசிப்பதாயினர், சதுர்முகப்பிர்மதேவனாதியதே வர்ச்கள் முனிக்கூட்டங்கள் மற்றையரைப்போலவே அகண்டமண்டலா திபத்தியங்களைப்பெற்று மகதயிஸ்பரியங்களை அனுபவித்து வாழுகின்ற சூரபதுமன் முதலாகிய அவுணர்களும் எமதிறைவனாகிய சிவபிரானுக் குப்புத்திரபாவகமாக விருந்தபோதினும் துஷ்டநிக்கிறக சிஷ்டபரிபா லனஞ்செய்து உலகங்களுக்கு வருத்தமின்றிப் பாதுகாத்துவருவது தற் மசாஸ்திரங்களிற் சொல்லுந் துணிபாகவிருப்பதன்றியிற் சிறந்தநீதிகளி ன்பிறகரணங்களுந் துஷ்டரைக் கண்டிக்கவே வழங்குகின்றது, அவ்வா றெநடத்துவது திறடமாகக்காணப்பட்டபோதினம் சிவகடாட்சவிட்ஷி ண்ணிபத்தினாற் செயசாலியாய் அளவிற்றகீர்த்திபரனாக விருக்கின்ற சூர பதுமனையும் மிகுத்தசம்பத்துக்களைப்பெற்று வாழுகின்ற அவன்துணை வர்கள் ராசயோக்கியமாக விருக்கின்ற அவுணவீரரையும் ஒருயோசனை யையுஞ்செய்து பாராமற் கொல்வது நம்போலிகளுக்கு நீதியாகக்காண வில்லை, ஆதலாற் காலதாமசஞ்செய்யாமற் றுரிதமாய் ஒருதூதனைச்சூர னிடத்துக்குச் செலுத்தித் தன்வசத்திற் காவலிற்பட்டு வாடுகின்ற தேவர் கூட்டங்களை விடுதலைசெய்துபோட்டுயின்னுஞ் சிலகாலம் வாழ்ந்திருப்பை யெனக்கேட்டனுப்புவோம்- அப்படிக்கு நாம்செலுத்திய தூதன் சொ ல்லுகின்ற நீதியாகிய வாக்கியங்களைக்கேட்டு அதற்கிசைந்து கொடியசி றையைவிடுதலைசெய்து தேவர்களை அனுப்பிவிடுவனாகில் மாளாமல் மே

துஞ்சிலபோது வாழ்ந்திருக்கக்கடவன் அல்லது நமதுகட்டளையைமதியாமலுந் தனக்குவரவிருக்கின்ற துன்பங்களை நினைந்துபாராமலும்விண்ணவனைநமதுவசப்படுத்தச் சம்மதமில்லாமல் நமதுதூதனைதிருப்பிவிடுவனேல் தட்சிணமேநமது சேனைகளுடன் அந்தப்பட்டணத்தின்மீதிற்போய் புத்திரமித்திர களத்திராதிகளுடன் சூரனைவாட்டி நம்மவனைவிடுவித்துவருவதுதான் சாரும் யிதையன்றியில் நன்மார்க்கம் வேறில்லையென மனதிற்றீர்மானித்துக் கொண்டவராய்க் கூரியவேலாயுதத்தைக் கரத்திற்றாங்கியிருக்கும் பாலசுப்பிரமணியதேவர் தமது சன்னிதானத்திலிருக்கின்ற மகாவிஷ்ணு பிற்மதேவன் இந்திரன் முதலாகிய தேவர்க்கள் மீது விழிகளைப்பரப்பி யிதனைச்சொல்லுவதாயினர், ஓ தேவர்க்களே அவுணர்குலமுற்றும் நாசமடையச்செய்ய நாளைக்கேபோகவிருந்தபோதிலும் தர்மசாஸ்திரப் படிக்கு முந்திஒருதூதனைச் செலுத்திக் கொடுங்கோல்செலுத்திவருஞ் சூரபதுமன் கருத்தின்னதென்று அறிந்துகொள்ளவேண்டுமென்று யிந்தநீதியைக் காளகண்டமூர்த்தியாகிய சிவகுமாரன் எடுத்துக்காட்டிய காரணங்களை மகாவிஷ்ணுவும் பிற்மதேவனுங்கேட்டேற்றமேதேவரீர் கொடியபோரைச்செய்யத் துடங்குமுன்னம் சூரபதுமன்சபைக்கு விவேகசாலியாகவிருக்கின்ற ஒருதூதனைஅனுப்பக்குறித்தது தர்மமார்க்கத்துக்கடுத்ததே அப்படிக்குச்செய்வது தகுந்ததுமென்றசம்மதவார்த்தைகளைப்பேசியவுடன் குமாரசுவாமியார் மீளவும் அவர்களைக்குறித்து உங்களுக்கும் யிஷ்டமாகக் காணவிருக்கின்றதால் யிந்தசபையிலிருக்கின்ற செயசாலிகளில் வீரமாமயேந்திர புரிக்குப்போய்ச்சூரனைக்கண்டு வார்த்தையாடி அவன்கருத்தின்னதெனத் தெரிந்துவரச் செலுத்துவதற்குத் தகுதியானவர்களை யாரைநேமிக்கின்றீர்கள் அதை யோசித்துச்சொல்லக்கடவீரென்று வினவியதற்குவாயில் நல்லகாரியமென்று அதைக்குறித்துப் பரிசோதித்து பிற்மதேவன்யிதனைச்சொல்லுவான், எத்தலங்களினுந் தடையின்றி உலவிவரும் வாயுதேவனும் அந்தவீரமாமயேந்திரபுரியில் மந்தமாருதமசைவைக்கொண்டுபோவதும் அரிதரிது அந்தநகரத்தின் புறம்பினும் உள்ளுமிருக்கின்ற காவலின்கட்டுகளைச்சொல்லி முடிவதன்று என்னெருந்தவனுக்கு அவ்வாறேகடினமாகவிருக்கும ஆதலால் அவுணருக்குக் கீழ்ப்பணிந்து வாடித்திரும்பாமல்தீர்த்துவமாய் நகரத்துக்குள்ளேப்போய் அரசனைக்கண்டு தக்கவார்த்தைகளைப்பேசுமுன்னிலையில் ஒருகாலம் மீறுவராயினும் சத்துராதிகளைப் புறங்கண்டுவெற்றிகொண்டுதிரும்பவல்லவர், புசபெலபராக்கிரமசாலியாகிய விஜயபெருமான் வீரவாகுதேவனையன்றியில் யிக்கூட்டத்தில் யாவரையும் நினைக்கப்படவில்லை- அவரைத்தூண்டுவதே உத்தமம் சுபகாமாகவு

யிருக்குமென்று பிரமன் பாலசுப்பிரமணியர் மனதுக்கு றம்மியமாகவிருக்கின்ற காரியத்தைக்குறித்துத் தயிரியமாகக் கடுகிச்சொல்லியதறுவாயிற்சிவகுமாரன் பிரமனிடத்திற் பரிவாய்நீகுறித்தது மிகவும்அழகாகவும் யோக்கியமாகவுங் காணப்படுகின்றதென"சொண்டாடித் தேன்களைத்துளித்துப் பரிமளித்திருக்கும் வெற்றிமாலைபுளைப் பற்வதாகிருதியாகவீங்கியிருக்கும் புயாசலங்களைப்படைத்த வீரவாகுதேவர்முகாரவிந்தத்தைப்பார்த்து முதிர்ந்தகிருபையினால் யிதனைச்சொல்லுகின்றனர், வீராதிவீரனே வீரமாமயேந்திரமென்னுஞ் சட்டுக்காவல்களையுடையபட்டணத்துக்குத் துரிதமாகப்போய் நிர்மலக்கடவுளாகிய சிவபிரான் அனுக்கிறகஞ்செய்திருக்கும் இந்திரஞாலத்தேரினிடத்தில்ஆரோகணித்து ஆயிரத்தெட்டு அண்டங்களினும் உலவி ஏகச்சக்கிறமாக அரசாட்சியினைச்செலுத்திவரும் சூரபதுமன்சபைக்கும்போய் ராசனைக்கண்டு நாற்கோடுகளைப்பெற்ற அயிராபதவாகனனான இந்திரன் குமாரன் சயந்தன் முதலியதேவர்களை வெகுகாலமாக அரியசிறையில் வைத்திருக்கின்றனை உன்னொத்தவனுக்கு யிது அடாது ஆதலாற் றருமத்தைநினைந்து தீனராகிய தேவர்கூட்டங்களை விடுதலைசெய்து சுகசீவியாய் மகதயிஸ்பரியங்களை அனுபவித்துச் சவுக்கியமாகவாழ்வையெனச் சொல்லக்கடவை ஞான் அதுகளைச்சீர் தூக்கிப்பார்த்துயிது நன்கெனத்தெரியாமல் அசனைத்தடுத்துப்பேசுவனாகில்அவுணராசனேஉன்வம்சபரன்பரைமுற்றினும்வேருடன் நிமைப்போதிற் சின்னபின்னப்படக் கண்டித்து உன்னையும்வெற்றிவேலாயுதத்துக் கிரையிடத்தக்கதாகப் போருக்கு நாளைக்கே நாம்வரவிருக்கின்றனம், இதுஉண்மையார்கியகாரியம் யிதைதீர்க்கமாயோசித்துப் பிழைக்கக்கடவையெனத்தெரிவித்து மீளக்கடவையெனவீரரில்வீரராகிய சிவசுப்பிறமணியதேவர் சொல்லியவாக்கியங்களை வீரவாகுதேவர்கேட்டவுடன் சற்தனேதேவரீர் கட்டளையின்படிக்குக் கொடியசெய்கைகளையுடைய அவுணர்வீற்றிருக்குங் கெடிஸ்தலமாகிய வீரமாமயேந்திரபுரியைச்சேர்ந்துமகதயிஸ்பரியங்களை அனுபவித்து மமதைகொண்டிருக்கும் சூரபதுமனைக்கண்டு தேவரீர் குறித்திருக்கின்ற காரணங்களை விபரமாகச்சொல்லிஅதன்பேரில் அவனுக்கிருக்கின்ற கருத்தையுந் தீர்க்கமாகத் தெரிந்துகொண்டு விரைவில்வரக்கடவேனெனத் திருவடிகளிற்பணிந்துவிடைபெற்றுத்திருச்சபையைக்கடந்து வெளியில்வரும்போது கூரியவச்சிராயுதத்தைப்படைத்த இந்திரனனவன் குமாரதேவர்விடுத்த தூதன்பின்தொடர்ந்து வீரவாகுதேவரோ தீர்பராக்கிறமசாலியாகிய சூரபதுமன்பட்டணத்தைச்சேர்ந்தவுடன் அப்பதியிற் கொடியகாவலிற்பட்டிருக்கின்ற என் குமாரன் சயந்தனையும் மற்றதேவர்களையுங்கண்டு சிலதேறுதலைகளைச்

சொல்லித்தேற்றி அவர்களுக்குத் தயிரியமுண்டாகச்செய்தபின்பு அரசன்சபைக்குப்போய் வார்த்தைபாடி வரவேண்டும் யிந்தசகாயத்தை அடியேனுக்குச் செய்யக்கடவீரெனத் தேவராசன் சொல்லிக்கொண்டதைக் கேட்டவராய் இந்திரனே உன்சோறிக்கையின்படிக்கு அவர்களைக்கண்டு பேசிவருவேன் மனக்கவலையற்றிருப்பையெனத்தேற்றி அவனைக்கடந்துபோய் தம்மிடத்திற் பிறிதிபத்தியைக்கொண்டிருக்குந் தம்பியர் எண்மரும் இலக்கரும் பின்பற்றிவருகின்றவருக்கு யிதனைச்சொல்லுவார், நீங்களனைவருங்கடபிராக விசாலமாய் அலைகளைப்பெருக்கியிருக்கின்ற கடலைத்தாண்டி கொடுமைகளுக்கிருப்பிடமாகிய வீரமாமயேந்திரத்தைச்சேர்ந்து சூரனுடன் நமதுகுருதன் பணித்ததைச்சொல்லிக் காட்டுமுன்னலையில் அதைதன் செளமதியாமற் றடுப்பனாயின் தட்சிணத்தில் அந்த நகரத்தை அதம்பண்ணினபின்பு திரும்புவேனெனப் பேசியதிரத்துக்குக்கொண்டாடித் தம்பியர் சேவித்துக்கொள்ள அவர்களை விசாலமாயிராநின்ற தமதுமார்பினிறுக அணைத்துக்கொண்டு தம்பிகாள் நீங்களனைவருமபூதசேனைத்தலைவர்களுடன் கலந்து சற்தன் சன்னிதானத்திற் காத்திருந்து பணிவிடைகளைச்செய்து வரக்கடவீரெனப்பணித்து அவர்களையுங்கடந்துபாற்தசருநீரைப்பெற்ற சமுத்திரக்கரையைநோக்கிச்சென்று அணியணியாக அலைகளைமோதிச் சுருட்டும் கடலினிடத்தைச்சேர்ந்து அதன் மருங்கில் மேருகிரியைப்போலப்பாரித்து உயர்ந்திருக்கின்றகந்தமாதனவரையைக்கண்டு பாதங்களிற் றரித்திருக்கின்ற வீரவெண்டையங்கள்கலில் கலில் கலிலெனச்சத்திக்கத்தக்கதாக அதிசீக்கிரமத்தில் அவ்வரையின்மீதேறிப்போய் விபூதிதூளிதந் திரேகமெங்குஞ் சந்திரனைப்போலப்பிறகாசிக்கும் அழகியதிருமேனியுடன் பச்சிலைமரங்கள் மிகுதியாகப்பெருத்திருக்கும் சோலைகள்மலிந்து மேகசஞ்சார மருமற்குளிர்ந்திருக்கும் கந்தமாதனத்தி னுச்சியில் வீரவாகுதேவர் போய்நின்ற சாட்சியானது யெப்படிக்குக்காட்டுமென்றெனில், நீலகிரியின்பேரில் வெள்ளிமலையொன்று தோற்றுவதையொக்கும், இவையன்றியும் சிலவுவமானங்களைச்சொல்லக்கேட்பீராக- வாயுவேகத்தினும்மிதிச்செல்லும் எழுபச்சைக்குதிரைகள் பூண்டுசெலுத்துந் தேரினிடத்தில் ஆரோகணித்துப்போகும் சூரியபகவான் தவழ்ந்துகடக்கும் உன்னதமுள்ள கந்தமாதனப்பற்வதத்தின்மீதில் வீரவாகுதேவர்வந்து நின்றதனுவாயில் அந்தபாரத்தைத்தாங்கமாட்டாததாய்க் கோடையிடிவிழுந் தன்மையாகக் கிடுகிடெனஅசைவுகொண்டு படபடெனப்பிளந்த அசைந்தியினுல் அவ்வரையி னுச்சியிற் சஞ்சரித்திருந்த மிறுகங்களும் பட்சிசாலங்களுந் திகிற்பட்டு ஓவென்றுமயிரைச்சலைக்காட்டிஓடியது, இவ்விதமாக அத்தலத்திலிருக்கின்ற

சிவாரிகள் சத்தித்துப்போவதுங் கல்லென்னும் ஆரவாரங்களுடன் அருவிகள்பெருகுவதும் எப்படிச்கிருந்ததெனில் இந்ததேவனைத்தாங்கமாட்டேன் தாங்கமாட்டேன் ஐஐயோ எளியன்தீனனெனத் துக்கித்து விழிகளில் நீராப்பெருக்கி வருந்தியதையொத்தும் புசபெலபாக்கிரமசாலியாகிய வீரன் நடக்குமுன்னிலையிற் பாதங்களைப் பெயர்த்துவைக்கும் உறுத்துதலுக்குத் தாளமாட்டாததாய் துன்பத்தடைந்து வாடியததுவாயில் அவ்வரையின்மீதிருக்கும் நாகங்கள் திடுக்கிட்டுப் படங்களையுதறிக்கக்கிய பாரித்தசிரோரத்தினங்கள் பலதிக்கிலுஞ்சிதறிவிளங்குவதுஅப்பறவதத்தினது திரேகம்வெடித்த வாயினிடத்தில் உதிரமானதுபீரிட்டுத்துள்ளிவிழுமாறுகாட்டவும் கலின் கலிலெனமுழங்கும் வீரகண்டைவிசைய பாதங்களைப்படைத்த வீரவாகுநிற்கும் உதிட்டியினால் அவ்வரைபரனது கிடுகிடென்றசைய அத்தலத்திலிருந்தமிருகங்கள்பயந்தபோதிலும் அப்புறப்படாமற் சுற்றியிருப்பதையும் பறவைகள் பறந்தோடியதையும் யோசிக்குமிடத்திற் பெரியோர்களாக விருப்பவர் தாம்சினேகித்தயிடத்தில் வருத்தம்நேர்ந்தபோதினும் அதற்குத்தாமும் உடன்பட்டு அனுபவிப்பதைப்போன்றும் செய்நன்றியறியாதமூடன் பிராணனைப்பெரிதாகநினைந்து தப்பித்துக்கொண்டு போய்விடுவதை யொப்பக்காட்டவும்- மும்மதங்களை ஆற்றைப்போலப் பெருக்கிவரும்யானைகள் வீரத்தன்மைபெற்ற சிங்கங்கள்- வேங்கைகள் நீண்டதுதிக்கையினைப்படைத்தயாளிகள்- கரடிகள்- முதலாக அம்மலை அசைவுகொண்டபோது தாங்களடங்கியிருந்த கெவிகளில்நின்றுந் தவறிவிழுவது பிறசண்டவாயுவின்மோதவிற்பட்டுத் தோப்புகளிலிராநின்ற கனிவகைகள் உதிருமாறுகாட்டவும் உலகவிருளைக்கடிந்து நன்மினைச்செய்துலவுஞ் சூரியன் நகுவெண்டலையைப்போன்றும் கிரணகாந்திகளானவை நீண்டு காட்டுஞ்சடைகளாகவும் ஆர்ப்பரித்து வானகங்கைஅதன்மீது பரவுந்தன்மையினாலும் சந்திரன்போக யிடமில்லாமல் ஒருபாரிசமாகச்செல்லுவதாலும் யித்தகையசிறப்பினைக்கொண்டு ஓங்கியிருக்குங் கந்தமாதனத்தின் உச்சியில்நிற்கின்ற புசபெலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் நெற்றிவிழியினைப்படைத்தசிவபிரானுக்குச் சமதையாகக்காட்டவும்யிதுவுமல்லாமல்லவிக்கொப்பற்ற தூதன்பாதங்களையூன்றும் உறுதிக்காற்றுமல் அவ்வரையானது உடல்வருந்திநெளிந்திருக்க அதன்மீது வீரன்நிற்பதுஆதியிற்றாருகவன ரிஷிகள் கோபித்துச்செலுத்திய முயலகனைக்குப்புறத்தள்ளிக்குலைகுலைந்து உடல்வருந்திவாடத் திருவடிகளையூன்றிச் சந்திரசடாதரமூர்த்தியாகிய சிவனுதன் நின்றகோலமாகக் காட்டவும் அலைகளைவீசிச்சுருட்டுந் தெளிந்தகருநீராய்பெற்ற கடற்கரையினிடத்திற் பசியதழை

சுனைப்பெருக்கி யிரானின்றசோலைகள் பெருத்திருக்குங் கந்தமாதனவ
ரையின்மீதிற் சிவகுமாரன் தூதன்தோற்றநின்றகாட்சியானது பூர்வத்
திற்கொடுங்கோல்செலுத்திவந்த சயமுகாசூரன் பிராணிகளை யலைத்துத்
துரத்திக்கொண்டு காசிப்பதியில் வருங்காலத்தில் அந்நகரவாசிகளுடன்
சகலரும் ஆலயத்திற்புகுந்து முறையிடுவதற்கிரங்கி விசுவனாதீஸ்பரர்
சீறியெழுந்து களிற்றினுருவைப்பெற்று மீறிவரும் ராட்சதனை உதைத்து
த்தள்ளித்தோலையுரிப்பதாக அவன்றிரோசம்பதைபதைக்க மிதித்தூன்றி
நின்றதை நிகர்த்துக்காட்டவும் யிவையன்றியிற் பாலசுப்பிறமணியக்க
டவுள்மாயாபுரியைச்சூழ்ந்துபோர்முடித்த முன்னிலையில்பூதவீரர்தா
ருகன் சேனைகளைமடக்கிக்கொண்டு சின்னபின்னப்படச் சாடுவதற்குப்
பயந்து தப்பித்துக்கொண்டோடிப்போய் அந்தமலையின் கெவிகளினு
மற்றமறைவிடங்களிலும் பதுங்கியிருந்த ராட்சதப்பாதகர்கள் புசபெ
லபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் அத்தலத்திலும்வந்து அல்லோ
லகல்லோலப்படத்திரியுஞ் சேதிதெரிந்தவுடன் என்செய்வனோ வென்
றும் ஏக்கறவுடன் நடுநடுங்கிப் பயப்பிராந்தியினால்உதைத்துக்கொண்
டோண்டனர், சவுனகாதிரிஷிகளே-கொடியபாதகராகவிருப்பவர்கள்பி
ழைக்கும்பொருட்டுசேர்ந்து வாழத்தக்க செடில்தலமு மொன்றுண்
டோஅவர்களிங்கு அவர்களைத்துடர்ந்துகொன்றது யித்தகையஉற்பா
தங்களைப்பெற்ற அம்மலையானது வீரவாகுதேவர் மிதிக்காற்றுமற்கிடுகி
டென்றசையும்போது அச்சாரல்களில் உல்லாசமாக வந்திருந்த வீரவெ
ண்டையங்கள் சத்திக்கும் பாதங்களையுடைய விஞ்சையர்தங்கள் மனது
க்கினியதேவியர் ஊடலைத்தீர்த்து ரதிகேளியிற் கட்டியணைந்து திரோகய
ரவசமாக விருந்தவர்கள் பயந்தவர்களாய் யின்பமுற்றுவதற்குமுன்னம்
பிரிந்து மனவாட்டத்துடன் வானவழிக்கொண்டோடவும் யிப்பிறகார
ம்சமஸ்தமுந்தியங்கத்தக்கதாகக் கந்தமாதனத்தின்மீது நிற்கின்ற வீர
வெண்டைகலிக்கும் பாதங்களையுடைய வீரவாகுதேவரானவர் செயசாலி
யாகிய சூரபதுமன்வாசமாயிருக்கின்ற சிறந்தபட்டணத்தின்மீதிற்போ
கமனதில்நிச்சயித்துக் குமாரதேவர் திருவுருவைத்தியானித்துக்கரங்களை
க்கூப்பித்தொழுது மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் பிரமித்துப்பார்க்
கத்தக்கதாக விசுவரூபத்தைக்கொண்டு சொற்னசன்னத்தையொப்ப மக
ரந்தங்களை யிறைக்கும் வெற்றிமாலைபுரளும் புயாசலங்களைப் படைத்த
வீரன் அவ்வரையின்மீதில் ஒப்பற்ற திருவுருவைத்தரித்துக் குலவிநின்ற
தோற்ற மெப்படிக் கிருந்ததெனில், முன்னொருகாலம் மகம்மேருவி
னிடத்தில் திருவிளையாடலைச்செய்தவரைக் கண்டதேவர்கள் கோபித்தெது
த்தமாத்திரத்தில் அவர்களைக்கொன்று பிறகஸ்பதி சோதிக்கையின்படிக்

கு இந்திரனுடன் மற்றதேவரைமீளவும் எழுப்பித் தமதுபெருமை அவர்களுக்குத் தோற்றும்படியாகப் பாலசுப்பிரமணியதேவர் விசுவரூபத்தைக்காட்டிநின்றதற்கொக்கும், இப்பிரகாரம் ஆண்டிரம்பெற்றவீரவாகுதேவர் சிரம் அண்டகோளகையை உராயநிற்கின்றதருவாயில்அச்சுமையைத்தாங்கப்படாமல் பூமிபிளப்புண்டு அவ்வழியே கந்தமாதனம் பாதலத்திலிறங்குவது குற்றமற்றதவமகிமையைப்பெற்ற அகஸ்தியர்வீற்றியிருந்த விந்தகிரியினுச்சியிற்றமது குறியகரத்தைநீட்டி அழுத்தநகசெகபரியந்தம் நறுங்கிப் பாதலத்திலிறங்கியதை நிகர்த்தும் திரிபுரதகனத்துக்கெழுந்தருளுமுன்னிலையிற் றேவர்கள் நிருமித்துக்கொடுத்த பூவட்டத்தேரினிடத்திற் சிவபிரானொருபாதத்தையூன்றிய மாத்திரத்திற் பாதலத்திலிறங்கியதைப்போலவும் வீரவாகுமிதித்தகாலத்திற் கந்தமாதனம் கீழுலகைச்சேர்ந்தது, ஆதலாற் சவுனகாதிரிஷிகளே - பிதாவுக்கிருக்கின்ற வல்லபம்பிள்ளைக்குண்டாவதற்குச் சங்கையுண்டோ யிப்பிரகாரம் விற்றழும்புபெற்றிருக்கும் திருக்கரத்தையுடைய வீரன்மிதித்த தருவாயில் அவ்வரையுடன் அவர்பாதமும் பிலத்திலிறங்கிச் சிரமாத்திரம் விழிகளுக்களவுபடாமல் அண்டகோளகையை முட்டநின்றது பூர்வத்திற் பிரமன் விஷ்ணுதேடி ஆதியந்தத்தைக்காண்பதற்கரிதாகநின்ற அக்கினிமலையைப்போன்றும் நாரசிங்கத்தையொத்த புசபெலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் பாதங்களுடன் கந்தமாதனம் பாதலத்திலழுந்து முன்னிலையிற்காட்டுப்பன்றிமுதலியமிருகங்கள்அவ்வழியேயிறங்குவதும்வானத்தையளாவநின்ற சிரத்துக்குநேராக அன்னமாதியபறவைகள் பறப்பதும் எப்படிக்குக் காட்டுவதெனில், முற்குறித்த அக்கினிமலையைத்தேடியதைப்போலவே மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் வீரவாகுதேவர் அடிமுடியைநாடுவதற்கெழுந்ததையொத்தும் வலிக்கொப்பற்றவீரன் நிற்பதற்கருகில் உறங்கியிருந்த மலைப்பாம்புகளானவை அலறிவிழித்து அவ்வரையைச்சுற்றியிருந்ததோற்றமாவது திருப்பாற்கடலைக் கடையுமுன்னிலையில் ஆமைமுதுகினிடத்திருந்து வாசுகியினாற் பிணிக்கப்பட்டுச்சுழலநின்ற மந்தரகிரியைநிகர்த்தும் கந்தமாதனம் விளங்கவும் செந்தாமரைக்கண்ணனாகிய மகாவிஷ்ணுவினது நகரமும் பிரமனுலகமும் பல்வகைமுனிவர் பதங்களும் தேவர்கள் நகரங்களும் கருடகாந்தருவர் உவணர்பதங்களும் நவக்கிரகங்கள் உலகங்களும் சந்திரசூரியராதியர்பதவிகளும் மற்றவிண்ணாடுகளனைத்தும் வீரவாகுகொண்டிருக்கும் விசுவரூபத்திற் பலவகைஆபரணங்களாகத் தோற்றவும் விளங்கியது, சவுனகாதிரிஷிகளே - இவ்விதஉவமானங்களைக்கொண்டு பாதலவரையிலாழ்ந்து அண்டவெல்லைபரியந்தமுயர்ந்துகாட்டும் விசுவரூபத்தைக்கொண்டு

நின்றவீரன் அஷ்டதிசைகளையும் சத்தசாகரங்களின் பரப்பையும் அத
னிடையிற்பட்டிருக்கின்ற தீவுகளையும் பெரும்புறக்கடலையும் பூவட்ட
முழுமையையும் சக்கிறவாள பற்வதத்தின் செறிப்பையும் அண்டவெ
ல்லையின் பரப்பையும் மண்ணுலகப்பிரிவுகளையும்விண்ணுடுகளின் அலங்
காரங்களையும் தமது விழிகளைப்பாய்ப்பிப் பார்த்தவராய் எமதிறைவனாகிய
சிவபிரான் வீற்றிருக்கப்பெற்ற வெள்ளியங்கிரியையுந் தெரிசித்துத்தி
ருக்கரங்களைக் கூப்பித்தொழுது மகாவிஷ்ணுமுதலிய தேவர்க்கள்நகர
ங்களையும் பார்த்து எண்டிசைக்காவலர் பட்டணங்களைப்பார்த்துப்பூலோ
கத்திலிராநின்ற நகரங்களனைத்தையும்பார்த்துச் சமுத்திரமத்தியிற்சொ
ர்ணமயமாக விளங்கியிருக்கின்ற வீரமாமயேந்திரபுரியையும்பார்த்தும
தித்தவராய்ச் சூரபதுமன் வாசமாயிருக்கின்ற பட்டணத்துக்கு மற்றெ
ந்தநகரங்களும் ஈடுபடாதெனத் தமது திருவுளத்தில் நினைந்தவுடன்வா
னவெல்லையை யளாவஓங்கியிருக்கும் பொன்மதில்சூழ்ந்த சூரபதுமன்
பட்டணத்தின்மீதில் அதிககோபங் கொண்டவராய்த் தமதுகரங்களி
னொன்றைநீட்டி அப்பட்டணத்தைப் பிசைந்து சத்திராதிகள் பேரி
ல்லாமல் நாசப்படச்செய்வேனென்னும் எண்ணங்கொண்டவர் அத்தல
த்திற் காவலிற்பட்டிருக்கின்ற தேவர்களை நினைந்தவுடன்யிரக்கமுண்டா
ய் அதனைமறந்து தமதுவிசுவரூப உக்கிறத்தைக்கண்டு தாபரிக்கப்படா
மல் விழிகள்கூசப் பயப்பிராந்திகொண்டு வாடுகின்ற விஞ்சையர் இயக்
கர்சித்தர் அழகிய சிறகுகளைப்படைத்த கந்தருவர் சூரியசந்திராதியாகி
ய நவக்கிரகங்கள் ராசிகள் தேவர்கூட்டங்கள் முதலானவர்கள் துன்பங்
களை வீரன்கண்டு பயப்படாதீர்களெனக் கரங்களை அமைத்துக்காட்டி
னர், அத்தருவாயில் வலியிற்சிறந்தகருடர் தங்கள்மனதுக்கினிய மாதர்க
ளோடிஷ்டாலாபமாகக்கூடிக் காமவின்பங்களை விளைத்தயிளைப்பினால் தா
ங்களிருந்த பற்வதத்துக்கு நேர்ந்ததுன்பங்களையுந் தெரியாமல் தேவி
யருடன் நித்திரைசெய்திருந்தவர்கள் மன்மதனிலும் வடிவுள்ளவீரன்மி
திக்கக்கீழ்போகியவனாயுடன்பாதலத்திற்சேர்ந்தவுடன் தெளிவுண்டாய்த
மதுபத்தினிமாருடனெழுந்து அத்தலத்தில் வாழும்நாகங்களைப்பற்றித்
துன்பப்படுத்தவும் குமாரதேவர் செலுத்திய தூதன் வலிகொண்டூன்றி
நின்றகாலத்திற் பூமிபிளந்து கந்தமாதனம் சரேலெனப் பாதலத்திலிறங்
குமுன்விலையில் அதனிடத்திருந்த சர்ப்பங்களை பிலத்தில்வாழும் நாகர்க
ண்டு தம்மினமாதலால் அவற்றிற்கு விருந்துசெய்து குலவவும் தேன்க
ளைத்துளித்துப் பரிமளிக்கும் வெற்றிமாலையணிந்த வீரன் பற்வதத்தை
மிதித்தகாலத்தில் அச்சாரலிலிருந்து மேலானநற்கெதியைவிரும்பித் தவ
ங்களைச்செய்துவரும்ராட்டர்பிலத்தில் விழுந்துதங்களெண்ணம்முற்றும்

பெருமல் மனம்வருந்திக் கிலேசித்திருப்பதாற் சவுனகாதி ரிஷிகளே-கொடியபாதகர்களுக்குப்பிழைத்தற்கேதுவாகியமேலாகியபதங்கிடைப்பது மிகவும் அரியதன்றோ யித்தகைய விநோதங்களைக்காட்டிநின்றபற்வதத்தின்மீது சிவபிரானுக்குச் சமதையாகிய வீரவாகுதேவர் நிற்கின்ற தீரத்தைத்தேவர்கள்கண்டு யிவ்வீரன்யித்தகையகாத்திரமுள்ளதிரோகத்தைக்கொண்டு திறிலோகங்களினும் புகழத்தக்கவளமிகுத்தவீரமாயேந்திரத்துக்குப்போக நினைந்திருப்பதைப்பார்க்குமிடத்தில் வீரவெண்டையமணிந்த பாதங்களையுடைய அவுணர்களுடன் அண்டங்கள்முற்றினும் அழித்துச்சாடும்படியாகிய சிந்தையைக்கொண்டிருப்பதாகக் காணுகின்றதெனவசனிக்கவும் மயேந்திரத்தி லிருக்கின்ற அவுணரும் மற்றதீவுதீபாந்தரங்கள்முற்றினும் வாழுகின்ற அவுணரும் புசயெலபராக்கிறம சாலியாகிய வீரவாகுதேவர் பேருருவைப்பார்த்தவுடன்நமது மரபிலுதித்திருருந்த கிறவுஞ்சபற்வதம் அதப்பட்டதென்று முன்னம் யிவடத்திற் பிறந்தசேதி அபத்தம் அபத்தம் யித்தோற்றம் அவ்வனையின் மாயைப்பெருக்காகும்யிதைதீர்க்கமாகத்தெரியவேண்டுமெனக்கும்புகும்பாசக்கூடித்தமமில்வசனிக்கவும் சலிக்லிலெனச்சத்திக்கும் வீரகண்டைதரித்தவீரவாகுகந்தமாதனத்தின்மீதில் யிவ்விதக்கோலங்கொண்டு நிற்கின்றதை பிற்மதேவன் இந்திரன் தேவர்க்கள் அவர்துணைவராகிய எண்மர் இலக்கர்படைத்தலைவர் பூதவெள்ளங்களாதியாசக் கண்டவுடன் அற்புதத்தையடைந்து செயவுச்சாகங்களுடன் ஆர்ப்பரித்துக்கொண்டாடினர், அக்காலத்தில்விண்ணுடுகளிலிருப்பவரும் ரிஷிகள் முதலாகியசகலருந் தத்தமது பதவிகளில்நின்று யிக்கோலத்தைத்தெரிசித்து அதிகசந்தோஷிங்களைப்பெற்றவர்களாய் பஞ்சசற்பகமலர்களை வாரிவாரி வீரன்மீதிறைத்துகரங்களைக்கூப்பித்தொழுது ஐயனே காலதாமசஞ்செய்யாமற் கொடியபாதகனுகியசூரபதுமன் நகரத்துக்குப்போய்அடியோங்கள் குறைபாடுகளைத்தவிர்த்தாளவேண்டுமெனப் போற்றினர், இப்பிறகாரஞ் சகலருங்களித்துத் துதிக்கும்போது வீரவாகுதேவருக்குச் சந்தோஷம் பிறவேசித்து சிவகுமாரனைச் சிந்தித்துப்போற்றுவதாயினர், எமதிறைவனுகியபாலசுப்பிறமணியதேவர் பன்னிருபுயாசலங்களும்வாழி-சண்முகாரவிந்தங்களும்வாழி-கிறபைதங்கிய பன்னிருவிழிகளும்வாழி-கோடிசூரியப்பிறகாசமாய்க் கூர்மைபெற்று நீண்டிருக்கும் வேல்வாழி- மற்றப்படைகளும்வாழி-தேவதேவோத்தமனுகிய சிவகுமாரன் திருவடிகள்வாழிவாழியென்றுகரங்களைச் சிரத்திற்கூப்பித்தொழுது யிவ்விதமாகப் புகழ்ந்துபோற்றியபதறுவாயில் அன்புமிகுதியினுல் விழிகளிற் செலப்பெருக்குமியப்பெருகியோடிக் கடலிற்பாய்ந்த பிறவாகத்தினுல் அந்நீரின் உவர்ப்பை

மாற்றத்தக்கதாகத் திரேகபாவசத்தனைப் உருத்திராக்கத் தாழ்வடங்களைப்போல மயிர்சிலிர்த்து திரேகமுற்றினும் மூடிக்கொள்ளத் தக்கதாகப் பேரானந்தவெள்ளமானது மனநிற்றேக்கிட்டலைக்கநாக்குழறித் துதித்து நிற்குமுன்னிலையிற் பர்வதங்களும் குலைந்தாட்ட விழிகள்செருகிச் சகாதீதவெல்லையைநோக்கத்திரேகங்குதுகுலித்துக்காட்டியபோது சகலபுவனங்களிலுமிராநின்ற பிராணிகள்முற்றும் சந்தோஷசாகரத்திற் படிந்து மனமகிழ்ந்தது, இப்பிறகாரம் சமஸ்தமும் பேரானந்தத்தையடைந்து வீற்றிருக்கின்ற காலத்தில் வேலாயுதக்கடவுளினது அனுக்கிரகத்தின்முயற்சிகொண்டு கந்தமாதனத்தின்மீதில்நின்ற வீரவாகுதேவர்யோசித்து மேலேழுலகங்களையுங் கடந்திருக்கின்ற யிந்தவிசுவரூபத்துடன் நாம்போகத்துணிவோமாகில் உலகங்கள் மங்குவதன்றியில் அவற்றைப் பட்டபிராணிகள் அதப்பட்டுப்போமாதலால் யிதுதக்குதியன்றென்றெண்ணிஅதற்கிசைந்த கோலத்தைக்கொண்டு கந்தமாதனத்தில்நின்ற வீரன்வானத்திலெழுந்து கோரத்தினங்களினாற் செய்யப்பட்டுசோலித்திருக்கும் கிரீடமானது அண்டகோளகையைத்தடவ வீரரில் வீரனாகியதீரன்கோபித்தெழுஞ் சரபப்பட்சியினது உருக்கொண்டுபோவதைப்போலப்பர்வதங்களுக்குச் சமதையாகவோங்கியிருக்கும் மாடமாளிகைகூடகோபுரங்களாதியாகச் சொர்ணமயமாய் ரத்தினகாந்திகளைவீசியிருக்கும் நீண்டதெருக்களைப்பெற்ற வீரமாமயேந்திர புரியைநோக்கி வாயுவேகமும் பிற்படமுற்பட்டுத் தாவிப்போவதாயினர்.

## கடல்பாய்படலம்

சூதபுராணிகர் - சவுனகாதிரிஷிகளுக்கு மற்றச்சரித்திரங்களையுஞ் சொல்லத்தொடங்கினர், கணீல்கணீலெனச்சத்திக்கும்செயகெண்டைதரித்தபாதங்களையுடைய வீரவாகுதேவர்வானத்தெழுந்தாலத்திற்கும்நின்ற உறுதிக்காற்றுமர்பாதலத்திலிறங்கியிருந்தகந்தமாதனபர்வதத்தின் நிலையைப்பார்த்து மனமிரங்கிப் பழையபடிக்கு மீளவெழுந்து நிற்கக்கடவையென்று அனுக்கிரக வார்த்தையைச்சொல்லியவுடன் அதிசீக்கிரமத்தில்வெளிப்பட்டு வானத்தையளாவ எதாப்பிறகாரம் சமுத்திரக்கரையின்மீதிற்றோற்றியது, அதைக்கண்டுமகிழ்ந்தவராய் வானவிழிக்கொண்டு தாவிப்போகும் வேகத்தினாற் பிறந்தவாயுவின்பெருக்கிற்பட்ட பர்வதங்கள் அடியுடன்பெயர்த்து சாகைப்போல அவர்பின் தொடர்ந்துபோவதுஎப்படியிருந்ததெனிற், கொடியசூரன்பட்டணத்தின்மீதில்நமதிறைவன்

தனிமையிற்போகின்றன ராதலால்நாம்படைத்துணையாகச்செல்லவேண்டுமென்றெண்ணித் தம்பியர் எண்மரும் இலக்கரும்படைத்தலைவரும்பூதவீரரும்புறவணியில்நடப்பதற்கொக்கும்இஃதன்றியும்அதிகவேகமாகஅந்தரவழிக்கொண்டுநடக்கும்வீரவாகுதேவர்திரோகத்தில்நின்றுமெழுந்தபெருங்காற்றின்உறுதிக்காற்றாமல் அண்டகோளகையானதுகிறுகிறெனச்சுழலவும் பிராணிகள் முற்றுந்திப்பிரமைகொண்டுசுவாசமெழாமல் அலைந்துவாடவும் சத்தசாகரங்களும் அல்லோல கல்லோலப்பட்டு அலைகளைமோதித் தமது நிலைகளைக்கடந்து ஏகசமுத்திரமாகப்பெருகவும் சத்தமேகங்களுங் காற்றாடியைநிகர்த்துக் கரகமெனச்சுழன்றொதுங்கவும் சர்வசங்காரகாலத்தில் உலகங்களை அழித்துவரும்வடவாமுகாக்கினியின் வெம்மையை அணைக்கக்காத்திருக்கும் ஊழிக்காற்றானதும் சகிக்கப்படாமையாற் றனது நிலைகுலைந்து ஓடியொதுங்கவும் இஃதன்றியில் அதிகவல்லபசாலியாகிய வீரன்பின்னும் விரைந்துதாவிச்செல்லுகின்ற தறுவாயிற்பெருகிய காற்றின்வேகமானதுமீறி ஆயிரங் கிரணசாந்திகளைவீசிஉலகங்களைவிளக்கிவரும் சூரியன்வெம்மையையும் தன்னிடத்திற் பட்டவையனைத்தையுந் தகிக்கவல்ல சுவாலையைப்பெற்ற அக்கினியின் கொடுமையையும்அடக்கிச் சோடசகலைகளைப்படைத்துக் குளிர்ந்திருக்குஞ்சந்திரனையும் வருணனையுமொப்பத் தண்மைபெறச்செய்தும் வடவையெனப்பெயர்பெற்று அலைகள்பெருத்தகடலிலிடத்தடங்கியிருக்கும் ஊழித்தீயின்வெப்பத்தைதவித்துக்குளிரச்செய்தும்இதுவல்லாமற் பரிமளித்திருக்குங்கடப்பமாலைபுரளும்புயங்களையுடையவீராதிவீரன்முன்னினும் துரிதமாகச்செல்லுகின்றதறுவாயில்வாயுவும்அதிகரித்துஅலைத்துக்கலக்குமுன்னிலையிற் றிரைகளைச்சுருக்கிக்கடலானது உள்வாங்கிக்கட்டுக்காவல்களைப்பெற்றிருக்கின்றமயேந்திரபுரியின்மீதிற்றாவுவதெப்படிக்குக்காட்டுவதெனில், ஆயிரத்தெட்டண்டங்களையும் ஏகச்சக்கிறத்தைச்செலுத்திவரும் சூரன்சேனைகள் வீரவாகுதேவர்மீதிற் பகைத்துப்போய் அவர்வலிக்குடைந்து பயமீறியினுற் றமது நகரத்தைநோக்கித் திரும்பிஓடிவந்ததுக்கொக்கும் இவையன்றியில் ரிஷபத்தையொத்தகெம்பீரநடையையும் வலியையும் பெற்றிருக்கின்ற வீரன்பாதங்களைக்கொண்டு மிதித்தகாலத்தில் அவ்வுறுத்துதலுக்காற்றாமற் பூமிபிளந்து கந்தமாதனங்கீழ்போய்ப் பாதலந்தோற்றக் காட்டியபடியால் அவர்போகும் வேகத்திலுண்டாகிய காற்றானதும் அத்தகையவலியினைப்பெற்றதாதலால் அதன்வேகத்திற்பட்ட கடலானது அலைந்து கருநீரானது பிளந்து வெள்ளிடையாகத்தோற்றியபூமியும் வெடித்து நாகலோகத்தைத் தோற்றச்செய்ததுபசியசொர்ணத்தினுற் செய்யப்பட்ட சறப்பளிமுதலிய ஆபரணங்கள் புர

ளும் புயாசலங்களைப்பெற்றவீரன்அதிகவேகமாகப் போகுமுன்னிலையி
ற்பெருகிய காற்றுடன் அவருக்குண்டாகிய கோபவெம்மைமிகுந்து சு
வாசங்களிற்பெருகுஞ் சுவாலையுங்கலந்துபோய் குற்றங்களேகுடிகொ
ண்டிருக்கும் மனதையுடைய சூரன்வாழும் வளமிகுத்தநகரத்தினைச் சுற்
றியதெப்படிக்கிருந்ததெனில், அவன்தூசிப்படை வெளிப்பட்டுவளைந்
திருப்பதற்கொக்கும் அழகியவீரவெண்டையங்கள் சத்திக்கும் பாதங்க
ளைப்பெற்றவீரன்போய்ச்சேருவதன்முன்னம் அவர்வேகத்திலுண்டா
கிய காற்றானதுவிரைந்துகொண்டு சென்றுபற்வதங்களைப் பழித்தோங்
கியிராநின்ற புசங்களைப்படைத்த சூரபதுமன் வாசமாயிருக்கின்றம
யேந்திரபுரியினைச்சூழப்பொன்வரையையொத்தோங்கிவளைந்திருக்கின்ற
மதிலின்பாரிசத்திற் பசியசிறகினையுடைய கிளிப்பிள்ளைகள் முதலிய பட்
சிகள்பெருத்துச் செவிகளுக்கினிமையாகச் சத்தித்திருக்கும் சோலைகள்
நந்தவனங்கள் யிவற்றிற்புகுந்து கிளைகளொடிந்து சின்னபின்னப்பட
த்தக்கதாக அலைத்துநிலத்திற்கிடத்தவும்உறையிற்செருகியிருக்கும்கூரிய
வாளாயுதத்தைத்தாங்கிய வீரன்சுவாசத்திற்பெருகிய அனற்கொழுந்தான
துமுந்திப்பறந்து பகைவன் பட்டணத்தினைக்கொளுத்துமுன்னிலையில்
அவ்வீரன்போகும்வேகத்திலுண்டாகிய காற்றானதோங்கிஅலைகளைவீசுங்
கடலினிடத்திற்றுக்கக்கொதித்துமாறிமாறியெழும்அலைகள்கரங்களாகத்
தாவிப்பற்றிய திமூளவொட்டாமல்அப்போதைக் கப்போதவித்துவரவு
ம்வீரன்தாவிச்சென்றகாலத்தோங்கிய சுவாசமும்வேகத்திலுண்டாகும்
ஓசையும் விழிகளிற்பெருகும் அனற்பொறிகளும் நாசிகளினின்றோங்
கும் சுவாலையும் ஏகமாய்மோதத் தாக்குண்டுசெலப்பெருக்கையுடையச
முத்திரம் மேலிட்டோங்கும் அலைகளும் சேர்ந்துபகைவன் பட்டணத்
தின்மீதிற்போய் வானமூலமாக விழுவது பூதப்படைகள் நாற்புறங்களி
லும் முத்திக்கைபோட்டுக்கொண்டு சமரவிளைப்பதற்கொத்தும் மந்தர
த்தினையொத்த புயங்களைப்படைத்து ஒருவராலும் வெல்லுதற்கரிய வலி
மையும் பெற்றிருக்கின்ற வீரன் சக்கிறவாளப் பட்சியைப்போல விசை
கொண்டுதாவும்போதுண்டாகிய வாயுவின் ஆரவாரத்தினும் சமுத்திரங்
கலங்கி அதனிடத்தலவியிருந்த-சின்னை-மகரம்-பனை-திருக்கை-திமிதி
மிங்கல கிலங்களாதியாகிய மச்சராசிகள் சின்னபின்னப்பட்டு மாளவும்
எமதிறைவனுகிய பாலசுப்பிறமணியதேவர் விடுத்ததூதன்பாய்ந்துபோ
ம்போதுகடலானது எதிரேறுமற்புறகிட்டுச்சாய்ந்து அலைகளாகியகரங்க
ளினுற் சலசரங்களையேற்றி ஒருவனுக்கு அந்தியகாலம் நேர்ந்து சாகவி
ருக்கின்ற தருணத்தில் அவன்சுற்றத்தினர், அவனுக்கு விருப்பமுள்ளப
தார்த்தங்களைக்கொடுப்பதுபோலச் சூரன் பட்டணத்தில் வீசவும் வயிரக்

சம்பத்தினையொத்த வலியபுசங்களைப்படைத்த வீரவாகுசெல்லும்வேகத்திலுண்டாகிய வாயுவினோசையானது சூழ்ந்துகொண்டகாலத்தில் அதன் அதிர்ச்சிக்குத் தாளமாட்டாமல் வானத்திலிருந்த மீன்களுங் கலைபட்டுபலபலவென அமோகமாகச் சமுத்திரத்தில்விழும்போதுண்டாகியகொதிப்பினாலெழும் அலைகளின் மூலமாகத்தாவிய மீன்கள் அவற்றிக்குமாறுகச்செல்வதுபோற்காட்டவும் மன்மதனும் யிச்சிக்கும் சுந்தரவடிவுள்ளகாளையாகிய வீரன்வேகங்கொண்டு தாவும்போது செந்தாமரைமலரையொத்த திருக்கரங்களிற் பூண்டிருக்கின்றபிரகாசம்பொருந்தியவயிரக்கடகங்களினின்று மெழுஞ்சோதியானது பளபளெனப்பரந்து சக்கிரவாளகிரியினுக்கப்புறத்திற் காடாந்தகாரமாகப் பரந்திருக்கின்ற யிருளையுந் தூரத்தி அழகியவானத்திற் றோற்றும் மின்னற்படலம்யிந்திரதனுசுயிவற்றையும் எதிர்ந்து அவற்றின் பிறகாசத்தையடக்கி வீறிவிளங்கிக்காட்டவும் தேவர்கள் படைத்துக்கொடுத்த பூவட்டத்தேரிலாரோகணித்து அவர்களைச்சேனைகளாகக்கொண்டு சிவபிரான் திரிபுராதிகளை வாட்டவெழுந்தகாலத்திற்பிறந்த திருநகையழலைப்போன்றும் நுதல்விழித்தீபாந்தழலையொத்தும் மகம்மேருவாகியதனுசிற்பூட்டிச்செலுத்திய மகாவிஷ்ணுஉருக்கொண்டபாணத்தை நிகர்த்தும் வீரவாகுதேவர் பாய்ந்தும் பூலோகமுற்றுமலைத்துத் தவவிரதங்களைச்செய்துவரும் ரிஷிகளுக்குத் துன்பங்களை விளைத்தும் தேவர்கள் செல்வங்களனைத்தையுங் கொள்ளைகொண்டு தூர்த்தியலைத்தும் இவ்விதகெடுதிகளைச்செய்து வீறியிருக்கின்ற சூரபதுமனை அவன்வர்க்கத்தவருடன் துரிதமாகக்கொன்றுவாட்டக் குமாரதேவர் திருவுளத்தெண்ணிக் கோபித்தேவிய ஒப்பற்றவேலாயுதத்தைநிகர்த்து புசபெலபராக்கிரமசாலியாகிய வீரன்பாய்ந்தும் உலகங்களைத்திருவயற்றடக்கி மீளவெளியிடும் மகாவிஷ்ணுவானவர் அலைகள்மிகுத்ததிருப்பாற்கடலைக் கடைந்துதேவர்களுக்கு அமுதத்தினைத்தரநினைந்த கருத்தின்படிக்கு வானத்தையளாவநின்ற மந்தரகிரியானது பாற்கடலைச் சேர்ந்ததைப்போன்றும் வானநாடுகளும் பூவட்டமுற்றினும் வருந்திவாடத்தக்கதாகச் சுவாலையைவீசிப்பெருகிய ஆலகாலவிஷத்தைத்தருவித்துண்டுகண்டத்திற் றரித்தவிடமானது சிவபிரானைவேண்டித் தன்னைவெளிவிடக்கோரியதற்கிசைந்து கர்த்தன் செலவுகொடுத்த காலத்தில் அவ்விடமானது கடலைநோக்கி வந்ததைப்போன்றும் வீராதிவீரனாகிய தூதன் பாய்ந்து வருகின்றனன் — சவுனகாதிரிஷிகளே சொற்ன வெண்டையங்களார்த்திருக்கும் பாதங்களையுடையவீரவாகுதேவர் இவ்விதமாகச்சமுத்திரமார்க்கத்திற்சென்று வெற்றிமாலைபுரளும் புசபெலபராக்கிரமசாலியாகிய சூரபதுமன்வாசமாயிருக்கின்ற மகேந்திரகிரியின் வடபாரிசத்

ற்செயசாலியாகிய யாளிமுகனென்னும அவுணவீரன்காவல்கொண்டு போற்றிவருகின்றஇலங்கைநகரத்துக்கருகில்வருகின்றனர்.

---

## வீரசிங்கன்வதைப்படலம்

---

சூதபுராணிகர்-மேல்நடந்த சரித்திரங்களையுஞ் சொல்லுவதாயினர், சவுனகாதிரிஷிகளே வீரவாகுதேவர் கந்தமாதனவனாயை நீங்கிச் சமுத்திரமார்க்கமாக வேகங்கொண்டுசென்று இலங்கைக்கருகில் வருகின்றகாலத்திற்சம்பவித்தசேதிகளையுங் கேட்பீராக-வீரவாகுதேவர் அத்தலத்துக்குவருவதன்முன்னம் பாரித்தசிரத்தைப்படைத்த யாளிமுகனென்னும் அவுணவீரன் பலவெள்ளம் ராட்சதப்படைகள்சூழ்ந்துவர ரதாருடனாய் ராசசின்னங்களைப் பலரேந்திநடக்கவும் செயபேரி மங்கலவாத்தியங்கள் தாம் தாமென்றதிரத் தான்வீற்றிருந்து அரசுசெலுத்தும் இலங்கை நகரைக்கடந்து ராசராசப் பிறவுமடகனாகிய சூரபதுமனைக் கண்டு போற்றிவரத்தக்கதாக வீரமாமயேந்திர புரிக்குப் போயிருந்தவன் வருமளவும் அவன்பிள்ளையாகிய அதிவீரனென்பவன் ஆயிரவெள்ளஞ்சேனைகளுடன் இலங்கைநகரில் வாசமாய் பிதாவிருந்த சிங்காதனத்தில்வீற்றிருந்து மந்திரி பிரதானிகள் சேனைத்தலைவர் தண்டநாயகர் முதலாகிய சகலரும் சூழ்ந்திருக்க அரசுசெலுத்திவருகின்ற தருவாயில் அந்நகரவடபாரிசத்தில் மேருவையொத்துவிளங்கும் கோபுரவாயலினிடத்திருந்து செயசாலிகளாகிய அவுணவீரர் அன்னூறுவெள்ளம்சேனைகளுடன்படைத்தலைவர்களிலொருவனாகிய வீரசிங்கனென்னும் செயசாலியானவன் காவல்கொண்டிருப்பன் இத்தகையசவுரியவான்களாகிய அவுணர்களுடன் கண்ணிமையைப்போல அவ்வாயலினிடத்திருந்து காத்துவரும் வீரசிங்கனானவன் விரித்தசிறகினைப்படைத்த சரபப்பட்சியைப்போல அதிவேகங்கொண்டு வெற்றிமாலைபுரளும் புயங்களையுடையவீரவாகுதேவர்வருவதைக்கண்டமாத்திரத்திற் கோபநகைகொண்டு நல்லகாரியம் கிஞ்சற்றும் நமதுகாவலின் வலியையும் வீரத்தையும் மதியாமற் றனிமையில் ஒருவன் யிவடம்வருவதோ, யிவன்யாரென்று வடவையைப்போற்சீறி யித்தகைய தயிரியங்கொண்டுவந்த யிவன்பிராணனைக்கணப்போதில் வாங்கியிரசொற்கத்திற் சேர்ப்பேனெனத் துணிவுகொண்டு அன்னூறுவெள்ளம் ரதகெசதுரகபதாதிகளாகிய சேனைகள் கடலைப்போல ஆர்ப்பரித்துப்பின்பற்றிவர வாயுவேகமும் மனோவேகமும் பிற்படமுந்தி அதிசீக்கிரமத்தில் வீரவாகுதேவருக் கெதிரிற்போய்த் தடுத்துநின்று புயவலிக்

சொப்பற்ற வீரவாகுவை உருத்துப்பாத்து அடாயயலே யித்தினவனால்நாங்கள்காவல்கொண்டிருக்கும் யிந்தஇலங்கைகக்கருகிலும் வந்தவர்களொருவருமிராத அப்படிக்கிருக்கச் சற்றும்பயமில்லாமற் றனித்து உயிரினிடத்திச்சையில்லாமல் வீணிற்பறிகொடுக்கவந்த உன்னைக்கொல்லுவதன்முன்னம் யிவ்வளவுதூரம்வருந்தி நீவந்தகாரியத்தைத் துரிதமாகச் சொல்லக்கடவையெனக் கேட்டபோது சொற்னமலையையொப்ப ஓங்கிப்பருத்துருண்டு திரண்டிருக்கும் அழகிய புசங்களைப்படைத்த வீரவாகுதேவர் மறுமொழிசொல்லுவார், யிந்தஇலங்கையைக்கடந்துஉங்களுக்கரசனாகவிருக்கின்ற சூரபதுமன் அரசுசெலுத்திவரும் வீரமாமயேந்திரத்துக்குப்போய் ராசகாரியங்களைக்குறித்து அவனுடன்வாற்தையாடித் திரும்புவதாக நினைந்து வந்தனம், தமதுவரவின்சேதி யிதுவாகும் நீ சுத்தவீரனாகவிருப்பையாகில் என்னைத் தடுப்பதற்கு உன்னாற்கூடியமுயற்சி யொன்றினைத் தேடக்கடவை அதனைப்பார்க்க விருப்புற்றனமென்று பேசியபோது புசபெலபராக்கிரமசாலியாகிய வீரசிங்கன்அவர்சொல்லிய வாற்தையின் சுருக்கைக் கேட்டமாத்திரத்திற் கொஞ்சமாவது அவுணராகிய நமதாணை ஆக்கினையை மதியாமற் பேசுகின்றனன்,இவனைப்பாற்குமிடத்திற் சற்றுவலியனாகக் காணுகின்றது ஆகிலுமென்ன நமதுகாவலைக்கடந்துபோவதைஅறிவோம்கடலைத்தாண்டி சங்கையற்று யிவ்வளவுதூரம் வரவிடுத்ததுமெத்தவும் அழகாகவிருக்கின்றதெனநினைத்து தன்னைச்சூழ்ந்திருக்கின்ற அவுணவீரர்மீதில் விழிகளைப்பரப்பியிவன்பிராணனை நிமைப்போதில் வாங்கக்கடவீரென்று ஆக்கியாபித்தமாத்திரத்தில் மிருகங்களுக் கரசனாகவிருக்கின்ற வீரசிங்கத்தைக் கானகத்தில் வேட்டையாடித்திரியும் வேடர்கள்வளைந்துகொண்டு போராடியதைப் போலப் பொன்போன்று விளங்குந்திருமேனியைப்படைத்த வீரவாகுதேவனை நாற்புறங்களினும் வளைந்துகொண்டு அதிககோபாவேசங்களுடன் போர்செய்யத் துடங்கினர், ஒருபாரிசத்திற் பலகோடி அவுணர்கூறி வேலாயுதங்களைக் குறிக்கொண்டு வீசவும் மற்றொருபுறத்தில் மந்தரத்தையொத்ததெண்டாயுதங்களைச்சுழற்றி எறிந்தும்ஒருபுறத்தில் முசலங்களைச்செலுத்தியும் பிண்டிபாலங்களை வீசியும் சப்பணங்களைத் தூண்யும் நீண்டவிற்களை வட்டாகாரமாகவளைத்து கொடியபாணங்களைப்பிறையோகித்தும் கூரியசூலங்களைவீசியும் தோமரங்களைவிடுத்தும் இப்பிறகாரம் அவுணர்மேலிட்டு அஸ்திரசஸ்திரங்களை ஒன்றனந்தமாகஆயிரங்கிரண சமோகங்களையுடைய சூரியபகவானை யிடிகளைப்பெருக்கும் மேகங்கள் மறைத்ததைப்போல அமோகமாகச்செலுத்திக் கொடியசண்டைகொடுத்துவருவதை வீரவாகுதேவர்கண்டு திருநகைகொண்டு

சற்றும்மனந்தளராமல் தீரத்துடனெழுந்துக் கூர்மையாகச்சொலித்திரு
க்குந் தமது உடைவாளாயுதத்தை உறையினிடத்திருந் துருவி கரத்திற்ப
ற்றிக்கொண்டு உதறி லகுப்பாய்ந்து மனதிற் கோபாக்கினிமூண்டு பாதி
க்கஉருத்துத் தன்பேரிலெதுத்துப் போர்கொடுக்கும் அவுணச்சேனை ச
முத்திரத்தைச் சடுதியிற்சுற்றிச்சுற்றிக் கொல்லத்துடங்கி அரக்கினாற்செ
ய்யப்பட்டு வானத்தையளாவநின்ற பர்வதத்தின்மீதிற் குமாரமாகியவெ
ம்மையைக்காட்டும் அக்கினிதேவன்சிறிப்பற்றிக்காய்ந்துருக்கி அதனு
ருவைமுற்றினும் அதிசீக்கிரமத்திற் களைத்துவாட்டுவதைப்போலத் தன்
மீதில்நெருங்கியெதிர்த்துவந்துசண்டைகொடுத்தவரனைவரையும்அல்லோ
லகல்லோலப்படும்படிக்கு அதிசூரனாகியவீரன் வாளாயுதத்தை உதறிதி
சைநிசையினும்பாய்ந்து பாய்ந்துகொன்றவிதமாவதுகுளிர்ந்தபனிப்ப
டலத்தையும்யிருட்பெருக்கையும்அக்கினிக்கொழுந்தைப்போலவிசுங்கி
ரணகாந்தியைச் சூரியபகவான்பரப்பி வாட்டுவதைநிகர்த்து வீரவாகுதே
வர் பிரகாசம்பொருந்திய வாளாயுதமொன்றினாற் கடலையொப்பப்பர
ந்திருந்தசேனைகள் முற்றினுங்கண்டதுண்டமாகவெட்டிவெட்டிக்குவி
த்துலவினர், அக்காலத்திற்பெருகிய உதிரமானது ஆற்றைப்போலவிரை
ந்தோடி சமுத்திரத்திற்பாய்ந்து அதனுவரப்பைமாற்றிச் செங்கடலாக்
கிமகரமச்சங்களுக்கு விருந்துசெய்யவும் ரதகெசதுரகபதாதிகளனைத்து
ம் ஒன்றுவதுரணக்களத்திற் றேற்றாமல் நாசமடைந்து வெள்ளிடையா
ய்ரதங்கள் சின்னபின்னப்பட்டுக் குவிந்தும் கெசங்கள் கண்டதுண்ட
ப்பட்டும் வேகமுள்ளபுரவிகள் தாறுமாறாகப்புரண்டும் அவுணர் கால்வே
று கரங்கள்வேறு சிரங்கள் வேறுவேறாகக் கண்டிக்கப்பட்டு பிணமலை
களெங்கும் ஓங்கிக்காட்டியகாலத்தில் கவந்தங்கள் மிகுதியாகக்கூத்தாட
வும் பூதபைசாச டாகினி காளிக் கூட்டங்கள் பிணமாம்சங்களைத் தெவிட்
டவுண்டு களித்துக்கெக்கலிகொட்டிக் குதித்துலவவுங்கழுகுபரந்துகாக்கை
கள் தசைகளைப்பிடுங்கித்தின்று உதிரங்களையருந்திப் பந்தலைப்போல
வானவெல்லையில்வட்டமிடவும் இப்பிரகாரம் அன்றுவெள்ளத்தொ
கைகொண்டநால்வகைச்சேனைகளைத் நுத்துமுறும வீரவாகுதேவர்வளைந்
துவளைந்து வீரவாளினால் வெட்டிச்சங்கரித்துலவு முன்னிலையிற் றப்பி
நின்ற மற்றஅவுணவீரர்களனைவரும் அதிகாயங்கள் திரோசமுற்றும் ப
ட்டவருத்தத்தினால்தாபரித்துநிற்கப்படாமல் நடுங்கிஏங்கித்தங்கள்பிரா
ணனைக்காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு பூவட்டவெல்லைகளிலும் தீவு
தீபாந்திரங்களிலும் ஆரண்ணியங்களிலும் வானநாடுகளிலும் மாறுரு
கொண்டோடி ஒளித்தனர், இவ்வாறு ஒருவரின்றி மறைந்தகாலத்தில்அ
த்தவிபரீதத்தை வீரசிங்கன்கண்டு மனம்பொறாமல் மானம்பாதிக்க

வடவாமுகாக்கினியைப்போல அதிககோபங்கொண்டு அஷ்டதிசைகளி
னும்விண்ணகரத்தினும் புகழவோங்கியிராநின்றபுசங்களைப்பெற்றவீர
வாகுபேரில் முத்தலைச்சூலமொன்றைக் குறிகொண்டு கடாவினன் அப்
படைவெளிப்பட்டவுடன் அனலையிறைத்து வேகமாய்வருவதை வீரன்
கண்டு தன்கரத்திற்பற்றிய வாளினால் இருதுண்டமாக வெட்டித்தள்ளி
ச்செயவுச்சாகத்துடன் சிங்கனாதஞ்செய்யும்போதுதான்விட்டசூலத்தை
க்கண்டித்ததுமன்றியில் கெலிப்புடன் வீறியிருப்பதை வீரசிங்கன்கண்
டுஆண்டிறம்பெற்ற வீரவாகுபராக்கிரமங்களையுமதித்து இவனைச்சுலப
மாகவெண்ணப்படாது தகுந்தபிறையெத்தினங்களினால் வெல்லவேண்
டுமென நிச்சயித்தவனாய்த் தன்னிடத்திலிருக்கின்ற படைகளில்முக்கிய
மாகிய வச்சிராயுதத்தையெடுத்து வலிகொண்டு வீசியபோது வீரவாகு
தேவர் யெதிரிற்பாய்ந்து வாளைவீசி அதையுந்துண்டமாக வெட்டித்தள்
ளியதுமன்றியிற் பகைவன்மற்றொருபடையை யெடுத்துச்சண்டைகொ
டுப்பதற்கு முன்னம் லகுப்பாய்ந்து அவுணவீரன் முன்குதித்துப்பின்
னிடைந்து முன்னடிபாய்ந்து மின்னலையொத்த வாளையுதறி வீசிக்கரங்க
ளைக்கண்டித்தெறிந்து கொடியபாதகன் சிரத்தையும்வெட்டி கடலிற்றள்
ளிஎதிர்ப்பவரொருவருமில்லாமையால்ஒப்பற்றவாளாயுதத்தைஉறையிற்
சேர்த்துக்கொண்டு தாம்வந்த காரியத்தை முடித்துப்போகு முன்னம்
நேர்ந்தபோராவிநாயகப்பிரீதியாகவென்றுவெற்றிகொண்டுவீரலட்சுமி
புசங்களிற்குடிகொண்டிருக்க வேலாயுதசுவாமியார் விடுத்ததூதன் அத்
தலத்தைக்கடந்துபோவதற்செத்தனப்பட்டனர்,

---

## இலங்கைவீழ்படலம்.

---

சூதபுராணிகர் -சவுனகாதிரிஷிகளுக்கு மற்றசரித்திரங்களையுஞ்
சொல்லுவார், மகாதிமிங்கல முதலிய மச்சங்கள் சஞ்சரித்திருக்கின்றச
முத்திரத்தின் மூலமாக மேருகிரியானது பறந்துவருவதைப்போல வா
னவழிக்கொண்டு வெற்றிமாலைபுரளும் புசங்களைப்படைத்த வீரவாகு
தேவர் போகுமுன்னிலையிற் றம்மைத்தடுத்த வீரசிங்கனாதியாகிய சேனை
களைச்செயங்கொண்டு மனவுச்சாகத்துடன் இலங்கைநகரிற்றோன்றும்
முச்சிகரங்களில் மத்தியில் விளங்கும் உன்னதமுள்ள சிகரத்திற்பாய்ந்
து நின்றனர், நைமிசாரணியவாசிகளே கிரவுஞ்சபர்வதத்தை வெற்றிவே
லினாற் றகர்கண்ட பாலசுப்பிரமணியக்கடவுள் விடுத்ததூதன் இலங்
கைக்கு வட்டிற்குதித்தகாலத்தில் அந்நகரந் தத்தளித்துப்படும் வருத்த

த்தினுற் புசபெலபராக்கிரமசாலியாகிய ராசகுமாரன் அதிவீரனென்ப
வனும் மற்றஅவுணவீரரும் மனங்கலங்கி ஏங்கி சோடையிடியிற்பட்ட
சர்பங்களைப்போல யாவருக்குந் திரேகங்கள் நடுநடுங்கவாடிச் சோர்ந்
துகுப்புறவிழுந்து களைத்தனர், இராசதானியாகவிருக்கின்றவீரமாமயே
ந்திர புரத்துக்கு வடபாரிசத்திற் செடில்தலமாகவிருக்கின்ற இலங்கை
யின்கொடிமுடிகளி னொன்றின்பேரில் வலிக்கொப்பற்ற வீரன்பாய்
ந்துநிற்கும் உறுதிக்காற்றுமற் கிடுகிடெனவதிர்ந்து அதில்வாசமாயிரு
ந்தஅவுணருடன் புலால்கமழ்ந்து ஆழ்ந்திருக்கும் கடலில்மெல்லமு
ழுகுவதைக்கண்டு வீரன்களித்துப் பார்த்திருந்தனர், இப்பிரகாரம்இல
ங்கைகடலில் வீழ்வது எப்படிக்குக்காட்டியதெனிற் றேவர்க்கள் முதலா
னவர்கள்அமுதமுதலிய வளங்களைப்பெறநினைந்து முன்னொருகாலந்தி
ருப்பாற்கடலை மத்திக்கவெத்தனப்பட்டகாலத்தில் முந்திவிநாயகமூர்த்
தியைப்பூசித்துத் துடங்காதகுறைபாட்டிற்குக் கணேசர் திருவுளத்திற்
கோபங்கொண்டவுடன் தாம்பாசப்பூட்டியிருந்த வாசுகியுடன் மந்தர
கிரியானது நிலைதப்பிக் கடலிற்கவழ்ந்ததைப்போன்றும் புசபெலபரா
க்கிரமசாலியாகிய வீரன்பாதங்கள் வருத்திய மாத்திரத்தில் அலைகளைப்
பெருக்கியிராநின்ற கடலில்அழுந்திய இலங்கை முற்காலத்தில் உலகங்
களின்மீது பறந்துவிழுந்து நாசஞ்செய்துலவிய பர்வதங்களின்சிறகுக
ளையரிந்து மன்னுயிர்களைப் பாதுகாக்கவெண்ணித் தேவராசன்வச்சிரா
யுதத்தைக்கொண்டு அவற்றின் சிறகினைக்கண்டித்து வருவதைத்தெரிந்த
மைனுக பர்வதம்பயந்து கடலிற்பாய்ந்தொளித்ததையொத்தும்முற்கா
லத்திற் சோமுகாசுரனென்னும் அவுணராசன் பிரமனைவஞ்சித்துச் சது
ர்வேதங்களையும் அபகரித்துக்கொண்டுபோய் சமுத்திரத்தில் ஒளித்திரு
ந்த முன்னிலையில் மகாவிஷ்ணு அவனை அதப்படுத்தி வேதங்களை எதாப்
பிறகாரம் நிலைபெறச்செய்யும்பொருட்டு பொன்னையொத்த மேனியை
யுடைய மச்சமாய்ச்சமுத்திரத்திற்பாய்ந்ததையொப்பவும் பிரமன் மு
டிவுகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் கரைபுரண்டேக
யாய்க்கொத்துபூமியைப்பாதலத்தில்விழச்செய்ததருவாயிற்பழையபடிக்
கு நிலத்தைத் தாபிக்கநினைந்து மகாவிஷ்ணுவானவர் கூரிய கோடுகளைப்
பெற்றவராகமாய் அப்புனலிற்பாய்ந்ததை நிகர்த்தும் இஃதன்றி யிவ்வீ
ரவாகுதேவர் மிதிக்காற்றுமற்கடற்கரையில்நின்றகந்தமாதனம்பாதலத்
திலழுந்தியத்துடன் விசாலமாகவிருந்தஇலங்கையுஞ்சமுத்திரத்தில்முழு
கியதையொக்குமிடத்தில் முற்காலத்தில் ஒருபெண்கொடியினிடத்திற்
பெற்றமோகத்தினுற் சலந்தரனென்னும் ரிஷியானவர் சமுத்திரத்தில்வி
ழுந்ததேபோது இந்திரனும் அவள்மையலிற்பட்டுக் கடலிற்பாய்

ந்தனையொத்தும் கற்சம்பத்தையொத்த புசங்களையுடையவீரன் பாதங்
களை யூன்றிநின்ற காலத்திற் கந்தமாதனம் நாகருலகத்திலழுந்திய தெ
னக்கேழ்விப்பட்டதாய் அதனைக்கண்டுவரும்படிக்குப் போனதையொ
ப்ப வீரன்மிதித்த இலங்கைக்கடலின்முழுகியது சவுனகாதிரிஷிகளேயிவ்
விதமாக இலங்கைப்பதியானது கடலிலழுந்திய காலத்திற் பெண்டுபிள்
ளைகள். சுற்றத்தினரோடு அந்நகரில் வாசமாயிருந்த அவுணர்முற்றினுந்
திடுக்கிட்டு மனங்கலங்கி வருந்திக்கிலேசித்து வாடி விழுந்துபுரண்டு ம
ருண்டு பயப்பிருந்திகொண்டு அளவிறந்த அவுணர்கள் குடும்பசமேத
மாகக்கடலில் முழுகியகாலத்திற் சுருதிமிங்கலகிலங்கள் திருக்கைமுதலி
யபருத்தமீன்கள் அமோகமாகமேலிட்டு அவர்களைச்சுற்றிக்கொண்டுபற்
வதாகிறுதியாகவிருக்கின்ற பாரித்தவுடல்கள் பதைபதைக்கவருத்தியகா
ரணங்களைச் சொல்லக்கேட்பீராக- சிலமகரங்கள்தாவிக் கரங்களைப்ப
ற்றித்தறித்தும் சிலதுகால்களைக் கண்டித்தும் சிலதுவிசாலமாகிய மார்
பைப்பிளந்தும் சிலதுசிரங்களைக்கறித்தும் யிவ்விதமாக மகர மச்சங்க
ள் அவுணரைப்பற்றிச் சின்னபின்னமாகத் துலைத்துத்தின்று களித்துலவு
ம்போது அதைக்கண்ட சிலஅவுணவீரர் தீர்த்துவமாய் தாய்தந்தையர்
பெண்டுபிள்ளைகள் மாமன் மைத்துனன் யித்தகையசுற்றத்தினரைச்சேர்
த்துவாரியெடுத்துக்கொண்டு மேலிட்டுவரும் மச்சங்களை அதட்டிக் கூ
வித்துரத்திக் கருநீரை நீந்திமேலெழுபவரும் சிலர்களைத்துத் தன்னினங்
களைமறந்து பிராணபதமாகப்போற்றியிருந்த படைகளையும் யெறிந்து
போட்டுத் தமதுயிரைமாத்திரங்காத்து வெளிவரவும் கும்பலாக.எதிர்ப்
பட்டஅவுணர்களைச் சிலசுறுக்கள் சுற்றிக்கொண்ட காலத்தில்அவ.ற்றினி
டத்து விருப்பினுல் அவுணவீரர் சேர்த்துப்பிடிக்கும்போது பற்வதங்
களையொத்த மச்சங்கள் துமிறிக்கொண்டு அவர்களைச்சாடிக்கொன்றுதிரி
யவும் சிலபருத்தமீன்கள் பசிக்குண்ணும் யிச்சைகொண்டுயிரைந்துபா
ய்ந்து தாக்கும்போது அவுணர்கள்கோபித்து வாளாயுதங்களினுலுங்கு
ரியினுலும் வேல்களைக்கொண்டும் மச்சங்களின்மீது அதிகசோபங்கொ
ண்டுஒருபுறத்திற்சண்டைகொடுக்கவும் உலகங்களெங்கனுங்கொண்டா
டுங்கீர்த்திபெற்ற இலங்கையானது கடலினிடத் தழுந்தியகாலத்தில் அவ
டத்தில் வருந்திவெளிவரும் ஆவலுடன் தாவுகின்றசில தருணமங்கைய
ர்கரங்களைப்பற்றி மகரமச்சங்க ளிழுப்பது பிறர்தாரத்தினிடத் திச்சை
கொண்டு கரத்தைப்பற்றி வலிக்குங் காமுகனையொத்தும் மற்றொருபுற
த்திற் சுருக்கள்மீறி அவுணகன்னியர்கள் கரங்களிலொன்றைப் பற்றியிழு
க்கமற்றக்கரத்தைஅவள்சுற்றத்தினர் பற்றிவலிக்கமானையொத்த கன்னிய
ர்வருந்துவது ஐம்புலன்கள் தமது வசத்தில் யிழுத்தலைக்க வருந்தும்பி

ராணையொப்பக்காட்டவும் வலிமிகுத்ததிருக்கை சுறு திமிங்கிலகிலங்க
ளாதியாகியமீன்கள் அவுணர்கூட்டத்தைப்பாத்துத்தாவித்தாக்குமுன்னி
லையிற்றுரிதமாகத் தமதுஉடைவாளை யுருவிக்கொண்டு அவற்றினைத்துண்
டமாகவெட்டியெறிந்தும் அக்கினியைப்போலச் சிவந்தவிழிகளில் அ
னலைவீசும் சுறுமீன்கள் வாட்களைக்கரத்திற் கொண்டிருக்கும் அவுணர்க
ளைக்கொன்று தின்னவருவதுகளின் முதுகைத்தடவிக்கொடுத்து மெல்ல
ப்பற்றித்தமதுபேழ்வாயிற்போட்டுமென்றுதின்றுபசியாறிச்சிலர்வெளி
வரவும் ஆழ்ந்தசெலத்திற் றேறாமல் நம்மவர்களென்று வேறொருநா
யகியினது கரத்தைப்பற்றி அவர்களை அணைத்து வெளிவரும்போது அன்
னியராகக்கண்டு கரங்களைத்தழுவிக்கொண்டு சிலகன்னியர்வாடிப்போக
வும் சிலர் அவுணர்கள்கைப்பட்டபடியால் யில்வாழ்க்கைக்கிசைந்து அ
வர்களுடன் துடரவும் சிலஅவுணவீரர் தமதுதேவியரான அன்னியரைத்
தாங்கியெழுந்தகாலத்தில்அவர்கள் தங்கள்கணவரல்லாததைத்தெரிந்தவுட
ன்அவர்கள் வாடும்படிக்குவிடுபட்டு மனவருத்தத்துடன் கொழுநரைத்
தேடிப்போவது எப்படிக்கிருந்ததெனிற், காமவின்பத்திற்பட்டுவாடுகி
ன்றவனைச்சேர்ந்தஒருபெண்கொடியானவள் தப்பித்துக்கொண்டுபுறம்பி
ற்போக வருந்துகின்றவனைப்போலக் காட்டவும் கொடுமைதங்கிய மத
யானைகளையும் புரவிகளையும் சுறுமீன்கள் வளைந்துபற்றி யிழுத்துப்போ
ய் தமதுமனதுக்கினியபெண்சுறுக்களுக் குண்ணக்கொடுத்துக் குலவியி
ருப்பதால் சவுனகாதிரிஷிகளே எத்தகைய சீவராசிகளுக்கும் பெண்மை
யலைவிலக்குவது மிகவுமரிதாகக்காணுகின்றது, இவையன்றியுந் தடுப்பத
ற்கரியவலிபெற்ற சிலமகாமச்சங்கள் பெண்யானை துதிக்கையினைப்பற்
றித்தனக்குரியபெட்டைச்சுறுவைத்தேடிப்போம்போது அதுஎதிற்கொ
ண்டுவேர்துகுலவுவது தன்கணவன் வேறொருத்தியி னிடத்தில் விருப்புற்ற
தென்றெண்ணிஉபசரித்துத் தன்வயப்படுத்துவதற்குச்சமதையாகக்காட்
டவும்இலங்கையுடன்பாதலத்தைச்சேர்ந்தசிலஅவுணவீரர் தத்தளித்து நீந்
திக்கடலின்மீதில்வந்தவுடன் கந்தசுவாமிவிடுத்ததூதனைக்கண்டு நடுநடுங்
கிசற்றுநிற்போமாகில்இவன்நம்மைக்கொல்வன்சந்தேகமில்லையென்றெ
ண்ணிபயப்பிருந்தியினால்நாற்புறங்களினுமோடியொளிக்கவும்கருநீரை
க்கடந்து வெளிவந்த சிலமங்கையர்அழகிய தங்கள் கணவரைப்பிரிந்து
போகமனமில்லாதவர்களாய் அவர்களைத்தேடித்திரியுமுன்னிலையில்அலைக
ள்உடையைஅலைத்துப்போக வெளிவந்தவுடன் கலைகாணாதுவருந்திக்கர
ங்களினால்அலகுலைமுடியுந் தலையைவளைத்துத் தனங்களைமறைத்தும் யி
ப்பிறகாரஞ் சிலதருணமங்கையர் வெழ்கிவருந்தவும்வானத்தையளாவி
ய மாடமாளிகைகூடகோபுரங்களினால் விளங்கிய இலங்கைகடலிலழுந்,

தியகாலத்தில் அத்துடன்முழுகியெழுந்த சிலகன்னியர்கள் தரித்திருந்த செம்பட்டாடைநனைந்து அதனிடையில் அல்குல்தோற்றுவது சிவந்து காட்டுஞ் சந்திரனிடத்தில் விளங்கும் களங்கத்தையொப்பவும் சுரியதிரோகத்தைப்பெற்ற சிலஅவுணமங்கையர் கடலில்விழுந்துதாவிவெளிவரும்போதுயிடையிற்றரித்திருந்தவஸ்திரநெகிழ்ந்த மானக்குறைவைக்கண்டுவெழ்கிப்புறம்பில் வருவதற்கஞ்சித் தேளைகளைப்போலமுகத்தைமாத்திரம்வெளியிற்காட்டி திரோகத்தை நீரில்மறைத்துத் திரியவும் சிலமங்கையர்யிடையிலணிந்தவஸ்திரம் அலைகளிற் சுருண்டுபோக வெளிவந்து நாணினவர்களாய் அதிசீக்கிரமத்தில்வானத்திற்குவி மேகங்களைப்பற்றியிடையிலுடுத்துமீளவும் யிப்பிறகாரம் இலங்கையில் வாசமாகவிருந்தசெனங்கள் தத்தளித்துப் படாதபாடுகளைப்பட்டு வருத்தினர்.

---

# அதிவீரன்வதைப்படலம்

---

சவுனகாதிரிஷிகளே - மேற்குறித்தபடிக்கிஇலங்கைப்பதியானது கடலிலழுர்தித் தத்தளிக்குமுன்னிலையில் அப்பட்டணத்தைக்காவல்கொண்டிருந்த கூரியவேலைப்படைத்த அதிவீரனென்னும் ராசகுமாரன்யிவற்றினைதெரிந்தவனாய்த் தான்வாசமாயிருந்த நகரம்கடலில்முழுகிவாடுவதைத்திஷ்டாந்திரமாகக்கண்டு அதிசமனவருத்தத்தைக்கொண்டுவெழ்கித் துக்கித்து மானம்பாதிக்கவடவாமுகாக்கினியைப் போலக்கொதித்துப்புகையுமனலுமெழப் பெருமூச்செறிந்து தீயெழநகைத்தவனாய் யிதனைமனதில்யோசிப்பதாயினன், வச்சிரதிரோகம்பெற்ற சுத்தாமுள்ள சூரபதுமனும் அவன்துணைவர்களும் யிவர்கள்பிள்ளைகளும் யித்தகையகெடுதிகளைச்செய்ய விரும்புவனொன்று ஒருபோதும்மதிக்கமாட்டேன் அவர்களால்முடிந்ததல்லாவிடின், இவ்வனற்தங்களையாவர் துணிந்து செய்யவல்லர் நல்லதுமுற்குறித்த நயதிறைவர்களால் நேர்ந்ததெனச் சிந்திப்பதற்குபாதொரு எதுவையையுங்காணேன் மேலுந் தங்கள் நகரத்துக் காணுகவிருக்கின்ற யிப்பதிக்குத் தீங்குகளை முடியார்கள் அதைக்குறித்து யோசிப்பது தகுதியன்று யிவர்களுக்குத் தாயாகவிருக்கின்றமாயையொருபோதும் யித்தகையகொடுமையை மனதிலுமெண்ணுள்- பிரமன் விஷ்ணுசிவபிரான் யிந்ததிரிமூர்த்திகளும் யிச்செய்கையைக்கருதார்கள் அப்படிக்கிருக்க மற்றதேவர்களில் யாவரிதனைமுடிக்கத்துணிவர் மேலும் அவரனைவரும் நமதுசிறையிற்பட்டு வாடியடங்கி யிருக்கின்றனர், இவர்களுக்கிறைவனுகிய இந்திரனும் நமதரசனுக்கஞ்சி பிராணனைத்தம்பித்துத்

கொண்டு மறைந்திருக்கின்றனன், அஷ்டதிசைகளிலு மிருப்பவர்களும் வானநாடுகளில் வாசஞ்செய்யும் விண்ணவரும் விஞ்சையர் சித்தர் முதலாகியவர்கள் நமதரசன் ஆக்கினையைக்கடந் தொருகாரியங்களையுஞ்செய்யவறியார்கள் ஆதலால்யிந்தகெடுதிகளை நினைக்கவுமாட்டார்கள் சத்துருக்களின்றி செயசாலிகளாக யித்தலங்களி லிருக்கின்ற அவுணவீரர்கள் சவுரியபரராசவும் மாயைவிஞ்ஞைகளிற் சிறந்தவர்களாகவு மிருந்தபோதிலும் சத்துருக்களையடிக்கி வாட்டவல்லசூரபதுமன் படைகளின்வீரத்துக்கஞ்சியிவ்விதக்கொடுமைகளைச்செய்யத் துணியார்கள் யிவர்களேமுடிக்கவஞ்சுவராயின் யிக்காலத்தில் நேர்ந்தஅனியாயங்களை நடத்தினவர்கள் யாவர்பிதாவானவன் என்னைஒருசூரனாக நினைந்து யிந்தஇலங்கைப்பதியைப் பதலமாகக்காவல்கொண்டிருக்கும்படிக்குக் கட்டளையிட்டுப்போயிருக்கின்றகாலத்திற் பலவெள்ளஞ்சேனைகளுடன் பிள்ளையாகியயான் யிந்தநகரைக்காத்திருந்தது வெகுநேத்தியாகவிருக்கின்றது தாபாக்கினியானது தேகமெங்குனும்பற்றிக் கபாலமூலமாகவெழுந்து அண்டவெல்லைமுற்றும் பரவஅகோரமாகிய தவத்தினைச்செய்துமெய்ப்பித்துமாயவித்தைகளையுந் தேவாஸ்திரங்களையும் வலியையும் பிரமன் முன்னங்கொடுக்கப்பெற்ற என்வல்லபம் நன்றாகவிருக்கின்றது பிதாவானவர் யிவடத்திலில்லாமல் ராசகாரியமாகப்போகின்ற தருவாயிற் காவல்கொண்டிருந்த பிள்ளையானவன் யிந்தஇலங்கையுடன்விசாலமாகிய கடலில்முழுகினனென்றால் நமதுசுற்றத்தினர் நகையார்களோ மேலும் ராசாதிராசனாகிய சூரபதுமன் யிந்தசேதியைக்கேழ்விப்படுவனாகில் தட்சணமே என்னைக் கொல்லுவிப்பதன்றியில் என்னைப்பெற்ற தந்தையையும் கண்டிப்பன் மேலும் நம்மவர்கள் யிகழ்ந்துபேசவும்வரும் அப்படிக்குநேருமாகில் என்சவுரியம் நன்றாகவிருக்கும் பிள்ளையானவன் குலத்தைஉத்தாரணஞ்செய்வதற்கிடாய் உலகமுள்ளளவும் பழிதேடிவைப்பதுநன்றோ வென்றமனம்வருந்திநொந்து துக்கசாகரத்திற்பட்டு வாடினவனாய் அதிவீரனென்னும் ராசபுத்திரன் ஆழ்வினைபிடரியைப்பற்றித் தாண்டத் தன்மனதில் யிவ்விதசவுரியங்களை நினைக்கின்றனன், அலைகளைமோதியினாந்திருக்கும் யிந்த லவண சமுத்திரத்தின்பேரில் நானேநேரிற்போய் யித்தலைய தீயகருமங்களைச்செய்தவர்கள் யாரெனத்தெரிந்துகொண்டு அவர்களைப்பற்றிக்கொன்று அவர்கள்தேகத்திற்பெருகும் உதிரபானஞ்செய்துதாபத்தைத்தணிவேனெனத் தீர்மானித்துக் கோபதீபிதனாய் வயிரக்கவசத்தைத்தரித்து நீண்டவில்லைத்தோளில்மாட்டி தேவாஸ்திரமுதலிய படைகளைச்சேகரித்துக்கொண்டு கரசாடு விரல்சாடுகளைப்பூட்டி யுத்தசன்னத்தனாய் வெளிவந்து பலதூதர்களைக்கூவித் தூரத்தித் தன்காவலிலடங்

கியிருக்கின்ற ரதகெசதுரகபதாதிகளைத்தருவித்து ரதாரூடனாய் அவ்வெ
ள்ளங்களுடன் பிறையாணப்பட்டுவெற்றிமுரசம் ரணபேரிமுதலியபோ
ர்ப்பறைகள்முழங்க வீராவேசத்துடன் அதிசீக்கிரமத்திற் கடற்கரையிற்
சேர்ந்து செயசாலியாகிய வீரவாகுதேவருக் கெதிரில் வருவதாயினான்
அதுவெப்படியிருந்ததெனிற், சற்வசங்கார மூர்த்தியாகிய சிவபிரான்மீ
து சீறியெழும்படிக்கு, ஆலகாலவிஷமானது திருப்பாற்கடலினிடத் து
ற்பவித்துக் சூலவியோங்கியதை யொத்தது, சவுனகாதிரிஷிகளே - மே
ற்குறித்தபடிக்குத் தத்தளித்துக்கடலினிடத்துமுழுகிய இலங்கையைப்
போற்றியிருந்த அதிவீரன் உயித்தியசன்னத்துடன் சேனைகள்சூழ்ந்து
வரப் பெருமைபொருந்திய கடலானது கொதித்தோங்கிய அலைக்கொ
ழுந்துதாவி நிற்பதை நிகர்த்துத்தூளிதந்திரோகமெங்கும்விளங்கக்கொ
டிமுடியினுச்சியில் வீற்றிருக்கின்ற புசபெலபராக்கிறமசாலியாகிய வீர
வாகுதேவரை நேரிற்கண்டவன் ஸ்ராதிவீரன் நிற்கின்ற தீரத்தைப்பார்த்
தமாத்திரத்தில் ராசகுமாரனுக்கு அதிககோபம்பிறவேசித்து மனம்வெக
பற்களை நெறநெறெனக்கடித்துத் தீயும்புகையுமெழநகைத்து நல்லகாரி
யம் தேவர்கள் கூட்டத்திலொருவனாக விருக்கப்பட்ட விவன் ஆண்டிற
ம்பெற்ற சூரனைப்போல எண்டிசையினும் புகழநின்றநமது இலங்கைப்
பதியை அலைகள்மிகுத்த கடலில்மூழ்கச்செய்ததுமன்றியிற் பயமில்லாம
ல் யிச்சிகரத்தில் நிற்கின்றனன், ஆதலால்அஷ்டதிசைகளே முதலாகியபத
ங்களினும் கொண்டாடிப்பணியும்பிறபலவான்களாகிய அவுணர் ஆணையா
க்கினைவெகுநேத்திநேத்தியென்று இயாளிமுகன் பிள்ளையானவன் துரித
மாகயிவனைப்பற்றிக்கொன்றுபிராணனைக் சொள்ளைகொள்ளக்கடவனெ
ன நினைந்தவனாய்மேலேறிநடக்கும்போது அந்நகரவாசிகள் கடலிலமூழ்ந்
தி அலைகின்றவேடிக்கைகளைப்பார்த்துக்கொண்டிருந்தபேரறிவாளியாகிய
வீரவாகுதேவர் அவன்கருத்தின்குறிப்பைத்தெரிந்துயிவனுக்கும்நாசகா
லம்நேர்ந்ததுபோற் காணுகின்றதென்றெண்ணி அவன்மேல் நடத்துவ
தையும் பார்த்திருக்கும்போது அதிசூரனுடன்கூடிவந்தநால்வகைச்சே
னைகளும் கைமிஞ்சிச் சிலர்பாரித்தவிற்களைவளைத்துச் சொனைமாரியைப்
போல பாணங்களைப்பிறையோகித்தும் எழுவாயுதம் மழுவாயுதம்பிண்
டியாலம் கப்பணம் முசலம் சக்கரமாதிய அஸ்திரசஸ்திரங்களைப்பிறை
யோகித்துப் பலதிசையினும்சூழ்ந்து அகோரமாகிய உயித்தியங்களைச்
செய்யும்போது வலியிற்சிறந்தவீரன் தமது அரையிலிருக்கும் உறையிற்
செருகியிருந்த உடைவாளாயுதத்தைஉருவி கரத்திற்பற்றிக்கொண்டு தம்
மையவளைந்து பொருதிருக்கின்ற அவுணர்பிராணன் துடித்துத் தேக
ம்கண்டதுண்டப் பட்டிறைத்து துள்ளிவிழும்படியாகச் சங்கரித்த

டங்கி ஒவ்வொருவிசலில் அளவற்றசிரங்களற்று விழவும் கணக்கற்றகர
ங்கள்வெட்டுண்டு யிறையவும் அமோகமாகிய தோள்கள் சரிந்தும் கால்
கள்தறிபட்டும் மார்பங்கள் பிளந்து வயறுபிறண்டு சற்பங்களைப்போல
க்குடல்கள் பதைபதைத்திறையவும் சரீரம் சின்னபின்னப்படவெட்டுண்
டும் யிப்படிக்கு எதிர்ந்த அவுணச்சேனைகள் பிராணனைப்போக்கிக் கள
த்திலொருவருமில்லாமல்மாண்டு அவர்கள் செய்யும் சன்னடையுமற்றதூர
தங்களனைத்தும் வண்டில் அச்சு மச்சு குத்துக்கால் கொடுங்கைகொடி கு
டைசிகரம் யிவைகள் வெவ்வேறுசச்சிதைந்தும் யானைகள் துதிக்கைகோ
டுகால் தாறுமாறுகக்கண்டிக்கப்பட்டு விழவும் குதிரைக்கூட்டங்கள் பி
ன்னலிட்டிருக்கும் பிடரிமயிரினைவாய்ந்த தலைகள் வெண்டையமணிந்த
கால்கள் சவுரியையொத்தசையும் வால்கள் கண்டதுண்டங்களாகவிழவும்
யிப்பிறகாரம் சதுரங்கச்சேனைகளும் மாண்டுபோனகாலத்திற்பெருகிய
உதிரவெள்ளத்திற் செம்பட்டமயிரையுடையஅவுணர்சிரங்கள்மிதநதோ
டிக்கருங்கடலெங்கனும் மிதந்திருப்பது சொடிகள்படர்ந்தோடியிருக்
கின்ற பவழக்காட்டிற் செந்தாமரைக்கமலங்கள் மலர்ந்திருப்பதைப்
போன்றது, இவ்விதங்களாகப் புசபெலபராக்கிறம சாலியாகிய வீரவா
குதேவர் அவுணப்படைகளை வளைத்துக்கொண்டு வெட்டித்தள்ளிய தறு
வாயில் மாண்டவர் களேபரங்கள் மலைகளாகக்குவிந்து கடலைத்தூர்த்து
மேலோங்கிச் செம்மணிகளால் வேறொருஇலங்கையைப் படைத்ததைப்
போலவிளங்கவும், இவ்விதங்களாகத் தன்னைச்சூழ்ந்துவந்த சேனைகளை
னைத்தும் சின்னபின்னப்பட்டுச் சமுத்திரத்திற் கலந்ததை வீரபராக்கிற
மசாலியாகிய அதிவீரன்கண்டு வடவாமுகாக்கினியையொப்பச்சீறி அடா
பயலே கொஞ்சமாவது பயமில்லாமல் என்னுடன்வந்தசேனைகளனைத்தி
னையும் வெட்டியெறிந்தனை ஆதலால் உன்னைபிராணனுடன் பற்றிவாயி
ற்போட்டு சுகசென்று மென்றுதின்பன் அதையும்பார்க்கப் போகின்ற
னையெனப்பொங்கிச் சண்டைக்காரம்பித்து மேல்வருகின்ற அதிவீரன்
சேவகத்தைவீரன்கண்டு அடாராட்சதப்பட்டிமகனே என்தலைமிறாய் வி
ழுந்து பிணத்துகின்றனை துரிதமாக வாவாவென் றழைத்தகாலத்தில் அவு
ணராசகுமாரனுக்கு அதிகோபம்பிறவேசித்துத் தன்னிடத்திலிருக்கி
ன்றகைவேலாயுதத்தையெடுத்து சண்டைக் கெதுத்திருக்கின்ற யிவனைவ
ளைத்துக்கொண்டு யிந்ததிமிஷித்திற் கொன்றுவாக்கடவையெனக்குறித்
துச்செலுத்தினன், சவுனகாதிரிஷிகளே யிப்படிக்குக்கொடியனுகிய ராச
குமாரன் எறிந்தபடையானது எரிந்து புகைந்துகொண்டு தன்மார்புக்
கிலக்காகவருவதன்முன்னம் அதன்வீரத்துக்கு மேற்பட்ட பராக்கிறம
சாலியாகிய வீரவாகுதேவன் அவ்வேலின் முயற்சியைப்பாத்து அக்கினி

க்கொழுந்தையொப்பசொலித்துத் தன்கரத்திலிருக்கும் வாளாயுதத்தினு
ல் யிரண்டு துண்டமாகி விழவெட்டியெறிந்தனர், இப்பிறகாரந் தான்செ
லுத்திய வேல்கண்டிக்கப்பட்டுப்போனதை அதிவீரன்தெரிந்து ரவுத்தி
ராகாரமாகக்கொதித்து மந்தரகிரியையொத்த தண்டமொன்றையெடுத்
துக் கரத்திற்பற்றி கிறுகிறெனச்சுழற்றி நமதாணையாக்கினையைச்சட்டை
செய்யாமல் யெதுத்துச்சண்டைகொடுத்திருக்கின்ற உன்னரியபிராண
னையிப்படைவாங்கி வீரசொற்கத்திற் சேர்ப்பதற்குத் தடையில்லையென்
று சபதம்பேசி தேவர்கள் புகழ்ந்துகொண்டாடும் செயசாலியாகிய வீர
வாகுதேவர் சரீரத்திற் றுக்கும்படிக்குவிட்டனன், இப்பிறகாரம்பாதக
னாகிய அவுணன்எறிந்த தண்டமானது அதிவேகங்கொண்டு குமிறியிரை
ந்து சீறிவருவதைவீரன்கண்டு அதனைவெட்டியெறியாமலும் வாளினாற்
றட்டிப்போடாமலும் அதனையொருபொருளாகமதியாமற்றீரத்துவமா
கநிற்கும்போது வயிரமலையையொத்த மார்பினிடத்திற் சோடையிடி
யைப்போலவிழுந்து தன்வலியொடுங்கிச் சின்னபின்னப்பட்டுப் பறந்
துபோனதை அப்பாதகன்கண்டு அதிகஆச்சரியப் பட்டவனாய் மானம்
பாதிக்கக்கோபங்கொண்டு அதிவீரனென்பவன் மாற்சல்லியத்தைவிடா
மல் தானரிகிற்பெற்றுவைத்திருக்கின்ற கூரியமூத்தலைச் சூலமொன்றை
யெடுத்து ஒருவரும்நிகரற்ற புசபெலபராக்கிறம சாலியாகிய வீரவாகு
தேவர் மார்பைப்பிளந்துகொண்டுபோகும்படிக்குக்குறிகொண்டுஓங்கி
வீசியதை நமதையன்கண்டு விடநாகத்தையொப்பச்சீறி சமீபித்தமாத்தி
ரத்தில் அழகியகரத்தைநீட்டி அப்படையைப்பற்றியொடித்துயிரண்டு
துண்டமாக்கி விட்டவன்மீதிலெறிந்தனன், இப்பிறகாரம் அனலையிறை
த்தோடியசூலப்படையைச் சுள்ளியைப்போலமுறித்தெறிந்தபோது இல
ங்கைக்கரசனாகிய யாளிமுகன் மனதுக்கினியகுமாரன்கோபித்துயிவனை
யிவ்விதப்போரில்வெல்வது மிகவுமரிதாகக்காணுகின்றது ஆதலால் வே
றொருதந்திரத்தினால் வாட்டிக்கொல்லக் கடவனெனத் தீர்மானித்தவனா
ய்வீரவாளொன்றைக் கரத்திற்கொண்டு தேரைவிட்டு நிலத்திற்குதித்து
முன்னடிவைத்துப் பின்னடிவாங்கித்தாண்டி காளமேகத்திலெழும்மின்
னலைப்போல வாளைச்சுழற்றி யிடசாரி வலசாரியாகக் காற்றாடியையொப்
பவட்டணையவந்து தன்கரத்திற்கொண்ட வாளாயுதத்தைக்கடல்நீர் அலைவ
தற்கஞ்சிப் புரண்டெழும் வாளைமீனைப்போல யிடத்திலும்வலத்திலும்
வாட்போருக்குரிய கிறமப்படிக்குச் சுற்றிக்கொண்டு வீரவாகுதேவனை
ப்பார்த்து யிதனைச்சொல்லுவான், இந்தவாளாயுதத்தைப்பிரமன்தான்செ
ய்ததவத்திற்கிரங்கி அனுக்கிறகித்தனன், மேலும் எத்தனையர்களுக்காகிலு
ம் யிதனைபேதிப்பதுஅரிது அத்தகையசிறந்தபடையைக்கரத்திற் பற்றி

யிருக்கின்றனன் யிதனல் உன்னரியபிராணனைப்போக்கிக்கொல்வது நிச்சயம் தாமசப்படாமற் சண்டைக்கு வாவாவென்று வசைமொழிகளைச் சொல்லிக்கொண்டு குற்றமற்றவீரவாகுதேவர் முன்சென்ற மாத்திரத்தில் அவர்மாறுத்தரங்கொடுப்பதாயினர், உன்சவுரியமும் வலியும்வெகுநேத்திநேத்தி நம்மைச்செயிப்பையாகிற் சகலரும் உன்னைக்கொண்டாடுவர் ஆதலால் வீண்வாற்தைகளைப்பினத்துவதினுற் பயனென்னைசெயசாலிகளாகவிருக்கின்றவர்கள் தங்களைப் புகழ்ந்துபேசார்கள் துரிதமாய்வாட்போருக்கு வரக்கடவை எதோவுன்சாமாற்றியத்தைப் பார்ப்போமென்று பேசியகாலத்திற் சத்துராதியானவன் றவுத்திராகாரமாகக் கோபித்து வாளைவிசிச் சமீபித்தகாலத்தில் வீரவாகுதேவரும் எதிரில்நேர்ந்தனர், இவ்விதமாக யிருவிறவரும் வலம் யிடம் யிடம் வலமாகச் சுழன்று சுழல்ற மாறி மாறிப்பாய்ந்து வாட்போரைச்செய்துவருவது எப்படிக்கிருக்கின்றதெனில், விசாலமாகிய வானவெல்லையில் யிரண்டுமேகங்களெதிர்த்து மின்னல்களைவிசி மறைத்து மீட்டும் வெளியிடுவதை யொத்தும் மேலும் அவ்விருவிரரும் ஒருவரை ஒருவர் வெல்லநினைந்து வாளாயுதங்களைவிதிர்த்துச் சிரங்களுக்குக் குறிகொண்டு விசியும் கண்டத்தினைக்குறித்துமோதியும் கன்னத்துக்குக்குறிபார்த்துவெட்டியும் புசங்களை நோக்கிவிசியும் வீரகண்டைதரித்தகால்களைக்குறித்து விசியும் மார்புக்கிலக்காகவிசியும் யிப்பிரகாரம் வீரவாகுதேவரும் அதிவிரனுங்கைசலந்து திரோகத்திலிராநின்ற உறுப்புகளைக் குறிபார்த்துப் பார்த்துப் பின்னப்படுத்தும்படிக்கு சாஸ்திரயுத்தமாய்த் தகத்தகாயமாகப் பிரகாசித்கிரானின்ற வாளாயுதங்களை வீசி வீசி மாறி மாறித் திரிந்தும் தங்கள் திரோகத்திற்படாமற்றட்டியும் வெகுநேரமாகப் பொருது வருகின்ற தருவாயில் எமதிறைவனுகிய பாலசுப்பிரமனியதேவர் விடுத்ததூதனுனவன் தம்முடன் வாள்கொண்டு உயித்தியஞ்செய்கின்றவனை யித்துணைநேரம் வாதுகொடுக்கப் பார்த்திருப்பது தகுதியோ ஆதலால் வீதினல்லாமல் வாள்வித்தையின் முறைப்படிக்கு வெற்றிகொள்வது நீதியென்றெண்ணினவராய் ஒருசாரியின்விடைந்து பாய்ந்து வாளாயுதத்தை விசி அதிவிரன்யிரண்டுபாதங்களையும் சிரத்தையும் தோள்களையும் மார்பையும் கண்டதுண்டமாகத்துணித்து நிலத்திற்றள்ளியகாலத்தில் எமதருமராசன் அவன் பிராணனைக்கொண்டுபோயினன்.

---

## மயேந்திரஞ்செல்படலம்.

---

சூதபுராணிகர் - நைமிசாரணியவாசிகளுக்கு மேல்நடந்த கதாப்பிரசங்கங்களையுஞ் சொல்வதாயினர், ரிஷிகளே வீரவாகுதேவர் மேற்கு

றித்தபடிக்கு அதிவீரனென்னும் ராசகுமாரனைக் கண்ட துண்டமாக வெட்டி யெறிந்தபின்பு பகைவரொருவரு மில்லாமையாற் பிறகாசம் பொருந்திய சூரியவாளாயுதத்தை உறையிற்செருகிச் சமர்க்களத்தை நீங்கிப் பலவளங்களினுஞ் சிறந்திருக்குங் கெடிஸ்தலமாகிய வீரமாமயேந்திரபுரிக்குப் போவதாகநினைந்து பொன்மயமாகவிளங்கும் இலங்கையெல்லையைக்கடந்து வானவழிக்கொண்டு சென்றனர், இப்பிறகாரம்வீரவாகுதேவர் அந்தரத்திலெழுந்தகாலத்திற் சமுத்திரத்திலழுந்தி பாதலத்தைச்சேர்ந்திருந்த இலங்கைத் தீபமானது சரோலெனமேலெழுந்து எதாப்பிறகாரம் நின்றது அதுயெப்படிக்கிருந்ததெனிற், சுமைமிகுதியினாற் கடலில்மூழ்கிய கப்பலானது பாரத்தையிறக்கிய மாத்திரத்திற் சுலபமாகமேலோங்கிநின்றதையொத்தும் சிருஷ்டிகர்த்தனாகிய பிரமன்உறங்கும் யுகமுடிவிற் சத்தசாகரங்களும்பெருகி அண்டபுவனங்களெங்கணும்நிறைந்தோங்கிய செலப்பிறவாகத்திற்பட்டு மறைந்திருந்தமகமேருவானது அவ்விரவொழிந்து சிவபிரான்கட்டளையின் படிக்குப் பன்னிருசூரியரும் ஏகமாய் அதிசுவாலையாயெரிக்கப் பழையபடிக்குச் சமுத்திரங்கள் சுருங்கித் தத்தம்தெல்லையைச் சேர்ந்தகாலத்திற் பொன்வரை வெளிப்பட்டு நின்றதுக்குச் சமதையாகவும்பலராலும் இகழத்தக்ககொலைமுதலிய கொடியதொழிலைச்செய்துவரும் பாவிகளாகிய அவுணரை இலங்கையானது பற்பலகாலங்களாகத் தாங்கியிருந்தகாரணத்தினாற் சம்பவித்திருக்கின்ற மிகுத்தபவத்துடக்கினை ஞானவானாகிய வீரவாகுதேவரிடபாதாரவிந்தங்களின் பரிசம்பட்டமாத்திரத்தில் ஒழித்துஅதனால்மூடியிருந்த அழுக்கைக்கழுவிப் பரிசுத்தமாகவிருக்கநினைந்துதெளிந்தகருநீரைவாய்ந்த கடலிற்படிந்து பவுத்திரமா யெழுந்ததைப்போன்றும் பூர்வத்திற் சடையுகமுடிவில் எமதிறைவனாகிய சிவபிரான் அனுக்கிரகத்தினால் வெளிவந்த மகாவிஷ்ணுவினது உந்திகமலமூலமாகத்தோற்றிய பிரமன் படைப்பின்விக்கத்தைப்போலவும் வீரவெண்டையமணிந்தவீரவாகுதேவர் மிதிக்காற்றுமல் மேகங்களிறங்கி நீரையுண்டு சஞ்சரித்திருக்கும் கடலிற்பட்டிருந்த இலங்கைநகரமானது பழையபடிக்கு வெளியிலெழுந்துநின்றது, சவுனகாதிரிஷிகளே - இவ்வித அதிசெயங்களைக் காட்டும் இலங்கையெல்லையைக்கடந்து அந்தரகமனமாகத்தாவி ஆயிரயோசனை தூரஞ்சென்று வீரலட்சுமி குடிகொண்டிருக்கும்வெற்றிமாலையணிந்தபுயங்களைவாய்ந்த வீரவாகுதேவர் தேவகாதகனாகிய சூரபதுமன்வாசஞ்செய்யும் வீரமாமயேந்திரத்தின் எல்லையைச்சேர்ந்துசக்கிறவாளகிரியினை நிகர்த்து வளர்ந்துவானத்தையளாவி நிற்கும் பொன்மதிலையும் அதன்மீதிலணிபடவிருக்கின்ற கொம்மைகளையும் மற்றஉறுப்புக

ளின் நிர்மாணங்களோடும் விசாலமாக வுயர்ந்திராநின்ற வாயிலினையும் அதன்மீதுபலநிலைகளைப்பெற்றுச் சித்திரங்களையுடையதாய் நவரத்தினமயமாகவானத்தையளாவ விளங்கும் கோபுரத்தையும் நிதானித்துப்பார்த்துக் கொண்டு திருக்கயிலை வாயிலைப் போற்றியிருக்கும் நந்தியெம்பெருமான்கணத்தலைவர்களிற் சிறந்தவீரவாகுதேவர் வருகின்றமார்க்கத்துக்குநேராகமயேந்திரபுரியின் வடபாரிசத்திற்குள்ளும் வாயிலின் முதல்நிலையில்வாசமாய்க்கொடியரிற் கொடியராகியகோரனென்றும் அதிகோரனென்றும் பெயரினைப்பெற்ற சேனைத்தலைவர்கள் வீரபராக்கிரம சாலிகளாகியஅவுணசயின்னியங்கள் வெள்ளக்கணக்கிற்போற்றிவரக் கண்ணிமையைப்போலவிருந்து இடைவிடாமற காத்துவருவர் அவ்வாயிலினிடத்திருக்கின்ற சேனைகளின் தொகையைச் சேர்ப்பீராக- மேருவுக்குச்சமதையாகப்பொன் வண்டில் அச்சுமச்சுகுத்துக்கால் கொடுங்கை முதலிய உறுப்புகளுடன் விளங்கும் ரதங்கள் ஆயிரவெள்ளம் - மும்மதங்களையும்பெருக்கி விறிநிலகிரிக்குச்சமதையாக விருக்கும் யானைக்கூட்டங்கள் ஆயிரவெள்ளம், தத்தித்தாவிப் பகைவர்சிரங்களிலில் மிதிக்கவல்லபுரவிகள் இரண்டாயிரவெள்ளம் இத்தொகைகொண்ட சர்வாயுதபாணிகளாகியகால்பலங்கள் இத்தகைய நால்வகைச்சேனைகளானது மதிற்புறங்களிலும்கொம்மைகள்மீதினும் மற்றயிடங்களினும் நியைகொட்டாமற் போற்றியுலவி வரவும் அடிக்கடி காவலாளிகளைக் கண்டிதமாக விசாரணைசெய்துக்கொண்டு சேனாதிபதிக ளிருவரும் அவ்வாயிலின்மீ திருந்தனர், இப்பிரகாரம் சதுரங்கச்சேனைகளும் எங்கணும்பார்த்து சமுத்திரத்தைப்போல ஆர்ப்பரித்துத் தத்தமது காவல்களிற்பிசகின்றி யிருக்கின்ற அமோகமாகிய பெருங்கூட்டத்தை வீரன்கண்டு அதிசயித்தவராய்பகைவர்கொண்டிருக்கும் பொற்றுதலின் கிரமங்களையுந் திரத்தையும் அவர்களைசுவரியங்களையும் நிதானித்துப்பார்த்து அந்நகரத்துக்குள்ளே பிறவேசித்துச் சூரனைக்கண்டு வார்த்தைபாடிவரவிருந்த நினைவைமறந்து தடைபட்டுநின்று இதனையோசிப்பதாயினர், நான் இவ்வாயிலின் மூலமாகத்தாராளமாகப்போகவெத்தனப்படுவேனாயில் இத்தலைத்திற் காவல்கொண்டிருக்கின்ற சேனைவீரர்தடுத்துச் சண்டைக்குநேர்வர் அக்காலத்தில் நானும் பின்னிடையாமற் கூடியவனாயிற்போர்செய்யினும் இவர்கள்முற்றினும் மாள்வதற்கு ஒருதினமுமுடைபுஞ்செல்லும் அப்படிக்குவருத்தி வெற்றிகொண்டபோதினும் அத்துடன் நிற்கமாட்டாது ராசதானியாகவிருக்கின்ற இப்பட்டணத்திலிருந்து ரதகெச துரகபதாதிகள்வெள்ளக்கணக்கில் மேலும் மேலும் வருவதற்கையமில்லை- அப்படிக்குநேர்ந்தேர்ந்தசயின்னியங்களுடன் எமதிறைவனாகிய கந்தசுவாமியார்கிய

பாகடாட்சத்தினால் நானொருவனுமெதுத்து உயித்தியத்தைச்செய்து சி
ன்னபின்னப்படக் கண்டித்துக்கொல்வே னாயினும் யிப்பட்டணத்தில
டங்கியிருக்கின்றசேனைப்பெருக்கையொழிப்பதற்குவெகுநாள்செல்லு
ம் அவுணர்பலமின்றான்று அதிகவருத்தங்கொண்டு வெற்றிபெறுதற்குப்
பலதினங்களாயினு மாகட்டும் யிந்தமயேந்திரபுரியி லடங்கிய படைக
ளைஎன்புயவன்மைகொண்டு முடித்தசேதியைக் கேழ்விப்படுவனாயிற்சூ
ரபதுமன்கோபித்துச் செயசாலிகளாகியதன்துணைவர்புத்திரர்களைச் சண்
டைக்குத்தூண்டுவன் அவர்கள் மிகவும் பலாட்டியாள் மாயவித்தைகளி
ற்சிறந்தவர்கள் அத்தகையவலிபெற்ற தம்பியர் பிள்ளைகள் சேனைத்தலைவ
ர்மந்திரிபிரதானிகள் முதலானவர்களை வெல்வது மிகவுமரிதாக விருந்த
போதினும் வெற்றிவேலாயுதக்கடவுளினது கிருபாநோக்கவலிகொண்டு
பற்பகலித்தலத்திலிருந்து கொடியபோரைச்செய்து அவர்களனைவரையு
ம் சங்கரித்துமாய்ப்பேனாயினும் எவர்களாலும் வெல்லுதற்கரிய செய
சாலியான வச்சிர திரேகத்தைப்பெற்ற சூரபதுமன் வடவையையப்போற்
சீறிவந்தெதிர்த்து போர்செய்யுமுன்னிலையில் நானும் பின்னிடையாமல்
அளவற்றபகல் ஓய்வின்றிச் சண்டைகொடுப்பினும் அவுணராசன்முற்கா
லத்திற் செய்திருக்கின்ற தவமுயற்சியினால் தேவதேவோத்தமனாகிய சிவ
பிரானிடத்திற் பெற்றிருக்கின்ற வரப்பிரசாத முயற்சியினால்ஒருபோது
மாளான் அவனைப்பிரமன் விஷ்ணு பலதேவர்களுடனும் நேர்ந்துவாதா
டினும் வெல்வதரிது மேலும் அவன் ஆணையாக்கினைக்குப்பயந்து அவ
ன்கட்டளைப்படிக்கு நடந்துவருகின்றனர், அப்படிக்கிருக்க மற்றெவர்
களால் அவனைச்செயங்கொள்ளப்படும் அவ்வாறே பற்பகல் நானொருத்
துக்கூடியதந்திரங்களினாற் சண்டைகொடுத்தபோதிலும் சற்றும்யிளைத்
துப்பின்னிடையான் யிவ்விதமாகப்புறகிடாம லெதிர்த்திருக்கின்ற கால
த்தில் நானும் பின்வாங்காமல் விருதாவிற் சரீரம்வருந்திப் பொருதும்
வெற்றிபெறாமல்மனவெறுப்புடன் மீண்டுபோவதுஎன்போலிகளுக் க
ழகன்றுமேலும்வீரருக்கடுத்தநீதிப்படிக்குச்சண்டைகொடுத்துக்கொண்
டேயிருக்கவரும் எக்காலத்திலும் வீண்வாதுகொடுத் திருப்பதன்றியில்
அவன்சிறையிற்பட்டிருக்கின்ற தேவரைமீட்கக்கூடுமோ அல்லது பற்
பகல்பொருது செயம்பெறாதகாரணத்தினாற் சண்டையைநிறுத்தி நான்
வந்ததாதின் காரணங்களை அவனுடன்சொல்லி அதற்கவன் கருத்தின்ன
தென்று தெரிந்துபோவதற்குக் கூடுமோ ஒருபோதிலும்கிட்டநெருங்
கவொட்டான் நெடுங்காலம் நான்சண்டைசெய்தே விருதாவில் நாளைச்செ
லுத்தவரும் ஆதலால் ஞானநாயகனாகவும் பரம்பொருள் நாயகமாகவும்
ஒப்பற்றவேதங்களுக்கு நாயகமாகவும் சிவபிரானருளுருவாகத்தோற்

திப நாயகனுகவும் விண்ணவர்களனைவருக்கும் நாயகமாகவும் சண்முக ங்களைப்படைத்த நாயகனுகவும் நிற்மலமாகவிளங்குஞ்சோதி நாயகமா கவும் எம்மையாளுங் கிருபைக்கு நாயகமாகவு மிராநின்ற பாலசுப்பி ரமணியக்கடவுளல்லது சூரபதுமனைக்கொல்லத்தக்கவர் யாவரிருக்கின்ற னர், மேலும் சவுரியத்தைநினைந்து யித்தலத்தை நீங்காமலிருந்து சூரப துமனுடன் பொருதிருப்பேனுகிலும் எமதிறைவனுகிய ஆறுமுகப்பெ ருமாள் ஒருகாலம்வந்து சவுரியபரனுகிய சூரனைவெற்றிவேலினுற் சங் கரித்தபின்பு கொடியகாவலிலிருக்கின்ற தேவர்க்கள்சிறையைவிடுவித்து க்கொண்டுபோகவேண்டியிருக்கின்றது ஆதலால் அப்பிறையோசனமா கிய சண்டைசெய்திருக்க நினைப்பது நீதியன்று மேலும் யிக்காரியத் லைத்தடங்குவதற்கு நமது பெருமாள் கட்டளையுமில்லை மேலும் தூதா கவந்தவர்கள் முடிக்கத்தக்ககாரியமுமன்று யித்தகைய சங்கட்டங்களிரு ப்பதாற் போர்விளையாதமாற்கமாய் நகரத்துக்குள்ளேபிறவேசித்து நா ம்வந்தகருமத்தை முடித்துக்கொண்டு திரும்புவதே நன்கென ஒப்பற் றவிவேகசம்பன்னனுகிய வீரவாகுதேவர் தீர்மானித்தவராய் அந்தகோ புரவாயலினெல்லையைக்கடந்து புசபெலபராக்கிறமசாலிகளாகிய அவுண வீரர்காவல்கொண்டிருக்குங் கோட்டைமதிலின் மேற்புறத்திற் போகக் கூடாமையால் ஒருபாரிசமாகச்சென்று கீழ்க்கோபுர வாயலைச்சேர்ந்து பார்ப்போமென மனதிலெண்ணி வடபாரிசத்திற்றோற்றும் பொன்ம தில்மேலாகப்போகாமல் அதன்பாரிசமாக வானவழிக்கொண்டுநடந்து வலியகாவலைப்பெற்றிருக்கின்ற கீழ்ப்பாரிசவாயலின்முன் செயசாலியாகி யவீரவாகுதேவர்சேர்ந்து கூர்மையாய் சொலித்திராநின்ற வாளாயுதங்க ளைக்கரத்திற்கொண்டு அவுணச் சேனைகளுக் கதிபராகிய மேதிக்கண்ண னென்றும் வீரபானுவென்றும் பெயரைக்கொண்ட யிரண்டுவீரரும்அ வ்வாயலினிடத்திற் காவல்கொண்டு வடபுறத்திலிருக்கின்ற வாயலினிட்த் திலிருந்த அவ்வளவுதொகைகொண்ட சதுரங்கவெள்ளம் சேனைகள் பல பாதகங்கள்சேர்ந்திருப்பதுபோல வெங்கும்நெருங்கிக் கோபுரத்தின் மீதினும்சொத்தனங்களிடத்திலும்மதிலுறுப்பினும் ஆயுதபாணிகளாகநி ன்று யிடைவிடாமற்போற்றியிருப்பதை வண்டினங்களுறுமவெற்றிமா லைபுனைரும் புசங்களைப்பெற்ற வீரவாகுதேவர்கண்டு அவர்கள் காவலின்வ லியையும் சேனைப்பெருக்கையும் நிதானித்து அதிகஅற்புதமடைந்தவ ராய் அத்தலத்திலிருக்கின்ற படைகள்நெருங்கி விண்மண்ணெவ்விடங்க ளினும் யிடமின்றிக்காத்திருப்பதால் யிவ்வாயலின்மூலமாகவும் போவ தரிதெனநிச்சயித்து அதன்மூலமாகவும் செல்வதுகூடாமையாற்றென்

யாரிசவாயலைச்சேர்ந்து பார்ப்போமெனநினைந்து புற்வதாகிருதியாகிய புசங்களைப்பெற்ற வீரவாகுதேவர் அத்தலத்தையுங்கடந்து தான்குறித்த திசையைநோக்கிப் போவதாயினர்.

---

# கெசமுகன்வதைப்படலம்.

---

சவுனகாதிரிஷிகளே- வீரவாகுதேவர் தான்சென்ற யிரண்டுகோபுரவாயல்களிடத்திலுமிரா நின்றகாவலின்பெருக்கினாற் பட்டணத்தக்குள்ளேபோகப்படாமல் தென்பாரிசவாயலினிடத்தைச்சேர்ந்து பார்க்கவெத்தனித்து அத்தலத்தில்நின்றுமெசசிவான வழிக்கொண்டு போகுமுன்னிலையில் அவ்வாயலின்மேல்நிலையிற் கப்பலைச்செலுத்தும்மாலுமியைப்போல வாசமாயிருந்து பற்பலகோடி அவுணவீரர் சேவித்துப்போற்றியிருக்கத்தக்கதாக நவரத்தினமயமாய் விளங்குஞ் சிங்காதனத்திலிருந்து அம்மாற்கமாக ஒருபிராணிகளுந் தன்சட்டளையின்றி நகரத்திற்பிறவேசிக்கஒட்டாமற் செயசாலியாகிய கெசமுகனென்னும் சேனைத்தலைவன்காத்துவருவன் அவன்சவுரியபராக்கிரமங்களையும் பெருமிதங்களையுஞ்சொல்லக்கேட்பீராக- பத்திபந்தியாகவிளங்கும் ஆயிரம்யானைமுகங்களைப்பெற்றவன் அத்தொகைபுல்லிய நீராயொழிக்கியிருக்குந் துதிக்கைகளைப்படைத்தவன் நவரத்தினமயமாகிய கிம்புரிக்கோடுகள் ஒவ்வொருபாரிசங்களிற் பிறையைப்போல யிரட்டையாகப் பெற்றவன் பற்வதாகிருதியாகத்தோற்றும் யிரண்டாயிரம்புசங்களைப்படைத்தவன் எக்காலத்துங்கோபமேகுடிகொண்டு காந்திக்கொண்டிருக்கும் மனதைப்பெற்றவன் மன்னுயிரனைத்தினையுங் காலாதிகளிற் கொண்டுபோகவல்ல எமனுக்கும் ஒருஎமனையொத்த கொடியதொழிலை நடத்தும்பாதகன் ஒருகாலம் பொன்னுலகத்துக்கதிபனாகிய இந்திரன்எதுத்தஞ்சியோடிப்போனநாள்முதல் தன்னைப்பகைத் தெதிர்ப்பவொருவருமில்லாமல் வாடியமனதையுந் துவண்டு தினவுண்ணும் பாரித்தபுசங்களையும் படைத்தவன் தாகசாந்திவேண்டியகாலத்திற் கடலிற்படிந்து நீரையுண்டெழும் மேகங்களைத்துதிக்கைகளினாற்பற்றி வாரிப்பேழ்வாய்களினிடத்திட்டு பற்களினாலதுக்கி அவற்றினிடத்திருக்கின்ற செலத்தையுண்டு யிடிகளையும்மின்னலையும் பெருக்கியோடுவதாகத் துப்பும்வலிபெற்றவன் குலைகளாதிய பாதகங்களையே எக்காலமும் விரும்பியகருத்தையுடையவன்சண்டைஎப்போது கிடைக்குமென்று எண்ணியிருக்கும் மனதைப்படைத்தவன் மதயானை வீரசிங்கம் புலி கரடி பன்றி யித்தகைய பாரித்தமிருகங்க

ளை ஒவ்வொருகரத்தில் ஆயிரக்கணக்கிலெடுத்து பிலத்தையொத்தவாய்க
ளிற்போட்டுமென்று யிருகடையினும் உதிரம் பீரிட்டொழுகத்தின்னு
ம் மிகுத்தபசியுள்ளவன் காசாம்பூவினது நிறத்தையொப்பக் கறுத்த தி
ரோகத்தைக்கொண்டு தென்றிசைக்கதிபனாக விருக்கின்ற எமதருமராச
ர்கள் காலபாசத்தைத்தாங்கி ஆயிரஅண்டங்களிலிருப்பவர்கள் வந்துசே
ர்ந்து நிற்பதையொப்பத் திக்கைகளைசத்திருக்கப் பெற்றவன் யித்த
கைய புசபெலபராக்கிறமசாலியாகிய கெசமுகன் தனக்கு வாணாள்குறுகி
மாய்வதற்குக்காலஞ் சமீபித்தபடியாற் சகனமார்க்கமாகப்போகின்ற வீ
ரவாகுதேவரைக்கண்டவுடன் வடவையைப்போற் பொங்கியெழுந்துஅ
வரைத்தடுப்பதாக யிவ்வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு துடர்வதாயின
ன், ஆரடாபயலே அப்புறப்போகாதே நில்லுநில்லென்றதட்டிப் பலசா
லிகளாகிய அவுணவீரர்போற்றிவருகின்ற தடைகளைக்கடந்து அபலனாகி
யதீயானவன் தனித்திவடம்வரப் பெறுவையோ மாயவிஞ்சைகளைச்செ
யித்து அதன்முயற்சியினால் வந்ததாகக்காணுகின்றது வக்காமுதலிய சி
றுபறவைகளும் எமதாணையைக்கடந்து யிந்தபட்டணத்திற் போகவொ
ண்ணாது அபலராய்ப்பேடிகளையொப்ப விருக்கின்ற தேவப்பயல்கள்வா
சமாயிருக்கின்ற சட்டுக்காவலில்லாத நகரங்களைப்போல வெண்ணிவந்
தனை சகலசிறப்புகளையுங் கொண்டிருக்கின்ற யிந்தவீரமா மயேந்திரத்
தையென்னையொத்த வீராதிவீரர் நிமையையொப்பக் காத்திருக்கும்வலி
யின்றிறத்தையறிந்ததில்லையோ கோபாக்கினியானது மூளஉருத்துவந்
தேன் யிந்த நிமிஷத்தில்மாளுவை யினிஎக்காலத்தும் நீ மீண்டுபோகு
ம் எதுவையைநினைக்கவேண்டாம் பிரமன் உன்சிரத்திலெழுதியபடிக்கு
யித்தலமோஉனக்கு ராசகாலத்துக்கிருக்கின்றது ஆயிரத்தெட்டுஅண்ட
ங்களையும் ஏகச்சக்கிறத்தைக்கொண்டு அர்சாட்சிசெய்துவரும்பெருமை
பொருந்திய யிந்தபட்டணத்தைப் பார்த்துப்போகவந்த உன்துணிவை
யொக்குமிடத்தில் வீரத்தன்மைபெற்றசிங்காசன் வாசமாயிருக்கின்
றதலத்தைக்காணவிரும்பி மெல்லியதிரோகத்தைப்பெற்றமான்பெட்டை
யானதுவர்தனையொக்கும் வட்டாகாரமாகவளைந்திருக்கும் விசாலமாகி
ய கடலைக்கடந்து யிதன்மத்தியிலிருக்கும் இலங்கைக்காவலையுந்தாண்டி
யிப்பதியினைக்கண்டுபோகத் துரிதமாய்வந்தனை யாதலால் தேவர்கூட்ட
ங்களில் நீயாவன் சுந்தர வடிவுள்ள விண்ணவர்களிற் றிடசாலியைப்
போலச்சாவுக்குத் துணிந்து ஒருவாளாயுதத்தைப் பற்றிக்கொண்டுநீதனி
மையில் வந்தனையாதலாற் மாயவித்தைகள் பூர்த்தியாகக்கற்றகள்வனேயி
த்தனையதிரங்கொண்டு யிவடம்வந்தகாரியமென்ன உன்னையிப்பட்டண
த்துக்கனுப்பினவர்கள் யாவர் ஆலகாலவிஷத்தையுண்டு கண்டத்திற் றரி

த்திருக்கின்ற சிவபிரானே சேஷசாயியாகிய மகாவிஷ்ணுவோ சிருட்டிகர்த்தனாகிய பிரமனே அல்லது பின்னையாவர் தயிரியங்கொண்டு உன்னைத்தாண்டினர், துரிதமாகச்சொல்லக்கடவை மேலும் யிந்தகெடிஸ்தலத்தினைச்சுற்றிப்பாத்துவருகின்றனையாதலாற்றூதாகவந்தவனைப்போற்காணுகின்றது அக்காரியத்தைக்குறித்து உன்னைப்போக்கினவர்கள் பெயரை விளைவில்வெளியிடக்கடவை வந்தகாரியத்தையுஞ் சீக்கிரமாகச் சொல்லுவை யிந்தநிமிஷத்தில் யிறக்கவிருக்கின்றனை யாதலால் எப்படிக்குப் பிராணன்தப்பிப் பிழைத்துப்போகவல்லை யிப்பட்டணத்தில் அரியசிறைசாலைகளில் வாடியிருக்கின்ற தேவர்க்கள் சேதிகளைத்தெரிந்துபோக இந்திரன்உத்திரவின்படிக்கு வந்ததாகவுங் காணுகின்றது என்னகொடுத்தாலும் யித்தகைய அரியகாரியத்துக்குடன்பட்டு வருவதுதகுதியோ வானத்தையளாவ எரிந்தோங்கியிருக்கும் அக்கினிமயமாகிய கோட்டையினிடத்தில் மூசரவாடும் மெல்லிய பூளைப்புஷ்பத்தை வாயுதள்ளிவந்ததைப்போல ஊழ்வினையானது,உன்பிடரியைப்பற்றி நெட்டிக்கொண்டு வந்துவிட்டது நாங்களிட்டயேவல்களைச் சிறசாகவகித்துப்பழமையாகச்செய்துயிலைத்துவாடிப்பதுங்கித் திருகின்றதேவராசன்மனிதனாகவுங் காணப்படவில்லை மெத்தவும் மனவுறுதிபெற்றனை யின்னமும் சற்றுவதுபயந்தவனுமல்ல என்னையொத்தவனை மதியாமலும்போகின்றனை அரியபிராணனைவாங்கவரும் எமனைப்போலத் தொடர்ந்துவருகின்ற பலசாலியாகிய என்முன்னம்நின்று மாறுத்தரங்கொடாமல் ஏங்கேபோகின்றனை அடாபயலே நில்லுநில்லென்றதட்டிக் கொண்டுவருங் கயாசூரன்வாக்கியங்களைவெற்றிமாலைபூணும் புசங்களைப்படைத்த வீரவாகுதேவர்கேட்டு வெகுநேத்திரேத்தியென்று நகைத்துத்திரும்பிப் பாத்துநின்று ஓயாமல்யிவிவிதங்களாசப் பினத்திக்கொண்டுவருங் கொடியவாயையுடைய பாதகனெதிரிற்சென்று உனக்கந்தியகாலம் நேர்ந்தபடியால் என்னெதிரிற்பட்டனை சீக்கிரமாய் வாவாவென்று பற்வதாகிறுதியாகிய தோட்களைப்படைத்தவீரன் கூவிச்சொல்லியவாக்கியத்தைத் தேவர்கள் நடுங்குங்கொடியபாதகனாகிய கயாசூரன்கேட்டவுடன் வடவாமுகாக்கினியைப்போற்கோபித்துப் பக்கத்தில்வானத்தை யளாவநின்ற ஒருபருத்தமலையைவேருடன்பேர்த்தெடுத்து அடாபயலே யிது உன்பிராணனையுண்டுசரீரத்தைபுத்துகள்செய்யுமென்று சிவகுமாரன்மீதில் உருத்துவீசினான் அப்பற்வதமானது பந்துக்கொப்பாகக் கிறுகிறெனச்சுழன்று கொண்டுபோய் வண்டினங்கள் சத்தித்திருக்கும் வெற்றிமாலைபூணும் வீரவாகுதேவர் புயத்துக்கு நேராகவந்து சோடையிடிக்கொப்பாகத் தாக்கியமாத்திரத்தில்தூளிதக்கட்டியானது பாறையிற்பட்டு உதிர்வதைப்போலப் பொடி

ப்பொடியாய்த் திசாதிசைகளிற் பறந்துபோயது யிவ்விதமாகத்தானெ திர்த்தமலை சின்னபின்னப்பட்டதையும் வீராதிவீரன் வலியையுங் கயமுகன்கண்டவுடன் சரீரம்புழுங்கக்கோபித்து விழிகளில் அனற்பொறிகள் சிதறுவதாகப்பாய்ந்து பாரிசங்களில் நிற்கின்ற உன்னதமுள்ள ஆயிரம் பர்வதங்களைத் தன் துதிக்கைகளைச் சுற்றிப்பறிக்கத் துடங்கினன், அதுவெப்படிக்குக்காட்டுவதெனில், மகம்மேருவினது சிகரங்களனைத்தினையும் வாயுதேவன் வளைந்தெடுப்பது போன்றும் திருப்பாற்கடலைமத்திக்குமுன்னிலையில் வாசுகியைமந்தரகிரியிற் சுற்றியதையொத்தும் விளங்கியது,இவ்விதமாக ஆயிரங்குன்றங்களையுமெடுத்து யிடிகளுமஞ்ச ஆர்ப்பரித்துச் சிவகுமாரன் விடுத்தது தன்பேரில் வீசியகாலத்தில் அவைகள் விறிபெழுந்து ஒன்றுடனொன்றுதாக்கிகிறுகிறெனச்சுழன்றுகொண்டு வரும்வேகத்தினாலுண்டாகும் வாயுப்பெருக்கிற்பட்டு அம்மலைகளிடத்திற் சஞ்சரித்திருந்த யாளிகள் சிங்கங்கள் வளைந்த கோடுகளைப் பெற்ற மதயானைகள் வேங்கைகள் கரடி முதலிய மிருகங்கள் கோடானகோடிகளானவை பயப்பிருந்தியினால் அரற்றிக்கொண்டு பலதிசையினுமிரண்டோடிவிழுந்து நாசமடையவும் அவ்வனாச் சாரல்களிற் கட்டியிருந்த பாரித்த தேன்கூண்டுகள் சிதைபட்டுத் தாரைவிட்டொழுகும் மதுக்களை வண்டினங்களெளிதிற் றெவுட்டவுண்டு வறுமையுற்றிருந்தமன்னர் சிவகடாட்சத்தினால்மகதயிஸ்பரியங்களைப்பெற் றனுபவித்துக்களிப்பவரைப்போல ரீங்காரத்தொனிகளைச்செய்துகொண்டு பலதிக்கினு முலவவும் செழித்தோங்கி வளர்ந்திருந்த பர்வதங்களை அடியுடன்பறித்தெடுத்தனும்ந்தயிடங்களில் மாருமற் சுரப்பெடுத்துப் பெருகுஞ் செலமானது சேர்ந்து பிறவாகமாய்க் கடலைப்போல அலைகளைமோதியினாச்சவிட்டோடவும் கெசமுகன் துதிக்கைகளைச்சுற்றி ஆங்காரித்துப்பெயர்த்த பர்வதங்களினடிவாரத்திற் காட்டும் பள்ளங்களிற் பெருத்தோடும்புனற்பெருக்கிற்கடமைமான் முதலியமிருகங்கள் அச்சத்தினாற்சிதறியினாச்சவிட்டோடிவிழுகின்ற அதற்சியினாற்றுள்ளியெழும்நீரத்திவலைகளானதுவானத்தெழுந்து தாக்குதலினாற் சூரியன்வெம்மையையொழிந்துகுளிர்ந்துகாட்டச்செய்யவும் யிவ்விதச்சிறப்புகளைப்பெற்ற பர்வதங்களை வீசியபோதுகயற்றைச்சுற்றிவிடுத்த பம்பரத் தொகையையொப்பக்கிறுகிறெனச்சுழன்றுகொண்டு வீரவாகுதேவர் சமீபத்தில் வருமுன்னிலையில்யிவற்றினாலுண்டாகிய ஆரவாரங்களுக்கஞ்சி சுவாலைமிகுந்த கிரணங்களை வீசிவரும் சூரியனும் பயந்தொளிப்பதாக அந்தஆயிரம் பர்வதங்களும் ஒருமுகமாகச் சமுத்திரத்திலிறங்கும் மேகசாலங்களைப்போன்று அதிவேகமாகத்தன்பேரில்வருவதை வீரவாகுதேவர்கண்டு சற்றும் மனந்தளராமல்

வெற்றிவேலைத்தாங்கிய சரவணபவன்திருவடிகளை மனதிற் தியானித்துக் கொண்டு அதுகளைத்தடுப்பதற்கு யாதொருமுயற்சிகளையும் நினையாமற் கெம்பீரமாக எதிரில்நிற்கின்ற தறுவாயிற் சயாசூரன் வீரவாகுதேவனை அதம்பண்ணுவதாகக் கோபித்துச்செலுத்திய ஆயிரம்பர்வதங்களும் நந்தியெம்பெருமான் கணத்தலைவன்மீதிற் முக்கியமாதசிரத்தில் ஆயிரங் கிரணசமோகங்களைப்படைத்த சூரியபகவானைப்பகைத்து மூடியமேக சாலங்கள் பின்னப்பட்டுப் போவதையொத்துக் கார்த்திகைத்தெரிவையை த் தாயாகப்படைத்த சிவகுமாரன் பாதகமலங்களைத் தியானித்திருந் தமகிமையினால் யாதொரு துன்பங்களையுஞ் செய்யாமல் தட்சிணத்திற் பொடிப்பொடியாகப் பின்னப்பட்டுத் துகளாய்த் திசாதிசைகளிற்பறந் ததுமன்றியிற் பற்பலவளங்களுங் குறைபட மழைபெய்யாத காலத்திற் செலப்பரிசமற்று வெளுத்திருக்கின்ற மேகங்கள்பார்த்தும் பிறையோ சனப்படாமற் சிதறிப்போகுந் தன்மையாக வியற்தப்பட்டது, இதுவ ல்லாமற் குயவன் பலநாள்களாகச் செய்தடுக்கியிருந்த மண்பாத்திரவ டுக்குகளின்மீதிற் சற்றூண்விழுமாயின் நறுங்கிச்சிதைந் தடங்குவதை நிகர்த்துக் கயாசூரன்விடுத்த வரைகள் வீரவாகுதேவர் வலிக்காற்றமல் மங்கிஉருத்தோற்றமல் மறைந்தது, இவ்விதமாக புசபெல பராக்கிரம சாலியின்பேரிற் செலுத்தியவரைக ளனைத்துங் கேடுபட்டுப் பயனடை யாமற்போனதைக்கண்ட கெசமுகன் பிற்மித்துத் திகைத்துநின்ற காட் சியெப்படிக் கிருந்ததெனில், தற்மமார்க்கத்தைவழுவிக் கொடுங்கோல் முன்னிலையிற் றேடிவைத்த பொருள்க ளனைத்தையும் நீதிபரனாகிய அர சன் தண்டித்துக்கொண்டு போகத்தான்சம்பாதித்துப் போற்றிவந்ததிர வியங்கள்முற்றினும் பறிகொடுத்து வறுமையுற்றுவாடும்பதிதனைப்போ லக்காட்டியது, சவுனகாதிரிஷிகளே - யிவ்வாறு தான்வீசியபர்வதங்களி ன்கெதியைத் தெரிந்தவுடன் அதிசெயித்துமானம்பாதிப்பதாகக் கயாசூ ரனுனவன்வடவையைப்போற்சிறி மந்தரத்தையொத்த பாரித்த தண்டா யுதமொன்றையெடுத்து கிறுகிறெனச்சுழற்றி யிதனால் நாசமடையக்கட வையென்று வலிக்கொப்பற்ற வீரவாகுதேவர்பேரில்வீசி ஆர்ப்பரித்தகா லத்தில் அப்படையானது மணிகளசைய அதிவேகங்கொண்டுமீறிவருவ தைவீரன்கண்டு அனலையொத்த கொடுமையையும் பிறகாசத்தையும் பெ ற்றவாளாயுதத்தை உறையில்நின்றும் உருவிக்கரத்திற் பற்றிக்கொண்டு யிடம்வலம் வலம்யிடமாகச் சுழற்றிவிட்டவன்மீதிற் பறப்பதாக துகள் படவெட்டியெறிந்து தீரனாய் முன்னடிவைத்து பின்னடிவாங்கித் தாவி ப்பாய்த்து மேல்வருங்காலத்தில் யானைமுகங்களைப்பெற்றபாதகனாகிய சயாசூரனுனவன் வெற்றிமாலை தரித்திருக்கின்ற வீரவாகுதேவரிட வல்ல

யங்களையுந் திரத்தையும் மதித்து யிவனைத்தாமசப்படாமற் கொல்லவே
ண்டுமென்றெண்ணி றவுத்திராகாரமாக மண்டியெரிந்து அம்மருங்கில்
வானத்தையளாவநிற்கின்ற பருத்தஆலாவிருட்சங்களிற் பனையையொத்த
சைந்திருக்குந் தனதுநீண்ட துதிக்கைகளைச்சுற்றி வேருடன் பறித்துவீர
வாகுதேவர்பேரி லெறிந்தான் அத்தருக்கள் பிரசண்ட மாருதத்தைப்
பெருக்கிமேலிட்டுவரும்போது தமது திருக்கரத்திற் கொண்டிருக்கும்
வீரவாளைஒங்கிக் கண்டதுண்டமாகத்தறித்துக் குவித்ததறுவாயிற் கயா
சூரன் கோபதீபிதனாய் விழிகளில் அனற்பொறிசிதற உருத்துமீட்டும்வீ
ரவாகுபேரிற் செலுத்துவதாகநினைந்து வானத்தையளாவ நிற்கின்ற பற்
பலபர்வதங்களைப்பறிக்கத் துடங்கியதை சுப்பிறமணியதேவர் விடுத்த
தூதன்கண்டு வருக்கொண்டுபாய்ந்து அப்பாதகன் துதிக்கைகளாயிரவ
ற்றையும் மலைப்பாம்புகளையொப்பப் புரளத்தக்கதாக வெட்டித்தள்ளிய
போது அதனாலுண்டாகிய நோய்க்காற்றாமல் வருந்தியுங் அப்பாதகன்
சீறி அவனைப்பற்றி வாயிற்போட்டுமென்று கோபதாபங்களைத் தணிவே
னென்றெண்ணினவனாய் யிரண்டாயிரங்கரங்களையும் யிருபாரிசங்களினா
ம்பரப்பி வளைத்தமுன்னிலையிற் செயசாலியாகிய வீரவாகுதேவர் வாளா
யுதத்தைவீசி ஒருபாரிசத்தில்வந்த ஆயிரங்கரங்களையுந் தறித்தெறிந்த
போது யானைமுகத்தைப்படைத்தபாதகன் தன்கரங்களிற் பாதிவெட்
டுண்டு உதிரம்பெருகுவதையும் அதினாலுண்டாகிய வருத்தத்தையும் எவ்
வளவுமலட்சியம்பண்ணாமற் சொக்கரித்துக்கொண்டு மற்றஆயிரங்கர
ங்களினாலும் வெற்றிமாலைபுரளும் வீரன்மார்பிற் கோடையிடிகளைப்
போல மோதினான், அக்காலத்தில்வீரன் அதிசகோபங்கொண்டு ஒருவி
சைவாளைவீசி அந்தசரங்களையுங் கண்டித்தெறிந்தனர், சவுனகாதிரிஷிக
ளே கேட்பீராக கொலைத்தொழிலையே முக்கியமாகச்செய்திருந்த யானை
முகப்பாதகனானவன் யிரண்டாயிரங்கரங்களையும் ஆயிரந்துதிக்கைகளை
யும் பறிகொடுத்து சிரபந்திகள் மாத்திரம் விளங்கக் கட்டையாகநின்ற
தெப்படிக்குக்காட்டியதெனிற் - பலகிளைகள்மாத்திரம் நிற்க விழுதுக
ள்முற்றினுமிழந்து தோற்றும் ஆலாவிருட்சத்துக்குச் சமதையாக விள
ங்கியது யிவ்வாறு கரங்களனைத்தினையும்போக்கி நிற்கின்ற கயமுகன் த
ன்கோலத்தைப்பார்த்து மிகவும்வெம்பி யினியென்செய்வேன் எனக்கு
முடிவுகாலம்நேர்ந்தபோதினும் யிவனை யெவ்விதத்திலாவது கொன்று
கோதித்தபின்பல்லது பிராணனைவிடேன் வீரனாகவிருப்பவன்செய்கை
யீதுவாகுமென்றெண்ணினவனாய் மல்லயுத்தத்தினைச்செய்யக்குறித்துப்
பின்னிடைந்து மலைகளையொத்த தோள்களினால் வீரவாகுதேவர் புயங்க
ளிற்றாக்கிச் சிங்கநாதஞ்செய்து மறுபடியும் பின்னிடையும்போது தம

தையனாகிய வீரன் அப்பாதகன்கோலத்தைப்பார்த்து யிரங்கி கரங்களைப்
போக்கி வலியற்றவனாய் நின்றனன், யிவனுடன்வெற்றிவாளாயுதத்தைக்
கொண்டுபோர்செய்வது வீரருக்கழகன்று சாஸ்திரவிதிக்கு மொவ்வா
து ஆதலால்யிவனைப்போலவேனானும் வெறுங்கையனாகநின்று சொல்வ
து நீதியென்றெண்ணி பிரகாசம்பொருந்திய வாளாயுதத்தை உறையிற்
செருகித் துரிதமாகப்பின்னிடைந்துதாவி நமதுபாதங்களிரெண்டினால்
அப்பாதகன் விசாலமாகிய மார்பினிடத்துதைத்தனர், அக்காலத்தில் நம
தையன் பாதங்களின்உறுதிக்காற்றாதவனாய் ஓவென்றிரைச்சலிட்டுக்கொ
ண்டு விழுந்து மும்மதங்களையும் பெருக்கியிருக்கும் யானைமுகங்களை
ப்படைத்த கயாசூரன் பதைபதைத்து உதைத்துக்கொண்டு மாண்டனன்
வீரவாகுதேவர் பாதங்கள் பட்டுப்பிளந்த மார்பினின்றும் கரங்களின்
மூலமாகவும் பெருக்கெடுத்தோடும் உதிரப்பிரவாகமானது யிரைந்திரு
க்கும் அலைகளையுடைய சமுத்திரத்திற்பாய்ந்து தேக்கிட்டுக் கருநிறத்
தைமாற்றியது—நைமிசாரணியவாசிகளே வீரவாகுதேவருக்குங்கயமுகா
சூரனுக்குஞ் சண்டைநேர்ந்த முன்னிலையி லுண்டாகிய ஆரவாரங்களைக்
கேழ்விப்பட்ட அவுணவீரர்கள் யிதுவென்னகாரணம் சத்துருக்கள் நே
ர்ந்து சண்டைகொடுப்பதாகக் காணுகின்றது யித்தகையகாரணம்நேரு
வதற்கு எதுவென்றே அதைப்பார்த்து வருவதுகாரியமென்றெண்ணி
அளவற்றவர் பலமுகங்களினுந் துரிதமாக ஆர்ப்பரித்துக்கொண்டு ஆயுத
பாணிகளாகவருவதை வீரவாகுதேவர்தெரிந்து யிப்பாதகர் என்சேவகத்
திறத்தைக் காண்பராயின் மனங்கொதித்துக் கோபமிகுதியினாற் கொடி
யபோரைச் செய்யத்துடங்குவர் அக்காலத்தில் நானும் பின்னிடையாம
ற்சண்டைகொடுக்கவரும் யிதுநன்காகக் காணவில்லை மேலும் உயித்திய
த்திற் றுடங்குவேனாயினும் யிவர்களுடன் வாதாடிவெற்றிபெறுவது யி
ன்றுடன் முடியாது வளர்ந்துகொண்டேயிருக்குஞ்சதுர்வேதங்களுக்கு
மெட்டாத ஆதிதேவன் அடியேனுக்குக் கட்டளையிட்ட பேரருளைமறந்
து யிந்ததுற்மாற்கர்களுடனெதுத்து வாதாடுவதுதீயனவாம்யினிகாலதா
மசஞ்செய்யாமற் சூரபதுமன் வாசஞ்செய்திருக்கின்ற யிந்தபட்டணத்
திற்றுரிதமாகச்சென்று வந்தகாரியத்தை முடித்துக்கொண்டு மீளக்கட
வேனெனத்தீர்மானித்து மேலும் யோசிக்கின்றனர், நல்லது நாம்நினை
ந்த படிக்குப் போவோமெனினும் எந்தவாயல்களின் மூலமாகநடக்க
வெத்ரனப்பட்டாலும் அத்தலங்கடோறுங் அளவற்ற வெள்ளக்கணக்கி
ற்சர்வாயுதபாணிகளாக அவுணவீரர் கண்ணிமையைப்போலக்காவல்கொ
ண்டிருக்கின்றன ராதலால்யிந்ததிரோகத்துடன்நான் அவர்களைக்கா
ணாமற்போவது ஒருபோதுங் கூடாமையால் வேற்றுருப்பெற்று நடப்

பதஉத்தமமௌனநிதானித்து கொடியவர்களுக்கு எமனையொப்ப விள
ங்கிக்கொண்டிருக்கும் கூரியவேலாயுதத்தைத்தாங்கிய குமாரசுவாமியார்
அனுக்கிறகத்தினால் யிந்தகிரோசத்தைமறைத்து சிற்றுருவமைந்து பாதக
ராகிய அவுணவீரர்போற்றிவருகின்ற யிந்தகிழக்குக்கோபுரவாயலைத் துரி
தமாகத் தாண்டிப்போய் சூரபதுமன் நகரத்திற் பிறவெசிப்பனெனத்து
ணிவுகொண்டவராய் நுன்மையிற் பரமாணுவினும்மிகச்சிறுகியும்மேன்
மையில் அகண்டாகார பரிபூரணமாகவுமிரா நின்ற குமாரதேவர் திருவ
டிகளை மனதிற்சிந்தித்துப்போற்றி அத்தேவதேவன் கடாட்சவீட்சணி
ய முயற்சிகொண்டு அனுப்பிரமாணம்பெற்ற கிரோசத்தைக்கொண்ட
னர் தமது நுட்பவறிவினைப்போலவே அதிர்சியகிரோசத்துடன் ரணக்கள
த்தைவிட்டு நீங்கி ஒப்புவமையற்ற கந்தசுவாமியைத் துதித்துக்கொண்டு
மேலெழுந்து ககனமாத்ரமாகச்சென்று கிழக்குத்திசையில் விளங்குங்
கோபுரவாயலின் மீதிலேறி நின்றனர்.

---

## நகர்புகுபடலம்

சூதபுராணிகர்-சவுனகாதிரிஷிகளுக்கு மேல்நடந்த சரித்திரங்க
ளையுஞ் சொல்லத்துடங்கினர், முற்குறித்தபடிக்கு வீரவாகுதேவர் கோ
புரமேற்புறத்தைக் காவல்கொண்டிருந்த கெசமுகாசூரனைச் சின்னபின்
னப்படக்கண்டித்த பின்பு நவரத்தினமயமாக விளங்கியிருக்குங் கிழக்
குக்கோபுரவாயலின் மீதில் நின்றவர் ஆதிகாலத்திற் சிவபிரான் ஆயிர
கோடி அண்டப்பரப்பினையும் அவற்றுட்பட்ட-தேவர்-மக்கள்-பைசாசு
நாகர்-விலங்கு-பறவை-செந்து வெனச்சொல்லநின்ற எழுவகைப்பிற
விபேதங்களையும் பிண்டமாகநின்ற பொருள்களையும்மற்றவஸ்துக்களா
கியாகியவற்றைப்படைத்தவராய் அவைகளின் வரிசைக்கிறமங்களனைத்தி
னையும் பார்த்தறிந்த விதத்தைப்போலவீரமாமயேந்திரபுரத்தில் அடங்
கியிராநின்ற பற்பலவளங்களையும் பெருமிதங்களையுந் தமதுவிழிகளைப்
பரப்பிக்கண்டு அற்புதமடைந்து யிப்பிறகாரம்மதித்துப் புகழத்துடங்
கினர், யிந்தநகரத்தினைச் சூழவாவிருக்கின்ற கொட்டாரங்களில் நாட்
டப்பட்டு அவைகளிடத்தில் யிருப்புச் சங்கிலிகளினுற்பந்திக்கப்பட்டி
ருக்குந் தந்திகளை முறித்துப் பாகனைச்சிதறிட்டு மும்மதங்களையும்பெ
ருக்கிக்கொண்டு நீலகிரிகளைப்போலக் கறுத்தகாத்திர கிரோசத்தை வாய்ந்
தயானைப்பெருக்கினை யோசிக்குமிடத்தில் முற்காலத்திற் சூரபதுமன்
செய்தகொடியதவத்துக்கிரங்கி எமதிறைவனாகிய சிவபிரான் பற்பலவள

ங்களுடன் அவனுக்குக் கடாட்சித்திருக்கின்ற ஆயிரத்தெட் டண்டங்
களினும்பரந்து அலைகளைமோதிவளைந்திராநின்றசமுத்திரங்களனைத்தும்
ஏகோபித்துவந்து தேங்கிட்டிருப்பதுக்கொத்தும்பிடரிமயிரலையையிரு
மருங்கினுந்தூக்கி யிராநின்ற ஷீரமரங்கள் சுழலவும் முத்துகளினாலும்
பட்டுகளினாலுஞ் சோடித்திராநின்ற சேணிகளிற் செருங்கவிட் டிருக்குஞ்சி
லசலங்கைகள் சத்திக்கவும் நான்குபாதங்களினும்பொருத்திய தண்டை
கள்கலிச்சவையாளியாகவிட்டும் வட்டணைப்பயற்சிகளைச் செய்தும் பா
ச்சலிற் செலுத்தியும் வருகின்றபற்பல நிறங்களைவாய்ந்து அலைகளை
யொப்பத்தாவும்உத்தம அசுவப்பந்திகளின் சமோகங்களைப் பார்க்குமி
டத்தில் மேற்குறித்த அண்டப்பெருக்கிலடங்கியிராநின்ற மேகசாலங்
களோரிடத்திற்சேர்ந்து குலவிவிளங்குவதுக் கொப்பாகவும் பொன்னு
ருளைகள் அச்சு மச்சு குத்துக்கால் கொடுங்கை பட்டுச்சீலை கொடி கொ
டை முதலிய சிங்காரங்களைப்பெற்று நவரத்தினமயமாகச் சொலித்திரா
நின்ற தேர்களின் பந்திகளை நிதானிக்குமிடத்தில் அண்டங்களிற்பட்ட
சத்தகுலாசலங்களாகிய பருத்தமலைகளனைத்தும் சூரனுக்கிணைக்கஞ்
சிவந்து நெருங்கியிருப்பதுக் கிணையாகவும் சோறதந்தங்களையும்செம்
பட்டமயிரினையும்பருத்ததோள்களையும்காத்திரதிரோகத்தையும்பெற்றுசு
த்வாயுதபாணிகளாயிராநின்ற கால்பலங்களின் விரிவை நோக்குமிடத்தி
ற்பற்பலபுவனங்களிலடர்ந்திராநின்றயிருட்கூட்டங்கள் ஒருமிக்கச்சே
ர்ந்து நெருங்கியிருப்பதுக்குச் சமதையாகவும் யிவ்விதமாகச் சூரபது
மன் பரமசிவகடாட்சத்தினாற்பெற்ற ஆயிரத்தெட்டண்டங்களி லடங்கியிரு
க்கின்ற மதயானைகளும் வேகமுள்ளகுதிரைகளும் சொற்ணமயமாயோங்
கியிராநின்ற தேர்களும் அதிசூரராக விருக்கின்ற அவுணவீரரும் மற்ற
சிறந்தபொருள்களேமுதலிய வளங்களனைத்தும் யிந்தநகரத்திற்சேர்ந்தி
ருக்கின்றதுபோலக்காட்டுவதால் யிவற்றின்பெருக்கையும் சிறப்புகளையு
ங்கண்டுபூர்த்தியாகத்தெரிந்தவரன்றோ அகிலங்களனைத்தினையுங்கண்டவ
ர்கள் யித்தலத்திற்கிடையாத பொருளெங்கனுமுண்டோ யிந்தமயேந்
திரபுரத்திலடங்கியிருக்கின்ற ரதகெசதுரகபதாதிகளாகிய நால்வகைச்சே
னைகளின் பெருக்கைக்கணித்து யிவ்வளவெனச் சொல்லப்படுவதோ ஆயி
னும் ஒருவகையாகக் குறிக்குங்காலையிற் சகலபுவனங்களினும்புகழ்நின்ற
பெருமையினையுடைய சூரபதுமன் சிவபிரான் கொடுக்கப்பெற்ற ஆயி
ரத்தெட்டண்டங்களினிராநின்ற பர்வதங்களின் தொகைக்குமேற்பட்
டதோரணிகளும் ரத்தினமயமாகவிளங்கும் முகபடாங்கள் பொருந்திய
மத்தகங்களையும் மும்மதங்களையொழுக்கியும் பனையையொப்ப நீண்ட
லையுந்துதிக்கையினையும் மூன்றாம்பிறையைநிகர்த்தகோடுகளையும்வாய்

ந்தயானைக்கூட்டங்கள் பெரும்புறக்கடலாதிய சமுத்திரங்களின் விரிவுக்குமேலாகவும்தத்தித்தாவிப்பாயும் புரவிகளின் பெருக்கானதுசமுத்திரங்களினெழும்அலைகளின்மெருக்கினுமேலிட்டும்புசபெலபராக்கிறமசாலிகளாகிய அவுணப்படைகளின்கணிதமானதுகடற்கரையிலடர்ந்திருக்கின்றவெண்மணற்றெருகைக்கு மேலிட்டுமிருப்பதாகச்சொல்லவேண்டும் யிவையன்றியிற் சிவபிரான்கடாட்சித்திருக்கின்ற ஆயிரத்தெட்டண்டங்களினுமிராநின்றசெல்வப்பெருக்குகளனைத்தும் யிந்தமயேந்திரபுரியெல்லையாகியஎன்பதினுயிரயோசனைவிஸ்தீரணத்திலடங்கி யிருப்பதுக்கொத்துஅற்புதக்காட்சியாகத்தோற்றுகின்றது,இதையோசிக்குமிடத்திற்சத்திராதிகள்உதிரத்தைப்பூசிப்பிறகாசித்திரானின்றவேலைத்தாங்கியசூரபதுமன்செய்தஅரியதவமுயற்சியினுல் மேற்குறித்திருக்கின்ற வளங்களனைத்தும்ஏககாலத்திலித்தலத்திற் சேர்ந்துகுலவி யிருக்கின்றதாகச் சொல்லவேண்டும்யிப்படிக்குப் பலஅண்டங்களிற்பெருத்திராநின்ற அஷ்டஅயிஸ்பரியசம்பத்துகளனைத்தும்யேகமுகமாக யிப்பட்டணத்திற்பெருத்திருக்கக்கண்டபோதினும்முக்கியமாக ஒருவன் தேடவேண்டியசிறந்ததற்மங்களையும்தயைதாட்சணியம் சிவகாருண்ணியமென்னும் யித்தகையசத்கருமங்கள் எவ்வளவுத்தோற்றப்படவில்லை சூரபதுமன் தேவர்க்களைவாட்டிச்சிறையிலடைத்திருப்பதைப்போலவே யிவ்விதநற்கருமங்களையுங்கிட்டிநெருங்கவொட்டாமல்தள்ளிவிட்டனன்,இவன்பெற்றிருக்கின்றமகதயிஸ்பரியச்சம்பத்துகளுடன் நித்தியமாகியதற்மமுதலியநல்லொழுக்கங்களுஞ்சேர்த்திருக்குமாயின் ஒருகாலத்தினும் யிவன்செல்வத்துக்குத்தாழ்வுநேரவறியாது யித்தகையஅகண்டசாம்பிறுச்சியவைபவங்களைப்பெற்றுவாழும் சூரபதுமன்வீற்றிருக்கின்ற யிந்த சிறந்தபட்டணத்தில் அவுணவீரர்கள்மாளிகைகளிடத்தினும்ஆலயங்கடோறும்மற்றுமிராநின்றபகரமாகிய சடங்குகளைச்செய்துவரும் யிடங்களினும் முழங்கிவருகின்ற செயபேரி மங்கலமுரசம் சின்னம்சங்கமாதிய பதினெண்வாத்தியங்களும் சத்தசாகரங்களினொலிக்குமேலாக எங்கணும் அதிர்ந்திருக்கின்றது யித்தகையவாத்தியங்களைச்செய்துவருகின்றவர்பெருக்கத்தை யாவராற்கணிக்கப்படும் யிவர்கள் வாசமாயிருக்கின்ற வீதிகள் யிரண்டாயிரயோசனைப்பரப்புள்ளதாயிருக்கின்றது யிதுவுமல்லாமல்மாறியொலிக்கும் மணிகளைப்பெற்றதாய் மும்மதங்களையும் ஒழிக்கிவீதிட்டுப் பாகனைச்சிதிசெல்லுக் யானைகள்பெருக்கை என் னிரண்டு விழிகளாக்கொண்டெண்ணிக்கப்படுவதன்று யிவைகளிருப்பிடம் பதினுயிரயோசனை எல்லையுண்டுநவரத்தினமயமாய் பாரித்திராநின்ற தேர்கள்தொகையையும் நிதானிக்கக்கூடாது அவைகளைநிறுத்தும் கொட்டாரங்களும்பதினுயிரயோ

சனைப் பிறமாணமுண்டுமெல்லகதிமயூரகதியாதிய நடைகளைப்பெற்றஉத்
தமஅசுவங்களின்பெருக்கை எண்ணப்படுவதோ அவற்றினைக் கட்டியிரு
க்கின்ற சாலைகள்மாத்திரம் யிருபதினாயிரயோசனை விஸ்தீரணத்தினுமே
விட்டிருக்கின்றது கோபமேகுடிகொண்டிருக்கும் சுத்தவீராகிய அவு
ணப்படைகளின் விரிவை எண்ணிமுடியாததைப்போலவே அவர்கள்வாச
மாயிருக்கின்ற விசாலமாகிய தெருக்களையும் நிதானிக்கப்படவில்லை யி
வைநிற்கத் தத்தித்தாவி அலைகளையொப்பப்பாயும் புரவிகளினது வாயி
லிருந்துபெருகும் விலாழியென்னும் நுரைப்பெருக்கும் யானைக்கூட்
டங்களினது மத்தகத்தினுங் கன்னத்தினும் பீசங்களினும் நின்றொழு
கும் மதசெலங்களும் சேர்ந்துபெருகி நீலோத்பலத்துக்குச்சமதையாகி
யகரியவிழிகளைப்படைத்த ராசஸ்ரீகள் தங்கள்கணவருடன் பிணங்கிக்கழ
ற்றியெறிந்த முத்துமாலைகள் புஷ்பசரங்கள் கலவைச்சேறுமுதலிய குப்
பைகளைவாரி செலதாரைகளின்மூலமாகஓடி அகழியாகவளைந்திருக்கும்
விசாலம்பொருந்திய சமுத்திரத்திற்சேர்த்து வழிகளைச்சுத்திசெய்திருக்
கின்றது, இத்தகையசிறப்புகளைப்படைத்தயிந்தமயேந்திரபுரியைத்தாம
ரைக்கமலவாசியாகிய யிந்தபிரமனொருவனால் நிற்மித்ததெனச்சொல்லப்
படவில்லை, பிறகாசம்பொருந்தியவெற்றிவாளைத்தாங்குஞ்சூரபதுமன் சி
வபிரான் கடாட்சத்தினாற்பெற்றிருக்கின்ற ஆயிரத்தெட்டண்டங்களினு
மிரானின்ற பிற்மதேவர்களனைவருங்கூடி யோசித்துசிற்பநூலிற்குறித்
திருக்கின்றவிதிப்படிக்குச் செய்தமைத்ததாகக் காணுகின்றது, மேலும்
யிந்தநகரத்தைப்படைக்கும்பொருட்டு முந்திஇந்திரன்வாசஞ்செய்யும்
பொன்னுலகத்தையும் விஷ்ணுவிற்றிருக்கின்ற வைகுந்த நகரத்தையும்
பிரமனுலகையும் அஷ்டதிக்குப் பாலகரிருக்கின்ற நகரங்களே முதலிய
சிறந்தபதங்களைச்சிருஷ்டித்துப்பழகிய பின்புயிதனைப்படைத்ததாகவே
ண்டும் யிகுதன்றியிற் பூமியைவளைந்திரா நின்ற கடலினது பெருமையை
யொருபோதுங் கண்டுங்கேட்டுமறியாதவர்கள் ஒரு தடாகத்தை யரிதிற்
பார்க்கப்பெறுவராயின் அதனைவிசாலமாகவும் ஆழ்ந்துசெலசமத்தியா
கவுமிருக்கின்றதெனக் கொண்டாடுவதைப்போலப் பொன்மயமாகிய
தெய்வலோகத்தினையுந் திசைக்காவலர்பட்டணங்களையும்நாகலோகத்தை
யும்மிகுத்தசெல்வவளங்களைப்பெற்றிருக்கின்றதாகப் புகழ்வர் யிப்பட்
டணத்துக்குச்சமதையாகிய வைபவங்களைப்படைத்தநகரம் யாதிருக்கி
ன்றது சொற்னத்தினாலமைந்த உருளைகள் அச்சு மச்சு குத்துக்கால்கொடு
ங்கைமுதலிய அலங்காரங்களுடன் நவரத்தினமயமாகச் சொலித்திரா நி
ன்றதோரணிகளும் உரலையொத்த கால்களையும் மாறியொலிக்கும்
மணிகளையும் ரத்தினவகைகளினாற் சோடித்த முகபடாத்தினையும் பெ

ற்ற மும்மதங்களையும்பெருக்கியுலவும் யானைக்கூட்டங்களும் சவுரிகள்
பக்கங்களிற் சாமரைகளைப்போலசையவும் நான்குபாதங்களினும் வெ
ண்டையங்கள் கலிக்கவும் அலைகளை நிகர்த்துத்தாவி வட்டணைவருங் குதி
ரைப்பந்திகளும் சகலஆயுதபாணிகளாய்க் கண்களில் அக்கினிப்பொறிக
ள்பறக்க எக்காலத்தினுஞ்சண்டையையே விரும்பிக்கறுத்த திரேகத்தை
ப்பெற்றிருக்கின்ற பராக்கிரமசாலிகளாகிய அவுணவெள்ளங்களும்
யிடைவிடாமற் சமுத்திரகோஷ்டியைப்போல விசாலமாகிய தெருக்க
ளெங்கணும் ஆர்ப்பரித்தடர்ந்திருப்பதையோசிக்குமிடத்தில் அண்டங்க
ள்முற்றினுமிரா நின்ற சதுரங்கச்சேனைகளையும் சூரபதுமன் ஒருமிக்கத்
தருவித்து ஓரிடத்திற் சிறைபடுத்தியிருப்பதுக் கிணையாகவிருக்கின்றத
ல்லது மற்றொரு வுவமானங்களையும் பேசுவதற்கு எனக்குத்தோற்றவில்
லை மருதம்முல்லை குறிஞ்சிநெய்தல் பாலை எனச்சொல்லும் ஐவகைநிலங்
கள்முதலிய வடங்கிய பூமண்டலத்திற்பார்த்து மிகவும் நுட்பமாகவிருக்
கின்ற பரமாணுக்களும் சேனைகளினது நெருக்கில் நுழையப்படாமை
யாகவிருப்பதால் லட்சுமிகரம்பொருந்திய இந்தநகரவீதிகளெங்கும்நெ
ருங்கிப்போகவும் வரவுமிருக்கின்ற ரதகெசதுரகபதாதிகளின் பெருக்கி
னையாவராற்கணித்துச் சொல்லப்படும், கருநீரைப்பெற்ற கடலினை அக
ஸ்தியாகவலைந்திருக்கப்பெற்ற இந்தவீரமாமயேந்திரபுரிக் கிணையாகச்ச
கலச்செல்வச்சிறப்புகளையும் படைத்திருக்கின்ற நகரமொன்றிருக்கின்ற
தென உவமானக்குறிப்பினாலாவதுபேசுவோமெனினும் பெருமைபொரு
ந்திய ஆயிரத்தெட்டண்டங்களினும் அடங்கியிருக்கின்ற பற்பலவளங்
களையும் இந்தபட்டணத்திற் காணுகின்றதைப்போல மற்றொருபதங்
களினுமுண்டோ ஆதலால் இந்தநகருக்கிதனையே ஒப்புக்காட்டவேண்
டுமல்லது வேறுகிடையாது இவ்விதவைபவங்களைக் கிடைத்திருப்பதாயி
னும் ஒப்பனையற்றகீர்த்தியைப்பெற்ற இந்நகரத்திலடங்கியிருக்கின்ற ச
ம்பத்துக்களானவை சிறந்ததங்கத்திற் பதித்திருக்கின்ற வயிரத்தினின்
றெழும் ஒளியானது பலதிசையினும் வீசினும் கண்டவர்களுக் குதவி
யாகாததைப்போன்றும் லோபிக்குக்கிடைத்திருக்கின்ற செல்வத்தைநிக
ர்த்தும் யாவருக்கும் பயன்றாமல் தன்கினைக்கிடைத்திருக்கின்ற சுத்
தோதகம்-பால்-தயிர்-நெய் கருப்பஞ்சாறு-மது-இத்தகைய கடல்கள்
பிற்படஒருபிராணிக்கும் உபயோகமற்ற லவணசமுத்திரத்தினைச் சிற
ந்ததாக முன்னெடுத்துப்பேசும் புகழைவாய்ந்ததைப்போல விருக்கின்
றது இவையன்றியுங் கறுத்ததிரேகத்தினைப் படைத்த பூதபசாசடாகினி
க்கூட்டங்கள் பணிவிடைகளைச்செய்து போற்றிவர உயிர்ப்பலியுண்டு க
ளித்திருக்கின்ற காளிதேவியினது சன்னிதானத்திலிருக்கின்ற கற்பகத்த

ருவினது வளங்கள் பிறருக்குதவாமல்வியற்தமாயிருக்குந் தன்மையொத்து அலைகள்பெருத்த சமுத்திரமத்தியில் விளங்கும் மயேந்திரநகரத்திலடங்கியிருக்கின்ற சம்பத்துகள் உலகங்களிலிராநின்ற யாவருக்கும் பிறையோசனப்படாமலிருக்கின்றது யிக்குறையன்றியில் மற்றொருதாழ்வையுங்காணப்படவில்லை- கொலைத்தொழிலையே முக்கியமாகவிரும்பிச்செய்துவரும் பாதகனாகிய பானுகோபன் அக்கினிப் பிறவேசப்படுத்தப்பொன்னுலகமெரிந்ததெனச்சொல்லுகின்றது அபத்தம் அந்ததெய்வலோகமானது யிந்தமயேந்திரபுரியினது செல்வப்பெருக்கைப்பார்த்துப்பார்த்து யித்தகையவளங்கள் சிறப்பாகப் பேசிக்கொள்ளுத்தன்னிடத்தில்லையென்னும்வெழ்க்கம் மனதையலைத்துப்பாதிக்க அவ்வெப்பத்தினால் தகிக்கப்பட்டதாகவேண்டும் செயசாலியாகிய சூரபதுமன் சிவகடாட்சத்தினாற் பெற்றிருக்கின்ற அண்டகோடிகளிற் சொலித்திருந்த சூரியர்களனைவரும் அவன்கட்டளையின் படிக்கு யித்தலத்திற் சேர்ந்துகிரணங்களைப்பரப்பித் தமதுதொழில்களைச்செய்திருப்பதைப்போலயிப்பட்டணத்தினிடங்களெங்கணும் நவரத்தினமயமாகவிளங்குங் கோபுரங்களைக்கணிக்கப்படவில்லை மேலும் மாட்சிமைபெற்றபூலோகமுதற்சொல்லநின்றயேழுலகவடுக்குகளைப்போல விசாலமாகிய ஏழுநிலைகளைப்படைத்திருக்கின்ற கோபுரவாயல்களின் பெருக்கங்களுக்குமத்தியிற்சூரியசந்திரர்முதலிய நவக்கிறகங்கள் பதங்களாதியாகச்சேர்ந்திருப்பதுங்கிணையாக பற்பல அந்தஸ்துகளைப்படைத்துச் சித்திரங்களமைந்து ரத்தினமயமாகவிருக்கின்ற மாடமாளிகைகள் வானத்தையளாவவோங்கி யிருபாரிசங்களினும்நெருங்கி நூறுயோசனை நீளமும் ஆறுயோசனைப்பரப்பும் பெற்றிருக்கின்ற பற்பலதெருக்கள் முற்றினும்போகின்ற ரதகஜதுரகபதாதிகள் நடக்கயிடம்போதாமல் வானவழிக்கொண்டும் நெருங்கிச்செல்லுகின்றது, வீரபராக்கிறமசாலிகளாகிய அவுணர்கள் தங்கள்மீதிற் கிரணகாந்திதாக்குவதினாற் கோபித்து யிப்பட்டணவெல்லையைத் துரிதமாகத்தாண்டிப் போகும்படிக்குச் சவுக்குகளினால் அடித்தோட்டுவதைப்போல மேகசாலங்கள் பரவியிருக்கின்ற உன்னதமுள்ள கோபுரங்கள்முதலிய தலங்களில் நாட்டியிருக்கின்ற கொடிச்சீலைகள் காற்றினலைவிற்பட்டு படபடெனத் தாக்குவதினாற் சூரியன் தேரிற்பூட்டிய புரவிகள்விரைந்தோடுகின்றது மேலுப்பரிகைகளைப்பெற்றிருக்கின்றபளிங்குமாடங்களின்மீது வாசமாயிருக்கின்ற மின்னலையொத்த சாயலையுடைய தருணமங்கையர்கள் மஞ்சனமாடி புஷ்பங்களை யணியப்பட்ட அளகபாரங்களைப் புலர்த்தும்பொருட்டு அகிற்சந்தனப் புகைகளைக் கொடுக்குந்தோறுமேலிட்டு அம்மாளிகையைச்சூழ்ந்து மறைத்திருப்பதைப்பார்த்-

குமிடத்தில் நன்னெறிகளற்ற அவுணவீரர்கள் கிற்றிப்பிறயாவங்க ளனைத்தும் அவர்கள் தினந்தோறும் செய்துவருகின்ற பாதகவிருளினால் மங்கியடங்கிநிற்பதுக் கிணையாகக்காட்டுகின்றது-முத்து-பவழம்-வயிரம்-வயிடூரியம்-கோமேதகம்-புஷ்பராகம்-நீலம்-மரகதமெனச் சொல்லநின்ற நவரத்தினவிதங்களினால் வெவ்வேறாகச்சோதித்துப் பிறகாசித்திருக்கும் பற்பலநிலைகளையுடைய பொன்மயமாகிய உப்பரிகைகள் அணியணியாகப்பெருத் திருக்கின்றது, யிவையன்றியில் அழகிய சந்திரகாந்தப்பாறைகளினாற் சோதித்திருக்கின்ற சிலமாடங்களின் மேல்நிலைகளில் மேகவாளைவயிச்சித்திருக்கின்றதோகை மயில்கள் சஞ்சரித்திருக்கவும்சேற்கெண்டையையொப்பப் பிறழுந்துவிளங்கும்விழிகளைப்படைத்தஅவுணமங்கையர் உலவுகின்றதையோசிக்குமிடத்திற் களங்கத்தைப் பெற்றிருக்கின்ற சந்திரனை மேகங்கள் சூழ்ந்திருப்பதையொப்பக்காட்டுகின்றது சிறந்தசெம்மணிகளினாலும் பளிங்கினாலும் சோதித்திரானின்ற அரமனைகளின் மேற்புறத்தில் விளங்குகின்ற பொன்னடுக்குகளி னிடத்தில் தருணமங்கையர் தங்கள்பாதங்களிற் சத்தித் திரானின்ற சிலம்பு தண்டைகளிற் பதிந்த நீலமாதிய மணிகளின் காந்தியானது பரவிக்காட்டஅன்னங்களையொப்ப மெல்ல மெல்லப் பாதங்களைப்பெயர்த்துவைத்துலவுவதைப்பார்க்குமிடத்தில் வெண்டாமரை செந்தாமரை மலர்களினிடத்திற் பெருகுந்தேனைவண்டினங்கள் புசித்துச்சத்தித்திருப்பதுக்கிணையாகத்தோன்றுகின்றது, இதுவல்லாமல்வருணராசன்முத்துகளை யொத்தசன்னைம்பாஅரிசியைச் சுத்திசெய்துஉலையிலிட்டுப் போகவும் அக்கினிதேவன் சிறுகஎரித்துப்பதனாதிறநிறக்கிய அன்னத்துடன்பற்பலபதார்த்தவகைகளைச்சேர்த்துத் தேவகன்னியர்கள் பொற்பள்ளயங்களிற்படைத்து உபசரிக்க அவுணராசர் தங்கள்தேவிமாருடன் ஒவ்வொருபதார்த்தத்தை ஒருக்காலருந்திநெய்பாலுடன் யிஷ்டான்ன போசனஞ்செய்து களபகஸ்தூரிகளையணிந்து புஷ்பங்களைச்சூடி உல்லாசமாக மேடைகளினிடங்கடோறுங்களித்திருக்கின்றனர், செம்பட்டமயிறாவாய்ந்த காளையர்களும்செம்பஞ்சுக்குழம்பூட்டி விளங்கும் பாதங்களைப்பெற்ற விடைநாயகிகளும் கூட்டங்கூட்டமாகச்சேர்ந்து கலவித்தொழில்களைச்செய்து களித்தும் பிணங்கியும் ஊடல்தீரத்தும் யிவ்விதங்களாக யெத்தலங்களிலுங் காட்டுகின்றதால் மன்மதனுலகை மிதுவென்றே சொல்லவேண்டியிருக்கின்றது, யிதுவுமல்லாமற் சிலதாமுகர்கள் ரத்தினாபரணங்கள் முத்துமாலைகள்சொற்ணச் சரப்பளிகள் முதலாகிய உறுப்பைகளைத் தூதர்மூலமாகப் பரத்தையர்களுக்கனுப்பி அவர்கள்விரும்பி அங்கீகரித்ததைக்கண்டு களித்தும் வெறுத்ததைத் திருப்பியதைத்தெரிந்து வாடியுமிருக்கின்றனர், வண்

டினங்களானவை அவுணராசர்களணிந்திருக்கின்ற புஷ்பமாலைகளினிடத்தும் கன்னியர்கள் அளகபாரங்களிற் செருகியிராநின்ற புதியமலர்களினும் நவரத்தினமயமாக விராநின்ற மாடமாளிகைகளிற் றொங்கவிட்டிருக்கின்ற புஷ்பக்கொத்துகளிடத்திலும் பற்பலமலர்களைப்பெற்று பரிமளித்திருக்கின்ற நந்தவனங்களினும் தாமரைமுதலிய அலர்ந்திருக்குந் தடாகங்களினும் பற்வதாகிருதியாகவிருக்கின்ற யானைகளொழுக்கித்திரியும் மதநீர்ப்பெருக்கினும் யாழினைமீட்டிப் பாடுந்தோறும் அவ்வோசையினது யின்பத்தினிடத்தில் விருப்புற்று அவர்களுணர்வானது அதைத்தழுவி உலவுவதைப்போல ரீங்காரத்தொனிகளைச்செய்துதிரிந்துதிரிந்து தேனையுண்டுதிரிகின்றது யிவையன்றியிற் றனக்கொருவரும் நிகரில்லாதபுசபெலபராக்கிரமசாலியாகிய சூரபதுமன் கட்டளையின்படிக்கு யின்னகரத்தில் உலவுகின்றதென்றலானது தெளிந்த நீரைப்பெற்றிருக்கின்றசமுத்திரத்திற்படிந்து கற்பகம் பாரிசாதமுதலிய மலர்ப்பெருக்கினையுடைய நந்தவனங்களிலுலவி நவரத்தினமயமாகவிளங்கும் உப்பரிகைகளிலிராநின்ற சன்னல்களின் மூலமாய் மெல்லநுழைந்து மதுபானஞ்செய்தவரைப்போல அசைந்தசைந்துலவுகின்றது, இதுவல்லாமல்யிப்பட்டணத்தில் அணியணியாகவிளங்கியிருக்கின்றஉப்பரிகைகளின்மேல்நிலைகளில்வாசஞ்செய்கின்றஅவுணமங்கையர் நவரத்தினமயமாகிய ஆபரணங்களையும்புஷ்பமாலைகள் முதலாகிய அலங்காரங்களைச்செய்துக்கொண்டு அதனைப்பார்க்கும்பொருட்டுச் செந்தாமரையையொத்த கரங்களைநீட்டி வானத்திற்செல்லுஞ் சூரியனைப்பற்றிக் கண்ணாடியாகக்கொண்டு தமது அலங்காரங்களைக்கண்டு களித்துமீட்டும் வானத்தில் வீசுகின்றனர், சித்திரங்களெழுதியிராநின்ற பொன்மயமாகிய மேடைகளின் மீதிற்கணவருடன் சரசசல்லாபங்களை விளைத்திருக்கின்ற மங்கையர்கள் ஏதோசில குற்றங்களைப்பாராட்டிப்பிணங்கி கணவர்களிட சிவந்தசிகையைப்பற்றியிழுத்து செம்பஞ் சூட்டிய பாதங்களினு லுதைக்க அதைக் கட்டியிருந்த பொற்கயறுகளறக்கண்டு சீக்கிரமாகத்தமது கரங்களை மேகத்தி னிடத்தில்நீட்டி அசிவிராநின்றமின்னற்கொடியையெடுத்து விரிந்தலைகின்ற சிகையைக்கட்டிக்கொண்டு தேவியர்பிணக்கைநீக்கிக் களித்திருக்கின்றனர், ஆரவாரங்களைச்செய்து பெருகுகின்ற வானகங்கை தவழத்தக்கவுன்னதமுள்ள பொன் உப்பரிகைகளின் மேனிலைகளிலுலவுகின்ற சுந்தரவதிகளாகிய கன்னியர்கள் யாதொருகுறைபாடுகளுமில்லாமற் பாங்கியர் சேடியர் ஏவல்களைச்செய்து வரத்தக்கதாக காலங்கழிக்கநினைந்து ஆகாயத்திலுலவும் மேகங்களிலிருக்கின்ற இடிகளையும் நட்சத்திரங்களையும் வாரியெடுத்துக்கொண்டு அம்மானைகளாடியுங் கழங்குகளுருட்டியும் அவற்றின்

மூலமாக விழிகள்சுழல விளையாடுகின்றனர், பர்வதங்களுக் கிணையாக்வோங்கிப் பொன்சிகரங்கள் விளங்கச் சித்திரப் பிறதமைகள் வெண்சாய்மரை முதலிய தொழில்களைச்செய்துவரும் ரத்தினமயமான மாளிகைகளின்மீதில் வாசஞ்செய்கின்ற பெண்கள் தங்கள்பிள்ளைகள் அழுகின்றதை நீக்கும்பொருட்டுசூரியன் தேரிற்பூட்டிச்செல்லும்பச்சைக்குதிரைகளேழையும் அவிழ்த்து அவர்களுக்குக்கொடுத்த காலத்திற் சூரியன்வந்து சூரன் கட்டளையின்படிக்குத் தன்தொழிலை நடத்தக்காலதாமதமாகுதென்று யிதங்கள்பேசி மெத்தனக்குதிரைகளை விடுவித்துக்கொண்டு பழைய படிக்குத் தன்கதியிற் போகின்றனன், மகரதோரணம் கொடிகள் நாட்டி சொர்ணமயமாகிய சன்னல்கள் பவழவுத்திரங்கள் மரகதக்கொடுங்கைகள் முதலிய சிறப்புகளையுடைய மெத்தைகளின்மீதிற் பாங்கியர்களுடனிருக்கின்ற மங்கையர்கள் கடக கங்கணங்க ளணிந் திரானின்றகரங்களை நீட்டி மேகங்களிலிராநின்ற மின்னல்களையும் யிடிகளையும்எடுத்து சிரோரத்தினங்களையிடையிற்கோத்து அரைச்சலங்கையாக தமதுபிள்ளைகளுக்கணிந்தும்வானத்திற்செல்லும் மேகத்தைப்பற்றி வஸ்திரமாகயிடையிற்கட்டி விளையாடுவதைக்கண்டு களிக்கின்றனர், நவரத்தினமயமாகியபொன்மாளிகைகளின் மேற்றலங்களிற் பளிங்கினாற் சோடித்து நிலைக்கண்ணாடிகள் தாபித்திராநின்ற மாளிகைகளினிடங்களிற் பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருக்கின்ற தருவாயிற் சூரியன்உச்சியில்வரக்கண்டு யிதுகனிந்தகனியென்றுபற்றி வாயிலிட்டுக்கடித்து சுடுகைக்காற்றுமவெறிந்து அழக்கண்டதாயர்கள் சீக்கிரமாய் ஆகாயகங்கையைக் கரங்களிலேந்திவாயைக்கழுவிக் குடிப்பித்தபின்பு சொர்ணமஞ்சத்திற்கிடத்தித்தாலாட்டி உறங்கச்செய்கின்றனர், இந்நகரைக்கண்டு வானநாடுவெட்கி யிறங்கியிருப்பதுக்கொப்பாக விசாலமாயிருக்கின்ற சொர்ணமாடங்களின் மீதிற் சஞ்சரிக்கின்ற ரூபலாவண்ணியமுள்ள ராசபத்தினிகள் கண்டவர்கள் களித்துப் புகழத்தக்கசுந்தரமுள்ள தமது பிள்ளைகள் கிலேசிக்கின்றதருவாயில் வானத்திற்போகின்ற சூரியன்கரத்திற் கொண்டிருக்கும் தாமரைமலரைப்பறித்துக் குழந்தைகளுக்குக்கொடுத்து ஏயப்படுத்தி யிருக்கின்றனர்,மற்றொருபுறத்திலிராநின்ற சித்திரவிசித்திரமாகப்படைத்துவிளங்கும் பாரித்தமேடைகளின்மீதிற் சர்வாபரணபூஷிதைகளாகக் களித்தக்காமலாகிரிமிகிச்சோபப்படுகின்ற அவுணமங்கையர் வானத்திற்போகின்ற தேவர்களைத் தாமரைமலரையொத்த கரங்களை நீட்டிச் சடைகாட்டியழைத்தகாலத்தில் அவர்களைக்கூட மனமில்லாமல் மறுக்கக்கண்டுபயமுறத்தும்பொருட்டு கள்ளர் கள்ளரெனக்கூவ அதற்கஞ்சிச் சம்மதித்துச் சமீபத்தில்வரும்போது அவ்வோசையைக்கேட்டுவந்த தங்கள் கணவரு

க்கு நம்மிடகுழந்தைகளுடன் விளையாடியிருக்கின்றனவெனச் சொல்லி யனுப்பிய பின்பு மன துக்கிஷ்டமாகக் குலவியிருக்கின்றனர், இப்பிரகாரம் விண்ணவர்படுந் துன்பங்களை நினைக்க மனம் வருந்துகின்றது சொர்ணமயமாகப் பரந்திருக்கின்ற உப்பரிகைகளினிடத்திற் களித்திருக்கின்ற தருணமங்கையர் அழைக்கின்ற தருவாயில் வந்தால் பலவத்காரமாகக்களவுப் புணர்ச்சியைமுடிக்கின்றனரென்று அத்திசையைநோக்கப் பயந்தும் அப்படிக்குமறுக்கின் என்னகொடுமைகளைச் செய்விப்பரோவென வாராமலிருக்க நடுங்கியும் கரவிடமாகத் தமதுமங்கையர் புணர்வதை அவுணர்காணுவராயிற் கொல்வரோ யிதற்கென்செய்வோமென்றுவாடியும் யிப்படிக்குப்பலவிதங்களிலும் அச்சமானது மனதைப்பாதிக்கநோகின்றனர். இந்ததீனராகிய தேவர்க்களென்செய்வர் யிஃதன்றியிற் சந்திரகாந்தங்களினுற்செய்து முத்துமாலைகளைத் தூக்கியிராநின்ற மேலுப்பரிகைகளில் வாசஞ்செய்கின்ற தருணமங்கையர்கள் தங்கள் குமாரர்கள் ஓயாமல் அழுகின்றதருவாயிற் சூரியன்தேர்வரக்கண்டுபிள்ளைகளை அதன்மீதிலேற்றி சிலதூரம்போய் அழுகைஓய்ந்தபின்பு கொண்டுவந்து விடக்கடவையெனக்கட்டளை யிடுகின்றனர், மூதேவிக்கிச்சமதையாகிய அவுணமங்கையரிட்ட ஏவல்களைச்செய்தும் அவர்கள் உறங்கும்போது பாதங்களைத்தடவியும் தோழிகளைப் போலத் தேவகன்னியர்கள் ஊழியங்கள்செய்கின்றனர், ஆதலாற் சமுத்திரஞ்சூழ்ந்த யிந்தஉலகத்தில் வேண்டியபேறுகளைத் தருவதற்குத் தவத்திலுமேலான தொன்றில்லை யிவையன்றியிற் பஞ்சகற்பகத்தருக்களும் சிந்தாமணி காமதேனுவும் சங்கநிதி பதுமநிதியாதியானவை யிந்தமயேந்திரபுரியில் வாசஞ்செய்கின்றஅவுணமங்கையர்கள்யிருக்கின்றதலங்களிற்சென்றுவேண்டியவஸ்துக்களைக்காலங்களில் உதவிவருகின்றது, யிதுவுமல்லாமல் வானத்தையளாவிச்சொர்ணமயமாகவிருக்கின்ற மேலுப்பரிகைகளில் வாசஞ்செய்கின்ற காமிகளாகியபெண்கள்சூர்ன்தங்கை அசமுகியைப்போல வானத்திற்செல்கின்றதேவர்க்களிற் றங்களுக்கு யிஷ்டமானவர்களைப் பலவந்தமாகவலித்துகாமவிகாரத்தினுற் கட்டியணைத் தமுத்தமிட்டுபஞ்சணைமெத்தையிற்சேர்ந்துகிறீடித்து தமதிஷ்டந்தீர்ந்தபின்பு அவர்களைவிடுகின்றனர், ஆயிரங் கிரணங்களைப்பரப்பி உலகங்களை விளங்கித்திரிகின்ற சூரியனெனவன் முன்னம் பானுகோபனுல் கட்டுண்டபடியால்பயந்து தனகிரணசாந்தியானது உப்பரிகைகளின் சாளரவாயல்களின் மூலமாக நுழையவொட்டாமற் சுருக்கிக்கொண்டு போகின்றனன், நவரத்தினமயமாகிய மேல்நிலைகளில் வாசஞ்செய்கின்ற மங்கையர்கள் கணவரிடத் தாடியெறிந்தமுத்துமாலை புஷ்பசரங்கள் முதலாகிய குப்பைகளைவாயுதேவன் காலங்களி

ல்நீச்செசுத்திசெய்யவும் வருணாசன் பனிநீரிற்கலவைச்சாந்தைக் கூட்
டித்தெளித்துப் புழுதிகளையடக்கித் திரிகின்றகாலத்தில் உண்டாகுஞ்சே
ற்றினைச்சூரியபகவான் புலர்த்திப்போகின்றனன், யித்தகைய உபசார
ங்களைப்பெற்று யிந்தநகரவாசிகள்களித்திருக்கின்றனர், திருப்பாற்கடலி
ல்வடவாலிலையின்கண் லட்சுமி சமேதனாகப் பள்ளிகொண்டிருக்கும் ம
காவிஷ்ணுவைப்போல வானத்தையளாவநிற்கும் பளிங்குமாடங்களின்
மேற்புறத்தில் மேகங்கள் மின்னலைவீசி நித்திரைசெய்கின்றது யித்தகை
யசிறப்புகளைவாய்ந்த மயேந்திரபுரியினிடத்திலிராநின்றராசவீதிகளிலு
ம் ஆலயங்கள் முதலிய தலங்களிலும் எக்காலத்தும் பிள்ளாங்குழலினோ
சையும்-யாழினதுநாதமும் - திருச்சின்னம் - காளம்-சங்கம்- சங்கீத
மேளமுதலிய-பதினெண்மேளவாத்தியங்களின்முழக்கமும்-சரிகமபத
நிசவெனப்பாடுகின்ற கண்டத்தொனியும் யிடைவிடாமற் செய்துவருந்
திருக்கலியாணமாதிய மகோச்சவங்களிலெழுகின்ற ஆரவாரங்களும் ம
ங்கலபேரி செயபேரியினதுதொனியும் பெருத்துச் சமுத்திர கோஷ்டத்
திலும் மேலிட்டு சத்தித்திருக்கின்றது பற்வதாகிருதியாக விருக்கின்ற
யானைக்கூட்டங்கள் போகுந்தோறும் பெருகுகின்ற கன்னமதம் கபோ
லமதம் பீசமதமென்னும் வெள்ளங்கள் பெருத்திருக்கின்றராசவீதிகளி
ல்மன்மதனைப்பழித்த சுந்தரமுள்ள அவுணவீரர்களும் இலக்குமிக்கு
மேலிட்ட வடிவுள்ளமங்கையர்களும் தங்களிற் களிமிகுதியினால் வீசுஞ்
சுண்ணப்பொடிகளானவைபடிந்து சேருக்கவும் கன்னியர்கள் கணவரி
டத்தூடலினாற் கழற்றியெறிந்த ரத்தினாபரணங்கள் முத்துமாலை புஷ்ப
சரங்கள்விழுந்து பழையபடிக்குப் பூமியாக்கவும் யிவ்விதச்சிறப்புகளை
ப்பெற்ற யிப்பட்டணவீதிகளினெங்குந்தோற்றுகின்றது, நவரத்தினம
யமாகிய உப்பரிகையின்மீதில் உலவியிருந்த அழகுள்ளகன்னிகை ஒரு
த்தியானவள் மிகுத்தசுந்தரமுள்ள ராசகுமாரன் அவ்வீதியில்ரிஷபத்தை
ப்போலக்கெம்பீரமாகநடந்துபோவதைக்கண்டு மோகித்து அவனிடத்
தளவற்ற யின்பத்தைக் கொண்டவளாய் வெட்கத்தினால் அதனைத்தோ
ழியர்பாங்கியரிடத்தில் வெளியிடாமல்மறைத்து காமவிகார மேலிடத்
தீயிற்பட்ட புஷ்பக்கொத்தைப்போல மனம்வாடி வருந்தி மயங்குகின்
றகாலத்தில் அத்தோற்றமானது முகமுதலான குறிகளினால்வெளிப்படக்
காட்டத்தெரிந்து ஓமனதே என்னாசைப்புருடனிடத்திற் றூதுசென்று
ஒருமைப்படுத்தாமல் ஒளித்திருப்பது உனக்கழகோவென மிகவுந்தளர்
ந்து கனிவகைகளைக்கொடுத்து வளர்த்துவருகின்ற கிளிகளைப்பார்த்து யிச்
சரீரத்தில் ஆதிதொட்டிருக்கின்ற மனமானது யிப்படிக்கும் வஞ்சிக்க
லாகுமோ சொல்லென்று முறையிடுகின்றனள், தன்னுடையதங்கைமுதலி

ய ஆபரணங்களையணிந்து விளையாடித்திரிகின்ற ராசகுமாரர்கள் மான்
குட்டிகளைப் பூட்டியோட்டும் கொடிகளாகிய சிறப்பினைப்பெற்ற சிறு
தேர்களினது உருளைகளின்பொன்னை யிவ்வீதிகளிற் பரப்பி யிருக்கின்ற
சந்திரகாந்தப்பாறைகளினும் இந்திரநீலக்கல்லினிடத்திலுந்தேயக்கிறி
க்கின்றபடியால் மண்ணாசை பொன்னாசை பொருளாசையென்னுந்துட
க்கில் அகப்பட்டுழலுகின்ற மனிதர்களைப் பொன்னாசை கொண்டவர்க
ளென்று வெறுக்கப் போதுமோ ஐம்புலன்களைத் தன்வயப்படுத்தியவ்
துநிச்சயத்தை யறிந்திருக்கின்ற தபசிகளும் யிவ்வெறுக்கையைக் காண
ப்பெறுவாராயில் யிச்சிப்பொனச்சொல்லவேண்டும் ஆதலாற் பொருளா
சையை யொழிந்தவர்களிராது அவாவை நீங்கிய மகத்துக்களும் யிந்தப்
பட்டணத்திலிராநின்ற செல்வங்களைப்பெற்று வாழும்படிக்கு தவங்க
ளைச்செய்வர் அளவற்றகாலம் அரியதவங்களைச்செய்தவர்களல்லது யிந்த
சம்பத்தைப் பெறமாட்டார்கள் யிவ்விதவளமைகளையுடைய மயேந்திர
த்திலிருக்கின்ற கிளியையொத்த குதலைச்சொற்களைப்பேசுகின்றபிள்ளைக
ள் விளையாடுமுன்னிலையில் யிறைக்கின்ற சுண்ணப்பொடிகள் அவ்வீதிக
ளிற்போகின்றயானைக்கூட்டங்களினிடத்துண்டாயோடும் மதப்பெரு
க்கிற்படிந்து புலர்த்தியும் வானத்திலோங்கி ஆகாயகங்கையைச்சேருக்
கியும் வருகின்றது சூரபதுமன் ஆக்கினையின்படிக்கு ஆகாயகெங்கையா
னது யிந்தபட்டணத்திலிராநின்ற ராசராசன்முதலிய சகலருக்கும் தாக
சாந்திக்குதவியாகப்பரவியும்சுத்தசெலசமுத்திரமானது யிப்பதியிலிரு
க்கின்றவர்கள் ஸ்தானமுதலிய நித்தியகருமங்களைக்கழித்துக்கொள்ளும்
பொருட்டு மாடமாளிகைகள் வீதிகள் சோலைகள் முதலிய யிடங்களிற்
குளங்கள் தடாகங்கள் ஓடைகள் மடுக்கள் ஏரிகள் செலதாரைகள் ஆகிய
உருவுகொண்டு தாயைப்போல உதவிவருகின்றது ஆசிரியனிடத்தில்தனு
ர்விஞ்சையின்படிக்கு விற்பயிற்சிகற்கின்றவர்களும் வாள்வரிசையையி
டசாரிவலசாரி முறைப்படிக்கு வட்டணைவருபவரும் கதைப்பழக்கத்
தைகற்கின்றவர்களும் மற்றபடைகளின் திறங்களைத்தெரிகின்றவர்களும்
ஆனையேற்றங் குதிரையேற்றம் தேரேற்றம் யிவைகளைக் கற்கின்றவர்களும்
அனற்பொறிகள் விழிகளிற் பறக்கத்தக்கதாக மல்லயுத்தஞ் ,செய்பவரு
ம்யிந்திரசால மயேந்திரசாலங்களை பழகுகின்றவர்களும் திருக்கலியாண
முதலிய காரியங்களைக் குறித்துப் பேசப்போகின்றவரும் வருகின்ற
வரும் யிப்பட்டணத்தெல்லையில் விழிகளுக்குத்தோற்றுகின்றவனாயிந்
நேத்திரோற்சவமாகக் காணப்படுகின்றனர், சூரபதுமன் ஆதியிற்செய்
திருக்கின்றதவமுயற்சியினால் யிந்தநகரத்திலிருக்கின்றவர்களில் நரம்புக
ள்தோற்றவாடியும் தசையில்லாமல் உலர்ந்துவதங்கிய தேகத்தையுந்

ரைதிரைமூப்புகளினால் வருந்திக் கோலூன்றித் தள்ளாடி நடக்கும்விருத்தப்பருவத்தினைப்பெற்றும் எமதருமனாக்கினையிற் பட்டுச் சாகின்றவரும பிணிகளிற்பட்டுவருந்தியும் வறுமையாளராய் உழலப் பட்டவர்களையும் காணப்படவில்லை, ஆதலாற் றவத்தினும் உறுதியான தொன்றுமில்லை சூரபதுமன் ஆக்கினைக்குட்பட்டுப்-பால்-தயிர்-நெய்-கருப்பஞ்சாறு-மது-யித்தகையசமுத்திரங்கள் தமது விசாலமாகிய உருவங்களைச்சுருக்கியிந்தமயேந்திரபுரியிலிருக்கின்ற உப்பரிகைகள் மேடைகள்இல்லங்கள் வண்டசாலைகள்முதலிய தலங்களில்தனித்தனியாக குளங்கள்கேணிகளாகவிருந்து யிப்பட்டணத்திற் றங்கியிருக்கின்றவர்களுக்குக் காலங்களில் வேண்டியவைகளை வழங்கிவருகின்றது லட்சுமீகரம் பொருந்திய யிவ்வீதிகளிலிராநின்ற சிலஅவுணமங்கையர்கள் கள்சாராயயைச்கலந்துண்டவெறியினால் யிடையிற்றரித்திருக்கின்றபட்டாடைநழுகிப்போகநாணத்தையும்போக்கிக் கடகங்கணங்களையணிந்துசெந்தாமரைபோலவிளங்கும் கரங்களைக்கொட்டிக்கொண்டு கண்டவர்கள் களித்து நகைக்கத்தக்கதாகக் குரவையாடல்களைச் செய்துலவுகின்றனர், யிந்தவிசாலமாகியவீதிகளில் வாசஞ்செய்கின்ற வடிவுள்ளக்காளையரும் திலதப்பொட்டணிந்து சந்திரனையொப்பப் பிரகாசித்திருக்கின்ற முகாரவிந்தங்களைப்பெற்ற தருணமங்கையரும் அலங்கரித்துக் கொண்டு நிலைக்கண்ணாடிகளிற் பார்த்து மனதுக்குரம்மியப் படாமல் அடிக்கடிக்குக் கழற்றிபெறிகின்ற நவரத்தினமயமாகிய பணிகளும் பொன்னுடைகளும் கற்பகமலர்மாலைகளும் கலவைச்சாந்துகளும் நெருங்கிச் சகலரும்புகழ்கின்றபொன்னுலகத்தைப்போல எக்காலத்தும் ராசவீதிகள் விளங்கி யிருக்கின்றது சொர்ணமயமாகிய தண்டைசதங்கையாதிய ஆபரணங்களையும்புஷ்பமாலைகளையும் அலங்கரித்துக்கொண்டு தோழியர்களுடன் கலந்து அழகிய வீதிகளில் விளையாடித்திரிகின்ற சிறுபெண்கள் பொன்முச்சில்களில்முத்துக்களை வாரிவாரிக்கொழித்து வருமுன்னிலையிற் பெருகுந் துகளானது யிப்பதிமுற்றும்பரந்து சமுத்திரத்தைச் சேருக்கிக் கழிகளைத்திடர்செய்துமீறி பொன்னுலகையும் பூழிபட்டுவருந்தச் செய்கின்றது யிந்தமயேந்திர புரியில் வாசஞ் செய்கின்ற ராசகுமாரர்கள் செம்மலரினாலும் வெண்மலர்களினாலும் சோடித்திராநின்ற பந்துகளைவானத்தெறியுந்தோறும் மேலோங்கிமறிந்து வீழ்வதைப்பார்க்குமிடத்திற் சந்திரசூரியர்கள் தங்கள் நிலைகளிற் றப்பியிறங்குவதையொத்துக் காட்டுகின்றது புசவெலபராக்கிரம சாலிகளாகிய அவுணவீரர்கள் மதுவுண்ட வெறியினாற் கள்ளைப்பொற்கிண்ணங்களில் நிரப்பிக்கொண்டு பொற்பஞ்சரங்களில்வளர்கின்ற ஆண்கிளிகளுக்குக் குடிப்பித்து ஏமத்திலின்புறச்செய்துமனதுக்

கினிய ஆண்வருந்திப் பார்த்திருக்கப்பேடை அன்னங்களின் மீதேற்
றிப்புணரச்செய்து அதனைக்கண்டு சரீரம்பூரித்து நகைத்துத் தாங்களுங்
காமுற்று தேவியரைவலிதிற்புணர்ந்தின்புற்றுக்களித்திருக்கின்றனர். பா
னுகோபன் சிறைசாயத்து வந்தடைத்திருக்கின்ற தேவர்க்கள் சிரங்களி
னணிந்திருந்த வயிரமுடிகளைச் சிலகாமுகர்பறித்துக்கொண்டு அதிற்ப
திந்திருக்கின்ற ரத்தினங்களை யூடலினாலுதைத்துச் சிவந்திருக்கின்ற தங்க
ள் சிகையினிடத்திற் செம்பஞ்சூட்டிய பாதங்களின் குறியைக் காட்டி
யிருக்கின்ற பரத்தையர் தரிக்கின்ற பாதுகைகளில் அழகுபெறப்பதிந்து
பெருமதியாகக்கொடுத்துபிணக்கைத்தீர்த்துக் குலவியிருக்கின்றனர், வி
சாலமாய் நீண்டிருக்கின்ற யிவ்வீதிகளிற்றிரிகின்ற சிலகாமுகராகிய அ
வுணர்கள் அக்கினிமுதலிய தேவர்க்கள் வேதப்பிராமணர்பெரியோர்கள்
பந்துக்கள் சாட்சியாகத் திருமணஞ்செய்த கற்புடையதேவியர் வருந்தி
வாடத்தக்கதாக அவர்களை விரும்பாமற் பிறர்நகைத்து நிந்திக்கப்பிரா
ணனுக்குத்துணிந்து அன்னியர் தேவியர்களிடத்துங் காமுற்றுச்சோரத்
திற்புணர்ந்துவருகின்றனர், இக்கொடியசெய்கையையும் என்விழிகளினு
ற் பார்ப்பதோவென்று வீரவாகுதேவர் வருந்தினவராய் அப்புறம்நோ
க்குமிடத்தில் இழைநுழைய யிடம்பெறாமல் விம்மிநெருங்கித்தேமல்
பரந்து முத்துமாலை மோகனமாலைகளைத் தரித்துத் தங்கக்கலசங்களைப்
போலப் பொலிவாயிருக்கின்ற கொங்கைகளைப்பெற்ற இயக்கமங்கை
யரும் கண்டவர்கள் மனதைக்குழைந்து வாடச்செய்யும் வனப்புள்ள அர
ம்பையர்களும் மனதி லிரக்கமென்ப தில்லாத கடினசித்தமுடைய அவு
ணப்பாவையரும் அரக்கர்பெண்களும் மற்றுமிரான்ற சுந்தரமுள்ள தரு
ணமங்கையர்கள் கணிகையர்களாக மாடமாளிகைகளிலிருந்து காமுகரா
கிய அவுணவீரருக் கின்பத்தைக்கொடுத்துக் கொண்டு வருகின்றனர், இ
வையன்றியும்சந்தன களபகஸ்தூரிக்குழம்பும் கதம்பப்பொடியும்பரிம
ளமிகுத்த புஷ்பச்செண்டுகளும்சுகந்தமலர்மாலைகளும்பனிநீர்த்துவலைக
ளும் மற்றுமிரானின்ற சின்னங்களைக்கொண்டு சுந்தரவதிகளாகிய பரத்
தையர்கள் காளைப்பருவத்தினராகிய அவுணராசகுமாரர்களுடன்வங்கண
மாகக்கூடி விளையாடுகின்றதைப் பார்த்தவர்கள் மனதைமயக்கி அவர்கள்
மைவலிற்படச்செய்வதால் அனங்கனாகிய மன்மதன் உருக்கொண்டு வா
சமாய்த் தன்றொழிலைச் செய்திருக்கின்ற வீதியிதுதானேவென்று ஆச்ச
ரியமாகப்பேசினவராய் அழகிய அன்னப்பட்சிகள் பதுமராகத்தையொ
த்த நிறத்தினைவாய்ந்த மாடப்புறாக்கள் பசியகலாபங்களைப்படைத்த ம
யிலினங்கள் பஞ்சவர்ணக்கிளிகள் மயினுக்கள் முதலிய சிறந்தபட்சி
சாதிகளனைத்தும் யிந்தநகரத்திலிருக்கின்ற மங்கையர்கரங்களிலும்மாட

மாளிகைகளிடங்களிலும் வாசமாய்ப் பொற்கிண்ணங்களிற் பால்சனிகளைத்தாத்தின்று களித்திருக்கின்றது யிந்தவிரமாமயேந்திரத்தில் வாசஞ்செய்கின்ற ராசகுமாரர்கள் தாங்கள் திருமணமுன்னிலையிற் கிடைத்தமங்கையர்களிடத்திலும் காந்தற்வவிவாகமூலமாகச் சம்பாதித்தயாவையர்களிடத்திலும் காமுற்றுத் தேடிவைத்திருக்கும் தருணமங்கையர்களிடத்திலும் சுந்தரவதிகளாகிய கணிகையரிடத்திலும் வண்டினங்கள் பற்பலமலர்களினிடத்திறங்கித் தேனையுண்டுகளிப்பதைப்போல யின்பநலங்களையனுபவித்து யிஷ்டாலாயமாக விருக்கின்றனர், யிவையன்றியிற்சில கன்னியர் செம்பஞ்சுக்குழம்பினாற் சித்திரங்களையெழுதப்பட்டு பொற்றண்டைசதங்கையணிந்து செந்தாமரைமலரையொப்ப விளங்கும் பாதங்கள் மத்தளத்தைப்போலச்சதிமுறையில்மதிக்கவும் சொற்ணக்கச்சினாலணையப்பட்டு முத்தாரங்கள்முதலிய பணிதிகளைத்தாங்கி யிறுமாந்து எமனையொப்பக் கண்டவர்மனதைவாட்டும் கொங்கைகள் தாளங்களைப்போற்குலுக்கவும் கோகிலங்களை நிகர்த்த வசனித்தக் கருப்புவில்லையுடையமன்மதனும் மயங்கும்படியாக உத்தரியப் போர்வை சரிந்து தனங்கள் தோற்றத் தங்கள் மனதுக்கினிய கணவருடன்கலந்து கொண்டாடித்தும் குரவையாடல்கள்முதலிய வேடிக்கைகளைச்செய்துகொண்டு யிணைபிரியாமலிருக்கின்றனர், நவரத்தினமயமாக விளங்கும் மேடைகளின் மேல்நிலைகளில் வாசஞ்செய்கின்ற சுந்தரவதிகளாகிய சிலகன்னியர்கள் தங்கள் கணவருடன்சொக்கட்டான்முதலியவிளையாடல்களைச்செய்துகொண்டுவரும்போது காமவிகாரமேலிட்டுத் தம்பதிசமேதராய் பொன்மஞ்சங்களின்மீதுசேர்ந்து யிரவுபகலென்றெண்ணாமல் மதனநூலின்படிக்குக்காதலிலைகளைச்செய்து கொவ்வைக்கனியையொத்த யிதழ்வெளுக்கவும் சந்திரனையொத்த திருமுகமண்டலத்தில் முத்துகளைப்போல வியர்வை காட்டவும் யிருவர்மனமும்ஒன்றுபடப் புணர்ந்து களித்திருக்கின்றனர், சிலகன்னியர்கள் தங்களிஷ்டதேவதைகளை மனைகளில்நிறுத்தி புஷ்பங்களைக்கொண்டு அரிச்சித்து ஆடுகடாமுதலிய பலிகளைக்கொடுத்து தூபங்களைக்காட்டி முற்றிபபின்பு பறைமுதலிய வாத்தியங்கள்.முழங்க அத்தேவதைஉருவைக்கொண்டுபோய் கங்கையிற்சேர்த்துத் திரும்புமுன்னிலையில் தெய்வமருளினாற் கூத்தாடிக்குறிகள்சொல்லி தங்கள் மனைகளிற் சேருகின்றனர், வெற்றிமாலைதரித்த வேலையொத்த விழிகளைப் படைத்த ராசகன்னியர்களும் காமனும் நாணத்தக்கவடிவுள்ள ராசகுமாரர்களும் வாசஞ்செய்கின்ற பொன்மேடைகளின் மேற்புறங்களில்நாட்டிஅசைந்திருக்கின்ற தோரணங்களானவைமகரமச்சங்களுலவியிருக்கின்றசமுத்திரத்திலோடும் கப்பல்களில் நிறுத்தியிருக்கின்ற பாய்மரங்களைப்போலக்

காட்டநின்றது,சித்திரபடாம்பொருந்திய மத்தகத்தையுடையயானைகள் குதிரைகள் தேர்கள் வீரர்கள் சுற்றிப்போகவும் ஈட்டி கதை முதலியபடைகளைக்கொண்டு பரிசனர்காத்து நடக்கவும் முரசங்கள் பறைகளை முன்னம்முழக்கிநடக்கவும் யிதன்மத்தியில்ராசபட்டத்தானைகள் அளவற்றது அரமனையை நோக்கிப்போகின்றது, தேன்கள்சொரிந்து வண்டினங்கள் மொய்த்திராநின்ற புஷ்பமாலைகளைத் தரித்திருக்கின்ற சிகையினையும் மேகத்தைப்போன்ற கறுத்தகிரோசத்தினையும் வாய்ந்த சிலஅவுணவீரர்கள் பல்லக்கு குதிரை யானை யிவற்றின்மீது ஆரோகணித்து கொடி சொடைமகரதோரணம் விருதுகள்மங்கலமுரசம்சின்னமுதலியபரிவட்டணைகள்முன்செல்ல ராசவீதிகளிற் பவனிவருகின்றனர்,யித்தகையசிறப்புகள்வாய்ந்த யிந்தபட்டணத்தி லிருக்கின்ற பலருக்கும் உபையோகமாகும்பொருட்டு சிங்கம் புலி கரடி யானை பன்றி மான் கடமை யித்தகைய பருத்தமிருகங்களின் ஊன்களைப்பாரித்த சகடங்களில் நிரப்பிக்கொண்டு தெருக்கள்தோறுந் திரிந்து திரிந்து அவரவர்களுக்குச் சம்மதமானபண்டங்களைக் கொடுத்துக் கொண்டு போகின்றனர், மேகங்கள் சஞ்சரிக்கின்ற உன்னதமுள்ள கோபுரவாயல்களும் பொன்மதிலும் பல சிகரங்களும் நிலைகளும் சோலைகளும் வாவிகளும் மற்றும்வேண்டும் சிறப்புகளில்லாத அரமனைகளொன்றுங் காணவில்லை மேகங்களைப்போல செயபேரிமுழங்கவும் வானத்திற் படபடென் றசையும்படிக்குப்பலதுசபடாங்கள் மகரதோரணங்கள் அருகுகள் ஆலவட்டங்கள் தாங்கிநடக்கவும் அருகுதீவிட்டிகள் பலர்தாங்கிப்போகவும் சுத்தவீரர்களாகிய சேவகர்கள் ஆயுதபாணிகளாய் நாற்புறங்களிலுஞ்சூழ்ந்துகாத்துச்செல்லவும் ஒற்றைச்சாய்மறை யிரட்டைச்சாய்மறைகளை யிருபாரிசங்களிலும்வீசிப்போகவும் தவளக்கொடைகளைத்தாங்கி நடக்கவும் யித்தகையஒலக்கங்களின்மத்தியில் ராசகுமாரர்கள் ரிஷபங்களைப்போலச் செம்பீரமாக வாகனங்களிற் போகின்றனரென, இவ்விதங்களில் அந்நகரமுற்றிலுமிராநின்ற அதிசெயங்களைப்பார்வையிட்ட வீரவாகுதேவர் யிதனைப்பேசுகின்றனர், பலவளங்களைப்பெற்றிருக்கின்ற பூமிதேவியானவள் அளவற்றகாலம் அரியதவங்களைச்செய்து வருந்தியதற்குப்பெற்றபலப்பிரப்பத்தியைப்போல ஒப்பனையிலடங்காத பலசிறப்புகளைக்கொண்டிருக்கின்ற வீரமாமயேந்திரபுரியில் அடர்ந்திருக்கின்ற மகதயிஸ்பரியப் பெருக்கினையிரண்டுவிழிகளைப்பெற்றிருக்கின்ற யான்நிதானித்து புகழ்வதற்கெளிதோ திரிலோகங்களையுஞ் சிருஷ்டிக்கவல்ல பிரமனாலும் யிப்பதியின் பெருமைகளை வற்னிக்கப்படுவதோ பலயுகங்கள் அரியதவங்களைச்செய்து சிவபிரான் கடாட்சத்தினால் அளவிறந்த விழிகளைப்பெற்ற மகத்துத்

களிருக்கின் அவர்களாலொருகாலம் யிதன்பெருமைகளை மகித்துப்பேசப்படுமெனநினைக்கவேண்டும் அப்படிக்குப்பெற்றுக் கண்டபோதினும் ஒருவாயினல் விரித்துச்சொல்லப்படாது மேகசாலங்கள் தினந்தோறும் பானஞ்செய்தபோதினும் சமுத்திரநீர்குறைபட்டுக் காட்டுவதில்லை அதைப்போலவே யிச்சிறந்தமயேந்திரபுரியினது செல்வங்கள் ஒருபிரமாணத்திலடங்கப்பட்டதாகக் காணவில்லை பற்பல விழிகளைப்பெற்று கோடாகோடி வாயினைப்படைத்த ஒருவன் பரமசிவகடாட்சத்தினல் பூர்த்தியாகநிதானித்துப் பேசப்பேறினும் கேழ்க்கப் பட்டவனுர்க்கு ஒரு செவிபோதாது பலகோடி-வேண்டும் ஆதலால் விரித்துவிரித்துப் பேசுவதிற்பயனில்லை-அமோகமாகிய-விழிகளும்-வாய்களும்-செவிகளும் அறிவும்பெற்று சிவனுதன் கடாட்சவீட்சணியமுங்கிடைப்பின் ஒருபரியாயமாகக் கணிக்கலாகுமாயினும் ஆயிரயுகங்கள் வேறொரு சிந்தனையுமில்லாமற் குறிக்கவேண்டும் அப்போதும் யிந்தஒப்புவமையற்ற பட்டணத்தின் சிறப்புகளைமுற்றினும் அளக்கவொண்ணது தேவர்க்கள் முதலாயினர் இதன்பெருமைகளைப் பூர்த்தியாகத்தெரிந்து அனுபவித்துக்களிக்கும்பொருட்டு பற்பலயுகங்கள் அரியதவங்களைச்செய்து பெற்றவரமுயற்சியினல் ஆயிரம் பதினயிரம் கோடி யித்தொகை சிரங்களைப்படைத்து யித்தலத்தில் அவதரித்து யிதிற்பட்ட அளவற்றசெல்வ வளங்களைக்கண்டுங்கேட்டும் யின்புற்றுமிருக்கின்றனர், என்மனந்திருத்தி பெறும்படிக்குத்தேவாதிதேவனுகிய ஆறுமுகசுவாமியார் திருவடியிலல் விசுவரூபத்தைக்கொண்டு யித்தினமே யிசசெல்வவளங்களைக் கண்டுபோக நினைப்பேனயில் அத்தோற்றத்தைக்கண்டபகைவர் சண்டைக்குநேர்வர் அதனுற்சாலதாமசமாகும் மேலும் உந்திகமலவாசியாகிய பிரமனறியாதவேதப்பொருளை அகஸ்தியருக்கு வெளியிட்ட எமதுகுற்றதலுகிய சரவணபவன் கட்டளையிட்டிருக்கின்ற பணிவிடையை மறந்து யிச்சிறப்புகளைப் பெரிதாகவெண்ணிப் பார்த்திருப்பது என்னொத்தவனுக்கடாது அழகுமன்று ஆதலால் விரைவில் யிப்பதியினுள்ளே பிறவேசிப்பேனெனநிதானித்தவராய் மேலும் சிலசங்கைகொண்டு பேசுகின்றனர், சொர்ணமயமாய் ரத்தினகாந்திகளைவீசிச்சித்திரஅலங்காரங்களைப்பெற்று மேருவையொப்பப் பாரித்திராநின்ற மேடைகள் உப்பரிகைகள் அரமனைகள்யிருபாரிசங்களினும் நெருங்கி சூரியனிடகிரணங்கள் தோற்றுமல்நிழல்பரந்துகுளிர்ந்திருக்கும் நீண்டதெருக்களில் யிப்போது நான்கொண்டிருக்கும் அணுப்பிரமாண ரூபத்துடன்போக வெத்தனித்தபோதினும் ரதகெசதுரகபதாதிகளும் நகரவாசிகளும்நெருங்கி கிரீடங்களுடன் கிரீடங்கள் புசங்களுடன் புசங்கள்தாக்கச் செல்லுகின்ற பெருக்கில் தப்பித்

துக்கொண்டுபோகப் படாதாகையாற் சகனமாற்கமாகநடப்பது தகுதியெனத்தீர்மானித்துத் தாம்வீற்றிருந்த கோபுரவாயலைக்கடந்து வானத்திற்ருவிச் சிலதூரஞ்சென்றவராய்ச் சூரபதுமன் பிறதமகுமாரனுகிய பானுகோபன் வாசஞ்செய்கின்ற நவரத்தினமயமாகிய மேடையின்பேரில் நின்று அதின்சிங்காரங்கள் முற்றினுங்கண்டு ஆச்சரியப்பட்டு யிதுபரியந்தம்பார்த்துவந்தசெல்வங்களைப்பெரிதாகமதித்தனம் யிதில்ஆயிரத்திலொருபங்குக்கொவ்வாது யிவர்கள் தவமுயற்சிகளையாவரால்அளக்கப்படுமெனப்புகழ்ந்து அத்தலத்தைநீங்கி எக்காலத்தினும் அக்கினிசொலித்திருக்கும்விழிகளையுடைய யிரண்டாவதுகுமாரன் அக்கினிமுகன்வாசஞ்செய்கின்ற உப்பரிகையின்மீதில்யிறங்கி அத்தலத்திற் ரேற்றுகின்ற வினேதங்களைப்பார்த்து ஒன்றுக்கொன்று அதிகரித்தவளமிகுத்ததாகவிருக்கின்றது யிவர்கள் சம்பத்தின்பெருக்கை யளவிட்டுமுடியாது பொன்னுலகவாசியென்றும் திரிலோகசக்கிரேஸ்பரனென்றும் புகழநின்றதேவேந்திரன் சம்பத்தைப்பெரிதாகப்பேசுவது அபலமென்றிகழ்ந்து அதைக்கடந்து அபரஞ்சியினும் மிகுத்துவிளங்குகின்ற திரேகத்தைப்படைத்த ஆட்கனென்னும் மூன்ருவதுகுமாரன் வீற்றிருக்கின்றமாளிகையினிடத்திற்பாய்ந்து அதன்பெருமிதங்களையுங் கண்டுமதித்து யித்தசுந்தரத்துக்கு யெந்தலோகங்களும் யீடுபடாதுமேலும் குபேரனையிவர்களுடையனுகவைக்கவேண்டும் அத்தகையசம்பத்துகளெங்கும் நிறைந்திருக்கின்றதெனக்கொண்டாடி அதையுந்தாண்டி நவரத்தினமயமாகிய கிரீடங்கள் சொலித்துக்கொண்டிருக்கும் பத்துத்தலைகளைப்பெற்ற வச்சிரவாகுவென்னும் நான்காவதுபிள்ளை வாசஞ்செய்கின்ற மாளிகையின் மீதில்நின்று அத்தலத்திலிருக்கின்ற வேடிக்கைகளைப் பிரமனுலும் எண்ணிமுடியாதெனத் தீர்மானித்து அதையுங்கடந்து மற்றபிள்ளைகள் மூவாயிரர்வீற்றிருக்கின்ற மேடைகள்தோறும் போய்ப்போய் அத்தலங்களிற் காணப்படுகின்ற செல்வப் பெருக்கைக்கண்டு அதிசெயித்தவராய் யித்தகையவளங்கள் யிவர்களுக்குக் கிடைத்ததுமிகவும் அற்புதம் முக்கியமாகச்சொல்லநின்ற வைகுந்தநகரா யித்தவீரமாமயேந்திரபுரிக்குஒப்பாகப்பேசலாகாது ஆதலான்என்னல்அளவிடப்படுவதோவென்றுபேசிஆயிரத்தெட்டண்டங்களுக் கதிபனுனசூரபதுமன் மனதுக்கிசைந்தமந்திராலோசனைகளைச் சொல்லவல்ல மந்திரிகளிற் றலைமைபெற்றிருக்கின்ற தருமகோபன் அரமனைமீதிற்பாய்ந்து அதன் மகிமைகளைப்பார்த்துயிதற்கொன்றையும் ஒப்புச்சொல்லப் படவில்லையெனப்பேசி அதன்மீதுவிளங்குகின்ற சொற்னச்சிகரங்களிலொன்றில்நின்றுகொடியசெய்கையையுடைய புலிக்கூட்டமத்தியில் மானினங்க ளகப்பட்டு வாடுவதைப்போ

லபாதகராகிய ராட்சதர்காவலிற்பட்டு வருந்துகின்றஇந்திரகுமாரன்சயந்தன்முதலாகிய தேவர்க்கள் வாசஞ்செய்யும் சிறைசாலையிருக்கின்றதலத்தினைவிழிகளைப்பரப்பி நகரமுற்றினும் பார்ப்பதாயினர்.

## சயந்தன்புலம்புறுபடலம்.

சூதபுராணிகர்-சவுனகாதிரிஷிகளைப்பார்த்து யிதுபரியந்தம் வீரவாகுதேவர் மயேந்திரபுரியைச்சேர்ந்து நடந்த சரித்திரங்களைச் சொன்னோம் யினிசயந்தன் முதலாகிய தேவர்க்கள் காவலிலடங்கிக் கிலேசிக்கின்ற் சேதிகளையும் தெரிவிக்கின்றனம்-தாய்தந்தையராகிய யானைகள்நீங்கியகாலத்தில் தனித்திருந்த யானைக்கன்றினைப் பற்றிக் கொண்டுபோய் வேடரானவர்கள் மறைவிடத்திற் பதலப்படுத்தியபோது அக்கன்றானது ஒன்றுந்தோற்றமற் றிகைத்திருப்பதைப்போலப் பொன்னுலகத்துக்கதிபனுந் திரிலோகசாம்பிராச்சியத்தை யனுபவித்திருந்த தேவேந்திரன் தன்னிருப்பிடத்தையும் செல்வத்தையும்விட்டுப் பராரியாய்த்தன் தேவியுடன்போய்விட்டபின்பு தேவர்க்கள் சூரன்பட்டணத்திற் சிறைபுகுந்துபட்டவருத்தங்களிற்சிலதைச்சொல்லக்கேழ்ப்பீராக,சூரபதுமன் கட்டளையின்படிக்குமுன்னம்பானுகோபனானவன்பொன்னுலகத்தைக் கொளுத்திப் பூர்ணச்சந்திரோதயம்போன்ற முகமண்டலத்தைவாய்ந்த இந்திராணிபுத்திரன் சயந்தன் முதலானவர்களைப்பிடித்துப்புயங்களோடியக்கட்டிக்கொண்டுபோய் மயேந்திரபுரியிற்சேர்த்துக் காவல்படுத்தியகாலத்தில் தவளநிறத்தைப்பெற்ற திரேகத்தைவாய்ந்ததேவர்க்கள்சூழ்ந்துபோற்ற அவர்கள்மத்தியிற் பிதாவைப்போலக்கரிய திரேகத்தைப்படைத்த சயந்தனிருந்ததோற்றமெப்படிக்குக் காட்டுவதெனில்,பூர்வத்தில் அமுதெழத் திருப்பாற்கடலைக் கடையும்போது அதன்மத்தியிற்காளமேகவண்ணனான மகாவிஷ்ணுநின்றதைப்போன்றும் கரியமேகத்தையொத்த திரேகத்தினைப்பெற்றிருக்கின்ற அவுணர்காவலில் பவுத்திரதிரேகிகளாகிய விண்ணவர்கள் மத்தியிற் சயந்தனிருப்பதைச்சொல்லுமிடத்தில் இராகுகேதுவையொத்த சர்ப்பங்கள் நெருங்கிக் கவிந்தகாலத்தின்றோற்றநின்ற பூரணச்சந்திரன் திரேகத்திற்காட்டும் களங்கத்துக்குச்சமதையாகவும் பாலபருவத்திற் செயத்திற்குரிய தனுர்வித்தையை ஆசிரியனிடத்திற் கற்கின்றதருணத்தில் வில்லைப்பற்றியும் பாணங்களைப் பிறை

யோசித்தும் வருந்தியதினாற் காங்கள் காய்த்திருப்பதைப்போலவே விலங்குபூண்டு பலநாள்களாய்க்காவலிற்பட்டு உழலுகின்றதினாற் பாதங்களினுங்கறுத்த தழும்புகள் விளங்கவும் முயற்சிபெற்ற மானமுஞ் சவுரியமும் வெட்கமும் மங்கியடங்கவும் தீராதபழிப்பென்னுந் துக்கத்தீக்கடலில்அழுந்தி யுழலுமுன்னிலையிலெழுகின்ற சுவாலையானது பிராணனைவாட்ட வாடிக்களைத்தும் நினைத்தற்கரிய அரியகாவலிற் பலயுகங்களாகக்கட்டுப்பட்டிருந்ததினால் நேர்ந்த தீராத அபவாதத்தைப் போக்கிக்கொள்ளும்படிக்குப் பிராணனைவிட நினைந்தும் அமுதமுண்டிருக்கின்றமுயற்சியினால் நாசமடையாமல் உயிரைத்தாங்கி வருந்தியும் ஒருவனைக்கூரியவாளினாற் சின்னபின்னப்படச் சேதித்தகாலத்தில் அவன் படுந்துன்பத்துக்குமேலாக அவுணப்பாதகரால் அலைக்கப்பட்டுக் கிலேசித்தும் ஒருகணப்போதை அளவற்றயுகங்களைப்போல வாடிக்கழித்தும் சிறந்தமரகதரத்தினத்தினாற் செய்யப்பட்ட பாவையானது மாசுண்டுபிறகாசமங்கிக்காட்டுவதைப்போலத் தேககாந்திமழுங்கிப் பொலிவற்றுப்புஷ்பமாலை அனலிற்பட்டதைப்போலச் சரீரம் யிளைத்துவதங்கி புலிக்கூட்டத்தினைப் போன்ற கொடிய அவுணர் காவலில் மானபிமான மிழந்துபலயுகங்களாக வருந்துகின்ற சயந்தன் ஒரு நிமைப்போதாவது நித்திரைசெய்வானாயில் யித்தகைய துன்பங்களை மறந்திருப்பன்தேவர்களுக்குஉறக்கமென்ப தில்லாதபடியால் எக்காலத்தும் ஒருவித துயரத்தைப்பெற்று வாடினன்- இவ் விதமாக அரியதுக்கசாகரத்திற்பட்டு இந்திரதனையன் கிலேசித்திருக்கின்றபடியால் தவங்களைச்செய்த பலப்பிருப்த்தியினால் தேவனாய்ச் சகல செல்வங்களையும் அனுபவித்துச் சவுக்கியத்திலிருப்பனெனச் சொல்லுவது தகுதியாகக்காணவில்லை, விசனத்தினைத்தருமென்பது யிதனாற்கண்டனம் இவையன்றியும் மரகதமணியினாற்செய்யப்பட்டுப் பொன்மயமாக அலங்கரித்திருக்கின்ற ஒருசித்திரப்பிறதமையானது மலினப்பட்டிருப்பதுபோல சுந்தரவடிவுள்ளதனதுதேககாந்திமாறிமழுங்கி நாள்தோறும் குரூரமான செய்கையையுடைய காவலாளிகளாகிய அவுணரால்படாதபாடுகளைப்பட்டும் அவர்களைக்காணும்போது பூனைவாயிலகப்பட்ட பசியகிள்ளையைப்போல நடுநடுங்கியும் தான்மீளுவதற்குரிய யாதொரு எதுவையுங் காணாதவனாய் மனம் நிலைபெறாமற் கலங்கிஎன்செய்வோமென்று பல நினைவுகளைக்கொண்டலைந்து மனக்கிலேசமாகிய அனல்மேலிட்டுப் பெருமூச்சினிடத்தெழும் சுவாலையினால் பசியமேனி கரிகரித்து ஒளிமழுங்கி வாடி விழிகளில் யிடைவிடாமற் சலத்தைப் பெருக்கிக்கொண்டு திகைத்துத் திகைத்துப்பார்த்து தனக்கடுத்த துக்கவருத்தங்களை எண்ணி எண்ணி அனலிற்பட்ட

வெண்ணெயைப்போலக் கரைந்து கரைந்து புலம்புவன்- யிதைக்காணு
வாயிற் காவலாளிக ளென்செய்வரோவென்றும் ஏக்கத்தினாற் றரிதமா
ய்ச்செந்தாமரையையொத்த கரங்களினால் விழிகளிற் பெருகும் நீரைத்
துடைத்து வாயைமூடிக்கொள்ளுவன் கொடிய அவுணப்பாதகர்கள் கூ
டிக்கொண்டு யிந்தசயந்தனுக்கு எக்காலத்திலும் சிறை நீங்குவதில்லை யி
வன்பிதாவாகிய இந்திரன் இந்திராணியுடன் மறைந்திருந்தவனைக் கண்
டுநம்மவர்கள் பிடித்துவந்து அரசனேவலின்படிக்குச் சிறையி லடைத்
தனரெனச் சிலர்வசனிக்கக் கேட்டனம் ஆதலால் யிவனை யினியாவர்மீழ்
க்கப்போகின்றனரெனப் பேசிக்கொள்ளும் பொய்வசனத்தைக் கேட்ட
வுடன் அனலிற்பட்ட வல்லிசாதக் கொடியைப்போல வாடி மூர்ச்சித்து
விழுந்து தேவர்க்கள் செய்யுஞ் சயித்திய உபசாரங்களில் உடனே தேறி
யெழுந்து தான்கற்பகத் தருக்களின் நிழலிலிருந்து சகலசவுக்கியங்களை
யும்அனுபவித்திருந்த வைபவங்களை நினைந்துயித்தகையபேற்றினை யின்
னமொருகாலம் பெறுவனோவென்று துக்கிப்பான் அத்தருக்களி னல
ர்ந்தபுதியமலர்களின் காம்புமுதலிய குற்றங்களைப்போக்கி மெல்லிய
இதழ்களைப் பரப்பியலங்கரித் திருந்த மஞ்சத்திற்பள்ளிகொண்டு அரம்
பையர்கள் ஆலவட்டங்கள்விச சவுக்கியமாகவிருந்த சுகங்களை எண்ணிஎ
ண்ணிப் பெருமூச்செறிவன் லட்சுமிக்குச் சமதையாகிய தேவகன்னியர்
கள்தன்னிடத்தில் மோகங்கொண்டு தாதியர்களை யனுப்பிவித்து மேல்
விழுந்துவந்து கட்டியணைந்து சரச சல்லாபங்களினாற் காமவின்பத்தை
த்தந்தவிதங்களை நினைந்துசோருவன் இந்திரபோகப் பெருக்கினை நினை
ந்து வாடுவன் கேட்டதைவழங்கும் பெருமையையுடைய பஞ்சதருக்க
ள்நிழலிற் பலகாலம்போகபாக்கியங்களை யனுபவிக்கச்செய்திருந்தபொ
ன்னுலகமானது பானுகோபனால் எரிந்துகரிந்து சாம்பலாய் மங்கிற்
றேயெனவாடுவன் சிவபிரான் கிருபாகடாட்சத்தினாற் பழையபடிக்குத்
தெய்வபோகங்களைப் பெறவல்லனோவெனச் சோபிப்பன் ஆதியிற் கடி
னசித்தமுடைய சூரமதுமன் செலுத்திய சேனைகளுக்கஞ்சி குயிலுருக்
கொண் டோடியொளித்திருக்கின்ற தாய்தந்தையர் எத்தலத்தி லிருக்கின்
றனரோ என்னபாடு படுகின்றனரோ பகைவர்கைப்பட்டு வருந்துகின்ற
னரோ யாதுந்தெரியவில்லை யிதற்கென்செய்வேனெனக் கிலேசிப்பன்-
நான்புத்திரனாகப்பிறந்து அவர்களுக் கித்தகைய துன்பங்கள் நேர்ந்து
தேயெனக்கிலேசிப்பன் தாய்தந்தையர்பொன்னாட்டை விட்டபின்பு பூ
லோகத்திற் சேர்ந்திருக்கின்றனரெனச் சிலர்சொல்லக்கேட்டனம் அவர்
கள்வாசஞ்செய்கின்ற தலத்தைக் குறிப்பாகக்காட்டுவார்களைக்காணேனே
யென்று களைப்பான் சிலதினங்களுக்குமுன்னம் யிவ்வரியகாவலில்வரு

நீதிக் காவலாளிகளாகிய அவுணப்பாதகரால் நேருந்துன்பங்களைப்பொ றுக்கப்படாமையால் தப்பித்துக்கொண் டோடிப்போன தேவர்க்களீபி தாவைக்கண்டனரோ அடியேன் மீளுவதற்கொரு ஏதுவைவைய யோசி க்கின்றனரோ அல்லதுமீளவும் அவுணர்களிடந் தகப்பட்டு வருந்துகின் றனரோ மாண்டனரோ ஒன்றுந்தோற்றவில்லை- பிதாவானவர் நீங்கியகா லத்தில்விண்ணுலகத்தையும் அதிற்பட்ட தேவர்க்களையும் நான் பாதுகா த்திருந்தது நேத்திநேத்தி யென்று தன்னை வெறுத்துக் கொள்ளுவன்- இப்பதியைக்கடந்துபோன தேவர்கள் தங்கள் வருத்தங்களையுஞ் சூரன் கொடுமைகளையும் விரித்துச்சொல்லக்கேட்டு மனந்தாபரியாமல் என்பி தாவான்வர் பார்பதி பங்களுகிய சிவபிரான்வாசஞ்செய்திருக்கின்ற திரு க்கயிலையைச்சேர்ந்து தங்கள்வருத்தங்களைச்சொல்லி முறையிட்டுக்கொ ள்ளப்போயிருக்கின்றனரோ வென்பன் — இவர்களைத்தேடித் திரிகின்றஅ வுணர்விழிகளிற் படுவாராயில் என்செய்வரோ யிதற்கஞ்சி திரோங்களைம றைத்துமாறுருக்கொண்டு ஒளித்திருக்கின்றனரோ வென்பன் அல்லது திருடனைப்போலப் புதறுகள் குகைகளிற் பதுங்கிக் காலங் கழிக்கின்ற னரோவென்பன் ஒருயிடத்தில் நிலைபெறுமல் பூலோகமெங்கஙனும் வலை ம்வந்துழலுகின்றனரோ யென்செய்வேனென்பன் பரமசிவகடாட்சத் தினல்ஆயிரத்தெட் டண்டங்களையும் நூற்றெட் டுகெங்கள்ஆளப்பெற்ற சூரமதுமன் கட்டளையின்படிக்கு வந்த அவுணர்கள் தேடித்தேடித் தா ய்தந்தையனாக்காணுமல்மீண்டனரோஅல்லதுதெரிந்துபிடித்துவந்துயி த்தலத்திற் சிறைபடுத்தி யிருக்கின்றனரோ வென்பன் அப்படிக்குநேரு மாயின் யிப்பாதகர்கள் ஏசிக்காட்டுவர் அதுகாணுதபடியால் அவர்கள்யி ப்பாதகர்களுக்குக் காணவில்லை, யிதற்குச் சந்தேகமு மில்லையென்றுக ளிப்பன் மனதுக்கினிய புத்திரனுகிய என்னிடத்தில் அளவற்ற யின்பத் தைப்பெற்றிருக்கின்ற தாய்தந்தையர் சர்வாயுதபாணிகளாகியஅவுணர்க ளைக்கண்டால்திகிற்பட்டுவாடிக்கிலேசித்து என்படுவரோகாளகண்டமூற் தியெனத்துக்கிப்பன்பானுகோபன்அளவற்றசேனைகளைக் கூட்டிக்கொண் டுவந்து பொன்னுலகைக் கொளுத்தி தேவர்க்களையும் அயிராபதத்தை யும்வென்று ஏகபுத்திரனுகிய என்னையும் பாசத்தினுற்பிணித்திழுத் துவ ந்து மயேந்திரபுரியிலிருக்கின்ற சிறைசாலையி லடைத்து சொடியஅவு ணர்கண்ணிமையைப்போலக்காக்க யிந்ததேவர்க்களுடன் வாடியிருக் கின்ற என்னிலைகளை நாராசத்தைக்காச்சிச் செவிகளிற் செருகியதைப் போலக்கேழ்விப்பட்ட என்னரியதாயான இந்திராணியானவள் அனலிற் பட்டமெழுகைப்போல மனமுருகி வயத்தைப்பிசைந்துகொண்டு என் னென்னநினைந்து புலம்புவளோ என்னைத்தேடித் திகைப்பளோமகனே,

யெனக்கூவுவளே, இப்படிக்குவருந்துகின்றதறுவாயில்அருகிலிருக்கின்ற
பிதாவானவர் தேறுதலைகளைச்சொல்லி சோபத்தைநீக்குவரோ அல்லதுதா
யைத்தனிமையிற்பிரிந்து எங்கேனும்போயிருக்கின்றனரோ யாதுசெ
ய்வேனெனச் சோபிப்பன் ஒருகாலம் மாயைவஞ்சகங்களைக்கற்றிருக்கி
ன்ற பாதகராகிய அவுணர்கள் தாய்தந்தையரைக்கண்டு கொண்டுவந்து எ
ன்னெதிரில் நிறுத்துவார்களோ அக்காலத்திலாவது அவர்களைக்கண்டு க
ளைநீங்கியிருப்பேனோ யிப்பாதகர்யிந்தவுதவியைச்செய்வரோவென்பன்
அளவற்றகாலங்களாகச் சகிக்கப்படாத துக்கசாகரத்திலழுந்தி அவுணரு
க்குப்பயந்து ஒளித்திருக்கின்ற பழியைத்தீர்த்துக்கொள்ளுகின்றதற்கு
ஒருதந்திரங்களைக்காணாதபடியினால்என்னிடத்திருக்கின்ற பட்சத்தையும்
மறந்து யில்வாழ்க்கையைவெறுத்துத் தவவேடங்கொண்டுவிரதராய் தே
வாதிதேவனாகிய பரமனைநோக்கி அரியவிரதங்களைச்செய்து அவர்கடாட்
சண்ணியத்தினாற் சாயுச்சியப்பதவியைச்சேர்ந்தனரோ- யாதொருசேதி
யுந்தெரியவில்லையேயெனவாடுவன் செயசாலியாகிய பானுகோபன்பொ
ன்னுலகத்துக்குவந்து சண்டைகொடுக்கும்போது என்னைத்தாங்கியிரு
ந்த அயிராபதமானது கோபித்து மேகத்தையொப்பக் குமிறிக்கொண்
டெதிர்த்து அவன்மார்பிற்றாங்கியகாலத்தில் ரத்தினகிம்புரிக்கோடுகள்
நான்கையும்பறிகொடுத்து அவன்கைக்குத்தினாற்களைத்துவிழுந்தது, அத
ன்பின்பு பிராணனைப்பெற்றெழுந்ததோ மாண்டதோ அதன்காரணமின்
னதென்று சொல்லுகின்றவரைக் காணேனென்றுஏங்குவன் பிரார்த்
தவினையின்படிக்குப் பிர்மதேவன் சிருஷ்டித்தகாலத்தில் நியமித்திருக்
கின்ற வினைப்போகங்களை யனுபவித்தல்லது தீராதென வேதங்களில்மு
றையிடுகின்றது அவ்வாறே சகலருக்குஞ் சம்பவித்துவருவதைக் கண்டி
ருந்தும் பாதகராகிய அவுணர்கள்கொடுமை செய்கின்றனரென வெறுத்
துக்கொள்ளுவதினாற் பிறையோசனமென்னென் மனதைத்தேற்றுவன்
திரிலோகங்களினும் முக்கியமாகக் கொண்டாடும்வளமிகுந்தபொன்னா
டுகரிந்து சாம்பலாகவும் செயசாலியாகிய பிதாவும் சற்புத்தன்மைகளிற்
சிறந்திருக்கின்றதாயும் சகசிகளாகவிருக்க ஏகபுத்திரனாகிய யான்சாத
த்ரிய சிறையிற்பட்டுவாடி யாதொருதுணையுமில்லாமற் கிலேசிப்பத
ற்கு முற்சென்மத்தில் முடித்தபாதகமேதோ அதுதெரியுமாயின் தகு
ந்தபரிகாரங்களைச்செய்துகொள்ளக்கடவன் யிதைச்சொல்லுவாரைக் கா
ணேனேயெனச் சிந்திப்பன் சூரபதுமன் ஆதியிற்செய்த அரியதவத்து
க்கிரங்கி செக்கர்ஞ்சடையனாகிய சிவபிரான் அழியாதவயிரத்தேகத்தை
யும் தீர்க்காயசையும் அளவிறந்த செல்வச்சம்பத்தினையும் மற்றும்வேண்
டிய வரங்களையுங் கடாட்சித்திருக்கின்றதால் அவன்எக்காலத்தும் நாச

மடையான் ஒருவராலுஞ் செயிக்கப்பட்டவனன்று மேலும் நான்வரு
ந்துவதைக் கண்டிரங்கி விடுவிக்கவுமாட்டான் ஆதலாற்பார்பதியாகனே
லோகநாயகனே ஏழைபங்காளனே அடியருக்கெளிய கடவுளே மும்மூ
ர்த்திகளுக்கும் முதல்வனாகவிருக்கின்ற ஓ சிவபிரானே அடியேன்யிப்பா
தகராகிய அவுணரால்விலங்குபூண்டுமானபங்கப்பட்டுத்துக்கசாகரத்தில
ழுந்திவாடுகின்றயிந்தசிறையான துயினிஎக்காலத்திற்றீரவிருக்கின்றதுயி
ப்பாடுபட்டவர்கள் விண்மண் பாதலமென்னுந் திரிலோகங்களினும்யா
வருமிருக்கமாட்டார்கள் யித்துன்பங்களைப்படுவையெனப்பிரமனென்த
லையிலெழுதினனோவென்றழுவன் சகலரும்புகழ்கின்றசெல்வப்பெருக்கை
வாய்ந்த தெய்வலோகவாழ்வைப்போக்கி திரிலோகாதிபதியாக வாழ்ந்த
அரசுரிமையையிழந்து தேன்களைச்சொரிந்து பரிமளித்துமகரந்தங்களை
யிறைத்துக்கவிந்திருக்கும்நீழலில்நவரத்தினமயமாக விளங்குஞ்சிங்காத
னத்தில்மீது வீற்றிருந்து முப்பத்துமுக்கோடிதேவர்க்கள்நாற்பத்தெ
ண்ணுபிரம் ரிஷிகள்போற்றவும் காமதேனு சங்கநிதி பதுமநிதிமுதலிய
வளங்கள் யேவலின்படிக்கு வழங்கிவரவும் அரசுசெலுத்தியஇந்திரவோ
லக்கத்தையும் ரம்பையூர்வசி திலோத்தமையாதியராகிய தேவகன்னியர்க
ள் பணிவிடைகளைச்செய்துவர நவரத்தினமயமாகிய அரமனையில் வீற்றி
ருக்கின்ற இந்திராணியுடன்கலந்து கற்பகமலர்கள் பரப்பியமஞ்சத்தின்
மீதில் சரசசல்லாபமாகக் களித்திருந்த போகங்களையும் பறிகொடுத்து
பாதகராகிய அவுணருக்கஞ்சி பிதாவானவர் ஓடிப்போயினரென்றுகே
ட்டபோதே பாபியாகியநானும் அவர்களைக்கலந்துகொண்டு அவர்களு
க்கடுத்த யின்பதுன்பங்களை யனுபவித்திராமல் பாலியச்சேஷ்டையினால்
தெய்வலோகத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்தி சத்துராதிகள்கையில் அ
கப்பட்டுக்கொண்டு யித்தகைய துன்பங்களை அனுபவிப்பேனோவெனவா
டுவன் யித்தகையதீராதபழியைச்சுமந்து வீடாமல்பிராணனைப்போக்கி
னவனுமன்று தாய்தந்தையருக்கு நேர்ந்தயிடையூறைத்தீர்த்து பயப்ப
டாதீர்கள் எவ்விதத்திலும் நமது சுதந்தரங்களைப் பெற்று வாழுவோ
மென்று சிலதேறுதலைகளையும் சொன்னவனுமல்ல யிவையனைத்தும் பர
மசிவகடாட்சத்தினால் நேருவதென்று தேறினவனுமல்ல யிந்தசிறையில
கப்பட்டு நாள்கழிப்பது அரிதாகவிருக்குதென்று பிதாவைநினைந்துகத
றுவன் மன்னுயிர்களுக் காதாரசத்தியாக விருக்கின்ற தற்மமானது பலி
தமில்லாமலடங்குங்காலமும்நேர்ந்ததோகொடிய பாதகமேலிட்டுவீறு
ம்படியாயிற்றோ அரியதவமுயற்சிகள் மங்குங்காலமாயிற்றோ நல்லொ
ழுக்கமடங்கியதோ கலிகாலம்பிறந்ததோவேதாகமவிதிகளொளித்ததோ
எள்ளுக்குள் ளெண்ணையைப்போலவெங்கும் பரிபூரணமாக விருக்கின்

றசிவபிரானில்லையோ அடியரிடத்துக்கொண் டிருக்கின்ற கிருபையைமறந்தனரோ தீனரைவாட்டியலைக்கும் சூரபதமன் முதலானவர்களைக்கொன்று ரட்சிப்பது பரமனுக்குப்பெரிதோ அல்லது அடியோங்கள் முற்செய்த பாதகங்களை நினைந்து பராமுகமாக விருக்கின்றனரோ வெனப்போற்றுவன் சூரபதுமன்கட்டளையின்படிக்கு அவுணர்செய்த கொடிய தெண்டனைகளைப்பொறுக்கப்படாமையால் தப்பித்துக் கொண்டோடிப்போன தேவர்க்களன்றியில் மற்றவிண்ணவர்கள் பானுகோபன் தெய்வலோகத்துக்கு வந்தகாலத்தில் அவன்சூரத்துக்கஞ்சிப்பதுங்க நினைந்திருந்தவர்களைத்தடுத்து பவநீதிகளையுந் தயிரியங்களையுஞ்சொல்லித்தேற்றி அப்பாதகனுடனெதுத்துப் பறகிட்டுபடாதபாடுகளும்பட்டு அவன் காவலிற்பட்டு என்னுடன் அவர்களையும்வருந்தும்படிக்குச்செய்தேனே யெனத் தன்னைத்தூறிக்கொள்ளுவான்,பிருதகாலத்தெழுந்துமுழுகிநித்தியகர்மங்களை முடிப்பதையும் வேதபாராயணங்களையும் ஓமவிதிகளைச்செய்வதையும் தேவதேவோத்தமனான சிவபிரானைப் பூசித்து வழிபடுவதையும் நல்லுணர்வையும் மற்றுமிராநின்ற சத்கருமங்களையுமொழித்துப்பாமரனாய்யிந்தபாதகர்பட்டணத்தில்அரியகாவலிலிருக்கின்றனன் யினியான்செய்வதென்னென்று திகைப்பன் யிவ்விததுன்பங்கள் நேருவதற்குக் காரணத்தைநினைந்து பார்க்குமிடத்தில் ஆதியிற் பிர்மதேவன் செய்தவேள்வியினிடத்தும் பரமனைநிந்தித்து நீக்கிநடாத்திய தக்கன்மகத்திலுங் களித்திருந்து யிதுதகாதனகாரிய மென்றெண்ணாமல் யின்பமாக அவிர்பாகங்களை வாங்கிப்பொசித்த பாதகத்துக் கடுத்ததாய்க் காளகண்டமூர்த்தியாகிய சிவபிரான்யித்தகையகடின தெண்டனைகளைக் கடாட்சித்திருந்தால் ஒருவனா நோவதிற்பயனில்லையென்று மனதைத்தேற்றிக்கொள்வன் ஆகிலும் பிறிதிவு அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் பஞ்சபூதிகளாய் எள்ளினெண்ணையைப்போன்று சராசரப் பிறபஞ்சங்களினுமுலவி சரிதை கிரியை யோகம் ஞானமென்னும் நான்குபாதங்களுக்கும் கர்த்தனாய்ச் சிவன் விஷ்ணு பிரமனென உருக்கொண்டு முத்தொழில்களைநடத்தித் தம்மையன்றி ஓரணுவுமசையாமற்சர்வமுந்தமது மகிமையினால் ஆட்டிபூட்டி உறக்கிச் சகலபிறபஞ்சங்களையும் நடாத்தும் பெருமையினைப் பெற்றிருக்கின்ற தேவாதிதேவனாகிய சதாசிவ மல்லது அடியோங்கள் துக்கவருத்தங்களைத் தீர்ப்பவர் யாவரையுங்கண்டிலன் அத்தேவதேவனே எங்கள் குறைபாடுகளை நீக்கி ரட்சிக்கடவனென்று பரமனைச் சிந்திப்பன் ஓ கர்த்தனே தேவரீர்கடாட்ச வீட்சணியத்தினால் யிந்த சூரபதுமன் பெற்றிருக்கின்ற வரமுயற்சிகளும் செல்வப்பெருக்கும் ஆயிரத்தெட்டண்டங்களினுஞ் செலுத்திவருகின்ற அரசாட்சியும் அளவிறந்த

வெள்ளஞ்சேனைப்பெருக்கும் அழிபட்டு தேவர்க்களுடன் அடியேன்படும்வருத்தங்களும் தீராதபழியும்நீங்கிப் பழையபடிக்குப் பொன்னுலகவாழ்வைப்பெற்றிருக்கின்றதினமும் ஒருகாலம் கிடைக்கப்போகுதோவெனவாடுவன் வேதாகமபுராணமுதலிய கல்விகளிற் சிறந்தவர்களாய் நல்லொழுக்கம் பூததயவு பெரியோர்கள் சேர்வை சிவபூசை மான்மியங்கள்முதலிய சத்கருமங்களை வகித்திருக்கின்ற மகத்துக்கள் யிருதயகமலத்திற் குடியாகவாசஞ்செய்யப்பட்ட பரமசிவத்தை வழிபட்டு அந்தேவன்கிருபாகடாட்சத்தினைப் பெற்றிருப்பேனாகில் யித்தகைய துக்கசாகரத்தைக்கடந்து களித்திருக்கவல்லன் பாதகனாகிய நான் ஏதொருபூசனைகளையும் விரதங்களையும் செய்யாதவனாதலான் யிந்தஅரிதாகிய பாக்கியத்தைப்பெறவல்லனோவென்று கரங்களைக்கூப்பித் தொழுவன் சவுனகாதிரிஷிகளே தேவராசகுமாரனாகிய சயந்தன் மனங்கலங்கி அனலிற்பட்ட மெழுகைப்போல உருகி யுருகி அவன் பட்டவருத்தங்களை யிவ்விதமென்று என்னாற் சொல்லிமுடியாது யிப்படிக்குச்சயந்தன் புலம்புகின்ற தருவாயில் பொன்னுலகவாழ்விலமர்ந்து சகலசெல்வங்களையும் அனுபவித்திருந்த தேவர்க்களும் தாங்கள் படுகின்ற சிறுமைகளை எண்ணி எண்ணி துக்கித்துவாடுகின்ற தருணத்திற் சூரபதுமன் கட்டளையின்படிக்குக் கண்டன் உதாவகன் காரளன் மாபெலன் சண்டகன் சங்கன் முதலாகிய படைத்தலைவர்கள் அளவிறந்தஅவுணப்படைகள் சூழ்ந்துபோற்றச்சயந்தன்முதலிய தேவர்க்களிருக்கின்ற சிறைசாலைகளைக் கண்ணிமையைப்போலக் காத்துவருகின்ற பாதகர் சிவகுமாரன் விடுத்த தூதனாகிய வீரவாகுதேவர் அத்தேவனைக்காணப் போகுமுன்னிலையில் தீயிற்பட்ட தளிரைப்போலவாடிப் புலர்ந்திருக்கின்றதேவராசகுமாரனையும்மற்றவிண்ணவர்களையும் மானினங்களைப் புலிக்கூட்டமானது வளைந்துகொண்டதையொப்பச் சூழ்ந்துகொண்டு வடவாமுகாக் கினியைப் போலச்சீறி அதட்டிக்கோபித்து தேவப்பயல்களே கேட்பீராக ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்ச் சகலரையும்வென்று செயக்கொடி நாட்டியிருக்கும் ராசாதிராசனாகிய சூரபதுமன் பணிவிடைகளைக்காலங்களிற்செய்துகொண்டு காத்திராமல் பயந்தோடிப்போன இந்திரனும்அவன்தோளைத்தழுவும் இந்திராணியும் உங்களையன்றியில் மற்றதேவர்க்களும் எத்தலத்திற் பதுங்கியிருக்கின்றனர், இதனைக்கிரமமாகச் சொல்லுவீராகில் யின்னஞ்சிலகாலம் பிழைத்திருப்பீர்கள்அப்படிக்கு உண்மையைப்பேசாமல் மறைத்தால் உங்களைச் சின்னபின்னப்படக் கண்டித்துக்கொன்றிடுவோம் முன்போலநினைக்கவேண்டுவதில்லை எமதிறைவனாகிய சூரபதுமன் யிச்சேதியைத்தெரிந்து தமக்கறிக்கையிடக் கட்டளையிட்டிருக்

கின்றனர், துரிதமாகத் தெரிவியாமலிருந்தால் எங்களிடத்திற் சோதித்துக்கொள்ளுவர் ஆதலால் நிசத்தைப்பேசித் தப்பியிருப்பீர்கள் மேலும் பலகோடி தூதர்கள் தேடித்திரிகின்றனர், அவர்கள் கண்டு கொண்டு வருவதன்முன்னம் உங்களால் யிச்சேதி தெரியுமாயின் ராசாதிராசன் உங்களிடத்திரக்கமுற்று விடுதலைசெய்வனென்று நயபயங்களைக்காட்டிக்கேழ்க்குமுன் னிலையில் தேவராசபுத்திரனாகிய சயந்தன் முதலானவர்கள் அவர்களைப்பார்த்து எங்களுக்குத்தெரிந்தவரையில் உண்மையைச்சொல்லுவோம்கேட்பீராக தேவராசனும் இந்திராணியும் உங்களுக்குப்பயந்து பொன்னுலகவாழ்வைவிட்டு ஓடிப்போயினரென்பது மாத்திரந்தெரியும் அவர்களின்னயிடத்திலிருக்கின்றனரென்பது பரிச்சிதம்எங்களுக்குத்தெரியாது சேழ்விப்பட்டதமில்லை யிந்தபட்டணத்தில அரியசிறையிலகப்பட்டிருக்கின்ற எங்களுக்குயிச்சேதியை யாவர்சொல்ல விருக்கின்றனர், இதைக்குறித்து எங்களாலொருசங்கதியுந் தெரிவிப்பதற்கு ஏதுவில்லையென்று சொல்லியபோது காவலாளிகளாகிய அவுணர்கூடியிவர்கள்பிராணனுக்குத்துணிந்து எதனையும்வெளியிடாமல்மறைத்திருக்கின்றனர்யாதினைச்செய்தால்யிவர்கள் உண்மையைப்பேசுவரென்று யோசித்துக் கடூரதெண்டனைகளைமுடித்துத் தெரிந்துகொள்ள வேண்டுமென நிதானித்தவர்களாய் யிதனைச்செய்யத்தடங்கினர், திருப்பாற்கடலி னிடத்துதித்து மகாவிஷ்ணுமுதலானவர்களை நடுங்கச்செய்தெழுந்த ஆலகாலவிஷத்தைப்போலவும் ஊழிகாலத்திற் சராசரப்பிறபஞ்சங்களைத் தகித்தெழும் வடவாமுகாக்கினியைநிகர்த்தும் சீறிச் சுடச்சுடப்பேசினவர்களாய் பிரம்புகளினால் அடிப்பார்கள் யிருப்புலக்கைகளினால் மோதுவார்கள் கண்ணங்கள்பிளக்க அறைவார்கள் சடைச்சவிலிட்டுச் சேதிப்பார்கள் செக்கிலிட்டனாப்பார்கள் சுரிகையினாற் கண்டித்து காக்கை பரந்து முதலியபட்சிகளுக்கெறிவார்கள் அவையவங்களைச் சேதிப்பார்கள் கைவேறு கால்வேறு தலைவேறு வேறாகத்தறித்துத் திசைகளினும் வானத்தினும் எறிவார்கள் நாய்களுக்குத் தின்னப்போடுவார்கள் அக்காலத்தில் அமுதமுண்டமுயற்சியினாற் பழையபடிக்குத் திரேகங்கள் பூரித்தத்தோற்றுவதைக்கண்டவுடன் அதிககோபங்கொண்டு சீறி மின்னலைப்போலப் பிறகாசித்திருக்கும் வாளாயுதத்தையுருவிக்கொண்டு வெட்டுவார்கள் மார்பிற்குத்துவார்கள் வயற்றைக்கிழித்து குடலைச்சரிப்பார்கள் தண்டாயுதங்களினால்தலையுடையமோதியும் திரேகம் நறுங்கும்படிக்குத் தாக்கியும்கால்களை முறித்துங் கரங்களொடித்தும் யிவ்விதங்களிற் காவலாகவிருந்த அவுணர்கள் அளவற்ற துன்பங்களைச்செய்து வரும்போது சயந்தனும் மற்றதேவர்களுங் குலைகுலைந்து நடுநடுங்கி பூனைவாயிலகப்பட்ட பசியகிள்ளை

யைப்போலவும் புலிக்கூட்டத்திலகப்பட்ட மானினங்களை நிகர்த்தும் பயர்துவாடி வேறுசெதி யில்லாதபடியால் அழிவற்றசிவபிரானை மனதிற் சிந்தித்துக்கதறி ஓ தேவதேவோத்தமனே தேவரீரா ஏழைபங்காளனென்றுந் தயாநிதியென்றும் தீனசரண்ணியனென்றும் வேதங்களிற்சொல்லுகின்றபடியால் யிக்காலத்தில்அடியரிடத்திரக்கமுற்று வந்துகாத்துரட்சிக்கவேண்டுமெனப்போற்றிக் கிலேசிக்கின்றகாலத்திற் காவலாளிகள்விழிகளிற் றீப்பொறிகள் சிதறக்கொதித்தும் பலபடைகளினாலுஞ் சரங்களினாலும் குத்தியும் வெட்டியும் அறுத்தும் கிழித்தும் பிரியும்மோதியும் உதைத்துங் கடித்தும் முட்டியும் யிடித்தும் யிப்பிறகாரம் அரியதெண்டனைகளைச்செய்கின்ற தறுவாயில் சகிக்கப்படாதவருத்தங்களை அனுபவித்ததல்லது ஏதொருகாயங்களும்பட்டு யிறந்தவர்களல்ல சவுனகாதிரிஷிகளே திரிலோகசக்கிறேஸ்பரன் குமாரனாகிய சயந்தன் மேற்சொல்லியபடிக்கு தேவர்களுடன் அரிதாகியகாவலிற்படவும் விண்மண்பாதலங்களுக்கதிபனாகவிருந்த இந்திரன் தன்தேவியுடன் கெசேந்திரச்சம்பத்தைப் போக்கிக் காட்டிற்பதுங்கவும் தேவர்க்கள்கடினமாகிய அலைச்சற்படவும் முத்தலங்களுக்கும் ராசதானியாகவிருக்கின்ற பொன்னுலகந் தகிக்கப்பட்டுப்போகவும் யிப்படிக்குச்சகலமும் நிலைபெறாமல் மங்கிப்போனபடியால் சிவபிரான் கடாட்சத்தினாற் பெறவல்ல மோட்சசாம்பிறுச்சியப்பேறல்லது நித்தியமாகியசெல்வம் வேறில்லை அதன்பின்பு சிறைசாலையைக்காக்கின்றஅவுணர் பற்பலவிதங்களிற் பாதைப் படுத்தியபோதினும் தேவர்க்களுக்கு யாதொருசேதமுமில்லாமல் ஆயுதங்கள் மழுங்கிப்போகக்கண்டு பிரமித்து கரங்கள் கால்கள்மனமும்ஓய்த்து நின்றவர்களாய்த் தம்மிற்பேசிக்கொள்ளுகின்றனர், இந்ததேவர்கள் அமுதமுண்டிருக்கின்ற வலியினாற் பிறளயகாலத் தல்லது மற்றொரு படைகளினாலும் சாகின்றவரல்ல யிதுபரியந்தம் செய்ததெண்டனையைப்பார்க்கிலும் யினி வேறென்னவிருக்கின்றது அல்லது ஒருகருமத்தை முடிப்பதற்கும் வழியில்லையென்று வெறுத்துநின்றுவிட்டனர், இதைப்பார்க்குமிடத்தில் மகத்துக்களாக விருப்பவர்களுக்குத் தீங்கிழைசெய்தவர்களுக்குவுடனேதற்செயலாய் அநேகதுன்பங்கள்கிடைப்பதைப்போன்றது, இப்பிறகாரம்வருத்தினவர்கள் பழையபடிக்குத் தங்கள்காவல்களிற்சேர்ந்து யோற்றியிருந்தனர், யிப்பாதகரால் பற்பலதுன்பங்களை யனுபவித்த சயந்தன் முதலியதேவர்கள் மனம்நொந்து யிவ்விதங்களிற் பரமசிவத்தைத் துதித்துமுறையிடுகின்றனர், ஒத்தனே தீனதயாபரக்கடவுளே சுயஞ்சோதி வடிவாயெங்கும் பரிபூரணமாக விளங்கும் பரம்பொருளே மனதொருமித்துத்தியானிக்கும் பத்தர்களுக்கடுத்த துன்பங்களைப்போக்கியாளுந்தயாநி

# ௨அஅ சயந்தன்புலம்புறுபடலம்.

நீயேபிரமன்விஷ்ணுமுதலியதேவர்க்கள் மனநினைவளவிடப்படாதபரம்பொருளேஎங்கள்குலதெய்வமாகிய சிவநாதனேஅடியோங்களுக்குயிந்தப்பிறவியைக்கட்டளையிட்டு யிப்பாடுகளை அனுபவிக்கும்படிக்கு விதித்தீர் தேவரீர் மாயாவினோதங்களையும் பெருமைகளையும் யாவராற்காணப்படும் ஆதியிற்பானுகோபனுலறையுண்டுதந்தங்களையுமிழந்தவருந்தியஅயிராபதமானது திருவெண்காட்டில்வந்து தம்மைப்பூசித்ததற்கிரங்கிப்பழையபடிக்குத்தந்தங்கள் முதலியவலியைக்கடாட்சித்தும் திருக்காளத்திமலையின்மீதிலெழுந்தருளியிருக்கின்ற உம்மைவழிபட்டயானைக்கும்சிலந்திக்கும்பாம்புக்கும் மோட்சவீட்டைத்தந்தும் மாதவக்குறையினுல்காசிப்பதியில்அவதரித்து முற்றஞ்செயாவெனப் பாடித்திரிந்தகரிக்குருமானென்னும்பட்சிக்குச்சாயுச்சியப்பதவியைத்தந்தும்மதுரைப்பதியில்தேவரீரைவழிபட்டிருந்த நாரைக்குத்தமது திருவடிநீழலைத்தந்தும்மிப்பிரகாரம் அளவற்றபிராணிகள் பணிவிடைகளுக்குக்கிருபையுற்றுகாலங்களில் பாதுகாத்துரட்சித்தலோகநாயகனே தீனராகிய அடியோங்கள் வருந்திமுறையிட்டுக்கொள்ளுவதைத் திருச்செவிகளினேற்றுக் காற்கமனமிரங்காமல் பராமுகமாயிருப்பதென்னே எங்கள் துக்கவருத்தங்கள்திருவுளத்திற்கேற்ற வில்லையோ பார்பதியார் கரதலத்திற்பிறந்து உலகங்களனைத்தையும் நாசப்படப்பெருகிய கெங்கையைமன்னுயிருக்கிரங்கித்திருச்சடையினேற்றதும் திருப்பாற்கடலிலுதித்துத் தேவர்கள்முதலானவர்களைஅலைத்து மீறியெழுந்த ஆலகாலவிஷத்தையுண்டு கண்டத்திற்றரித்ததும் யிவையென்னபொய்மையோ பிராணிகள்படும் வருத்தங்களுக்கிரங்கி சர்வசங்காரகாலத்தில் நுதல்விழித்தீயினலெரித்துச் சிலகாலம் சவுக்கியத்தில் வைத்தபரம்பொருளே தக்கன்சாபத்திற்பட்டுத் தம்மைச்சரணடைந்த சந்திரனைஆதரித்து அவனொருகலையைச் சடாபாரத்திற்கொண்டு பழையபடிக்கு சோடசகலைகளையுங் கடாட்சித்த பத்தவற்சலனே யிக்காலத்தில் அவுணர்செய்யும்பாதைகளுக்குச் சகிக்கமாட்டாமல் சிவனேசிவனேயென்று முறையிடுவது தேவரீர்திருவுளத்துக்கேராததோ பிராணிகள்முற்செய்த பிராற்தகற்மங்களுக்கீடாகவிளைகின்ற ஆசாபாசமென்னும் தளையிலகப்பட்டுழலச்செய்து அவைகளுக்குரிய யின்பதுன்பங்களையனுபவிக்கப்பண்ணி ஊட்டுவோனும் அஞ்ஞானபெந்தங்களைப் போக்கி மோட்சசாம்பிராச்சியத்தைக் கடாட்சித்தாள்பவனும் தேவதேவனுகியசதாசிவமென்று வேதங்களில்முறையிடுகின்றது அத்தகையகுணசம்பன்னனுகியதேவரீர் கட்டளையிட்ட யிக்கொடியதெண்டனைகளையாவரால்விலக்கப்படும்பிரமன்விஷ்ணுதேடிக்காண்பரியசந்தனேதம்மையல்லது வேறொருபிராணியைக்கண்டிலம் ‒ ஆதலால் யித்தருணத்தி லெழுந்

திருளி அடியோங்கள்பிராணனைக்காத்தாளவேண்டுமென்றுகரங்களைச்சுப
ப்பிக்கொண்டுபோற்றினவர்களாய் மேலும் யிதனைவிண்ணப்பஞ் செய்
வதாயினர், ஓ கர்த்தனே முற்காலத்தில் அந்த சாசூரனென்பவன் தேவரீ
ரைநோக்கிச் செய்ததவங்களுக்கிரங்கிக்கடாட்சித்தபற்பலவரங்களைப்பெ
ற்றசெற்வத்தினால் கொடுங்கோலைச் செலுத்தி எமனைப்போல உலகங்க
ளெங்கணுமுலவி தேவர்க்கள்முதலான சகலபிராணிகளையும் அலைத்துக்
கொன்றுதின்று வடவாமுகாக்கினியைப்போலவிறித்திரிவதையும்தினரா
கிய பிராணிகள்படுந் துன்பங்களையும் திருவுளத்திற்கொண்டு அவ்வசுர
ன்வலிகுன்றிக்குறைந்து நாசமடையத்தக்கதாக வெளிவந்து முத்தலைச்
சூலத்தினால் அவன்மார்பிற்குத்தி முதுகிலுருகப் பாச்சிக்கொன்று சராச
ரப்பிறபஞ்சங்களைக் கலங்காமற் பாதுகாத்த தினசரண்ணியனல்லையோ
தமதுதொண்டர்களிற்சேர்ந்த அடியோங்கள் அளவற்றகாலமாய்சூரனு
க்கினையிற்பட்டு வாடிவருந்தி முறையிடுவது சற்றுந்திருச்செவிகளிற்கே
ட்டதில்லையோ நாயினேங்கள் செய்தபாதகங்கள்தீர யின்னமும்காலஞ்
சமிபிக்கவில்லையோ முற்காலத்திற் காகாசூரனென்பவன் கொடுமைக்க
ஞ்சி பிரமன் விஷ்ணு முதலாகிய தேவர்க்கள் ரிஷிகள் மானிடராதியாக
த்திகிற்பட்டேங்கி நடுநடுங்கித் தத்தமது பதவிகளைவிட்டோடத் துரத்
திய பாதகனைக்கோபித்து சின்னபின்னப்படக் கண்டித்துக்கொன்றுசக
லரையும் தமதுபதவிகளில் நிலைபெறவிருத்தி அச்செயந்தோற்றும்படி
யாக அவன்சிறகிலொன்றைச் சடையிலணிந்த கிருபாநோக்கத்தைப் பா
தகராகிய அடியோங்களிடத்திற் காட்டாததற்கு நாங்கள்செய்த குறை
பாடுகளேதோ பூர்வத்திற் றிருப்பாற்கடலிற் பெருத்தெழுந்த ஆலகால
விஷத்துக்கஞ்சி பிரமன்முதலிய தேவர்க்களனைவரும் பயந்துமுறையி
ட்டகாலத்தில் அவர்களிடத்திற் கிருபையுற்று அதனையுண்டு கண்டத்திற்
றரித்தகடாட்சத்தைப்போலவே யிக்காலத்திலெங்களைக்காக்கவாராயோ
இவையன்றியிற் கோரரூபத்தையும் கொடியபடைகளைத் தாங்கிய சாச
மோகங்களையும் தீச்சிகைமுதலிய உக்கிரக் கோலத்துடன் காளியம்மனு
னவளெழுந்து வடவையைப்போலத்திரிந்து உலகங்களிற்பட்ட சீவரா
சிகளைவாட்டுகின்றமுன்னிலையிற் சகிக்கப்படாமல் அவர்கள்முறையிட்ட
தைத்திருச்செவிகளினேற்று அவளுடன் வாதுக்காடிவென்றுமன்னுயி
ரைப்போற்றிய தயைஎங்களிடத்தும் உண்டாகலாகாதோ தேவரீர்கோ
பமேவடிவாகவெழுந்த சலந்தரன் செயசாலியாய்த் திசைகளைவென்று தி
ருக்கயிலையில் மறைந்திருந்த தேவர்க்களைப் பங்கப்படுத்த வெண்ணி
த்துரத்திவந்தகாலத்தில் வெளிவந்து சக்கரப்படை யொன்றைப்படை
த்து அதன்மூலமாகஅவனைவென்றுதினைக்காத்தருளியது தேவரீரல்ல

## சயந்தன்புலம்புறுபடலம்.

வோபாதகவிருளைக்களைந்து மோட்சசாம்பிராச்சியத்தைத்தரும் மகத்து
வமுள்ளகங்கை சூழ்ந்தகாசிப்பதியில் வந்தொளித்திருந்த ரிஷிகள் பிரா
மணர்முதலானவர்களைத் தேடிவந்த கயாசுரனையுதைத்துத்தள்ளித் தோ
லையுரித்துப் போர்வையாகக்கொண்டு பாதுகாத்தகிருபையானது தமது
வழியடிமையாகிய அடியோங்களிடத்திற் காட்டக் காலமில்லையோ பத்
துத்தலைகளும் யிருபதுகரங்களையும்பெற்ற இராவணன் கும்பகர்ணன்இ
ந்திரசித்துமுதலாகிய ராட்சதர்கொடுமைக்கஞ்சி வாடிப்போற்றிய தே
வர்களிடத்திற் சிறையையுற்ற தம்மடியவர்களைக்கொண்டுவாட்டி உலகங்
களைநிலைபெறச்செய்த ஆதிமூலமே யிவ்விண்ணவர்களுடன் அடியேன்
கொடியசாவசிற்பட்டு அவுணர்தெண்டனைக்கஞ்சி வாடுவதைத் திருவுள
த்திலேற்று யிப்பாதகனைக்கொன்று தவிர்க்கவிரங்காயோ கற்தனேதே
வரீர் பெருமைகளை நினையாமல் மருகனென்றிகழ்ந்து யாகத்தைச்செய்த
தக்கன்கெர்வத்தையடக்கி அத்தலத்திலிருந்ததேவர்களுக்குத் தக்கதெ
ண்டனைகளைச்செய்ததைப்போல யிந்தகொடிய பாவிகளாகிய அவுணரி
டத்திற் காட்டலாகாதோ உலகங்களுக்குமிகுத்த துன்பங்களைச் செய்
துலவிய திரிபுராதிகளை நகைத்தெரித்து மன்னுயிர்களுக்கடுத்திருந்த உ
பாதிகளைத்தவிர்த் தாண்டவனைப் பலரும்புகழ்கின்றனர், அவர்கள்மரபி
ற்றோன்றிய கொடியவராகிய அவுணர் வசியிருக்கின்ற யிந்தமயேந்திரபு
ரியையும் தகித்துத்தினையாண்டு ரட்சிக்கலாகாதோ- தேவரீரிடத்திற் ப
த்திவயிராக்கியங்களைக்கொண்டு பூசிக்கின்ற அன்பர்களுக்கு நேர்ந்தயி
டையூறுகளைத் தவிர்த்தரட்சிப்பது விருதாகவிருக்கின்றதாயினும் அத்த
கையபத்திமான் யிடங்கள் அடியேனிடத்திற் சிஞ்சற்று மில்லாதபடியா
ற்பாராமுகமாகவிருக்கின்றீரோவென்று பற்பலவிதங்களிற்போற்றிமே
லும் யிதனைச்சொல்லுவான். சந்திரசடாதரக்கடவுளே லோகநாயகனே
கிருபாநிதியாகிய தேவரீரைநொந்து கொள்வது.புத்தியில்லாமையாகும்
ஆதலாற் நமதிடத்திற் மெய்ப்பத்தியில்லாவிடினும் அடியேனிடத்திரு
க்கின்ற குற்றங்களைமன்னித்து வேறொரு உதவிகளுமில்லாமல் வாடுகின்
றவன் முறைகள் திருவுளத்துக் கேராதன வாயினும் லோகநாயகனுதவா
ல் தாமேயிரங்கிவந்து பாதுகாத்துரட்சிப்பீராகில் எக்காலத்துந்தீராதயி
ந்ததுக்கசாகரத்தைக்கடந்து கடைத்தேறுவோம், அத்தகையபேற்றினைக்
கிடைத்தபோதிலும் பெருகாலமாக அனுபவித்திருந்த தெய்வலோகவா
ழ்வையொருபோதிலும் வேண்டேன் சிறந்ததவங்களைச்செய்திருக்கின்ற
மகத்துக்கள்-ரிஷிகள்- அவுணர்-ராட்சதர்-மானிடர்-முதலாகிய சகலரு
ம் புகழ்கின்றசெல்வப்பெருக்கையுடைய தேவேந்திரபோகங்களை அனு
பவித்திருந்த யான்பதியையிழந்து,தாய்தந்தையரைப்பிரிந்து தீனராகிய

தேவர்களுடன் யிக்கொடியசிறையிலகப்பட்டு வாடுகின்றதால் யின்ப
ஞ்சிறிது அதினாலுண்டாகுந்துன்பமானது மிகுதியாகக்கண்டனன் என்பி
னையும் கங்கைகொன்றைமாலைமுதலிய அலங்காரங்களைக்கொண்டிருக்கி
ன்ற பரஞ்சோதியே தேவரீர்கிருபாகடாட்சத்தினால்யிந்தஅரியசிறையை
நீங்கி மகிழ்வேனாயினும் பொன்னுலகவாழ்வை யினி யெக்காலத்தும்
வேண்டேன் கனவிலும்நினையேன் மோட்சசாம்பிராச்சிய வைபவங்க
ளைத்தரும்பெருமையினையுடையதேவரீர் திருவடித்தாமரைகளை நினைந்து
தவங்களைச்செய்து நித்தியவாழ்வைப் பெற்றுக் களிக்கவிரும்பினேன்
மேலும் தேன்களைத்துளித்துக் குளிர்ந்தநிழலை விரித்திராநின்ற கற்பக
த்தருக்களினது நீழலில் நவரத்தினமயமாகிய சிங்காதனத்திலிருந்துதிரி
லோகவாழ்வைச் சிலதினம் அனுபவித்தபாதகத்தினால்யித்தகையகொடி
யதெண்டனைகளைப்பெற்றனுபவிக்கலானேன் கரும்பை ஆலையிற்கொடுத்
துரசத்தைக் கிறிசித்துக்கொண்டெறியும் திப்பியைப்போல வாழ்வைமதி
த்திருக்கின்றனன், மற்றதேவர்கள் பதங்களுங் காலாதிகளில் அழியப்
டுப்போவதாகவிருக்கின்றது ஆதலாற் பரம்பொருளாகியசிவனேசிவனே
தேவரீர்பாதாரவிந்த நீழலில் வாசஞ்செய்யவிரும்பியிருக்கிறேன், பூரு
த்தவினைட்படிக்கு நன்குதீங்கென்னும் பாசத்தழுந்தி அதற்குரியயின்
ப துன்பங்களையனுபவித்து அக்காரணத்தினாலுண்டாகும் பிறவியானது
எக்காலத்தும் அபலமாகக்காணுகின்றது, பொன்னுலகவாழ்வும் நித்திய
மன்று மற்றப்பொருள்களெதுவும் நீடித்ததல்லாதபடியால் அரியதவ
ங்களைச்செய்திருக்கின்ற பதஞ்சலி வியாக்கிரமபாதர் - பிருங்கி- தும்பு
ருநாரதர் - பராசத்தி-யிவர்கள் தெரிசித்துக்களிக்கத்தக்கதாகச்சிதாகாச
கனகசபையினிடத்தில் நிருத்தஞ்செய்தருளிய தேவாதிதேவனே யினி
யாவது அடியோங்கள்படுந்துன்பத்துக்கிரங்கி யிக்கொடியசாவலைநீக்கி
திருவடிநீழலைத்தந்து ரட்சிக்கவேண்டும், ஆதிமூலமாய்ப் பிறிதிவு - அப்
பு-தேயு-வாயு ஆகாயமென்னும் பஞ்சபூதங்களாய் ஏகமாய் சத்திசிவ
மாய் விளங்குகின்ற சிவநாதனே யிக்கோலங்களை நினைக்குமிடத்தில் ம
ன்னுயிரனைத்தினையும் பாதுகாத்தாளுங் கிருபைக்குரியதன்றே பொன்
னையொத்த கொன்றைப்புஷ்பமாலையினையும் பிறையையும் கங்கையையு
ம் நருவெண்டலையையும் சர்ப்பமாலைகளையுந் தரித்திருக்கின்ற கர்த்தனே
உலகமாதாவாகிய பார்பதியாளைப் பாகத்திற் கொண்டுவிளக்கும் சன்ன
திமகிமையினாற் சராசரப்பிரபஞ்சங்களனைத்தினையும்விர்த்திக்கச் செய்து
அவைகளுக்குரிய வினைப்போகங்களை ஊட்டியாட்டி யுறக்கும் ஆதிதே
வனே அடியேனுக்கடுத்திருக்கின்ற துக்கவருத்தங்களைப்போக்கி பொ
ன்னுலகவாழ்விலிச்சைபெறாமல் விலக்கிச்சிறந்த தவங்களைச்செய்துயெ

முதற்சரிய தேவரீர் திருவடிநிழலில் வீற்றிருந்து சுகாதிதவாரியிலழுந்தி
க்களித்திருக்கும்படியாகிய செல்வத்தைத்தமியேனுக்கனுக்கிரகஞ்செய்
யவேண்டுமென்று பற்பலவிதங்களில் முறையிட்டுப் போற்றினவனாய்
விஷமானதுதலைக்கொண்டு வாடுவதைப்போல விசனமதிகரித்துமாறிமா
றிமனதைவருத்துவதினால் வாடிவருந்தி யாதொருசெய்கையுமற்று மயங்
கிச்சோபித்து யிறந்தவர்களைப்போல அறிவழிந்து மரணமூர்ச்சையாகவி
ழுந்தனன், சவுனகாதிரிஷிகளே-திரிலோகசக்கிறேஸ்பரனாகிய தேவராச
னுக்குப் புத்திரனாய் பொன்னுலகவாழ்வை யனுபவித்திருந்த சயந்தன்
யிப்பாடுபட்டமுன்னிலையில் மற்றதேவர்களும் தகாதபணிவிடைகளைச்
செய்துவருகின்றதினாலும் அவுணர்உபத்திரவங்களினாலும் மிகவும்வருந்
துகின்றபடியால் யிந்தயிடையூறுகள் எக்காலத்தில்நீங்கப் போகுதென்
கின்ற எக்கமானது மனதைப்பிடித்துபாதிக்கபரமசிவத்தைக்குறித்துப்
புலம்பிக்களைத்து அவர்களும் சோபித்துவிழுந்தனர், இக்காட்சியானது
எப்படிக்கிருந்ததெனில், வானத்தை யளாவவோங்கிப் பலகிளைகளையும்
விழுதுகளையும் பெற்றிருந்த ஒருஆலமரமானது பெருங்காற்றிற்பட்டுச்
சாய்ந்தகாலத்தில் அதின்பேரிற்படர்ந்திருந்த பசியகொடிகளானவை அ
ம்மரத்துடன்சின்னபின்னப்பட்டுமறிவதற்கொப்பாகவிருந்தது.

---

## கனவுகாண்படலம்

சவுனகாதிரிஷிகளே-இவ்விதங்களாக இந்திரதனையன் சயந்தனு
ம்மற்றதேவர்களும் அகண்டசாம்பிருச்சியப் பெருக்கையுடையமயே
ந்திரபுரியினிடத்திருக்கின்ற சிறைசாலைகளிற் கட்டுண்டுவருந்திச்சிவபிரா
னைநோக்கித் தங்கள்துக்கவருத்தங்களை முறையிட்டுச்சோர்ந்து அறிவி
ழந்து பிரேதங்களாக விழுந்துகிடைக்கின்றதறுவாயிற் சராசரப்பிரப
ஞ்சங்களனைத்தினும் எள்ளிலெண்ணெயைப்போலப் பரிபூரணமாகவிள
ங்கி நடிப்பிக்குங் கிருபைக்கடலாகிய ஆறுமுகக்கடவுள் அவர்கள்கிலே
சிக்கின்ற யிடையூறுகளைத்திருவுளத்திற்கொண்டு சிறுகுழந்தைகள் தனித்
துயாவரையுங்காணாமல் திகைத்துத் துக்கிக்கின்றகாலத்தில்அவ்வழுகைக்
குரலைக்கேட்டு ஓடிவந்தணைத்தப்பயந்தீர்க்குந்தற்றாயைப்போலக்கொ
டியசிறையிலகப்பட்டு அவுணரால்அதிகபாதைகளையனுபவித்து வருந்தி
மதிமருண்டு சோர்ந்திருக்கின்றசயந்தன் முதலாகியதேவர்க்கள் யின்ன

லைப்போக்கித் தேற்றிரட்சிக்கும்படியாகக் கிருபையுற்று யிவர்களைவிடு
விக்கும்பொருட்டு திருக்கயிலையைநீங்கித்திருச்செந்தில்மாநகரத்திலெ
ழுந்தருளி அவுணர்கள் களைகளைய கங்கணங்கட்டிக்கொண்டிருக்குஞ்ச
ரவணபவன் மயங்கிக்கிடக்கின்ற சயந்தன் கனவிற்றோற்றி மேல்நடக்க
விருக்கின்றகாரியங்களைத் தெருட்டித் தேற்றித் தயிரியம்பெறத்திருக்கச்
செய்யத்திருவுளத்திற்கொண்டெழுந்தகாட்சியைக்கேட்பீராக-வெற்றிக்
கொடிவச்சிராயுதம்--அங்குசம்பாணம்வெற்றிவேல்அபையம்சின்மயமு
த்திரை-கமலம்- மழு- தெண்டாயுதம்- வில்-மலர்மாலை-இவைகள்பொ
ருந்திய பன்னிருகரங்களும் பூரணச்சந்திரோதயம்போன்ற சண்முகங்
களும் பிறகாசிக்கத்தக்கதாக தாய்தந்தையில்லாத சிவபிரானைப் பிதாவா
கப்பெற்ற கந்தசுவாமியானவர் யிக்கோலத்துடன் சயந்தன் கனவிற்றோ
ற்றியதைக்கண்டவுடன் ராசகுமாரனுக்குச் சரீரம்பூரிக்க விழிகளில்ஆன
ந்தவாரிபொழிய மனப்பூரிப்புடன் விழிகள்களிக்கத்தெரிசித்துக்கரங்க
ளைக்கூப்பிக்கொண்டு கிருபைக்கடலே அடியருக்கெளியகடவுளே நாயி
னேன்யிக்கொடியபாதகர் வசத்திலகப்பட்டுவருந்துகின்றதுன்பங்களை
நீக்கிரட்சிக்கக் கிருபைகூர்ந்தெழுந்தருளினர், தமதுதிருநோக்கம்பட்
டவுடன் கிருதார்த்தனாய் பிறவியையொழித்து தன்னியனானேன், சத்த
னே தேவரீர்திருவடியைப் பார்க்குமிடத்தில் உலகங்களைரட்சிக்கின்றம
காவிஷ்ணுவாகவுந் தோற்றவில்லை சராசரப்பிறபஞ்சங்களைப் படைத்து
வரும் பிற்மதேவனாகவுங் காணவில்லை ஆதிதேவனாய் எள்ளிலெண்ணெ
யைப்போல எங்கும் பரிபூரணமாகநிறைந்து பிராணிகளனைத்தையும் அ
வற்றின்வினைக்கீடாக நடிப்பித்து கண்டுகளித்திருக்கும் ஆதிமூலமாகி
யபரமசிவமாகவும் நினைக்கப்படவில்லை ஆதலால்தேவரீரின்னகடவுளெ
ன்று கொடியபாதகனாகிய அடிமைக்குத்தெரிவதாகத் திருவுளம்பற்ற
வேண்டுமென்று போற்றுகின்றதேவராசகுமாரனிடத்திற் கிருபையுற்
று அப்பா சயந்தனே கேட்பாயாக நாம்ஆலகாலத்தையும் வடவைக்கன
லையும் அடக்கிதேவர்க்கள் முதலியபிராணிகளையும் உலகங்களையும் ரட்
சித்தகிருபாநிதியாய் கொன்றைமாலை மூன்றாம்பிறை கங்கை நகுவெண்
டலை சற்பம் யித்தகைய பூஷணங்களைத்தரித்திருக்கும் சடாமண்டலதா
ரியாகிய சிவபிரான் நுதல்விழியிலுதித்த சரவணபவனாகும் யிவடத்தில்
நாமெழுந்தருளிய காரணமேதெனில் உன்னிடதுக்கவருத்தங்களையும்ம
னக்கோட்டத்தையுந்தெரிந்து அவற்றினைநீக்கிரட்சிக்கவும் மேலும் உ
ன்னைப்புத்திரனாகப்பெற்ற தேவராசனானவன் தன்குறைகளையும்விண்ண
வர்கள்படும் வருத்தங்களையும் தவிர்த்து உன்சிறையைநீக்கித் தரவும்நம
க்குவிண்ணப்பஞ்செய்து வேண்டிக்கொண்டபடியால் சிவபிரான் கட்ட

ளைப்படிக்கு அளவற்றபூதப்படைகளுடன் திருக்கயிலாயவரையைக்கட
ந்து பூலோகத்துக்குவந்து பற்பல மாயவஞ்சகங்களினால் ரிஷிகள் தே
வர்கள் முதலானவர்களைபெருகாலமாகவருத்திவாட்டிக்கொண்டிருந்த
கிறவுஞ்சபறவதத்தையும் அரியவரங்களைப்பெற்று எமனைப்போல உலக
ங்களைவருத்தியிருந்த தாருகாசூரனையும் வேலினாற் பிளந்துகொன்று அவ
ன்சேனைகளையும் நாசப்படுத்தினம், அதன்பின்பு திருச்செந்திற்பதியில்
வந்துசேர்ந்தோம் தாமரைக்கமலவாசியாகிய பிற்மதேவன் மகாலட்சு
மியைமார்பிற்கொண்டிருக்கும் விஷ்ணு உன்பிதாவாகிய தேவேந்திரன்
மற்றவிண்ணவரனைவரும் நம்மிடத்திற் சவுக்கியமாகவிருக்கின்றனர், உ
ன்தாயாகிய இந்திராணியானவள் சிலதேவர்போற்றிவரமகம்மேருவினி
டத்திற் சுபமாகவாசஞ்செய்கின்றனள், நேத்தியத்தினம் நமது சகோதர
னாகிய வீரவாகுவை உங்களைவிடுதலைசெய்விக்கும் பொருட்டுச் சூரபது
மனுடன் பேசும்படிக்கு யிந்தப்பட்டணத்துக் கனுப்பினேம் அவன் த
ன்னுற்கூடியவரையிற் சமாதானஞ்சொல்லியபோதினும் சூரன் அதற் கி
சையான் அக்காலத்தில் வீரவாகுகோபித்து தன் பேரிற்சண்டைக்கு வரு
ம் அவுணராசபுத்திரனொருவனையும் அளவற்ற சேனைத்தலைவர்களுடன்
அவுணவெள்ளங்களையுங் கொன்றுவாட்டி ஒப்பற்ற யிந்தமயேந்திரபுரி
யையக்கினிதேவனுக்கிரைகொடுத்துச் சாம்பலாக்கி நம்மிடத்துக்கு யி
த்தினம் வந்தவுடன் பிறையாணப்பட்டு நாளையத்தினந் திருச்செந்திலை
க்கடந்து பூதவெள்ளங்களுடன் யிந்தநகரத்துக்கருகில் வந்திறங்கி பத்
துதினத்துக்குள்ளாக தேவர்கள் மானிடர் முதலாகிய சகலரையும்பலயு
கங்களாக அலைத்திருந்த சூரபதுமன் அவன்சகோதரர்கள் புத்திரர்கள் ம
ந்திரி பிரதானிகள் சேனைத்தலைவர்கள் அளவற்றவெள்ளம் அவுணப்படை
கள் முதலாகச் சின்னபின்னப்படக்கொன்று வேரறப்பாத்தபின்பு உன்
னையும் மற்றதேவர்களையும் பலகாலமாக அடைத்துவைத்திருந்த கொ
டியசாவலைவிடுவித்து பழையபடிக்குப்பொன்னுலகத்திற்சேர்த்து தாய்
தந்தையருடன் மகதயிஸ்பரியங்களையனுபவித்துச் சவுக்கியத்திலிருக்கச்
செய்வோம் ஆதலால் யினியாதொருவருத்தங்களையும் மனதில் நினையா
மற் சந்தோஷமாக விருக்கக்கடவையென்று ஞானவான்களறிவில் நிற்த
ஞ்செய்திருக்கும் ஆதிதேவனாகிய சிவசுப்பிறமணியதேவர் அனுக்கிரக
ஞ்செய்த திறவைப்பெருக்கைக்கேட்ட சயந்தராசனானவன் மனக்கிலே
சத்தைப்போக்கிச் சஞ்சலங்களையொழித்து ஆனந்தவாரியில்மூழ்கிச்சரீர
ம்புளகித்து ரோமங்கள் சிலிர்த்துக் களிமிகுதியினால் நேத்திரங்களில்
ஆனந்தசெலமானது பெருக்கெடுத்தோடவும் பற்வதாகிறதியாகவிளங்
கும்புஜங்கள் பூரித்தோங்கவும் பெறுதற்கரிய ஞானஅமுதை எளிதிற் சி

டைத் தனுபவித்தவர்களைப்போல மனங்குளிர்ந்து வாய்குழறச் சிவகுமாரன் பெருமைகளை வேதவாக்கியங்களினாற் றுதித்துத் திரோசபரவசத்தனாய் ஆடிப்பாடிச் செயசெயவெனப்போற்றினன், சவுனகாதிரிஷிகளே அக்காலத்தவனடைந்த சந்தோஷப்பெருக்கினை யாவரால் அளவிட்டுச்சொல்லப்படும் யிவ்விதமாகத் தனக்கடுத்திருந்த துயரங்களையொழித்து ஆனந்தத்தழுந்திய தேவராசகுமாரன் எமதுகர்தனுசிய குமாரதேவர் செந்தாமரைக் கமலத்தையொத்த பாதார விந்தங்களிற் பணிந்து கரங்களைக்கூப்பிநின்று அவர்பெருமைகளைக் கொண்டாடி யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், தேவரீர்திருவடிகளைத் தஞ்சமாகநம்பியிருக்கின்ற அடியவர்கள் துன்பங்களைத் தடுத்தாள்வதற்குக் கர்த்தனே தாமேயெழுந்தருளிப் பாதுகாத்துரட்சித்தீர் யித்தகையகிருபைப்பெருக்கின் திறங்களைத்தெரிந்து புகழ்தற்கு அறிவைப்பெறுதவனுதலால் யித்தேவர்களுடன் தமச்சுடிமையையாயினேம்- எங்களிடத்திருக்கின்ற குற்றங்களைமன்னித்து வழியடிமையாகக் கொண்டாள வேண்டுமென்று சயந்தனென்பவன் பலவிதங்களில் விண்ணப்பஞ் செய்து கொள்ளுகின்றதைச் சுயஞ்சோதிமயமாகவிருக்கின்ற சரவணபவன்கேட்டருளி அப்பா சயந்தனே யிதுபரியந்தங்கொடிய சூரனாற்பட்டதுன்பங்களைமறந்துவிடக்கடவை உனக்கொருசிந்தனைகளுமில்லாமல் காக்கக்கடவோம் யிதுவல்லாமல் நமதுகட்டளையின்படிக்குச் சூரனிடகருத்தைத்தெரிந்துவரும்படிக்குயிலட்சம் தூதாகவந்த வீரவாகுவானவன் சற்றுநேரத்தில் யிந்தலத்துக்கு வந்து உன்னையும்மற்றதேவர்களையுங்கண்டு உன் தாய்தந்தையர்சவுக்கியங்கள்முதலாகத்தெரிவித்துஉங்கள்மனங்கள் திருத்திபெறத்தக்கதாகமேல்நடக்கப்போகின்ற காரியங்களையுஞ் சொல்லிப்போகச் செய்வோம் அதைக்கண்டுசகலமும் உண்மையாகநம்பி மனதிற் றிடம்பெற்றிருப்பையெனப்போதித்து சரவணபவன்மறைந்தனர், அதெப்படிக்குக்காட்டியதெனில், ஆதிகாலத்திற் பிற்மதேவனானவன் தன்சிருஷ்டிவிர்த்தியடையாதகாரணத்தினுல் வருந்திக்கிலேசித்துக் களைத்திருந்தவன் கனவில்சிவபிரானெழுந்தருளி பிரமனைத்தேற்றிக் குமாரனே மனமிரங்கவேண்டாம் உன்கருத்தின்வண்ணம் முற்றுப்பெறும்படிக்கு ஏகாதச உருத்திரனை யனுப்புவோம் அவர்களால் சிருஷ்டிமலிந்து பழையபடிக்குவிளங்குமென்று அனுக்கிறகித்து மறைந்ததைப்போல விருந்தது, அத்தருவாயிற் கொடியதுன்பத்திற்பட்டு ஒடுங்கியிருந்த ஐம்புலன்களும் தத்தமதுநிலைகளிற்சேர்ந்து அறிவைவிளக்கியபடியாற் சயந்தன் களைதெளிந்து கனவைமறந்து விழிகளைத்திறந்து சுற்றுமுற்றும்பார்த்து விஷமானதுதலைக்கேறி மயக்கியகாலத்திற் பரியாரிமந்திரித்த முயற்சியினுலிறங்கித்தெ

யிந்தவனைப்போலவெழுந்து மனக்களிப்புடன் தன்கனவிற் றோன்றியபாலசுப்பிரமணியதேவர் காட்சியையும் அவானுக்கிரகித்துப்போன வாக்கியங்களையும்நினைந்து நடுக்கங்களைப்போக்கி மனத்தெளிவுடன் யிதனைப்பேசுகின்றனன், ஓ கர்த்தனே பலயுகங்களாக அடியோங்கள்யாதொருதுணையுமில்லாமல் யிந்தபாதகர்வசப்பட்டு வருந்திமுறையிட்ட விண்ணப்பமானது யிக்காலத்திற்றேவரீர் திருச்செவிகளினேற்று எங்கள் துக்கவருத்தங்களை தவிர்க்குங்காலமும்நேர்ந்ததோ எங்களையும் ஒருபொருளாகமதித்தாண்ட கடவுளே யித்தருணத்திற் காத்காவிடில் யாங்கள்மிகவும் நலிந்து நாசமடைவோம் அதைத்தவிர்த்துப் புத்திரபாவகமாக ரட்சித்திடென்று சிவகுமாரன்திருவாய்மலர்ந்தகாரணங்களை நினைந்துநினைந்து அதினாலுண்டாகும் ஆனந்தவாரியில் மூழ்கிக் களித்து நகைமுகனாயிருக்கின்றதறுவாயிற் சோபித்திருந்த தேவர்க்கள் கனவிலும் சயந்தனுக்குப் போதித்தபடிக்கு தேறுதலைகளைச்சொல்லி ஓ தேவர்க்களே சிலதினத்தில் உங்கள்வருத்தங்களொழிந்து பழையபடிக்குநிலை பெற்றுஉங்கள்செல்வங்களைப்பெற்று வாழப்போகின்றீர் அதுபரியந்தம்சலனமற்றிருப்பீரென்று தேன்களையும் மகரந்தங்களையும் யிறைத்து பரிமளித்திருக்கின்ற கொன்றைப்புஷ்பமாலிகையைத்தரித்த கங்காசடாதர மூர்த்தியாகிய சிவகுமாரன் அனுக்கிரகித்தும்போயினகாலத்திற் றேவர்க்கள் நித்திரைதெளிந்தெழுபவனைப்போல உணர்ச்சியைப்பெற்றெழுந்துகந்தன்வாக்கியங்களை எண்ணியெண்ணிக் களிமிகுதியினால் ஆனந்தக்கூத்தாடிக்கரங்களைக்கூப்பிக்கொண்டு பலதிக்கினுமோடிப் பாலசுப்பிரமணியக்கடவுளை அனேகவிதங்களிற் றுதித்து வாழ்த்தினவர்களாய் சகடனசித்தமுடையதுற்மாற்கராகிய காவலாளிகள்யிக்கனவின்சவிஸ்தாரங்களைத் தெரிவராயின் என்செய்வாரோவென்னும் வருத்தங்களினால் நடுநடுங்கிமெல்லமெல்லசயந்தனிருக்கின்ற தலத்தைச்சேர்ந்து தாங்கள்கண்டகாட்சியைச் செவிகளிற்சொலலக்கேட்டுத் தனுக்கனுக்கிரகித்த விதமாகவே காணப்பட்டபடியால் ஆனந்தவாரியில்மூழ்கி புலகையுண்ட விஷ்ணுவைப்போலச் சரீரம்பூரித்தோங்கி உரோமங்கள் சிலிர்க்கப்போதவாரிவிழிகளிற்பெருகக்களித்து ஆறுமுகக்கடவுள் யிவ்வுலகங்களனைத்தினும் சோதியினொளியைப்போலப் பரிபூரணமாகநிறைந்து நடிப்பித்துக்காலபக்குவங்களைக்கணித்து ரட்சிக்குங் குணதிசெயங்களைப்போற்றி சிவகுமாரன் திருநாமங்களை வேதவாக்கியங்களிலுற்றுநித்துக்கொண்டுசயந்தனும்மற்றதேவர்க்களும் வீரவாகுதேவர்வரவை எதிர்பார்த்திருந்தனர்.

சவுனகாதிரிஷிகளே- இவ்விதமாக இந்திரதனயன் சயந்தனும் மற்றதேவர்களும்களித்திருக்கின்றதருவாயிற்சூரபதுமனுக்குப்பிரதானமந்திரியாகிய தருமகோபன்மாளிகையின்மீதில் வீற்றிருந்து தேவர்கள் காவலிலிருக்கின்ற தலத்தைத்தேடிப்பார்த்துவந்த வீரவாகுதேவர்விழிகளிற் கொடியபாதகராகிய பலகோடி அவுணர் போற்றிவரும் சிறைசாலைதோற்றப்பட்டமாத்திரத்திற் காவலர்கண்ணிமை கொட்டாமல் எத்தலங்களினும் அடர்ந்திருப்பதைத்தெரிந்துயிப்பாதகர்கள்தன்னைக்காணுமலறிவழிந்திருக்கவும் விண்ணவர்நிசதெரிசனமாகத் தன்னைப்பார்த்துவார்த்தையாடவும்நினைந்து ஆதியில் மாபெலிச் சக்கிறவத்தியினிடத்தில் தானமேந்தி விசுவரூபங்கொண்டு பூமியை ஓரடியி ளளந்தமகாவிஷ்ணுவையொத்த வல்லமைசாலியாகிய வீரவாகுதேவரானவர்பிரணவப்பொருளாய் ஆதிமூலமாய் பிராணிகளிடத்திற் அந்தரான்மாவாகப் பொருந்திநடிப்பிக்கும் குமாரதேவனை மனதிற்சிந்தித்து அவர்திருநாமத்துக்குரியசிறந்தமந்திரத்தைச் செபித்துக்கொண்டு தீயகுணங்களைப்பெற்றிருக்கின்றஅவுணர்சூழ்ந்து காத்திருக்குஞ் சிறைச்சாலையிற் றமதுருவைக்கொண்டுபிறவேசித்தமாத்திரத்திற் கரியதிரோசத்தைதப்படைத்த காவலர் அறிவழிந்து குமாரதேவர் திருநாமமந்திரமுயற்சியினால்மயங்கி சித்திரப்பிறதமைகளைப்போலக் கண்களைவிழித்தபடியாய் பூமியில்விழுந்து கிடக்கின்றமுன்னிலையில் வெற்றிமாலைபுரளும் வேலைத்தாங்கிய பாலசுப்பிறமணியதேவர் சகோதரனுய் சேனைத்தலைவனுய்த் தூதாகவும்வந்திருக்கின்ற வீரவாகுவைச்சயந்தன் முதலாகியதேவர்கள் வெளிப்படையாகக் கண்டவுடன் மசதயில்பரியங்களை யனுபவித்திருக்கும் சூரன் கட்டளையின் படிக்கு யிப்பாதகராகிய காவலர்செய்யுந் தகாததெண்டனைகளுக்கஞ்சி நாமெல்லவரும் மாண்டவர்களைப்போல மூற்சித்துக்கிடந்த தருவாயில் நமதுகனவில்வெழுந்தருளி தயிரியங்கள் சொல்லித் தேற்றிப்போன கிருபாநிதியாகிய சுப்பிறமணியதேவர் தூதனாகவேண்டுமெனநிதானித்து ஆனந்தவாரியில்மூழ்கியிருக்கின்ற தருவாயில் வீரவாகுதேவர்அவர்கள்வாசஞ்செய்கின்ற சாலையைச்சேர்ந்து வேலாயுதக்கடவுள் திருநாமங்களைச் செபித்துக்கொண்டு செயசெயபோற்றியெனத்துதித்துப் பொன்னுலகவாழ்வைநீங்கிச் சிறையிற்பட்டுவருந்துகின்றசயந்தனுக்குச் சமீபத்தில்வந்தனர், இவ்விதமாக ஞானவான்களிறுதயகமலத்தில் விளங்குகின்றசரவணபவன் மந்திரங்களை வீரவாகுதேவர் செபிக்கின்ற ஓசையானது அமுததாரையைப்போலச் செவிகளிற் கேட்டமாத்திரத்தில் மனங்குளிர்ந்து அதுபரியந்தம் வருந்தியிருந்த துயரங்களையொழித்து சயந்தராசனுனவன் பண்டையழகியவனைப்போல நெருங்கிக் கரங்களைக் கூப்பிக்கொண்

டயிதனைச்சொல்லுவதாயினன், அடியோங்கள்செய்தபாதகமானதுசூழ்ந்
தலைப்பதைப்போல அக்கினிக் கொழுந்தையொத்த செம்பட்டமயிரா
ப்பெற்ற ராட்சதர்களிடைவிடாமற் சூழ்ந்து சகனதெண்டனைகளைச்செ
ய்து வருவதற்குச் சகிக்கப்படாமல் அறிவழிந்து பேயனைப் போலிருக்
கின்ற எங்களிடத்திற் கிருபையுற்று ஐயனே தேவரீரெழுந்தருளுங் கார
ணமென்னமோ அதைதயைசெய்து சொல்லவேண்டுமென்று சயந்தன்
போற்றுகின்ற தருவாயில் நீதிபரனும் கிருபைக்கும்பாத்திரமாய் செய
சாலியாகவுமிருக்கின்ற வீரவாகுதேவர் இந்திரதனையனைப் பரிவாகப்பா
ர்த்து ஓ சயந்தனே என்வரவின் காரணங்களைக் கேழ்ப்பாயாக- தேவ
தேவோத்தமனாகிய சிவபிரான் நுதல்விழிகளிற்றோற்றிய சண்முகப்பெ
ருமானை யுன்பிதாவாகிய இந்திரன்வணங்கி உன்னைவிடுவித்துத்தரும்ப
டிக்குக் கேட்டுக்கொண்டதற்கிரங்கி அவ்வாறேசெய்வோமெனத் திரு
வாய்மலர்ந்து பூதப்படைகளுடன் திருக்கயிலையைக்கடந்து பூமியில் வ
ந்து தாருகனைக்கிரவுஞ்சகிரியுடன்வாட்டியிப்போது திருச்செந்திற்பதி
யிலெழுந்தருளியிருக்கின்றனர், உன்பிதாவுக்கு வாக்குதத்தஞ் செய்தப
டிக்குஅவர்சேனைகளுக்குத் தலைவனாகவும் திருக்கயிலையைப் போற்றிவ
ரும் பெருமையையுடைய நந்திதேவர் கணத்தலைவனாகவு மிராநின்றஎன்
னைப் பரமசிவகடாட்சத்தினால் மகதயிஸ்வரியங்களைப்பெற்றுவாழ்கின்ற
சூரபதுமன் சபையைச்சேர்ந்து உங்களைவிடுதலைசெய்யும்பொருட்டுசந்
திபேசிவரும்படிக்கு தூதுவிட்டனர், என்பெயர்வீரரில்வீரனாகியவீரவா
குதேவனென வழங்கிவருவனெனச்சொல்லக்கேட்ட சயந்தனானவன்திரு
ப்பாற்கடலிலுதித்தஅமுதத்துடன் தவமுயற்சியினாற்கிடைக்கின்ற தத்து
வஅமுதையுமுண்டு ஆனந்தத்தடைந்து களிக்கின்றவனைப்போல மகிழ்
சிறந்தவனாய் ஐயனே தேவரீர்கிருபையுற்று பெருங்காலமாகவருந்திகொ
டியபாதகர் தெண்டனைகளிற்பட்டுவாடுகின்ற அடியோங்கள் துயரங்க
ளைநீக்கி ரட்சிப்பதாக எழுந்தருளியதால் துக்கசாகரத்தில்மூழ்கி வாடிக்
களைக்கின்றயாங்கள் அதன்கரையைக்கண்டு வெளிவந்து வாழ்த்ததுமன்
றிபிற் பிறந்தவினைகளையும்போக்கிக் கிருதார்த்தராயினோமென்று சயந்
தன்புத்தியாக வசனிப்பதை வீரவாகுதேவர் திருச்செவிகளினேற்று யி
தங்கினவராய் யிதனைச்சொல்லுவார், கொடிய செய்கைகளைப்பெற்றிரு
மாந்திருக்கின்ற சூரபதுமனிடத்துக் கென்னைச்செலுத்திய வேலாயுதக்
கடவுளானவர் நாளையத்தினமே யிவடம்வந்து அவுணர்பூண்டைவேரறக்
களைந்து உங்கள் சிறையையும் விடுவிக்கவிருக்கின்றனர், மேலும் பூர்வீ
கமாகஅனுபவித்திருந்த பொன்னுலகவாழ்வையும் வேண்டியபேறுகளை
யும் பெற்றுவாழ்வீர்கள் வெற்றிமாலைபுரளும் வலியபுயங்களைப்படைத்

த தேவர்களே எமதிறைவனாகிய சுப்பிரமணியக்கடவுளினது பிறபாவத்தைச்சொல்லி முடிவதோ தம்மைமெய்ப்பத்தியினாற் பூசித்துவழிபடும்பத்தர்களுக்கு மோட்சசாம்பிருச்சியத்தைத்தந்து சுகத்திலிருத்தியும்சிருஷ்டிகர்த்தனாகிய பிர்மதேவன் முதலாகிய தேவர்க்கள் அவரனுக்கிரகத்தினால் வாழ்ந்திருக்கின்றனரெனச்சொல்லுவோமாகில் அத்தேவனைமனப்பூர்வகமாக நம்பிப்போற்றுகின்ற உங்களுக்குக்கிடைக்க விருக்கின்ற பேறைப்புகழப்படுவதோ யினிஉங்களுக்கு யாதொருகுறைகளும்நேராமல்சுகத்திலிருப்பீர்கள் சிலகாலங்களுக்குமுன்னம் பிரணவவாக்கியத்தின்பொருளை வெளியிடவறியாமல் மயங்கியபிரமனை சிறைபடுத்தி சிருஷ்டித்தொழிலைப் பலகாலம் நடத்திவருமுன்னரியிற் சிவபிரானெழுந்தருளிக்கேட்டுக்கொண்டபடியால் அவன்சிறையைவிடுதலைசெய்து ரட்சித்த சண்முகப்பெருமாள் உங்களிடத்திற் பரிபூரணகடாட்சம் வைத்திருக்கும்போது மனக்கவலைகள் முதலியகொடுமைகளனைத்தும் அதப்பட்டுப் புனிதராவதொருபொருளோ மேலும்பிறவிசாகரத்தையுங்கடந்துமோட்சவீட்டையும் பெறுவீர்கள் பிரமனைச் சிறைபடுத்தியபோது சொர்கமத்திய பாதலங்களிற்பட்ட சராசரங்களைப் பழையபடிக்கு நிலைபெறநாட்டிய மூலகாரணராகிய சிவசுப்பிறமணியதேவர் உங்களைச்சூரபதுமன் பாதைசெய்தடைத்துவைத்த சிறையைவிடுவிக்கத் திருவுளங்கொண்டு யிவடம் வருவாராகில் உங்கள்தவத்தை யின்னவிதமென்று புகழப்படுவதோ- இத்தகைய பேற்றினைக்கிடைத்தவர்களுமுண்டோ அளவிறந்தபாதகங்களைச்செய்து வருங் கொடியஅவுணர்வாசஞ்செய்கின்றயிந்தமயேந்திரநகரத்தில்அறிவாளிகளாகவிருப்பவர்கள் வரவிரும்பார்கள்எமதுமற்றனாகிய சிவகுமாரன் பணித்தபடியால் மனவருத்தத்துடன்யிவடம்வந்தயான்உங்களைக்கண்டமாத்திரத்தில் அவ்வாட்டத்தினை நீங்கி அளவற்றமகிட்சியைப்பெற்றிருக்கின்றனனென வீரவாகுதேவர்சொல்லிய வாக்கியங்களைக்கேட்ட இந்திரகுமாரனாகிய சயந்தன் ஆனந்தபரவசத்தனாய் .நாங்கள்ராட்சதர் காவலிற்பட்டு யிந்தநகரத்திற் சிறைசாயத்துவந்து சேர்ப்பதற்கு முன்னமே என்தாய்தந்தையர் சூரபதுமன் கொடியநினைவைத்தெரிந்து ஒடியொளித்தனர், அவர்களிருக்கின்ற தலமும் சவுக்கியங்களும் மேல்நடக்கவேண்டிய எத்தனங்களுக்குத் தேடியிருக்கின்ற காரணங்களையும் அடியேனிடத்திற்றயைசெய்து சொல்லவேண்டுமென்றுவருந்திக்கேட்பதற்கு வீரவாகுதேவர்யிரங்கி ராசகுமாரனே உன்பிதாவானவன் இந்திராணியுடன் பொன்னுலகை விட்டபின்பூமியில்வந்துசேர்ந்து மோடசசாம்பிருச்சியத்தை எளிதிற்றரவல்ல மகத்துவமுடைய சீகாழியென்னுந் தெய்வீகத்தலத்திற்போய் அப்பதியிலெழுந்தருளியிரு

ங்கின்ற பரமசிவத்தைத்தெரிசித்துப்போற்றி பரிமளமிகுத்த திவ்வியம
லர்களினல் அரிச்சித்துக்கொண்டு சிலகாலமிருந்தபின்பு அவுணப்பாதக
ர்உபாதியினல் அத்தலத்தைக்கடந்து திருக்கயிலைக்குப்போய்ச் சிவபிரா
னைத்தெரிசித்து தங்களுக்கடுத்திருக்கின்ற வருத்தங்களையும் சூரன்கொ
டியசெய்கைகளையும் விண்ணப்பஞ்செய்துக்கொண்டத்தின்பேரில்கற்த
னிரங்கி எமதிறைவனுகியசரவணபவக்கடவுளை நுதல்விழிகளின் மூலமா
கப்படைத்து அளவற்றபூதப்படைகளையுங்கூட்டிச்சூரனைச்செயித்துதே
வர்க்களை நிலைபெறச்செய்துவரக் கடவையெனப் பணித்து விடைதந்த
னுப்பியபடிக்குக் குமாரதேவர் திருக்கயிலையைக்கடந்து பூமியில்வந்து
தாருகனையும் கிரவுஞ்சபர்வதத்தையும் வெற்றிவேலினற்பிளந்துகொன்
று திருச்செந்திலென்னும் சிறந்ததலத்திற்சேர்ந்து இந்திரன் மகாவிஷ்
ணு பிர்மதேவன்முதலாகிய தேவர்க்கள்போற்றிச் சூழவிருக்கின்றனர், உ
ன்தாயும் சவுக்கியத்திலிருக்கின்றனவெனச் சவிஸ்தாரமாகச்சொல்லியகா
ரணங்களைச்சயந்தன்கேட்டவுடன் மனதிற் கொண்டிருந்த சந்தேகங்க
ளைநீங்கினவனுய் ஐயனேதேவரீர் அடியேனிடத்திற் கிருபையுற்றுச்சொ
ல்லியசந்தோஷச்சேதியானது தாய்தந்தையர்-குரு தெய்வமாகிய-வெற்றி
வேலாயுதமூர்த்தி யிவர்களை விழிகளுக்கெதிரிற் கண்டுகளித்ததையொப்ப
க்காட்டுகின்றது, செய்யாமற்செய்த உதவியாக எண்ணுவதல்லது உமக்
குமாறுயென்ன நடத்தப்போகின்றனனென்று சொல்லியசயந்தனையும்
மற்றதேவர்க்களையும் வீரவாகுதேவர் தயையாகப்பார்த்து நீங்கள்பெரு
ங்காலமாக யிப்பாதகர்சிறையி லகப்பட்டுவாடுவதைக் குமாரசுவாமியார்வி
டுவித்துப் பாதுகாக்குங்காலம் சமீபித்திருக்கின்றது, அதுவரையிற்சகித்
திருப்பீர்கள் அத்தேவனை என்னெனநினைத்திருக்குறீர்கள் ஒப்புவமைய
ற்றபரம்பொருளாய் சோதிமயமாய் யாவராலுங்காணவொண்ணுத மூல
காரணனுய் தேவதேவோத்தமனுக விருக்கின்ற ஆதிமூலமே சண்முகங்க
ளும் பன்னிருகரங்களையும் தண்டைசதங்கைகள் கொஞ்சும் அழகியசெ
ந்தாமரைமலரையொத்தபாதாரவிந்தங்களையும்பெற்று கந்தசுவாமியெ
ன்னும் திருநாமத்தைக்கொண்டு சகலருந்தெரிசித்துக் கிருதார்த்தராதற்
பொருட்டு எழுந்தருளியிருக்கின்றனர், இத்தேவன் தோற்றத்துக் கே
துவேதெனிற், சிவபிரான் கடாட்சித்த வரமுயற்சிகளினல் விறிக்கொடு
ங்கோல்செலுத்திவருகின்ற சூரபதுமனுக்கஞ்சி-மகாவிஷ்ணு-பிர்தேவ
ன்-தேவராசன்-விண்ணவர்-மானிடர்-முதலாகிய பிராணிகள்வருந்திவா
டுவதையும் நீங்கள்பட்டிருக்கின்ற சிறையையும்நீக்கிச் சகலபுவனங்களை
யும் பழையபடிக்குச் சலனமற்று நிலைபெற்றுவாழும்படிக்குச் செய்ய
நினைத்து வெளிப்பட்டதாகும், இதுவல்லாமல் ஆதியில் தக்சனுனவன்

தனக்குச்சகலசெல்வங்களையுங்கடாட்சித்தசிவபிரானைமருகனென்றெண்ணி அவர்பெருமைகளை மதியாமல் அகந்தையுற்று அக்கடவுளை நீக்கிச்செய்தயாகத்தில்-விஷ்ணு-பிரமன்-இந்திரன்-முதலியதேவர்க்கள்அவன்கட்டளைக்குட்பட்டு தகுந்ததாதென நினைந்து யாராமல்அவிர்யாகத்தையிச்சித்துண்ட பாதகத்துக்குத் தக்கதெண்டனைகளை வீரபத்திரக் கடவுளைக்கொண்டு செய்வித்தும் கொஞ்சம்மிச்சமிருந்த துகளைசூரபதுமனால்வாட்டியனுபவிக்கச்செய்தனர், அத்தகையதேவாதிதேவனாகியசிவபிரான்கட்டளையை ஆறுமுகக்கடவுளினாலல்லது மற்றெவர்களால் நீக்கப்படும்மிதற்குச் சிலதிஷ்டாந்திரத்தைக் காட்டுகின்றேன் அதனால் தெரிந்துக்கொள்ளக்கடவை அளவற்றயுகங்களாய் தேவர்க்கள் ரிஷிகள் மானிடர்முதலாகியவர்களை பலமாயைகளைக்காட்டி அலைத்துக்கொண்டிருந்தகிரவுஞ்சபர்வதத்தையும் சராசரப்பிரபஞ்சங்களுக்கு எமனைப்போல வருத்தித்திசைகளைவென்று மகாவிஷ்ணுவுடன்போராடி அவர்செலுத்திய சக்கரத்தையுங் கழுத்தணியாகத் தரித்துக் கொடுங்கோல்செலுத்திவந்த தாருகாசூரனையும் வெற்றிவேலினாற் பிளந்துஅவுண வெள்ளங்களையுங் கொன்றுவாட்டியதை என்னென்றுநினைந்திருக்கின்றனை பரமசிவகடாட்சத்தினுற் பலவளங்களையும்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டுயுகங்களாக ஆண்டுகொண்டு தீனாவாட்டி வருத்திவரும் அழிவற்ற வச்சிரதிரோகத்தைப்பெற்ற சூரபதுமன் குலநாசஞ் செய்வதற்கு முகூர்த்தநாள்கொண்டதாகமதிக்கக்கடவைபொன்னையொத்தமகரந்தங்களையிறைத்துப்பரிமளித்துத் தேன்களைத்துளிக்கும் கற்பகமலர்மாலை புரளத்தக்க புயங்களையுடைய தேவராசகுமாரனே யின்னமுஞ் சொல்லக்கேட்பையாகஎமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவர் சற்றுகோபங்கொண்டு மந்தரத்தையொத்து மணிகள்கலிக்குந் தனுசைவட்டாகாரமாக வளைத்துஒருசூரியபாணத்தைச்செலுத்துவராயில் யிந்தசூரன் முதலாகிய அவுணவீரர்களனைவரும்அதப்பட்டுப்போவதற்குச் சந்தேகமில்லை, அப்படிக்கிருக்கபிரமன்விஷ்ணுதேடிக்காணயரியசோதிமயமாகிய சிவசுப்பிரமணியதேவர்திருக்கரத்திற்கோடிசூரியப்பிரகாசமாக விளங்குகின்றவெற்றிவேலாயுதத்துக்கெதிரொன்றிருக்கின்றதெனச்சொல்லப் போமோ அந்தசிறந்தபடையைப் பிறையோகிப்பது அதிசமுயற்சியாக வெண்ணவேண்டியிருக்கின்றது சத்தசாகரங்கள் அஷ்டகுலாசலங்கள் சராசரப்பிரபஞ்சங்களடங்கியிருக்கின்ற அண்டகோடிகளனைத்தையும் நிமைப்போதிற்சாம்பலாக்கி மீளும் அப்படிக்கிருக்கச் சூரபதுமன்முதலிய அவுணவீரரையும் சேனைவெள்ளங்களையும் மாய்த்துச்செயங்கொள்ளத்தக்கதாகக் குமாரதேவர் தாமேயெழுந்தருளியதை யோசிக்குமிடத்தில் யிதுவுமொரு

திருவிளையாடலாகும் யிவையன்றியும் மகரமச்சங்கள் திமிதிமிங்கலகிலங்கள் உலவித்திரிகின்ற சமுத்திரத்தை அகழியாகப் படைத்திருக்கின்ற யித்தமயேத்திர புரியையாண்டிருக்கின்ற சூரபதுமன் விசாலமாகியமார்பைவெற்றிவேலினூற் பிளந்து செயங்கொண்டபின்பல்லது உங்களரிய சிறையை மீழ்க்கப்படாதெனத்தெரிந்தபோதினும் வேதசாஸ்திரவிதிப்படிக்குப் பெரியோர்கள் நடந்துகொள்ளவேண்டும் நீதியையோசித்துச்சிவசுப்பிரமணியதேவர் நம்மைச் சந்திபேசிவரும்படிக்குத் தூதனுப்பினர், அவர்கட்டளையின்பிறகாரம் சபைக்குப்போய்ச் சூரபதுமனைக் கண்டு ராசாதிராசனே நீ பிழைக்கும்பொருட்டு யிதனைக்கேட்டு நடந்துகொள்ளக்கடவையென்று மேல்நடக்கவிருக்கின்ற காரணங்களைப் பலவிதங்களில் விரித்துத் தெரிவித்தபோதினும் ஊழ்வினையின் சம்பந்தப்பட்டவனாதலால் அவ்வாக்கியங்களைமுக்கியமாகநினைந்து உங்களைவிடுதலைசெய்யச்சம்மதப்படான், உடனே நான் யிப்பதியைக்கடந்துதிருச்செந்திற்பதியைச்சேர்ந்து சூரபதுமன்கருத்தைத் தெரிவித்தமாத்திரத்திற் சிவசுப்பிரமணியக்கடவுள் கோபித்து பூதப்படைகளுடனெழுந்தருளி நாளையத்தினமே யிவடம்வந்து யிப்பாதகராகிய அவுணர்பூண்டில்லாமற் களைந்தெறிந்து உங்களைரட்சிப்பர் அதனையும் நீங்களே காணப்போகுறீர்கள், மகாவிஷ்ணுவை யொத்தவருக்கும் அந்ததேவன்பெருமைகளைத்தெரிந்து புகழப்படாது ஆதிமூலமாகவிளங்கும் சரவணபவன்கரத்திற்பற்றியிருக்கின்ற வெற்றிவேலாயுதத்தைத் தாமிருந்தயிடத்தில் நின்றுமிறையோசித்துச் சூரபதுமனை அவன்துணைவர் புத்திரகளத்திராதிகளுடன் நாசஞ்செய்யவல்லர் அப்படியிருக்கப் பொன்மயமாகிய வண்டில்கள்-அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடிஞ்சை-முதலிய அலங்காரங்களைப்பெற்றிருக்கின்ற தேரினிடத்தெழுந்தருளிப் பூதப்படைகள் சூழ்ந்துபோற்ற யிவடம்வந்து சமர்க்களத்தில் உபித்தியஞ்செய்து யிப்பாதகர்களைக்கொல்லநினைந்திருப்பது பாலசுப்பிரமணியருக்கு யிதுவுமொரு திருவிளையாடலாகும உங்களுக்கு விரித்துவிரித்துச் சொல்லவேண்டுவதில்லை எமதிறைவனாகிய சரவணபவன் எங்களையும் பூதப்படைகளையுங்கூட்டிக்கொண்டு யிப்பட்டணத்தைச்சேர்ந்து பத்துநிலத்துக்குள்ளாக சூரபதுமனாதிய செயசாலிகளாகிய அவுணவீரர்களையும் சேனைவெள்ளப்பெருக்கையும் மடக்கிக்கொண்டு அகோரயுத்தியங்களைச்செய்துசின்னாபின்னப்பட ரணக்களத்தில் மாய்த்தபின்பு கொடிய காவலிற்பட்டு நெடுநாளாய் வாடுகின்ற உங்களனைவரையும் விடுவித்துக் கொண்டுபோய் பழையபடிக்குப் பொன்னுலகத்திற் குடியேற்றி மகதயிஸ்பரியச்செல்வங்களையும் அனுபவிக்கச்செய்வர் மற்றொரு கியாபகங்களையுங்கொ

ள்ளாமல் யிதனைக்கடைப்பிடியாக நம்பி யிருக்கக் கடவீர்களென்று வீரவாகுதேவர் சயந்தன்முதலாகிய தேவர்களுக்குப் போதித்துத் தயிரியம்பெறச்செய்து தேற்றியகாலத்தில் மிகுந்தஒழுக்கத்துடன் அவ்வாக்கியங்களைக்கேட்டு ஆனந்தபரவசத்தராய் தேவரீர் கடாட்சித்தபடிக்குக்குமாரதேவர்யிவட மெழுந்தருளி யிப்பாதகனை விரைவிற் செயங்கொள்ளக்கடவரென வாழ்த்தியபின்பு சயந்தனுதியாகிய தேவர்க்கள் கரங்களைக்கூப்பிக்கொண்டு யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், ஐயனே நாங்களிருக்கின்ற சவுக்கியங்களையுந் துன்பங்களையுந் தேவரீர் நிசதெரிசனையாகக்கண்டிருப்பதைப் பிதாவாகிய தேவராசனுக்குத் தெரிவிக்கவேண்டும் வீரகண்டமணிகள் கலீல்கலீலெனச் சத்திக்கும் பாதாரவிந்தங்களைப்படைத்த வீராதிவீரனே யினிகாலதாமசஞ்செய்யாமல் நீர் நினைந்துவந்த தூதின் காரியங்களைமுடித்துக்கொண்டு திரும்பும்படிக்குப் போய் வாருமென்று அனைவரும்போற்றுவதை வீரசிங்கம்போன்ற செயசாலியாகிய குமாரதேவர் தூதன்கேட்டு அவர்களிடத்திற் பரிவாய் உங்கள்கருத்தின்வண்ணம் செய்வோமென்று அத்தேவர்கள்கூட்டத்தைக் கையமைத்திருத்திச்சிறைசாலையைக் கடக்குமுன்னிலையிற் காவலர்சோர்ந்துகிடப்பதைக்கண்டுபழையபடிக்குநினைவுண்டாயெழக் கடவதெனச்சொல்லிநடந்தனர், அவ்வாறே அப்பாதகரும் தட்சிணத்தில் நித்திரைதெளிந்தவர்களைப்போல வெழுந்து சற்வசாக்கிறதைகளுடனும் சயந்தன்முதலாகிய தேவர்க்களைக் காத்திருந்தனர்.

---

## வீரவாகுஅவைபுகுபடலம்.

---

சூதபுராணிகர்-சவுனகாதிரிஷிகளுக்கு மேல்நடந்த சரித்திரங்களையும்சொல்லுவார், வீரவாகுதேவர் சயந்தன் முதலிய தேவர்க்களுக்குத்தேறுதலைசெய்துநிறுத்தி வெளிப்படுந்தறுவாயில் பழையபடிக்குச்சூக்குமரூபத்தைக்கொண்டு வானவெல்லையிற் ருவிப்போய் ராசபரமேஸ்பரனாகிய சூரபதுமன் வாசஞ்செய்கின்ற அரமனையைச்சூழ்ந்து சமுத்திரத்தைப்போல விசாலமாய் வளர்ந்திருக்கின்ற அகழியைக்கடந்து சக்கிரவாளகிரியைப்போலப் பாரித்தோங்கி மேகங்கள்சஞ்சரிக்கும் உன்னதமுள்ளதாய் நூறுவெள்ளம் ரதகெசதுரகபதாதிகள்சற்வாயுதபாணிகளாய்க் கண்ணிமையைநிகர்த்துக் காவல்கொண்டிருக்கும் பொன்மதிலுக்க,

ருகிற்சென்று அதன்மீதேநாட்டப்பட்டு வானவளாயிலுயர்ந்துஅசையுந்
தோறும் ஆகாயகங்கையிற்றோய்ந்து தோய்ந்து வாளச்செய்து சூரிய-
சந்திரர்-நட்சத்திரங்களின் பிரகாசத்தைமறைத்துவிளங்கும்பொற்கொ
டிகளின் பெருமைகளைப்பார்த்து அதிசெயித்தவராய் அம்மதிலுக்கு நா
ற்புரங்களினுந் தோற்றுகின்ற உன்னதமுள்ள நவரத்தினமயமாகியகோ
புரவாயல்களின் சிறப்பைக்கண்டுவியந்து யிதனைச்சொல்லுவதாயினர், அ
லைகள்பெருத்த கடல்நீரை உள்ளங்கையினேற்று ஆபோசனஞ்செய்தஅ
கஸ்தியர் கோபித்தக் கரத்திற்பற்றியிருந்த தெண்டாயுதத்தினாற் குற்றி
யகாலத்திற் பற்பலதளைகள்பட்டு நிற்கின்றகிரவுஞ்ச பர்வதத்தின்மீது
தாருகனெழுந்து நின்றதைப்போலச் சொர்ணமயமாகிய அளவற்றநிலை
களைப்பெற்றதாயும் சற்கம்பத்தைநிகர்த்து உருண்டு வலிபெற்று புஷ்ப
மாலைகள்புரளும் புயங்களைவாய்ந்த சூரபதுமன் பரமசிவகடாட்சத்தி
னாற் பெற்றிருக்கின்ற அண்டவடுக்குகள்தோறும் ஏறிப்போவதற்கு நா
ட்டிவைத்திருக்கும் பொன்னேணியைப் போன்றும் யிக்கோபுரங்கள்
தோற்றுகின்றது, யிவற்றுள் நமக்கெதிரிற் காட்டுகின்றபொற் றகடுகள்
பரப்பியபலஅடுக்குகளைப்பெற்றிருக்கின்ற கோபுரத்தைப்பார்க்குமிட
த்திற் சர்வசங்காரகாலத்திற் சமுத்திரஅணையைக்கடந்து மீறிச்சொலித்
திருக்கும் வடவாமுகாக்கினியிடத்துண்டாகும் அக்கினிக்கொழுந்தான
து வானவெல்லைமுற்றும்பரந்து விளங்குவதுக்குச் சமதையாய் நவரத்
தினகாந்திகளைவீசிக்கொண்டிருக்கின்றது யிதனைவிசுவகர்மன் படைக்கு
ம்போது பலஅண்டங்களினுமிருக்கின்ற மகம்மேருவாதியாகிய குலகிரி
களைப்பறித்துச் சீர்படுத்திப் பதித்துவைத்திருப்பதுக்குநிகராக பலசிக
ரங்கள் அணிபடக்காட்டுகின்றது, இத்தகையசிறப்புகளைப் படைத்திருக்
கின்ற நவரத்தினமயமாகிய யிந்தகோபுரத்தைச்சூழ நாட்டியிருக்கின்ற
கொடிகளானவை அசைந்திருப்பதைப் பார்க்குமிடத்தில் -மகாவிஷ்ணு
பிரமதேவன்-தேடிக்காண்பரிய சுயஞ்சோதிமயமாகிய சிவபிரான்சடா
மகுடத்திற் சர்ப்பங்கள் படங்களைவிரித்தாடுவதைப்போலக் காட்டுகின்ற
து, இவையன்றியும் பலசித்திரப்பிறதமைகளினால் அலங்கரித்திருக்கும்
யிந்தகோபுரத்தின் உச்சியில்நாட்டப் பட்டிருக்கின்றது, சபடங்கள் அ
சைவுகொள்ளுமுன்னிலையில் அண்டப்பித்திகையிற் றுக்குந்தோறும்ப
ணைக்கல்லினிடத்திற் சம்மிட்டியினாலடிப்பதைப்போன்றும் பேரிகை
யின்மீதிற் குறுந்தடிகளினால் தாக்குவதற்கொப்பாகவும் கணகணென
முழங்கிக்கொண்டிருக்கின்றது-தேவர்க்கள்- இயக்கர்-சித்தர் - கின்னரர்
கிம்புருடர்-சித்தர்-வித்தியாதரர்-கருடர்-காந்தருவர்-முதலாகத்தாங்க
ள் வாசமாகவிருந்த பதங்களைவெறுத்து யிந்தகோபுரத்தி லிருக்கின்ற

சித்திரவிசித்திர அலங்காரங்களினிடத்தில் யிச்சைகொண்டுதங்கள்தேவி
யர்புத்திரமித்திரர்களுடன் யிதிற்பட்டிருக்கின்ற அடுக்குகள்தோறும்
வாசமாய்க் களித்திருக்கின்றனர், இதைப் பார்க்குமிடத்தில் யிக்கோபு
ரத்தைப்படைத்தகாலத்திற் சிற்பியானவன் பொற்பாவைகளைச் செய்து
வைத்திருப்பதுக்கொப்பாகக்காட்டுகின்றது, பற்பலஆயுதசவரட்சணைக
ளைக்கொண்டு சத்துருக்கள்முதலிய சீவராசிகள் நுழைய யிடங்கொடாம
ல் உயர்ந்திருக்கும் மதிலுக்கு தாயகமாக வானத்தை யளாவநிற்கின்ற
கோபுரவாயலின்சிறப்புகளை வீரவாகுதேவர்பார்வையிட்டு அதிகசந்தோ
ஷித்தைப்படைத்தவராய் அவ்வாயலினிடத்தும் மேல்நிலைகளினும் மத
யானைகளைப்போன்ற-வலிபெற்ற-உக்கிரன்-மயூரன்-முதலாகிய படைத்
தலைவர்கள் நூறுவெள்ளம் ரதகெசதுரகபதாதிகளுடன் யிடைவிடாமற்
காத்து மசகமுதலாகத் தங்களையறியாமல் உள்நுழையவொட்டாமற்சற்
வாயுதபாணிகளாய்நிற்பதை வீரவாகுதேவர்கண்டு யிவ்வாயலின்மூலமாக
ப்போவது அரிதெனநினைந்து அதன்பாரிசத்திற் சூழ்ந்திருக்கின்ற மதி
லின்மேற்புறங்களிற் போற்றியிருப்பவர்களுக்குத் தோற்றாமல் அப்பு
றப்பட்டுப்போய்த் தமக்கெதிரில் பொன்மயமாய் வானத்தையளாவநி
ற்கின்ற முகச்சாலைமண்டபத்தின் மீதிற் குவிநின்று அதன்பெருமிதங்க
ளைப்பார்த்து மகிழ்ந்து அதன்மீதிருந்தபடிக்கு வீரசிங்கம்போன்ற தூ
தனானவர் அவுணருக்கரசனாகிய சூரபதுமன் வாசஞ்செய்கின்ற நவரத்தி
னமயமாகிய மாளிகையினிடத்திலிருக்கின்ற வளப்பங்களனைத்தினையும்
கண்களும்-மனமுங்-களித்து-நீங்குவதற்கரிதாகக்கண்டுகளித்து கொடி
யமனதைப்பெற்றிருக்கின்ற சூரபதுமன் நவரத்தினமயமாகிய சிங்காத
னத்திலெழுந்தருளி ஆணைஆக்கினைகளைச்செலுத்திவரும் சொர்னமயமா
கிய சபாமண்டபத்தின் பெருமைகளை நோக்கிய முன்னிலையில்வீரவாகு
தேவர்கொண்ட அதிசெயத்தையின்னபடித்தென்று சொல்லிமுடிவதோ.
ஆதியில்அரியதவங்களைமுடித்து வருந்தியதற்கிரங்கிச் சிவபிரானெழுந்
தருளிக் கடாட்சித்துப்போயின மகதயிஸ்பரியச் சம்பத்தினையனுபவித்
துச் சகலபுவனங்களிலுமிரானின்றவர்களனைவரும் வந்துவந்து வீரசெ
ண்டைதரித்திருக்கின்ற பாதாரவிந்தங்களிற்பணிந்துபோற்றி நெருங்கி
யிருக்கத்தக்கதாக ராசபரமேஸ்பரனாகிய சூரபதுமன் கொலுவிருக்கின்
றசபாமண்டபத்தின் சிறப்புகளையும் அலங்காரங்களையும் வற்னிப்பதா
யினர், சூரபதுமனுக்கிருப்பிடமாகிய அரமனைமத்தியில்ஆயிரயோசனை
விஸ்திரணமுடையதாய்த் தங்கத்தினாற்செய்யப்பட்டுச் சிரோரத்தினவ
கைகளினால் அலங்கரித்துச் சித்திரப்பாவைகளாதியாகியசிறப்புகளைப்பெ
ற்றுச் சூரியனைப்போலப் பிறகாசித்துப் பார்த்தவர்கள் விழிகளைக் [illegible]

க்கவல்ல முச்சட்டைகளைவாய்ந்த சபாமண்டபத்தின்முகப்பிற் சூரபது
மன் வீற்றிருந்தகாட்சியைப்பேசுவார், சுந்தரவதிகளாகிய - ரம்பை - யூர்
வசி - திலோத்தமை - மேனகை - முதலாகிய தேவகன்னியர்கள் சர்வாபர
ணபூஷிதைகளாய்ச் செந்தாமரைமலரையொத்த மிருதுவாகிய கரங்களி
ற்பொருந்தியிருக்கின்ற - வயிரவளையல்கள் - கலிக்கத்தக்கதாக ஆலவட்ட
ங்களையும் வெண்சாமரைகளையுங்கொண்டு குளிர்ந்தசிறுகாற்றசையும்
படிக்கு யிருபாரிசங்களினும்நின்று வீசவும் முத்துச்சரங்களசையவும்
மேற்புறத்தில் யிந்திரநீலகலசம் விளங்கவும் நவரத்தினமயமாய்சடைமு
ற்றினும்விளக்கிப் பரந்திருக்கும் பூச்சக்கிறக்குடைகளைச் சோடசகலைக
ளைப்பெற்ற சந்திரனுஞ் - சூரியனும் - பக்கங்களில்நின்றுதாங்கவும்தங்கத்
தாட்டினையொப்பப் பிறகாசிக்கும் வெள்ளிலைபளிங்கையொத்த பாக்கு
நல்லியமாகிய - சுண்ணும்பு மற்றவாசனைத்திரவியங்களடங்கியரத்தினம
யமாகிய பெட்டிகளையும் - புனுகுசவ்வாது - முதலிய கலவைகளைச்சேர்த்
தபொன்கலசங்களையும் மின்னலையொத்த உடைவாளையும் கரங்களினே
ந்தி வீரசிங்கம்போன்று அவுணர்கள்சூழ்ந்திருக்கவும்ஆயிரகிரணங்களோ
டுங்களைப்பெற்று உலகங்களை விளக்கித்திரிகின்ற சூரியனைச்சிறைசெய்த
செயசாலியாகிய - பானுகோபன் - வச்சிரவாகு - பருதிக்கண்ணன் - மூவா
யிரர் - முதலிய குமாரவர்க்கங்கள் நட்சத்திர ராசிகளைப்போல எதிரிற்பர
ப்பியிருக்கின் றசிங்காதனங்களில்வீற்றிருக்கவும்பழிபாதகங்களுக்கஞ்சா
தகொடியமனதைப்பெற்றவர்களாய் அரசன்மனதுக்கேற்றமந்திராலோ
சனைகளைச்சொல்லவல்ல தருமகோபனாதியாகிய - மந்திரிகள் - பிரதானிக
ள் - நெருங்கியிருக்கவும் சேனைத்தலைவர்கள் விழிகள்சிவந்து அரசன்கட்
டளைக்கெதிர்பார்த்திருக்கவும் தண்டநாயகர்கள் காத்திருக்கவும் காரிய
ப்பேர்கள் ராசாதிராசன் பணித்தவைகளை தட்சிணத்தில் முடித்துக்கொ
ண்டுநிற்கவும் ராசபரமேஸ்பரனே - சிவபிரான் பூரணகடாட்சம்பெற்ற
தீரனே - ஆயிரத்தெட்டண்டங்களுக்கதிபனே - அஷ்டதிசைகளையும்வெ
ன்று சகலரையும்யேவல்கொண்டுவருங் கீர்த்திப்பிறதாபனே - வீரசிங்கம்
போன்றசூரனேயென்று பட்டுவர்புகழவும் - கட்டியக்காறர்கள் பொற்
பிரம்புகளைத்தாங்கி அரசன் முகவணியில் நெருங்கவொட்டாமல் எச்சரித்
துவரவும் சவிதர்கள் காலங்களையறிந்து சொல்லிவரவும் வாயுவேகத்தி
னுமுந்திச்செல்லவல்ல தூதர்கள் பிறபஞ்சங்களில் நடந்துவருஞ் சேதி
களைவிண்ணப்பஞ்செய்துபோகவும் வித்துவச்சனங்கள் பாமாலைகளை
ச்சாற்றிப்புகழவும் பரதசாஸ்திரமுறைப்படிக்கு ராகங்களைப்பாடி - அபிந
யங்களைக்காட்டி அன்னங்களைப்போல நடித்துகண்டவர்கள் விழிகளையு
ம்மனதையும் கிறிகிக்கவல்ல - சுந்தரமுள்ள - தேவகன்னியர் - இயக்கர்மக

வீர்-ராட்சதப்பாவையர் முதலிய நாடகப்பெண்கள் சபைக்குமுன்பாரிசத்தில் நெருங்கிக் கேளிக்கைகளைச் செய்துவரவும் - சுந்தரமுள்ள-கருடகாந்தருவர் சித்தர்-வித்தியாதரர்கள் - தேவயாழ்களைமீட்டி மதுரமானபாடல்களைப்பாடவும்-செகதீஸ்பரனாகிய - பரமேஸ்பரனைப் பூசித்துப்பெற்ற வரமுயற்சியினால் யிருமார்ந்து பரமனைமறந்து நாசமடைந்த பாதகராகிய பழையராட்சதக் கூட்டங்களைப்போல மனதிற்சற்றும்பிரக்கமற்றவராய்கோபமேகுடிகொண்டிருக்கும் மனதையும் சிவந்தவிழிகளையும் கடினசொற்களையும்பெற்ற அவுணவீரர்கள் சேட்டைகளைத்தரித்துக்கொண்டு பிரம்புகளைத்தாங்கி அரசனைப்பணியவருபவரை முன்பின்பாராமல் அடித்துத்தள்ளியும் வுடைவாளாயுதங்களைப்பற்றிக்கொண்டு சூரபதுமன் முன்னம் பராபரிசெய்துலவவும் யிவ்விதமாக ஆயிரயோசனைபரப்புள்ள சபையிலிடம்பெறாமற் சகலரும் நெருங்குமுன்னிலையிற் கிரீடங்களுடன்-கிரீடங்கள்-புசங்களுடன்-புசங்கள்-தாக்கும்போது-உதிருகின்ற நவரத்தினங்கள்பிரகாசித்திருக்கவும்- எள்ளைப்போட்டால் கீழேவிழயிடமில்லாமல் அடர்ந்து யிரைச்சலிட்டிருக்கின்றமகாமண்டபமுகப்பில்-வயிரத்தினால்-உடலும்-வயிடூரியத்தினாற்-பற்களும்-முத்தினாற்-புறமயிரும்-கெம்புகளினால்-விழிகளும்-மரகதத்தினால்-நிகங்களும்-மற்றரத்தினங்களினால்-உறுப்புகளுமாக-சோடித்திராநின்ற சிங்கங்கள் சிரங்களிற்றாங்கும் பிரகாசம்பொருந்திய பாரித்தஅணையின்மேரில் உதையகிரியினிடத்தெழுகின்ற பாலசூரியனைப்போல நவரத்தினமயமாகிய கிரீடமானது சிரத்திற்பிரகாசிக்கவும் ராகுகேதுக்கள் ஏககாலத்திற் சூரியசந்திரரைக் கவ்வியிருப்பதைநிகர்த்து வயிரத்தினாற்சோடித்தமகரகுண்டலங்கள் யிருசெவிகளினும் பிரகாசிக்கவும் வயிரமலையின்மீதிற் சோடசகலைகளைப்பெற்ற சந்திரன்விளங்குவதைப்போல திருநீறுவிளங்கும் நெற்றியானது பிரகாசிக்கவும் ரத்தினமலையினிடத்துண்டாகிய பூழைகள்தோறும் குளிர்ந்த செலத்துளிகளுதிப்பதைப்போல அழகியதிருமார்பிற் பாரித்தஆணிமுத்துத் தாழ்வடங்கள் புரளவும் சுகந்தபரிமளமிகுத்த சந்தனக்குழம்பினிடத்திற்புனுகு சவ்வாது முதலியவாசனைத்திரவியங்களைச்சேர்த்து திரேகத்திற்பூசியிருப்பது அண்டமுழுவதுங்கமழ்ந்திருக்கவும் நீருண்டகாளமேகத்தினிடத்தில் விளங்கும்மின்னலைப்போல ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்று அரசுசெலுத்தும்வலிபெற்ற திரண்டதோள்களினிடத்தில் நவரத்தினங்களினாற்சோடித்திருக்கின்ற வாகுவலயங்கள் சொலிக்கவும் ஆதிசேஷன் சுமந்திருக்கும்பூமிபாரத்தை ஆற்றிக்கொள்ளும்படிக்குச் சிரத்தில்நின்ற சுமையைக்கரங்களினால் உயர்த்தியதைப்போல முன்னங்கையில் வயிரக்கடகங்கள் மின்

லைபொத்தளைசர்ந்திருக்கவும் நீண்டவிரல்கள்தோறும் நட்சத்திரங்களைநிகர்த்த ரத்தினமோதிரங்கள்துலங்கவும் நீலரத்தினமலையின்மீதில்வெளுத்தசெங்கைசூழ்ந்தோடுவதற்கொப்பாக அழகியகண்டத்தில்முத்தாரங்கள் பிரகாசிக்கவும்-வீரலட்சுமி-செயலட்சுமி-யிடைவிடாமல் எக்காலத்தும் வாசமாயிருக்கின்ற புசங்களின் மத்தியிற்றோற்றநின்ற மார்பிடத்தில் நவரத்தினங்களினாற்சோதித்த-மதாணிப்பதக்கம்-சரப்பளிமோகனமாலை-பொன்மயமாகிய முப்புரிநூல் முதலிய ஆபரணங்கள்புரண்டுசொலித்திருக்கவும் செக்கர்வானத்தைநிகர்த்து விளங்கும் பீதாம்பரத்தை நீலமேகவண்ணனாகிய மகாவிஷ்ணு தரித்திருப்பதைப்போலப் பொன்னுடை யிடையில் விளங்கவும் அதன்மீதிற் சிரோரத்தினமயமாகிய பட்டிகைபிரகாசிக்கவும் மின்னலினுடனிடிகளைச்சேர்த்திருப்பதைப்போல அபரஞ்சிப்பட்டிகையில் பிணிந்திருக்கின்ற வீரவெண்டயங்கள் பாதங்களிற் சத்திக்கவும் யித்தகையசிறப்புகளைவாய்ந்தபூஷணங்களுடன் பிரமதேவன் நூதனமாகச்சோதித்துக்கொண்டுவந்துபெருமதிகொடுத்தரத்தினாபரணங்களும் விளங்கத்தக்கதாக ஆயிரத் தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரபதுமனானவன் நவரத்தினமயமாய் பொன்வடிவைப்பெற்றிருக்கின்ற மேகத்தைப்போலச் சிங்காதனத்தில் வீற்றிருந்தனன், சவுனகாதிரிஷிகளே- இவ்வித ஆடம்பரங்களுடன் ராசாதிராசனாகிய சூரபதுமன் வீரசிங்கத்தைப்போலக் கெம்பீரமாக விளங்குகின்ற காட்சியை வானத்தையளாவிய மாளிகையின் பேரிலிருக்கின்ற வீரவாகுதேவர் கண்காட்சியாகக் கவனித்துப்பார்த்து அதிகசந்தோஷத்தைப் பெற்றவராய் அவனிடத்துண்டாகிய அன்புமிகுதியினால் யிதனைச்சொல்லுவதாயினர், சிருஷ்டி-திதி-சங்காரமென்னும் முத்தொழிலை நடத்தும் பொருட்டே பிரமன்-விஷ்ணு-உருத்திரனெனவிளங்கி உலகவியாபாரங்களைச்செய்து கடையிற்சர்வசங்காரகாலத்தில் அவ்வுருவங்களனைத்தும் தம்மிற்சேர்ந்தொன்றாய்ச் சுயஞ்சோதிமயமாகநின்று ஆனந்தநடனங்களைச்செய்து மறுபடியும் மூவராகக்காட்டிச் சராசரப் பிறபஞ்சங்களையும் பழையபடிக்குப்படைத்து பிராணிகள் பருவங்களுக்கடுத்தயின்பதன்பங்களையூட்டி நடிப்பித்து அதனைக்கண்டு களித்திரானின்ற ஆதிகர்த்தனாகிய பரமேஸ்பரர் திவ்வியசரணாரவிந்தங்களில் வணங்கிப்பூசித்து அரியதவங்களைச்செய்திருக்கின்ற -இந்திரன்-முதலாகிய-தேவர்கள்-அவுணர்-அசுரர்-மானிடர்-நாகர்-யிவர்களிற்பிரகாசம்பொருந்திய சூரியவேலைத்தாங்கியிருக்கின்ற சூரபதுமனைப்போல யித்தகைய அகண்டசாம்பிராச்சியச் செல்வப்பெருக்கை யனுபவித்தவர்கள் யாவராயுங்கண்டதில்லை-மேலும் ஐம்புலன்களை யஞ்சேந்திரிய விடையங்களிற் செ

ல்லவொட்டாமலடக்கி யிருதயகமலத்திருத்தி பரமசிவத்தின் திருவடிக ளைச்சிந்தித்துப் பனிகுளிர் - வெய்யல் - மழை - யிவற்றின் கொடுமைகளுக் கஞ்சாமற் பலகாலம் கடூரதவங்களைச்செய்து அவனருளைப் பூர்த்தியாக ப்பெற்றுவாழுகின்ற - ரிஷிகள் மகத்துக்களிலும் யிவனையொத்தபேற்றி னைக்கிடைத்திருப்பவனைக்காணேன் - இதுவுமல்லாமற் பிராணிகள்செய் தவிரதங்களுக்குத்தக்க பேறுகளைக் கடாட்சித்தாளுங்கிருபாநிதியாய்உ மையனுந் திரிநேத்திர தாரியாகிய பரமசிவனும் யிவனுக்கு அனுக்கி ரகித்திருக்கின்ற பெருஞ்செல்வத்தைப்போல யாவருக்குங்கொடுத்திரு ப்பதாகக் கேட்டதுமில்லை, இப்படிக்கிருந்தபோதினும் யிந்தஅவுணரா சன் அளவற்றகாலம் அக்கினிமத்தியிலிருந்து தவங்களைச்செய்தும்சிரோ கத்தைச்சேதித்து உதிரப்பெருக்கினால் ஆகுதிகொடுத்தும் சடையில்வயி ரவூசியிற்பாய்ந்திறந்து மீட்டும் பரமன் கிருபையினால் வெளிவந்து அ த்தேவதேவன் கடாட்சித்திருக்கின்ற யிந்த அகண்டசாம்பிராச்சியச் செ ல்வவளங்களைச் சாஸ்விதமாக அனுபவித்துச் செங்கோலை நடாத்திக்களி த்து சுகசீவியாகவாழ்ந்திருக்க நினையாமல் யிப்பாதகன் நாசமடைவதற் குவேண்டிய முயற்சிகளைச் செய்து வருகின்றனன், இவன் ஊழ்வலியை யென்சொல்லுவேன் வெகுநேத்தியாகவிருக்கின்றது, ஆதலாற் பிரார்த் தகற்மசம்பந்தங்களை எத்தகையருக்குங் கடக்கவொண்ணாதெனச்சொ ல்வதையிவனளவிற்றிஷ்டாந்திரமாகக்கண்டனம், அஃதெப்படிக்கெனி ற், சிலபட்சிகளானது பிரகாசித்திருக்கும் சிறுகொள்ளிகளை மின்மினிப் பூச்சிகளெனக்கருதிக்கொண்டுபோய் தங்கள் குஞ்சுகளுக்குச் சவுக்கியமு ண்டாக்கவைத்தனித்துக் கூண்டுகளில் வைத்தகாலத்தில்எரிபட்டு அவைக ளுந்தானும்வெந்து சாம்பலாய் மாண்டதைப் போலத் தீனராகிய பல தேவர்களைப் பெண்டுபிள்ளைகளுடன் வருத்திக்கொண்டுவந்து யிந்தப ட்டணத்தில் அரியசிறையில் வைத்திருக்கின்ற பாதகமானது மேலிட்டு தேவேந்திரச்செல்வங்களையனுபவித்து ஆயிரத்தெட்டண்டங்களினுமி ருப்பவர்களனைவரும்போற்ற யிதோசிங்காதனத்தில் வீற்றிருந்து அரசு செலுத்தும் சூரபதுமன் புத்திரமித்திரகளத்திராதிகளுடன் நாளைக்கே மாண்டு நாசப்படுங்காலம் நேர்ந்துவிட்டது - இதற்கு யாதும்சந்தே கமிராது - வீரபராக்கிரமசாலியாயிருந்தபோதினும் அவனுக்குக்கொஞ்ச பகை எவ்விடத்திலாவது யிருக்குமாயின் அவன்பெற்றிருக்கின்ற செல் வங்களை நிச்சையமாயனுபவிப்பானென்று நம்பப்போகாது - ஒருகால ம்அந்தசுலபமாகிய பகைவனே விதிமேலிட்டு தன்செல்வத்தை அபகரித் துக்கொள்ளுவதன்றியும்தாரத்தையிழந்து பதியையும்போக்கவரும்அ வ்விதமாகவே யித்சூரபதுமன் தங்களுக்குத் தாயாதியாய்யாதொருகு

றைபாடுகளையுஞ் செய்யாமல் தன்னைவணங்கியிருந்த தேவேந்திரனுக்குத்தசாதயணிவிடைகளைக்காட்டி மேலும் அவன் தேவியாகிய இந்திராணியையும்அபகரிக்கநினைந்தகாரணத்தினால்அவ்விருவரும்தங்கள்பதவியைக்கடந்தோடி யொளித்தகாலத்தில் அவன்புத்திரனாகிய - சயந்தன் மற்றதேவர்களைச் சிறைசாயத்துவந்து அரியகாவலிற படுத்திவருத்தியும் திரிலோகங்களுக்கும் ராசதானியாகவிருக்கின்ற பொன்னுலகையும் அக்கினிக்கிரையாகக்கொடுத்துச் சாம்பலாக்கி யிப்படிக்குச்சகலரும் மனம்வருந்த அலைத்தபாதகமானது ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டுகங்களாகக்கொடுங்கோல்செலுத்தி யாண்டுவந்த மகதயிஸ்வரியங்களைச்சந்தேகமில்லாமல் அழித்துவிடும், இந்த அற்பவாழ்வை நிலையாகவெண்ணித் தினைவாட்டி சிவகாருண்ணிய மெய்வளவுமில்லாமல் வீறியிருக்கின்றயிந்த சூரபதுமனுடன்போகாது யிவன்தம்பியர் புத்திரமித்திரர்கள் சேனைவெள்ளங்கள்முற்றும் செல்வவளங்களைக் கொண்டிருக்கும்யிந்தவீரமாமயேந்திரபுரியும் ஆதிசேஷனாலும் புகழப்படாத அஷ்டஅயிஸ்வரியப்பெருக்கும் நாளைக்கேசின்னபின்னப்பட்டுப்போகவிருக்கின்றது, ஆகையால் திரிலோகங்களையும்வருத்தி அரசுசெய்துவரும் யிந்தஅவுணராசனுக்குக் கடையில் தேவதேவனாகிய சண்முகப்பெருமான் அனுக்கிரகிக்கப்பெறவிருக்கின்ற மோட்சசாம்பிராச்சியத்தைப்போலச்சலனமற்றசெல்வமொன்றில்லையென்று அவனிடத்துண்டாயிருந்தயிரக்கத்தினால் யிவ்விதங்களாகப்பேசியிருந்த வீரவாகுதேவரானவர் தாமிருக்கின்றபொன்மயமாய் வானத்தையளாவவோங்கியஉப்பரிகையைக்கடந்து துணைவர்புத்திரர்-மந்திரி-பிரதானிகள்-சேனைத்தலைவர்கள் முதலாகியஅவுணவீரர் சூழ்ந்துபோற்றஅவர்கள்மத்தியிற் சூரியனைப்போலசொலித்திருக்கின்ற சிங்காதனத்தில்வீற்றிருந்து அரசுசெலுத்திவரும் சூரபதுமன் முன்னம்போய் வார்த்தையாடயெத்தனித்துப் பரம்பொருளாய் சுயஞ்சோதிவடிவாய் விளங்கியிருக்கின்ற சரவணபவன் திவ்வியசரணாரவிந்தங்களைத் தியானித்துப்போற்றிப் பற்வதத்தி னுச்சியில்நின்ற சிங்கமானதுதாவியதற்கொப்பாக அந்த உப்பரிகையைக்கடந்து ஆகாயமார்க்கமாகப்போய் நவரத்தினமயமாக விளங்கிக்கொண்டிருக்கும்சபையைச்சேர்ந்து அத்தலத்தில்நடக்கும் வினோதங்களைப் பார்த்துக்கொண்டுவீரவாளைக் கரத்திற்பற்றி செயகெண்டைபாதங்களிற் பொருந்தி யிருக்கவயிரபீடத்தினொட்டத்திற் கொலுவிருக்கின்ற ராசராசப்பிறவுடகனாகிய சூரதுமனுக்கெதிரில்நின்று சத்திராதிகளால் செயிக்கவொண்ணாத புசபெலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் சிவகுமாரன் பாதாரவிந்தப்பெருமையினால் அதிற்சியமாகிய உருவைமாற்றிச் சகலருங்காணத்தக்கதாக

தமது நீசரூபத்தைக்கொண்டு ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனான சூரபதுமனைப்பார்த்து ஓ-அவுணராசனே கேட்பீராக-மகம்மேருவை வில்லாகக்கொண்டு திரிபுரங்களை நகைத்தெரித்த சிவபிரானுக்கினிய குமாரதேவர் விடுத்ததூதன் யானெனச்சொல்லித் தெரிவித்தவுடன் யோசித்து யிந்தசூரன் சிங்காதனத்தின்பேரில் வீற்றிருக்கின்றகாலத்தில் தான்நிலத்திலிருந்து வார்த்தையாடுவது எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியக்கடவுளினது பெருமைக்கடாது, அதைக்கருதி மாயைபுத்திரனாகிய யிந்திராசனெழுந்தருளியிருக்கின்ற சிங்காதனத்தி லொருபாரிசத்தி லிருப்போமெனவெண்ணி யிதுநம்போலிகளுக் கழகன்று- அவனை நெருங்கினும் மகாபாதகம்நேருமென்று அதைமறந்து துரிதமாய் சண்முகப்பெருமாள் திவ்வியசரணாரவிந்தங்களை நினைந்து துதித்தகாலத்தில் அக்கடவுளினது அனுக்கிரகத்தினால் யிரவில்-ஆயிரகோடிசூரியர்- ஏககாலத்திலுதித்ததைப்போலத் தங்கத்தினாற்சோடித்துச் சிரோரத்தினங்களை யிழைத்துப் பலசிங்காரங்களைக்கொண்டிருக்கும் ஒப்பற்ற சிங்காதனமொன்றுவானவழிக்கொண்டுசொலித்து அதிவேகமாகவருகின்றகாட்சியெய்படிக்கிருந்ததெனில், இயலிசைநாடகமென்னும் முத்தமிழின்திறங்களைப் பூர்த்தியாகத்தெளிந்து மதுரமாகிய தேவாரப்பதியங்களைச் சிவபிரானெழுந்தருளிய தலங்கள்தோறும் பாடித்திரியும் திருஞானசம்பந்தப்பெருமாள் பத்திவயிராக்கியப்பெருமைக்கிரங்கி பரமசிவம் அனுக்கிரகிக்கவந்த-முத்துப்பந்தல்-முத்துச்சிவிகையையொப்பக்காட்டியது, மேலும்பன்னிருகோடிசூரியர்கள் சூழத்தக்கதாகப் பொன்மயமான மகம்மேருகிரியானது அலைகள்பெருத்தசமுத்திரமத்தியிற் றோற்றியதுக்கொப்பாக அப்பீடமானது ராசாதிராசன் சபையில்விளங்கவும் கந்தசுவாமியார் கிருபையின் முயற்சியினால் வானவெல்லை பூவட்டமெங்கணும்சோதிமயமாகவிளக்கிவந்த சிங்காதனத்தின் காந்தியினாற் றங்கள்கொடியமனதைப்போலவே கறுத்திருக்கின்ற அவுணப்பாதகர் தேகங்களிற்றூக்கியமாத்திரத்தில் தேவர்க்களைப்போலத் துல்லியமாகவிளங்கவும் கோறதந்தங்களைப்பெற்றிருக்கின்ற அவுணர்களிடத்திருக்கின்ற ரத்தினாபரணங்களின் காந்தியானது சூரியன்முன் நேர்ந்த மின்மினிகளைப்போலக்காந்திகளடங்கப் பரல்கள்போலத்தோற்றவும்செக்கர்வானமுஞ் சந்திரோதையமும் - நட்சத்திரவிளக்கமும் - அந்தியிருளும் - மேகப்பெருக்கும்-சந்தித்துவிளங்குகின்ற மாலைப்போதிற் பன்னிருசூரியர்களும் வானத்துதித்துப்பெருக்கிய கிரணகாந்திகளினால் அவைகள்பொலிவழிந்து மங்குவதைப்போல ராசபரமேஸ்பரன் சபையின் விளக்கமானதுநசித்தும்சதுர்முகப் பிர்மதேவனாலும் சிருஷ்டிக்கப்படாத அந்தசிங்காதனத்

தின் பிறகாசத்தின் பொலிவினால் செயசாலியாகிய சூரபதுமன்கீர்த்தியும் ஆணையாக்கினையும் நவரத்தினபணிகளின் காந்தியும் சுலபமாகமறைபட்டுப்போகவும் யித்தகைய சிறப்புகளைக்காட்ட ச் சூரபதுமன் முன்னம்வந்துநின்ற சிங்காதனத்தை வீரவாகுதேவர் கண்டமாத்திரத்தில் எமதிறைவனாகிய சரவணபவன் கடாட்சிக்க வந்ததென நினைந்து சந்தோஷித்தனாய்ச் சண்முகப் பெருமாள் பாததாமரைகளைச் சிந்தித்துப் போற்றிச் சிங்கராசன்மலையின்மீதிற் பாய்வதைப்போலத் தாவியேறி வீரவாகுதேவர் செம்பீரமாகவீற்றிருந்தனர், இத்தகைய வளங்களைப்பெற்ற சிங்சவணையின்மீதில் வீரனெழுந்தருளியதைப் பார்க்குமிடத்தில் ஆயிரகிரணசயோசங்களைவிரித்து உலகங்களனைத்தினையும் விளக்கிவரும் சூரியர்கள்மத்தியிற் சிவபிரான்றோற்றம்போலக்காட்டவும், இவையன்றியில் மின்னலையொத்த பிறகாசத்தையுடைய வேலைத்தாங்கிய சூரபதுமன் முன்னம் வீரவாகுதே வர் தோற்றமெப்படிக்குக்காட்டுவதெனிற், பரமசிவகடாட்சவிட்சண்ணியத்தினாற்பெற்றசெல்வப்பெருக்கையநுபவித்து யிறுமாந்து செற்வித்தவனாய்த் திரிலோகங்களையும் அலைத்துவென்று சகலருந்தன்னைப்பணிந்துபோற்றவும் தானே பரம்பொருளெனமதித்து இரணியநமோவென்றோதவுங் கட்டளையிட்டு வீறியிருந்த இரணியனுக்குப்புத்திரனாய்ப்பரமபாகவதனுமாகவிருந்த பிறகலாதனன் – அரிஓம் - நமவென்றோதக் கோபித்துத் தன்குமாரன் குறித்தபடிக்கு தனக்கெதிரில்பாரித்துநிற்கின்ற வயிரத்தூணை தன்வலியகரத்தினைக்கொண்டறைந்த காலத்தில் அதனிடையில்முளைத்து அப்பாதகனைப்பிளந்துகொன்று அச்சபையில் நவரத்தினமயமாக விளங்கியிருந்த சிங்கா தனத்தின் மீதிலெழுந்தருளிய நாரசிங்கமூர்த்தியைப்போன்றும் மனதில்யாதொரு அச்சமும் வாட்டமுமின்றி மிகுந்தஉச்சாகத்துடன் வீரவாகுதேவர் சிவகுமாரன் கடாட்சித்த சிரோரத்தினமயமாகச் சொலித்திருக்குஞ் சிங்காதனத்தில் மண்டிபோட்டு உருக்காந் திருக்கின்ற செம்பீரத்தை விசாலமாய்ப் பற்பல மணிகளினாலும் சித்திரங்களினாலும் அலங்கரித்துக் கோடிசூரியப் பிரகாசமாகவிளங்குகின்ற சபாமண்டபத்தி லிருக்கின்ற அவுணவீரர்முதலாகிய சகலரும் வெளிப்படையாகக் கண்டனர், அதுஎப்படிக்கிருந்ததெனில், ஆகமவிதிப்படிக்கு அரியவிரதங்களைப்பத்திபூர்வகமாகச்செய்து வருமுன்னிலையில் பரமசிவ கடாட்சத்தினால் எளிதிற்கிடைத்த மகதயிஸ்பரியத்தைப்போலச் சடுதியிற்றோற்றப்பட்டது, வீரவாகுதேவரிருக்கின்ற உக்கிறத்தையும் யாவரையும் ஒருபொருளாகமதியாமற்சபைமுற்றினும்விழிகளைச்சுழற்றிப்பார்த்திருப்பதையும்பார்த்தமாத்திரத்திற்றிகைத்திட்டுத்திரோமமுற்றினும்வியர்க்கநடுங்கியிதென்னஉற்பாத

மாகவிருக்கின்றதெனப் பிறுமித்தவர்களாய் யிப்படிக்குப்பேசிக்கொள்வதாயினர், வீரகெண்டையானதுகலிக்கும் பாதாரவிந்தங்களைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனைப்-விஷ்ணு -பிரமன்-வணங்கிப்போற்றும் பெருமையினையுடைய நமது சக்கிரவற்திக்கெதிரில் நவரத்தினமயமாய் பாலசூரியனைப்போலச் சொலித்திருக்கும் சிங்காதனத்தின்மீதிற் சலனமற்று மனஉறுதியாயிருக்கப்பட்ட யிவனைப்பார்க்குமிடத்தில் அதிவீரனாகக்காணுகின்றது, இவன்வந்திருக்கின்ற காரியமின்னதெனத்தோற்றவில்லை, யித்தகையதீரத்துவத்தைப்பெற்ற யிவனின்னானெனத்தெரியவுமில்லை-முன்னமெக்காலத்தினும் யிவனைக்கண்டதுமில்லை, ஒருவராலுஞ் செயிக்கவொண்ணாத புசபெல்பராக்கிரமசாலியாகிய எமதிறைவன்முன்னம்நமதுகாவலைக்கடந்துயெவ்விதமாகவந்தனன், இவன்வரவுக்கெதிர்பாத்து யிந்தசொற்ணமயமாகிய சிங்காதனம்போந்ததை யோசிக்குமிடத்தில் ஆச்சரியமாகவிருக்கின்றது, மேகத்தினிடத்தில்வெளிப்படும் மின்னலைப்போலச் சடுதியில் யிந்தமகாசபையினிடத்திற் காணப்பட்டபடியால் நம்மைப்பாற்கினும் பதின்மணங் கதிகமாகிய மாயைவித்தைகளைக் கற்றிருப்பவனாக நினைக்கவேண்டும்வீரகண்டாமணியணிந்திருக்கும் பாதங்களையுடைய யிவனைக்கூட்டங்கூட்டமாகக் காவல்கொண்டிருந்தவர்களே என்னெதிரில் வரவிடுத்த காரணமென்னென்று அரசன்நம்மிடத்திற் சோபங்கொண்டு என்னதண்டஞ்செய்வனோவெனச்சிலர்நடுங்கவும் நமது சத்துருக்களிலொருவனாக விருக்கின்றயிவன்யிந்தவீரமாமயேந்திரபுரியில் பயமற்றுவருங்காலத்தில் யிவனைத்தடுத்துக்கொன்று தின்னாமல் ஏதோசிலயிறையோசனத்தைப்பெற்றுப் பராமுகமாகவிருந்தீர்களென்று நம்மிடத்தில் அரசன்கோபங்கொள்ளுவதற்குமுன்னம் யிவனைச்சூழ்ந்துகொண்டு-குத்தியும்-யிடித்தும்-உதைத்தும் பற்களினாற்கடித்து உதிரமாம்சங்களைப் பசியடங்கஉண்டு வருவோமென்று சிலர் துரிதப்படவும்சலனமற்றவயிரத்திரோகத்தைப் படைத்திருக்கின்ற நமதரசன் சன்னிதானத்தில் மனக்கோட்டமில்லாமல் ஒருவனாயுமெண்ணாமல் தீரனாக முகப்பொலிவுடன்-ராசபாமேஸ்பரனுக்கும்மேலாசச்சிங்காதனத்திலிருக்கின்றனன், இவன் காரணங்களைப் பார்க்குமிடத்தில் மாய்கையிலும் வலியிலும் சிறந்தவனாகவிருக்கின்றனனாதலால் யிவனைச்சுலபமாகநினைந்து நெருங்கவொண்ணாது-அல்லது-சூானைப்போலமேவிட்டுப்போவோமாகில் பிராணஆனிவருவதன்றியில்ஒருகாரியமுமாகாதெனச் சிலர்சொல்லவும் எவ்விதத்திலோ கொடியகாவலைக்கடந்து நம்மையுமறியாமல் யிந்தசபைக்குவந்துவிட்டனன், இனி அரசன்கட்டளையன்றியில் ஒருகாரியங்களினுந் துணிவுகொள்ளலாகாது-அவசரப்படு

வெளமாகில் அதனாலென்ன தீங்குநேருமோவென்று சிலர்நடுக்கவும்ஆ
த்தரப்படாதீர்கள்-இவன் வரவின்காரணம் நமக்கொன்றுந் தெரியாது
ஒருகாலம் தேவர்க்களுக்குப் பகைவனாய்-இந்திரன்-இந்திராணி-முதலி
யவிண்ணவர்கள் மறைந்திருக்கின்றதலத்தை நமதரசனுக்குத்தெரிவிக்க
வந்தனனோ-அல்லது நமது சத்துருக்களாகிய தேவர்க்கள் பட்சமாய் வ
தாவது பேசவந்தனனோ-சகலமுஞ் சற்றுநேரத்தில் வெளியாகின்றது அ
துபரியந்தம் தாபரித்திருப்பீர்களென்று சிலர்சொல்லவும்முன்னம் நம
திறைவன் தங்கையாகிய அசமுகிகரத்தினையிழந்து வந்தகாலத்தில் அர
சன்கோபித்து அஷ்டதிக்குப்பாலகர் - சூரியசந்திராதிய நவக்கிரகங்க
ள் முதலானவர்களையும் திக்குதீபாந்திரங்களிற் காவல்கொண்டிருக்கின்
ற அவுணவீரர்களையும் கடினதெண்டனைகளைச் செய்வித்ததைப்போலவே
யிக்காலத்திலும் வீரகண்டாமணியணிந்த பாதங்களையுடைய யிந்தவீர
னை உள்ளே வரவிட்டகாரணமென்னென்று அரசன்சீறி யிந்தநகரத்தை
க்காவல்கொண்டிருக்கின்றவர்களைக் கொல்லுவித்துக் கோபந்தணிவனோ
வென்று சிலர்சொல்லவும்முற்காலத்திற் செகேசந்திரச் செல்வத்தைப்பெ
ற்றிருக்கின்றனமென்னும் மமதையைக்கொண்டு திருக்கயிலாயத்துக்கு
வந்ததேவராசன்முன்னம் மாறுருத்தாங்கி யெழுந்தருளியபரமனை மதி
யாதகாரணத்தினாற் கோபித்தகாலத்தில் இந்திரனுக்குத் தெளிவுண்டாய்
போற்றிவணங்கியபோது அக்கோபத்தைக்கடலில் வீசியமுன்னிலையிற்
செயசாலியாகியசலந்தரனைவெளிவரச்செய்தபெருமையினையுடையசிவபி
ரானே யிக்கோலங்கொண்டு வந்ததாகக்காணுகின்றது; இதற்குட்பிசகில்
லையெனச்சிலர்வசனிக்கவும்முற்காலத்தில் வாமனப்படிவத்தைப்பெற்றும
காபெலிச்சக்கிரவர்த்தியினிடத்திற்சென்று மூன்றடிமண்ணிரந்துபெற்
றுக்கொண்டு யிரண்டடியினால் விண்மண்ணையளந்துமூன்றனடிக்கு அ
ந்தசக்கிரவர்த்தியினது திருமுடியையிலக்காகவளந்து அவனுக்குச்சாச்வி
தப்பதவியைக்கடாட்சித்த மகாவிஷ்ணுவே யிவனாகவேண்டுமெனச் சி
லர்வழங்கவும் திரிமூர்த்திகளாகிய-பிரமன்-விஷ்ணு-பரமன்-யிவர்களி
லொருவனோ-அஷ்டதிக்குப்பாலர்களிலொருவனோ -பொன்னுலகவாசி
களாகிய தேவர்க்களிலொருவனோ-சத்தியலோகவாசிகளாகிய ரிஷிகணங்
களிலொருவனோ-அல்லது யாவனோவென்று மயங்கிச்சிலர்வசனிக்கவும்
ஆதிகாலத்திற்செய்த தவங்களுக்கிரங்கி நமதரசனுக்குக் கடாட்சித்திரு
க்கின்ற தேவதேவனாகிய சிவபிரான் மீட்டுந்தயைகூர்ந்து முன்னினும்
பற்பலவரங்களைத்தந்தாளவெழுந்தருளினனோவெனச் சிலர்சங்கையுற்றி
ருக்கவும் அப்படிக்கல்ல திரிமூர்த்திகளும் நமதரசன்முன்னம் யிப்படி
க்கு அச்சமற்று நம்மையுமெண்ணாமல் வரத்துணியார்கள்-ஆதலால் அக்

னிதேவன்-வாயுதேவன்-சிவந்தவிழிகளைப்பெற்ற எமதருமராசன் அவன்மந்திரியாகிய காலன் யிவர்களனைவரும் ஏசோபித்து யிவ்வுருவைக்கொண்டு வந்ததாகவேண்டும் அல்லது மற்றொருவர் தயிரியத்துடன் அகண்டமண்டலாதிஸ்பரனாகிய-சூரபதுமன்-வீற்றிருக்கின்றமகாசபையிற்றுணிந்துவர நினைக்கவுமாட்டார்களெனச் சிலர்வசனிக்கவும் சிலதினத்துக்குமுன்னம் மாய்கையிற்சிறந்த கிறவுஞ்சபர்வதத்தையும் செயசாலியாகிய தாருகனையும் ஒப்பற்றவேலாயுதத்தைச்செலுத்திப் பிளந்தானெனக்கேள்விப்பட்டனம்-அந்தசூரனேயித்தினம் ராசாதிராசனைக் கண்டு வார்த்தையாடிப்போகவந்தனனேயென்று சிலர்சங்கிக்கவும் பலவகைரத்தினங்களினாலும் சித்திரங்களினாலுஞ் சோடித்திருக்கின்றயிந்தவிசாலமாகிய மண்டபத்தின் காந்தியும் அவுணராசனணித்திருக்கின்ற ஆபரணங்களிற் பதித்திருக்கின்ற சிரோரத்தினக்காந்தியும் மற்றஅவுணவீரர்களணித்திருக்கின்ற பணிதிகளிற்பொருத்தியமணிகளின்காந்தியும் உலகங்களைவிளக்கித்திரியும் சூரியனதுஒளியும்யிதோவெதிரில்தீரனாக வீற்றிருக்கின்ற காளைதரித்திருக்கின்றபூண்களில் விளங்கும்வயிரமாதிய மணிகளின் சொலிப்புக்குப் பிற்பட்டு யிவன்வீற்றிருக்கின்ற சிங்காதனத்திற் றூபித்திருக்கின்ற ரத்தினங்களின் பிறகாசத்துக்கடங்கிப் பொலிவற்றிருக்கின்றது பாருமென்று சிலர்பேசவும் நம்மிடவருக்கத்தினராகிய-அவுணர்-இராக்கதர்-யிச்செய்கையைக்கனவிலும் நினையார்கள் ஆதலால் யிவைதயோசிக்குமிடத்தில் நமதாசனே தாம்கற்றிருக்கின்ற மாய்கையினாற்காட்டியதாகவேண்டுமெனச் சிலர்சொல்லவும்யிப்போது நாம்பேசிக்கொண்டகாரணங்களினொன்றுமல்லாவிடின் நேத்திரதினம்வேற்றிவேலினால்மாண்டதாருகாசூரன் அவ்வடிவைப்போக்கி யிப்படிக்கெழுந்தருளிதன்குறைகளைத்தமையனுக்குச் சொல்லவந்ததாகவேண்டுமென்று சிலர்கூறிக்கவும் யிவ்விதங்களாகச்சபையில்நெருங்கியிருக்கின்ற சகலரும் அற்புதமாகக்கொண்டாடிப் பேசிக்கொள்ளுகின்ற தறுவாயிற் கோடிசூரியருதித்ததைப்போலச் சொலித்துக்கொண்டிருக்கும் சிங்காதனத்தின்பேரில் ராசாதிராசனுக்கும் மேலாக கெம்பீரமாய் வீற்றிருந்து பாலசுப்பிறமணியதேவர் திருநாமங்களை செபித்துக் கொண்டிருக்கின்ற வீரவாகுதேவர் செயவுச்சாகங்களை அகண்டமண்டலாதிஸ்பரனாகிய சூரபதுமன் கண்டவுடன் அதிககோபம் பிறவேசித்து விழிகள்சிவந்து அனற்பொறிகளைவீசவும் நெறநெறெனப் பற்களைக் கடித்துத் தீயெழநகைத்துச்சரீரம்புழுங்கி வியர்க்கத் தீயும்புகையும்பெருக பெருமூச்செறிந்து புருவம்நெற்றியிலேறச் சீறியதட்டி வீரவாகுதேவனைக்குறித்து யிதனைச்சொல்லுவதாயினன்-அடாபயலே பெண்டுபிள்ளைகள் சுற்றம் துணைவர்மு

தலானவர்களை நீங்கி வனத்திற்சென்று கந்தமூல பலங்களைத்தின்று சுனை களிற்பெருகும் நீரையருந்தி மிருகங்களைப்போல ஒண்டியிருக்க ஓரிட மில்லாமற் குகைகள் பன்னசாலைகள் செடிகளெங்குந் திரிந்தலைந்து குளிரினும் வெய்யிலினும் மழையினும்வருந்திவாடுகின்றசிற்றறிவையுடை யதபசிகள் கற்றசித்தின் திறமிதுவாகும் அபலனே அவற்றுட் சிலதைக் கற்றுக்கொண்டவனாகக் காணுகின்றது யிதனைப்பெரிதாகநினைந்து யிந் தமகாசபையில் என்னெதிரிற்காட்டவந்தனை நீண்டசடைமுடிகளையுடை யயோகியர்களன்றியும் தேவர்களும் யிந்தசிறியதொழிலைச் செய்யவ ல்லர் அவர்களும்முக்கியமாகிய சிற்றுவிளையாடலல்லாவிடின் உன்னைப் போலத் துணிவுகொண்டுயிவடம்வந்துகாட்ட விரும்பார்கள், அப்படி க்கிருக்க நமதுபெருமைகளையும் விரபராக்கிரமங்களையும் யித்தலத்தில் நெருங்கியிருக்கின்ற சேனைத்தலைவர் முதலிய வீரர்கள் சவுரியங்களையும் எவ்வளவேனும் மதியாமல் யிச்சன்னிதானத்தில் நீ செய்திருக்கின்ற நட னமானது வெகுநேத்தியாகவிருக்கின்றது, அரியதவங்களைச்செய்து முய ற்சிபெற்றிருக்கின்ற சித்தர்களும் மாய்கையிற்சிறந்த விஷ்ணு முதலிய தேவர்களும் என்னெதிரில்வரவும்யித்தகையயிந்திரசாலமயேந்திரசால ங்களைக்காட்டுவதற்குமிகவும்பயப்படுவார்கள் பயித்தியக்காறனே உன் வித்தைகளை அதற்குத்தகுதியாகிய யிடங்களிற்காட்ட வேண்டுவதல்லது நம்மையொத்த ராசாதிராசனெதிரிற் செய்யநினைப்பையோ சற்றும் விவேகமற்றவனுதலால் யிந்தபுல்லியசித்தைக்காட்டி நமது தயையைப் பெற்று வாழக்கருதினை—அடாபேயா செகங்களனைத்திலும் முயற்சியாக க்கொண்டாடும் பெருமைபொருந்திய யிந்தபட்டணத்தில் வாசஞ்செ ய்யும் அல்பமாகிய பெண்களும்யிதனிலும் மேம்பாடாகிய மாயவித்தை களைச்செய்யவறிவர் முக்கியமாகச்சொல்லுமிடத்திற் கன்னியர்கள்கெற்ப த்திலிருக்கின்றசிசுக்களுக்கும்யித்தகைய வித்தையைச்செய்யசுலபமாகத் தெரிந்திருக்குமென்று நினைக்கக்கடவை யிந்தபட்டணத்தைச் சூழவிரு க்கின்றபற்வதங்கள் மிருகங்கள் முதலாகிய வைகளுக்கும் யிதைப்பார் கிலும் பிறபலமானவேடிக்கைகளைக் காட்டத்தெரியும் ஆதலால் விவேக மற்றவனுடனே நீயிப்போது காட்டிய யிந்திரசாலம் அரிதாகிய காரிய மென்றெவ்வளவும் நினைக்கவேண்டாம் பரமசிவகடாட்சத்தினால் அளவ ற்றஅயிஸ்வரியங்களையும் வயிரப்படிவத்தையும் தீர்காயசையும் கிடை த்து ஆயிரத்தெட்டண்டங் களுக்கும் அதிபனாய் மகாவிஷ்ணு பிர்ம தேவன் இந்திரன் முதலிய தேவர்க்கள்பணிந்து யிட்டயேவல்களைச்செ ய்துவரத்தக்கதாக நூற்றெட்டுயுகங்களாய் ஏகச்சக்கிறாதிபதியாகஅரசுசெ லுத்திவரும்சூரத்துவமுடையநம்மையொத்தராசராசனை எவ்வளவுமலட்

ரியஞ்செய்யாம லிருக்கின்றனை யிதுவுமல்லாமல் நாம்வீற்றிருக்கின்றஅரியணைக்கும் மேலான சிறப்பும் உன்னதமுமுள்ள சிங்காதனத்திற் சலனமற்று அடக்கவொடுக்க மென்பதெவ்வளவு மில்லாமல் நகைமுகனாய் மண்டிபோட்டு கெம்பீரபுருஷனைப்போல உளுக்கார்ந்திருக்கின்றனை யிந்தகெற்வமும் என்கோபமுந் தணியும்படியாக யிந்தநிமிஷத்தில்மின்னலையொப்பப் பிறகாசித்திருக்கும் யிந்தவாளினால் உன்சிரமானது நிலத்தில்விழுந்துருளத்தக்கதாக வெட்டியெறிந்து போடுவேன் ஆனால் நீ யின்னானென்றும் உன்னைச்செலுத்தினவனையும் உன்வரவின் காரணங்களையுந்தெரிந்துகொண்டபின்பு சண்டிக்கநினைந்து தாழ்த்தேன் பகைவராகிய தேவர்க்கள் முதலானவர்கள் கண்டவுடன் நடுநடுங்கிவணங்கிப்போற்றவல்ல புசபெலபராக்கிறம சாலிகளாகிய அவுணவீரர்கள் மந்திரி பிறதானிகள் சேனைத்தலைவர்கள் முதலாகிய பிறமுகாளும் மற்றும்யிச்சபையிலிருப்பவரும் நாமும் நீகாட்டிய மாயவித்தைகளைக் கண்டோம் யிதனாற்சில பலப்பிறப்பத்திலைப்பெறவந்த வுன்னை யிது பரியந்தம் பிராணனுடனிருக்கத் தயைசெய்ததே உன்னுணவத்துக்குத் தகுதியாகியதியாகமாகநினைக்கக்கடவை, அடாமூடப்பயலே கேட்பையாக - திறிலோகசக்கிறேஸ்வரனாய் செசேந்திரபோசங்களை பெகுகாலமாக அநுபவித்திருந்த தேவேந்திரனும் நமக்குப்பயந்து பொன்னுலக வாழ்வையுமறந்து தன்தேவியுடனோடி யொளித்துத் திருடனைப்போலக் காலங்கழிக்கின்றான் மற்றதேவர்க்களில் யித்தகைய தகாதகாரியங்களை நமது முன்னஞ்செய்யமதியார்கள் உலகரட்சகனாகிய மகாவிஷ்ணுவும் யிதைக்கியாபகத்திலுங் கொள்ளான் வேதபாராயணனாகிய பிற்மதேவன் பிருதகாலமுதல் நமதரமனையிற் காத்திருந்து பஞ்சாங்கத்தைக் காலங்களிற்சொல்லி ஆசிகளைப்பேசித்திரிவன் - யிவர்களுக்கும் மற்ற புவனசராசரங்களுக்கும் ஆதியாகவிருக்கின்ற பரமசிவன் நம்மிடத்திலதிக அன்புள்ளவனாதலால் யிவடத்துக்குவரநினையார் ஆதலால் அவர்களுக்குமேலான துணிவுகொண்ட மனதைப்பெற்றிருக்கின்ற நீயானவன் என்ன நிமித்தம்யாவர் செலுத்தினர், இதனைவிரைவிற் சொல்லக்கடவையெனக் கடினசித்தமுடைய சூரபதுமன் கேட்டமாத்திரத்தில் வெற்றிமாலைபுரளும் புசபெலபராக்கிறமசாலியாகிய வீரவாகுதேவருக்கு அதிககோபம்பிறவேசித்தபடியால் வானத்திலுதிக்கின்ற நட்சத்திரங்களைப்போலத் திரோகமெங்கணும்வியர்க்க விழிகளிலனற்பொறிகள் சிதறத்தக்கதாகச் சூரபதுமனைப்பார்த்து ஓ அவுணராசனே மாயவித்தைகளைக்காட்டித் தியாகம்பெற்றுண்டுதிரின்ற பதிதனைப்போல என்னைநினைந்தனை நல்லகாரியம் அந்த நியாபகத்தைமறந்து உனக்குச்சமமான சூரனாகவெண்ணி நான்வந்தகாரி

ணர்தைக்கேட்பையெனச் சொல்லுவதாயினர், திரிலோகசக்கிரேஸ்வரனா
கிய இந்திரனுக்குன்னால் நேர்ந்திருக்கின்ற மனக்குறையினையும் பிரம
தேவன்முதலாகிய தேவர்க்களுக்கடுத்து வருத்தும் அவமானத்தையும்
தினராகிய விண்ணவர்கள் கொடிய காவலிற்பட்டு தகாதபணிவிடைகளை
ச்செய்து வாடுகின்றசிறையையும் நீக்கிப் பழையபடிக்கு அவ்வவர்களர
சுருமைகளைக்கடாட்சித்து நிலைபெற்று வாழும்படிக்குச்செய்யத் திருவு
ளத்திலெண்ணி திருக்கயிலையைக்கடந்து சமுத்திரஞ்சூழ்ந்தபூமியினிட
த்தில்வந்து திருச்செந்திற்பதியில் வீற்றிருக்கின்ற ஆதிதேவனாகிய குமா
ரகுருபரனுக்கடியனாக விருக்கப்பட்டவன் யான் உன்சகோதரனாகியவீ
ரசிங்கம்போன்ற தாருகனையும் பலநாட்களாக ரிஷிகள் முதலியனாமாய்
கையினால் அலைத்திருந்த கிரவுஞ்சபர்வதத்தையும் நிமைப்போதுகழிவத
ன்முன்னம் பிளந்துகொன்ற வெற்றி வேலாயுதத்தைத் திருக்கரத்திற் ப
டைத்திருக்கின்ற சண்முகப்பெருமானானவர் கிருபாநிதியாதலால் ஆயி
ரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய் சகலரையும்வென்றசூரனென்னு
ம்பெயரைக்கிடைத்திருக்கின்ற நீ பிழைக்கும்பொருட்டு உன்னிடத்து
க்குநம்மைத்தூதாகச் செலுத்தினானெனப்பேசிமேலுஞ்சொல்லுவார், தே
வசேனாபதியாகிய சிவசுப்பிரமணியதேவருக்குப் பின்பிறந்த நவவீரர்-
இலக்கர்களில் நாம்மூத்தவனாகும் மேலுந் திருக்கயிலாயத்தினைக் காவல்
கொண்டிருக்கும்பெருமையினையுடைய நந்தியெம்பெருமான் கணத்த
லைவனாகவுமிருக்கப்பட்டவன் சத்திராதிகள்பணிந்துபுகழ்ந்துகொண்டா
டும் சவுரியபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவனென்னுந் திருநாமத்தை
ப்பெற்றவனென்று சிவபிரான் திருமித்துக் கொடுக்கப்பெற்ற வீரவா
ளாயுதத்தைத்தாங்கியிருக்கும் வீரன்சொல்லிய விசேஷங்களைச் சகலசீவ
ராசிகளும் வாடிவருந்தும்படிக்குக் கொடுங்கோல் செலுத்திவரும் பா
தகனாகிய சூரபதுமன்கேட்டவுடன் நல்லகாரியம் பாலசுப்பிரமணியன்
உன்னைநம்மிடத்துக்குச் செலுத்தியகாரணம்யாது அதனைவெளிப்படை
யாகவிரித்துப் பேசக்கடவையெனக்கேட்டபோது வீரவாகுதேவர் மறு
மொழிசொல்லுவதாயினர், இந்திரனைப்பலவிதங்களிலும்வருத்தி அவன்
தேவியாகிய இந்திராணியுடன் பதியையிழந்தோடி வனங்களிலும் பர்
வதங்களினிடங்களிலும்பதுங்கி உழலச்செய்ததுமல்லாமல் அவன்வாச
மாயிருந்த ராசதானியாகிய பொன்னுலகத்தை அக்கினிதேவனுக்கிரை
கொடுத்துச் சாம்பலாக்கியழித்தும் மேலும் அவனேகபுத்திரனாகிய சயந்
தனையும்மற்றதேவர்களைப்பெண்டுபிள்ளைகளுடன்கட்டிக்கொண்டுவரு
வித்துப் பாரவிலங்குகளைப்பூட்டிச் சமுத்திரமத்தியிலிருக்கும் இந்த
பட்டணத்தில் அரியசிறையிற்படுத்தித் தகாதவேலைகளைக்காட்டி வருத்

றுகின்றனையென்பதை எமதிறைவனாகிய சண்முகப்பெருமான் கேழ்விப்பட்டதுமன்றியில் இந்திரனாகிய தேவர்க்கள் மகாவிஷ்ணு பிற்மதேவன் யிவர்கள்பற்பலதிரந் திருக்கயிலைக்குவந்துஉன்னால்தங்களுக்குநேர்ந்திருக்கின்ற குறைபாடுகளை முறையிட்டுக்கொண்டுஅதனைத்தவிர்த்தாளத்தக்கதாக வேண்டியிரந்த முன்னிலையிற் சிவபிரானும்மனமிரங்கி அத்தேவர்கள் துன்பங்களைப்போக்கி வருவதாகக்கட்டளையிட்டுமிருப்பதாற்பன்னிருபுயாசலங்களையுடைய பாலசுப்பிரமணியதேவர் அளவற்றபூதப்படைகளைக்கூட்டிக்கொண்டு திருக்கயிலாயத்தைக்கடந்து சமுத்திரஞ்சூழ்ந்திருக்கின்ற யிந்தபூமண்டலத்திலிறங்கிவருகின்றமாற்கத்தில்நேர்ந்த உன்சகோதரனாகிய தாருகாசுரனையும்கிரவுஞ்சபற்வதத்தையும்வெற்றிவேலினாற்பிளந்துகொன்று அப்பதியைக் கடந்து நேத்தியத்தினம் தெய்வீகம்பொருந்திய திருச்செந்திற்பதியில்வந்துசேர்ந்திருக்கின்றனர், இவ்வயன்றியும்கொடுங்கோல்செலுத்தி மன்னுயிரைவருத்தி அரசு செய்துவரும் உன்னைப்புத்திரமித்திர களத்திராதிகளுடன் அளவிறந்தவெள்ளம்அவுணச்சேனைகளையுஞ்சின்னபின்னப்படவாட்டி நாசஞ்செய்துஉலசவுபாதிகளை நீக்கிச்சகலரும் நிலைபெற்றுவாழும்படிக்குச்செய்யத்திருவுளத்திலெண்ணியிருக்கின்றனர், இப்படிக்குத்தீர்மானித்திருந்தபோதினும்கிருபா நிதியாதலால் மனதிலிரக்க முண்டாய்நீ பெருகாலம் அக்கினிமத்தியில்நின்று சடூரதவங்களைச்செய்து பரமசிவகடாட்சத்தினால் யித்தகைய அகண்டசாம்பிருச்சிய விபவங்களைப்பெற்று வாழ்ந்திருக்கின்றமமதையினால் நீதியை யோசித்துப் பாராமலும் 'தெரியாமையாகவும் பலநாட்களாகச் சிறையிலடைத்துவைத்திருக்கின்ற தேவர்க்கள்காவலைநீக்கி நீ யின்னமுஞ் சிலகாலம் யிச்சம்பத்தில் வீறிவாழும்படிக்குஉன்னிடத்தில் அன்புவிளங்கியதால் என்னையிவடத்திற்குத் தூதனுப்பினர், அநன்காரணங்களையுஞ் சொல்லக்கேழ்ப்பையாகப் பிறபஞ்சங்களைத்தினுங் குளிர்ந்திருக்கின்ற சோடசகலைகளைவீசிப் பிராணிகளை மகிழச்செய்துவரும பெருமையைப்படைத்த பூரணச்சந்திரனை விஷப்பற்களைப்பெற்றிருக்கின்ற கொடிய கேதுவென்னும் பாந்தளானது அனீதமாகப் பற்றி யவன்பிறகாசத்தினைமறைத்து மன்னுயிரனைத்தினையும் வாடச்செய்வதுபோலச் சகலவளங்களையும் அனுபவித்திருந்த தேவராசபுத்திரனாகிய சயந்தனாதிய விண்ணவரை நிரோதுவையாகப் பற்றிவந்து மிருதுவாகிய பாதங்கள்கறுத்துக் காய்த்துவருந்தும்படிக்குப் பாரவிலங்குகளையிடுவித்துத் தாயாதிகளென்பதைச் சற்றும்நினைந்துபாராமற் புலைத்தொழில்களைச்செய்வித்துத் துக்கசாகரத்தில்மூழ்கி யலையத்தக்கதாகச் சற்றும்யிரக்கமில்லாமற் கடினசிறையினும்அடைத்துவைத்திருக்கின்றனையே

ரும் பிறவிகளிற்சிறந்த-தேவர்-அவுணர்-மானிடர்-முதலாகியசகலரும் அநுசரித்த நன்னெறிகளைப்பாராட்டி இம்மை மறுமைச் செல்வங்களைப்பெற்றுவாழும்படிக்குச் சிவபிரான் படைத்திருக்கின்ற வேதாகம சாஸ்திரங்களைப் பூர்த்தியாகஓதி யுணர்ந்தும் அவற்றுட்குறித்திருக்கின்ற சிரமங்களையும் வருணாசிரமவிதிகளையும்சிவகாருண்ணியங்களை முதலிய நன்னெறிகளையும்பாராட்டிநடந்துகொள்ளவறியாமற்சிவபிரான்கடாட்சித்திருக்கின்ற மகாதயிஸ்பரியங்களை யனுபவித்துவரும் மமதையினால் மேற்குறித்தஉண்மைகளைச்சற்றும்நினையாமல்மறந்தனைராசாதிராசனே யிதுபரியந்தம் நீ நடாத்திவருங் கொடுங்கோல் முறையானது தர்மமார்க்கத்துச் செவ்வளவுமடாது மேலும் சுத்தவீரனாக விருப்பவன்செய்ய யோக்கியமாகிய நீதியுமன்று, அதன்காரணங்களைச் சொல்லக் கேட்பையாகஉலகங்களுக்கதிபனாய்ச் செங்கோன்மை விதிப்படிக்குப் பிறழாமல்அநுசரித்தவரும் அரசனானவன்நடத்து கொள்ளவேண்டியதாவது மன்னுயிரைத் தன்னுயிருக்கொப்பாகவெண்ணி துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்து தன்குடைநீழலிற்பட்ட பிராணிகளைப் பாதுகாத்துவரவேண்டும் தினராகவிருப்பவரைவருத்துவதினால் ஒருகாலம்பிராணசேதம்வரும் மேலும் பிரமகுமாரனாய்ப் பரமசிவகடாட்சத்தைப்பூர்த்தியாகப்பெற்றிருக்கின்ற கச்சியப்பிரசாபாலகனையொத்த மகானுபாவனைப் பிதாவாகப்படைத்து அவருக்குப் பிள்ளையாக விருக்கின்ற நீ உன்னைப் போலவே அவருக்குப் பிறந்திருக்கின்ற தாயாதிகளாகிய தெவர்க்களை அலைத்தும் சிறையிற்படுத்திவருத்தியும் யிப்பாடுகள்படச்செய்வது தருமத்துக்செவ்வளவுமடாது ஆதிநூலாகச்சொல்லும் வேதமார்க்கங்களையுங் கடந்து அல்பனைப்போலப் பாதகங்களுக்கிடாகிய தீயகருமங்களைச்செய்துவருகின்றனை நீதிபரனாய் உலங்களைரட்சித்துவருவது சக்கிரவர்த்தியாகவிருப்பவனுக்கு அழகும் ஆண்மையும் நல்லொழுக்கமுமாம் -இன்னமுஞ்சிலகாரணங்களைத்தெரிவிக்கின்றனன், முற்காலத்திற்கற்கம்பத்தைப்போலப்பாரித்து வலிபெற்றிருக்கின்ற புசபெலபராக்கிரம சாலியாகிய சலந்திரன் அந்தகாசூரன் திரிபுராதிகள் முதலாகிய அவுணராசாக்கள்தருமமார்க்கத்துக் கிடையூறாகவும் வேதஒழுக்கங்களையுமறந்துதீனராகிய தேவர்க்களை அனலிற்பட்டபுழுவைப்போலப் பதைபதைத்துவாடிவருந்தும்படிக்குக் கொடுமைகளைச்செய்த காரணத்தினாற்சிவபிரான்விண்ணவர்படுந் துன்பத்துக்கிரங்கி ஒருநிமைப்போதில் அந்தஅவுணவீரர்குலநாசமாய்ப்போகும்படிக்கு அதஞ்செய்தனர், இந்தசேதியை நீகேழ்விப்பட்டதில்லையோ-கொடியவனே உன்னையொத்த அகண்டமண்டலாதீஸ்பரனாகியவன் பேதமைத்தினமுடையதேவர்க்களைவருத்துவ தழகோ

மேலுங் கொலைகள்வுகட்காமமுதலிய மகாபாதகங்களைக்கடந்துபஞ்சே
ந்திரிய விஷயங்களையடக்கி அறிவைவிளக்கி பரத்துவத்தி நிலையினைத்
தெளிந்து சுகாதீத வின்பத்தைப்பெற்று வாழ்ந்திருக்கின்ற பெரியோ
ர்களைக்கோபித்துத் தருமத்துக்கடாத துன்பங்களைச்செய்தவரும் பாத
கர்கள் பிராணபரியந்தம் தீராதபழியைச்சுமந்து துரிதமாகப்புத்திரமித்
திரகளத்திராதிகளுடன் அலைச்சற்பட்டுமாண்டு எமகிங்கிலியர் வசப்பட்
டுப்பாசங்களினாற் கட்டுண்டு தென்புலத்தைச்சேர்ந்து ரவரவாதி மகா
நரகக்குழியிற் றள்ளுண்டு பலகாலம்வருந்தியும் மீளப் பலசெனனங்
களிற்பிறந்து அளவற்றதுபரங்களை யனுபவித்துழல்வர், இவர்களுக்கெக்
காலத்தும் மோட்சப்பதவியென்பது கிடையாது யிவையன்றியும் தன்
னைப்போலவே சகலபிராணிகளிடத்தும் யிரக்கமில்லாமற் பிறருக்கெ
க்காலத்தும் அல்லல்செய்து வருபவர்கள் தாங்கள்பெற்றிருக்கின்ற சம்
பத்துகளைப் பறிகொடுத்து வறுமையாளராயிரந்துண்டு பிணிகளிற்பட்
டுத்துக்கசாகரத்திலழுந்தி வாடினவர்களாய் யிறந்தகாலத்தினும் எமபடா
ள்வசப்பட்டுக் கட்டுண்டு கதைகளினால் மொத்துண்டு வைவசுதபட்ட
ணத்தைச்சேர்ந்து நரகங்களிற் கடைப்பட்ட - அட்டை - அரணை - பாம்
பு - தேள் முதலிய கொடியசெந்துக்கள் நெருங்கியிருக்கும் குழியிற்
றள்ளப்பட்டு பதைபதைத்துச்சோர்ந்தும் யிருப்புலக்கைகளினால்தலைபி
ளக்கஅடியுண்டும் வயிரவூசிகளினாற் குற்றுண்டும் சிவக்கக்காய்ச்சி அனலை
வீசியிருக்கும் எழுகுகம்பங்களை யணைந்து வருந்தியும் வாளினாற்சேதி
க்கப்பட்டும் செக்கிலிட்டரையுண்டும் கொதிக்கின்ற எண்ணெய்க்கொப்ப
ரையிற் றள்ளுண்டும் யித்தகையகடினதெண்டனைகளை யனுபவித்தபின்
பு மீட்டும் யிவ்வுலகிற்செனித்து வறுமையிற்பட்டு பலதுன்பங்களை ய
னுபவித்துவாடுவர், அத்துடன்போவதன்று மீளவும் யிறந்தும் பிறந்து
ம் அலைவதன்றியில் நிவாரணங் கிடையாது யிதுவுமல்லாமல் யிதனைச்
செய்தால் பாதகம்நேருமென்றும் யிதனாற்புண்ணியமுண்டாகுமென்
றும் நன்றாகத்தெரிந்தும் பலதிஷ்டாந்திரங்களினாற் கண்டுங்கேட்டுமிரு
ப்பவன் அயலாருக்குத்தீங்கினைச்செய்வனாயின் உடனே கொடியதெண்
டனைநேரும் அவனுக்கு மன்னிப்புகிடையாது ஆதலால் வேதாகமசா
ஸ்திரவிதங்களைப் பூர்த்தியாகத்தெரிந்த நீ அறிவில்லாதவர்களைப் போல
த்தீனராகியதேவர்க்கள்ச் சிறைபடுத்தியும் பலதுன்பங்களைச்செய்தும் வ
ருத்தியபாதகத்தினால் யிந்தசம்பத்துகள் மங்கி மிகுத்த துயரத்தழுந்தி
வாடுவதன்றியிற் பிராணஹானியும்நேரும் தேவர்க்கள் வலியையடக்கிச் சு
கலசிவாசிகளுக்கும் மிகுத்தவுபத்திரங்களைச்செய்து வீற்றிருந்தவுன்த
ம்பி தாருகாசூரனை யிருபிளவாகக் கண்டித்துக்கொன்ற வெற்றிவேலாயு

தமானது கோடிசூரியப்பிரகாசத்தினைவீசிக்கொண்டு குமாரதேவர்திருக்கரத்திலிருக்கின்றது, அதனைப்பிறையோகிப்பாராயின்உன்வயிரதிரோகத்தையும்பிளந்து உயிரையுண்டுவிடும், அப்படியிருந்தபோதினும் தற்மத்தைநினைந்துநீசெய்துவருங்குற்றங்களுக்குத்தக்கதெண்டனையைவினாவில்முடியாமல்யிதுபரியந்தம்க்ஷேமித்தனர் ஆதலால்அமுதபோசனமகிமையினால் நீசெய்வித்ததண்டனைகளிற் சாகாமலிருக்கின்ற தேவர்க்களைப்பலயுகங்களாக விலங்குபூட்டி வருத்தித் தகாதயேவல்களைச்செய்வித்துக்கொடுங்கோல்செலுத்தினை யாயினும் யினியாவது அத்தேவர்களை விடுதலைசெய்விப்பையாயில் நீ யின்னமுஞ்சிலகாலம் பிழைத்திருந்தசெல்வத்தையநுபவிப்பை அல்லது நாம்சொல்லுகின்றதை யுறுதியாகக்கொள்ளாமல் ஊழ்வினைப்படிக்குத் தடுப்பையாகில் அதிசீக்கிரமத்திற் சகலசேனைகளுடனும் நீ யழிந்துபோவது நிச்சயம் வேதவாக்கியங்களும் அப்படிக்கே முறையிடுகின்றது, பூர்வத்தில் நீயளவற்றகாலம் அருமையாகிய யாகத்தைச்செய்யும்போது பரமசிவம்வெளிப்படாமையால் வானத்திலெழும்பி வச்சிராயுதத்தினால் திரோகத்தைச்சேதித்து வுதிரப்பெருக்குடன் ஆகுதிகொடுத்தும் நினைந்தகருமம்முடியாததால் அக்கினிமத்தியில்விளங்கும் வயிரஊசியிற் பாய்ந்திறந்தஉறுதிக்குச் சிவபிரானிரங்கிக்காட்சிதந்து பிராணனையும் வயிரதிரோகத்தையும் வேண்டியவரங்களையும் அழிவற்றசெல்வங்களையும் கடாட்சிக்கப்பெற்றனை; அப்படிக்குவருந்திச் சம்பாதித்திருக்கின்ற அகண்டசாம்பிறாச்சியங்களையும் சலனமற்றபிராணனையும் தகாதகாரியங்களைமுக்கிய மாகச்செய்து வியர்த்தமாகப்பறிகொடுத்தழுங்குவது உனக்கழகோ-மகம்மேருவினுமேலாயோங்கியிருக்கின்ற சம்பத்தைப்பெற்ற நீயும் உன்வற்கத்தினரும் யின்னமுஞ் சிலபகல் விற்றியடைந்துவாழ நினைப்பையாகில் சயந்தன்முதலிய தேவர்க்களைவிடுதலைசெய்துபோட்டு தருமமார்க்கமாகவுலகத்தைப் பாதுகாத்தாண்டுவோக்கடவை அப்படிக்குச்செய்யச் சம்மதப்படாமற் போவையாகிற் பாலசுப்பிரமணியக்கடவுள் அதிசீக்கிரமத்தில் யிவடத்துக்கெழுந்தருளிகொடியபோரைச்செய்து உன்வம்சநாசமாகக்கொல்வர் நானிதுபரியந்தம் பேசியகாரியங்களைக் கிரமமாகயோசித்து யிதுகளைச் சத்தியமாகக்கொண்டு நடக்கக்கடவையென்று உனக்குவிரித்துக்காட்டும்படிக்குக்குமாரதேவர் என்க்குக்கட்டளையிட்டனுப்பினர், ஆதலாற் றுரிதமாய் தேவர்க்கள் காவலைவிடுதலைசெய்து வேதவிதிப்படிக்கு உலகங்களைப்பரிபாலித்து மகதயிஸ்வரியங்களை யநுபவித்து வாழக்கடவையென்று தர்மமார்க்கங்களைப் பரிபாலிக்க உற்பவித்திருக்கின்ற வீரவாகுதேவர் பிரித்துப்பிரித்துச் சுடச்சுடச்சொல்லிய நீதிகளைச் சூரபதுமன் கேட்டவுடன் ம

ணதிற்கோபக்கன்லானது மூண்டு விழிகளில் அக்கினிப்பொறிகள் குமிழ்குமிழெனக்கொட்டப் பெருமூச்செறியுந்தோறுங் கொண்டல்கொண்டலாய்ப் புகைபெருகத்தக்கதாகக் கோடையிடியைப்போலக் கரத்துடன்கரத்தைத்தட்டிச் சபையதிரும்படிக்கு நகைத்து யிதனைச்சொல்லுவான்-அடாபயலே- கேள் செகதீஸ்பரனாகிய பரமசிவ கடாட்சத்தையும் படைகளுக்கரசாகிய பாசுபதமுதலிய சிறந்தயாணங்களையும் அழிவற்றவச்சிரதிரேகத்தையும் மனோவேகத்தினு மேவிட்டுச்செல்லும் இந்திரஞாலத்தேரையும் அகண்டசாம்பிராச்சியச்செல்வப் பெருக்குகள்முதலாகப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்று நூற்றெட்டுகங்களாகளதிரின்றி.ராசராசாக்கள்தொழுதுபோற்றிவர ஏகச்சக்கிராதிபதியாகவிருக்கின்ற நம்மையொத்தசூரனுக்கு யின்னமும் பற்கள் முழுமையும் முளையாமல்- பாச்சிசோச்சியென்றுமழலைச்சொற்கள் திருந்தாமல்வசலித்திருக்கும் பாலனோ யித்தகையபுத்திகளைச்சொல்லியனுப்புவன்யிதைப் பார்க்குமிடத்தில் வெகுநேத்தியாகவிருக்கின்றது, இதுவுமல்லாமல்மிகுத்தவலியும் வீரமும் வெற்றியும் புசபெலபராக்கிரமமும் பெற்றிருக்கின்ற தீரராகிய அவுணவீரர் சூரத்துவமில்லாமல் நீ யிப்போது சொல்லிவபூச்சிக்கு பயப்படப் பட்டவர்களாம் வலியற்று பேடிகளைப்போலப் பதுங்கித்திரியும் தோவப்பயல்கள் மேம்பாட்டையும் ஆண்தன்மையையுமுடையவர்களாம் குதலைமொழிகளைப்பேசித்திரியும் சிறுபிள்ளையானவன் ஆயிரத்தெட்டண்டங்களுக்குமதிபனாய்ச் சகலமாயும்வென்று சூரனென்றுபெயர்பெற்றிருக்கின்ற சக்கிரவர்த்திக்கு மந்திராலோசனையைத் தெரிவிப்பவனும் அலைகள்பெருத்த சமுத்திரஞ்சூழ்ந்த யிந்தபூமண்டலத்தில் நீ சொல்லியபடிக்கு வழங்கிக்கொள்ளுவது வெகுநேத்தியாகவிருக்கின்றது, ஆதிமுதற் பரிமளமிகுத்த புஷ்பமாலைகள்புரளும் பருத்த புசங்களையுடைய அவுணர்-இராக்கதர் யித்தகையர் வம்சங்களை விற்றிக்கவொட்டாமற் பலவிதங்களினும் அலைத்துக்கொன்றடக்கிவந்ததேவர்கள் அயிஸ்பரியங்களையுங் கெற்வங்களையும்வாட்டி பராரிகளாயோடத் துரத்திப் பதியையுமழித்துத் தொண்டரைப்போலச் சிற்றேவற்பணிவிடைகளையும் செய்யச் செயசாலியாகவிருக்கின்றேன் அவர்களாதியி லெங்களவர்களுக்குச் செய்த தீங்குகளைக்குறித்து தீங்கையைப் பாராட்டாமல் அலைத்துவாட்டிக் கடையில்மீளாதசிறையினும் அடைத்துவைத்தேன்யிதுபுதிதல்ல எங்கள் முன்னோர்கள்செய்தவர்த்தபடிக்கு முடித்ததாகும் உன்னை ஒருபொருளாகமதித்துப்பலபலசொல்லவேண்டேன் என்னுடையதீர்மானமேதெனில், உலகபாலகனாகிய மகாவிஷ்ணுவினது உந்திகமலத்துதித்து சராசரப்பிறபஞ்சங்களைப்படைத்து வருகின்றபிற்மதேவ

னுக்கு நியமித்திருக்கின்ற பகற்போதுகழிந்து யிரவிலுறங்குகின்ற நிறவாயில் நித்தியப்பிரளயஞ் சம்பவித்து சத்தசாகரங்களும் ஏகமாய் அலைகளைவிசிப்பெருகிஉலகங்களனைத்தையும் அழிக்கின்றதருணம் நேர்ந்தாலும் என்வசப்பட்டிருக்கின்ற தேவர்களை விடநினையேன் நீ அவர்களுக்காகமிகவும் பிரையாசைப்படுகின்றதாகக்காண்பதால் யினிமேல்அந்த தேவர்களை பலமானகாவல்செய்து நம்தாசுசெல்லும் ஆயிரத்தெட்டண்டங்களின் சடையில்வைப்பேன் மேலும் என்னுக்கினக்கடங்கி யிட்டபணிவிடைகளைச்செய்து ஒடுங்கியிருந்து தப்பித்துக் கொண்டோடிப்போயிருக்கின்ற இந்திரனையும் மற்றதேவர்களையும் தேடிப்பிடித்துவந்து விலங்குகளைமாட்டி யிந்தபட்டணத்தில் அரியகாவலில்வைத்து வருத்தும்படியாகிய வெண்ணங்கொண்டிருக்கப்பட்ட நான்யிப்போது கையிலகப்பட்டிருக்கின்றவர்கள் சிறையைநீக்கி விடுதலைசெய்வதற்கெண்ணியித்தியம்பிடித்ததோ ஒருபோதும் விடமாட்டேன் ஓ தூதனேயிதனைமனதிலுறதியாக நினைக்கக்கடவை, ஒருவரும்நிகரில்லாமற் செயசாலியாய் சூரனென்றும் பெயர்பெற்றிருக்கப்பட்ட யான் அப்படிக்குச் செய்வனாயிற் பாலனுக்குப் பயந்தானென்று சகலரும் என்னை யிகழ்வார்கள், இவையன்றியும்அரியதவங்களைச்செய்து பிறகாசம்பொருந்திய வயிரத்திரோசத்தினையும் மாளாதவயதையும் அழிவுபடாததேரும் ஒடியாதவில்லும் மீளாதபாணங்கள் முதலிய பற்பலவரங்களையும் பூர்வத்தில்உன்னைச்செலுத்திய பாலன்பிதாவாகிய பரமசிவனெனக்கனுக்கிரகித்திருக்கின்றனர், இதுவரையிலெதிரின்றி அரசுசெலுத்தி வருகின்றனன், அத்தனையபெற்றினை யினியாவரால் அழிக்கப்படும் யிப்படிச்சிருக்கின்ற என்னை ஆயிரகோடி அண்டங்களிலிருப்பவர்களில் யாவர்கொடியபோராச்செய்துபுயவன்மையினால் வெல்லவல்லவர், மதயானைமுகத்தைப் பெற்றிருந்த என்தம்பி தாருகனைக்கொன்ற சேதியைக்கேட்டமாத்திரத்தில்வெலிப்பட்டு வேலைத்தாங்கியிருக்கின்ற குமாரனை வளைந்துகொண்டு அவனுடன் வந்த பூதவெள்ளங்களொழியாகச் சின்னபின்னப்பட அதப்படுத்தநினைந்த யான் பாலொழுகுஞ் சிவந்தவாயையுடைய குழந்தையையெதிரிட்டுச் சண்டைகொடுக்கப் போவது என்னையொத்த சக்கிரவர்த்திக்குடாதென்றும் நிராதஅடகிற்திரேருமென்றும் மந்திராலோசனைக்குரிய ஆரியப்பேர்கள் தடுத்தகாரணத்தினால் யிதுவரையிற்றாழ்ந்தேன் அல்லாவிடின் அத்தினமே என்னெண்ணத்தைமுடித்துகோபந்தணிந்திருப்பேன் யிப்போதொன்றும் முழுகிப்போகவில்லை என்தம்பி தாருகனையும்கிரவுஞ்சபற்வதத்தையும் பிளந்துகொன்றசேதி நேத்தியதினந்தான் கேழ்விப்பட்டேன்யிதோஎன்சேனைத்தலைவர்களிற் சிலரையனுப்பி அந்த பா

லைனவாட்டி என் துணைவனைக்கொன்றபழியைத் தீர்த்துக்கொள்ளவிருக்கின்றனன், இதனுண்மையை நாளைக்கே நீ தெரிந்து துக்கப்படப்போகின்றனை, இவையன்றியும் அண்டங்கடோறும் அளவற்ற விஷ்ணுக்கள் பிரமர்கள் - இந்திரர்கள் - முதலிய தேவர்க்களிருக்கின்றனர், அவர்கள் நம்மைக்கண்டவுடன் சண்டைகொடுக்கத் திராணியற்றவர்களாய் நமக்கடிமைப்பட்டு எங்களனைவருக்கும்யிறையவனாய்ப் பரிபாலித்து பெருகாலம் சுகசீவியாயிருக்கக்கடவதென்று வாழ்த்திப்போற்றித் தத்தமது பதங்களிலிருக்கின்றனர், இப்படிக்கிருக்க நேத்தியத்தினம் சிவனிடத்துதித்த பாலனோ சூரனாகிய என்னெதிரில்நின்று சண்டைகொடுக்கவல்லன் யினி பலபலசொல்லியாவதென்னை தேவர்க்கள்சிறையை எக்காலத்தினும் விடுதலைசெய்யமாட்டேன் சிறிது மறிவில்லாத பிள்ளைசொல்லியசொல்வார்த்தையை முக்கியமாகவெண்ணியதற்கிசைந்து பயித்தியக் காரனானபடியால் தூதாகவந்தனையாயினும் உன்பிராணனை வாங்காமல் தயைசெய்து விடுகின்றனன், இனியிந்தபட்டணத்திற் சற்றும்நில்லாமல் தப்பிப்பிழைத்தோடக்கடவையென்று ஆயிரத்தெட்டண்டங்களை யாண்டுவரும் வீரபராக்கிரமசாலியாகிய சூரபதுமன்பேசியவசனங்களானவை நாராசத்தைச்சிவக்கக்காச்சி நுழைத்ததைப்போல வீரவாகுதேவர் செவிகளிற்பட்டமாத்திரத்திலெழுந்த கோபக்கனலானது மனதைவருத்தச்சீறிப் பெருமூச்செறியுந்தோறும் புகையுமனலும் பெருகவும் ரோமங்கள் சிலிர்த்து சிரோசமுற்றும் முத்துகளையொப்ப வெயர்வைதோன்ற விழிகள் சிவந்து தீப்பொறிகள்சிதறக் கோபப்பெருக்கினால் சபையதிரும்படிக்கு நகைத்தவராய்இதனைப்பேசுவதாயினர், நல்லகாரியம் ஓ சூரனே நீயிப்போது சொல்லியது வெகுநேத்தி நீயின்னுஞ்சிலகாலம் யிந்தமகதயிஸ்பரியங்களை யனுபவித்து சுகசீவியாகவிருந்து அரசுசெலுத்து மாற்கத்தைத்தேடவறியாமல் யிந்தஅல்பச்சம்பத்தைப் பெற்றிருக்கின்ற கெற்வத்தினாலிதனை சாச்விதமாயெண்ணிப் பிறமைகொண்டலையும் மனதைப்பெற்ற கயவனே யிப்போது நான்குறிக்கின்ற உண்மைகளைத் தீர்மாணமாக நினைக்கக்கடவை, அஃதென்னையெனிற், சிரோரத்தினங்கள்பிரகாசிக்கும் பணமகுடங்களைப்பெற்ற சற்பங்களையும் மூன்றாம்பிறையையும் கொன்றைமாலிகையையும் அணிந்திருக்கின்ற சடாமண்டலதாரியாய்லோகநாயகனாய் சுயஞ்சோதிவடிவாய் ஓசையினொலியாய் எங்கும்பரிபூரணமாகநிறைந்து நடிப்பிக்கும் பரமேஸ்பரனிடநுதல் விழிகளினுதித்தசரவணபவன் பெருமைகளையும் குணாதிசெயங்களையும் வீரபராக்கிறமஉத்தண்டங்களையும் எவ்வளவுங்கவனித்தறிந்தவ னல்லயாதலாற்பாலனென்றிகட்சியாகப்பேசினை அவற்றின்காரணங்களைக் கேழ்ப்பையாக.

மாயையிடக்காரத்திலேற்றியிருக்கின்ற சிவபிரானைத்தேவனென்றும் தெய்வலோகவாசிகளாகிய விண்ணவரைச் சிருஷ்டி திதிசங்கார கிருத்தியங்களை நடாத்திவருந் திரிமூர்த்திகளென்றும் மகாவிஷ்ணு பிரமதேவனைப் பரம்பொருளென்றும் உலகங்களில் வாசஞ்செய்திருக்கின்ற சில புத்தியீனர்கள் துதிக்கின்றனர், இதனையென்னெனிருக்கின்றனை தாங்கள்கொண்டிருக்கின்ற அன்பினாற்பேசும் உபசாரவார்த்தைகளாமல்லது நிச்சயமல்ல சகலமும் மூலகாரணனாகிய சிவனைச்சேரும் பிற்குறித்த சுலப கீர்த்தியைப்பெற்ற தேவர்களைப்போல எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவரை நினையாதே போதவுணர்வைப் பெற்றிருக்கின்ற மகத்துக்கள்யிச்சித்திருக்கின்ற சாயுச்சியப்பதவியைப்பெறச் செய்வதும் யாவருக்குமெட்டாதிருக்கின்ற பெருவெளியைத்தோற்றக் காட்டுவதும் பேரறிவினருக்கு மோட்சவீட்டைத்தருவதும் வேதங்களிற் குறித்திருக்கின்ற ஓரூக்கங்களெனப்படுகின்றது, அதன்நிச்சயங்களையுந் தெரிவிக்கின்றனன்செழிப்பையாக- வாமனவதாரங்கொண்டுபோய் டெலிச்சக்கிரவர்த்தியிலிடத்திற்றானமேற்றி விண்ணையும் மண்ணையுமிரண்டடிகளினாலளந்தமகாவிஷ்ணுவும் உந்திகமலவாசியாகிய பிரமதேவனும் அளவற்றகாலத்தேடிக்காணவரிய அனற்படிவமாகிய பரமசிவத்தின் நுதல்விழிகளினிடத்திற் பாவல்துவாக விருக்கப்பட்ட கந்தன் உருக்கொண்டு தயாரசம்பெருகும் மலைரயுடைய குழந்தைக்கோலமாகத் தோற்றுகின்றனர், தேவதேவோத்தமனாகிய சிவபிரான் திருநாமத்தைப்படைத்துச் சகலருக்குமேலாய்ப் பிராணிகளனைத்திலும் அந்தரான்மாவாகப்பொருந்தி தாய்தந்தையரைப்போலப்பரிந்து நடிப்பித்தும் அருவுருவாகவிளங்கியும் யிவ்விதநாடகங்களைக்காட்டிவரும் பாலசுப்பிரமணியதேவரைப் புராதனக்கடவுளாக நினைக்கக்கடவை,பரமேல்பரனே தமது திருவிளையாடல்களைமுடிக்கும் பொருட்டு பாலனுகவுருவகப்பட்டுக் காட்டுகின்றனர்,சுயஞ்சோதிமயமாகிய குமாரதேவர்படைத்திருக்கின்ற சண்முகங்களின் காரணத்தினால் ஆதிதேவனென்றறியக்கடவை நிதானித்துப்பார்க்குமிடத்தில் முதற்காரணக்கடவுளாகிய சிவத்துக்குந் தமக்கும் அபேதமாய் ஒன்றாயிட்டிருப்பர், அதற்குச் சிலதிஷ்டாந்திரத்தைக்காட்டுவோம்பிரகாசம்பொருந்தியிருக்கின்ற சிரோரத்தினத்தினிடத்திற் கிரணமானதுபிரதிதிம்பித்துப் பிரியாமற்கலந்து விளங்குவதுக்கொக்கும்- இதனுல்தெரிந்துகொள்ளக்கடவை ஒருசமே-பிறிதிவு-அப்பு -தேயு-வாயு- ஆகாயமெனச்சொல்லநின்றபஞ்சபூதஉருவகமாய்த் தோன்றநின்றபுவனங்களடங்கியபலகோடி அண்டங்களில் ஆயிரத்தெட்டண்டங்களையும் சலனமற்றசெல்வப்பெருக்கையும் மீளாததெய்வப்படைகளையும்மற்றுமிராதி

ன்றசீனாயும் ஆதியிலுனக்குக் கொடுத்திருக்கின்ற பரம்பொருள் அவனெனில் தான்கடாட்சித்திருப்பவைகளைமீட்டும் வாங்கிக்கொள்ளுவது அரிதெனநினைக்கவேண்டாம்பற்பலவரங்களைப்பெற்றிருக்கின்றஆயிரத்தெட்டண்டங்களையும் மற்றசிறப்புகளையும்பெற்றுபெருகாலமாயனுபவித்திருக்கின்றனமென்று நினைந்திருமாந்திருக்கின்றமூடனே சேழ்ப்பையாக,யாவராயினும் அரியவிரதங்களைச்செய்துவந்தநல்லொழுக்கமகிமையினால் பரிபூரணகடாட்சவீட்சணியங்களிற் சிலவற்றைப்பெறுவாராயின் பஞ்சபூதச்செயர்க்கைகளினால் உள்ளும்புறம்பினும் மற்றகாரணங்களையுங்காட்டி விளங்குகின்ற அண்டகோடிகளனைத்துக்கும் சக்கிறவற்திகளாய் எக்காலத்தும்போற்றிமாளாதசெல்வத்தையனுபவித்திருப்பர் - இதுவுமல்லாமற் சகலத்துக்கும் ஆதியாகவிருக்கின்ற பிரணவமந்திரமும் மெய்வாய்கண்மூக்குச்செவியென்னும் ஐவகைப்பொறிகளும்சதுர்வேதங்களும் ஆகமங்களும்மற்றுஞ்சொல்லநின்றகலைக்கியானங்களும் அவ்வவற்றின் நிச்சயஉணர்ச்சியாகியஞானப்பிரகரணங்களும்ஒப்பற்றகுமாரதேவர் பேருருவின்காரணங்களெனக்கருதுவை,அக்கடவுளினது பெருமிதங்களை·என்போன்றவனாலளவிடப்படுவதோ ஆகிலும் யின்னமுஞ் சிலகாரணங்களைச்சேழ்ப்பையாக - சோடசகலைகளைப்பெற்ற பூரணச்சந்திரனைப்பார்க்கினுங் குளிர்ந்து விளங்குமுகாரவிந்தங்களெங்குந்தோற்றவும் செந்தாமரைமலரை நிகர்த்த விழிகளெங்கும் கிருபா நோக்கங்கொண்டும் திருச்செவிகளெங்கும்பரந்தும் ஆசானுபாகுவாகிய புயாசலங்களெவ் விடங்களினும் பெருத்தும் அழகியபாதாரவிந்தங்களெத்தலத்தினும் நிறைந்தும் கோடிசூரிய ரேககாலத்தி லுதித்ததைப்போல எங்கும்பரிபூரணமாக நிறைந்திருக்குந் திருமேனியும் யித்தகைய விசுவரூபத்தைப்படைத்திருப்பர் அக்குமாரதேவர் யிவையன்றியும் செந்தாமரையையொத்த விழிகளைப்படைத்த மகாவிஷ்ணு முதலாகிய தேவர்க்களுக்கும் ஆதிநூலாகிய நான்குவேதங்களுக்கும் மூலமாகவிளங்கும்பெருமையினையுடைய ஓமென்றோதநின்ற குடிலையானது தமக்கொப்பற்ற ஆதிதேவனாகிய முருகப்பெருமானுக்குரிய சண்முகங்களினொன்றாகவிளங்கிக்கொண்டிருக்கின்றது,ஆதலால் அத்தேவன்பெருமைகளையுங் குணாதிசெயங்களையும்யாவரால்கண்டுதுதிக்கப்படும்திரிநேத்திரதாரியாகிய பரமசிவசொரூபமாகவும் விஷ்ணுவடிவாகவும் பிர்மதேவனாகவும்திக்குப்பாலகராகவும்சூரியர்சந்திரர்முதலிய கிரகங்களும்சத்தரிஷிகளும் சிறந்ததேவர்க்களும் தாமாய் ஆதிபத்தியங்கொண்டு பிரமசிருஷ்டியினாலுண்டாகிய.சகலச்வராசிகளினிடத்தும்பொருந்தி நடிப்பித்து யிருவினைப்பட்டிருந்த கர்மபோகங்களை யனுபவிக்கச்செய்தும் நன்குதீங்குகளை,

ச்சமமாகநினைந்து அதுகள்நேர்ந்தகாலத்திற் கிலேசியாமலும் சந்தோ
ஷிப்படாமலும் ஏகபாவமாகநினைந்து நடந்துகொள்ளவல்ல பிராணிக
ளுக்குவேண்டிய சம்பத்துகளைத்தந்துகடையில்மோட்சசாம்பிருச்சிய
ங்களைத்தருகியாக வனுக்கிரகஞ்செய்து பாதுகாத்துரட்சிக்குங் குணநி
செயத்தையும் பெற்றவர், மேலும் அணுவுக் கணுவாகவும் பெருமையி
ற் சாலத்துக்குமேலாகவுங் காட்டநிற்பன் ஆதலால்ஆதிகாரணக்கடவுள்
அவரேயெனத்தெளிந்து கொள்ளக்கடவை, இவையன்றியும் பாலனாகத்
தோற்றியும் விருத்தனாகக்காட்டியும் நினைத்தனையினுஞ்சிறிகியும் அகண்
டாகாரமாகத்தோற்றியும் சூக்குமஸ்தூலவடிவுகளைப் பெற்றிருக்கின்ற
உருவங்களைக்கொண்டும்உலங்களை நடிப்பித்துவருவன், ஞானவான்களா
லும் யோகிகளினாலுங் கண்டறிந்துபோற்ற வொண்ணாதபெருமையினை
ப்படைத்த கந்தசுவாமியினது திருவிளையாடல்களை எத்தகையாராலுமறி
யப்படாத பரமசிவத்தின் அருளுருவாகத் தோற்றியிருக்கின்ற வேலாயு
தமூர்த்தியினது திருவாணையினல்லது ஓரணுவுமசையாது எத்தகையதே
வர்க்களும் அக்கடவுளினது சட்டளையைமீறி ஒருகாரணங்களையுஞ்செய்
யவறியார்கள் யிப்படிக்கிருக்கும்போது நீ உற்பத்தியாகிய காரணத்தை
யும் யிந்தசெல்வப்பெருக்குகள் கிடைத்தமூலத்தையும் கொஞ்சமாவது
யோசித்தறிந்து பிழைக்கும் எதுவையையாராய்ந்து கொள்ளவகைதெரி
யாமல் சுத்தமூடனும்மயங்கியிச்செல்வம் நிலைபெற்றதென்றும் அழி
வுபடாதவச்சிரதிரோசத்தைக் கிடைத்தனமென்றும் பலசாலிகளாகிய தம்
பியர்புத்திரர்செயசாலிகளாகிய பலசேனசமுத்திரங்களையுடைய னென்
றும் ஆணவ செற்வத்திற்பட்டு பிரமித் திருக்கின்றனை, ஐஐயோ அவன்
மாய்சைப்பெருக்கி லகப்பட்டுக்கொண்டு தடுமாறுகின்ற நீ யினியெவ்
விதத்தில் அதனைக்கடந்து யீடேறவிருக்கின்றனை பாலசுப்பிரமணியதே
வர் லீலாவினோதங்களிற் சிலதைச்சொல்லக் கேட்பையாக,பிரமாணத்த
டங்காத பற்பலபொருள்களி னுருவகமாயும் அவற்றுட்படாமற் றனிய
னாகவும் ரூபீகரித்தும் அரூபியாயும் எழுவகைத்தோற்றமாகவும்நூதன
க்கோலங்களாகவும் ஆதிதேவனாகவும் அதற்குமேற்பட்ட அனாதிப்பொ
ருளாகவும்விளங்கித் திருநடனங்களைச்செய்துவருவர், இத்தகைய பரிபூர
ணதிரோசத்தைப்பெற்றிருக்கின்ற சிவகுமாரன்திருவடிவிற்றோற்றியிரு
க்கின்ற அளவற்றரோமங்களினிடத்தில் புற்கள் முனையிற்பனித்துளி நீ
ர்ப்பதைப்போல அளவுபடாத அண்டகோடிகள் தோற்றிவிளங்கும் ஆத
லால் அவன்திருமேனியின் பெருமைகளையும் மற்றகாரணங்களையும் பூ
ரணமாகக்கண்டறிந்தவர்களொருவருமில்லை அளவிறந்த சிவாசிகளின்
பெருக்கும் யிவற்றைவிளக்கிவரும் மூலகாரணமாகிய பிறிதிவ்-அப்பு.

தேயு-வாயு-ஆகாயமென்னும் பஞ்சபூதங்களின் றோற்றத்தினால் நிறைந்
திருக்கின்ற அண்டவகைகளனைத்தும் சரவணபவன் வடிவில் விளங்கும்
உரோமங்களில் உற்பவித்துப்பலகாலம் அசைவற்றிருந்து யிறுதிக்கால
முடிவில் வந்தமூலமாகவே ஒடுங்கிப்போம் அத்தகைய திவ்வியமங்கள
கரமாகிய திருமேனியிற் சகலபுவனங்களும் அடர்ந்திருக்கின்றது, அவ
ற்றின் திறங்களையும் மேம்பாடுகளையும் அவனன்றியில் யிந்தஉலகங்களி
ல்வாசஞ்செய்கின்ற பிராணிகளில் யாவர்கண்டு தெரிசித்தவர்கள் யித்த
கையமகிமைகளைப்பெற்றிருக்கின்ற திருமேனியினது பெருமிதங்களை எ
மதுகர்த்தனாகிய பாலசுப்பிறமணியதேவர் கிருபையுற்று முன்னமொரு
காலங்காட்டியபோது தேவர்க்களனைவரும் ஆனந்தபரவசத்தராய் அத்
தோற்றத்திற்சிலவற்றைக்கண்டுகளித்து மோட்சசாம்பிருச்சியப்பதவிக்
குப்பாத்திரராயினர், இப்படிக்குத் தெரிசனையைக்காட்டுவதற்கேதுவே
தெனில், தமது திருவிளையாடல்களைக் கண்டு அவற்றிற்குக் காரணமி
ன்னதெனத்தோற்றாமல் மயங்கி மகம்மேருவினிடத்திலிருந்த தேவர்க்
களிடத்திற் பரிபூரண கடாட்சத்தைக்கொண்டு அவர்களைரட்சிக்க நினை
த்தமையால் அவர்கள் மையலொழிந்து தமது பெருமைகளைத்தெரிந்து
வழிபிருக்கும்பொருட்டு விசுவரூபத்தைக்கொண்டு அளவற்றகோடி அ
ண்டநிரைகள் உரோமங்கள்தோறும் அணிபடத்தொங்கத்தக்கதாகநின்
றகந்தசுவாமியார் திருக்கோலத்தைப் பாதகங்களைச்செய்துவருங்கொடி
யையாதலால் நீ கண்டதில்லையோ அக்காலத்திற் குமாரதேவர்கொண்டு
நின்றவிசுவரூபத்திற்றோற்றிய உரோமங்களினொன்றில் விளங்கியபல
கோடிஅண்டங்களில் ஆயிரத்தெட்டண்டங்களைச் சிவபிரான் அனுக்கிற
கத்தினாற்பெற்று ஆண்டுவருகின்றனை, இந்தரகசியத்தைத்தெரியாமல் அக்
கடவுளைப் பாலனெனச்சொல்லுகின்றனை யோகியர்ஞானவான்கள் முதலி
யமகத்துக்களாலும் கண்டறிதற்கரிய மங்களகரமாகிய குணதிசெயங்க
ளைப்படைத்திருக்கின்ற ஆதிதேவனாகிய பாலசுப்பிறமணியக் கடவுளான
வர் தீனசரண்ணியனாதலால் திருவுளத்திரக்கமுற்று தீனராகிய தேவர்க்க
ள்பெருகாலமாய் வருந்தியும் விலங்குகளைப்பூண்டு கொடிய சிறையிலி
ருக்குந் துன்பங்களைமாற்றி பழையபடிக்கு அவர்கள்பதவிகளில் நிலை
பெறச்செய்யவும் பிரமதேவனாதிய ரடைந்திருக்கின்ற கிலேசங்களையும்
போக்கிச் சுகத்திலிருத்தவும் கொடியராகிய துற்சனனைத்தண்டித்துப் ப
லவான்களையும்பெற்றிருக்கின்ற உலகஉபாதியைத்தவிர்த்து எதாப்பிற
காரம் சவுக்கியத்திலிருத்தவும் திருக்கயிலையைக்கடந்து யிந்தமண்ணுல
கில்வந்திருக்கின்றனர், அத்தேவன்கரத்தில் விளங்கும்வெற்றிவேலானது
சற்வசங்காரகாலத்திலோங்கிவீசும் பிறசண்டவாயுவின் மோதலினால் உ

லகத்துக் கச்சாணியாக அண்டத்தைத்தாவ வளர்ந்திருக்கின்ற மகம்மே
ருவைச் சின்னபின்னப்படத் துகளாக்குவதுபோல வயிரத் திரேகத்தை
ப்பெற்று மாளாதஉன்னுசையும் புயவன்மையையும் வாமுயற்சிகளையும்
துணைவர்பிள்ளைகள் பந்துவர்க்கங்கள் ரதகெசதுரகபதாதிகளின் பெருக்
கையும் சகலபுவனங்களையும் நிமைப்போதிலழிக்கும் மகிமைகளைப்ப
டைத்திருக்கின்ற தேவாஸ்திரச்செருக்கையும்சின்னபின்னப்படக்கண்டி
த்துவாட்டும் யித்தமகிமைகளைத்தெரியாமல்ஒப்பற்றுவிளங்கும்தேவா
திதேவனாகிய குமாரதேவனைக் குழந்தையென் றிகழ்ந்துபேசினை சுத்தப
வுத்திரமனதைப்பெறாத மூடனேவாயைமூடக்கடவை,எமதுகற்பனைம
தியாமற் சின்னப்படப்பேசிய உன்நாவையித்தவீர வாளினாற் கொ
ய்து சிரமற்று நிலத்தில்விழுந் துருளவெட்டித்தள்ளி உன்னுயிரையும் எ
மலோகத்துக்கனுப்பி விடுவேன் ஆனால் அப்படிக்குச் செய்யும்படியா
கிய கட்டளையை எமதையனிடத்திற்பெற்று வாராதகாரணத்தினாற் பாத
கனாகிய நீ யின்னஞ்சிலபோது உயிர்பெற்றிருக்கப் பொறுத்து ஏதோ
தெரியாமற் பெனத்தினையென் றுமன்னித்தேன்வேலாயுதத்துக்கிரையா
கவிருக்கின்றகொடியனே யிதனைஉண்மையாக நம்பக்கடவையெனக் க
டிந்துபேசி- அடா மூடராசனே-உன்னுயிருக் குறுதியாகிய மாற்சமின்
னுமொருதிரஞ் சொல்லக்கேட்பையாக, பாதகனாகிய நீயும் உன்கிளை
யும் நாசமடையாமல்யின்னஞ்சிலகாலம்வாழ்ந்திருக்க நினைப்பையாகில்
யிந்தநிமிஷத்தில் தேவர்கள் சிறையைநீக்கிவிடக்கடவை -மேலும்வயி
ரத்தைமறந்து குமாரதேவர் வீரவெண்டயமணிந்த பாதாரவிந்தங்களை
த் தஞ்சமாகவடைந்து வாழக்கடவையென்று கிரவுஞ்சபர்வதத்தைவே
லினாற் பிளந்தவாட்டிய குமாரசுவாமியார் பெருமைகளை விரித்துவிரித்
து வீரவாகுதேவர் சொல்லக்கேட்ட கொடியமனதைப் பெற்ற சூரபது
மன்வடவாமுகாக்கினியைப் போலப்பொங்கி மனங்கொதிக்கப் புகையு
மனலும்சுவாசங்களிற்பெருகச் சீறிவீரவாகுதேவனைக்குறித்து யிதனைப்
பேசுவான் , பார்பல்லுதிரந்தின்னமு முளையாத சிறுபிள்ளையானவன்ஏ
தோ சில காரியங்களைப் பேசும்படிக்கனுப்பிய நீ கொஞ்சமாவது பய
மில்லாமற் சக்கிறவத்தியாகவிருக்கப்பட்ட நம்மெதிரில்நின்று மரியா
தைக்குக் குறைவாய் முன்னம் நீ பேசியதற்குத் தூதனென்றெண்ணிச்
சொல்லாமல்விட்டேன்- அதையறிந்துதப்பிப்பிழைத்தோடிப்போகா
மலெதிரிலிருந்து மேலும் மேலும் அந்தக்குழந்தையினது பெருமை
களைப் படித்துப் படித்துச் சொல்லுகின்றனை அவன்வீரத்தையும் புயவ
ன்மைகளையுங்காட்டி பயமுறுத்துவாய்- நமது குமாரனாகிய கோபத்தி
ன் முயற்சியைக்கிஞ்சித்தும் யோசித்தவனல்ல குதலைச்சொல்லறாதபி

ளீளையாகிய உன்னிறைவன் சிறந்தபரம்பொருளாக விருந்தபோதினுமி ருக்கட்டும்- இந்தபூச்சிக்குக் கொஞ்சமாவது பயப்படுவேனென்றெண் ணவேண்டாம்- அளவற்றஅண்டங்கடோறுமிராநின்ற தேவர்களனைவ ரையும் செயங்கொண்டு பணியப்பெற்றிருக்கின்றயான் பொன்னுலக வாசிகளாகிய சயந்தன் முதலியதேவர்க்கள் சிறையை விடுதலைசெய்யக்க னவிலும் நினையேன்- ராசாதிராசனாகவிருக்கின்ற என்னெதிரிற் சலனம ற்றதீரத்துடன் உயர்ந்தசிங்காதனத்தின் பேரிலிருந்து வியர்த்தமாகிய பலவாக்கியங்களைப் பினத்துகின்றனை- அந்தகெற்வுத்தை ஒருகணப் போதிலறிகிறேனென்றுசொல்லி அகண்டமண்டலாதீஸ்பரனாகிய சூரப துமன் தன்பக்கத்திற் பணிவிடைக்கெதிற்பாத்திருக்கின்ற செயசாலிக ளாகிய ஆயிரம்வீரரைப்பாத்துத் தூதாகவந்தவனைக் கொல்லுவதென் போன்றவனுக்கழகன்று, ஆதலால் அதிசீக்கிரமத்தில் நம்மெதிரிலிருந்து வாதாடிக்கொண்டிருக்கின்ற யிவனைப்பிடித்துக் கொண்டுபோய் பாரவி லங்குபூட்டி அரியசிறைசாலையிலடைத்துவைத்து பதலமாய் காற்கக்கட வீரென்று உத்திரவுசெய்த மாத்திரத்தில் அந்த அவுணவீரர்கள் வடவை யைப்போற்கொதித்து கண்களில் அக்கினிப்பொறிகள் சிதறத்தக்கதாக மேலிட்டுவந்து வானத்தையளாவ ஓங்கியெரியும் அக்கினியைப் புகைசூ ழ்ந்திருப்பதைப்போல நாற்புறங்களிலும் வளைந்துகொண்டு நவரத்தி னமயமாய் சூரன் வீற்றிருக்கின்ற பீடத்துக்கும் மேலாய் சிரோரத்தின காந்திகளை வீசிக்கொண்டிருக்கும் சிங்காதனத்தின்பேரில் அசைவற்ற கெம்பீரமாக உளுக்காந்திருக்கும் புயபெலபராக்கிறம சாலியாகிய வீ ரவாகுதேவரைப்பிடிக்கநெருங்கி அதட்டிக்கொண்டுவருகின்றஅவுணப் பாதகரை வீரவாகுதேவர்கண்டு நகைத்துக் கரங்களைப் பிசைந்துகொண் டு வீரத்தன்மைபொருந்திய சிங்கராசனைப்போலவெழுந்து சீறி தன்னை ச்சூழநிற்கின்றமதயானைகளையொத்தசெயசாலிகளாகியவீரர்சிகைகளைமந் தரகிரியினும் வலிபெற்றுத்திரண்டு நீண்டிருக்கும் தமது கரங்களினொ ன்றைநீட்டிச் சேர்த்துப்பிடித்துத் தூக்கிக் கிறுகிறெனச்சுழற்றிச் சூரப துமன்வீற்றிருந் தரசுசெலுத்திவரும் சபாமண்டபத்தைத் தாங்கியிருக் கின்ற ரத்தினமயமாகிய தூணினிடத்திலோங்கி மோதியமாத்திரத்திற்சி ரங்களுடைந்து-மூளைசிதறி சபையினிடத்திருக்கின்றவர்கள்முகங்களெ ங்கும்படியவும் மார்புகள் பிளந்து வயறுகிழிந்து குடல்கள்சரிந்திறை யவும் கைகால் துண்டித்துப் பலதிசையிறுமிறையவும் உதிரவெள்ளமா னது பெருக்கெடுத்தோடவும், இவ்விதமாகச் சபைமுற்றும் அல்லோல கல்லோலப்படச்செய்து அவர்களுயிரை எமலோகத்துக்கனுப்பி உடல் களை உதிரப்பெருக்குடன் சூரபதுமன்பேரிலெறிந்து கண்களில் அக்கி

னிப்பொறிகள்சிதற மனம்வெந்து சரீரம்வியர்த்து யிதனைச்சொல்லுவா
ர், அடாபாவி எமதுசுகத்தன்கட்டளைப்படிக்கு நீ பிழைக்கும் பொருட்
டு- நீதியாகிய வசனங்களைக்காட்டினால் அதனைஉறுதியாகக்கொண்டுஅங்
கீகரியாமல் யிப்படிக்கொத்த தகாதகாரியத்தைநினைந்து செய்வித்தபடி
யால்- இனிதடையில்லாமல் எமதுசத்துருவாகிய சுப்பிரமணியக்கடவுள் தி
ருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலாயுதமானது உன்வயிரதிரோகத்தினை
ப்பிளந்துகொல்லுவது நிச்சயம்- அப்படிக்குக்குலநாசப் பட்டுப்போ
வதற்குமுன்னம் ஐம்புலன்களுந் திருத்தியடையும்படிக்கு நீ யருமை
யாகத்தேடிய செல்வங்களை யனுபவித்துக் கடைநாள்நேர்ந்ததென்றும
னதில் நிச்சயப்படுத்திக்கொண்டிருக்கக்கடவை- இனி சண்டாளனாகியஉ
ன்முகத்தையும் பார்க்கப்படாது- போய்வாரேனென்று ஆண்சிங்கம்
போன்ற வலியுடையவீரவாகுதேவர் வானத்தெழுந்தமாத்திரத்தில்அவர்
வீற்றிருந்த சிங்காதனமானது செப்படிவித்தையைப்போலச் சடுதியில்
ஆகாயமார்க்கத்தெழுந்து ஒருவருக்குந்தோற்றாமல் மறைந்தது.

---

## சதுர்முகன்வதைப்படலம்.

சவுனகாதிரிஷிகளே- இப்பிரகாரம் வீரவாகுதேவர்கோபங்கொ
ண்டு பிறையைப்போல கோரதந்தங்கள் விளங்கும் அதிசூரர்களாகியஆ
யிரம் அவுணவீரரையும் சுலபமாகச் சின்னபின்னப்படக்கொன்றுசபை
யினிடத்திருந்த சூரபதுமன் முதலிய வீராதிவீரர்களை எவ்வளவும் மதி
யாமல் வைதுபேசிககனத்தெழுந்தமாத்திரத்திற் சூரபதுமனுக்கு அதிக
கோபம்பிறவேசித்து விழிகளில் அனற்பொறிகள்சிதறத்தக்கதாகச்சபை
யைப்பார்த்து தனக்கருகில் மதயானையைப்போல உளுக்காந்திருக்கின்ற
சதுமுகனென்னும் அவுணவீரனைக்குறித்துச் சொல்லுவான், ஓ சேனைத்
தலைவனே நேத்திரத்தினம்பிறந்த சண்முகனிடத்திருந்து தூதாகவந்த
ஒருவன் நமது கட்டளையின்படிக்குப்போன ஆயிரம்வீரரையும் யிந்த
மகாசபையானதுகலங்கி எங்குமுதிரம்பெருகும்படிக்கு நிமைப்போ
திற்கொன்றதுவுமல்லாமல் நமது சவுரியங்களையும் ஆக்கினையையும் யிக
ழ்ந்து செயசாலியாய் பலவீரங்களைப்பேசிப் பயமில்லாமற் போகின்ற
னன், அவனிருந்த பீடமும் அவனுக்குமுன்னம் மறைந்துவிட்டது, இ
ப்படிக்கொத்த தயிரியங்கொண்டு நம்மவரைக்கொன்று போனானுயி

னும் சிலராசகாரியங்களைப்பேசும்படிக்கனுப்பியதூதனாதலால்அவன்பி ராணனைவாங்காமல் விரைவிற்போய் மடக்கிக்கொண்டு கொடியபோ ராச்செய்து அவன்கெற்வத்தையடக்கிப்பிடித்து புயங்களொடியத்தக்க தாக யிறுகக்கட்டிக்கொண்டு வாச்சடவையென்று கட்டளை யிட்டமாத் திரத்தில் பீடத்தைவிட்டெழுந்து வீரசிங்கம்போல சிங்காதனத்தில் வீ ற்றிருக்கின்ற சூரபதுமன் பாதாரவிந்தங்களிற்பணிந்து தேவரீர் திருவு ளப்படிக்குச் செய்துவருவேனென்று செலவுபெற்றுக்கொண்டு சர்வ சங்காரகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் மேகங்களும் ஒன்றிப்பெருகி மகம்மேருவைவளைந்த முன்னிலையிற் பிரசண்டவாயு வின்மோதலிற்பட்டு ஒலிப்பதைப்போல கெற்சித்துக்கொண்டு சபை யைக்கடந்து வெளிவந்துபோர்க்கோலத்தைத்தாங்கித்தானரியதவங்களை ச்செய்து பெற்றிருக்கின்ற தேவாஸ்திரங்களைச்சேகரித்து வயிரக்கவசத் தைத்தரித்து மந்தரகிரியையொத்த வில்லைக்கரத்திற்கொண்டு கருங்கட லையொப்ப ஆரவாரித்திருக்கின்ற ரதகெசதுரகபதாதிகள் அமோகமாகச் சூழ்ந்துவர அதிவேகமாகப்போய் முருகக்கடவுள்விடுத்த தூதனாகிய வீரவாகுதேவனாவளைந்துகொண்டயிதனைச்சொல்லுவான், இலங்கைமுத லிய கொடியகாவல்களைத் தப்பிக்கடந்து திரிமூர்த்திகளும் மதிக்கவல்ல கட்டுக்காவல்களைப்பெற்றிருக்கின்ற யிந்தபட்டணத்திற் புகுந்துயிந்தி ரசாலமயேந்திரசாலங்களை கற்றிருக்கின்ற திருட்டுப்பயலே ஆயிரத்தெ ட்டண்டங்களினிருக்கின்ற வீராதிவீரர்களனைவரும் வணங்கித் துதித்து க்கட்டளைகளுக் கெதிர்பாத்திருக்கின்ற வீரலட்சுமி குடிகொண்டிருக் கும் புசபெலபராக்கிறமசாலியாகிய சூரபதுமனென்னும் எங்களரசன் சபையில்வந்த நீ பேசவேண்டிய காரியங்களைக்குறிப்பதற்கு மேலாக ராசராசன் கீர்த்திப்பிறபாவங்களை யிகழ்ந்துபேசினை, மேலும் அரசன் கட்டளையிட்டபடிக்கு வந்த சில அவுணவீரரை உனக்கு சம்பவிக்கவி ருக்கின்ற கெடுதியைத்தெரியாமற் கொன்றனை, இப்படிக்கெல்லாம் தயி ரியங்கொண்டுசெய்த நீயிப்போது யெங்கேஓடுகின்றனை, நில்லுநில்லுஉ ன்சவுரியத்தையும் கெற்வத்தையும் நிமைப்போதிலழித்துநாசஞ்செய்ய வந்தேன், இனி மாயைவித்தைகளைச்செய்துபோக நினைப்பையாயினும் விடமாட்டேன்- அஷ்டதிக்குகளேமுதலிய யிடங்களிற்புகுந்தொளித் தபோதினுந்துடர்ந்துபற்றி கட்டிக்கொண்டுபோய் என்னரசன் சன்னி தானத்தில் விடக்கடவன்- போகாதே போகாதே என்றதட்டிவீரங்களை ப்பேசிவருவதை ஆண்சிங்கம்போன்றவலியுடைய வீரவாகுதேவர்கண்டு குகையிற்படுத்திருக்கின்ற மிருகராசன்மீதிற் கல்லையெறிந்தவன்மீதிற் சீ றிப் பாயுமாறுபோலச் சரேலெனத்திரும்பி நல்லகாரியம்வெற்றிவேலா

யுதபாணியாகிய குமாரசுவாமியார்கிருபையுற்று சூரன் பிழைத்துவாழநி
னைந்து சமாதானம்சொல்லியனுப்பிய நீதிகளைப் பலவிதங்களிலும்தெ
ரிவித்தபோதினுங்கேளாமல் யிகழ்ந்ததுமன்றியில் என்னைப்பிடித்துச்
சிறையில்வைக்கும்படிக்கும் ஆயிரம்அவுணவீரரைத் தாண்டினன், அவர்
களைக்கொன்று போகின்ற யித்தருணத்தில்யிதோமீட்டுமொருவீரனைச்
செலுத்தினனாதலால்- இனிசும்மாய்ப்போகமாட்டேன்- இவன்பிராண
னையும்எமலோகத்துக்கனுப்பிமகதயிஸ்பரியச்சம்பத்தைக்கொண்டிருக்
கும்யிந்தபட்டணத்தையும் சின்னபின்னப்பட அழித்தல்லது திரும்பே
னென்று சபதம்பேசித் திடசித்தனாய் வேலாயுதமூர்த்தி திருவடிகளைச்சிந்
தித்துச் சேனைத்தலைவனாகிய சதமுகனைப்பார்த்து அடா அவுணப்பயலே ச
ண்டைகொடுக்கநினைந்து வீரங்களைப்பேசிவருகின்ற உன்னையும்உன்னை
த்தொடர்ந்து வருகின்ற ரதகெச துரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைப்
பெருக்கையும் கண்டதுண்டமாகவெட்டியெறிவேன் சீக்கிரமாய் வாவா
வென்று பர்வதங்களைப்போலோங்கி யிருக்கின்ற புசங்களைத்தட்டி நிற்
கும்போது சதமுகனைச்சூழ்ந்துவந்த சதுரங்கபெலன்களுங் கொக்கரி
த்துக்கொண்டு மேலிட்டுஎமனுக்கொரு எமனையொத்தசெயசாலியாகிய
வீரவாகுதேவரை வளைந்துகொண்டு வீராவேசங்களுடன் பாரித்திரானி
ன்ற தனுசுகளை வட்டாகாரமாகவளைத்து நாரிகளைமிகிந்துதிசைகளெங்கு
மதிரத்தக்கதாக குணத்தொனிகொண்டு விஷித்தொவைபவிட்டுக்கூர்மை
யாய் பளபளென விளங்கிக்கொண்டிருக்கும் அலகையுடைய கொடிய
பாணங்களை அமோகமாகச் சந்தித்து கார்காலப் பெய்யலைப் போலச்
சொரிந்தும் வேல்-சக்கரம்- பிண்டிபாலம்-கப்பணம்- முசலம்-தண்
டம்-குலம்-இவ்விதங்களாகச் சொல்லநின்ற ஆயுதங்களை அபரிமிதமாக
ச்செலுத்தியும் -வாள்-வேல்-இவைகளைக்கொண்டுதாக்கியும்-இவ்விதமா
கச்சற்றும் யிரக்கமற்ற பாதகர்ஒருவன்பேரில் கொடியபோரைச்செய்யு
ந்தறுவாயில் அவர்கள்செலுத்திய அஸ்திரசஸ்திரங்கள் அனலைவீசிக்கொ
ண்டு பிரசண்டமாருதத்தைப்போல யிரைந்து புகைந்து அதிவேகமாக
வந்து செயசாலியாகிய வீரவாகுதேவர்பேரிற் முக்கியமாத்திரத்தில் எரி
ந்தும் பலதுண்டங்களாக முறிந்தும் துகள்பட்டும்பறந்து யாதொரு
பிறையோசனத்தையும் பெருமல் அபலமாகப்போய்விட்டது- அக்கா
ட்சியெப்படியிருந்ததெனில், விஷப்பற்களையுடைய சர்ப்பக்கூட்டங்க
ளானவை பட்சிகளுக்கரசனாகிய கெருடபகவான் நிழல்பட்டமாத்திரத்தி
ல் தெளிந்து புரண்டு பதைபதைத்து மாண்டதைப்போலத்தோற்றியது,
அக்காலத்தில் மதயானையையொப்ப நிற்கின்றவீரவாகுதேவர் அவுணச்சே
னைகள்செய்யும் போரைக்கண்டு அதிககோபங்கொண்டு பூமிக்கச்சாணியா

சுநிற்கின்ற மகாமேருவைப்போலப்பதினாயிரம்பொற்சிகரங்கள்பிறகா
சிக்கவானத்தைவளாவியிருந்த ஒருகோபுரத்தைத்தாவிப் பறித்துக்கொ
ண்டு தமக்கெதிரில் கொக்கரித்துவாதாடிச்சூழ்ந்திருக்கின்ற சயின்னிய
ங்கள்பேரில் வேகமாய்வீசியபோது பூர்வத்தில்இந்திரனானவன்வச்சிரா
யுதத்தினால் சிறகுகளையரிந்தகாலத்தில் எகசிவிழுந்த பொன்மலையை நிக
ர்த்துப் பரந்திருந்த சேனைப்பெருக்கின்மீதுபட்ட முன்னிலையில் எலு
ம்பு-நரம்பு-உதிரமாம்சமுதலிய தாதுக்களினால் விளங்கும் சரீரங்கள்
சந்தனத்தேய்வையைப்போல அரைபுண்டு பிடிகள் மின்னல்களுடன் சு
த்தமேகங்களுங் குமிறிக்கொண்டிறங்கிச் சலத்தை கிறிகிக்கின்ற தறு
வாயில் அலைகள்பெருத்த சமுத்திரங்களானவை கரைகளைச்சாடிமோதுவ
தைப்போலப்பேரொலியுண்டாய்உதிரப்பெருக்கானதுயிரைந்தோடவு
ம்,கொடிகள்டெக்கையங்களினால் அலங்கரித்துநவரத்தினமயமாகவிள
ங்கியிருந்த அந்தகோபுரமானது விழுந்தபோது துகள் துகளாகப்பின்
னப்பட்டிறையவும்,அவுணவீரர் சிரங்கள்படபடென நெரியவும்தேர்க
ள்மடமடென நுறுங்கவும் யிவ்வித உற்பாதம் நேரும்போது அவ்வதிற்
சியினால் அண்டகோளகை நெக்குவிடவும் விசாலமாகிய பூமண்டலம்பி
ளந்துநாகலோகந்தோற்றவும் வீரமாமயேந்திரபுரமானது கீழ்மேலாய்
அதலகுதலப்பட்டுஅதிலிருந்தவர்கள் திகிற்பட்டு யுகப்பிறளயம்நேர்ந்
ததோவென்று ஒருவர்பேரி லொருவர்விழுந்து தடுமாறவுமாயிற்று-இ
வ்விதமாகச்சதுரங்கசேனைகளையும் சொர்ணமயமாக நின்றகோபுரத்தை
யும் நிமைப்போதிற் றுகள்கண்டு மதயானையைப்போல வீறிநிற்கின்ற
வீரவாகுதேவர் செயவுச்சாகத்தை சதமுகனாகியசேனைத்தலைவன்கண்டுத
னக்குப்படைத்துணையாகவந்தபலவெள்ளம்ரதகெசதுரகபதாதிகளாகிய
சேனைப்பெருக்கில்ஒருவனையுங்காணாதவனாய்அம்மம்மயிதென்ன அன
ர்த்தமாகவிருக்கின்றது, எதிரியோ ஒருவன் நம்முடன்வந்த நால்வகைச்
சேனைகளோ அளவற்றது யிதனைச்சற்றும் எண்ணிக்கையில்லாமல்மேரு
வையொப்பநின்றகோபுரமொன்றினால் உருத்தெரியாமற்கொன்றனன்,
இவன்வல்லபத்துக் கொருவனையும் ஒப்புச்சொல்ல'வொண்ணாது, மேலு
ம்சூரனென்பது யிவனுக்கேயடுக்கும் நான் பலசண்டைகளில் நேர்ந்து
போராடி செயங்கொண்டிருக்கின்றனன், இத்தகையபலசாலியையிதுப
ரியந்தங்கண்டதில்லை யாவராயினுஞ்சொல்லக்கேட்டதுமிராது-ஆதலா
ல்யிவனைச்சுலபமாகவெல்வதுமிகவுமரிதாகுமென்று மனங்கலங்கிவாடி
னவனாய் பின்புதன்குலவித்தியையெண்ணிதயிரியங்கொண்டு நல்லகாரி
யம்யிவனுணவத்தைச் சற்றுநேரத்திலறிகின்றனனெனச்சீறிக்கரவேகமா
ய் ஏழுசூலக்கைசூலம் சக்கரம் தோமரம் பிண்டிபாலம் கதைமுதலியப

டைகளை ஒன்றின்பின் னொன்றாக ஙிவ்வுஙிவ்வெனப் பிரயோகித்து ஆம்பரித்தனன் - அவைகள் பிரசண்டமாருதத்தைப்போல யிரைந்துபுகைந்த பலகொடுமைகளைக்காட்டி வருவதை வீரவாகுதேவர் பார்த்தமாத்திரத்திற் கோபதீபிதனாய்த் தன்மீதில் ஆரவாரங்களைக்காட்டிவருகின்ற ஆயுதவிதங்களைப் பற்றிப்பற்றிச்சுள்ளிகளைப்போலமுறித்து விட்டவன்மீதிலெறிந்துபோட்டு சிங்கராசனைப்போலச் சீறிக்கோடையிடியை யொப்பக்கொக்கரித்துக்கொண்டு நவரத்தினமயமாய்ப்பர்வதத்தை நிகர்த்துவானத்தையளாவத் தோற்றுகின்ற ஒரு கோபுரத்தையீட்டும் பறித்துச்செண்டைப்போல வேகமாய்த் தன்பகைவன் மீதிலெறிந்தனர், அதுசுழன்றுகொண்டு வேகமாய்வருவதை சதமுகன் கண்டுசீக்கிரமாய்த் தன்கரத்திலிருக்கின்ற பாரித்தவில்லைவளைத்துத் திசைக ளதிரக் குணத்தொனிகாட்டிக் கழுகிறகுகள்பூண்டதாய்க்கூர்மைதங்கியிருக்கின்றகொடியபாணங்களாயிரவற்றைக்கரவேகமாகச்செலுத்திமேலிட்டுவருகின்றகோபுரத்தைப் பொடிப்பொடியாகக் கண்டித் தெறிந்து மேலும் நூறுதிவ்வியசரங்களையெடுத்துபகைவன்சரீரத்தைத்துளைக்கும்படிக்குக்குறிகொண்டுகரவேகமாய்ப்பிரயோகித்ததருவாயில் வீரவாகுதேவர்அதுகளைச்சட்டைபண்ணாமல் மசகங்களைப்போலத் தட்டிப்போட்டு யிவனுடன் விண்வாதாடுவதிற் காலதாமசமாகுமென்றெண்ணிச்சிங்கராசனைப்போலப்பாய்ந்துஅந்தசேனைத்தலைவன் கரத்திற்பற்றியிருந்தவியவில்லைப்பிடுங்கி யிருதுண்டமாக ஒடித்தெறிந்தபோது சதமுகன் அதிக்கிரமித்து யிவனைப்பிடித்துக் கட்டிக்கொண்டு நம்மரசனிடத்துக்குப் போகயிதுநல்லதருணமெனநினைந்து யானைத்துதிக்கையைப்போலக்கறுத்து பாரித்திராநின்ற தனதுவலப்புறத்து நூறுகரங்களையும் வேகமாய்நீட்டிப்பிடித்தான்-அத்தருவாயில் வீரவாகுதேவர் மகம்மேருவைப் போலப்பாரித்து வலிபெற்றிருக்கின்ற தமது புசத்தினால் அவன்மார்பிற்கோடையிடியைப்போலத்தாக்கி பூமியில்விழுந்துருளத் தள்ளியபோது அந்தசேனைத்தலைவன் பதைபதைத்துப் புரண்டெழுகின்ற தருவாயில் மந்தரகிரியினும் பாரித்திராநின்ற தமது பாதத்தினாலுதைத்து மீட்டும் நிலத்தில் விழும்படிக்குத்தள்ளி யிடியைக்கேட்ட, சற்பமானது பதைபதைத்துவாடுவதைப்போல மற்றொருபாதத்தினால் அவன் மார்பிலூன்றி உதிரமானது நூறுவாய்வழிகளினுமூற்றெடுத்துப்பெருக மிதித்து நின்றனர், சவுனகாதிரிஷிகளே-நவரத்தினமயமாகியவாகுவலயங்களைப்பூண்டுசெற்சம்பத்தையொப்ப பாரித்து வலிபெற்றிருக்கின்ற புயாசலங்களையுடைய கொடியரசனாகிய சூரபதுமன் கட்டளையின்படிக்குச் சபதம்பேசிவந்த சதமுகனை யிவ்விதமாகத்தருமசிந்தனையைப்படைத்திருக்கின்ற

வீரவாகுதேவர் மிதித்திருந்த காட்சியெப்படிக்கிருந்ததெனில், முற்காலத்தில் உலகங்களையலைத்திருந்த அந்தகாசூரனையும் வலிமிலுயர்ந்தமுயலகனையும் கயமுகாசூரனையும் விழத்தள்ளிப் பாதங்களினொன்றினால் மிதித்துநின்ற தமது பிதாவாகிய சிவபிரானைப்போல விருந்தது, இவ்விதமாகவீரவாகுதேவர் பாதங்களையூன்றியகாலத்தில் மூன்றாம் பிறையினைக் கண்டித் திருபாரிசங்களினும் பதித்திருப் பதைப்போலவும் மின்னற் கொடியைநிகர்த்தும் விளங்குகின்ற கோரதந்தங்களைப்படைத்த சதமுகன் மார்பானது கோடைகாலத்திற் களிப்பாகவிருக்கின்ற பூமியானது பிளந்திருப்பதைப்போலப் பத்தலாகவிண்டு குடல்சரிந்து உதிரவெள்ளம்பெருக்கெடுத்தோட விருந்தபோதினும் துமிறிக்கொண்டெழும்படிக்குப்பிறையெத்தினப்படுவதைவீரன்தெரிந்துஒருபாதத்தையெடுத்துதைத்துவாயுமோதலினாற் றெங்கின்னொற்றுதிருவதைப்போலஅப்பாதகன் நூறுதலைகளும் அறுபட்டிறையும்படிக்குச்செய்து கொன்றவராய் மேலும் அதிககோபங்கொண்டு சண்முகப்பெருமாள் கிறவையுற்றுச்சொல்லியனுப்பிய நீதிகளைச்சிறந்ததாகவெண்ணியங்கீகரியாமல்இகழ்ந்துபேசிய சூரபதுமன்வீற்றிருந்தரசுசெலுத்தும் நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தைமுறித்துச் சின்னபின்னப்படுத்தியபின்பு அளவற்றசெல்வப் பெருக்கைக் கொண்டிருக்கும் யிந்தபட்டணத்தையும் நாசம்பண்ணக் கடவனெனச்சபதம்பேசிவீரவாகுதேவர்யிதனைச்செய்வதாயினர்.

## காவலர்வதைப்படலம்.

சூதபுராணிகர்-மேல்நடந்தசரித்திரங்களையும் நைமிசாரணியவாசிகளுக்குச் சொல்லுவதாயினர், இவ்விதமாக வீரவாகுதேவர் தீர்மானித்துக்கொண்டவராய் கோடிசூரியப்பிரகாசமாக விளங்கிக்கொண்டிருக்கும் வெற்றிவேலாயுதத்தைத்தாங்கியிருக்கின்ற சரவணபவன் திருவடிகளைத்தியானித்து மண்விண்ணை யிரண்டடியாகவளந்தமகாவிஷ்ணுவைப் போல விசுவரூபத்தைக்கொண்டுநின்றகாலத்தில் வீரவாகுதேவர்புசங்கள் திசைகளைமறைக்கவும் நவரத்தினமயமாக விளங்குகின்ற கிரீடமணிந்தசிரமானது அண்டத்தைமுட்டவும் பாதங்கள் பூமியைமறைக்கவும் யிக்கோலமாகத்தோற்றியதவாயில் பூமண்டலத்தைத் தாங்கியிருக்கி

ன்ற ஆதிசேஷனாகிய அஷ்டமாநாகங்களும் கூர்மாண்டரும் அச்சுமை
யைத்தாங்கப்படாமையால் யிதென்னவிபரீதம் விளைந்ததென்று நடுந
டுங்கிவாடவும் வீரமாமயேந்திரபுரியானது கம்பிதப்பட்டு ஒருபாரிசத்
துக்கொருபாரிசந் தலைகீழாகத்தத்தளித்து உயர்ந்தபோதினும் சூரபது
மன் தவமுயற்சியினால் இலங்கையைப்போலச் சமுத்திரத்திலாழ்ந்து சி
ன்னபின்னப்படாமல் நிலைபெற்று நின்றதாயினும் வீரவாகுதேவர்மி
திக்காற்றாமல் நகரமெல்லைமுற்றினும் வெடித்து அம்மூலமாகச் சமுத்
திரங்காணப்பட்டு அவர்பாதங்களூன்றுதலினால் கடல்நீரானது அவ்
வெடிப்புகளின்மூலமாக மேலிட்டுப்பெருகிச்சூரபதுமன் வாசஞ்செய்
யும் அரமனையைவளைந்துகொண்டு சபாமண்டபத்தினும்பரந்து அதிலி
ருந்த சகலரும்வருந்தி ஒதுங்கும்படியாக நிறைந்ததுமன்றியில் அவ்
வெள்ளமானதுமீறிப் பெட்டியிற் சர்ப்பமடங்கியிருப்பதுபோல விசா
லமாய் யிருபாரிசங்களினும் நவரத்தினமயமாகிய மேடைகள் உப்பரி
கள் முதலிய நெருங்கியிருக்கின்ற தெருக்களிலோடி மேலிட்டு ரதங்
கள்-யானைகள்-குதிரைகளிருக்கின்ற-சாலைகள்-கூடங்கள்-கொட்டாரங்
களினிடங்களிற்புகுந்து வாரிக்கொண்டு பூமண்டலத்திற்பாயும்நதியின்
வெள்ளத்தைப்போல நகரமுற்றும்பரந்து சுலவிக்கொண்டோடும்செ
லப்பெருக்கானது விசாலமாய் நீண்டிருக்குந்தெருக்களினிருபாரிசங்க
ளினும் நவரத்தினமயமாய் சித்திரவிசித்திரங்கள் பெருத்திருக்கும் உப்
பரிகைகள் மாடமாளிகைகள் மண்டபங்கள் கூடங்கள்கோபுரங்கள்முத
லாகக்கடைகாலுடன் பெயர்த்துக்கொண்டு ஆழ்ந்திராநின்ற சமுத்திரத்
திற்சேருகியது. அத்தருவாயில் அடியருக்கெளியனாகிய சிவசுப்பிரமணி
யதேவர்க்கடுத்ததூதனாகிய வீரவாகுதேவர் கொண்டகோலத்தின் பெரு
மிதத்தைக்கண்ட அந்நகரவாசிகள் கரங்களைப் பிசைந்துகொண்டுஅம்ம
ம்மயிதென்ன விபரீதமாகவிருக்கின்றது யிதுபரியந்தம் யித்தகைய உ
ற்பாதங்கள் விளைந்ததையறியோம் ஏதோமோசத்திற் கிடமாகக்காணுகி
ன்றதெனநடுநடுங்கி யினிதாமசப்படுவோமாகில் பிராணஆனிவருமென்
று அவ்வீதிகளி லிருந்தவர்களனைவரும் பெண்டுபிள்ளைகளுடன் பலதிசை
யினும் ஓடிப்போயினர், அக்காலத்தில்அளவற்ற காவலுடன் பட்டத்தா
னைகளுலவிக்கொண்டிராநின்ற சூரபதுமன் அரமனையைக் காவல்கொண்
டிருக்கின்ற அவுணவீரர்கள் வீரவாகுதேவர் கொண்டிருக்கின்ற உருவ
த்தினைபார்த்து ஓகோயிதோ ஒருபூதன்வந்தான் ஓடிவாருங்கோளென்று
கரங்களைத்தட்டிக்கூவிச்சகலரும் ஏகமாகச்சேர்ந்து யிந்தகோரரூபத்து
க்கஞ்சி சண்டைகொடுக்காமலிருப்போமாகில் யிதைத்தெரிந்தமாத்திர
த்தில் நமதரசன்கோபித்து நம்மனைவரையுந் தெண்டிப்பன்யிதற்குச்சந்

தோமில்லை-அதற்குமுன்னம்நம்மாற்கூடியமட்டும் ஒருமைபார்க்கவேண்டுமென்றெண்ணினவர்களாய் சொம்மைகளாதிய உறுப்புகளமைந்திரானின்றமதில் மற்றதலங்களினிடத்திற் காவல்கொண்டிருக்கின்றஅன்பதுவெள்ளம் அவுணவீரர்களுந் தங்கள்தலைவர்களுடன் சொக்கரித்துக்கொண்டு சோபமிகுதியினால் விழிகளில்அனற்பொறிகள் சிதறத்தக்கதாகச்சபதங்களைப்பேசிக்கொண்டு சண்டைகொடுக்கவெத்தனித்து நாலுயக்கங்களினும் வளைந்துகொண்டு - எழுவாயுதம்-மழுவாயுதம்-தோமரம்-பிண்டிபாலம் முசலம்-சக்கரம்-பாரித்திராநின்ற - தண்டாயுதமுதலாகிய படைகளை யதிவேகமாகச்செலுத்தி அண்டகோளகையுங் கிடுகிடெனநடுங்கத்தக்கதாக ஆர்ப்பரித்துப்போராடுவதையும் அந்தஅவுணவீரர்நிரங்களையும் வீரவாகுதேவர் பார்த்துச் சீறி ஆயிரகோடி சோலடயிடிகள் ஏககாலத்தில் ஒலித்ததைப்போலப்பாரித்திராநின்றதமது புசங்களைத்தட்டிசிங்கநாதஞ்செய்தனர், அவ்வொலியானது செவிகளிற்பட்டவுடன் அதிகவிருப்புடன் சண்டைகொடுத்திருந்த அவுணப்படைகளனைத்தும் மனங்கலங்கி யறிவழிந்து மேகசெற்சிதத்தைக்கேட்ட சிறுபட்சிகளைப்போலக் கை கால்களுதறத்தக்கதாகப்பயந்து உடனே தயிரியங்கொண்டவர்களாய் யிருளைப்போலக்கறுத்து பாரித்திராநின்ற திரேகங்களைப்படைத்த சேனைவீரர்கள்திரண்டு அஸ்திர சஸ்திரவிதங்களைச் சொனைப்பெய்யமலையொப்பக் கரவேகமாகச்செலுத்தியகாலத்தில் அப்படைகளனைத்தும்அனலையிறைத்து புகைந்துகொண்டு வேகமாகவந்துவீரவாகுதேவர்சரீரமுற்றுந்தைத்துப் பலவிழுதுகள் தொங்கநிற்கும் ஆலமரத்துக்கொப்பாக உதிரம்பெருகத் தோங்கியிருக்கும்போது வீரவாகுவுக்கு அதிககோபம்பிறவேசித்து வடவாமுகாக்கினியைப் போலக்கொதித்து சுத்தவீரர்மீதல்லது வீரவாளையெடேனெனஉருத்துத் திருப்பாற்கடலைக்கடைந்தமந்தரகிரிக்குச் சமதையாகப்பாரித்திராநின்றதிருவடிகளைக்கொண்டு தம்மைச்சூழ்ந்திருக்கின்ற சதுரங்கச்சேனைகளையுஞ் சின்னபின்னப்படக்கொல்ல நினைந்து-சிலரையுதைத்துருட்டியும்-சிலரை பூமியிற்றேய்த்தும்-சிலரைக்குடல்சரியமிதித்தும்-சிலரைபஞ்சைப்போலச்சதைத்தும் சிலரைபூமிக்குள்ளடங்கத்தாக்கியும்-சிலரை திசாதிசைகளினெற்றியும்-சிலரைச் சமுத்திரங்களில்வீசியும்-சிலரைவானவெல்லையிற்கடாவியும்-சிலர்மூளைகள் சிதறஉதைத்தும்-சிலர் கரங்கள் தோள்கள்முதுகுகள் நுறுங்கச்சாடியும்-இவ்விதமாகக்கால்களைச் சக்கிராகாரமாகச்சுழற்றிச் சுழற்றிச்சின்னபின்னப்பட மாய்த்துங் கோபந்தணியாமல் கரங்களை நீட்டிச்-சிலரைப்பற்றி கழுத்துகளையொடித்தும்- சிலர்மார்பைக்கிழித்தும் - சிலரைப்பிளந்தெறிந்தும்-சிலரைப்பதைக்கப்பதைக்கத்தோலையுரித்துவீசியும்

-சிலரைப்பிசைந்தும் - சிலரைக்கசக்கி யூதியும் - சிலர்மூக்கைக் காதை
க்கிள்ளியும்-சிலர் வாயைப்பிளந்தும் -சிலர் விழிகளைக்கெல்லியும்- சிலர்
சிரங்களிற் கோடையிடியைப்போலக்குத்தியும் சிலரைவாரி அண்டகோ
ளகைக் கப்புறத்திற்செல்லவீசியும் - சிலரைப்பல்லுதிரமோதியும் - சிலரை
ப்புசங்களைத் தூக்கித்தள்ளியும்-சிலரைச்சேர்ந்து கரும்பைப்போலமு
றுக்கி உதிரம்பெருகவீசியும் - சிலரைக்கால்தலையை வட்டாகாரமாகச்சே
ர்த்து சக்கரங்களைப் போலுருட்டியும்- சிலரை அம்மானையாடியும்-சில
ரைப்பந்தையொப்பவெறிந்தும்-சிலரைச்சின்னபின்னமாகக் கிழித்தும்
சிலர்மார்புகள்நெக்குவிட்டுதிரம்பெருகக்குத்தியும் - சிலரை கரங்களைமு
றித்தும்-சிலரைத்தலைத்தும்-இவ்விதமாக வீரவாகுதேவர் ஒருருவாக
வும் பலதோற்றங்களைக்கொண்டும் அவுணவீரரைத் துடர்ந்து துடர்ந்து
பிரசண்டவாயுவைப்போல உரறிக்கொண்டு சூருவளையநிகர்த்து வளைந்
து வளைந்து ஒருவரையும் அப்புறம் யிப்புறம் போகவொட்டாமல் குதி
த்துக்குதித்துக் கடலைக்கலக்கிய மத்துக்கொப்பாக அலைத்து ஒருவர்தப்
பாமல் அன்பதுவெள்ளம் சேனைசமுத்திரங்களையும் வீழ்க்கொன்றகால
த்திற் பெருகிய உதிரவெள்ளமானது மீறி விசாலமாய் நீண்டிருக்கின்ற
வீதிகளிலிரைச்சலிட்டோடும்போது மயிலினங்கள் மாடப்புறாக்கள் அ
ன்னங்கள் கிளிகள் வாசஞ்செய்யும் நவரத்தினமயமாய் வானத்தையளா
வநிற்கின்ற உப்பரிகைகள் மாடமாளிகைகள் கூடகோபுரங்கள் யிவற்றி
ன்மீது உணவினிடத்திச்சைகொண்டு வந்துசேர்ந் திரைச்சலிட்டிருந்த
பாந்து கழுகு காக்கைகள் அப்பெருக்கிற்படிந்துகளித்து பிணங்களையு
ண்டுலவவும் -பூதபசாசங்கள்- காளிக்கூட்டங்கள்-நாய்கள் உதிரமாம்ச
ங்களைத்திருத்தியாகத்தின்று வெறிகொண்டுகூத்தாடவும்பற்பலகவந்தங்
கள்நாடகரைப்போல ரணக்களமெங்குங்கூத்தாடவும் யின்னமும்புதிய
விருந்துக்கேதுவிருக்கின்றதென்று பறவைகள்பந்தலிட்டுலவவும்யிவ்வி
தமாக மானினங்கள்கூட்டமாக நெருங்கியிருப்பதின்மத்தியிற்சிங்கமா
னதுபாய்ந்தமாத்திரத்தில்அவைகளழிந் துமங்குவதைப்போலச்சூரபது
மன்வீற்றிருக்கின்ற அரமனையைக்காவல் கொண்டிருந்தஅன்பதுவெள்
ளம்சேனைகளையும்தமதுகோபாக்கினிக்கிரையாகக்கொடுத்துச்சிரங்கள்கர
ங்கள் தடைகள் புசங்கள் மார்பு கபோலம் யிவைகள் கண்டிக்கப்பட்டு
மச்சராசிகளைப்போல உதிரவாரியில் மிதந்தும் அழுந்தியும் போகவும்
யானைகள் குதிரைகள் கால்வேறு தலைவேறு மற்றஉறுப்புகள்வேறாய்க்கு
வியவும் தேர்கள் அச்சு மச்சு குத்துக்கால் கொடிங்கை முதலியவைகளை
னைத்தும் பின்னப்பட்டிறைந்து நிணச்சேற்றிலழுந்தவும் - இவ்விதமா
கக்குலாலன் சக்கரத்தையும் சுழற்காற்றையும்நிகர்த்து மாறிமாறிக்கரங்

களினாலும் பாதங்களினாலும் அளவிறந்த அவுணவீரர்க்கணப்போதி ற்கொன்றனர், சவுனகாதிரிஷிகளே-பற்வதராசபுத்திரியாகிய பார்பதியா ர்திருவடிகளிற் றரித்திருந்த பாதசரங்களிற் கிண்கிணிகளாகச் சந்தித்திரு ந்த நவமணிகளிலுதித்த கன்னியர்களில் மூத்தவளாகிய மாணிக்கவல்லி யினது தவப்பேற்றினாலுதித்திராநின்ற செயசாலியாகிய வீரவாகுதேவ ர்அத்தறுவாயிற் கோபங்கொண்டு சாடிய விநோதங்களை யென்சொல் வேன்- இவ்விதமாகமாண்ட அவுணவீரர் சரீரங்களிலிராநின்ற இரத்தம் சுக்கிலம்-மூளை-தசை-எலும்பு-நரம்பு-தோலெனச்சொல்லநின்ற எழுவ கைத்தாதுக்களின் பேதங்கள் தோற்றாமல் ஏகமாய்க்கதம்பக்குழம்பை ப்போலச்சதைத்துக்கிடத்தியதெப்படிக்கிருந்ததெனிற்,பொன்-வெள் ளி-பித்தளை-செம்பு-இரும்பென்னும் பஞ்சலோகங்களையுஞ் சேர்த்து ருக்கியகாலத்திற் பிறிவின்றிக் கலந்துகாட்டுவதையொத்து அக்காலத்தி ல்நடந்தசண்டையின் பெருமைகளை எத்தகையராலுங் கணித்துச்சொல் லப்படாது-இவ்வாறு செயங்கொண்டு வீரவாகுதேவர் மேல்நடத்தியச ரித்திரங்களையுங்கேழ்ப்பீரென்றுசூதபுராணிகர்சொல்லத்தொடங்கினர்.

## நகரழிபடலம்.

சவுனகாதிரிஷிகளே- மேற்குறித்த விதமாய் புசபெலபராக்கிர மசாலிகளாகிய அன்னூறுவெள்ளங்காவலரை எத்தகையருங் கொண்டா டித்துதிக்கும் படிக்குக் கோலாகாலமாகச் சின்னபின்னப்படக்கலக்கி வாட்டியபின்பு சண்டைமுகத்திலொருவரையுங் காணாதபடியால் வீரவா குதேவர்காலாந்தகனைப்போலக் கொக்கரித்துயாரித்த புசங்களைத்தட்டி க்கொண்டு அன்னூறுயோசனை விஸ்திரணமும் ஆயிரம்யோசனை உன் னதமும்பெற்றதாய் அபரஞ்சியினாற்சோடித்து நவரத்தினமயமாக வி ளங்கும் ஆயிரங்கலசங்களையுந்தாங்கி பார்த்தவர்கள் விழிகளைகிறிகிக்கவ ல்ல சித்திரப்பிறதமைகள் பெருத்து பொற்றகடுகள் ப்ரப்பிய பலநிலைக ளைக்கொண்டோங்கி நாற்புறங்களினும் மிருளைப்போக்கிச் சொலித்து க்கொண்டு சூரியனையொப்பவிளங்கி ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகவிருக்கின்ற சூரபதுமன் அரமனைமுகப்பில் மகம்மேருவினு ம்பாரித்துநிற்கின்ற கோபுரத்தைக்கண்டு அதிசீக்கிரமத்திற்றாவி அதனை பபறித்து செண்டையொப்பக் கரத்திற்கொண்டு பாதகங்களுக்கிருப்பி டமாகவிருக்கின்ற கொடியமனதைப்பெற்ற சூரபதுமன் நன்மார்க்கங் களையழித்துக் கொடுங்கோல்செலுத்தி வீற்றிருந்தாசுசெலுத்தும் நவர

த்தினமயமாகிய சபாமண்டபமானது நறுங்கி அதப்பமும்படிக்குக் கு
தித்துவிசிச் சிங்கநாதஞ்செய்தனர், அக்காலத்திற் பற்பலசிறப்புகளைவா
ய்ந்த அக்கோபுரமானது குலாலன் சக்கரத்தைப்போலக் கிறுகிறெனச்
சுழன்றுகொண்டுபோய் ராசாதிராசனுகிய சூரன்கொலுவிருக்கும்மண்
டபத்தின்மீது மேருமுதலிய குலகிரிகள்சோபித்துவருவதையொப்பக்
காட்டிகோடையிடியினும் அதிகவோசையெழச்சூரன் ஆற்பரித்தசத்தமான
து அத்தலத்திலிருக்கின்றமந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர்முதலானவர்
கள் செவிகளில்விழுவதன்முன்னம் ஆஸ்தானமண்டபத்தின்பேரிற் பே
ரொலியைக்காட்டி விழுந்தது, சவுனகாதிரிஷிகளே - நவரத்தினமயமாகிய
ஆபரணங்களைப் பூண்டிருக்கின்ற சூரபதுமன்செய்த தவமுயற்சியினு
ல் அவனும் பிள்ளைகள் பிரமன் யித்தனையிருக்கும் யிடங்களன்றியில்
மற்றசபையின் மேற்பரப்பனைத்துந் தூள்பட்டிடிந்து நாற்புறங்களி
னுந் தாங்கியிருந்த சித்திரச்சுவர்கள் பொடிப்பொடியாயுதிர்ந்து மங்
குவதாக பாலசுப்பிறமணியதேவர்விடுத்த தூதன் நிற்கின்ற காட்சியெப்ப
டியிருந்ததெனில், சர்வசங்காரகாலத்திற் சராசரப்பிறபஞ்சங்களையழி
த்து அண்டமுகட்டை யூடுருவியுலவிய ஓங்காரப்பொருளாய் தேவாதி
தேவனுய்விளங்குகின்றசிவபிரானைப்போலக் காட்டியது, இவையன்றியு
ம் பவழத்தையொத்த கால்களையும் சிவந்தமூக்கையும் அழகியசிறகுகளை
யும்படைத்த அன்னப்பட்சிகள்குயிற்கூட்டங்கள்பசியசிறகைவாய்ந்தம
யிலாதிய பட்சிகள் நெருங்கிச் செவிகளுக்கினிமையாகவொலித்திராநின்ற
தோப்பினிடத்திற் கோடையிடியானது உருத்துவிழுமாயின் அதிலடங்
கிய பட்சிகள் அங்குமிங்குமா யுலவி யலைகின்றதையொப்ப வீரன் வசி
ய கோபுரநிலைகளிற் காவல்கொண்டிருந்த அவுணவீரர்கள் கீழ்மேலாக
வுருண்டு - தலைகள்பிளந்தும் - கால்களொடிந்தும் - கரங்கள்முறிந்தும் -
தேகம்நெக்குவிட்டுச்சிதைந்தும் பம்பரங்களைப்போலச்சுழன்றும் பு
ரண்டும் ஒருவருடனொருவர் முட்டிக்கொண்டுங் - கட்டிக்கொண்டும் - கு
ப்புறவிழுந்தும் - வாய்சிதைந்து பற்களுதிர்ந்தும் - இவ்விதங்களாக அலை
ச்சற்பட்டு யிதென்ன விபரீதம்விளைந்ததென்று திகிற்பட்டு யிப்படிக்
காரிசெய்தனொன்று சிலர்கோபித்து அதட்டிக்கொண்டோடியும் வயிர
ங்களைப்பேசியும் அல்லோலகல்லோலப் படத்தக்கதாக அக்கோபுரமான
து சபாமண்டபத்தின்மீது விழுந்தமாத்திரத்தில் மரகதங்களினுற்சோ
டித்து விளங்கும்மேற்பரப்பனைத்தும்யிடிந்தும்பொன்மயமாயிராநி
ன்ற உட்சுவர்கள் துகள்பட்டும் வயிரங்களினுற்செய்தமைத்திருந்தவுத்
திரங்கள் பின்னப்பட்டும் பவழத்தினுற்சேர்த்த போதிகைகள்சின்னபி
ன்னமாயழிந்தும்கோரத்தினங்களினுலெழுப்பியிராநின்ற தூணவரி

ஸைகள் நுறுங்கியும்இவ்விதங்களாகச் சகலவளப்பங்களைக்கொண்டு லட்
சுமிவீற்றிருக்கத்தக்கசிறப்பினைவாய்ந்திருந்த ஆஸ்தானமண்டபமானது
உருத்தோற்றாமல் தும்சப்பட்டுப் பார்க்கப்பயங்கரமாய் அழிந்தகால
த்தில் அச்சபையில் வீற்றிருந்தசூரபதுமனைச் சூழ்ந்திருந்த பரிசனங்க
ளிற் சிலர் திசைத்தோடவும் சிலர் காயப்பட்டுவாடவும் - சிலர் நுறுங்கிச்
செத்தும்- சிலர்கைகால்களொடிந்து பெண்டுபிள்ளைகளை நினைந்துவா
டவும்- சிலர்யிதென்ன அனர்த்தமாகவிருக்கின்றது ராசபரமேஸ்பரன் வீ
ற்றிருக்கின்ற சபையானது யிடிபட்டபடியால் யிவ்வரசாட்சிக்கென்ன
மோகெடுகிநேரும்போற் காணுதென்று பேசிக்கொள்ளவும்- சிலர் ஆய
சுபரியந்தம் வாழ்ந்தவனுஞ் சேட்டவனுமில்லையென்று வழங்கிக்கொள்
ளுவது நிச்சயமாகவிருக்கின்றது அல்லாவிடில்யித்தகைய துற்சகுனம்
நேரவேண்டியதென்னவென்றுவசனிக்கவும்- சிலர் நமதுசக்கிரவர்த்தியா
னவர்பரமசிவகடாட்சத்தினால் ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்
டுகங்கள்எதிரின்றி அரசுசெய்துவரப்பெற்றகாலமுடிவாயிற்றோவெனத்
துக்கிக்கவும்- சிலர்பிரமன்விஷ்ணுமுதலானதேவர்க்களையடக்கித்தன்சட்
டளையின்படிக்கு நடந்துகொள்ளப் பணித்திராநின்ற செயசாலியாகிய
நமதிறைவனையும் யித்தலத்தில்நெருங்கியிருக்கின்றபுசயெலபராக்கிரம
சாலிகளாகியசூரர்களையும் எவ்வளவும்மதியாமல்தனியனாகவந்தஒருவன்
யிப்படிக்குநவரத்தினமயமாக விளங்கியிருந்த யிந்தமண்டபத்தைத் துக
ளாக்குவனாயில் யினிநமதாசன் ஆணைஆக்கினைகளென்ன செல்லப்போகி
றது செல்வநிலையாமையென்பது திஷ்டாந்திரமாகக் காணவருகின்றதெ
ன்றுவாடவும் -சிலர்சிவகுமாரனாகிய பாலசுப்பிரமணியன் அளவற்றபூ
தப்படைகளுடன் தேவர்க்கள்போற்றிவரத் திருக்கயிலாயத்தைக் கடந்
து ராட்சதர்முதலிய நம்மவர்கள் குலநாசஞ்செய்ய பூமியில்வருகின்ற
னமெனக்கேள்விப்பட்டனம், அவனால் யிப்பட்டணமும் நாமும் என்ன
பாடுபடவிருக்கின்றதோதெரியவில்லையென்று வருந்திப்பெருமூச்செறி
யவும்;இவ்விதங்களாகச் சபாமண்டபத்திலிருந்தவர்களனைவரும் வசனி
த்துக்கொள்ளுமுன்னிலையில் மந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர்களாகி
ய வீரர்கள் தாங்கள் தரித்திருந்த மகுடங்களுடைந்துந் தலைகள்பிளந்து
ம் கரங்களொடிந்தும்-கால்கள்முறிந்தும்- புயங்கள்சரிந்தும்- தேகம்
நசுங்கியும்- மண்டைபிளந்து மூளைசிதறியும்- வயறுகிழிந்து குடல்களி
றைந்தும் மேற்பரப்புவிழுந்ததி லகப்பட்டுக்கொண்டு வெளிவரக்கூடா
மையால் பதைபதைத்துவருந்தியும் குப்புறவிழுந்தும் ஒருவருடனொ
ருவரிடியுண்டும் வீரங்களைப்பேசியெழுந்தும் யிப்படிக்குப்பிறமுகரா
யிருப்பவரும் கலங்கிவாடத்தக்கதாக சபைமுற்றும் நறுங்கியிறைந்த

தருவாயிற் பொற்றுகளெழுந்து திசைகளிற்பரவிச் செக்கர்வானத்தைப் போல விளங்கவும் சமுத்திரத்தைத் தூர்க்கவும் பூமண்டலமுற்றும்பெருகிப்பொன்னுலகமாக்கவும் யித்தகைய உற்பாதங்கள் நேருகின்றதருவாயிற் சபாமண்டபத்திலிருந்த சகலரும் முற்குறித்தபடிக்குச் சின்னபின்னப்பட்டுமாண்டும்-ஓடியும்-பதுங்கியும்-தியங்கியும்-வாடுவதைப் பரமசிவகடாட்ச விட்சண்ணியத்தினாற்பெற்ற பலவளங்களையனுபவித்திருந்தமமதையினால்அவனாமதியாதிகழ்ந்துஅதற்குரியதெண்டனையைப்பெற்றதக்கனைப்போலச்செற்வித்து மதயானையைநிகர்த்துச்சிங்காதனத்தில்வீற்றிருக்கின்ற சூரபதுமன்கண்டுவீரவாகுதேவர் விசுவரூபத்தைக் கொண்டு சபையைக்கலக்கியதையுந் தெரிந்தவுடன் சற்வசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் நாசஞ்செய்யவல்லவடவாமுகாக்கினியைப்போலக்கோபித்து-விழிகளில்-அக்கினிப்பொறிகள்சிதறவும் மீசைதுடிக்கவும்-முகத்தில்வியர்த்து- புருவம்நெற்றியிலேறவும்-சுவாசம் விடுந்தோறும் கருமானுலையிற்பெருகும் தீயைப்போல அனலும்புகையும்வீசவும் சோடையிடியைப்போலக் கெர்சித்துத் தன்னருகிலிருக்கின்ற-அன்னூறுசிரங்களும் - ஆயிரங்கரங்களும் - பிறைகளையொத்த கோரதந்தங்களையும் செக்கர் வானத்தைநிகர்த்த சிவந்த சிகையையும் கொவ்வைக்கனியைப்போலச்சிவந்துசுழலும்விழிகளையும்சண்டைகிடையாமல் வாடியிருக்கின்ற வலியபுசங்களையும் யிதக்கமற்ற மனதையும் பெற்றிருக்கின்ற செயசாலிகளாகிய அவுணவீரர் ஆயிரவரைப்பார்த்து பேரிடியுமஞ்சத்தக்கதாகக் குமுறிக்கொண்டு யிதனைக்கட்டளையிடுவதாயினன், வானத்தையளாவி நவரத்தினமயமாய் நமது ஆசாரவாயிலின்முகப்பிலிருந்த கோபுரத்தை பாலசுப்பிரமணியன்விடுத்ததூதன்பறித்தெறிய பெருங்காவலமாய் அரசுசெலுத்திவரும் யிந்தசபாமண்டபத்தின்மேரில்விழுந்து நாமும் மற்ற நமதுபிள்ளைகளிருக்கின்ற சிலயிடங்கள்தவிர மற்றதெல்லாம் யிடிந்து விழுந்து தூள்பட்டதுகண்டீர்களோ- ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்ற சூரனாகிய நமக்குயிதைவிட வேறேயபழியுமாவேண்டுமோ பிரமன் விஷ்ணு முதலியதேவர்க்களையேவல்கொண்டிருந்த கீர்த்திப்பிரதாபத்துக்கு யிழிவுநேர்ந்தது- பலயீனராகியதேவப்பயல்களினிஎன்னைமதிப்பரோ- அப்படியிருந்தபோதிலும் தூதாக வந்தவன் யென்னகொடுமைகளைச்செய்யினுங்கொல்வதுதீராதபழிக்கிடமாகும் மேலும் என்னொத்த சக்கிரவற்திக்கழகுமன்று ஒருகாலம் வலியில்மிகுந்த தீரனாகவிருந்து அவனைவென்றபோதினும் நம்மையொத்த சூரனுக்குத்தாழ்வல்லது புகழாகவிருக்கமாட்டாது- ஆதலால் வீரர்களே நீங்கள் விரைவிற்போய் உங்கள் சதுரங்கச் சேனைகளுடனும் அவனைவ

லைத்துக்கொண்டு தந்திரஉபாயங்களினாலாவது சண்டைகொடுத்து வெ
ன்றாவது அல்லது மாய்கையின் முயற்சியினாலாவது அவனுக்குக் காய
முண்டாகாமலும் பிராணனுக்கிடையூறு நேராமலும் கைப்பிடியாகவய
ப்படுத்திக் கட்டிக்கொண்டுவந்து நமதுமுன்னம் விடக்கடவீர்கள்- அ
வன் நம்மைமதியாமற்பேசியும் யித்தகைய கெடுதிகளைச்செய்ததற்குத்த
க்கதாக-மூக்கு-காது-முதலாகிய அவையவாதிகளைக்கொய்து பின்னைப்
படுத்தித் தேவர்க்களுடன் அரியகாவலிற்படுத்தி என்கோபந்தணிவே
னென்று சொன்னமாத்திரத்தில் எமதிறைவனை இறுமையுற்ற அடியோ
ங்கள் விண்ணப்பத்தைக்கேட்டருள்க, தேவரீர் பேரிற் பகைத்துவருகி
ன்றபகைவன்விடுத்ததூதனவன்தம்மைமதியாமலிகழ்ந்துபேசியபோ
தேஅவனைப்பற்றிக்கசக்கிப்பிழிந்துஉதிரத்தைக்கோபக்கனலாறும்படி
க்குக்குடித்துப் பிராணனைஎமலோகத்துக்கனுப்ப நினைந்தோமாயினுந்
தேவரீர் கட்டளைக்கடங்கி மனம்வெந்துக் கொண்டு யி து வ ரை யிற்
பொறுத்திருந்தனம், உமதுதிருவுளம் யிப்படிக்கிருக்குமாகில் யிதோ
கட்டளையின்படிக்கு நிமைப்போதில்அவனைப்பற்றிகட்டிவரக்கடவோ
ம்,விடைதரவேண்டுமெனப்போற்றுகின்றவர்கள்மீதுவடவையைப்போ
லக்கொதிக்கும்மனத்தையுடையசூரபதுமன்கிறுமையுற்று நீங்கள்சீக்கிரம
த்தில்நடத்துதூதனைப்பிடித்துவாருங்களென்று திருவாய்மலர்ந்தமா
த்திரத்தில் அவர்கள் சூரனைப்பணிந்து சபையைவிட்டு வெளிவந்து மன
மானது புழுங்கிவேகத்தக்கதாக தங்கள் அரமனைகளிற்போய்வயிரக்கவ
சத்தைப்பூண்டு விரற்கோதைகளைத்தரித்து கொடியபாணங்கள் நிறைந்
திருக்கின்ற அம்புறாத்தூணிரங்களை முதுகிலிறுக்கி பாரித்தவிற்களைக்க
ரங்களிற்கொண்டு வெற்றிமாலைதரித்து பொன்வண்டில் அச்சுநவரத்தி
னமயமாகிய சொடுங்கை வயிரக்குத்துக்கால் கொடி கொடை முதலிய
சிங்காரங்களைக்கொண்டு பற்வதாகிறுதியாக விளங்குந் தேர்களிலேறிக்
கொண்டு சேனாசமுத்திரமானது ஊழிகாலத்தெழும் சத்தசாகரங்களைப்
போலச்சிங்கனாதம்அட்டகாசமுதலிய ஆரவாரங்களைச்செய்துகொண்டு
நடக்கவும் ரணபேரிசெயபேரி வெற்றிச்சங்கமாதியாகிய போற்பறை
கள் திசைக ளதிரமுழங்கிவர உயித்தியங்களைச்செய்ய வேண்டுமென்கி
றவீராவேசங்களுடன் வேகமாய்வருகின்றனர், சவுனகாதிரிஷிகளே- இ
வை நிற்க விசுவரூபங்கொண்டு மயேந்திரபுரியையழிக்கவெத்தனித்திரு
க்கின்ற வீரவாகுதேவர் செய்கைகளைச்சொல்லக் கேட்பீராக-சொற்னம
யமாய் நவரத்தினகாந்திகளைவிசி மேருவையொப்பபாரித்து வானத்தை
யளாவநின்ற கோபுரத்தை வேருடன்பறித்தெறிந்து ஆயிரத்தெட் டண்
டங்களுக்கதிபனுய்ச் சகலரையும்வென்று செயசாலியாகவிருக்கின்ற சூ

ரபதுமன் வீற்றிருந்தரசுசெலுத்தும் சபாமண்டபத்தை அல்லோல கல்லோலப்படுத்துகளாக்கியபின்பு அவுணராசன்வாசஞ்செய்யும்பட்டணத்தின்சிறப்புகளையும் செல்வப்பெருக்கையும் அதப்படுத்தி அவுணவீரர்வாசமாயிராநின்ற நவரத்தினமயமாய் வானத்தையளாவ ஓங்கிப் பலசித்திரங்களைப்பெற்றிருக்கின்ற மாடமாளிகைகள் உப்பரிகை கூடமுதலியவைகளனைத்தையும்பிந்தநிமிஷத்திற்சின்னபின்னப்பட அதப்படுத்தியபிற்பேனென்று பேரறிவாளனாகிய வீரவாகுதேவர் நிதானித்து வடவாமுகாக்கினியைப்போலச்சிறிப்பாய்ந்து- மான்-கடமை-கரடி- முதலியமிருகங்கள் வாசமாயிருக்கின்ற-சோலைகள்-அந்நம்-மயில்-குயில்- புருவாதியாகிய பட்சிகள் களித்திருக்கின்ற தோப்புகள் உத்தியானவனங்கள் நவரத்தினமயமாக விளங்குகின்ற செய்குன்றங்கள் மேடைகள்மாடங்கள் இத்தகைபொருள்களனைத்தையும் வேருடன்பறித்து அஷ்டதிக்குகளில்வீசியும் விசாலமாய் அபரஞ்சியினாற்சோடித்து சிரோரத்தினமயமாய் முத்துமாலைகள் புஷ்பசரங்கள் தூக்கிச் சித்திரப் பிரதமைகள் கொடிகள் முதலிய சிங்காரங்களைக்கொண்டு மத்தியான சூரியனைப்போலச்சொலித்திராநின்ற சித்திரக்கூடங்களை வாரியெடுத்துச் சக்கரத்துக்கொப்பாகச்சுழற்றி ராசவீதிகளிலெறிந்தும் சந்திரகாந்தத்தினாலும்இந்திரநீலத்தினாலும் பளிங்கினாலும் அமைத்திருக்கின்ற மேனிலைகள் திண்ணைகள் விதங்களை பாதங்களினாலுதைத்து விசாலமாய் நீண்டிருக்கும் வீதிகளில் நடக்கயிடமில்லாமல் தள்ளியும் வயிரத்தூண்கள் நிறுத்திமரகதக்கொடுங்கைதூக்கி பவழஉத்திரங்கள் பரப்பியிராநின்ற அளவற்றமண்டபங்களையுதைத்து பெட்டியைதறந்து அதிற்பட்டபூண்கள் திரவியங்களாதிய பண்டங்களைத் தலைகீழாகக் கொட்டியதைப்போலக் கலகலென்று அங்காடிவீதிகள் முதலியயிடங்களில்ஒலித்து விழும்படியாகத்தள்ளியும் செந்தாமரைமலரி லமர்ந்த மகாலட்சுமியை மார்பிற்கொண்டிருக்கும் விஷ்ணுவையணையும்பொருட்டுப் பூமிதேவியானவள் கடககங்கணங்களணிந்தகரத்தை நீட்டியதைப்போல வானத்தையளாவநிற்கும்பொற்கோபுரங்கள் அளவற்றதைப்பறித்தெடுத்துச்சுற்றிலும் நவரத்தினமயமாகத்தோற்றநின்ற மேடை மெத்தைகளின்பேரி லெறிந்து துகள்படச்செய்தும் அவுணவீரர்கள் தம்பதிசமேதராய் சுற்றத்தாருடன்கூடி வேதவிதிப்படிக்கு முத்தீயும்ஓங்கி விளங்க நெய் சமித்துகளையிறைத்து வேழ்விகளைச்செய்துவரும் ஓமச்சாலைகளைப்பெயர்த்துபட்டணமுற்றிலும்பற்றியெரியத்தக்கதாகவீசியும் வேதாகமங்களைஓதும் பள்ளிக்கூடங்கள் அவுணவீரர் தங்கள்தோழருடன் உல்லாசமாய் சொக்கட்டான்சோழிமுதலிய விளையாடிக்கொண்டிருக்கும் பகடசாலைகள் வாள் வேல் மல்

ல்யுத்தம் வில் முதலிய ஆயுதவித்தைகளைக் கற்குங்கூடங்கள் அந்திப்போதில் விலாசமாகப் பலரும்வீற்றிருந்து வசனித்துப் போதபோக்குஞ் சந்திரகாந்தத்திண்ணைகள் பரதநாட்டியங்களை அப்பியாசிக்கின்ற விசாலமாகிய சாலைகள் யிவற்றையடித்து நிரவியும் பலபட்சிகள்நெருங்கித்தொனித்திருக்கும் சாலைகள் சோலைகள் மல்லிகை யிருவாட்சிசெண்பகம்பாரிசாதமுதலிய சிறந்தபுஷ்பங்கள்பெருத்து தேன்களையிறைத்து வண்டுகள் தொனித்திருக்கும் பூங்காவுகள் தாமரை அல்லியாதிய புஷ்பங்கள்மலிந்திருக்குந் தடாகங்கள் அன்னங்கள் முதலிய பட்சிகள் நிறைந்திருக்கும்-சித்திரக்குளங்கள்-ஏரிகள்-மடுக்கள்-யிவற்றின் உருத்தோற்றமற் பாதங்களினாற்கலக்கித் தேய்த்துப் பூமியுடன் சமன்பட்டுக்காட்டஅதப்படுத்தியும் பொன்னுருளைகள் அச்சு நவரத்தினமயமாகிய மச்சு குத்துக்கால் கொடுங்கைமுதலிய சின்னங்களைப்பெற்று பற்வதாகிருதியாகவிருக்கின்ற தேர்கள் விடும் கொட்டாரங்கள் மும்மதங்களையும் பெருக்கிப் பாகனைச்சிறிக்கட்டுத்தறியைமுறிக்கும் வீரம்பெற்ற யானைகளைப்பந்திக்குங் கூடங்கள் தத்தித்தாவி நடக்கும் வேகமுள்ள உத்தமஅசுவங்கள் வரிசைவரிசையாகக்கட்டியிருக்கும் சாலைகள் அளவிறந்த சூரராகிய சேனைவெள்ளங்களிருக்கின்ற விடுதிகள் யிதுகளனைத்தையும் வாரி வாரி யலறிக்கொண்டுபோம்படிக்கும் சின்னபின்னப்பட்டு மாளும்படிக்குத் திசாதிசைகளில்வீசியும் பாதலவரையிலாழ்ந்து அண்டமுகட்டைத்தாவிபருத்து சக்கிறவாளகிரியைப்போல பொன்மயமாய் ரத்தினங்களினாற்சோடித்த கொத்தளங்களைப்பேற்று சத்துருக்கள்முதலியமசகமும் நுழையவொட்டாமற்பலசூத்திரங்கள்படைகள் கருவிகள்பொருந்தி விளங்கும்எழுவகைமதில்களையும்வீரவெண்டையமணிந்தபாதங்களாக் கொண்டுதைத்து பெரும்புறக்கடலைப்போல விசாலமாய் ஆழ்ந்திருக்கும் அகழிகளிற் றள்ளித்துத்தும் யிவ்விதமாகச்செயலட்சுமிவாசஞ்செய்திருக்கும் வலியபுசங்களையுடைய வீரவாகுதேவர் சிவரோங்கி ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய் கொடுங்கோல்செலுத்திவரும்சூரபதுமன் வீற்றிருக்கத்தக்க சிறப்புகளைவாய்ந்த வீரமாமயேந்திரபுரியிலடங்கிய பலவளங்களையும் சின்னபின்னப்பட பிறசண்ட மாருதத்தைப் போலச் சுழன்று சுழன்று நாசஞ்செய்தகாலத்திற் புராணிகர் சிலஉவமானங்களையும் அதிசெயக்காட்சியையும் விநோதங்களையும் எடுத்துக்காட்டுகின்றனர், அண்டபித்திகையைச்சூழவிருக்கின்ற பெரும்புறக்கடலையொத்த அகழியில் வீரவாகுதேவர் யிடித்துத்தள்ளிய மதில் முதலிய விழுந்து நிறைத்தகாலத்தில் அதிலடங்கியிருந்த நீரானது மேலெழுந்தோடிப் புரசெனங்களனைவரையும் அலைத்துவாரிக்கொண்டோடி நதிகளாஞ்

போலச் சமுத்திரத்திற்பாய்ந்து மகரமச்சங்களுக்குவிருந்துசெய்யவும் தர்மமார்க்கங்களைக்கொன்று தேவர்க்கள் ரிஷிகள் மானிடர் முதலாகிய ஜனையலைத்துக்கொடுங்கோல்செலுத்திவருஞ்சூரபதுமன் அரமனையை சூழ்ந்திருந்த நவரத்தினமயமாகிய கோபுரங்கள் உப்பரிகைகள் சந்திரகாந்தமேடைகள் மண்டபங்கள் முதலாகிய விதங்களை வீரன் வாரிவாரிவானத்தெறிந்தகாலத்திற் சடசடத்ததொனியுடன் மேலோங்கிவிரைந்துவருகின்றதை வானவெல்லையிலிருந்து வேடிக்கைபார்த்திருந்த தேவர்க்கள்கண்டு மிகவும்பயந்து யிதனால்நமக்கென்னகேடுவிளையுமோவென்னும் ஏக்கத்தினால் நடுநடுங்கி பயமிகுதியினால் மேலுலகங்களிலோடியொளிக்கவும் மேலும் பொன்னுலகத்தைத்தாண்டிவீறிப்போகின்றபல வளங்களும் வானகெங்கையில்விழுந்து செலப்பரிசமில்லாமல் திடர்செய்யவும் கேதுவானது மறைத்ததைப்போல சூரியமண்டலத்தைமூடி உலகங்களுக்கு விளக்கமில்லாமல்யிருளாக்கியும் வீரவாகுவீசியசோலைகள் தோப்புகளில்வாசமாயிருந்த அன்னமுதலிய பட்சிகள் பிரமித்துவானநாடுகளிற்போய்த் தங்களினத்தைக்காணாது கடையில் பிர்மதேவன் வாகனமாகிய அம்சத்தையும் மகாவிஷ்ணு வேறப்பட்ட கெருடனையுங் கண்டு குலவிதங்களுக்கடுத்த மனவாட்டத்தைச் சொல்லிக் களித்திருக்கவும் வீரன் வீசிய மேடைகள் மாளிகைகள் வீழ்கிறதெனச்சுழன்றுவருவதைச் சூரியபகவான் தேரைச்செலுத்தும் சாரதியாகிய அருணன்கண்டு முன்னமே காலையிழந்திருக்கின்றனம், யிதோயினாந்துவருகின்ற பொருள்களினால் மற்றஅவையவங்களுக் கென்னபின்னம் நேரவிருக்கின்றதோவென்று வருந்தியோடவும் வீரவாகுசெலுத்திய கோபுரங்கள் சுழன்றபோவது பிள்ளைகள் பம்பரங்களிற் கயற்றைச்சுற்றியாட்டியதுக்கொப்பாகக்காட்டவும் வீரன்செலுத்திய கற்பகச்சோலைகள் வானத்திற்செல்லுகின்றதைப் பார்க்குமிடத்தில் பெருகாலமாய் சூரன்பட்டணத்திலடங்கியிருந்தனம், இத்தினம் நல்லகாலம்நேர்ந்ததென்று பழையபடிக்குப் பொன்னாட்டைச்சேரப் போவதையொத்தும் வீரவாகுசெலுத்திய பலபலவஸ்துக்களும் வானத்தைமூடிய காரணத்தினாற் சூரியன் தேர்போக யிடமில்லாமல் சந்துகளில் நுழைந்துதப்பிப்போகவும்மிவையன்றியும்மேலோங்கிநின்றசொர்னமேடைகள்கோபுரங்கள்உப்பரிகைகள்-விஞ்சையர்-சித்தர்-கெருடகாந்தருவர்-வாசஞ்செய்யும் பதங்களிலும் பொன்னுலகங்கள் முற்றிலும் விழுந்து அந்தலங்களிலிருந்த அரமனைகளாதியானதுகளைச் சிதைத்துவாட்டவும் வீறியெழுகின்ற நவரத்தினமயமாகிய மேடைகள் முதலாக ஒன்றோடொன்றுதாக்கி உடைந்தெழுந்ததுகள் பரந்து சூரியகாந்தியைமழுக்கிச் சந்திரனை நிகராகக்காட்ட

வும்-அக்காலத்தில் அவற்றிற்பதித்திருந்த நவரத்தினங்களும் திசாதிசை களில் விழுகின்றதெப்படிக்கிருந்ததெனிற், கடையுகத்தெழுந்தொலிக் கும் பிரசண்டவாயுவின் மோதலினால் நிலைதப்பிவிழுகின்ற நட்சத்திரங் களைப்போலக்காட்டவும் - கோபுரங்களொன்றுடனொன்று தாக்கியபோ துபெருத்த துகளானது புகையினையொத்து விளங்கவும் - அதிற்பதித்தி ருந்த மணிகளுரைபட்டுப்பெருகிய தீப்பொறியுங்கலந்து காட்டுவதை யோசிக்குமிடத்திற் கோடைகாலத்தெழும் மேகத்தினிடத்தி லுண்டாகு ம்மின்னல் யிடிக்கூட்டத்தை யொப்பக்காட்டவும், வீரவாகுதேவர் சூர ன்பட்டணத்திலிருந்த பலஉறுப்புகளைவீசியகாலத்திற் பொடிபட்டுப்பூ ழியாயெங்குமுதிர்வதை நிதானிக்குமிடத்தில் பூர்வத்தில் ஒருபிராமண ப்பிள்ளையின் காரணமாகத்திருக்காஞ்சிபுரத்தில் மண்மாரிபெய்ததைநிக ர்த்தும் வீரவாகுதேவர்வீசிய ஆயுதச்சாலைகளிலடங்கியிருந்த கருவிகள் சிதறி தேவர்க்கள் தேகங்களிற்றாக்கியபோது பெருகிய உதிரமானது யிரத்தமழையைப்போல பூமண்டலமெங்கும் பொழியவும்-இவையன் றியும் சூரபதுமன்செய்ததவமுயற்சியினாற்பலதேவர்க்களை யலைத்துதகா தயேவல்களைக்காட்டிவருத்துகின்றனன், அவ்வாறே அவன் வீற்றிருந்து அ ரசுசெலுத்தும்பட்டணத்திலிருந்த மேடைகளாதிய பலவளங்களும்தே வர்க்களை வளைத்துக்கொண்டு பலபின்னங்களைச்செய்து பதியையுமழித் து ஒடியொளிக்கச்செய்தது,இவையன்றியும் வீரவாகுதேவர் வானத்தெ றிந்தபளிங்குமண்டபங்கள்சதுக்கங்கள் நிலாமுத்தங்களுராய்ந்துபெரு கிய தீயும் புகையும்பெருத்து பூமியெங்கும் அக்கினிமழையைப்போ லஉதிரவும், சூரியனேறிநடத்தும் தேரிற்கட்டியபச்சைப் புரவிகளைக்கா ய்ந்து கருநிறமாக்கவும், மற்றுஞ்சிலபொருள்கள் எகசித்தாக்கியபோது மேகங்கள் கெற்பங்கள் பிறண்டு செலம்பெருகுவது எப்படிக்கிருந் ததெனில், அக்காலத்திலுண்டாகிய வருத்தங்களைப் பொறுக்கப்படா மையால் விழிகளில்நீரைப்பெருக்கி விசனப்படுவதை யொத்துக்காட்ட வும், எக்காலத்தும் மாறுதகீர்த்திப் பிறதாபத்தைக்கொண்டிருக்கும் வீ ரவாகுதேவர் விசுவரூபங்கொண்டு வீரசிங்கம்போலவும் மதயானையை நிகர்த்தும்உலவி சூரபதுமன் பட்டணத்திற் றங்கிய பலவளங்களையும் வாரிவாரியெறிந்தகாலத்தில் அவைகளனைத்தும் மேலிட்டுத் தேவர்க்களை யலைத்து அண்டமுகட்டிற்றாக்கி மறிந்து கோடையிடிகளைப்போல பூமி யில்விழுவதைப்பார்க்குமிடத்திற் சந்திரசடாதரக் கடவுளாகிய சிவபிரா ன் கடாட்ச வீட்சண்ணியத்தைப்பெற்ற விசுவாமித்திரர் வசிஷ்டருக்கு விருத்துவமாய்த் திரிசங்குமகாராசனைச் சொற்கத்துக் கனுப்பியகாலத் தில் ஆசிரியனையிகழ்ந்த நீச்சனென்று தேவர்க்கள் கோபித்து தள்ளிய

போது அவ்வரசன் தலைகீழாகத்திரும்பியதைப்போலவும் விளங்கியது, சவுனகாதிரிஷிகளே- இவ்விதமாக வீரவாகுதேவர் கோபித்தெறிந்த சூரபதுமன் பட்டணவளங்களனைத்தும் வானத்திலும் திசாதிசையிலும்பெருத்தபூவட்டத்திலும் அஷ்டதிக்குகளிலும் சத்தசாகரங்களிலும்நவகண்டங்களிலும் சத்ததீவுகளிலும் சோலைகள்-காவுகள்தோப்புகளிலும்-காடுகள்-பர்வதங்கள்-நதிகள்-மடுக்கள்-ஓடைகள் மற்றுமிராநின்ற தலங்களிலும் சடசடத்ததொனிகளுடன் யிடிகளைப்போல விழுகின்றகாலத்தில் அத்தலங்களில் வாசஞ்செய்யும் சிவராசிகள் திடுக்கிட்டு யிதென்ன உற்பாதமாகவிருக்கின்றதென்று பயப்பிருந்திகளுடன் தியங்கியும் கரங்களற்றுஞ் சிரங்களுடைந்தும்மூளைகள்சிதறியும்விழிகள்வெளிப்பட்டும் பல்லுதிர்ந்தும் மார்புபிளந்தும் கால்களொடிந்தும் தொடைகள் முறிந்தும் யிப்படிக்குப் படாதபாடுகளைப்பட்டு மாண்டதுகள்போக மற்ற பிராணிகளோரிடத்தில் நிலைபெற்றிருக்கப்படாமையால் அங்கு மிங்குமாகஅலைந்து திரிந்ததுகள், இப்படிக்கி அல்லோல கல்லோலப்படுங்காலத்தில் உதையகிரிதத்தளித்தும் மகம்மேருகம்பிதப்பட்டும் -அஷ்டகுலாசலங்களும் சக்கிறவாளகிரியும்மங்கி தூள்படவும் பொன்னுலகங்கலகலத்து உலகங்களெங்குமுதிரவும் அவ்வதிர்ச்சியினால் பூமிநெக்குவிட்டுகிடுகிடெனநடுங்கவும், சத்தசாகரங்களுங்கொதிப்பெடுத்தடங்கவும்திசையானைகள் வீறிட்டோடவும்- இவ்வாறு மாடமாளிகைகள் கூடகோபுரங்கள் பெருத்திருந்த மயேந்திரபுரியானது அதப்பட்டுவீதிகள்தோற்றுமல்யிடிந்தருக்குலைந்தும் கோட்டைகொம்மைகளனைத்தும்தூள்பட்டு அகழியில்விழுந்தும் சகலருங்கொண்டாடவல்ல சிறப்பினைவாய்ந்தகோபுரங்கள் தெற்றிகள் சித்திரமேடைகள் முதலாகச் சின்னபின்னப்பட்டு உருத்தெரியாமல்மங்கி எண்பதினாயிரயோசனை விஸ்திரணமுள்ளவிரமாமயேந்திரபுரிமுற்றும் ஒவென்னும் யிரைச்சலுடன் பின்னப்பட்டு மங்கியகாலத்தில் அவ்வீதிகளில் நவரத்தினமயமாகிய உப்பரிகைகள் மாளிகைகள் மேடைகளில் வாசமாயிருந்த அவுணவீரர்கள் பெண்டுபிள்ளைகளுடன் சிதைபட்டுமாண்டும் பின்னப்பட்டும் தப்பித்துக்கொண்டோடியும் யிப்பாடுகள் படுகின்றதருவாயில் பிறசண்டமாருத ஓசையைப்போல யிரைச்சலுண்டாயது -மேலும் தேவதாரம் புன்னை அகில் சந்தனமுதலிய விருட்சங்கள் பெருத்திருக்கின்றசோலைகள் - கிளைகள்-முறிந்தும் வேருடன்பறிந்தும் தூள்பட்டு மங்கியும் மல்லிகைசெண்பகம் யிருவாட்சிமுதலிய பரிமளமிகுந்த புஷ்பசாதிகள் மலிந்திராநின்றபூஞ்சோலைகள் பாதங்களில் அரைபட்டுத் தூள்பறந்துபோகவும் யிப்படிக்குச் சாடும்போது தேவர்க்கள்காவலிற் பட்டிருக்கின்ற சிறை

சாலைக்கு யாதொருபின்னமும்நேராமல் பாதுகாத்துரட்சித்தனர், சவுனகாதிரிஷிகளே—அந்தவீரவாகுதேவர் சாகசங்களை என்சொல்லுவேன் - அவர்சாடியபோது மதயானைகள் வெறியடங்கிச் செம்புரிக்கோடுகள் நுறுங்கி முகபடாம்விளங்கும் மத்தகம்விண்டு மலைகளைப்போலவிழுந்தும் ஓடியும் அலைச்சற்படவும் பாரித்திரானின்ற தேர்நிரைகள்பொன்மயமாகியஉருளைகள்உருண்டும் அச்சுகள்முறிந்தும் மச்சுகள்சிதைந்தும் கொடுங்கைகள் பறந்துங் கொடிகள் குடைகள் காற்றுடிகளைப்போல எகசியும் பஞ்சகல்லியாணிகளாகிய உத்தம அசுவங்கள் பொன்வெண்டையங்களணிந்த கால்களொடிந்தும் கழுத்துகள்தறியுண்டும் வால்களறந்றும்பிப்பாடுகள்படவும் - அவுணவீரர்கள் திகைத்துவாடியும் - ஓடியும்விழுந்தும் எழுந்தும் பெண்டுபிள்ளைகளைத்தேடியும் பலபின்னங்களைப்பட்டுச்செற்றும் சதைந்தும் யிப்படிக்குச்சொல்லப்படாத வருத்தங்களையனுபவிக்கவும் சிலர்பற்வதங்களைப்பறித்துக் குடைகளைப்போலப்பிடித்துக்கொண்டு தங்கள்பேரிலொன்றும் விழாமல் காத்துக்கொள்ளவும்வீரவாகுதேவர் வீசியமாளிகைகள் விழுந்து பிளந்திருக்கின்றபூமிவெடிப்புகளிற் கால்களகப்பட்டுக்கொண்டு சிலர்வாடவும் அக்காலத்தில் நேர்ந்த உபாதிகளுக்கஞ்சி தப்பிப்பிழைத்தோடிப் பிழைக்கநினைந்து பெண்டுபிள்ளைகள் தாய்தந்தையர் சுற்றத்தினர்களை கூட்டிக்கொண்டு தங்கள் அரமனைகளைக்கடந்து வீதிகளில்வந்து யினாச்சலிட்டோடும் உதிரப்பிறவாசத்தைக்கண்டு யிதற்கென்செய்வோமென்று பலர் வாடிவதங்கவும் சிலர்மகரமச்சங்களுலவுகின்ற சமுத்திரமத்தியிற் பாய்ந்தொளிக்கவும் வீரவாகுதேவர்வீசிய மேடைகளாதியாக யெங்கும் விழுவதைக்கண்டசிலவீரர்கோபித்து அக்கினிப்படைகளாதியவலியகணைகளைச் செலுத்தி அவற்றினைத்துகள்செய்யவும் யின்னமும் சொல்லப்படாத துன்பங்களனைத்தையும் அனுபவித்தலைந்தனர், இத்தருணத்திற் புராணிகர் விரிவாகப்பேசியிருப்பதைக் குறிக்கியிருக்கின்றது, சவுனகாதிரிஷிகளே தீனராகவிருக்கின்றதேவர்களைப்பலநாட்களாகஅலைத்துவந்தபாதகமே அப்பதியைச்சுட்டு நாசஞ்செய்ததற்கு யாதொருசந்தேகமுமில்லை, வீரவாகுதேவர்வடவாமுகாக்கினியைப்போலச்சீறி நகரமெங்குமுலவிச்சாடியகாலத்திற்பட்டணவீதிகளிலிருந்த மேடைகள்உப்பரிகைகள் மாளிகைகள்ஒன்றேனும்உருவாகவிருந்ததென்று நினைக்கவேண்டுவதில்லை, சகலமும்யிடிந்து நுறுங்கிநிலத்திற்கலந்துசமனாய்ச் சுதம்பத்தைப்போலக்காட்டவிளங்கியது, இவ்வனர்த்தங்கள்முடிந்ததருணத்தில்நேர்ந்தகாரணங்களையுஞ்சொல்லுவோங்கேட்பீராக,

நைமிசாரணியவாசிகளே பாலசுப்பிரமணியர் செலுத்திய தூத
னாகிய வீரவாகுதேவர் சிலரோங்கி ஆயிரத்தெட் டண்டங்களையும் நூற்
றெட் டுகங்களாகக் கொடுங்கோல் செலுத்திசிவகாருண்ணியமென்பது
எவ்வளவுமில்லாமல் வேதவிதியைக்கடந்து மன்னுயிர்களை நாசஞ்செய்
துலகங்களுக்கு எமனைப்போல அரசுசெலுத்திவந்த செயசாலியாகிய
சூரபதுமன் வீற்றிருக்கப்பெற்ற ராசதானியாய்ச் சகலபுவனங்களுங்
கொண்டாடவல்ல செல்வச்சம்பத்துகளைக்கொண்டு அஷ்டலட்சுமிகளும்
ஒருமைப்படவாழ்ந்திருக்கும் மகதயிஸ்பரியங்களைப் பெற்றிருந்த வீ
ரமாமயேந்திரபுரியானது கண்டவர்கள் பழித்து நகைக்கத்தக்க பதங்
கோலப்பட்டு மூதேவிவாசஞ் செய்யும்படியாகச் சின்னபின்னமாய்
வெட்டவெளியாக்கியதறுவாயில் சூரபதுமன்கட்டளையைப்பெற்றுச் ச
பதங்களைப்பேசி வெளிவந்தசெயசாலிகளாகிய சகத்திரவாகுகளென்னு
ங்கொடியபாதகர்களாகிய ஆயிரவரும் சேனைவெள்ளங்களுடன் அதிவே
கமாகவருகின்றவர்களிட பெருமிதங்களிற் சிலபேசக் கேட்பீராக.
திருப்பாற்கடலிலுதித்த ஆலகாலவிஷத்தைப்போன்ற கரியகிரோகத்தை
ப்பெற்றும் கொழுந்துவிட்டெரியும்வடவாமுகாக்கினியையொத்தசெ
ம்பட்டமயிரைவாய்த்தும் மதயானை கரடி சிங்கம் புலி யித்தகையமிரு
கங்களைவலிதிற்பற்றிப்பிலத்தையொத்தவாய்களிற்போட்டு யிருசடையி
னும்உதிரம்பெருகமென்றுதின்றும் சுடலையைப்போலக் கொதித்துக்
கொண்டிருக்கும்உதரத்தினைப்பெற்றும் கடையுகத்திற்பெருகும்சத்த
சாகரங்களினோசையும்பிடியின்முழக்கமும் அஞ்சத்தக்கஉரத்தசொல்லை
ப்பெற்றும்வீரசிங்கங்களைப்போலநடக்கும்வேகத்தினால்பூமிபிளக்கப்
பாதங்களைப் பெயர்த்துவைத்தும் பலசிரங்களைக்கொண்டு நீலகிரி ய
சைவதைப்போல வானத்தையளாவியவயிரமகுடங்கள் விளங்கும்அன்
னாறுசிரங்களைப்படைத்தும் மராமரமான துகிலைகளைவிரித்து நிற்பது
க்குசமதையாகிய ஆயிரங்கரங்களையும்-எழுவாயுதம்-மழுவாயுதம்-வா
ள்-வேல்-சக்கரம்-வச்சிரம்-சூலம்-முதலிய படைகளைப் பரித்தும் மந்
தாத்தையொத்த வில்லைத்தாங்கிக்கொடிய பாணவிதங்களைப்பரித்தும்ஆ
ழும்பொருந்திய சாகரங்களையும்சாலபிராணிகளு மடங்கிய பூமண்டல
த்தையும் ஒருமுகத்திலுண்டபோதினும் நிரம்பாத பருத்தவயற்றையும்
பெற்றவர்கள்யிப்படிக்கொத்தபெருமிதங்களைப்படைத்த அவுணவீரர்
கள்நால்வகைச்சேனாசமுத்திரங்களுடன்வேகமாய்வந்து எதிரில்நிற்கின்
றவீரவாகுதேவனைப்பார்த்தவுடன்யிரண்டுபுசங்களையும்ஒருமுகத்தையும்
படைத்தஒருதேவப்பயலைவெல்வதற்குஅளவற்றசேனைகளுடன் அன்னா
அமுடிகளையும்ஆயிரங்கரங்களையும்பெற்றஆயிரம்வீராகிய நாம்வரவே

ண்டுமோ யிதையோசியாமல் வந்துவிட்டோம் யித்தகையசூரராகியநா ம்யிவனுடன்சண்டைகொடுப்பது மிகவும்அபகீர்த்தியாகும் மேலும் யி துபரியந்தம் பெற்றிருக்கின்ற செயத்துக்கும் குறைபாடுண்டென்று மனம்வாடினவர்களாய் மேகங்கள்சஞ்சரிக்கும் வானவழிக்கொண்டுமா யமாய்வந்தவனுதலால்நம்மையும் யிந்தபெருத்தசேனைகளையுங் கண்டு பயந்துசடுதியில் மறைந்தோடிப்போய்விடுவான் ஆகையாற்சீக்கிரமத் தில்வளைத்துக்கொள்ளவேண்டும் நடவுங்கோள் நடவுங்கோளென்றுது ரிதப்பட்டு வீரவாகுதேவர் முன்னமெறிந்த மாடமாளிகை கூடகோபு ரங்கள்வானத்திலிருந்து விழுகின்றவைகளை பாரித்து நீண்டிருக்குந்தம துகரங்களினும் பற்றிப்பிசைந்தாதி அதிககோபவெப்பத்தினுல் திரேக மெங்கும் வியர்த்தொழுகவும் விழிகள்சொவ்வைக்கனியைப்போலச்சிவ ந்துஅக்கினிப்பொறிகளை யிறைக்கவும் சுவாசம் விடுந்தோறும் தீயும்பு கையும் வீசவும் உரப்பிக்கொண்டுதேவர்களுக்கு எமனையொத்த கொ டியபாதகராகிய ஆயிரம்வீரர்களும்சிங்கங்களைப்போலச்செயசாலியாக விருக்கின்றவீரவாகுதேவனைவளைத்துக்கொண்டு ஆர்ப்பரித்தஓசையானது செவியிற்படுத்திருந்தவீரசிங்கத்தை யதட்டியதைப்போல வீரவாகுதேவ ர்செவிகளிற்பட்டமாத்திரத்தில் திரிபுராதிகளை விழித்தெரித்தசிவபிரா னைப்போலச் சிறுநகைகொண்டு சீறிவானத்தையளாவித் திசைகளை மூட த்தழைத்திருக்கின்ற மராமரமொன்றைவேருடன்பிடிங்கித் திசைகளிரு ள்மூடிச் சூரியகாந்தியும் மறைத்தக்கதாக கிறுகிறெனச்சுழற்றிச் சாடு ம்படியாக வீரவாகுதேவர் வருவதை ஆயிரம்புசங்களைப்படைத்திருக்கி ன்றஅவுணவீரர்கள் கண்டுபாத்தீர்களோ கொஞ்சமாவது பயமில்லாம ல்தீரனுய் ஒருமரத்தைப்பிடிங்கிக்கொண்டு நம்மிடபேரில் வருகிருன்ந ல்லகாரியம் யிவனுணவத்தைச் சற்றுநேரத்திலடக்கிக் கட்டிக்கொண்டு போவதற்குச்சந்தேகமில்லை யெனச் சபதங்களைப்பேசினவர்களாய் வட வையைப்போலமண்டியெரிந்து நாலுமூலைகளினுஞ் சுத்திக்கொண்டுசில ர்பாரித்தவிற்களைவட்டாகாரமாகவளைத்துத் திசைகளதிரக்குணத்தொனி கொண்டு-பிற்மாஸ்திரம்-வாயுவாஸ்திரம்-வருணுஸ்திரம்-அக்கினியாஸ் திரம்-முதலாகிய தேவர்படைகளைப் பூட்டிக்காதளவு மிழுத்துக்கரவேக மாய்ப் பிறையோகித்தகாலத்தில் அவைகள் அக்கினி புகையிடிமுதலிய கொடுமைகளைக்காட்டிக்கொண்டுவரவும், மற்றொருபுறத்திற் சிலர்பிறகா சிக்குங்கூரிய அலகுகளையுடைய வேலாயுதங்களையெறிந்து சிங்கநாதஞ் செய்யவும், சிலர் மழுப்படைகளைத் தாண்டி ஆர்ப்பரிக்கவும்சிலர்சூலங் களையெறிந்து மேகங்களுமதிரக்கெற்சிக்கவும் சிலர்பாய்ந்துபிட்டிகளி னுற்குற்றவும் சிலர்பிறகாசம்பொருந்திய வச்சிராயுதங்களைப் பிறயோகித்

கொக்கரிக்கவும் சிலர்சக்கரங்களைக் கரகொனச்சுழற்றியெறிந் ததட்டவும்சிலர்மந்தரத்தையொத்த தண்டாயுதங்களைச்சக்கிராகாரமாகச் சுழற்றிமாறவும் சிலர் மற்றஆயுதங்களைத்தாண்டி கெக்கலிகொட்டவும் யிவ்விதங்களாக அஸ்திரசஸ்திர விதங்களனைத்தையும் சோணைமாரியைப்போலஅபரிமிதமாய் புசபெலபராக்கிரம சாலியாகிய வீரவாகுதேவர்மீதிற்செலுத்தியதறுவாயில் வீரன்சீறிதமது கரத்திற்பற்றி யிருந்த மராமரத்தைச்சுழற்றிமோதி அவற்றினைச்சின்னபின்னப்படச்சாடினவராய் மேவிட்டுவருவதைக் கொடியபாதகராகிய ஆயிரம்அவுணவீரர்கண்டு வடவாமுகாக்கினியைப்போலச்சீறி மீசைகள்துடிக்கவும் முகத்தில்வியர்க்கவும் கண்கள்சிவந்து அக்கினிப்பொறிகளை யிறைக்கவும் சேனைகளுக்கு தயிரியங்களைச்சொல்லித்தேற்றினவர்களாய் வீரவாகுதேவரைநெருங்கிஆயுதவிதங்களனைத்தையும் ஒருமுனையிற் சோனைமாரியைப்போல அபரிமிதமாகச் சொரிந்து அண்டங்களதிரத்தக்கதாக ஆற்பரித்துக்கொண்டுகொடியசண்டையைச் செய்யுமுன்னிலையில் வீரவாகுதேவர் அதிககோபங்கொண்டவராய்க் கிளைகள்தழைத்திருக்கின்ற மராமரத்தை உதறிச்சக்கிராகாரமாகச்சுழன்றுகொண்டு தம்முடபேரில்புகைந்தெரிந்திடிகளைப்பெருக்கி மேவிட்டுவருகின்ற ஆயுதங்களனைத்தையும் சின்னபின்னப்படும்படிக்குச் சாடிமேலுந் தம்முடன் போராடுகின்ற சத்திராதிகளையுங்கெட்டழிந்து போகத்தக்கதாக மோதியகாலத்திற் செக்கர்வானத்தையொப்பச்சிவந்து விளங்குந் தலைகள்பிளந்தும் மூளைகள்சிதறியும் சிலர்விழவும் சிலர் கன்னங்கள்கிழிந்து சகிக்கப்படாமையால் பின்னிடவும்சிலர்நெற்றிகள்வெடித்துச்சோரவும் சிலர் விழிகள்பிதுங்கிக் காதுகளிலணிந்தகுண்டலங்களுடன்தெறித்துப்போகவருந்தி மானமழிந்தும்சிலர்பலகறைகளைப்போலப்பற்கள்கொட்டுண்டு அவ்வுபாதியினாலும்வெம்க்கத்தினாலும் வாயைமூடிக்கொள்ளவும் சிலர்நாசிகள் சிதைந்துபெருகுமுதிரத்தையுண்டு யிளைப்பாறவும்சிலர் வாய்கிழிந்தலறிவிழவும் சிலர்-முத்தாரம்-மோகனமாலைகள் தரித்திருக்குங் கண்டமானது முறியடப்புலம்பியும் சிலர்கால்களொடிந்து நடக்கப்படாமல் தத்தளிக்கவும் சிலர் புசங்கள்சரிந்து புரளவும் சிலர்வயிரக்கவசந் தரித்திருக்கும் மார்புகிழிந்திளைக்கவும், சிலர்வயறுவெடித்துக்களைக்கவும் சிலர்தொப்புளானகுடத்தின்வாயைப்போலத் திறக்கப்பட்டபடியாற் குடற்கள் முதலியசின்னங்கள்வெளிப்பட்டு விழுந்துமாளவும்சிலர்யிடுப்புநெரிந்துவிருட்சங்களைப்போல விழவும்சிலர்எலும்புகள் நறுங்கிருப்புறக்கவழவும் சிலர் முழந்தாள் சிப்பிகள் பெயர்ந்து மதிந்தும் சிலர் உருத்தெரியாமற் சதைந்தும் சிலர்மூர்ச்சித்தும் சிலர்மாண்டும் சிலர்பதைபதைத் துருளவும்

சிலர்உதிரச்சேற்றி லகப்பட்டு வாடவும்- சிலர் தாபரிக்கப்படாமையால் ஓடிப்பிணக்குவைகளிலிடறிவிழுந்து நாசமடையவும்சிலர்மண்ணுடன் அரைபட்டுப்போகவும் சிலர்தாங்கள் பிடித்தஆயுதங்களைப் பிறைமீயாக்கவெத்தனப்பட்டமுன்னிலையில் வீரவாகுதேவர் சாடியமராமரத்தெப்பலினால்விழுந்து அந்தஆயுதங்களினால் வெட்டுண்டிறந்தும் சிலர்மாண்டு வீரசொர்க்கத்தைச்சேர்ந்து முன்னம்போயிருக்கின்ற தோழருடன்கூடிக்களித்திருக்கவும் சிலவீரர் சிரங்களற்றும் வீராவேசங்களினால்படைகளைக்கொண்டு போராடவும் யிவ்விதங்களாய்ப் பெரும்புறக்கடலைப்போலவந்தெதுத்த சதுரங்கச்சேனைகள் கண்டதுண்டமாக மாண்டகாலத்தில் அவர்களுக்குத் தலைவராகவிருந்த ஆயிரம்வீரர்களும் தங்களாற்கூடியமட்டும் போராடிச்சின்னபின்னப்பட்டு நாசமடைந்தனர், இப்பிரகாரம்செத்தவர்கள்போகத் தப்பிநின்றசிலர் பயப்பிருந்தியினால்வீரமும்வலியுங்குன்றிப் பலதிசையினுமோடியொளித்தனர், அக்காலத்திற்பெருகியஉதிரவெள்ளமானது மீறியோடிப்பட்டணத்தை யலைத்துப்பவளங்களையும்புரட்டிக்கொண்டோடிமகாமச்சங்களுலவித்திரியும்சமுத்திரத்திற்பாய்ந்து மேலிட்டுப்பூமியிலுமோடியது,இவையன்றியும்தற்மமார்க்கங்களைவழுவாமல் நிலைபெறச்செய்யவல்லசெயசாலியாகியவீரவாகுதேவர்சாடியகாலத்திற்கண்டிக்கப்பட்டுவானத்தெழுந்த சிரங்கள்மூன்றாம்பிறையைப் போலவிளங்குஞ் சோறதந்தங்கள்தோற்றப்போவதெப்படிக்கிருந்ததெனில், திருப்பாற்கடலினுதித்தஅமுதத்தைத்தேவருடன் மறைந்திருந்துண்டு சட்டுவத்தினாற் றலைகளையிழந்த இராகுகேது வென்பவர்கள்பழியைதீர்த்துக்கொள்ளும்பொருட்டு சந்திரனைச்சவ்வி யுலவுவதைப்போலக்காட்டவும்,குதிரைமுகங்களைப்படைத்திருக்கின்ற சிலஅவுணர்சிரங்கள் கண்டித்துவாய்வழியாகஉதிரம்பாயவிழுந்துகிடப்பதைப் பார்க்குமிடத்தில் விசாலமாகியசமுத்திரத்தி லடங்கியிருக்கின்ற வடவாமுகாக்கினியானது அக்கினிக்கொழுந்தை வீசியிருப்பதற்கொத்தும் சிலர்பற்களானவை உதிர்ந்துமேலெழுந்து சமுத்திரத்தில்விழுவதைப்பார்க்குமிடத்தில்வானத்திலிருக்கின்ற நட்சத்திரக்கூட்டங்கள்கலங்கி நிலைதப்பிஉதிர்வதைப்போன்றும், இத்தகைய ரணக்களச் சிங்காரங்களின் மத்தியிற்சவுனகாதிரிஷிகளே,யின்னமொருஅதிசெயத்தைச்சொல்லக் கேட்பீராக-ஆழ்வினைவலியை யாவராலுங்கடக்கவொண்ணாதெனஉலகங்களில் வழங்கிக்கொள்ளுவதற்குத்திஷ்டாந்திரமாக அந்தப்போர்க்களவெல்லையில்நவரத்தினமயமாகியகிரீடம் -வாகுவலயம்- மதாணிப்பதக்கமுதலிய ஆபரணங்கள் திரேகமெங்கும் பிறகாசிக்கவும் வீரகெண்டாமணிபாதங்களிற்கலீல்கலீலெனச் சத்திக்கத்தக்கதாகச் செயசாலியாகியவீரவாகுதேவ

ரானவர் ரவுத்திராகாரமாகிய கோபங்கொண்டு பாரித்தவிருட்ச மொன்றினைப்பிடுங்கிகரத்திற்கொண்டு யிடசாரிவலசாரியாகச்சுழற்றிச் சுழற்றிக்கோடையிடிகளைப்போலமோதுகின்ற தறுவாயில்யெதுத்துவந்தஅவுணரர்களிற்சிலர்பற்றியிருந்தவாளுடன் கரமானது கண்டிக்கப்பட்டெழுந்து அதற்குமுன்னம் பயந்தோடி யொளிக்கப்போகின்ற அவுணர்சிரங்களைக்கண்டித்துத்தள்ளியது, ஆதலால் விதிவலியைக் கடக்கவொண்ணாது அத்தறுவாயிற் பற்பலகோடி கவந்தங்களெங்கும் நடிக்கவும், பிணமலைகள்வானத்தையளாவக் குவிந்திருக்கவும் யிப்படிக்குச்சிங்க ராசனைப்போலப்புயவலிக்கொருவரும்நிகரற்ற வீரவாகுதேவர் சிலரோங்கி நிமைப்போதில் சகத்திரவாகுகளாகிய ஆயிரம்வீரனையும்அவர்களுடன் பெரும்புறக்கடலையொப்ப யிகார்த்துவந்த சதுரங்கவெள்ளங்களின் பெருக்கையும் மராமரமொன்றினால்மோதி கண்டங்கண்டமாய் துண்டந்துண்டமாய் அதாஅதப்படுத்திக்கொன்று எதிரிகளொருவருமில்லாமையாய்மதயானையைப்போல ரணக்களத்தைநோக்கிநின்றனர், அத்தறுவாயில் காக்கை கழுகு பருந்து முதலிய பட்சிகள் நிணங்களையும் மாம்சங்களையுந்தெவிட்டப்பிடுங்கித்தின்று உதிரங்களைக் குடித்துப்பந்தலைப்போலவானத்தில் வட்டமிட்டுலவவும், பூதபசாசங்கள் காளிக்கூட்டங்கள் நாய் நரிகள் நெருங்கிப்பிணங்களை அங்குமிங்குமிழுத்துப் பண்டிகள் திருத்தியாகப்பொசித்துக்கூத்தாடிக்கொண்டுவீரலட்சுமிகுடிகொண்டிருக்கும் புசங்களைப்படைத்த வீரவாகுதேவனா துதித்துத் திரிந்தனகள் - சவுனகாதிரிஷிகளே - அந்தவீரன்பராக்கிரமங்களை என்னாற்புகழப்படுவதோ அதன்பின்புநடந்தசரித்திரங்களையுங்கேட்பீராக,

---

## வச்சிரவாகுவதைப்படலம்.

---

சூதபுராணிகர் நைமிசாரண்ணிய வாசிகளுக்கு வீரவாகுதேவர்நடத்தியமற்றசவுரியபராக்கிரமங்களையுஞ்சொல்லுவதாயினர்; ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதிபனாகியசூரபதுமன்கோபித்துச்செலுத்தியசகத்திரவாகுகளாயிரவரும் சபதங்களைப்பேசிவந்து கொடியபோரைச்செய்துமுடியாமல் நாசப்பட்ட காரணங்களையும் வீரவாகுதேவர் சிங்கராசனைப்போலச் சிறிமராமரமொன்றைக்கொண்டு தன்பேரில் வந்தெதித்தசகலரையும்சின்னபின்னப்படக்கண்டித்துக்கொன்று எதிரின்றிநிற்கு

ம்உத்தண்டத்தையும் வானவழியில்நின்று கண்டதூதர்கள்மனங்கலங்கி வாயுவேகமும் மனோவேகமும் பின்னிடமுற்பட்டோடி அவுணர்குலப் பெருமானாய் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்மன்னுயிரைவாட்டிக்கொடுங்கோல்செலுத்திநவரத்தினமயமாயிரா நின்றசபாமண்டபத்திற்புத்திரமித்திரர்மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்முதலானவர்கள்சூழ்ந்துபோற்ற சிங்காதனத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்திவருகின்றசூரமகாராசனைத்தெரிசித்து வீரகெண்டாமணிசத்திக்கும் பாதாரவிந்தங்களிற்பணிந்து வாய்புதைத்து யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், ஐபனேதேவரீர்கட்டளையின்படிக்குச் சென்றசேனைத்தலைவர்கள் ஆயிரவரும்கணக்கிறந்தசயின்னியங்களுடன் வேகமாகப்போய்த் தூதனைவளைந்துகொண்டு கொடியபோரைச் செய்துவருகின்றதருவாயில் அவன்வடவாமுகாக்கினியைப்போலச்சீறிவானத்தையளாவநின்ற ஒருமரத்தைப்பிடுங்கிக்கொண்டு சக்கிராகாரமாகச்சுழன்றுசாடியகாரணங்களை என்சொல்வோம், அதனால் நம்மவர்கள் நிருவகிக்கமாட்டாமல் பின்னப்பட்டுசகலரும்மாண்டனர், தூதன்மாத்திரம்தனியனாய்ரிஷபத்தைப்போலப்பார்க்கப்பயங்கரமாய் நிற்கின்றனன், யிதுசேதிதேவரீர் சித்தமறிகவென்று சொன்னகாரணங்கள் செவிகளில் விழுந்தமாத்திரத்தில் ஆலகால விஷத்தையொப்பாக்கோபித்து விழிகளில்தீப்பொறிகள்சிதற மீசைதுடிக்கச்சரீரமெங்கும்வியர்க்க - அனற்சுவாலைவீசப்பெருமூச்செறிந்து மனம் வேகத்தக்கதாகவருந்தினவனாய் - வீரவாகுதேவர் சவுரியங்களையும் புயவன்மைகளையும் நினைந்துநினைந்துமனம் பொருமற் சபையிலிருக்கின்றவர்களைப்பார்த்துயிதனைச்சொல்லுவான், யிந்தஅனியாயங்களைப் பார்க்குமிடத்தில் வெகுநேத்தியாகவிருக்கின்றது, பார்வதிகுமாரனாகியபாலசுப்பிறமணியன் விடுத்தஅபலனாகிய ஒருதூதன்வலியனாய்விசாலமாகியசடலைத்தாவிஇலங்கைமுதலிய அரியகாவல்களைக்கடந்துயிந்த மகாசபையிற்சேர்ந்து சற்றும்பயமில்லாமல் நாம்வீற்றிருக்கின்ற சிங்காதனத்தினுஞ்சிறந்ததாய் உன்னதமுள்ளபீடத்தில்அசைவற்றிருந்து தகாதனவாகிய வாற்தைகளைப்பேசி அகண்டமண்டலாதிபதியாகிய நம்மிடத்திற்சொஞ்சமரியாதையுமில்லாமல் அவமதித்து நாமேவிய வீரரையுங் கொன்று சபையைக்கலக்கிப்போனவன், லட்சுமிவிலாசம்பொருந்திய நமதுபட்டணத்தை தும்சஞ்செய் தழித்து செயசாலிகளாகிய அளவற்ற அவுணவீரரைச்சின்னபின்னப்படக்கண்டித்துயின்னமும்யிப்பதியைவிட்டுப்போகாமல்வீறியிருக்கின்றனனெனக்கேட்டோம், ஆதலாற்சிவபிரான்கடாட்சத்தைப்பூர்த்தியாகப்பெற்று நூற்றெட்டுகங்களாகஆயிரத்தெட்டண்டங்களையும்பரிபாலித்து சகலதேவர்களையும்வென்று சூரனெனப் பேர்பெ

ற்றிருக்கின்ற நமதுபெருமைவெகுநேத்தியாகவிருக்கின்றதெலா நகைத்
துமேல்நடக்க வேண்டியதற்கு யோசித்திருக்கின்ற ராசாதிராசன் நினை
வைத்தெரிந்தமாத்திரத்தில் பத்துதலைகளும்யிருபதுகைகளையும் வயிரதி
ரேகத்தையும்பெற்றதீரனாகியவச்சிரவாகென்னும் சூரன்பிள்ளையானவனெ
ழுந்துபிதாவின்பாதங்களிற்சேவித்து, ஐயனே அபலனாகியஒருநரன்செ
ளரியங்களையும்வலியையும்புகழ்ச்சியாகப்பேசுவதைஅகண்டமண்டலாதி
ஸ்பரனாகிய தேவரீர் காதுகொடுத்துக்கேழ்க்கபடுவதோ அதைநினைக்கத்
தான்போதுமோ அவனெவ்வளவுமனிதன் அவன்புயவன்மைஎவ்வளவுக்
குண்டுநிலைமப்போது மனந்தாபரித் திவடத்தி விருப்பீராகில், அடியே
ன்வேகமாகப்போய்அந்தநாதன் ஆணவத்தையடக்கிப் பிடித்துக்கட்டி
க்கொண்டுவந்துதேவரீர் முன்னம்விடக்கடவேன் யிதைக்கெட்டியாய்ந
ம்பிஎனக்குச்செலவுகொடுக்கவேண்டுமென்று பலவிதஉறுதிகளைச்சொல்
லிக்காட்டியகுமாரன்தீரமானவார்த்தைகளைக்கேட்டவுடன்செயசாலியாகி
யசூரபதுமனுக்கு பிள்ளையினிடத்திற்றயையுண்டாய்க்கிறுபையாகப்பா
த்துக்கொதிக்கின்றபாலிற் புரைகுத்தியதைப்போலக் கோபந்தணிந்து
சந்திரனைப்போல முகமண்டலம் விளங்கப் புத்திரசிகாமணியே பிதாவி
ன்குறிப்பறிந்துதயிரியம்பேசியெழுந்ததீரனே சமீபத்தில் வாவாவென்
றழைத்துநெருங்கியஉடன் கட்டியணைத்துக்கொண்டு முத்தமிட்டுஉன்
னையொத்ததீரனிருக்கின்றபோது எனக்கென்னகுறைபாடிருக்கின்றது,
அப்பனேசீக்கிரமாகப்போய் நீபேசியசபதப்படிக்கு அந்தநாதனைப்பி
டித்துவந்தென்முன்விடக்கடவையென்று ஆசீர்வதித்துவிடைகொடுத்த
காலத்திற் பிதாவைச்சேவித்து சபையைவிட்டுவெளிவந்து தன்னரமனை
யிற்போய்ஆயுதச்சாலையிற்பிறவேசித்துஒருவராலும் அசைக்கவொண்ணாதஅ
பேதவயிரக்கவசத்தையெடுத்து விசாலம்பொருந்திய மார்பிலணிந்துக்
கொண்டுசெயத்துக்குரியவீரபட்டத்தைநெற்றியிற்கட்டிக் கரசாடுவிரல்
சாடுகளைமாட்டிவிஷித்தொவையலிட்டுக் கூர்மையாய்-பளபளத்து விளங்
கும் அலகைப்பெற்றதாய்-கழுகிறகுகள்சொருகித் தங்கக்கட்டுகளைபிகிந்
திருக்குங்கொடியபாணங்கள் நிறைந்திருக்கின்ற அம்புறுத்தூணியைமு
துகிலிறுக்கி வெற்றிலையத்தருந் தும்பைமாலையையணிந்துபொன்மணிக
ள்யிருகுதையிலுங் கவித்திருக்கும் பாரித்தவில்லைத் தொழுதெடுத்துத்
தோளில்மாட்டி-வாள்-வேல்-சூலம்-சக்கரந்-தோமரம்-பிண்டிபாலம்
தண்டாயுதமுதலிய படைகளைச் சேகரித்துக்கொண்டு -பிரமன்-விஷ்
ணுமற்றதேவர்க்கள்கொடுத்திருக்கின்ற தேவாஸ்திரங்களைப் பரித்துயிவ்
விதமாகப் போர்க்கோலத்தைப்பெற்றவனைப் வீரலட்சுமியைப்பூசித்துச்
சகலவித்தைகளிலுங் கைகண்டவீரனாகியவச்சிரவாகுவென்னும் ராசகுமா

ரன்வெளிவந்தவுடன் செயாவிசைபவா சத்திராதிகளாகியயானைக்கூட்டங்களுக்குச்சிங்கத்தையொத்துவாட்டுந்நீரனே அசண்ட மண்டலாதீஸ்வரனுகியசூரபதுமன்கீர்த்தியைவிளக்கவந்தசவுரியபரனேஒப்பற்றபுசபெலபராக்கிறமமுள்ளசாலேயே என்றுபட்டுவர்புகழவுங் கட்டியக்காறர்எச்சரிக்கைகளைச்சொல்லி முன்னேபோகவும் சுந்தரமுள்ளகன்னியர்கள் முத்தாலங்களைச் சுழற்றிநிற்சவும் - பரிசாலகர் சூழ்ந்து வெண்சாய்மரா அருகுமயிற்பிஞ்சம் ஆலவட்டங்கள்சந்திரவட்டக்குடைகள்முதலிய ராசசின்னங்களையசைத்துவரவும் அருகுதீவிட்டிகள்பிடிக்கவும் யிவ்விதஆடம்பரங்களுடன் முகவாயலுக்சருகின் வருகின்றதறுவாயில் பக்கங்களிற்கைகட்டி வாய்புதைந்திருக்கின்ற தூதர்களைப்பாத்து அதிவேகமாயோடிநமதுசேனை வெள்ளங்களைச்சகலாயுதபாணிகளாய் சண்டைகொடுக்கப்போகும்படிக்கு யிட்டுவரக்கடவீர்களென்று கட்டளையிட்டமாத்திரத்தில்அவர்களும் மகாபாக்கியமெனத்தொழுதுசேனைகளிருக்குமிடங்களைநோக்கிப்பறந்தனர், அத்தறுவாயிற்சூரபதுமன் குமாரன்தன்னிழலைப்போலப்பிறிவின்றிச்சூழ்ந்திருக்குந்தோழர்களைப்பாத்துகேட்டீர்களோசினேகிதர்களேகுமாரதேவன்அனுப்பியதூதனொருவன் அதிக்கிறமித்துபலகொடுமைகளைச் செய்திருக்கின்றனனெனத்தெரிந்துபிதாவானவர்சட்டளையிட்டிருக்கின்றபடிக்கு அவனைமடக்கிக்கொண்டு போர்கொடுத்துவென்று கட்டிக்கொண்டு வந்து என்பிதாவின் சபையில் விடும்படிக்குப்போசவிருக்கின்றதால்நீங்களும் ஆயுதபாணிகளாகவாருங்கோளென்று ராசகுமாரன்சொன்னவாற்தையைக் கேட்டவுடன்மனக்களிப்புடன் நீர்சண்டையைக்குறித்துப்போகும்போதுநமக்கிங்கென்னகாரியமிருக்கின்றது நாங்களும்யிதோவருகிறோமென்று தங்கள்அரமனைகளிலோடிவயிரசவசங்கள்முதலிய போற்கோலங்களைத்தரித்துக் கொண்டு சற்வாயுதபாணிசளாய்ச்சிங்கங்களைப்போல கெற்சித்துக் கொண்டுவேகமாய்வந்துராசகுமாரனைச்சூழநின்றனர். அத்தறுவாயில் சிலதூதர்களைப்பாத்துநமக்கும்யிந்ததோழர்களுக்கும் ரதங்களையிந்தநிமிஷத்திற்கொண்டுவரக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் அவர்களும்வேகமாயோடிபாகனாககண்டுராசகுமாரன்பணித்ததைத்தெரிவித்தமாத்திரத்தில்அலைகளைப்போலத்தாவும் நடையையுடையதாய்நற்சுழிகளைவாய்ந்து பஞ்சகல்லியாணிசளாய் சாமரையைப்போன்ற பிடரிமயிர் வால்களைப்பெற்றதாய்நாலுகால்களிலும் ரத்தினவெண்டயங்கள்கலிப்பதாய் பாகன்குறிப்பின்வழியிற் போவதாய் மேககெற்சிதத்தையொத்தகனைப்பைப்பெற்றிருக்கின்றபதினாயிரம்புரவிகளை அணிபடப்பூட்டிப் பொன்வண்டில்-அச்சுமச்சு- குத்துக்கால்- கொடுங்கை- கொடி - கொடை- முதலி

யசிங்காரங்களைப்பெற்றுமணிகள்சத்திக்கும்பாரித்ததேரையலங்கரித்து
வேகமாகத்தூரத்திவந்துஎதிரில் நிறுத்திச்சேவித்தகாலத்தில்பிருபதுபுச
ங்களைப்பெற்ற வச்சிரவாகுவானவன் சிங்காசன் மலையின்மீதிற் றூவுவ
தைப்போலப்பாய்ந்தேறிமண்டிபோட்டுளுக்காந்தபோதுமற்றபொன்
மயமாகிய ரதங்களின்பேரில்ராசகுமாரனுக்குத்தோழராகவிருக்கின்றம
ந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள் முதலியபிறமுகாள்பிள்ளைகளும்பா
ய்ந்தேறியதறுவாயில் ராசபுத்திரன் அனுமதிப்படிக்குப் போனதூதர்க
ள்தெரிவித்தவுடன்யானையின்பேரில் பேரிகைகளையேத்தியடையெழுச்சி
யென் றறைவித்த மாத்திரத்தில் அவுணவீரர்கள் சந்தோஷங்களுடன்
அஸ்திர-சஸ்திரவிதங்களைத் தாங்கிப்பலவெள்ளங்கால்பலன்கள் வெளிப்
படவும்பர்வதங்களையொத்ததேரணிகள்நடக்கவும் நீலகிரியைப்போன்
றயானைவரிசைகளும் வாயுவேகத்தினும் மேலிட்டுப்பாயும் வேகமுள்ள
புரவிப்பந்திகளும் பிறையாணப்பட்டபோது அந்தசதுரங்கவெள்ளச்
சேனைகளுக் கதிபராகவிருக்கின்றவர்கள் சற்வாயுத பாணிகளாய்ப்போற்
றிநடக்கும்போதுண்டாகிய அதிசெயக்காட்சிகளிற் சிலசொல்லக் கேட்
பீராக,பாரித்தரதங்கள்வரிசைப்படஓடுகின்றபாரத்தைச்சுமக்கப்படாம
ல்திரோகம்நெக்குவிட்டதைப்போல வண்டில்கள்பதிந் தோடவும்அவ்வ
ருத்தத்தினல்லிரங்குவதுக்கொப்பாகசெற்கரத்தொனிகளெழவும் நடக்
கின்றதேர்களைப்பர்வதங்களென்றெண்ணிநிருண்டமேகங்கள் அவற்றின்
மீதிறங்கிமின்னலிடிகளைப்பெருக்கிக்குமுறுகின்றஓசையைக்கேட்டமா
த்திரத்தில்மிரண்டுபாரித்ததிரோகத்தையுடைய கரியயானைக்கூட்டங்கள்ம
தங்களையிறைத்துக்கொண்டு கிம்புரிக்கோடுகள்விளங்கவேகமாய் நடக்க
வும்விழிகள்சிவந்துபிடறிமயிரைப்பின்னிவரிசைவரிசையாகவிட்டிருக்கி
ன்றகுச்சுகளசைய நான்குபாதங்களினும் வெண்டயங்கள்கலிக்கச் சவுரி
களைப்போலவால்கள்வீசவேகங்கொண்டுசத்திராதிகள்மனமும் விழிகளு
ஞ்சுழலத்தக்கதாக அஷ்டதிசைகளினும்பாய்ந்துலவி வரும்புரவிக்கூட்ட
ங்கள்அலைகளைப்போலத்தாவிச்செல்லவும்கூரியஅலகைவாய்ந்தவேல்தங்
கக்கட்டுகள்பிகிந்திருக்கின்ற பாரித்த தண்டாயுதம் சொற்ணமயமாகிய
சக்கரம்-அலகயுதம் - பொற்றுமுளுகள் - விளங்ககவிந்திருக்கும் கேட
யம்-மின்னலையொத்த-வாளாயுதம் - முத்தலைகளைப்பெற்றசூலம்-பாரி
த்திருக்கின்றதனுசு- திவ்வியபாணவகைகள்- எழுவாயுதம்-மழுவாயுத
ம் யித்தகையபடைகளைப் பரித்திருக்கின்ற அவுணவீரர்கள் யிடிகளைப்
போல உரத்த வசனங்களினுற் சபதங்களைப் பேசிக்கொண்டு பலநிறச்
சட்டைகளையணிந்து அளவற்ற சண்டைகளில் தீரராய் தேவர்க்கள் முத
லியசெயசாலிகளைவென்று கீர்த்திபெற்றவர்கள் படைகளைச் செலுத்துங்

கிறமங்களைப் பூர்த்தியாகக்கற்றவர்கள்யாரித்திராநின்ற பர்வதங்கள்கால்
முளைத்துப்போவதையொத்தகாத்திரமுள்ள கிரோகத்தைப் பெற்றவர்கள்
செக்கர்வானத்தைப்போன்ற சிவந்தசிகையையுடையவர்கள்பசியபொன்
னினாற்செய்தவீரபட்டத்தை நெற்றியி லணிந்தவர்கள் நிசும்பாசூரனாதி
யராட்சதரையொத்த வலியுடையசத்திராதிகள்கிரோகங்களை சவளிகரமாக
விழுங்கிஉதிரத்தைப்பானஞ்செய்யவல்ல பிலத்தையொத்த வாயையுடை
யவர்கள் வீரசிங்கம்போன்ற சூரத்தையும் வலியையுமுடையவர்கள் தறி
யைமுறித்துப் பாகனைச்சீறும் மதயானையைநிகர்த்த நடையைப்பெற்ற
வர்கள் சண்டைக்குவெளிப்படுவதாக அறைந்தமுரசத்தின் சத்தமானது
செவிகளில்நுழைவதற்கு முன்னம் வீராவேசங்களுடன் வாகுவலயங்
கள்தெறிக்கத்தக்கதாகப் பூரித்தோங்கும்புசத்தைப்படைத்தவர்கள் பி
ராணனிடத்திற்சற்றும்ஆசையற்ற கொடியபாதகர் சவுரியங்களில் ஒருவ
ரையும்ஒப்புச்சொல்லப்படாத தீரத்தைப்பெற்றவர்கள் சண்டைகிடை
யாதகாரணத்தினால் புசங்கள் தினவெடுக்கக் கரங்களைப்பிசைந்துக்கொ
ண்டெதிர்பாத்திருக்கின்ற வீரத்தன்மையையுடையவர்கள் யித்தகையப
தாதிவெள்ளங்கள்சமுத்திரங்கள்புரண்டோடுவதைப்போலஆர்ப்பரித்து
க்கொண்டுகாற்றினுங்கடுகிநடக்கவும் யிப்படிக்குப்போரைக்குறித்துச்
செயவுச்சாகங்களுடன்போகின்ற சதுரங்கவெள்ளங்களின் தொகையை
யும்சொல்லக்கேட்பீராக, நவரத்தினமயமாய்செற்கரத்தொனிகளைச்செ
ய்துபூமியதிரஓடுகின்றதேர்கள்அன்னூறுவெள்ளம்வானத்திற்சஞ்சரிக்கி
ன்றமேகங்களிலிராநின்ற செலத்தைத் துதிக்கைகளைநீட்டியுறிஞ்சி தாக
சாந்திசெய்யவல்லஉன்னதமுள்ளமதயானைகளின்தொகைஅன்னூறுவெ
ள்ளம்தத்தித்தாவிப்பாயும்குதிரைப்பந்திகள்ஆயிரவெள்ளம் கொலைக்கு
க்கெவ்வளவுமஞ்சாதகொடியமனதையுடையஅவுணர்யிரண்டாயிரவெள்
ளம்-யித்தொகைகொண்ட சதுரங்கச்சேனைகளின்பெருக்கானவை சற்வ
சங்காரகாலத்தில் உலகங்களை யழிக்கவெழும் சத்தசாகரங்களைப்போல
யிரைச்சலிட்டுக்கொண்டுவச்சிரவாகுவைச்சூழ்ந்துநடக்கு முன்னிலையில்
ரணபேரி-செயபேரி-வெற்றிச்சங்கம் துந்துமி சச்சரிகுடமுழா-எக்கா
ளைசின்னமுதலிய தோற்கருவி துளைக்கருவிமிடற்றுக்கருவி கஞ்சக்கரு
விநரம்புக்கருவியெனச் சொல்லப்பட்ட ஐவகைவாத்தியங்களும்ஏகமா
ய்அண்டங்க ளெங்குஞ் செவிடுபடும்படிக்குத் தாம் தாமென்று முழ
ங்க இவ்விதஆடம்பரங்களுடன்மந்திரிபிரதானிசேனாபதிகள்பிள்ளைகள்
சூழ்ந்துபோற்றநட்சத்திரக்கூட்டமத்தியிற்பூரணச்சந்திரனுதையஞ்செ
ய்திருப்பதைப்போலப்பற்வதாகிருதியாய்த்திரண்டுருண்டுவலிபெற்றி
ருக்கின்றயிருபது புசங்களைப்படைத்திராநின்ற ராசகுமாரன் நவரத்தி

ணமயமாகியதேரின்பேரிற்போகின்றதருவாயில் வீரசிங்கங்களையொத்த வலியும்வீரமுமுடைய அவுணவீரர் நடையினாலையும்மேகமுழக்கங்களைப்போலப்பேசும்ஆரவாரங்களும்மதயானைகள் விறிடுஞ்சத்தங்களும் நவரத்தினமயமாகியதேரணிகள்செற்காத்தொனிகளைச்செய்தோடும் அதிர்சியும்அலைகளைப்போலத்தாவும்வேகமுள்ளகுதிரைப்பந்திகளின்கனைப்பினாலையுமேகமாகக்கூடிப்பேரோசையைக்காட்டிச்சத்தசாகரங்களின் முழக்கத்தையடக்கிமேலிடவும் இத்தகையஆரவாரங்களுடன் சதுரங்கச்சேனைகளும் நடக்கும்போதெழுந்த தூளிபடலமானது மேலிட்டுப் பொன்னுலகைமண்ணுலகமாக்கியும் கடல்களிற்படிந்து அலைகளை யடக்கிச்சேறாக்கியும் அஷ்டதிசைகளினும் பரந்துமயக்கியும் சூரியன்காந்தியையடக்கியும் பூவட்டமுற்றினும்நிறைந்து சீவராசிகளனைத்தையும்பிரமிக்கச்செய்தும் யிப்பாடுகளைபடுத்திவிறியகாலத்திற்பலசிறப்புகளைக்கொண்டுபாரித்திராநின்ற ரதபந்திகளின்மீதிற்கட்டியிருக்கின்ற துசங்களானவைஅசையுந்தோறுந் திசைகளெங்கனும்நிழலைப்பரப்பியிருக்கின்றதைப்பார்க்குமிடத்திற்குமாரதேவர்விடுத்த ரணரங்கசூரனாகிய வீரவாகுதேவர்புயவன்மைகளையும் வீரபராக்கிரமங்களையுங்கண்டு வானதேவதையானது அற்புதமடைந்து சபாசென்று மெச்சிச் சிரக்கம்பஞ்செய்வதையொப்பக்காட்டியது, அத்தருவாயிற் சூரபதுமன் மனதுக்கினியகுமாரனாகியவச்சிரவாகு வீற்றிருந்துபோகின்ற சொற்ணமயமாகிய ரதத்தின்மீதிற்பேய்க்கூட்டங்கள்நின்று ஒன்றுடனொன்றுபோராடவும்-பருந்து கழுகு-காக்கை-ஆந்தை-முதலிய கொடியபட்சிகள்வட்டமிட்டும் தேரின்மீதுநின்றுகூவவும்-இவையன்றியும் உதட்டைக்கடித்து விழிகளிற்றீயெழக்கோபித்து வீராவேசத்துடன்போகின்ற ராசகுமாரன் கரத்திற்பற்றியிருந்தபாரித்தவில்லானது தற்செயலாய்த் தெறித்துவிழவும் சிறந்த படைகள் நிறைந்துமுதுகிலிறுக்கியிருந்த அம்புறுத்தூணியானது அற்றுக் குப்புறக்கவிழவும்யிடப்புறத்தோள்களும்விழிகளும்படபடெனத்துடிக்கவும்-ரதத்தின்பேரில்நாட்டியிருக்கின்ற கொடிகள் துண்டித்துப்பூமியிற்புரளவும் மேகசஞ்சாரமற்று வெளுத்திருக்கின்ற வானத்திலிருந்துசிவந்த நீர்த்துளிகள்சிதறியிடிக்கவும், யித்தகையபற்பல துற்சகுனங்கள்காட்டியபோது ராசகுமாரன் அவற்றினைஎவ்வளவுஞ் சட்டையண்ணாமற்கோபத்தையேமேலிட்டுத் தான்குறித்துவந்தபடிக்குமுடித்துப்போருங்கருத்தனாய்த் தன்ரதத்தில்நிறுத்தி யிருக்கின்ற வலிய விற்களினொன்றைக்கரத்திற்கொண்டு அம்புக்கூடைமுதுகிலிறுக்கி யுத்தசன்னத்தனாய்ச்சதுரங்கசேனைகளும் பிறளயகாலத்தெழும் பிரசண்டவாயுவைப்போலக் குமுறிக்கொண்டுசூழ்ந்துவரத்தக்கதாகத் துரிதமாய் நடந்து

வெற்றிவேலாயுதமூர்த்தியினது தூதன்வீற்றிருக்கின்றரணக்களத்தைச்சேரப்போகுமுன்னிலையில் தேன்களைப்பெருக்கிப் பரிமளித்திருக்கும்வெற்றிமாலையணிந்தவச்சிரவாகு நால்வகைச் சேனாசமுத்திரங்களுடன் மேல்நோக்கிவருவதை வீரவாகுதேவர் கண்டுமிகுத்த வைபவக்காட்சியுடன் வருகின்றவன் இந்திரஞாலத்தேரைப்பெற்றிருக்கின்ற சூரபதுமனைக்காணவில்லை, அவன்குமாரர்களிலொருவனாகவிருக்கவேண்டும் ஆகினுமென்ன அயிஸ்வரியகெர்வத்தினால் முன்பின்யோசியாமற் சண்டைக்கொடியெடுத்துவருகின்றவனையும் சேனைப்பெருக்கையும் சின்னபின்னப்படக்கொன்று பகைவரைக்கடந்து சூரியன் அஸ்தமானகிரியிற் போகுமுன்னம் எமதுகர்த்தனாகிய சரவணபவன்திருவடிகளைத்தெரிசிக்கப் போவேனெனத்தீர்மானித்துக்கொண்டவராய் அப்படிக்கு யிந்த ராசகுமாரனையும் அவுணவீரரையுங்கண்டதுண்டப்படவாட்டி அந்திபடுவதற்குமுற்றிசெயத்துடன் மீளாமற்போவேனாயின் ஆறுமுகேசன் அடியனாகமாட்டேனென்றுபிரதிக்கினைசெய்துக்கொண்டுவெற்றிவேலாயுதப்பெருமானினதுசெந்தாமரைமலரையொத்ததிவ்விய சரணாரவிந்தங்களைத் தியானித்துத்திக்குநோக்கிப்போற்றி யுத்தசன்னத்தனாய் உருத்துச் சத்தசாகரங்களுங்கொதிப்பெடுத்தடங்கவும் சத்தகுலாசலங்களுங் கிடுகிடாய்க்கவும் அண்டப்பித்திகையும் திசைகளும் பூமி ஆகாயமெங்குந் ததளித்துக்கலங்கவும்வெற்றிமாலை புரண்டுக்கொண்டிருக்கின்ற புயங்களைத்தட்டி உலகங்களெங்கும் யிதென்னஉற்பாதமென்று திகிற்பட்டு வாடும்படிக்குச்சிங்கநாதம் அட்டகாசங்களைச்செய்து வலியகரங்களைப் பிசைந்துங்கொண்டு ராசகுமாரன்வரவுக் கெதிர்யாத்திருக்கின்ற தருவாயில் அப்பேரொலியானது பெருத்துச் செவிகளிற் பட்டமாத்திரத்தில் நவரத்தினமயமாய்ப் பர்வதங்களைப்போலோங்கி யிராநின்ற தேரணிகளின்மீதில்வீற்றிருக்கின்ற சூரர்களுந் திசைக்களிறுகளையொப்பாகப்பாரித்து வலிபெற்றிருக்கின்ற மதயானைகளின்மீதேறிவந்த வீரர்களும் வாயுவேகத்தினும்மனோவேகத்திலும் மேலிட்டுத்தாவவல்ல மல்லகதிமயூரகதி முதலியசிறந்தநடைகளைவாய்ந்த புரவிக்கூட்டங்களின்மீது வீற்றிருந்து தங்களினத்தாரைக்கொன்ற பழிகளைத் தீத்துக்கொள்ள நினைந்து வீரங்களைப்பேசிவந்த சூரர்களும் சகலாயுதபாணிகளாய்ச்செயவுச்சாகங்களுடன் கொல்லுவோம் வெட்டுவோம் குத்துவோமென்று பற்பலதீரங்களைப் பேசிக்கொண்டு ரிஷபங்களைப்போலப்பாதங்களைப் பெயர்த்துவைத்து நடக்கின்றசேனைகளும்மிடியின்முழக்கத்தைக்கேட்ட சர்ப்பக்கூட்டங்களைப்போலத் திடுக்கிட்டு நடுநடுங்கி மனந்தாபரியாமற் கைகால்களுதறலெடுத்துச் சரீரமெங்கும் வியர்க்க பிறமை கொண்டவர்களாய் ஒருவ

னையொருவர்பார்த்து யிதனைப்பேசுகின்றனர், சர்வசங்காரகாலத்தில் அண்
டரண்ட புவனங்களையும் அடக்கி அதிலடங்கியிருந்த எறும்புமுதல்யானை
யீறாகச்சொல்லாநின்ற எண்பத்துநான்குநூறாயிரசீவபேதங்களையும்நா
சஞ்செய்துநித்தியானந்த சுகத்திற்சிலகாலங் களித்திருக்கும்படியாய்க்
கிறபையுற்ற ருத்திரமூர்த்தியானவர் கெற்சிக்கின்றசத்தமோ அல்லது அக்
காலத்திலெழுந்துலகங்களையழிக்கும் பெரும்புறக்கடலாகிய சாகரங்க
ளின்ஒலியோ பிறசண்டமாருதத்தின் முழக்கமோ அண்டங்களனைத்தும்
யிடிந்ததினாற் பெருத்தசத்தமோயிப்போதுநாம் கேட்டதெனத்தத்த
ளித்துயாதுந் தோற்றாமல்மயங்குகின்றதறுவாயில் போனாவிருப்பிக்
கெற்சித்த வீரவாகுதேவர் முழக்கமானதுபரிமளபுஷ்பமாலை புரளும்
புயாசலங்களைப்பெற்ற வச்சிரவாகுவினதுயிருபதுசெவிகளினும் சோ
டையிடிகளைப்போல வீறிநுழைந்தமாத்திரத்தில்மனம்நடுக்குற்றுத் தி
யங்கியிதனையெண்ணுவதாயினன், யேழுபதினாலுலகங்களினும் யிதுபரி
யந்தம்யித்தகைய பேரொலியுண்டாவதைக்கேட்டதில்லை, யிப்படிக்கொ
த்தசத்தமுண்டாகியதற்குக்காரணமென்னமோ தெரியவில்லையே யென்
றசங்கையுற்று பக்கங்களிற்கைகட்டி நிற்கின்றசிலதூதனைப்பார்த்து யிப்
போதுமுழங்கிய சத்தமுண்டாகிய யேதுவையைத்தெரிந்து அதிசீக்கர
மத்தில்வந்துதெரிவிக்கக் கடவீர்களென்றுகட்டளையிட்டுத் தாண்டுமு
ன்னிலையில், தன்தேரைச்செலுத்தும்பாகனாகிய விசையனென்பவன் கடி
தினெழுந்துசேவித்து ராசகுமாரனேயிதனைக்கேட்டருள்க– அடியேன்
சுலபத்தொழிலைச்செய்பவனென்று நினைந்து நான்சொல்லுங் காரணத்
தைத்திர்க்காலோசனைசெய்யாமல் யிகழ்ந்துவிடவேண்டாம் யிதனுண்
மையைச்சற்றுநேரத்தில் தேவரீர் தெரியப்போறீர் அதென்னவெனில்அ
ளவற்றசேனாசமுத்திரஞ்சூழத்தக்கதாக நீர்சண்டைகொடுக்கவருவதைப்
பார்த்துயிந்தசிறந்தபட்டணத்தைக் சேட்டழியச்செய்த பாலசுப்பிறம
ணியன்விடுத்த தூதனானவன்போனாவிரும்பி அளவிறந்தவெள்ளக்கண
க்கில்வருகின்றவீரர்களைக் கிஞ்சற்றும்மதியாமற் கொக்கரித்த சத்தமாகு
ம்யிப்போதெழுந்தஓசையானது யிதுவேயிப்படிச்சிருக்குமாகில் அந்த
வீரவாகுவினதுபுயவன்மைகளைச்சொல்லவும் வேண்டுமோ அதைநினை
ந்துமேல்நடக்கவேண்டிய காரணங்களைத்தேடுவீரென்று மதிசூகியாகிய
தன்சாரதி பேசியநீதியானது செவிகளிற்புகுமுன்னம் வடவாமுகாக்கி
னியைப்போலக்கோபித்து விழிகளில்அக்கினிப்பொறிகள்சிதறவும் வா
யிற்புகையும் அனலுமெழஅண்டங்க ளதிரநகைத்து சுவாலையெழப்பெ
ருமூச்செறிந்துசீ ஓபாகனேஎன்னசொன்னாய் என்சவுரியங்களையும் பு
யவன்மைகளையும் அளவற்றபோர் முன்னிலையிற் கண்டிருந்தும் தெரி

யாதவர்களைப்போலபாலன் செலுத்தியது தன்பெருமிதங்களை முயற்சி
யாகக்காட்டவந்தனை யிதோபார் நான்போய் கணப்போதில்அவன்வீரத்
தையும்கெற்வத்தையும் என்புயவன்மையினா லடக்கிக் கைப்பிடியாகப்ப
ற்றியிருபுயங்களுஞ்சேரப்பாசத்தினாலிறுகக்கட்டிக்கொண்டுபோய் ஆ
யிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்த் தேவர்களை யடிமையாகப்
படைத்த பிதாவின்சன்னிதானத்தில்விட்டு அவர்களித்து. அவனுக்குத்தக்
கடுந்தண்டனையைச் செய்யப்பார்ப்பேன் யிதனைச்சீக்கிரமத்தில் காணப்
போகிறாய் யிதுசத்தியமாகிய வசனமென்று சொல்லிக்கொண்டிருக்கிற
போதுமுன்னணியிற்சென்ற அவுணவீரர்கள் தங்கள்சட்டைகளுக் கட
ங்கியிருக்கின்றநால்வகைச்சேனைகளையும் பதுமயூகம்சகடயூகம் காருட
யூகம் யிவ்வரிசைப்படிக்கு அணிவகுத்துயுத்தசன்னத்தராய் ஆலகாலவி
ஷத்தைப்போலக்கொதித்துச்சீறிதங்களுக் கெதிரில்தமதிரண்டு பாதங்க
ளும்புயங்களும் கரங்களும்சேனைகளாகவும் படைகளாகவுங் கொண்டு
வீரசிங்கத்தைப்போலவருக்கொண்டு நிற்கின்றமுருகப்பெருமாள் தூத
னாகியவீராதிவீரனைக்கடலைப்போல யினாச்சவிட்டுக்கொண்டுவந்த நால்
வகைச்சேனைகளும்வளைந்து வீராவேசங்களினாற்சொக்கரித்துச் சிலஅவு
ணர்தங்கள்கரங்களிற் பற்றியிருக்கின்றவலியவிற்களைவளைத்துநாணேற்
றித்திக்குகளதிரக் குணத்தொனிசெய்து குமாரமாகிய அர்த்தசந்திரபா
ணமுதலியகணைகளையமோகமாகச்சரவேகமாய்ப்பிரையோகித்த தருவா
யில்அப்படைகளினாந்து புகைந்துதீப்பொறிகளையிறைத்து குமுகுறெ
ன் னும்ஓசையைக்காட்டிப்பலதிசையினும்வேகமாய்வரவும்சிலவீரர்கோ
பித்துத்தங்கள்கரங்களிற்பற்றியிருக்கும்முசலம்குந்தம்கப்பணம்யிவற்
றினைக்குறிகொண்டு செலுத்தவும் சிலர் பாரித்திராநின்ற தண்டாயுதங்க
ளைச்சுழற்றியெறியவும்சிலர்சூலாயுதங்களை மார்புக்கிலக்காகக்கடாவவும்
சிலர்பிண்டிபாலம்-மழுவாயுதங்களைவிட்டார்ப்பரிக்கவும் - சிலர்நிணங்
களைப்பூசிவிளங்கும்அலகையுடையவேல்களை றிவ்வுறிவ்வென்றெறியவும்
சிலர்சக்கரங்களைக் கரகமெனச்சுழற்றிவிடவும்,இவ்விதங்களாகவிஷத்தை
ப்போலஉலகங்களுக்குக்கொடுமைகளைச்செய்துவரும்பாதகராகிய ராட்
சதச்சேனைகள் மிகுந்தகோபங்களுடன் செலுத்திய ஆயுதவிதங்களனைத்
தும் சீறிக்கொண்டுவந்து பிரமனைநெடுநாள் சிறையில்வைத்த சுப்பிரம
ணியக்கடவுள் தூதனான வீரவாகுதேவருடைய அனலையொத்த திரேகத்
திற்றாக்கியமாத்திரத்திற்சரீரமுற்றும் உதிரம்பீறிட்டு அந்திவானத்தைப்
போலச்சிவந்துகாட்டவும்,மேலும் உதையகாலத்தில் ஒளிமழுங்கிவட்ட
மாய்க்கிழக்குத்திசையிலெழுந்தசூரியபிம்பத்தினிடத்திற்கொஞ்சங்கொ
ஞ்சமாயுண்டாகுங் கிரணங்களைநிகர்த்தும்விளங்கியகாலத்தில்எமதைய

ஞரிய வீரவாகுதேவருக்கு அதிககோபம் பிறவேசித்து மான்கூட்டமத்தியிற் சடுதியிலொரு வேங்கையானது பாய்ந்தகாலத்தில் மங்கியழிந்துபோவதைப்போல ராட்சதச்சேனைகளை வளைத்துக்கொண்டுசின்னபின்னப்படக்கண்டிக்கத் துடங்கினார், அதெப்படிக்கெனில், கோடிகோடிக் கணக்கில் செயசாலிகளாகியசத்திராதிகளினது சிவந்து விளங்குஞ் சிகைகளைப்பற்றிக் கிறுகிறெனச் சுழற்றி பூமியில்மோதியும் பற்வதங்களில் மோதியும் திக்குகளில்வீசியும்இப்படிக்குநிமைப்போதிற் கணக்கிறந்த படைகளைக்கொன்றும் வீறிமேல்வருகின்றசரங்கள்- எறியாயுதங்கள்முதலானவைகளை நீண்ட கரங்களினாற்பற்றி அக்கினி யெழும்பும்படிக்குப்பிசைந்து துகள்படவூதியும் ஒவென்றலறச் சிலராட்சதரை மந்தரகிரி போன்றபாதங்களினாற் பூமியிற்றேய்த்தும் வண்டில் - அசுவ-மச்ச-குத்துக்கால் - கொடுங்கை முதலியவைகளினாற் சோடித்திருக்கின்ற சித்திரத்தேர்களை வாரிவாரி அண்டத்துக் கப்புறத்தெறிந்தும் - மும்மதங்களையாற்றைப்போலொழுக்கும் பற்வதாகிருதியாகிய யானைக்கூட்டங்களவற்றைச்சேர்த்துத் துதிக்கைகளைப்பற்றி ஒன்றுடனொன்றை மோதிக்கடலினிடத்தெறிந்தும் அலைகளைப்போலத் தத்தித்தாவிப் பாயும்புரவிக்கூட்டங்களை பணிபணியாய்ப்பாதங்களினாலுதைத்துத்தள்ளியும் சிலவற்றைவாரி ராட்சதவெள்ளங்களின்மீது கடாவித் துள்ளத்துள்ளக்கொன்றும்நால்வகைச்சேனைகளிற் சிலதைப்பாதங்களினாலெத்திப் பெரும்புறக்கடலில்விழுந்து மூழ்கச்செய்தும் - சிலராட்சதரை யிருகால்களையும்பற்றிப்பிளந்தெறிந்தும் சிலரைப்பாதங்களினா லதுக்கிக்குயவன்மண்ணைமிதிப்பதைப்போலஉதிரமாம்சங்களேகமாய்க்குழம்பத்துவைத்தும் சிலரை துள்ளித்துள்ளிவிழச் சிரங்களைக்கிள்ளிப் பந்தைப்போல வானத்திலெறிந்தும் சிலரைமந்தரம்போன்ற புசங்களினாற்றூக்கிப்பனையைப்போலமறிந்துவிழும்படிக்குத்தள்ளியும்சிலரைப்பற்றிச்சம்பாத்தாளறைவதைப்போலப் பக்கங்களிலிருக்கின்ற கோபுரங்களிலடித்துக்குப்பல்குப்பலாகப்போட்டும் சிலரை துடிக்கத்துடிக்கமிதித்துங் கோபத்தணியாமற்பக்கத்தில் வானத்தையளாவித்தழைத்திருக்கின்ற மரங்களைப்பிடுங்கிக்கொண்டுகிறுகிறென வலசாரி யிடசாரியாகச்சுழற்றிச் சாடும்போது கரங்கள்வேறு-சிரங்கள்வேறு தலைகள்வேறுவேறாய் விழுந்துருளக்கொன்றும்-சிலரைபூமியிற்குப்புறவிழவுதைத்துத்தள்ளியுங்கோபமாறாமல் ரதகெசதுரகபதாதிகளைக்கோடிகோடியாக ஒன்றின்பேரிலொன்றுவிழுந்துசாகும்படிக்குக்கைகளினாற்குத்திக்கிடத்தியும்பற்வதசிகரங்களின்மீது சிங்கம் பாய்வதைப்போலச் சிரமலைகளிற்றாவி அவ்விடங்களிற்பதுங்கியிருந்த ராட்சதரை ஓரறையினாற்பூமியைக் கவ்விக்கொள்ளத் தாக்கி

யும் - சிலர்பற்களுதிரவும்- சிலர்விழிகள்-தெறிக்கவும் - சிலர்வாய்பிளக்க
வும்-சிலர்மார்புகிழியவும்- சிலர்மண்டைதிறந்துமூளைதெறிக்கவும்-சில
ர்கபோலம்தெரியவும்- சிலர்வயறுபீறுண்டு குடலகள்சிந்தவும் - இவ்வி
தங்களாகச் சின்னபின்னப்படச் சாடியதறுவாயிற் சூரபதுமன் புத்திர
னுக்குப்படைத்துணையாகச் சூழ்ந்துவந்த ரதங்களனைத்தும்- வண்டில்
வேறு - அச்சுவேறு,மச்சுவேறு-பீடம்வேறு,குத்துக்கால்வேறு - கொடுங்
கைவேறு-கொடிகள்வேறு குடைகள் வேறுவேறாகவுருளவும் - அவற்றிற்
பூண்டிருக்கின்ற புரவிகள் சாரதிகள் கண்ட துண்டப்பட்டழிந்துபோ
கவும்யானைப்பந்திகள்சிதறி முகபடாமற்று மத்தகமிற்றும் துதிக்கைக
ண்டித்தும் - தந்தங்கள் முறிந்தும் -. பற்கள்கொட்டுண்டும் - உரலை
யொத்தகால்கள் முறிந்தும் வால்கள்சிதறியும் பாகருருண்டும்யிப்படிக்
குமாளவும் புரவிக்கூட்டங்கள்சதைந்தும் ரத்தினமயமாக விருக்கின்ற
முகவணிகள்கடிவாளங்கள்நுறுங்கியும் பிடறிமயி ரலையத்தலைகள்கண்டி
த்தும்பட்டினாலுஞ் சரிகையினாலுஞ் சோடித் தணிந்திருக்கின்றசீனிகளு
டன்முதுகுகள்கிழிந்தும் யிருபாரிசங்களினுந் தொங்கவிட்டிருக்கின்
றசவுரிகள்திசைகளிலிறைந்தும்பொன்னினாற்செய்தவெண்டையங்கள்சத்
திக்கும் கால்கள்தறிந்தும் யிவ்விதங்களில் மாண்டும் சிவந்தசிகையையு
டையராட்சதர்கள் சிரங்கள் வெட்டுண்டும் பற்கள்தெறித்தும் வாய் பிள
த்தும்பற்வதங்கள்போன்ற புசங்கள் சரிந்தும் பதக்கங்கள் சறப்பளிக
ள்புரளும் மார்பு துறந்தும் வயறுசரிந்தும் கடகங்களணிந்தகரங்களொ
டிந்தும் விரகண்டைகலிக்குங் கால்களற்றும் துடைகள் முறிந்தும்யிவ்
விதமாகக்களமெங்கும் மாண்டுருளவும்யிப்படிக்கு வீரவாகுதேவர் சின
ரோங்கி காட்டழலைப்போலவும்சுழற்காற்றையொத்தும் வளைந்து வளைந்
துசாடுகின்றதறுவாயில் அளவற்றவெள்ளம் ரதகெச துரகபதாதிகள் சின்
னபின்னப்பட்டுமாண்டதுபோக நின்றசிலராட்சதர்கள் தாபரிக்கமாட்
டாமல்நாலுமூலைகளினும் யிறைந்து ஓடியொளித்தனர், அக்காலத்திற்
சண்டையுமொடுங்கியது - யிதனால்ஆயிரத்தெட் டண்டங்களைவென்று
தேவர்க்கள் முதலானவர்களை ஏவல்கொண்ட சூரபதுமன் பெற்றிருந்த
கீர்த்திகளும் மங்கிப்போகும்படிக்குச் சேனாசமுத்திரங்கள் முற்றும்ப
ட்டபாட்டையுஞ் சத்திராதியானவன் செயவுச்சாகத்துடன் நிற்பதையும்
சூரபதுமன்குமாரனுக்குச்சககிறராட்சகராகவந்ததோழர்கள்கண்டுஅம்ம
ம்மயிதென்ன அதிசெயமாக விருக்கின்றதுஒருநிமைப்போதிற்சமுத்திர
த்தைப்போல யினைந்து சூழ்ந்திருந்த நால்வகைச் சேனைகளையும் ஒருவ
ன்யாதொருதுணையுமில்லாமல் ஆயுதங்களைக் கரத்திலெடாமல் மராமர
மொன்றினாற்கொன்றனன், வீரனென்றுசொல்லுவது யிவனுக்கேதகும்

ஆனாலென்னமாச்சுது நம்முடையவிற்சாதுரியங்களினால்யிவன்செற்வத்தையடக்கிச்சட்டிக்கொண்டுவந்துராசபுத்திரனாகிய நமதுதோழனுக்கு பெருமதியாகக் கொடுப்போமென்று சபதங்கள்பேசி ஓடுகின்ற சேனைகளைமடக்கிபயப்படாதீர்கள் யிதோசத்துநோத்தில் நமதுபகைவனைக் கண்டதுண்டப்படக்கொல்லுவோம் நில்லுங்கோள் நில்லுங்கோளென்றுதாபிரியங்களைச் சொல்லிக்கூவும்போது மீந்திருக்கின்ற சதுரங்கச்சேனைகளும்திரும்பி. புசங்களைத்தட்டிக்கொண்டு சிங்கநாதங்கள்அட்டகாசங்களைச்செய்து தூதனைவளைந்துசாடவேண்டுமென்கிறவயிரத்தினால் மாரிகாலத்தில் நதியானது பெருகுவதைப்போல ஏகமாகக்கூடிக் கொக்கரித்துக்கொண்டு வந்துராசகுமாரன் தோழனைக்கலந்து சற்வசங்காரகாலத்தில்மகாமேருகிரியைச் சமுத்திரவெள்ளமானது சூழ்ந்தொலிப்பதுக்குச்சமதையாக மதயானையைப்போல கெம்பீரமாய் நிற்கின்றவீரவாகுதேவனை வளைத்துக்கொண்டு பாரித்தவிற்களை வட்டாகாரமாக வளைத்து நாணேற்றி பூமியதிரத்தக்கதாக குணத்தொனிசெய்து தேவாஸ்திரமுதலியகொடியபாணங்களைக் கார்காலத்திற் சத்தமேகங்களும் பற்வதத்தின் மீதிற் பெய்வதுக்கொப்பாகஅபரிமிதமாகச் சிலர்பிறையோகிக்கவும்வேல்-சூலம்-கப்பணம்-பிண்டிபாலம்-சக்கரம்- முசலம்-முதலாகியஆயுதங்களைப்பலர்வேகமாய்விசவும் யிவ்விதங்களாய்க் கொடியபோரைச் செய்கின்ற தருவாயில் வீரவாகுதேவர்சீறித் தமதுகரத்தில் எமதண்டத்தைப்போலவிளங்கும் மராமரத்தைக் கரகரெனச்சுழற்றி யிடசாரி வலசாரியாகத்திரிந்து எதுத்துவந்து போர்செய்கின்ற ராட்சதகுமாரர்கள்அவர்களுடன்வந்த சேனைப்பெருக்குகளையும் வளைத்துக்கொண்டு சாடும்போது சித்திரங்களெழுதியிராநின்ற மத்தகங்கள்பிளந்தும் கற்றாணைப்போலப்பாரித்திராநின்றகால்களற்றும் பனையைப்போ லசைந்திருக்கிறதுதிக்கைகள்வெட்டுண்டும் தந்தங்கள்முறிந்தும்முறத்தைப்போலஅசைந்திருக்கின்ற செவிகள்பறந்தும் யிவ்விதமாக யானைக்கூட்டங்கள்மாண்டும் செம்பஞ்சூட்டிச் சாமரைகளைப்போலவீசும் வால்கள்தறிந்தும்நவரத்தினமயமாகிய வெண்டயங்களணிந்தகால்கள்முறிந்தும் பின்னலிட்டுக்குச்சுகள்தொங்கும் பிடரிமயிரையுடைய கழுத்துகள் வெட்டுண்டும்,இவ்விதமாகக் குதிரைப்பந்திகள் அதப்பட்டும் தட்டுகுலைந்தும் மொட்டழிந்து அச்சுமுறிந்துவண்டி அருண்டுமச்சுகள்பறந்துகொடிகுடைமுதலியசிங்காரங்கள்மங்கியும்சாரதிகள்குதிரைகள்சிதைந்தும்யிவ்விதமாகத் தேர்கள்சின்னபின்னப்பட்டும்குதையோடுகுதை சேரவளைந்து சாவருஷிங்களைப்பெய்யுந் தனுசுகள்முறிந்தும் பிறையோகித்த ஆயுதங்களறப்பட்டும் சிரங்கள்நெரிந்தும் மார்புபிளந்தும்வயறுகிழிந்தும் ச

தைகள்சரிந்தும் கொடுமைபேசிய வாய்கிழிந்தும் மிப்படிக்கு ராட்சத
வீரர்கள்மடிந்தனர், இக்கோலமாய் நால்வகைச்சேனைகளும் அதப்ப
ட்டுப்போனதைவச்சிரவாகுவினது தோழரானபாலகுமாரர்கள்கண்டுறவு
த்திராகாரமாய்க்கோபித்துத்தேர்களைமுடுக்கிக்கொண்டுவந்துமுன்பின்
பாராமல்பாரித்தவிற்களைவளைத்துகுணத்தொனிகாட்டிகுரூரமாகியபா
ணங்களைச் சோனைமாரியைப்போலச் செலுத்துகின்றதருவாயில் அப்ப
டைகள்வெளிப்பட்டவுடன் அனலையும் புகையையும்வீசிக்கொண்டுகோ
டையிடிகளைப்போலக்குமுறியற்பல கொடுமைகளைக்காட்டிமேலிட்டுவ
ருவதைவீரவாகுதேவர்கண்டுவடவாமுகாக்கினியைப்போலக்கோபித்துக்
கரத்திற்பற்றியிருந்த மராமரத்தைச்சுழற்றி மோதியகாலத்தில் அதிகவுக்
கிறத்தைக்காட்டிவந்த பாணங்க ளனைத்தும் தூள்பட்டுப் பறக்கவும்,
அவற்றினைச்செலுத்திய பாலகுமாரர்கள் கரங்க ளற்றும்தோள்கள்சரிந்
தும்வீரபட்டமணிந்த நெற்றிகள்பிளந்தும் சிரங்களற்றும் நாசிகள் து
ணிந்தும் புஷ்பமாலைகள்புரளும் மார்புகிழிந்தும் வீரகெண்டையணி
ந்திருந்தகால்களொடிந்தும் தாங்கள்பெற்றிருந்தவரப்பேறுக ளழிந்து
ம்வலியும்வீரமுமடங்கிமங்கும்படிக்குச்சாடியும், இஃதன்றியிற்சிலரை
வாயுரப்பினாற்கொன்றும் சிலரைகைக்குத்தினால்மாய்த்தும் வெறித்தபா
ர்வையினாற் சிலரைவாட்டியும் சிலர் உதைத்துக்கொண்டு சாகும்படிக்கு
ரப்பியும் மிவையன்றியும்பலவீரரையும் யானைகுதிரைகளை கரங்களினால்
வாரிவாரிமேகங்கள் சஞ்சரித்திருக்கின்ற வானவெல்லையிலும் மகரமச்ச
ங்கள்சஞ்சரிக்கின்ற பெரும்புறக்கடலிலும்சரபசார்த்தூலம்சிங்கம்புலி
முதலிய மிருகங்கள் சஞ்சரிக்கின்ற பர்வதங்களிலும் ஆரண்ணியங்களி
லும் கான்யாறுகளிலும் விழுந்துமாளும்படிக்குவீசியும் மிப்படிக்கு
க்கோலாகாலப் போரைச்செய்துவருகின்றதருவாயில் எமதூதர்கள்ராட்
சதர்பிராணன்களைப் பிடித்துக்கொண்டுபோகின்றவர்களிற்சிலர்சிலவீரர்
கள்குத்துயிருடனிருப்பவர்கள் சமீபத்திற்போகுமுன்னிலையில் அவர்க
ள்பார்வையின் கொடுமைக்குப் பயந்து சமீபத்திலும் போகவஞ்சிவீர
வாகுதேவரை வணங்கித்தங்கள்வருத்தங்களை முறையிட்டுக்கொள்ளுகி
றதருவாயில் அவர்களையாதரித்துபயப்படாதீர்களெனக்கையமர்த்தி வை
வசுதபட்டணத்தில் நவரத்தினமயமாக விளங்குஞ் சபையிற் சித்திரவிசி
த்திரங்களாகச்சோடித்திருக்கின்ற சிங்காதனத்தின்மீது வீற்றிருந்துசித்
திரகுத்தனென்னுஞ்சம்பிரதிகள் பூலோகத்திலிராநின்றபிராணிகள் ஆயு
ள்முடிவையும் அவைகள்செய்திருக்கின்ற நன்குதீங்குகளையும்படித்துப்
படித்துச் சொல்லிக் கொண்டு வருவதைக்கேட்டு அதற்குத் தகுதியாகிய
தெண்டனைகளைக் கட்டளையிட்டுக்கொண்டு நீதியைசெலுத்திவரும் எமத

ருமாரசன்முன்னம்விழத்தக்கதாகக் கணக்கிறந்த கொடியமனதைப்பெ
ற்றராட்சதவீரரை வாரியெறிந்தும்பலரை அவுணர்பிரானாகிய நிருதிவாச
ஞ்செய்யும் நகரத்தில்விழவீசினர், அதைப்பார்க்குமிடத்தில் யிவர்கள்
ஓரினமாதலால் வங்கணமாய்க்கூடிக் களித்திருக்க நினைந்து சேர்த்ததை
ப்போற்காட்டவும், சண்டைமுகத்தில்அடியுண்டுவிழுந்துகிடக்கின்றராட்
சதவீரர்கள் பிராணன்துடித்திருப்பதைக்கண்டு அவர்களைவீரசொற்கத்தி
ற்சேற்கும்படிக்குத்தேவர்வருந்திவிமானங்களைக்கொண்டுவாராமலும்அ
ண்டயோனியெனநின்ற சூரியன்பிளந்து வழிவிடாமலும் ரணரங்கசூர
ராகவிருப்பவர் சேரவேண்டிய சிறந்தபதங்களிற் கணக்கிறந்தவர்களைச்
செல்லவெற்றியும்அஷ்டதிசைகளைப்போற்றியிருப்பதை நீங்கப்படாம
ற்பசியினாலுழன்றிருக்கின்றதிசைக்களிறுகளுக் கிரைபோடுவதைப்போல
ச்சிலராட்சதரை அத்திசைகளில்வீசியும்சமுத்திரச்செலத்தையுண்டும்உதர
வங்கிதணியாமல்காந்திக்கொண்டிருக்கும் வடவாமுகாக்கினியானதுதிர
த்தியாகப்பொசித்துக்களிக்கும்படிக்கு அதனிடத்துக்குச்சிலரைவீசியும்
இவ்விதங்களாகச் சிவசுப்பிரமணியதேவர் தூதனாகிய வீரவாகுதேவர்ப
கைவர்சின்னபின்னப்படும்படிக்குச்சாடியபோது கொக்கரித்துவந்தசே
னாசமுத்திரமும் அசுரருக்குத் தலைமைபெற்றுப்போற்றியிருந்தவீரர்க
ளும்நிமைப்போதில்அதப்பட்டுயிருந்தயிடந்தெரியாமல்மறைந்தகால
த்தில்தப்பியசிலராட்சதர்கள் நடுநடுங்கிவலியற்றுமானமும்நாணமுமிழ
ந்துபயப்பிருந்தியினால்நாலுமூலைகளினும்ஓடி அஷ்டதிசைகளினும்தீவு
களினும்வானவெல்லைகளினும்ஆரண்ணியங்களினும்கான்யாறுகளினும்ப
ர்வதங்களினும்பதுங்கினர், இப்படிக்குமாண்டும் புறந்தந்தும்தன்சே
னைகளனைத்தும்மறைந்துவெள்ளிடையாகவிருப்பதை வச்சிரவாகுகண்டு
பிரமித்தவனாய்யிதனையென்னுகின்றனன், நம்முடன்யிணைந்துவந்தசே
னைப்பெருக்கும்படைவீரர்களும்பிராணஸ்சினேகமாகவிருந்தபாலகுமா
ரர்களும்அதப்பட்டுக்கூப்பிட்டகுரலுக்குஏனென்றுசொல்லஒருவரைக்
காணேன்ராசபரமேஸ்பரனுக்குப் புத்திரனாகப் பிறந்தநான் தனியனாகு
ங்காலமும்நேர்ந்ததேகற்றனேயெனக்கிலேசித்துவாடியும்ராட்சதகுலத்
திலுதித்தவனாதலால் மானமானதுதூண்ட உடனே கோபம்பிறவேசித்து
பற்களைக் கறகறெனக்கடித்து விழிகள்சிவந்து அனற்பொறிகளையிறைத்
துப்புருவம்நெற்றியிலேற வடவையைப்போற்சீறிச் சாரதியைப்பார்த்து
அதிசீக்கிரமத்தில் நமது தேரைத்துரத்திப்போய்அதோநிற்கின்றதூதன்
முன்னம்விடக் கடவையெனக்கட்டளையிட்ட வசனமுடிவதன் முன்ன
மசூரியன்தேரைநடத்தும் அருணனும் நாணும்படிக்கு மனோவேகத்
துக்குமுந்தி குதிரைகளைத்தூண்டி வீரவாகுதேவருக்கெதிரிற்கொண்டு

யோய்நிறுத்தினன், சவுனகாதிரிஷிகளே, இப்படிக்குச் சூரபதுமன்குமா ரன்விராவேசத்துடன் செயத்தைப்பெற்றுப்போகநினைந்து மேலிட்டுவ ருவதைப் புசபெலபராக்கிரம சாலியாகிய தூதன்கண்டு அதிகசந்தோஷ த்தையடைந்தவனாய்பூமண்டல முற்றினும் ஒரடியிலளந்த மகாவிஷ்ணு வைப்பார்க்கினும் உயர்ந்தவனென்றுசொல்லும்படிக்கு அண்டமுகடா னது சிரத்திற்றுக்க ஒங்கிவளர்ந்து மண்ணுலகைப் பாதங்கள் மூடவு ம்புயாசலங்கள் ஆகாயத்தைமறைக்கவும் கிரீடமானது அண்டகோளகை யைத்தாவும்படிக்கு நிமிர்ந்துநின்று பாதங்களையசைக்குந்தோறும் அச் சுமையைத்தாங்கப்படாமல்ஆதிசேஷன் தன்னுயிரஞ்சிரங்களைக்கொண் டுபூமியைச்சுமந்துவாடி யிதுவென்னஅற்புதமாக விருக்கின்றதென்று மயங்கவும் பூமண்டலமானது நெக்குவிட்டு மயேந்திரபட்டணமெங் கும்யிடிபட்டுப்பாதலத்திற்சேரவும்அண்டகடாகங்குலுங்கவும் ஆர்ப்ப ரித்துத் திரிபுரங்களையெரித்த சிவபிரானுக்குப் பாணமாகவும் தன்னைய வமதித்தஇரணியன் வரமுயற்சிகளையும் புயவன்மைகளையும் ஆணவத்தை யும்உதிரத்தையும் பிராணனையுங்கிறிகித்து உலகைஉபாதியைத் தீர்க்கும் பொருட்டுகற்கம்பத்தில் முளைத்தெழுந்தநாரசிங்கமூர்த்தியுந்திடுக்கிடும் படிக்குச் சுவாலையெழநகைத்துச் சொற்சமர்த்திய பாதலமென்னுந் திரி லோகவாசிகளும் சயாசென்றுமெச்சும் சாமார்த்தியனாகிய வீரவாகுதே வர்ஒருதரம்கெற்சித்த மாத்திரத்தில் அவ்வொலியையும் நகையினதிற்சி யையும் சூரபதுமன்குமாரனாகிய வச்சிரவாகு கேட்டதறுவாயில் திடுக்கி ட்டுமனஞ்சுழலச் சற்றுநேரம்திகைத்திருந்து பத்துசிரங்களையும்அசை த்துநல்லகாரியம்எப்படிக்கிருந்தபோதினும் யிவன்விறுப்பையடக்கு வேனெனப்பேசிஅக்கினிகொட்டும்படியாக விழிகளையுருட்டி விஷப்ப ற்களைப்பொருந்திய நாகத்தையொப்பச்சீறி வடவாமுகாக்கினியைப் போலக்கொதித்து வீரனைப்பாத்து யிதனைச்சொல்லுவான், ஓ தூதனே உன்புசபெல பராக்கிரமத்துக்கு மெச்சினேன் வீரவாகுவென்பது உன க்குத்தகும் யித்தகையசேனைவெள்ளங்களைக்கண்டும் சற்றும்அஞ்சாமல் எதுத்தஉன் தயிரியத்துக்கு யாவனையும் ஒப்புச்சொல்லப்படவில்லைஎன கண்கள்காண யிக்காலத்தில் நீசெய்தசண்டைக்கு நிகராய்முன்னோர்களி ல்யாவனையுங்குறிக்கப்படவில்லைபுவனங்களதிரகெற்சித்ததுஉன்வல்லப த்துக்குத்தகுமெனப் புகழந்தவனாய் ஓ வீரனே உன்னுடனெதுத்துப் போராடியசெயசாலிகளாகிய சேனைத்தலைவரையும் ரதகெச துரகபதாதி களின்பெருக்கையும்வென்றோமென்கிறகெற்வத்தைப்பெற்றிருக்கிறதா கக்காணுகின்றது, அந்தவிறுப்பைவிட்டுவிடக்கடவை யின்சிலநேரத்தி ல்உன்னுணவத்தை யடக்கிக் கைப்பிடியாகப்பற்றி கட்டிக்கொண்டுபோ

ய் அண்டங்களனைத்தினையும்வென்ற சவுரியவானாகிய என்பிதாவின்முன்
னம்விடக்கடவேன், யிதைசெட்டியாய்நம்பி அதற்குத்தக்கபடி சாக்கி
ரதையாயிருப்பையென்றுபேசிய வாசகங்களை வீரவாகுதேவர்கேட்டு ந
கைத்து, ஓ ராட்சதகுமாரனே வீண்வார்த்தையாடுவதிற் பிரையோசன
மொன்றுமில்லை உன்னைச்செயித்துப் போகும்படியான முயற்சிகளைப்
பார்ப்பேன் நீயும்அவ்வாறே என்னைவெற்றிபெற ஆசைகொண்டிருக்க
லாம்அப்படியிருக்க உன்னைநான்கண்டிக்குறேனென்றும் என்னைநீக
ட்டிக்கொண்டு போவேனென்றும் வீரங்கள்பேசுவதிற்பயனென்னை வி
லாவில் சண்டைக்காயுத்தப்படுவையாகில் தோர்ப்புகெலிப்பு உடனே
தெரிந்துபோகுது அக்காலத்தில் தேவர்க்கள் முதலானவர்கள்கண்டுயிவ
ன்வீரனென்று புகழவேண்டுமென்று நீதிமானாகிய வீரவாகுதேவர் சொ
ல்லிமுடிவதற்குமுன்னம் சூரபதுமன்குமாரனாகிய வச்சிரவாகுகோபங்
கொண்டுதன்கரத்திற்பற்றியிருக்கின்றபாரித்தவில்லை வட்டாகாரமாகவ
ளைத்துகுணத்தொனிகாட்டி விஷித்தொவையைவிட்டுக் கூர்மையாகிய அல
கைப்பெற்று கழுகிறகுகள்பூண்டிருக்கும்ஆயிரங்குறாமாகியபாணங்
களைக்கரவேகமாய்ப்பூட்டி வீரவாகுதேவர்கண்டத்துக்கும் புசங்களுக்கு
ம்மார்புக்கும்குறிகொண்டுசெலுத்தித்திசைகளதிரும்படிக்குஆர்ப்பரித்
தனன், அந்தபாணங்கள்வெளிப்பட்டவுடன் இடி புகை மின்னல் அனற்
பொறிகள்முதலிய கொடுமைகளைக்காட்டி வடவாமுகாக்கினியைப்போ
லச்சிறி அதிகமகிமைகளுடன் மேலிட்டுதன்பேரில் வருவதைக்கண்டு நீ
ண்டதமது கரத்தைக்கொண்டு அதுகளனைத்தையுஞ் சேர்த்துச்சுள்ளிக
ளைப்போல முறித்தெறிந்து சலனமற்று நிற்கும்போது தானேவிய பா
ணங்கள்முற்றும் தகள்பறந்துபோனதை வச்சிரவாகுகண்டு மனம்பொ
றுமல் ஆலகாலத்தைப்போல கோபித்துமீளவும் நாரியைச்செவ்வையாக
விறக்கிபதினாயிரம் அர்த்தசந்திர பாணங்களை ஒருமுனையிற்பூட்டி வீர
வாகுதேவர் மார்புக்கு லக்குபார்த்துத் தாண்டியபோது அப்படைகள்
சற்பங்களைப்போலச்சீறிக் குமுகுமு மென்னும்ஓசையுடன் விஷங்களை க
க்கிக்கொண்டுமேலிட்டுவேகமாய் வருவதைச்சிவகுமாரன்கண்டு நகைத்
துமுனந்தன்னுடன்போர்செய்தழிந்துபோனராட்சதவீரர்கரத்தில்நின்
றுசலத்தில்விழுந்துகிடக்கிறபாரித்தயிருப்புலக்கை ஒன்றையெடுத்துக்
கொண்டு கிறுகிறெனச்சுழற்றிக்கோட்டிப்புள்ளையடிப்பதைப் போலத்
திக்குகளெங்கிலும்பிறைந்து போகும்படிக்குச்சாடியபோது அறிவற்
றபாணங்களானவை முசலத்தினாற்சின்னபின்னப்பட்டு வியர்த்தமாய்ப்
போகத்தெரிந்த ராசகுமாரன்முன்னிலும் அதிககோபங்கொண்டு மீள
வும்மிகுத்தகூர்மையாகிய பதினாயிரம்பாணங்களைச்சந்தித்துத் துரிதமா

கத்தாண்டிவீரன்கரத்திற்பற்றியிருந்த யிருப்புலக்கையைத் தூசள்கண்டுமேலும்அளவிறந்த கடூரமாகிய சரங்களை அம்புக்கூட்டிருந்தெடுத்துக்கோதண்டம்போன்றவலியதன்வில்லில்பூட்டிச்சுப்பிறமணியர்தூதன் சிரத்துக்கிலக்காகவும் ஆயிரம் அர்த்தச்சந்திரபாணங்களைக் கண்டத்துக்குக்குறிகொண்டும் ஆயிரங்கூரியகணைகளை பற்வதாகிறுதியாக விருக்கின்ற புசங்களுக்குச்சரியாயும் மற்றஉறுப்புகளுக்கும் ஆயிரம் இரண்டாயிரக்கணக்கிற் கொடியபாணங்களைச் சந்தித்துக்கரவேகமாய் ஒன்றின்பின்னென்றாகத்தாண்டி எமனைப்போலப் பிராணிகளிடத்திற் சற்றும்பிரக்கமற்றசூரபதுமன்குமாரன்ஆர்ப்பரித்த தருவாயில்வீரவாகுதேவர்கரத்திற்பற்றி யிருந்தயிருப்புலக்கைபொடிபட்டுப்போனபடியால்மேற்குறித்தபாணங்கள் சரீரமுற்றுந்தாக்கி உதிரம் பெருக்கெடுத்தோடுவதினாற் களைத்துஎமதையணுகிய வீரவாகுதேவர் நிமைப்போதுமயங்கி யிருந்து உடனேதெளிவுண்டாய் சிங்கத்தைப்போலப்பாய்ந்து துற்மாற்கனாகியவச்சிரவாகு ஏறியிருந்ததேரை உதைத்தமாத்திரத்தில் அதிற்பூட்டியிருந்தவேகமுள்ள குதிரைப் பந்திகள்சிரோகமெங்கும் நுறுங்குண்டுபதைபதைத்துப்பூமியில்விழுந்துமடியவும் தேர்ப்பாகனுந்தலைசிதைந்து மாளவும் வண்டில்- அச்சமச்சு-குத்துக்கால்- கொடிஞ்சி-கொடி- குடைமுதலிய உறுப்புகள் துகள்பட ரதமானது அழிந்துபோன தருவாயில்ராசகுமாரன்துரிதமாய் சிங்காசனைப்போல் மற்றொரு சேமத்தேரிற்பாய்ந்து மூன்றாம்பிறையை ராகுவானதுவளைத்திருப்பதைப்போல வட்டமாய் நாணேறிட்டிருக்கின்ற தனுசினிடத்தில் அம்புறாத் தூணீரத்திருக்கின்ற பாணங்களில் அதிகதீட்சணியமுள்ள ஆயிரங்கணைகளைத் தேடியெடுத்துப்பூட்டித்தேவர்க்களனைவரும்யிதுகளென்செய்யுமோவென்று வருந்திக் கிலேசிக்கும்படிக்கு வீரவாகுதேவர் நெற்றிக்குக் குறியார்த்துப்பிறையோகித்தனன், அவ்வாளிகள் வெளிப்பட்டவுடன் சர்ப்பங்களைப்போலச்சீறி குமுறிக்கொண்டு அனற்பொறிகளைக்கக்கி வெகுஉற்பாதங்களைக்காட்டிவந்து வீரன்நெற்றியிற்றாக்கியபோது அவற்றினைச் சட்டைபண்ணாமல்தட்டிப்போட்டு வேகமாய்ப்பாய்ந்து சூரபதுமன் குமாரன்ஏறியிருந்தபாரித்த ரதத்தைவாரியெடுத்து கிறுகிறெனச்சுழற்றிச் செண்டைப்போல ஆகாயத்தில்பறக்கும்படிக்குவிசிச் சிங்கநாதஞ்செய்து மேலும் வச்சிரவாகுவுக்கு உதவியாகப்பக்கங்களில் நிற்கின்ற -யாளி-சிங்கம் -புலி-குதிரை-யிதுகளைப்பூட்டிநவரத்தினமயமாய்ப் பாரித்திருக்கும்சேமத்தேர்களனைத்தையும் திசைகளிற் பறந்து போகும்படிக்குஉதைத்துத்தள்ளியுங் கரங்களினாலலைத்தியும் யிப்படிக்குஒன்றில்லாமல் நாசப்படுத்திவீரசிங்கத்தைப்போலக் கெற்சித்துக்கொண்டு ஒருவரும்எதி

நில்லாமல்ரணக்களத்தில் உலவிக்கொண்டிருந்தனர். அக்காலத்தில்வீரவாகுதேவர் வாரிவீசியதேருடன்ராசகுமாரன் சக்கிறத்தைப்போலச் சுழன்றுகொண்டு நூறயோசனைப் பிறமாணம் வானத்திலெழும்பி தலைகிழாய்மறிந்துவிழிகள்சுழலமிடவும் வாய்புலரவும் மனந்தத்தளிக்கவும் அறிவுமயங்கிக் களைக்கவும் இப்பாடுகளைப்பட்டுவந்துதேரானது சண்முகப்பெருமான்தூதன்முன்னம் பூமியில்விழுந்தமாத்திரத்தில்பொடிப்பொடியாய் நுறுங்கியகாலத்தில் தனக்கும் பலசாயங்கள் பட்டபோதினும்சூரனுதலால் தயிரியத்தைவிடாமல் பக்கத்திற்பாய்ந்து தீரனாய்நின்றுதன்கரத்திற்பற்றியிருக்கின்ற பாரித்தவில்லைவளைத்துச் சண்டைகொடுக்கப்பிறையத்தினப்படுவதை நிகரற்ற புசபெலபராக்கிறமசாலியாகியவீரவாகுதேவர்கண்டு கடகமணிந்திரானின்ற தமதுகரத்தை நீட்டிசூரன்குமாரன் கரத்திற்பற்றியிருந்த பாரித்தவில்லை பறித்து படீலெனமுறித்தெறிந்தபோதுவச்சிரவாகு வடவையைப்போற்சிறிக்கொவ்வைக்கனியையும்அரக்கையும்போலச்சிவந்தவிழிகளிலிருந்துதீப்பொறிகளைக்கொட்டமீசைதுடிக்கக்கோபித்தவனுய்க்கைகளைமுறுக்கிக்கொண்டுபுசங்களைத்தட்டி உடைவாளைச் சரேலெனஉருவி மின்னலைப்போல விளங்கும்படிக்குக் கரத்திற்பற்றிக்கொண்டு இடசாரி வலசாரியாகத்திரிந்து பாய்ந்துமேல்நோக்கிவருவதைச் சிங்கம்போன்ற வலியுடைய வீரவாகுதேவர்பார்த்தவுடன் யினியிவனை வைக்கப்போகாதென் றெண்ணித் துரிதமாய்த் தமதரையிற்சொருகியிராநின்ற வாளாயுதத்தை உறையிலிருந் துருவிக்கரத்திற்கொண்டு விதிர்த்து லருக்கொண்டு ராசகுமாரன்மீதிற்பாய்ந்ததருவாயில் வச்சிரவாகுவானவன் சீறிக்குந்திப்போட்டு ஓங்கி வீரவாகுதேவர்புசத்தின்பேரில் வெட்டினுன், அதைவீரன்தட்டிப்போட்டுத்தமதுவெற்றி வாளாயுதத்தைச்சுழற்றி ராசகுமாரன் கரத்தைவாளுடன் அற்றுவிழும்படிக்குக் கண்டித்துத்தள்ளியகாலத்தில் அப்பாதகன் அதருமல் பெதருமல் மனஞ்சஞ்சலப்படாயல் காட்டழலைப்போலக்கோபித்துபற்வதத்துக்கொப்பாகப் பாரித்துத் தன்கரத்தி லிருக்கின்ற தண்டாயுதத்தை கிறுகிறெனச்சுழற்றி வீசியபோது மணிகள் சத்திக்க அதிவேகமாய்வருவதை வீரன்கண்டு வாளைக்கொண்டு யிருதுண்டமாய் பூமியில்விழக்கண்டித்துத்தள்ளி மறுபடியும் அவனொன்றை எறிவதன் முன்னம்சூரபதுமன் மனதுக்கினிய குமாரனுகிய வச்சிரவாகுவினது பத்துத்தலைகளையும் பெருங்காற்றி லடியுண்ட பனங்காயைப்போல உருளும்படிக்குவெட்டித் தள்ளியகாலத்திற் கோடையிடியைப்போலயிரைந்துக்கொண்டுநிலத்தில் விழுந்துருண்டு பிராணன்நீங்கி வீரசொற்கத்தைச்சேர்ந்தனன், இவ்விதமாய்க் கொடிய மனதையுடைய சூரபதுமன் குமாரனு

கிய வச்சிரவாகு வானவன் மாண்டு ரணக்களத்தில் விழுந்ததைக்கண்ட வுடன் பக்கங்களிற் பதுங்கியிருந்த ராட்சதவீரர்கள் புலம்பி இனியிவ டத்திலிருப்போமாகில் பிராணசேதம் வருமென்று நடுநடுங்கிப் பலதி சைகளினும் ஓடிப்போயினர், அக்காலத்தில் ரணக்கள முற்றும் பிணம லைகளாகக்குவிந்து பலகவந்தங்கள் கூத்தாடவும் பூதபசாசங்கள்ரத்த மாம்சங்களைத்தெவுட்டவுண்டு வெறிகொண்டுநடிக்கவும் - நாய் - நரிகள் பிணங்களைப் பிடுங்கித்தின்று ஊளமிட்டுலவவும் - பருந்து - கழுகு - காக்கைகள் பிணங்களைக் கொத்தித்தின்று களித்து வானத்தில் வட்டமிட்டுப்பறக்கவும் - உதிரப்பிரவாகமானது பெருக்கெடுத்து இறந்து கிடக்கின்ற ராட்சதர் - யானைகள் - குதிரைகள் - களேபரங்களை வாரிக்கொண்டோடிச் சமுத்திரத்திற் பாயவும் - மகரமச்சங்கள் திருத்தியாகப்பொசித்து ஒன்றுடனொன்று வாதாடவும் - கறுத்திருந்தநீரானது சிவந்து குழம்பிக்காட்டவும், இப்படிக்கு ரதகெச துரகபதாதிகளும் பாலகுமாரர்களும் ராசபுத்திரனும் மாண்டமுன்னிலையில் வீரவாகுதேவர் செயவுச்சாகத்துடன் எதிர்க்க ஒருவருமில்லாதபடியால் மதயானையைப்போல்வீறிநின்றனர், அத்தருவாயில் பகற்போதுகழிந்து சூரியபகவான்தனது ஆயிரங்கிரணங்களையுஞ் சுருக்கிக்கொண்டு மேற்குக்கடலில் மூழ்கிமறைந்தனர், அதுவெப்படிக்கிருந்ததெனில், வச்சிரவாகு செயசாலியாகியவீரவாகுதேவரால் மடிந்தனன் இனிசற்றுநேரமிருப்போமாகில் இந்த அபசெயத்தை கண்டுகளித் துலவுவதாகநினைந்து சூரபதுமன் கோபித்து முன்னமொருக்கால் அசமுகிகரந்துணிந்தபோது நம்மனைவரையுந் தெண்டித்ததைப்போல வந்துநேருமென் றெண்ணிப் பயந்து மனவாட்டத்துடன் ஓடியொளித்தவனைப்போலக் காட்டியது, சவுனகாதிரிஷிகளே - அத்தருவாயில் வீரவாகுதேவர் செய்தசண்டையின் விநோதங்களை முற்றினும் விரித்துச்சொல்லுவதற் கென்னாற்கூடுவதோ, இப்படிக்குச்சர்வசங்கார மூர்த்தியைப்போல நிற்கின்றகாலத்தில் நடந்தசேதிகளையுங்கேட்பீராகவெனச் சூதபுராணிகர் பேசுவதாயினர்.

## அஸிமுகன்வதைப்படலம்.

நைமிசாரணியவாசிகளே - மேற்குறித்தபடிக்குச் சூரியன் மேற்குச்சமுத்திரத்தில் மறைந்ததருவாயில் செக்கர்வானம் பிரகாசித்த காட்சியெப்படிக்கிருந்ததெனிற், சூரபதுமன் குமாரன் சிரங்களைவெட்டியெறிந்ததருவாயில் உதிரமானது தெறித்துப் பரவியதைப்போலக் காட்ட

வும், உடனேநட்சத்திரங்கள் விளங்கியது வீரவாகுதேவர் செய்ததைக்
கண்டதேவர்க்கள் களிமிகுதியினால் முத்துகளை யிறைத்து பின்னமுஞ்ச
ண்டைகளில் வெற்றிபெறவேண்டுமென வாழ்த்தியதைப்போலக்காட்ட
வும்சந்திரனுதித்துவிளங்குவது வெண்பட்டுக்குடையைகவித்ததுக்கொ
ப்பாகவும், வண்டினங்கள் தேன்களையுண்டுலவியிருந்ததுகள் றீங்காரத்
தொனிகளைச் செய்துக்கொண்டுபோய் பக்கங்களி லிருக்கின்ற சோலை
களிலும் காவுகளிலுஞ்சேர்ந்து களித்திருக்கவும், வீரவாகுதேவர் செயத்
தைத்தெரிந்த அவுணர்கள் முகாரவிந்தங்கள் வாட்டமுற் றிருப்பதைப்
போலத் தடாகங்களில் விரிந்திருந்த தாமரைக்கமலங்கள் முகளித்துக்
கொள்ளவும், பாதகராகிய ராட்சதர் மாண்டதையும் வீரன்செயத்தையு
ங்கண்டு பூமிதேவிக்குச் சரீரம்புளகித்ததைப்போல அல்லிகள்முற்றும்
அலரவும், அத்தறுவாயில் மயேந்திரபுரியில் தற்செயலாய் அளவற்றஉ
ற்பாதங்கள்தோற்றவும், இத்தகைய சிங்காரங்களைக் காட்டுகின்றதறுவா
யில்ஆயிரத்தெட் டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரபதுமன் மனதுக்
கினியகுமாரனாகிய வச்சிரவாகு மாண்டதையும் சண்டைகொடுக்கஒருவ
ரையுங்காணாததையும் சூரியன் அஸ்தமித்ததையும் வீரவாகுதேவர் நிதா
னித்து இதனைஎண்ணுகின்றனர், எமதுகற்தனாகிய குமரகுருவின்பெரு
மைகளைச்சற்றும் மதியாமல் யிகழ்ந்த கொடிய பாதகனாகிய சூரன்அர
மனைமுற்றும் துகள்கண்டும்விசாலமாகவிருக்கின்ற யிந்தபட்டணத்தை
ச்சின்னபின்னப்பட வாட்டியும் மேலும்எதுத்துவந்தவீராதி வீரர்கள
னைவரையுங்கண்ட துண்டப்பட அதாஅதம்பண்ணியும் மனதிற்பெருத்
திருந்தகோபக்கனலிற்கொஞ்சம்ஆறினேன், இதுவல்லாமற்சண்டைகொ
டுப்பதற்குயாவனையும்வரக்காணேன், பூலோகத்தை விளக்கித் திருகின்ற
சூரியபகவானும்மேற்றிசையில்மறைந்தனர், யிரவும்மேலிடுகின்றது வே
தவிதிப்படிக்கு தற்மமார்க்கங்களை எவ்வளவுமெண்ணாமல் பிராணிகளை
யலைத்துத்திரியுங் கொடியராட்சதர்கள் வாசஞ்செய்யும் யிந்தமயேந்திர
புரத்துக்குத் தூதாகவந்தயான் லோக நாயகனாகியபாலசுப்பிரமணியக்
கடவுளை யிதுபரியந்தஞ்சேவித்துப்போற்றாமல் வீண்வாதாடிக்கொண்
டிருப்பதுஎன்னையொத்த அடியனுக்கழகன்று ஆதலாற் சகலதேவர்க்களு
ந்துதிக்கும்பெருமையினையுடைய வெற்றிவேலாயுதக்கடவுளினது திருவ
டிச்சேர்வையை நீங்கிவாடுகின்றநாயினேன் மனகோட்டமும் யிப்பட்
டணத்தில்அரியசிறையிலகப்பட்டுவாடுகின்றதேவர்க்கள்வாட்டமுந்தரி
தமாய்நிவாரணமாதற்பொருட்டு விரைவிற்றிருச்செந்திற்பதியைச் சே
ருவதேகாரியமென மனதில்நிச்சயப்படுத்திக்கொண்டவராய் வீராதிவீர
னாகியதூதன்சத்திராதிகள் யிறந்துகிடக்கின்ற ரணக்களத்தைக்கடந்துபி

ரசண்டவாயுவைப்போன்றும் அக்கினியையொத்தும் எமனைநிகர்த்தும்
காலனுக்குச்சமமுடையாகவும் சண்டவர்கள்வெருவிப்பறக்கத்தக்கதாக லட்
சுமிகரம்பொருந்திய ராசவீதியைக்கடந்துபோகின்ற தறுவாயில்வீதிகளி
லெதிர்ந்தசகலரும்நடுக்கிட்டு யிதோபிராணனைக் கொண்டுபோகும் எம
ன்வருகிறான் வருகிறானென்றும் போகின்றவனைத்தடுத்து நிற்கவும்பய
ந்துகொல்லுவன் சொல்லுவேனென்று கூவிக்கொண் டோடும்போது
வீரவாகுதேவர்முன்னந்நாமழித்துப் பதங்கோலமாகவிளங்குந்தெரு
க்களைத்தாண்டிமகதாயிஸ்பரியச் செல்வப்பெருக்கைக்கொண்டிருக்கும்
மயேந்திரபுரியைக்கடந்து ரிஷபத்தைப்போலக்கெம்பீர நடையையு
டையவீரனானவன்ககனமார்க்கமாகப்பறந்து முருகப்பெருமானைத்தியா
னித்துக்கொண்டு அப்பட்டணத்துக்கு வடபாரிசத்திற்காவலாகவிருக்கி
ன்றகெடிஸ்தலமாகிய இலங்கைக்குச்சமீபத்தில்வரும்போது அப்பதியி
ற்பழமையாகப்போற்றியிருப்பவன் திரிபுராதிகளைப்போன்ற வலியும்
வீரமும்பெற்றுபட்சிசாதிகள்முதலாகத்தன்னுக்கினையைக் கடந்துபோ
கவொட்டாமற் கண்ணிமையைப்போலயிடைவிடாமலிருந்து போற்று
கின்றசெயசாலியாய்வடவாமுகாக்கினியானது பலகொழுந்துவிட்டெரி
வதைப்போலச்சிவந்தசிகைவிளங்கும் ஆயிரஞ்சிரங்களையும் சற்சம்பங்க
ளைநிகராய்ப்பாரித்திரானின்ற யிரண்டாயிரங் கரங்களையும் சூபதுபல்
வீற்றிருக்கின்ற பட்டணத்தைச் சூழவிருக்கின்ற கோபுர வாயில்களைப்
போன்றபருத்தவாய்களையும்பெற்றுஉலகத்துக்கச்சாணியாகநிற்கின்றப
ல மகம்மேருக்கள் திரண்டோன்றியிருப்பதையொத்த காத்திரதிரேகத்
தைப்பெற்றவனாய் - வில்வாள் வேல் - சூலம் - பிண்டிபாலம் - சப்பணம் -
தோமரம் - சக்கரமுதலாகிய ஆயுதங்கள் மின்னலையொப்பக் கரங்களி
ல்விளங்கத்தக்கதாகச் சற்வசங்காரகாலத்தில் உலகங்களையழிக்கவெழும்
வடவாமுகாக்கினிக்கொப்பாகக் காந்திக்கொண்டிருக்கின்ற விழிகளைவா
ய்ந்துயிதக்கம் பூததயவு பச்சியாத் தாபமென்னும் நற்குணங்களெவ்வ
ளவும்பெறாதவனாய்·உலகங்களில் யிழிவாகச்சொல்லும் பாதகங்களுக்கி
ருப்பிடமாக முடிக்கவல்லவனாய்நிகரற்றவல்லமை சாலியாய்விரசிங்கம்
போன்றகூரமும் வேகமும்பெற்று - வாள் - வேல் - பாணப்பயிற்சிகளிற்
கைகண்டசூரனாய்ச்சகலரும்போற்றி வணங்கும்செயசாலியாகவுமிருக்
கின்ற யாளிமுகனென்னும்பெயர்பெற்றவன் யிவன்சவுரிய பராக்கிரம
ங்களைச்சூரன்தெரிந்து மெச்சிஇலங்கைசக்கரசனாகப்பட்டந்தரிக்கப்பெ
ற்றவன், சவுனகாதிரிஷிகளே - யித்தப்பாதகன் சவுரியத்தையும் புயவன்
மைகளையும் மாயைப்பெருக்கையும் யின்னவிதமென்று என்னொருவா
யினாற்சொல்லிமுடியவதோ யித்தனைவல்லமையுடையவன் முன்னம் வீர

வாகுதேவர் அவடம்வந்து சின்னபின்னப்படச் சாடிப்போன நறுவா
யில்தனதிறைவனுகிய சூரபதுமனைக்காணப்போயிருந்தவன் திரும்பியி
லங்கையைச்சேர்ந்தகாலத்தில் அமுதினுமனதுக்கினியவனுய் நிகரற்றசூ
ரனுய்ப்புயவன்மைக்கொப்பற்றவனுயிருந்தகுமாரனிறந்தசேதியையும்ப
ட்டணமழிந்த விதத்தையுந் தெரிந்தவுடன் பதைபதைத்துவாடிக்கிலே
சித்துத் துக்கசாகரத்திலழுந்தித் தனக்குநேர்ந்தஅபகீர்த்திக்கும் நஷ்டத்
திக்கும் வெழ்க்கிச்சோருகின்றதறுவாயில்மந்திரிபிரதானிகள்முதலாகத்
தேற்றிப்போதரவுசொல்லிய முன்னிலையில்ஒருவகையாகத்துக்கமாறி இ
லங்கையில் வீற்றிருந்துஅரசுசெலுத்தியிருக்கின்ற யாளிமுகனுனவன்
பிறசண்டமாருதத்தைப்போல அதிவேகமாய்க் ககனமார்க்கத்தில் தன்பதி
க்கருகில் வீரவாகுதேவர்வருகின்றதைக்கண்டுசீறியிவனூர்சோரனைப்போ
ற்காணுகின்றது, கொஞ்சமாவதுபயமில்லாமல் நமதுவலியையும் எண்
ணுமல்தீரனுய்வானமார்க்கத்திற் போகின்றனனெனச்சொல்லியபோதுபக்
கத்திருக்கின்ற மந்திரிகளிலொருவன் சேவித்துஇலங்கைக் கதிபனேகே
ட்டருள்க தேவரீர் முன்னந்தமதுகுமாரனையித்தலத்தைக் காவல்கொண்
டிருக்கவிட்டு நமதரசனைக்காண மயேந்திரபுரிக்குப் போயிருந்தகால
த்தில் யிதோவருகின்றவன் யிப்பட்டண மார்க்கமாகப்போவதைஉமது
சேனைத்தலைவன் சிங்கமுகன்கண்டு ஆலகால விஷத்தைப்போலச்சீறி ரத
கெசதுரகபதாதிகளைக்கூட்டிக்கொண்டுபோ யெதுத்து அகோரயுத்தி
யங்களைப்பண்ணியபோது சட்டைபண்ணுமல் அச்சேனைமுற்றினும் நா
சஞ்செய்துகடையில் படைத்தலைவனையும் வாளினுற் சின்னபின்னப்பட
க்கண்டித்தப்போட்டு செயவுச்சாகத்துடன் நவரத்தின மயமாய்வானத்
தையளாவியயிவ்விலங்கை வடபாரிசத்தில்நிற்கின்ற கோபுரத்தின்மீதிற்
பாய்ந்து நின்றமாத்திரத்தில்அச்சுமையைத்தாங்கமாட்டாமல் துறுவா.
சமுனிவன்சாபத்தினுற் சகலவளங்களுடனுந் தெய்வலோகமானது சமு
த்திரத்திற்சேர்ந்ததைப்போலயிந்தசிறந்தஇலங்கைத்திட்டுகடலிற்படிந்
துஅளவற்றசெனங்கள்மகரமச்சங்களுக் கிரையாய்மாண்டவர்கள்போக
த்தப்பிநின்றவர்கள் யிவ்வீரனைக் கண்டவுடன்இமனைப்போல நினைந்து
பயபீதியினுல் திக்குகளினும் மற்றயிடங்களினும் ஓடியொளித்தனர்,
அக்காலத்தில்உமது புத்திரன் வடவைப்போற்சீறிக் கோபித்து வில்
லைவளைத்து- நாராயணுஸ்திரம் பிரமாஸ்திரம்- அக்கினியாஸ்திரம்-வாயு
வாஸ்திரமேமுதலியதிவ்வியபாணங்களைப் பிறையோகித்தும்- சக்ரம்பி
ண்டிபாலம்- கப்பணம் - தோமரம் - தண்டாயுதமுதலிய படைகளையு
ம்செலுத்திஅகோர யுத்தியங்களைச்செய்தகாலத்தில் அதுகளைத்தடையு
ம்பகைவன்திமைப்போதிற் சின்னபின்னப்படக் கண்டித்துப்போட்டு

மின்னலைப்போல விளங்கும் வாளாயுதத்தை வீசிக்கொண்டு பாய்ந்து
செயசாலியாகியஉமது குமாரன்-சிரம்வேறு-கரம்வேறு-புசம்வேறு-
கால்வேறு-வேறாகக்கண்டித்துப்போட்டு யெதிர்க்க ஒருவருமில்லாதப
டியால் வானமாற்கமாகப் பறந்துபோயினன், அதன்பின்பு சமுத்திரத்
திலழுந்தியிருந்த இலங்கையானது பழையபடிக்கு மேலெழுந்துநின்ற
துநாங்களனைவரும் அக்காலத்திற்பட்டவருத்தங்களைச் சொல்லிமுடியா
துயிப்படிக்கொத்தஅலங்கோலஞ்செய்து நடந்தயிந்தபாதகன்பின்புஉ
லகங்களெங்கும் புகழ்ந்துகொண்டாடத்தக்கச்செல்வவளங்களைப்பெற்
றராசாதிராசன்வாசஞ்செய்யும் வீரமாமயேந்திரபுரத்திற்பிறவேசித்துதி
ருச்சபையைச்சேர்ந்து சூரபதுமனையவமதித்துப்பேசி நகரத்தையும்சி
ன்னபின்னமாக வழித்து அளவற்றராட்சதவீரர்களையுங்கொன்றுகடையி
ல்ராசபுத்திரனாகிய வச்சிரவாகுவையும்வெட்டியெறிந்துபோட்டுஎதிர்ப்
பவரொருவருமில்லாமையாற் செயசாலியாய்ப்போகின்றனன், யிவனைச்
சுலபமாக நினைக்கப்போகாது யிறைவனேதேவரீர் யிவனுக்குத்தக்கதெ
ண்டனையைச்செய்ய வேண்டுமென்றுசொன்ன காரணங்களைக்கேட்டமா
த்திரத்தில் யிடிகளைப்போலக்கெற்சித்து அனலும்புகையுமெழப் பெரு
மூச்செறிந்து உதட்டைக் கடித்துக் கொவ்வக்கனியிலும் விழிகள்சிவந்
துதீப்பொறிசிதறத் திரேகமுற்றும் வியர்த்துக் காட்டாக்கினியைப்போ
லமிகவும்கோபித்து யிதனைச்சொல்லுவான்,மந்திரிபிறதானிகளே யாருங்
கோள்நமதுகாவலின்கட்டுப்பாட்டைச்சற்றுமெண்ணாதவனாய்க் கடந்து
போனதுமன்றியில் அரிதிற்பெற்ற பிள்ளையையும் பலசேனைவெள்ளங்க
ளையும்அதம்பண்ணித்தீராதபழியும் துக்கத்தையும்எனக்குக்கொடுத்தது
மல்லாமல்அகண்டமண்டலாதீஸ்பரனாகிய நமதிறைவன்பட்டணத்தையு
ம்பிள்ளைமுதலிய வீரர்களையும்நாசப்படுத்தித்தீரனாகத்திரும்பிவருகின்ற
னன்,இத்தகைய துற்மார்க்கனைக் கண்டவுடன்பிடித்துக்கசகசென்றுமெ
ன்றுதின்று உதிரத்தைக்குடித்து என்கோபமும் துயரமும் போக்கவே
ண்டுமெனச்சபதங்கள்பேசித் தாபரித்துநிற்கப்படாமையால் யாளிமுக
னானவன் சடுதியிற் சிங்காதனத்தைவிட்டிறங்கி உடைவாளை யுருவிக்கொ
ண்டுவெளிப்பட்டவுடன் முன்னஞ்செற்றதுபோகநின்றநால்வகைச்சே
னைவெள்ளங்களும் பெரும்புறக் கடலைப்போல ஆற்பரித்துக்கொண்டு
வந்து பலவீரங்களைப்பேசிச் சூழ்ந்தமுன்னிலையில் அவர்களுடன்கூடி
வேகமாகப்போய்வீரவாகுதேவரை வளைத்துக்கொண்டு இதனைப்பேசுகி
ன்றனன்,அடாபாதகனே நாயில்லாதகாலத்திற் பதியையழித்ததுமல்லா
மல் யிந்தவம்சத்தை விளக்கவந்த புத்திரசிகாமணியாகிய பிள்ளையைத்த
யைதாட்சண்ணியமில்லாமற்கொன்றனை,மேலும்சக்கிராதிபதியாகிய சூர

பதுமன்நகரையும் பலவளங்களையும்மனதுக்கினியபுதல்வனையும் பின்னப்படுத்தினை, யிப்படிக்கொத்த பழிகாறன்மீளவும் யிப்பட்டணத்தைத்தாண்டிஉன்னூரைச்சேரப்போகின்றனையோ அந்தயெண்ணங்களையினிவிட்டுவிடக்கடவை உன்னரியபிராணனைக்கொண்டுபோகநேரும்எமனைப்போலவந்துவளைத்துக்கொண்டேன் யிதோபார் உன்னைநிமைப்போதில்வாட்டித்தென்னாட்டைச்சேர்ப்பேன் அதற்குமுன்னம் உன்னிஷ்டதேவதையை நினைந்துகொள்ளக்கடவை நீமாயஉருக்கொண்டு திக்குதியாந்திரங்களில் ஒடியொளித்தபோதினும் விடமாட்டேன் புத்தியீனனே உன்னாற் கூடியமட்டும்பாரென்று பலபல கொடிய வார்த்தைகளைச்சொல்லக்கேட்டமாத்திரத்தில் வீரவாகுதேவருக்கு அதிககோபம்பிறவேசித்துக்காட்டழலைப்போலச்சிறி நகைத்து யாளிமுகனைநோக்கி யிதனைச்சொல்லுகின்றனர், அடா ராட்சதப்பயலே உன்வார்த்தை யாடுவதிற் பிறையோசனமென்னவிருக்கின்றது ஒருசிரத்தைப் படைத்திருக்கின்ற நமதுவீரபராக்கிரமங்களையும் பனங்குலையைப்போலஅணிபடஆயிரஞ்சிரங்களைப்பெற்றிருக்கின்ற உனது சவுரியங்களையும் சண்டைமுனையிற்பலருங்காணவிருக்கின்றனர், பஞ்சுப்பொதியை யொப்பாகப் பாரித்திருக்கின்ற உன்திரேகத்தினாலாவதொன்றில்லை அடாஅவுணப்பாதகனே நாம்பேசியதுஉண்மையாகும் நீண்டதுதிக்கைகளைப்பெற்றிருக்கின்ற உன்னாயிரஞ்சிரங்களையும் பெருங்காற்றிலடியுண்டிறையுந்தெங்கின்நெத்தைப்போலப் பூமியிற்புரளும்படிக்கு யிந்த வீரவாளினால் வெட்டித்தள்ளி நாய்நரிகள் பிடுங்கித்தின்னச்செய்வேனென்று நந்திதேவர் அங்கிசையில்அவதரித்திருக்கின்ற வீரவாகுதேவர்பேசியமாத்திரத்தில் ஊழிகாலத்திற்சத்தசாகரங்களும்மேருகிரியைச்சூழ்ந் தார்ப்பரிக்கின்றதைப்போலக்கொதித்து யாளிமுகனானவன் தன்னைச்சூழ்ந்துவந்தசதுரங்கச்சேனைகளையும்வீரவாகுதேவர்மீதி லேவியபோது வீரா வேசங்களுடன்வளைத்துக்கொண்டுசிலவீரர்தனுசுகளைக்கோலி,நாகாஸ்திரம்,கருடாஸ்திரம்,வருணாஸ்திரம்- குபேராஸ்திரமுதலியகொடியபாணங்களைக் கரவேகமாகச்செலுத்தவும்-சவண்-கப்பணம்,யிருப்புலக்கை-முசலம்-பிண்டிபாலம்-யித்தகையஆயுதங்களைக்குறிகொண்டு சிலர்விசவும்- சக்கரம்- தோமரம்-கதை - நாஞ்சில்-யிவற்றைப்பலர் விட்டுஆர்ப்பரிக்கவும் மற்றையர்பற்பலவிதப்போர்களைச்செய்யவும் யிவ்விதங்களில் ராட்சதப்படைகளனைத்தும்பொக்கரித்துக்கொண்டேவிய அஸ்திரசஸ்திரங்களானவை ஆலகாலத்தைப்போல எரிந்துபுகைந்துகொண்டு சீறிமேலிட்டுவருவதை வீரவாகுதேவர்கண்டுசெஞ்சலப்படாமல்கோடையிடியையொப்பாகக் கெர்ச்சித்து வாளாயுதத்தைஉருவி மின்னலைப்போலவிதிர்த்து யிடசாரிவலசாரி

யாசப்பாய்ந்து அதிவேகமாய் யிரைந்துவருகின்றபடைகளனைத்தையு
ம்சின்னபின்னப்பட வெட்டியெறிந்து மான்கூட்டங்களிற்புலிநுழைந்
ததைப்போல அந்தராட்சதக்கூட்டமத்தியிற் குதித்துத்—தலைவேறு—தோ
ள்வேறு—மார்புவேறு—புசங்கள்வேறு—கடகமணிந்த கரங்கள்வேறு வீர
கெண்டைசத்திக்குங் கால்கள்வேறு—யிவ்விதங்களிற் சேனாசமுத்திரங்க
ளைக்கலக்கி—அச்சு—மச்சு—குத்துக்கால்—கொடுங்கை—கொடி—கொடைக
ளினால்அலங்கரித்திருந்த தோரணிகளைத் துகள்கண்டு யானைக்கூட்டங்களை
த்தாறுமாறாகக்கண்டித்தெறிந்து தத்தித்தாவிப்பாயும் புரவிப்பந்திகளை
க்கண்டதுண்டமாகக் கண்டித்து யிவ்விதங்களிற் கணப்போதிற் சமுத்
திரத்தைப்போல யிரைந்துபெருகிவந்தசதுரங்கவெள்ளங்களையும் நாச
ப்படுத்தியதை யாளிமுகன்கண்டமாத்திரத்திற் கோபதீபிதனாய் மண்டி
யெரிந்து வில்லைவளைத்துப்பாணங்களைத் தேடிச்செலுத்தப் பொறாமல்
தட்சிணத்தில்வீரவாகுவைப் பற்றிப்பிசைந்து கொல்லத்துணிந்துசுறுத்
து நீண்டிருக்கின்ற வலியகரங்கள் ஆயிரங்களையும் பிடித்தமாக்கிக்கொ
ண்டுயிறுதிகாலத்தில்முழங்கும்யிடியைப்போலவீரன்மார்பிற்குத்தி ஆர்
பரித்தமுன்னிலையில் வீரவாகுதேவர்வடவையைநிகர்த்துச்சிறிதமதுதிரு
க்கரங்களிலொன்றினால் பாதகன்கரங்களைச்சேர்த்துப்பிடித்துக்கொண்டு
மற்றக்கரத்தில்தசத்தகாயமாய் விரங்கும் வீரவாளையுதறி உதிரம்பெரு
க்கெடுத்தோடக்கண்டித்தெறிந்து சொக்கரித்ததறுவாயில் அவ்வுபத்தி
ரவத்துக்குயாளிமுகன்சற்றும் யிளைக்காமல்தீரனாய்ப் பின்னிடைந்தும
ற்றஆயிரங்கரங்களினாலும் வானத்தையளாவநின்றபர்வதங்களைப் பெய
ர்த்தெடுத்து வீரன்மீதில்வீசினன், சவுனகாதிரிஷிகளே, அந்தபாதகன்
முன்செய்திருக்கின்றபராக்கிறமங்களிற் சிலதைச் சொல்லக்கேட்பீராக
பூற்வத்தில் அஷ்டதிசைகளையும் தன்குறாரமாகிய பார்வையில்வென்றட
க்கிப்பொன்னுலகத்துக் கதிபனாகியஇந்திரனை மடக்கிக்கொண்டு செற்
சித்தகாலத்தில் அதற்குபயந்தோடத்துரத்தித்துரத்தியலைத்தனாத்தைப்
படைத்தவன் அப்படிக்கொத்தபாதகன் மேருவையொத்த பற்வதங்கள்
ஆயிரங்களையும் சுழற்காற்றைப்போல நீலமேக வண்ணனாகிய வீரனைத்
துகளாக்கும்பொருட்டு எறிந்தபோது அவைகள் கிறுகிறெனச்சுழன்று
க்கொண்டு அதிவேகமாய்வந்து வயிரத்தையொத்த திரேகத்திற் றாக்கிய
மாத்திரத்தில் வலிகுன்றி நெக்குவிட்டுப் பொடிப்பொடியாய் துகள்ப
றந்துபோயது, உடனேவீரவாகுதேவருக்கு அதிசகோபம் பிறவேசித்
துமலைகளைப் பிடுங்கிய கரங்கள் ஆயிரங்களையும் பளபளத்து விளங்கு
ம்வெற்றிவாளாயுதத்தைக்கொண்டு சங்கரித்துச் சிங்கனாதஞ்செய்தனர்,
அப்போது அந்த கொடியபாதகன் மானமும் நாணமும் உபாதியும்

மனதைவாட்டியலைக்க வருந்தி காட்டழலைப்போலக் கொதித்துச் சிவகுமாரனைப்பிடித்து முறித்தெறியத் துணிவு கொண்டவனாய்த் துவாரம் பொருந்திய நீண்ட துதிக்கைகள் ஆயிரங்களையும் நீட்டித்தாவினான், அவன்கருத்தை வீரவாகுதேவர் தெரிந்து கோபித்தவராய் வலிகுறைந்தும் உலகஅபவாதங்களுக்கஞ்சி வாதாடுகின்ற யாளிமுகன் ஆயிரந்துதிக்கைகளையுடைய தலைகளைத் தெங்கின் குலையைப்போல வெட்டித்தள்ளியகாலத்தில் யாளிமுகன் சிரோசமானது அசைவற்றிருக்கின்ற மகம்மேருவானதுவேர்பறிந்து மறிந்ததைப்போலவும் வானத்தை யளாவித் திசைகளை மூடித்தழைத்திருந்த ஆலமரமானது பெருங்காற்றிற்பட்டு விழுதுமுதலானதை யிழந்து கடையிற் சாய்ந்ததுக் கொப்பாகவும், ஆயிரஞ்சிரங்களையும் இரண்டாயிரங் கரங்களையும் பறிகொடுத்து முண்டமாய்க்கோடையிடியைப்போலக் கதறிக்கொண்டு உதிரவெள்ளம்பெருகத்தக்கதாக மாண்டனன், அவன்விழுந்த அதிர்ச்சியினால் பூமிபிளந்து பக்கத்திற்சூழ்ந்திருந்த சமுத்திரசெலம் மேலிட்டு ராட்சதர்முதலிய பிணக்குப்பல்களைபுரட்டிக்கொண்டுபோய் பிலத்திற்சேர்த்தது, அத்தறுவாயில் பலகவந்தங்கள் நாடகரைப்போலக் கூத்தாடவும், பூதபசாச டாகினிக் கூட்டங்கள் ரணக்களமெங்கும் திரிந்துதிரிந்து கொண்டா ணடித்துத்திரியவும், கழுகு பரந்து காக்கைகள் ரத்தவெள்ளத்தில் முழுகிச் சிறகை யுதறிக்கொண்டுவானத்திற் பந்தலிட்டுலவவும், நாய் நரிகள் ஒன்றுட னொன்றுவாதுகொடுத்த ஊளமிட்டோடவும், உதிரப்பிரவாகமானது ஆற்றைப் போலப் பெருக்கெடுத்தோடிக் கடலைநிரப்பவும், அவ்வெல்லை செக்கர் வானத்தைப்போலக் காட்டியது, அப்போர்க்களமெங்கணும் பிணமலைகளாகக்குவிந்து விளங்கிற்று, அதன்சிறப்பைச் சொல்லிமுடிவதோ யாளிமுகனிறந்த சேதிதெரிந்தவுடன் இலங்கைப்பதியி லிருக்கின்றசகலரும்அழுகின்றஓசை மேலிட்டு சமுத்திரமுழக்கங்களை யடக்கியதுமன்றிவில்அவர்கள் விழிகளிற்சொரிகின்ற நீர்ப்பெருக்கினால்உதிரப்பசுமையைக் கழுவியோடியது.

---

## வீரவாகுதேவர்மீட்சிபடலம்.

சூதபுராணிகர் சவுனகாதி ரிஷிகளுக்கு மேல்நடந்த சரித்திரங்களையுஞ்சொல்லுவதாயினர், இவ்விதமாக யாளிமுகனையும் அவனுடன்அசுரவாரங்களைச்செய்துவந்த சேனாசமுத்திரங்களையும் அதஞ்செய்தபின்பு இருஞ்சூரியனைப்போலப் பிரகாசிக்கும் நீலமேகவண்ணனாகிய வீரவாகு

தேவர் எதிர்ப்பவரொருவரையுங் காணாதபடியால் மின்னலைப்போலவிளங்கும்வாளைப் பொன்மயமாகிய உறையிற்சேர்த்துக்கொண்டு இந்திரபோகச்செல்வங்களை யிழந்திருக்கின்ற இலங்கை எல்லையைக்கடந்து ககனவழிக்கொண்டு வாயுவேகமும் மனோவேகத்தினுமுந்தி திமிதிமிங்கலகிலங்கள் மகரமச்சங்கள் உலவித்திரியும் சலப்பெருக்கையுடையசமுத்திரத்தைத்தாண்டி கந்தமாதன பற்வதம்நிற்கின்ற வெல்லைக்கருகில் விளங்கும் திருச்செந்திற்பதியைச்சேரச் செயசாலியாகிய வீரவாகுதேவர்வருகின்றதைப் பூதவீரர்கள் பார்த்தமாத்திரத்திற்சோடசகலைகளையுடையபூரணச் சந்திரோதயத்தைக்கண்ட ஆழ்ந்தகடலானது சத்தித்தோங்குவதுக்கொப்பாக ஆர்ப்பரித்து மகம்மேருபற்வதத்தைச் சத்தசாகரங்களும்வளைந்து கொண்டதைப்போலச் சூழ்ந்து செய வுச்சாகங்களைக் கொண்டாடிக் குதித்துக் குதித்துக் களிக்கின்றகாலத்தில்அவர்களுக்குத் தலைவராகவிருக்கின்றவர்கள் ஓடிவந்து தாமரைக்கமலங்கள்முகளித்ததைப்போலக் கரங்களைக்கூப்பிக்கொண்டு நெருங்கி ஆனந்த பரவசத்தராய் மனமுருகித் திரோகம்பூரித்து மயிர்சிலிர்க்க விழிகளில் நீர்ததும்ப வாய்குழறத் திரோகங்க ளொன்றும்படிக்குத் தழுவிக்கொண்டு தேவாமுதத்தையுண்டவர்களைப்போலச் சந்தோஷ சாகரத்திலழுந்தினவர்களாய் இதனைப்பேசுகின்றனர், வீராதிவீரனே கடினசித்தமுடைய சூரபதுமன் பட்டணத்துக்குப்போய் காரியசாதகஞ்செய்துக்கொண்டு திரும்பினவர்களொருவருமிருக்கமாட்டார்கள் - ஆதலால் எமதிறைவனே தேவரீர் புசபெலபராக்கிரமங்களை எங்களாற் புகழப்படுவதோவென்று பலவிதங்களிற் துதித்துபசரித்திருக்கின்ற தருவாயில் வீரவாகுதேவரும் அவர்களிடத்தில் மிகுந்தபரிவுடன் ஆதரித்துத் தோழர்களே கொலை பழிபாதங்களுக்கெவ்வளவும் அஞ்சாத சண்டாளராகிய ராட்சதர்கள் வாசஞ்செய்யும் மயேந்திர புரிக்குப்போய்ச் சூரபதுமனைக்கண்டு நமது கற்தன் குறித்தபடிக்கு வார்த்தையாடிவந்தேன் - ஆனால்அவர்களைப்பார்த்த பாதகங்களை நல்லுணர்வைப்பெற்ற உங்களைக்கண்டமாத்திரத்திற்போக்கிமனக்களிப்படைந்தேனென்று பிரியவசனங்களைப் பேசிக்கொண்டிருக்கின்றகாலத்தில் சண்முகப்பெருமாள் சன்னிதானத்திற் காத்திருந்த துணைவர்களெண்மரும் இலக்கரும் வேகமாய்வந்து ஒப்புவமையற்ற புசபெலபராக்கிரமசாலியாகிய முன்னவன் திருப்பாதங்களில் வணங்கினவர்கள் மனவாட்டந் தீர்வதாக வாரியெடுத்து அனைவரையும் விசாலமாகியமார்பிற் சேர்த்தணைத்துச் சுகமாயிருக்கிறீர்களோவென்று க்ஷேமங்களைவிசாரித்தபின்பு பூதவீரர்தம்பியர் சூழ்ந்துவர நடந்துபோய் அமலனாய் சுயஞ்சோதிவடிவாய் லோகநாயகனாய் எள்ளிலெண்ணெயைப்போ

லெங்கும்பரிபூரணமாக நிறைந்து நடிப்பிக்கும் பெருமையினைப்பெற்றிருக்கின்ற குமாரதேவர் வீற்றிருக்கின்றதிருமாளிகையிற்பிறவேசித்து மகாவிஷ்ணு- பிரம்மதேவன்- இந்திரன்- தேவர்கள் - ரிஷிக்கூட்டங்கள்- முதலாகிய பெரியோர்கள் சூழ்ந்துபோற்ற நவரத்தினமயமாகிய திருச்சபையில் விளங்குகின்ற சிங்காதனத்தில் தேவதேவோத்தமனாகிய குமாரசுவாமியாரொழுந்தருளி யிருக்கின்ற காட்சியை விழிகளாரத் தெரிசித்து ஆனந்தபரவசத்தனாய் மனமும் எலும்புங் குளைந்துருகி அன்புபெருகுவதைப்போல விழிகளில் நீர்பொழியச் சரீரம்புளகித்து அதிக ஆவலுடன்செயசெயவெனப் போற்றிக்கொண்டு சமீபித்தமாத்திரத்தில் சூரபதுமன் வம்சநாசஞ்செய்ய வெழுந்தருளி யிருக்கின்ற பாலசுப்பிரமணியதேவர்பாதார விந்தங்களில் மும்முறை வலம்வந்து சேவித்தெழுந்து கரங்களைக் கூப்பிக்கொண்டு வேதவாக்கியங்களினால் துதித்து நிற்கின்ற வீரவாகுவைக் குணநிதியாகிய கர்த்தன் கிருபையாகப்பார்த்தருளி யிதனைப்பேசுவதாயினர், பலகாலங்களாகத் தேவர்களையடைத்துச்சிறையிலடைத்திருக்கின்றசூரபதுமன் சபையைச்சேர்ந்து நாம்பணித்திருந்தபடிக்குக் குறித்துக்காட்டியதையும் அதற்கவன்மறுமொழியாடியதையும் மற்றசரித்திரங்களனைத்தையும் சவிஸ்தாரமாகச் சொல்லக்கடவையெனக் கட்டளையிட்டபோது பத்திவினயங்களுடன் வாய்புதைத்துக்கொண்டுதேவரீரருளிச்செய்தபடிக்குச்சூரன்பின்முசுகுமாரர்களைப்பற்பலவிதங்களில்தெரிவித்தபோதிலும் அவைகளைத் தான்கடத்தேறத்தக்கதாக நினையாமற்கோபித்துத் தேவர்கள் சிறையை ஒருபோதும்விடமாட்டேனென்றதிர்க்கமாகச் சொல்லி விட்டனன், ஊழ்வலியின் பாலனாதலால் அவன்சம்மதப்படிக்குப்பேசினன்- கர்த்தனே யாதொருபிரயோசனங்களுமில்லாமல் திரும்பினேன், இதுசேதிதேவரீர் சித்தமறிகவெனப்பேசியமாத்திரத்தில் எங்கும்பரிபூரணமாக நிறைவெய்திச் சகலமுந்தெரிந்தகுணசம்பன்னராகிய கந்தசுவாமியார் திருநகைகொண்டு ஓ சூரனே நீ செய்துவந்தகாரியங்களில் ஒன்றுஞ்சொன்னவனல்ல அதுகளை யிச்சபையிலிருக்கின்ற சகலருங் கேட்டுகளிக்கும்படிக்கு வெளியிடக் கடவையெனத்திருவுளம்பற்றியபோது கர்த்தனே அஞ்ஞானவானாகிய சூரபதுமன்நகரத்திற்பிறவேசிக்கின்ற தருவாயிலும் திரும்புமுகத்திலும்சிலராட்சதர்கள்தடுத்து வாதாடியதால் தேவரீர்திருவடிகளின் வலிமையினால் அவர்களனைவரையும் சின்னபின்னப்பட துரத்திவிட்டுவந்தேனென்றுசொல்லியபோது சரவணபவன் அவனிடத்துப்பரிபூரணகடாட்சத்தினால்அப்பனே கொடியபாதகராகிய ராட்சதர்கள் மடக்கிக்கொண்டு வாதாடியபோது மிகவும் வருந்தினையோவென்று முதுகைத்தடவிக் கிருபாநோ

க்கத்தையும் பாலித்து-விஷ்ணு -பிற்மதேவன்- இந்திரனாதியரைப்பா
ர்த்துஇதனைச் சொல்லுவதாயினர், கேட்டீர்களோ அனீதமாய் வருத்திக்
கொடியகாவலில் அடைத்துவைத்திருக்கின்ற தேவர்க்கள் சிறையை நீக்கி
விட்டுயின்னஞ் சிலகாலஞ் சுகசீவியாக வாழ்ந்திருக்கக் கடவையெனத்
தூதின்மூலமாகத் தெரிவித்தனம் பாதகனானவன் அதுகளை உறுதியாகந
ம்பிச் சம்மதிக்காமற் சாவதையே முக்கியமாக வெண்ணி நமதுவாக்கி
யங்களைத்தடுத்தனனாதலால் யினிசெய்வதென்னை தடைபடாமல் அந்த
பாதகனாகிய சூரபதுமன்கொண்டிருக்கின்ற மதாங்காரத்தை யடக்கித்
தேவரை மீட்டுக்கொண்டு வரும்படிக்கு நாளைக்கேபோவது காரியமாக
விருக்கிறதென்று சண்முகப்பெருமாள் அருளிச்செய்த நீதிகளைக்கேட்ட
விஷ்ணுமுதலிய தேவர்க்கள் நமதுவருத்தங்கள் முதலாகியகுறைபாடுக
ளனைத்தும்பொடிபட்டு வாழ்ந்தோமென்னுங் களிப்பினால் முகமலர்ந்
துகற்தனே தேவரீர்திருவுளம்பற்றியபடிக்குத்தடைபடாமல் நடத்துவ
தேமுக்கியமாக விருக்கின்றதெனச் சொல்லி மனச்செருக்குட னிருந்த
னர்-இப்படிக்குச் சகலரும் ஆனந்தவாரியில் மூழ்கிச் சந்தோஷித் திரு
க்கின்றதருவாயில் வீரவாகுதேவர் இந்திரனைக்கண்டு சயந்தன் முதலாகி
யதேவர்க்களைப்பார்த்ததையும் அவர்கள் சடீனமாகிய சிறையிலடைபட்
டிருக்கின்ற கொடுமையையும் தாம் அவர்களுக்கு 'தயிரியங்களைச்சொல்
லிவந்த காரணங்கள்முழுமையுஞ் சவிஸ்தாரமாகத்தெரிவித்து யினிதுரி
தமாய் விடுதலையாவார்களென்று அவன்பட்டிருந்த மனவாட்டங்களைப்
போக்கினர், சவுனகாதி ரிஷிகளே- இதுவரையில் வீரவாகுதேவர் மயேந்
திரபுரிக்குப்போய்ச் சூரனைக்கண்டு வார்த்தையாடித் திரும்பிய சரித்திரங்
களைச்சொன்னோம், யினிபுத்திரசோபத்தினாற் சூரபதுமன் துக்கசாகரத்
திற்பட்டு வாடியசம்பவங்களையும் மேல்நடத்திய காரணங்களையுந்தெரி
விப்போமென்று சூதபுராணிகர் துடங்கினர்.

## சூரன்நகர்புரிபடலம்.

நைமிசாரணியவாசிகளே -புசபெலபராக்கிரமசாலியாகிய வீர
வாகுதேவர் மயேந்திரபுரியில் தன்மீதுவந்தெதுத்த அளவற்றசேனாசமு
த்திரங்களைச்சின்னபின்னப்படவாட்டிச்செயசாலியாகிய வச்சிரவாகுவை
வீரவாளினால்வெட்டியெறிந்து வெற்றியுடன்போய்விட்டதைவேகமுள்

ளதாதர்கண்டமாத்திரத்திற் பரதவித்தலறிக்கொண்டோடி நவரத்னம
யமாகிய சபாமண்டபத்தில் விளங்குஞ் சிங்காதனத்தில் வீற்றிருந்து அ
ரசுசெலுத்திவரும் சூரபதுமன் பாதங்களில்விழுந்து புலம்பினவர்களா
ய்ராசபரமேஸ்பரனே தேவரீர் புத்திரனாகிய வச்சிர வாகுவானவன் தூத
னைவதைத்துக்கொண்டு செய்தபோரைச் சொல்லிமுடியாது கடையிற் ச
துரங்கச் சேனைகளையும் மாளக்கொடுத்துத் தானும்பகைவன் வாளினால்
வெட்டுண்டு விழுந்தனனென்னுங் கொடியசேதியைச் சொல்லியபோது
என்செய்வன், நடுநடுங்கித் துக்கசாகரத்தி லழுந்தி மதிமயங்கிச் சோர்ந்
துசிங்காதனத்தைவிட்டு பூமியில்யிழிந்து விழிகளில் நதியைப்போலவூ
ற்றெடுத்துச்செலம்பெருகப் புத்திரனிடத்திருந்தபட்சமானது உயிரை
யலைந்துவாட்டத் தீயும் புகையும் பெருகத்தக்கதாகப் பெருமூச்செறிந்
து பத்துத்தலைகளைப் பெற்றமகனே மோசஞ்செய்தையோ என்செய்
வேன்புத்திரசிகாமணியே யெனப்பலபலவிதங்களிற் பன்னிப் பன்னிப்
புலம்புகின்றதருவாயில் சபையிலிருந்தமற்றப்பிள்ளைகள் மந்திரிபிரதா
னிகள்சுற்றத்தினர் சேனைத்தலைவர்கள் முதலாயினர்விழிகளிற் செலத்தை
ப்பெருக்கிப்புலம்பினர், இப்படிக்குச்சகலரும்வருந்துகின்றதருவாயில்
ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரபதுமனுக்குப் பட்ட
புதேவியாய்பதிவிரதாசிரோமணியாய் கற்புக்கரசியாய்சவுந்திரியங்களில்
லட்சுமிக்குச்சமதையாகவிருக்கின்ற பதுமகோமளை மன்மதனையொத்த
அழகினைப்பெற்ற தன்னாசைக்குமாரன் ரணக்களத்தில்விழுந்த சேதியை
க்கேழ்விப்பட்டவுடன் அனலிற்பட்ட புழுவைப்போலத் துடிதுடித்
துவிழுந்துபுரண்டெழுந்துபரிமளமிகுத்த புஷ்பங்களையணிந்திருக்கு
ம்அளகபாரமானது கலைந்து பூமியிற்புரள மார்பி லறைந்துகொண்டு
கோடுகோடெனக்கதறிப் புலம்பி, ஐஐயோசுந்தரனே என்செய்வேனெ
ன்றுகரங்களைவிரித்து விழிகளில் நீர்பெருகக் கதறி ஐயனே-அப்பனே-
பிள்ளைக்கலிதீர்க்கவந்தபெருமானே - கொஞ்சியவார்த்தைகளைப் பேசிக்
கொண்டு என்முன்னமுலவியிருப்பதைமறந்து எங்கொளித்தனைஎவ்வி
டத்திற்போயிருக்கின்றனை நடுங்கித்திரிந்த எமன்உன்பிராணனை பதைப
தைக்க கயற்றினாற் கட்டிக்கொண்டுபோகத் துணிந்தனனோ பாபிதெய்வ
மேயிப்படிக்குஞ்செய்வையோ நானென்னகுறைகளை முடித்தேன் யிப்
படிக்கும் என்தலையில்யிடிவிழலாகுமோ அப்பனே உன்னரிய திருமேனி
வெட்டுண்டுநிலத்திற்கிடப்பதோ அக்காலத்தில்என்னை நினைந்தனையோ அ
கண்டமண்டலாதிபராகிய உன்பிதாவானவர் சவுக்கியமாகவிருக்கும்
போதுனக்கித்த அபாயம் நேரலாகுமோ அவர் எப்படிக்கு மனந்தரி
த்திருப்பார்புத்திரசிகாமணியே என்செய்தாய் துரிதமாகவந்துஎன்துக்க

த்தைத் தீர்க்கலாகாதோ பிணங்கினையோ ஓடிவாமகனே ஓடிவாவென்று
யிப்படிக்கெல்லாம் யாடிப்பாடிப்புலம்புமுன்னிலையிற் சூரபதுமன்கா
ந்தற்வலிவாசத்திற் றேடிய அவுணமங்கையர் தேவகன்னியர் சித்தமங்
கையர் வித்தியதரஸ்ரீகள் முதலாகியதேவியரும்மிந்தசாவுசேதியைத்தெரி
ந்தமாத்திரத்தில் தங்கள்சேடியர் பாங்கியர் சிலதியர்களுடன் ஓடிவந்
துராசபத்தினியைக்கட்டிக்கொண்டு புலம்பும்போது மந்திரி பிறதானி
கள்சேனைத்தலைவர் முதலியர் மங்கையர்களுங்கூடிப் பேரொழவு கொண்
டாடியகாலத்திலெழுந்த ஓசையானது பெருத்து சங்கீதமேளவாத்திய
ங்களையும் யாழிஞோசையையும் மற்ற மங்களகரமாகிய நாதங்களையும்
அடக்கிமேலிட்டு மயேந்திரபுரியெங்கும் அழுகைக்குரல் பெருத்து அ
ஷ்டதிக்குகளுஞ்செவிடுபடச்சத்தித்தது,யிப்படிக்குயிவர்கள் துக்கசாக
ரத்திலழுந்திவாடியிருக்கச்சபையில்சூரபதுமனும்மனந்தேறுமற்கிலே
சிக்கின்றதறுவாயில் துற்மாற்சனாகிய தற்மகோபனென்னும்பெரியமந்தி
ரியானவன்ராசாதி ராசனருகில்வந்துகரங்களைக்கூப்பிக்கொண்டுஅகண்ட
மண்டலாதீஸ்பரனேகோபியாமல்அடியேன்சொல்லுகின்றதைக்கேட்ட
ருள்க,அரசனே தமது பெருமிதங்களையும் கீற்திப்பிறதாபங்களையும் சூர
த்தன்மையையும் எவ்வளவும்நினையாமற் கிலேசத்தையேமேலிடவிருப்
பதுஉம்மையொத்த தீரனுக்குத்தகுதியோ சிருஷ்டிகற்தனாகிய பிரமபு
த்திரன் காசிபருக்குப்பிள்ளையாகப்பிறந்தீர்மேலும்அளவற்றகாலம்சொ
ல்வதற்கரியதவங்களைமுடித்துலோகநாயகனாகிய பரமசிவத்தின்கடாட்ச
த்தைப்பூற்தியாகப் பெற்றுப் பலவரங்களையுங்கிடைத்தீர் ஆயிரத்தெட்
டண்டங்களையும்வென்று தேவர் முதலானவர்கள் வணங்கிப் போற்றப்
பலகாலம் அரசுசெலுத்திவருகிறீர் அகண்ட சாம்பிறாச்சியச்செல்வங்
களையும் வயிரத்திரோகத்தையும் மாளாதவயதையும் புசபெல பராக்கிறம
ங்களையும் பெற்றுசெகமெங்கும் புகழத்தக்க கீற்தியையும் படைத்தீர்
அப்படிக்கொத்த சக்கிறவற்தியாகிய தேவரீர் யிப்படிக்குப் பதிதனைப்
போலவாடுகின்றது உம்மையொத்தவருக்கடுக்குமோ சத்தசாகரங்களும்
பெருகிச்சொற்கமத்தியபாதலங்களையும் அழித்துமூடிக்கொண்டு அண்ட
ங்களனைத்தையும்பிடித்தழித்த காலத்திலும் சலனமற்றதீற்காயலைக்கொ
ண்டுவாழும்பெருமிதத்தைப் படைத்திருக்கின்ற தேவரீர்பெற்றமனவூக்
கத்தையும் வீரத்தையும்விடத்தகுமோ சகலரும் திருவடிகளிற்பணிந்து
போற்றும்புசபெல பராக்கிறமத்தைக்கொண்டிருக்கின்ற அரசனே ஒரு
பாலனிறந்ததைப் பெரிதாகவெண்ணி ஓவென்றலறிப் புலம்புவையா
கில் திரிமூற்திகளும் நகைப்பார்களே அடிமைத்தொழில் செய்திருந்த
இந்திரனாதிய தேவர்க்கள்பரியாசஞ்செய்துசலபமாகவெண்ணுவர்-மே

ஓம், உமதுகீர்த்தியும்வெற்றியும்மழுங்கும் அதுவேனெனில் யிப்போது உமக்குக்கிடைத்திருக்கின்றவருத்தம்லோகநாயகனாகியசிவபிரானைச்சூழ்ந்துபணிவிடைசெய்திருக்கின்ற பூதப்படைகளினாலும் மற்றசிறந்ததேவர்களாலும் நேர்ந்ததன்று - திரிபுரதகனராகிய பரமன் நேத்திரத்தினம்பெற்ற பாலசுப்பிரமணியனாலுமன்று, அவனேவலின்படிக்கு வந்த ஒருதூதன்செய்த சுலபகாரியத்துக்குச்சகிக்கப்படாமல் விசனப்படுவார்களோ- ஒப்புவமையில்லாத கீர்த்தியைப்பெற்றிருக்கின்ற ராசபரமேஸ்பரனே யிதனைக்கேட்பீராக, தன்னைப்பெற்ற பிதாவானவ ரிறப்பினும்தமையன்தம்பிபிள்ளைகள் மாளவரினும் மாமன் மச்சினன் மற்றுமிராதினசிறந்தசினேகிதர்கள் நாசமடையினும் அஷ்டதிசைகளினும் வெற்றியை நாட்டியிருக்கும் சூரனானவன் அவற்றிற்குட்பட்டுத் தான்கொண்டிருக்கின்றமனவலியைச் சற்றேனும் யிளக்கப் பார்ப்பரோ - பிருத்தவினை நேரிடுமாயின் அதிகவலியும் செயமும்பெற்ற வீராதிவீரனுமபேதமை வாய்ந்திருக்கின்ற ஒருபெண்ணினால்அபசெயப்படுவன், ஆதலால்உன்னுடைக்குமாரனுக்குப் பிரமன் நிச்சயித்திருக்கின்ற ஆயசுமுடிந்தபடியால்தூதனாற் சொல்லப்பட்டனன்-பரமசிவகடாட்சத்துக்கு மேற்பட நடப்பிப்பதற்கு எத்தகையனாலும்முடிவதோ அந்ததூதனால்அணுப்பிரமாணமும்அசைவறியாது யிதுபழியுமல்ல யிப்படிக்கிருக்கின்றபடியால் யினிநடத்தவேண்டிய காரியமேதெனிற், கோபித்துமேலிட்டுவருகின்ற பகைவன்சூட்சியையும் வலியையும்சேனைத்திறத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலத்தெளிவாக விசாரணைசெய்தறிந்துகொண்டு மேல் நடக்கவேண்டிய பிறையெத்தனங்களைத் துரிதமாக மந்திராலோசனை செய்து நிச்சையித்துச்சீக்கிரமத்தில் முடியாமல்மனம்வருந்தி துக்கிப்பதுசூரனுக் கடுப்பதோ அரிய தவங்களைமுடித்து பரமனருளைப்பெற்று சகலரையும்வென்று சூரனென்னும் நாமத்தைப்பெற்ற தேவரீர் கொடியகவலையிற்பட்டுக் கிலேசிப்பது உமது பெருமிதத்துக் கடாதாகையால் யினிவிசன மென்பதைவிட்டுவிடக்கடவ யென்று தருமகோபன்பல விதங்களில் தேற்றியமாத்திரத்தில் அவுணராசன்புத்திரசோபத்தை நீங்கியெழுந்து துக்கத்தையடக்கிப் பக்கங்களில் எமபடரைப்போல நிற்கின்ற தூதரைப்பார்த்து யிதனைச்சொல்லுவான், நமதுதிருக்குமாரனை அஞ்சாமற்கொன்றும்அகண்டயிஸ்பரியங்களைப்பெற்றிருந்தயிந்தபட்டணத்தையும் யிடித்தழித்த பலசாலியாகிய தூதன் யிவடம்விட்டுப்போனதையாவராகிலுங் கண்டீர்களோ கேழ்விப்பட் டிருப்பீர்களோவிபரமாகத்தெரிவிக்கக்கடவீரென்றுகேட்டபோது- சிலதூதர்சேவித்து அரசனேயித்த மகாசபையில் பயமில்லாமல் வந்துதேவரீரையும் மதியாமல்

தான்வந்ததாதின்காரணங்களைச்சொல்வதன்றியிற்றகாதகாரியங்களைநட த்திச்சபையைக்கடந்துபோனபின்பு தன்னைவளைத்தஅளவற்றசயின்னிய ங்களையும் ராசபுத்திரனையுங்கொன்றவன்தனக்கெதிரில்யாவனையுங்காணு தவனாய் மயேந்திரபுரியைக்கடந்துஇலங்கையைநோக்கிச்சென்றனன், அதைநாங்கள்கண்டனமென்றும் மேல்நடந்தகாரணங்கள் தெரியாதெ ன்றும்விண்ணப்பஞ்செய்தனர், இச்சேதியைத்தெரிந்த மாத்திரத்திற்சூ ரபதுமனானவன் தன்னருகிற் காத்திருக்கின்ற பரிசனனைப்பார்த்து அதி வேகமாயோடி உலகங்களைச் சிருஷ்டித்துவருந் திசைமுகப்பிரமனைக்க ணப்போதில் அழைத்துவரக்கடவிர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தி ல் அவர்கள்சேவித்து ராசாதி ராசனே யிப்புவனங்களைப் படைக்கும்பி ரமன்-இந்திரன்-விஷ்ணு முதலானதேவர்க்கள் திருக்கயிலையைக்கடந் துவந்திருக்கின்ற பாலசுப்பிரமணியரைச்சூழ்ந்து உம்மை மதியாமல் பயமற் றிருக்கின்றனரெனப் பலர்சொல்லக் கேட்டோமெனத் தெரிவி த்தகாலத்தில் நல்லகாரியமெனக் கோபித்து அவர்கள் செருவத்தைசீக்கி ரமத்தில் அடக்குகின்றனன்,நீங்கள்துரிதமாய் மற்றொரு அண்டத்துக் கோடிஅவடத்திலிருக்கின்ற பிரமனைப்பிடித்துக் கொண்டுவேகமாய்வ ரக்கடவிர்களெனப்பணித்தமாத்திரத்தில் மகாபாக்கியமெனப்பணிந்து காற்றினும் வேகமாகப்பறந்து யிதற்கடுத்த அண்டத்திற் சிருஷ்டித்துக் கொண்டு ரிஷிகள்முதலாகிய பெரியோர்கள் போற்றிச்சூழப்பதுமாசன த்தில்வீற்றிருக்கின்ற பிரமனைக்கண்டு அரசன்பணிவிடையைத்தெரிவித் துக்கரத்தைப்பற்றியிழுத்துவந்து சூரபதுமன்முன்னம் நிறுத்தினர்,அ க்காலத்தில் சிருஷ்டிகர்த்தனை அருகிலழைத்துப் பிரமனே அழகுகுலைந் தழிந்துபின்னப்பட்டிருக்கின்ற யிந்தபட்டணத்தைப் பழையபடிக்கு ச்சகலசெல்வவளங்களும் பெருத்திருக்கும்படியாக நிருமித்துவரக்கட வையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் ஐயனே, உமது நினைவின்படிக் குக்கணப்போதில் முன்னினும் பதின்மடங்கு சீர்பெறச்செய்யக் கட வனெனச்செலவுபெற்றுப்போய் உலகங்களைப்படைக்கும்விதியைக்கரு திசிருஷ்டித்த விதமேதெனில், பட்டணத்தைச்சூழவரப்பொன்மயமாகி யமதிலைவானத்தையளாவிநிற்கும்படிக்கெழுப்பி நவரத்தினமயமாய்அ ண்டப்பித்திகையை யுராயும்உன்னதமும் பலநிலைகளையும் பெற்றிருக் கின்றகோபுரவாயல்களைப் படைத்து பெரும்புறக்கடலையொப்ப ஆழ்ந் துவிசாலமாக விருக்கின்ற அகழியைத் திருத்திப் பொன்னினாலும் ம ணிகளினாலும் பளிங்கினாலும் சந்திரகாந்தத்தினாலும் மரகதங்களினாலும் சோடித்துப்பற்வதங்களைப்போலத்தோன்றநின்றமாடமாளிகைமண்ட பங்கள் அரமனை உப்பரிகை சித்திரக்கூடங்கள் முதலாகியசிறப்புகளை நி

ண்டதெருக்களில் யிருபாரிசங்களினும் படைத்துவீதிகளைத்திருத்தி கா
மனுங் காமுறும்படியாகிய புஷ்பவினங்கள் பலகனிவகைகள் நிறைந்தி
ருக்கின்றசோலைகள்தோப்புகள் யிவற்றினைச்செய்தமைத்து விசாலமா
யமதுரமாகிய செலப்பெருக்கையுடைய பொய்கைகள் தடாகங்கள்சித்தி
ரக்குளங்க ளாதியதுகளைப் படைத்து அரசன் வீற்றிருக்கின்ற அரமனை
ஆஸ்தானமண்டபத்தை வெகுவினோதங்களாகச்சோடித்துக் கண்டவர்க
ள்மனதையும் விழிகளையுங் கிறிகிக்கும்படியாக பற்பலவளங்களை நிறை
த்தமுற்றியவுடன் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரப
துமனைக்கண்டு ஆசீர்வதித்து அரசனேஉமது மனதின்படிக்கு எதாப்பி
றகாரம்யிப்பட்டணமுழுமையும் நிருமித்து அரமனையையும் சீர்படுத்
தியாயிற்றென்று அறிக்கையிட்டமாத்திரத்திற் சூரன்வெளிவந்து முழு
துங்கண்ணோட்டமிட்டு அவைகளிருக்கின்ற சித்திரவிசித்திரவினோதச்சி
றப்புகளுக்குமெச்சி பிரமனைப்புகழ்ந்துமந்திரிபிறதானிகள் சேனைத்த
லைவர்கள் முதலாகியசகலரும்போற்றிச் சூழச் சிரோ ரத்தினங்களினாற்
சோடித்து விசாலமாகவிளங்குஞ் சபாமண்டபத்திற் சேர்ந்து பூச்சக்கி
றக்குடைகவிந்திருக்கும் சிங்காதனத்தில் வீற்றிருந்து - வெண்சாமரை
கள்- ஆலவட்டங்கள்- அருகுகள் முதலியராசசின்னங்கள் பெருத்தசைய
பட்டுவர்புகழ வித்துவச்சனங்கள் கொண்டாட யிவ்வொலகத்தி லிரு
ப்பவன்பிரமன்மீது விழிகளைச்செலுத்தி நல்லகாரியம் உன்னுடையசா
மாற்றியங்களுக்குயாவரும் நிகரில்லையெனக்கொண்டாடி பழையபடிக்
குநீயிருக்கப்பட்ட அண்டத்தைச்சேர்ந்து பணிவிடைகளிற்பிசகில்லாம
ல்நடத்திவரக்கடவையெனச்சொல்லியபோது நல்லதென்றுசெலவு பெ
ற்றுப்போய் தன்பதவியைச்சேர்ந்து பிரமனிருந்தனன்,

## சூரன்அமச்சியற்படலம்.

சூதபுராணிகர்சவுனகாதிரிஷிகளுக்கு- மற்றச்சரித்திரங்களையுஞ்
சொல்லுவார், மேற்குறித்தபடிக்குச்சூரபதுமன் சிங்காதனத்தில் வீற்றி
ருந்து அரசுசெலுத்திவருகின்றதறுவாயில் முன்னம்- அரசன்கட்டளையி
ன்படிக்குச்சென்றதூதர்கள் மனோவேகத்தினுங்கடுகிச் சமுத்திரத்தைக்
கடந்து திருச்செந்திற் பதியைச்சேர்ந்து பூதவெள்ளங்களின் பெருமித
ங்களையும் படைத்தலைவர் வீரத்தையும் - சுப்பிறமணிக்கடவுளினது மகி

மைகளையுங்கிரமமாகத் தெரிந்துக் கொண்டவர்களாய்க் கடுகிவந்து மயேந்திரபுரியைச்சேர்ந்து விசாலமாகிய சபாமண்டபத்தில்வீற்றிருந்து ராசகாரியங்களை நடத்திவரும் சூரபதுமனைத்தெரிசித்தவுடன்வணங்கிப் போற்றியிதனைச்சொல்லுவதாயினர், ஆயிரத்தெட்டண்டங்களையும் வென்றுசகலரையும்ஏவல்கொண்டு அகண்டஅயிஸ்பரியச் சாம்பிருச்சியங்களையனுபவித்திருக்கின்ற ராசாதிராசனே கேட்டருள்க, தேவரீர்கட்டளையின்படிக்கு விரைவிற்சென்று எதிராளிகளின் காரணகாரியங்களைத்தெரிந்துவந்ததைச் சவிஸ்தாரமாகச் சொல்லுவோம் - ஒன்றுபத்து நூறு ஆயிரம் சிரங்களையும் அதற்கிரட்டி வலியகரங்களையும் அதற்கடுத்த காத்திரமுள்ள தேகங்களையும் பெற்றிருக்கின்ற இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகளும் அவர்களுக்குத் தலைவர்களாய் சிங்கத்தைப்போன்ற வலியும்சூரமுமுள்ளசூரர்கள் நூற்றெண்மரும் சொல்லுதற்கரியபுசபெலபராக்கிரம சாலிகளாய்வீரத்தன்மை பொருந்திய தம்பியர் லட்சத்தொருபதின்மரும் - மகாவிஷ்ணு - பிற்மதேவன் - இந்திரனாதியதேவர்க்கள்ரிஷிகள்முதலானவர்கள்சூழ்ந்து போற்றத்தேவாதிதேவனாகிய சிவபிரான் நுதல்விழிகளினளித்தபாலசுப்பிரமணியதேவர்திருக்கயிலையைக்கடந்து பூலோகத்துக்குவருமார்க்கத்தில்நேர்ந்ததேவரீர் தம்பியாகிய தாருகாசூரனையும் மாய்கைக்கரசனுப் நமதுபகைவர்களை யலைத்திருந்த கிறவுஞ்சபர்வதத்தையும் அளவற்றவெள்ளம் அவுணவீரரையும வெற்றிவேலாயுதத்தினாற் பிளந்து நும்சப்படுத்தினவனாய் யிப்போது கடற்கரையில்விளங்கும்திருச்செந்திற்பதியிற்சேர்ந்தவுடன் மந்திராலோசனை செய்துஒருதூதனைச்செலுத்தி தேவரீர் மனக்கருத்தை யறிந்தபின்பு சண்டைகொடுக்கவருவதாகத் தீர்மானித்துக்கொண்டவராய் செயசாலியாகிய ஒருவனைத்தூண்டினர், அவன்கடலைக்கடந்து வரும்போது வழியில்நேர்ந்தஇலங்கைப்பதியைச் சின்னபின்னப்பட அதலகுதலஞ்செய்து அதிற்காவல் கொண்டிருந்த யாளிமுகன் பிள்ளையையும் அளவற்ற அவுண வீரர்களையுங்கொன்று சென்றவன் மீளுமுன்னிலையில் தமது சேனைத்தலைவனாய்இலங்கையைக் காவல்கொண்டிருந்த யாளிமுகனையும் வளைத்துக்கொண்டு வாளினாற்கண்டித்தெறிந்து மீதியாகவிருந்த சேனைகளையுங் கொன்றழித்துத் திருச்செந்திலைச்சேர்ந்தனன், இனிமேல்வெற்றி வேலாயுதன்சகலசேனைகளுடனும் பிறையாணப்பட்டுச்கடலைக் கடந்துயிவடம்வந்து ராசாதிராசனாகியதேவரீருடன்சண்டைகொடுக்க நினைந்திருக்கின்றனன்,இப்போதுநாங்கள் சொல்லிய சேதிகளனைத்தும் எதார்த்தமாகும் கர்த்தனே- யினிதாமசப்படாமல் யிதற்குவேண்டும் பிறையெத்தனங்களைமுடிக்கவேண்டும் பகைவரைச் சுலபமாக வெண்ணப் போகாது அதிக

வல்லமைசாலிகளாகக் காணுகின்றதென்று தூதர்கள்பேசியதைக்கேட்டு
வுடன்சிலதூதரைப் பலதிசையிலும் தூண்டி தன்மனதுக்கினிய தம்பியா
கியசிங்காமுகாசுரனையும் திக்குதீபாந்திரங்களி லிருக்கின்ற சேனைத்தலை
வர்களையும்மதியூகிகளாகவிருக்கின்றசுற்றத்தினரையும்முதியோர்களையுந்
தருவித்தகாலத்தில்அவர்களனைவரும்அதிவேகமாகவந்து சேர்ந்தரசன்
பாதாரவிந்தங்களிற்சேவித்து அரசன்விடையைப்பெற்று பக்கங்களிற்
சூழவிருந்தனர், அப்போதசூரபதுமனுக்கு அதிககோபம்பிறவேசித்து
வடவாமுகாக்கினியைப்போலப்பொங்கி அனலும் புகையும் பெருகத்த
க்கதாகப்பெருமூச்செறிந்து சபையிலிருக்கின்றசகலரையும் பாத்துயித
னைச்சொல்லுவதாயினன், நமது சென்மப்பகைவர்களாகிய தேவர்க்கள
னைவரையும் பற்றிவருவித்து நீங்குதற்கரியகாவலில் நான் வைப்பித்திரு
ப்பதை இந்திரன்தெரிந்து திருக்கயிலைக்குப்போய்ச்சிவபிரானைத்தெரி
சித்துவணங்கித்தனக்கடுத்த துக்கவருத்தங்களை முறையிட்டுக்கொண்ட
த்தின்பேரில் பரமனிரங்கி நுதல்விழிகளின்மூலமாக ஒருபிள்ளையைப்ப
டைத்துவேல்முதலிய படைகளைப்படைத்துக் கொடுத்துப் பலவெள்ள
ம்பூதரைக்கூட்டி நம்மைவென்று தேவர்க்கள்சிறையை நீக்கும்படிக்
குக்கட்டளையிட்டமாத்திரத்தில் அந்தகுழந்தையானதுகயிலையைக் காவ
ல்கொண்டிருக்கும் நந்திகணத்தலைவர் முதலானவர்களுடன் நமக்குப்ப
யந்தொளித்துத்திரிகின்ற மகாவிஷ்ணுபிரமதேவன் இந்திரனாதிய தேவ
ர்க்கள்போற்றிவரப் பூமியில்வருமார்க்கத்தில் நேர்ந்தநமது மனதுக்கினி
ய துணைவன் தாருகனையும்மாய்கைக்கரசனாகவிருந்த கிரவுஞ்சனையும்சத்தி
வேலினாற் பிளந்துகொன்று அப்பதியிலிருந்த ராட்சதவெள்ளங்க ளனை
த்தையும் நாசஞ்செய்துவந்து யிப்போது சமுத்திரக்கரையி லிருக்கின்
றதிருச்செந்திற் பதியென்பதிற் சேர்ந்து அந்தபாலனானவன் ஒருதூத
னைநம்மிடத்துக் கனுப்பினன் - அவன்கடலைக்கடந்துபொன்மயமாக
விளங்கியிருந்த இலங்கையையழித்துச் சமுத்திரத்திற் சேர்த்து அதை
க்காவல்கொண்டிருந்தயாளிமுகனையும்பிள்ளையையும் அளவற்றஅவுணவீ
ரர்களையுங்கொன்றுபோட்டு யாவரும் மனதிலும் நினைப்பதற்கரிய கொ
டியகாவலையுடைய யிந்தப்பட்டணத்தில்வந்து சற்றும் பயமில்லாமல்
நமதுசபையிற்குதித்து மாய்கை வல்லபத்தினால் ஒருசிறந்தசிங்காதன
த்தைத்தருவித்து எனக்குமேலாயுளுக்கார்ந்து மரியாதையில்லாமற்பே
சியகாரணங்களைக்குறித்து நான்கோபித்தேவிய அவுணவீரரை என்கண்
முன்னங்கொன்று வெளிப்பட்டுப்போய் நமதுசூரத்துக்கும் ஆக்கி
னைக்கும் எவ்வளவும் அஞ்சாமற் சகலபுவனங்களினுங் கொண்டாடத்த
க்கவளங்களைப்பெற்றிருக்கின்ற யிந்தப்பட்டணமெங்கும் சின்னபின்னப்

பட்டுப்போக யிடித்தெறிந்து நமது திருச்சபையையும் அதம்பண்ணி நமது கட்டளையின்படிக்குப் போயெதுத்த அவுணவீரர்க ளனைவரையுஞ்சாடியதுமல்லாமல் நமதுகுமாரன் வச்சிரவாகுவையும் சற்றுமிரக்கமில்லாமற் கண்டித்தெறிந்துபோட்டுப் போய்விட்டான் அத்தமவாயில்யித்தபட்டணம் பட்டபாட்டை யென்சொல்வேன் எங்கும்பிணமலைகளாய்உதிரப்பிரவாகமோடிப்புரசெனங்களனைவரும்பலதுன்பங்களிற்பட்டுவாடியலைந்தனர், அளவற்றவெள்ளம் படைகளிறந்தனர், இதனால்பெருகாலமாய்அரசுசெலுத்திவந்த நமதுகீர்த்தியும் பலரையும்வென்ற சவுரியங்களும் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய் அகண்டயிஷ்வரியங்களையனுபவித்துவந்த பிறதாபங்களும் மங்கிப்போயது, மேலும் தூதாகவந்து யிக்கோலங்களைச்செய்த ஒருவனைப்பிடித்து அரியகாவலிற்படுத்தினவனுமன்று பின்னப்படுத்தி விடாமலும்போனேன் அல்லதுஎன்கோபந்தணியப்பிசைந்துசொல்லாமலுந்தூதனென்று தருமத்தையே பாராட்டிமோசம்போனேன் யிதனாலுண்டாகியவசைமொழியை இவ்விதமென்ச்சொல்லி முடிவதோ யிவ்வித அனர்த்தங்களையெல்லாஞ்செய்த தூதன் னமது நகரத்தைக்கடந்துபோய்இலங்கையிற்புகுந்து அவடத்திற்காவல்கொண்டிருந்தசேனைத்தலைவன் யாளிமுகனென்பவனைவாளினால்வெட்டியெறிந்து அவன்பிள்ளைமுதலியசேனைகளையும்சின்னபின்னப்படக்கொன்று கடலைக்கடந்து செயசாலியாய்த் திருச்செந்திலை நோக்கிப் போயினனெனக்கேழ்விப்பட்டனம்யினிகாளகண்டமூர்த்தியாகியசிவபிரான்பிள்ளை பாலசுப்பிறமணியன் பிறையாணப்பட்டுப்பூதப்படைகள் துணைவருடன்சமுத்திரத்தைத்தாண்டியிவடம்வந்துநம்முடன்சண்டைகொடுக்கவெத்தனித்திருப்பதாகக்காணுகின்றது,இச்சேதிகளனைத்தும் நாமனுப்பியதூதர்கள் தெரிந்துவந்து அறிக்கையிட்டிருக்கின்றனர், இதுகளில் எவ்வளவும்பிசகிராது உண்மையாகவே நம்பத்தக்கது யிவர்கள் வரவின்காரணங்களைத் தெரிந்தவுடன் மேலிட்டுப்போய்ச் சிவகுமாரனாகியபாலசுப்பிறமணியனையும் அவனுக்குத் துணையாகவந்திருக்கின்றசேனைத்தலைவரையும் பூதவெள்ளங்களையும்-விஷ்ணு-பிரமன்- இந்திரன்முதலாகியதேவர்க்களையும் மடக்கிக்கொண்டு கொடியபோரைச்செய்து சின்னபின்னப்பட வாட்டித்துரத்தி கணப்போதிற் செயத்துடன் மீளநினைந்தனன், ஆனால் ஆயிரத்தெட் டண்டங்களையும்வென்று சகலரையும் எவல்கொண்டுஒருவரும் நிகரில்லாமல் அரசுசெலுத்திவந்த சூரனாகியயான்யிக்காலத்திற் பசாசங்களுடனும்பாலனுடனும் எதுத்துவென்றபோதிலும்என்னெதிர்த்தவனுக்கு வீரமும் புகழுமல்லவெனநினைந்துயிதுபரியந்தம்தாழ்த்தேன்,இவையல்றியும் புசபல பராக்கிறமங்களையும் தந்

திரவியாயங்களையும் சேனைகளினுதவிகளையும் மகாயிஸ்வரியச்செல்வங்க ள்முதலியவளங்களையும் பெற்றிருந்தபோதினும்பெரியோர்களாகவிருக் கப்பட்டவர்கள் சத்துராதிகள் மேலிட்டுவருவதாகத் தெரிந்தாலும் கோ பித்துத்தட்சிணத்திற் சண்டைக்குப்போகலாகாது அப்போது தலக்கிதந் தேடியிருக்கின்றதுணைவர் மந்திரிபிறதானிகள் தன்மரபிலிருக்கின்றமுதி யோர்கள்தீர்க்கயோசனைபரராகிய சினேகிதர்முதலாகியவர்களைச்சேர்த்து ப்பகைவன்திறங்களை விசாரணைசெய்தபின்பு மந்திராலோசனையில் பல ருக்குஞ்சம்மதமாகிய காரியமொன்றினைத் தீர்மானித்துக்கொண்டுகால தாமசஞ்செய்யாமல் அவ்வாறேமுடிப்பர் - இது சக்கிறவற்திகளாகவி ருப்பவருக்குத் தகுதியாகும் மேலும் நீதிநூலினும் யிப்படிக்கேசொ ல்லுகின்றது, ஆதலால்உங்களனைவரையுந் தருவித்தனன், இதுகளனைத்தி னையுஞ் சீர்தூக்கிப்பரிசோதித்துத் தீர்க்கமாய் ஆலோசித்து மேல்நடத் தவேண்டியதொன்றினைச் சொல்லும் படிக்குக் கேட்டுக் கொள்ளுகின்ற னன், துரிதமாக ஒருகருமத்தைக்குறிக்கக் கடவீர்களென்று ராசாதிராச னாகிய சூரபதுமன்பேசியமுன்னிலையிற் சபையி லிருக்கின்றவர்களில் ம திநுட்பமுளாகவிருக்கப்பட்டமந்திரிகளில் தீர்க்கயோசனைபரனாகியமேதிமா முகனென்பவன்காலகாரியங்களை நிதானித்துத்தனக்குத் தோற்றியபடிக் குயிதனைச்சொல்லுவான்-எமதரசனே மனம்பொறுத்துக்கேட்டருள்க பற்பல மாயவித்தைகளைக்காட்டி ரிஷிகள் தேவர்க்கள் முதலானவர்களை மயக்கியலைத்து வாட்டியிருந்த வலிய கிறவுஞ்சபற்வதத்தையும் சகலனை யும் புறங்கண்டு விஷ்ணுவையும்வென்று அவனேவிய ஒப்பற்ற சக்கிற த்தையும் கழுத்தணியாகத்தரித்திருந்த புசபெல பராக்கிறம சாலியாகிய உமதுசகோதரன் தாருகாசூரனையும்வீரசிங்கங்களையொத்த படைத்தலை வரையும் சேனைவெள்ளங்களையும் கணப்போதில் நாசஞ்செய்தவீராதிவீ ரனைப்பாலன்பாலனெனச்சொல்லுவது பேரறிவின்பாலதன்று, மேலுந் துயிரியத்தில் ஒப்பற்றதாருகவீரனையும் மற்றவர்களையுஞ் சட்டைபண்ணு மற்செயிக்கவல்ல ஆண்தன்மையையும் சூரத்தையும் பெற்றிருக்கின்றவீ ரனைச்சற்றும் வலியற்றவனென்றும் அத்தகையவீரனுக்குதவியாக வந்தி ருக்கின்ற படைத்துணைவரை பசாசங்களென்றும் யிகழ்ந்து பேசுவது செல்காலம்- நிகழ்காலம் - வருகாலமெனச்சொல்லநின்ற மும்மையின் திறங்களைத்தெரிந்தாராய்ந்துபார்க்கத்தக்க பேரறிவினருக்கழகோ, இது வுமல்லாமல் அந்தபகைவன்சேனைகளி லொருவனாகிய தூதன்தீரனாய் அ லைகளைமோதிப் பரந்திருக்கின்ற சமுத்திரத்தைச் சுலபமாகக்கடந்து ரா சதானியாய் அளவற்றகாவலைக் கொண்டிருக்குமி யிந்தப்பட்டணத்தைச் சின்னபின்னப்பட்டு உருத்தோற்றுமழித்துக் கணக்கிறந்த அவுணவீ

ரர்களைக்கொன்றதுமல்லாமல் உமதாசைக் குமாரனாகிய வலிக்கொப்பற்றவச்சிரவாகுவையுங் கண்டித்துத் தேவரீரையும் மதியாமற்பேசிப்போயினகள்ளனை அபலனாகியதூதனென் றிகழ்வதுகல்விவான்களுக்கு ஞாயமோ அந்ததூதனை அழகியசிறகினைவாய்ந்த கருடன்மீதாரோகணித்துலவும்மகாவிஷ்ணுவும் -பிற்மதேவனும்- தேவர்களுக்கரசனாகிய- இந்திரனும் ஏகஉருக்கொண்டுபோந்ததாக நினைப்பதல்லது அவன்வந்தகாரணத்தையே குறிக்கப்படுமோ, இஃதன்றியும்திரிகர்த்தனாகிய மகாவிஷ்ணுவைச் செயித்ததல்லாமற் புவனங்களையுந் தன்வயப்படுத்தியாண்டவீராதிவீரனாகிய தாருகனையும் யிந்தமாபுக்குப் பலவிதங்களிலும் உதவியாய் உங்கள்பகைவராகிய தேவர்க்களாதியானவர்களை வஞ்சித்துவாட்டியிருந்த கிறவுஞ்சனையும் பலவெள்ளம்ராட்சதவீரரையுந் திரிபுரதகனனாகிய பரமசிவகுமாரன் பாலசுப்பிறமணியன் கொன்றானென்ற சேதிகேட்டமாத்திரத்தில் தேவரீர்கோபித்துப்போய் அந்தபாலனையும் மற்றவர்களையுங் கண்டதுண்டப்பட வாட்டியாவது அல்லது அதற்குத் தக்க செயசாலிகளாகிய அவுணவீரரையாவதுசெலுத்தித் தம்பியைச்செற்றபழியைத்தீர்த்துக்கொண்டவருமன்று அசாரிசமாய் யிப்படிக்குப் பிறமாதம்விளைகின்றவளையில் யாதொருயோசனைகளையுஞ் செய்யாமற் சும்மாயிருந்துவிட்டீர் யிதற்கொருதிருஷ்டாந்திரத்தைச் சொல்லக்கேளும் அக்கினிப்பரிசஞ் சிறிதாகக்கண்டபோதே அறிஞராகயிருப்பவர்கள் சுலபமாகவெண்ணாமற் பெரிதாகமதித்துத் தட்சிணத்தில் அதற்கு வேண்டிய முயற்சிகளைச்செய்து மீறவொட்டாமல் அவித்து மனங் களித்திருப்பர், அல்லதுசிறிதுபோது தாழ்ப்பாராயின் அந்தசிறுபொறியே பிறபலமாய்மேலிட்டு பெருசீக்கிரத்தில் சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தையெல்லாந்தகித்துச் சாம்பலாகவழித்துவிடும் அவ்வாறே விவேகசாலிகளாயிருப்பவர்கள் தமக்குநேர்ந்திருக்கின்ற சத்துருவானவன் பலவிதங்களிலும் பலயீனனாகவிருந்தபோதினும் அவர்களைத்தமக்குமேலாகியவீரராகவும் தமதுசேனைகளுக்குமீறியிருக்கின்றபடைத்துணையைப்பெற்றிருக்கின்றவராகவும்பின்பலங்கள் பலவற்றைப்படைத்திருப்பவராகவும் கருதிச்சாமபேததானதண்டமென்னுஞ் சதுற்வித தந்திரவுபாயங்களினாற் கூடியவளையிற் பிறையெத்தினங்கொண்டு சுப்பட்டமாகக்களைந்துபோட்டு மனச்சஞ்சலமற்றிருப்பர்- இதற்கொருகாரணத்தைக் காட்டுவேன் ஒருவனுக்குத்துன்பம் நேரத்தக்க யிடத்தில் முளைத்த சிறுசெடியைக் கண்டபோதோ பரிகரித்துவிடாமலிருந்தால் சிலதினத்தில் நிகத்தினாற் கிள்ளிப்போடத்தக்கது விறிபருத்த விருட்சமாய் வேர்களைப்பெருக்கி அவன்வாசஞ்செய்திருந்த கிறகத்தைப்பேர்த்துத்தள்ளிவிடும் மேற்குறித்த கா

ரியங்களை நிதானித்து நடத்துகொள்ளவல்லவர்களுக்கு தங்களால்அசாத்தியமாகிய காரியங்களொன்றும் நேரவறியாது அரசனே மகதயிஸ்வரியங்களையனுபவித்தச் செருக்கியிருக்கின்ற மமதையினால் அந்தந்தகாலங்களிற் செய்யவேண்டியகாரியங்களை முடியாமல்மறந்து தமக்குப்பலவிதங்களிலும் உதவியாகவிருந்த துணைவனைக்கொன்றவொருவனை எவ்வளவென்றிகழ்ந்து யிவடத்தில்வாழ்ந்திருப்போமாகில் அந்தநஷ்டம் நம்மைவிடபிறனைச்சேரவறியாது, ஆதலால்மனதுக்குவித்தியாசங்கண்டவுடன் பாலசுப்பிரமணியன்பேரிலெடுத்துப்போய்ச் சண்டைசெய்து வாட்டித்துரத்தி யிருப்பையாகில் தேவரீர்வாசஞ்செய்திருக்கின்ற யிந்தயட்டணத்துக்குத் தூதன்வருவனோ யித்தகையநஷ்டங்களும் அவமானமும்நேருமோ அப்போதே தகுந்தயோசனையைச்செய்து தட்சிணத்தில்நடத்தவேண்டுங்காரியங்களை முடியாமலிருந்தீர் யிந்தஅசாரிசத்தினுற்செயசாலியாகிய பிள்ளையைமாளக்கொடுத்துச் சலனமற்றமயேந்திரபுரமும்பார்க்க பதக்கொறைபாயழிந்ததென்று உம்மையொத்த சூரன்மனம்வருந்தலாச்சுது புசபெலபராக்கிரம சாலியாகியதிருக்குமாரனிறந்தத்துக்கும் செல்வவளங்களைப் பெற்றிருந்த நகரமதப்பட்டுப்போனதற்கும்காரணத்தையோசித்துப்பார்க்குமிடத்தில் அந்தந்த காலங்களில் நடத்தவேண்டுவதைத் துரிதமாகத்தேடாமல் மகதயிஸ்பரியச் சம்பத்தில்மூழ்கி மயங்கியிருந்தபடியால் நேர்ந்ததல்லது வேறுமுண்டோவதோதோற்றுமல்முடிந்துபோனகாரியங்களை நினைந்துநினைந்துயினியேசிவருந்துவது தெரிந்தவர்களுக்கழகன்று ஆதலால் மிஞ்சிநடந்ததுபோகயினிசீர்படுவதற்கு அடியேனுக்குத் தோற்றியமாற்கமொன்றைச்சொல்லக்கேட்பீராகத், துரிதமாய்ச் செயசாலிகளாகிய அவுணவீரர்களுடன் பலவகைச் சேனைவெள்ளங்களைக் கூட்டிக்கொண்டுபோய் சொன்றைமாலையிறைகெங்கையைத்தரித்திருக்கின்ற சடாமண்டலதாரியாகிய சிவபிரான்பெற்றபிள்ளையைவளைத்துக்கொண்டு அவனுக் குதவியாகவந்திருக்கின்றவீரரையும்பூதப்படைகளையும் சின்னபின்னப்பட்டுப்பறக்கும்படிக்குச்சாடி செயங்கொண்டு திரும்பி சவுக்கியத்தி லிருக்ககடவீர் நேத்தியைப்போலவே யினிஅசாரிசமாக விருக்கலாகாதென்று பலபலவிதங்களைக்காட்டி மேகமாமுகனென்னும் மந்திரிசொன்னகாரியங்க ளனைத்தையும் பக்கத்திலிருந்துகேட்டுவந்த கொடியபாதகனான துற்குணனென்னும் மந்திரியானவன்யிப்போதுசொல்லியநிதிகள் வெகுநேத்திநேத்தியெனக் கரங்களைக்கொட்டி நகைத்து ராசாதிராசனே நான்சொல்லப்போறகாரணங்களினிடத்திற் சித்தம்வைத்துக் கேட்டருள்க, ஆதியிற் சிவபிரான்திருவருளைப்பெற்றவுடன் இக்குவிசையஞ்செய்ய நடந்தது

வாயில்அவுணருக்கரசனாகவிருக்கின்ற குபேரன்பேரிலும்மகாவிஷ்ணுவி
ன்மீதும் இந்திரன்முதலிய தேவர்க்கள்மீதினும் நீர்சண்டைகொடுத்த தி
ல்லைசெயசாலிகளாகிய தம்பியனைக்கொண்டுவென்று செய வுச்சாகங்களு
டன்திரும்பினீர் அப்படியிருக்க யிக்காலத்திற் சகலரும்வணங்க அரசு
செலுத்திவரப்பட்ட தேவரீர்சிறுபிள்ளையாகிய கந்தன்மீதிற் சீறிப்போ
வதுபாந்தமாகவிருக்கின்றதோஉம்மிடமகிமைகளெப்படிக்கொத்ததெ
னில் அளவற்றகாலம் அக்கினிமத்தியில்நின்று அரிய தவங்களைச்செய்து
பரமசிவகடாட்சத்தைப் பூர்த்தியாகப்பெற்றுமாளாதவயதும்அழியாதவ
பிரத்திரோகத்தையும் சலனமற்ற இந்திரஞாலத்தேரையும் ஆக்கியாசக்கிற
த்தையும் யாசுபதமுதலிய சிறந்தபடைகளையும் ஆயிரத்தெட்டண்டங்க
ளைநூற்றெட் டுகங்கள்எதிரின்றியாளும் சம்பத்தையும் வலியையும்வீரத்
தன்மையையும்மகதயிஸ்பரியச்சம்பத்துக்களையுஞ் சம்பாதித்துயாவரும்
நெருங்கப்படாமற்சமுத்திரமத்தியிற் பலவண்ணமைகளையும் காவல்களையு
ங்கொண்டு லட் மிதாண்டவமாடிக்கொண்டிருக்கின்ற வீரமாமயெந்திர
புரிக்கு ராசபரமேஸ்பரனாகச் சகலரும் வணங்கிப்போற்ற அரசுசெய்து
வருவது முலைப்பால் மணமருத வாயையுடைய சிறுபிள்ளையைப் பெரி
தாகநினைந்து பகைத்துப்போய் போர்கொடுப்பதற்சோ மேலும் பசிப்
பிணியிற்பட்டுவாடி பலிக்கெதிர்பார்த்துத் திரிந்தலைந் துழலுகின்ற அசு
த்தராகிய பூதகணங்களையும் தூதாகவந்த பதிதனையும் உமக்குப்பயந்
தொளித்துத்திரிகின்ற விண்ணவரையும் ஒரு பிறையோசனமாக வெ
ண்ணிக கோபித்துப்போகத்துணிவீரோ அஷ்டதிக்குப்பாலகர் முதலா
கப் புறந்தந்தோடப் பவனிவரும் பெருமிதத்தைப் படைத்த எமதரச
னே இதுகளைத் தீர்க்கமா யோசித்து யிந்தநிமிஷத்திற் றமதுசேனைத்த
லைவர்களிற்சிறந்தவலிபெற்ற சிலரைச்சதுரங்கச்சேனைகளுடன்போகக்க
ட்டளையிட்டு கிறவுஞ்சபர்வதத்தையும் தேவரீர்தம்பி தாருகாசுரனையும்
வெற்றிவேலினாற் பிளந்துகொன்ற பாலசுப்பிரமணியனையும்அவனுக்கு
தவியாகவந்திருக்கின்ற பூதப்படைகள் முதலானவர்களையுஞ் சின்னபி
ன்னப்படவென்று செயத்துடன்வரக்கண்டு களித்திருப்பீர், இதுதவிர
மேலானயோசனை ஒன்றுமில்லையென்று யாவருக்குங் கொடியனாகிய து
ற்குணன்பேசிமுடிந்தவுடன் தருமகோபனென்னும் பெரியமந்திரியா
னவன் நல்லகாரியம் நீ பேசியது வெகுநேத்தி நேத்தியெனக் கரங்களை
நீட்டியமத்தி அகண்டமண்டலா திஸ்பரனாகிய சக்கிறவற்தியைப் பார்த்
துயிதனைச்சொல்வதாயினன், ராசாதிராசனே சிலம்புதண்டை கொஞ்சும்
பாதங்களையுடைய மழலைச்சொல் லருத பாலசுப்பிரமணியனை யொரு
பொருளாகமதித்து உம்மையொத்தசூரன் சண்டைக்குமேலிட்டுப்போ

வதைப்பார்க்குமிடத்திலெப்படிக்கிருக்கின்றதெனில், ஒருவன்தங்கத்தினாற்செய்து நவரத்தினங்களையிட்டிழைத்தசலட்பையைக்கொண்டுஅபலமாகியகாய்தானியங்களைப்பெறவிரும்பி பூமியைஉழுகின்றதையொக்கும், இதுவுமல்லாமல்இப்போதுஉம்மிடபேரிற்பகைத்துவந்திருக்கின்றவன்லோகநாயகனாகியபரமசிவமுமன்று உலகையளந்தமகாவிஷ்ணுவுமன்று சிருஷ்டிகர்த்தனாகிய பிரமனுமன்று முடிவிற் பிராணிகளைக் கொண்டுபோய் அதுகள்செய்த வினைகளுக்குத்தக்க தெண்டனையைச்செய்யும் எமனுமன்று தத்தடியிடும் பாலன்மீதுசீறி ஆயிரத்தெட்டண்டங்களையுங் காவல்கொண்டிருக்கும் பெருமிதத்தைப்படைத்த உம்மையொத்த தீரன்போய்ச் சண்டைகொடுப்பதினாற் பெறும்பயனென்னை, மேலும்தேவரீர்புசபெலபராக்கிரமங்களையும் சேனைப்பெருக்கையுங் கண்டமாத்திரத்திற் பாலசுப்பிரமணியன் புறந்தந்தோடாம லெதுத்துச் சண்டைகொடுக்கவல்லனோ அதனாலடகீர்த்தியல்லவோ இவையன்றியும் பகைவன்மீறிவருவனாகில்அதனைப்பெரிதாக்வெண்ணி மிகுத்தஆலோசனைகளைச்செய்வதுஅறிவினருக்கடுக்குமல்லது தெரிந்தமேலையோருக்குத்தக்கதன்று, விவேகசாலிகளா யிருப்பவர்கள்தட்சிணத்தி லொருவகையாசப்பரிசோதித்துத் தகுந்தபடிக்கு முடித்துப்போடுவர். ஆதலாற் பலபல நினைந்துழலாமல் தேவரீர்புத்திரர்களாகிய -எரிமுகன்- இரணியனென்னும் இவர்களிலொருவனைச்செலுத்துவீராகில் சிவகுமாரனாகிய பாலசுப்பிரமணியனும்அவன்துணைவரும் சேனைத்தலைவரும் பூதவெள்ளங்களும் எதிரில் நின்றுபோர்செய்யத் தாளமாட்டார்கள், நிகத்தினாற் கிள்ளிப்போடுகிற முளையைக் கூர்மையுள்ள வலியவாளினால் வெட்ட நினைக்கலாகுமோ. அதைக்கண்டவர்கள் நகையார்களோ அவ்வாறே வலியவீரனொருவனால்அதப்படுத்திப்போடத்தக்கவர்களைப் பெரிதாகநினைத்து பரமசிவ கடாட்சத்தினாற்பெற்ற வரிபவில்லைத்தாங்கித் தேவரீர்போ யெதுக்கலாகுமோ மேலும். நீர்ச்சீலை செவ்வையாகத் தரிக்கவறியாத பாலனையும் பலிக்குழன்றுதிரியும பசாசங்களையும் எதிரிகளாய்மதித்து தேவரீர்சண்டைகொடுக்கப்போகுநீரொன்னும் விசேஷித்தை நமதுசுற்றத்தினர் சேழ்ப்பராயில் நாணி எசுவார்கள், இவையன்றியும் உமக்கஞ்சிநடுங்கியொளித்துத் திரியும் தேவப்பயல்களுங் கரங்களைக்கொட்டி நகைப்பார்களே நீர் யிப்போதுபிறபலமாக யோசிப்பதைப்பார்க்குமிடத்தில் விஷ்ணுவைவென்றதீரனாகிய தாருகனையும் மாய்கையிற்சிறந்த கிரவுஞ்ச பற்வதத்தையும்வேலினால்நிமைப்போதிற் பிளந்துதள்ளியபடியாற் சிவகுமாரனைச்செயசாலியாகவும் சிங்கத்தைப்போலவலியனாய்ச்சகலனாயும்வெற்றிகொண்டிருந்த வச்சிரவாகுவைக் கண்டித்த காரணத்தினாற் றூதனாகவந்த வீர

வாகுவைத் திராணியுள்ளவனாகவும் மதித்திருப்பதாகக் காணுகின்றது, அவர்கள்மாண்டதற்குரிய காரணங்களை நினைந்துபாராமற்போனீர், அதனையுஞ்சொல்லக்கேழ்ப்பீராக - சந்திரசடாதரக் கடவுளாகிய சிவபிரான்சத்திகளனைத்தினையும் ஒன்றாகச் சேர்த்தளித்த வெற்றிவேலாயுதத்தினைபாலசுப்பிரமணியன் பிறையோகித்தபடியால் மற்றபாணங்களினாற்றடுக்கப்படாமல் உன் சகோதரன் மாண்டதல்லது தாருகனைவெல்லவல்லவர்கள்யாவர், இதுநிற்க கிறவுஞ்சனானவன் அகஸ்தியரை மடக்கிக்கொண்டுபலமாய்கைகளைக்காட்டி வருத்தியதைக்குறித்து அவர் கோபித்து சபித்தசாபசம்பந்தத்தினால் அவன்மடிந்தனன், அக்கொடிய வசைமொழிக்குள்ளாகாமலிருந்தால் கிறவுஞ்சவரையைத் திரிமூர்த்திகளாலும் அசைக்கப்படுவதோ யிதுகளனைத்தினையும் ஆராய்ந்துபாராமல் பாலயினனாகியகுழந்தை பாலசுப்பிரமணியனால் முடிந்ததென நினைக்கப்படுவதோ இதுவல்லாமல் தேவரீர்புத்திரனாகிய வச்சிரவாகுவானவன் அபேதகவசத்தையும் அழிவுபடாதவில்லையும் மீளாதபாணங்களையும் அழியாததேரையும்சிறந்தவரப்பிரசாதங்களையும்பெற்றவனன்று அதுகளைத் தேவரீர் தெரிந்து தகுந்தஉதவிகளையுஞ் செய்யாமற் செலுத்தியபடியால் அபலனாகியதூதன்கையில் வச்சிரவாகுமாண்டான், ஆதலால் யினிபலபல யோசிக்கவேண்டுவதில்லை துரிதமாய் புசபெலபராக்கிரமமுள்ள உமது சேனைத்தலைவர்களில் வீராதிவீரனாகயிருக்கப்பட்ட ஒருவனை நேமித்து தகுந்தசேனைகளை உதவியாகக்கூட்டி பிறகாசம்பொருந்திய வேலைத்தாங்கிய காளையின்மீதிற் செலுத்துவிராகில் பூதப்படைகளையும் படைவீரர்களையும்நவவீரர்களையும் அவர்களுக் கதிபனாகவந்த சிவகுமாரனையும் நொடிப்போதிற்சின்னபின்னப்படக் கலக்கித் துரத்திவிட்டுசெயவுச்சாகத்துடன்திரும்பிவருவல் அதைத்தெரிந்துமனச்சஞ்சலத்தைப்போக்கிச்சுகத்திலிருக்கக்கடவீரென்று இத்தகைய குருட்டாலோசனைகளைப்பேசியமந்திரியாகிய தருமகோபன் சொல்லிமுடித்தவுடன் உதிரத்திற்பழகிவிளங்கும் வேலைத்தாங்கிய ஒப்பற்றசவுரியபரனாகிய காலசித்தனென்னும்பெயரினையுடைய சேனைத்தலைவனானவன் சரீரங் குலுங்கக்குலுங்க நகைத்து இதனைச்சொல்லுவான், ராசாதிராசனே திருச்செந்தில்மாநகரத்திலிருக்கின்றசிவகுமாரன் பூதப்படைகளுடன் யிவடம் வருவனாகில் தேவரீர்படைவீரரிற் சிலரையேவி துத்துமுறுக்கித் துரத்திவிடுவதல்லது யிந்தசுலபமாகியகாரியத்தைப் பெரிதாகவெண்ணிமந்திராலோசனையையுஞ்செய்யவேண்டுமோ யிதற்குநடத்தவேண்டிய முயற்சிகளைப் பலரைக்கேட்டறிய நினைந்ததைப் பார்க்குமிடத்தில் விநோதமாகவிருக்கின்றது, ஆதியில்வசந்தகாலத்துக் கரசனான மன்மதன் தந்தையாகிய மகாவிஷ்ணு

னையுந் பிற்மதேவனையும் திரிலோக சக்கிறவற்தியாகிய இந்திரனையும்ம
ற்றதிசைக்காவலர்முதலானவர்களையும்வென்றதறுவாயில்அடியோங்களை
ச்சேர்த்துக்கொண்டு யாதொரு யுத்திகளையுங் கேட்டவனல்லை அப்படி
க்கிருக்க இப்போது ஒருஅறியாத சிறுபிள்ளை நிமித்தியமாக யிச்சைய
பாரியயோசனைகளைச்செய்ய நினைந்தீரோ இந்திரன்முதலாகிய தேவர்க்
களனைவரும் தங்களீபதவிகளை யிழந்து சகல செல்வங்களையும் பறிகொ
டுத்து வலியற்றுப் பதிதராகஓடியொளித்தனர், அவ்விடகிக்குப்பாலகர்ம
ற்றவிண்ணவர் உமதேவல்களிற் பிசகாமல் நடத்திவருகின்றனர், உமது
கட்டளையைக் கடந்தவர்களை ஒருவனையுங் கண்டதில்லை, அப்படிக்கிரு
க்கஅகோர உயித்தியங்களிற் பகைவனைவாட்டி கைகண்டிருக்கின்ற அவு
ணவீரனைப்பார்க்கிலும் பிணங்களைப் பிடுங்கித்தின் றுழலும் பூதபசாச
ங்களை வலியாராகவெண்ணி மயங்குவதை யிக்காலத்திற்சண்டனம்-இதை
யோசிக்குமிடத்தில் மிகவும் அனியாயமாக விருக்கின்றது. மேலுங்கலி
காலம்நேர்ந்ததாகக் காணுகின்றது, தேவரீரையொத்த சூரன் யிப்படி
ச்சும்கவலையிற்பட்டு வருந்தலாமோ அரசனே தயைசெய்து அடியேனு
க்குக் கட்டளையிடுவீராகில் யிதோநிமைப்போதிற் சமுத்திரத்தைக் கடந்
துபூலோகத்திற் சேர்ந்து சிவகுமாரனையும் அவனுக் குதவியாகவந்திரு
க்கின்ற நவவீரர்கள் இலக்கர் சேனைத்தலைவர்கள் பூதவெள்ளங்கள் மகா
விஷ்ணு- பிற்மதேவன்- இந்திரன் முதலாகியதேவர்க்களையும்வளைத்துக்
கொண்டுசாடி காலபாசத்தினாற் கட்டி தேவரீர் சன்னிதானத்திற் கொண்
டுவந்து சேற்கின்றனன், இதைதயைசெய்ய வேண்டுமென்று சேனைத்த
லைவன் சொல்லிமுடிந்தவுடன் தண்டனென்னும் மந்திரியானவ னெழு
ந்துகரங்களைக்கூப்பினவனாய்இதனைவிண்ணப்பஞ்செய்கின்றனன், மிகு
த்தபசிப்பிணியினால் வாடிவருந்தி யுழன்றுதிரிகின்ற பூதர்களும் மழலை
ச்சொல்லருத பாலனும் அவனுக்சேவலாளிகளாக விருக்கின்ற நவவீரர்
முதலாகிய பசகளும தேவரீரையொத்தசூரன் சற்றேயோசிக்கத்தக்கவலி
மையுடையவர்களோ இப்போது கூடியிருக்கின்ற மந்திராலோசனை மெ
த்தவும்அழகாயிருக்கின்றது, அவுணவீரர்வலியும் வெற்றியும் வெகுநே
த்தி ஓ! அகண்டமண்டலாதிக்பரனே தேவரீர் துணைவனைக்கொன்றசே
தியைத்தெரிந்தபோதே மேல்நடந்துபோய் பூதப்படைகளைக் கலக்கிக்
கொன்று சிவகுமாரனையும் அடித்துத்துரத்திமற்றபடைவீரனையும்உரு
த்தெரியாமற் கசக்கிச் சாறுபிழிந்தழிக்கவல்லேன் ஆனால்வெற்றிமாலைபு
னரும் புசபெலபராக்கிறம சாலியாகிய ராசபரமேஸ்பரனே தேவரீர் உத்
தாவைப்பெறுதகாரணத்தினால் யிதுபரியந்தந் தாழ்த்திருந்தனன், இக்
காலத்திலாவது கிறுபைசெய்து அடியேனுக்கு கட்டளையிட் டனுப்புவீ

ராகில்நிமைப்போதிற் போய்த் திரிமூர்த்திகளுதவியாகவந்து காத்தினும் அவர்கள் வலியையடக்கி வெற்றி வேலாயுதத்தைப் படைத்திருக்கின்ற பாலசுப்பிரமணியன் முதலானவர்களை அதாஅதஞ்செய்து வெற்றியுடன்யிவடம்வரக்கடவேனென்று சண்டன் சொல்லிமுடிந்தவுடன் சேனைத்தலைவர்களில் அனலியென்பவன் அதிககோபத்துடனெழுந்து சூரபதுமனை வணங்கி இதனைச்சொல்லுவான்- ராசாதிராசனே கேட்டருள்க, சத்திராதிகளானவர்கள்சிறியராயினும்வலியிற்குறைந்தவர்களாயினும்படைச்செருக்கைப்பெருதவர்களாயினும்மற்றுமிதரமாகியகிரமங்களிற்குறைந்தவர்களாயினும் கோபித்துமேலிட்டுவருவராயின் தட்சிணத்திலெதிர்த்துப்போய்சண்டைசெய்து துரத்திவிடாமல் எங்களுடன்மந்திராலோசனைகளைச் செய்துக்கொண்டிருந்தால் சூரனெனப் பேர்பெற்றிருக்கின்ற தேவரீருக்கழகோ- ஆண்மையோ சவுரியத்துக் கடுப்பதோவென்று அனலிபேசிமுடிந்தவுடன் பக்கத்திலிருந்த சிங்கனென்பவன் விழிகளிற்றீப்பொறிசிதற நகைத்து அக்கினிச்சுவாலைவீசப் பெருமூச்செறிந்து மனம்வேக அரசனைப்பாத்து இதனைப்பேசுகின்றனன், போருக்கஞ்சாதசுத்தவீரனானவன் ஒருகாரியம்வந்துநேருமாயின் மந்திரி பிறதானிகள் சேனைத்தலைவர்கள் முதலானவர்களைத்தருவித்து மந்திரா லோசனைகளைச்செய்தும் தந்திரஉபாயங்களை ஆராய்ந்தும் யிவ்விதங்களிற் காலதாமசஞ்செய்திருப்பரோ ஆகிலும்தமக்குப்பயந்தோடியொளித்திருந்த இந்திரனுதியதேவர்க்கள் தங்கள் துக்கவருத்தங்களை முறையிட்டுக்கொண்டகாலத்தில் அதுகளைத்திர்க்கமாயோசியாமல் பாலசேஷ்டையினுல் நல்லதுபயப்படாதீர்களெனத் தயிரியங்களைச்சொல்லித்தேர்றி அவர்களுக்கு ஆளாகவந்திருக்கின்ற சிவகுமாரன்வலியையும் அவனுட னிருக்கின்ற சேனைகளின்வீரத்தையும் அடக்கவோ யிவ்விதவெண்ணங் கொண்டிருப்பது இனியாதொரு யோசனைகளும் செய்யவேண்டியதில்லை யிர்தபாலசுப்பிற மணியன்முதலானவர்கள்மாத்திரமல்ல ஆதிகர்த்தனு லுண்டாயிருக்கின்றஅண்டகோடிகளிலிருக்கின்ற- விஷ்ணு-பிரமன்முதலாகிய தேவர்க்களனைவரும் ஏகமாகச்சேர்ந்து கோபித்துவரினும் அடியேனொருவனுகச்சென்று வளைத்துக்கொண்டு பெருங் காற்றிற்பட்ட பூளைப்புஷ்பத்தைப்போலச் சின்னபின்னப்படப் பறக்கடித்து வெற்றிபெற்றுவரக்கடவேன் தேவரீருக்கு அடியேன்காரியங்களும் வீரமும் வலியுந்தோற்றவில்லையோ வீரனுகவிருப்பவன்தன்சவுரியங்களைவிரித்துப் பேசவொண்ணுதாகையால் அடங்கியிருந்தேன் தருணத்தில்உதவியற்ற நானிருந்தென்னபலன் ஆதலாற்கர்த்தனேசண்டைக்குப்போகச் செலவுகொடுப்பீராயின்யிந்தநிமஷத்திற் சேனைகளைக்கூட்டிக் கொண்டுபோய் தேவரீர்

பேரிற்கோபித்துவந்திருக்கின்ற சத்துருக்களை வளைத்துக்கொண்டு கண்டதுண்டப்பட வெட்டியெறிந்து யிருந்தயிடந்தோற்றாமற் புறக்கடித்துக்கணப்போதிற் திரும்பிவந்து செய சமாச்சாரத்தை விண்ணப்பஞ்செய்யக்கடவேன் துரிதமாய்விடைதாருமென்று வேண்டவும், இவ்விதங்களில் துற்புத்தியையும் கொடியமனதையும் தயைதாட்சணியமென்பதைக் கிடையாதகடினசித்தத்தையும்பெற்றமந்திரி பிறதானிகள் சேனைத்தலைவர்களனைவரும் ஒருவருக்குமுன் னொருவர்முந்தி தங்களுக்குத்தோற்றிய படிக்கெல்லாம் சொல்லிவருகின்ற தருவயில் பிறதமகுமாரனாகியபானுகோபன் அவர்களனைவரையும் கையமர்த்திப்பிதாவாகிய சூரபதுமனுக்குஇதனைச்சொல்லுவதாயினன், ஐயனேதேவரீர்யிப்படிக்குமயங்குவதென்னகாரணம்- தன்மூமைமாகப்போகவரவிருந்த ரிஷிகள்தேவர்க்களைமயக்கிக்கொன்று வாட்டியிருந்த கிறவுஞ்சபற்வதத்தையும் திக்குவிசயஞ்செய்து செயசாலியாகவும் விளங்கிவந்தஉமதுதம்பி தாருகாசூரனையும் சிவகுமாரனானவன்வெற்றிவேலினாற் பிளந்து கொன்றனனென்னுஞ் சேதிதெரிந்த மாத்திரத்தில் எனக்குச்செலவுகொடுத்தனுப்பாமற்போனீர்- அழைத்தாவது யோசித்தவருமல்ல அப்படிக்கிருக்க இப்போதுமந்திரா லோசனைகளைச்செய்ய வேண்டுவதென்னை - பிதாவே வஞ்சனாகியதூதனொருவன் மாயைவித்தையினால் வானவழிக்கொண்டு யிவடம்வந்து சிலகொடுமைகளைச்செய்ய நேர்ந்தகாலத்தில் விற்பயிற்சிகள்முற்றும் பழகித்தேறாத பாலனாகிய வச்சிரவாகுவைச் செலுத்தலாமோசகலமுந்தெரிந்ததேவரீர் அல்பனாகியதூதனால் அவமானப்பட்டாயென்னும் பழிப்புரையைப் பெற்றதுமன்றியிற் குமாரனையும் பறிகொடுத்துச் சிறந்தபட்டணத்தையுஞ்சீரழியச்செய்துகொண்டனை இவையனைத்தும் தீர்க்கயோசனையைப் பாராதகாரணத்தினாற் சம்பவித்ததல்லதுவேறல்லஅப்பிறையோசகமாகிய காரியத்தைப் பெரிதாகவெண்ணிஅச்சப்படுவதும்அதற்குவேண்டும்பிறையெத்தனங்களை ஆராய்ந்துநடந்துக்கொள்ளாமல்மனம்போனபடிக்கெல்லாம்புத்தியைச்செலுத்தி அதையனுசரித்து வாழ்ந்திருப்பதும் அறிவினருக்கடுக்குமல்லது பேரறிவாளருக்குத்தக்கதோ ஆதலால்உமது துணைவனையும் கிறவுஞ்ச பற்வதத்தையும்வாட்டியபாலசுப்பிறமணியன் செயத்தையும் பூதப்படைகளின் வலிமையும்சேனைத்தலைவர்கள் வீரத்தையும் தூதாகவந்துபோனவன் செருக்கையும்நான்சென்றுவாட்டி பாசத்தினாற்பிணித்துக் கொண்டுவந்து உமதுமுன் கிடக்கடவன் ஆயிரத்தெட்டண்டங்களுக் கதிபனாய்ச் சகலரும் போற்றவாழத்தக்க தேவரீர்சிவபிரான்பெற்றபிள்ளையை எதிரியாகநினைத்து போர்செய்யப்போவது உம்மையொத்த சூரனுக்கழகன்று ஆதலா

ல்அடியேனைச்செலுத்திப் பகைவனைப்புறங்கண்டு சவுக்கியத்திலிருக்கக்கடவை, இதைநிதானித்து அவர்கள்மீதென்னையனுப்பிய காலத்தில் எதுத்துவரும் வீரர்களனைவரையும் சின்னபின்னப்படக்கண்டித்து பிரமன் விஷ்ணு- இந்திரன்முதலிய தேவர்க்களை அடித்துத்துரத்தி மீள்வனெனப் பானுகோபன்பேசிமுடிந்தவுடன் வீரகெண்டாமணிகலிக்கும் பாதங்களையுடைய- இரணியனெழுந்து சலனமற்றபிதாவைவணங்கி இதனைச்சொல்லுவான் -பலஅண்டங்களுக்கும் அதிபனாய்ச்சகலனாயும் செயங்கொண்டுவீராதிவீரனென்னும் பேர்பெற்றிருக்கின்ற தேவரீர் மழலைச்சொல்லருந பாலசுப்பிரமணியனுக்குக் கலங்கினையென்னும் வார்த்தை வெளிப்படுமாகிற்சனவிலும்மை நினைந்தபோதினுந் திடுக்கிட்டுவாடும் தேவர்க்களும் மதிப்பற்றுத்திரிவதற்கேதுவாகும் ஆகையால்யினிமந்திராலோசனையை நீங்கித் தீரனாகயிருக்கும்படிக்குக் கேட்டுக்கொள்ளுகின்றனன்,இவையன்றியும் காளகண்டமூர்த்தியாகிய சிவபிரான்பெற்றபாலசுப்பிரமணியன் நம்மைப்பகைத்துச் சண்டைகொடுக்கும்படிக்குப் பூலோகத்தில் வந்தனனென்னுஞ் சேதியைத்தெரிந்தமாத்திரத்தில் அடியேனைத்தருவித்து அவர்களைச்செயித்துவரும்படிக்குக்கட்டளையிட்டவருமல்ல என்னுடைய வீரபராக்கிரமங்களைச்சுத்தமாய் மறந்துவிட்டீர் சூரியனைத்தளைசெய்தபெருமையைவாய்ந்த என்தமையனைப் பார்வதியாசனாகியசிவபிரான்நேத்தளித்த சிறுபிள்ளையின்பேரிலும் பசியினால்வருந்திபலிக்குழன்றுதிரியும் பூதப்படைகளின்பேரிலும் சண்டைக்கனுப்புவதுபழிப்புனையாகமுடியும் ஆதலாற் சேனைகளைக் கூட்டிக்கொண்டுநானேபோய் பாலனையும் பூதபசாசங்களையும் அதனையும் வளைத்துக்கொண்டுசின்னபின்னப்படசாடி இந்திரனாகியதேவர்க்களைக் கட்டிவந்தூழிப்போதுகழிவதன்முன்னம் தேவரீர் முன்னம் விடக்கடவேன் செலவுகொடுத்தருளுமெனக் கேழ்க்கின்றதறுவாயில் அவனுக்கிளைய காளையாகியஎரிமுகனென்னும் செயசாலியானவன் இதனைச்சொல்லுவதாயினன், பிதாவேதேவரீர்பெருமைகளெப்படிக்கொத்ததெனில்,நூற்றெட்டுகெங்களாய் ஆயிரத்தெட்டண்டங்களையும் ஏகச்சக்கிறமாய் ஆளப்பெற்றதிரண்அழிபடாதவயிரத்திரேகத்தைப்பெற்றவன் சகலபுவனங்களிலும் ஒரு நாடிப்போதிற்சுற்றிவரும்வேகமுள்ள இந்திரஞாலத்தேரினையும் யாளிவாகனத்தையும் படைத்தவன் சலனமற்றதனுசையும் அட்சயத்தூணிரத்தையும்வெற்றிகொண்டல்லது மீளாதபாணங்களையும் சகலவிதச் செல்வச்சம்பத்தையும் பரமசிவகடாட்சத்தினாற் கிடைத்துவாழப்பட்டவன் தம்மையொத்தவல்லமை சாலியாகியதம்பியைப்படைத்தவன் ஒருவரினுமொருவன்அதிகசாமாத்திய முள்ளபுத்திரசம்பத்துள்ளவன் கணக்கிறந்

தவெள்ளம் ரதகெச துரகபதாதிகளையுடையவன்-விஷ்ணுவும் மயங்கத்த
க்கமாய்கைத்திறமுள்ளவன் இத்தகைய அளவற்றசெல்வச்சம்பத்தைச்சம்
பாதித்து ஒருவரும்நிகரில்லாமற் செயசாலியா யிருக்கப்பட்ட தேவரீ
ரைப்போன்றசக்கிறவற்தியானவர்கள்முற்காலத்தினும்யிப்போதும்பிற்
காலங்களினுமிருக்கமாட்டார்கள், அப்படிக்கிருக்க இமோத்பற்வத ரா
சபுத்திரியாகிய பார்பதிதேவி திருக்குமாரனேவியதூதன்செய்த சிலவி
ரங்களை நினைந்து நினைந்து வாடிமயங்கியித்தகையபெரிதான யோசனைக
ளைத்தம்மையொத்தசூரன் நடத்தப்படுவதோ சந்திரசடாதரமூர்த்தியாகி
யசிவகுமாரனையும் குறியபாதங்களையும்பருத்தபண்டியையுமுடையபூத
ப்படைகளையும் அபலனாகிய தூதனையும்சேனாபதிகளையும்யிவர்களை நம்
மிச்சூழ்ந்துவந்திருக்கின்ற தேவர்களையும் வெற்றிகொண்டு திரும்பும்ப
டிக்குளங்களில்உமக்கிஷ்டமானவர்களைச்செலுத்திச்செயத்தைப்பெற்று
க்களித்திருப்பதல்லதுபயந்துவாடிமந்திராலோசனைகளைச்செய்வதென்
னஇதுஉமதுபேரறிவுக்கடுப்பதோ யினிபலபலயெண்ணங்கள் வேண்
டுவதில்லை அடியேனுக்கு விடைகொடுத்தனுப்பும் யிதோகணப்போதி
ற்சென்று கொடியபோரைச்செய்து என் துணைவன் வச்சிரவாகுவின் சி
ரங்களை வாளினால் வெட்டியெறிந்த தூதன்முதலாகிய சகலரையும் சிவ
குமாரனுடன் துஞ்சப்படச்சாடி வெற்றிகொண்டல்லது யிந்தமகதயிஸ்
வரியச்சம்பத்தைப் பெற்றிருக்கின்றவீரமாமயேந்திரபுரிக்குத்திரும்ப
மாட்டேனென்று பற்பல சபதங்களைப் பேசினவனைப் ராசாதிராசனே க
டப்பமாலையைத் தரித்திருக்கின்ற பாலசுப்பிரமணியனைப் போர்முகத்
தில்வாட்டிச்செயித்துவரும்படிக்கு யிச்சைகொண்டவர்கள் பலரிருந்த
போதிலும் யிந்தசண்டையை அடியேனுக்கு தேவரீர் தயைசெய்து தத்
தஞ்செய்யவேண்டும் ஆதியிற்பாதலத்தி லொருவனையும் மதியாமற்கொ
டுமைசெய்திருந்த அரக்கனைச் செயிக்கப்போனதைப்போலவே யிதோ
வெளிப்படுகிறேன் மகம்மேருவையொத்தவலியதனுசையும் அபேதகவ
சத்தையும் திவ்விய பாணங்களையும் முற்காலத்திற் பிற்மதேவன் தரப்
பெற்றிருப்பதைத் தெரியாதவர்கள் யாரிருக்கின்றனர்-மேலும்பலசாலி
களாகிய அரக்கர்குலத்தையடக்கியேவற்பணிவிடைகளைச்செய்திருக்கும்
படிக்கு வெற்றிகொண் டிருக்கின்றனன், இதுசகலருக்குந் தெரிந்திருக்
கின்றது-ஆதலால்அடியேன்வலியற்றவனென்றுஇதைதீர்க்கமாயோசித்து
க்கிருபையுற்று ஆறுமுகன்பேரில் என்னையே அனுப்பவேண்டுமென்று
எரிமுகன் வேண்டுமுன்னிலையில் அப்பாகுமாரனே சற்றுநில்லெனக்
கையமர்த்தி செயசாலியாய் ஆயிரஞ்சிரங்களைப்படைத்தசிங்கமுகாசூரன்
தமையனைப்பார்த்து யிப்பிரகாரஞ்சொல்லுவான்-ராசாதிராசனேமந்தி

ரிபிறதானிகள்சேனைத்தலைவர்கள் புத்திரர்கள் முதலாகத்தங்களுக் கிருக்கின்றவீரங்களையும்வலியையும் செயங்களையுஞ்சொன்னதல்லது மகதயிஸ்பரியச்சம்பத்தைக்கிடைத்திருக்கின்ற உமக்குத்தகுதியாகிய யோசனைகளையும்யிந்தஅரசு நிலைபெற்றிருப்பதற்கடுத்த காரணங்களையுந்தெரிவித்தவான்று, ஆகலால்எனக்குத்தோற்றிய நீதிகளையுஞ் சொல்லுவேன் காதுகொடுத்துக்கேட்டுமேல்நடத்தவேண்டியதைத்தீர்மானித்துக்கொள்ளக்கடவீர் அஃதென்னையெனில், ஒருவன்தான்பெற்றநுபவத்திருக்கின்ற செல்வப்பெருக்கினாலுண்டாகும்வெவ்விதாகியகோயமானது சகல சாத்திரங்களையுங்கற்று அவற்றின் நிச்செயங்களைத்தெரிந்திருக்கின்ற மாத்துக்களே ஆயினும்அவர்களறிவையும் பேதித்துவீறிசெடுதியிற்றள்ளும் அப்படிக்குமுடிவதற்குமுன்னம் தன்விவேகத்தினாலதனைத்தடுத்து தனக்கிதந்தெநடத்தக்கஅன்புள்ளவர்களுக்குத் தன் கருத்தையுங் காரணகாரியங்களையுந்தெரிவித்துஅவர்களாலோசித்துச்சொல்லுங்கிறமங்களையறிந்து அதுகளிற்சிறந்தஒருகாரியத்தையனுசரித்துநடந்துக்கொள்ளவேண்டும் அரசன்மனம்போனவழியிலறிவைவிடாமற்றடுத்துவருத்தமின்றி நன்னெறிகளையனுசரித்துக்கீர்த்தியானாய்த் தான்பெற்றசெல்வத்துக்கழிவுநேராமல் வாழும்படியாகியநடுநிலைமைகளைச் செவிகளிற்சுறுக்கென்றேறச் சொல்லவல்லவர்களைத்தன்னுடைய நன்கிணைக்கோறத்தக்க மந்திரிகள் துணைவர்புத்திரராகநினைக்கவேண்டும், அதற்குவிருத்துவமாய் அரசனானவன் கோபம்பாவத்திற்சேற்குமென்பதைத்தெரியாமற் சீறிச்சொல்வதைத்தடுத்து நியாயங்களைக்காட்டி நல்லொழுக்கங்களிற்கொண்டுவராமல் அரசன்யிஷ்டப்படிக்குச்சரிசரியெனப்பேசப்பட்டவர்களைக்கொலைசெய்யத்தக்கபகைவரினும்மேலானசத்துருக்களாகநினைக்கவேண்டும்—இவ்வாறே ஆதிநூலாகியவேதங்களினும் முறையிடுகின்றதுசகலசாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தபெரியோர்களாலுங்கேள்விப்பட்டிருக்கின்றனம்—செல்காலம்- நிகழ்காலம் - வருகாலமெனச் சொல்லநின்ற பூதபவுஷிய வற்தமானங்களைத்தீர்க்கமாய்ஆராய்ந்து தான்பிறையெத்தனப்படுங்காரியத்தினால் நேரும்பிறையோசனத்தையும் கெடுதியையுஞ்சீர்தூக்கிப்பார்த்து ஒருகருமத்தைநன்றெனக்கொண்டு நடத்தவல்ல விவேகசாலிகள்செய்யும்பெத்தனங்களில்எவ்வளவும் எந்தவிதங்களிலும் ஒருகுறைபாடுகளும் நேரவறியாது அதற்குச்சிலதிஷ்டாந்திரத்தைச் சொல்லக்கேழ்ப்பையாக,செலத்தில் விறித்திரிகின்ற மச்சங்களானது பாய்ந்ததூண்டிலிற்கோர்த்தெறிந்தசிற்றுணவினிடத்திச்சைகொண்டு அச்சூதையறியாமல்விழுங்கிச் சலாகையிலகப்பட்டு மாளுவதைப்போல தேவரீர்யிப்போது காணப்படுகிறதைச் சுலபமாகநினைந்துபிற்காலத்திற்பிராணபரியந்தம் வருவதையோசியாம

ல்மயங்குகின்றனை, இதுகளின்வரலாற்றை விபரமாகச்சொல்லக் கேழ்ப்
பையாக,திரிலோகசக்கிரேஸ்பரனாகிய-இந்திரனையும் பொன்னுலகவாசி
களாகிய தேவர்க்களையும்விணில்அலக்கின்ற கொடியவர்கள் தாங்களரி
யதவங்களைச்செய்து பெற்றிருக்கின்ற மகதயிஸ்பரியங்களும்வலியும் வீ
ரமும்வரப்பேறுகளும் மற்றுமிராநின்ற வளங்களனைத்தும் யானையுண்
டவிளாங்கனியைப்போலப் பறிகொடுத்துக் கடையிற்றுங்களும் மாள்
வதல்லது நீடித்துவாழ்ந்தவர்களையின்னுமொனக் காட்டவல்லமோயலகா
லம்வருந்தி ஆயிரம் அசுவமேதங்களைச்செய்த பலப்பிரப்பத்தியினால்
தெய்வலோகவாழ்வைக் கிடைத்தனுபவித்திருந்த -இந்திரன்முதலிய வி
ண்ணவரைஅலைகளைவிசுஞ் சமுத்திரத்தினுலவித்திரியும் புலால்நாற்றத்
தையுடையமகரமச்சங்களைப்பிடித்துச்சுமந்துவந்துநீஒருவனன்றியிற்ப
லருக்குந்தினந்தோறுங் கொடுத்துவரும்படிக்கும் யிட்டயேவற்பணி
விடைகளைச்செய்யவுங் கட்டளையிட்டனை அவர்கள்அக்காலங்களில்மனம்
வருந்திக்கிலேசித்த பாதகங்கள் வினிற்போவதோ இச்செய்கைகளைப்பி
ராணனிடத்திச்சையிற்றவர்களன்றியில் யிதரமாகவிருக்கின்றவர் யாவரு
ந்துணிந்து செய்யமாட்டார்கள், மேலும் அப்படிக்குத் துணிந்துநாமி
ட்டயினத்தொழில்களை நடத்திஒடுங்கியிருந்த விரவெண்டயங்களணிந்
தபாதங்களையுடைய-தேவராசன் மனைவி கற்புக்கரசியாகிய-இந்திராணி
யினிடத்திச்சைகொண்டு கொடியராட்சதர் பலரையேவிய காரணத்தினு
ற்பதியையுமிழந்து தன்தேவியுடன் இந்திரனானவனை ஒடியொளிக்கச்செ
ய்தனை இவையன்றியும் அகண்டசாம்பிறுச்சியச் செல்வவளங்களைக்கொ
ண்டுதிரிலோகங்களுக்கும் ராசதானியாகவிருந்தபொன்னுலகை அக்கினி
தேவனுக்கிரையாகக்கொடுத்துச் சேரழித்ததுமன்றியில்- அவன்பிள்ளைச
யந்தனையும் தேவர்க்களையும் பிடித்துவந்துசிறைசாலையிற் கொடியகாவ
லில்வைக்கச்செய்தனை - அக்காலத்தில் அந்ததேவர்க்கள்பட்ட வருத்
தங்களுக்குச்சகிக்கப்படாமையாற்பரமனைக்குறித்து முறையிட்டுக்கொ
ண்டகொடுமைகளினுல் ராசாதிராசனே நமக்கெல்லாமிப்படிக் கொத்
தஅல்லல்வந்துசம்பவித்தது இத்தகைய தீயசருமங்களை நடத்தினுல்கெ
டுதிநேருமென்பதை வுண்மையாகநினைந்து சிலபரிகாரங்களைத் தேடிக்
கொள்ளாமல் அயிஸ்பரியங்களையனுபவித்திருக்கின்ற செருக்கினுல் மய
ங்கிப்பித்தனைப்போலத் திகைக்கின்றனை,தெய்வலோகத்தையழித்துக் க
ட்டிவந்து சிறையிலடைத்திருக்கின்ற தீனராகியவிண்ணவர்களை யின்ன
மும்விடச்சம்மதமில்லாமலும் அவர்கள்படுந் துன்பங்களைக்கண்டும் ஆ
தரிபாமற்கடினசித்தனாய் யிதக்கமென்பதைமறந்தனை,சண்முகதேவர்உ
ன்மீது சீறிவந்து போர்செய்யவிருப்பது யிந்தகாரணத்தைக் குறித்தல்

லதுவேறுமுண்டோ ஆதியில்நாமனைவரும் வருந்தித் தவங்களைச்செய்
ததறுவாயிற்பரமசிவம் அதற்கிரங்கிவந்துவேண்டியவரப்பேறுகளைக் க
டாட்சித்த முன்னிலையில் யிந்தஅகண்ட சாம்பிராச்சியச் செல்வங்களை
நூற்றெட்டுகங்கள் அநுபவித்திருப்பீர்களெனச் சொல்லியிருக்கின்றனர்
அத்தவணையிதுவனாயில்முடிந்தது- இவ்வாக்கியத்தைமகதயிஸ்வரியங்க
ளையநுபவித்துவருங்களிப்பினால் மறந்தனை உன்னைவெறுக்கவேண்டிய
தில்லைவிதிவலியையமதியினால்வென்றவர்களொருவருங்கிடையாது, இதுவு
மல்லாமற்பரமசிவம் வரப்பேறுகளைத் தந்து போம்போது உங்களையா
வரும் வெல்லமாட்டார்கள் கடையில்நமது சத்தியானதுகண்டித்துவிடு
மெனக்கடாட்சித்திருக்கின்றனர், அதற்குத்திஷ்டாந்திரமாகப் பாலசுப்
பிரமணியன்செலுத்திய வெற்றிவேலானது செயசாலியாகிய தாருகனைக்
கண்டித்துஉயிரையுண்டது யிதையன்றியில் நமக்குவேறு காட்சியும்வே
ண்டுமோ கபடசூதுவஞ்சகமென்பதைச் சற்றுந்தெரியாத பேதைமன
தையுடையதேவர்க்களை அநீதமாகவருத்திச் சிறையிலும்வைத்த காரண
த்தினாலன்றோ யிவ்வருத்தங்கள் உனக்குவந்துநேர்ந்தது,இம்மை மறு
மைகளில் யாதொருநல்லபிறையோசனங்களையும்பெறச்செய்யாத அவ்வ
காரியத்தை முக்கியமாகவெண்ணிநடத்தினை,இதனால் மனஞ்சஞ்சலத்திற்
பட்டுமுன்பின்தோற்றுமல் வாடுவதுவிவேகசாலிகளுக்கழகோ தாய்தந்
தையரைப்பாலரைமங்கையரை தவவிரதயாராகியமகத்துக்களை வேதபாரா
யணராகிய பிராமணரைபரத்துவநிச்சயங்களைத்தெரிந்திருக்கின்றயோகி
களைமற்றும் நற்கருமங்களைச்செய்துவரத்தக்க பெரியோர்களை மனம்
வருந்தச்செய்தவர்களல்லரோ- கடையில் தென்புலத்தைச் சேர்ந்துரௌர
வாதிநரகக்குழிகளில் மாறிமாறிவிழுந்து அளவற்றகாலம்வருந்தி யுழல
ப்பட்டவர்கள் அரசனேயிதுகளையெல்லாந் தீர்க்கமாயோசித்து நன்னெ
றிகளைக்கருதி யிக்காலத்திலாவது தீனராகியதேவர்க்களைச்சிறையைவிட்டு
நீக்குவையாகிற் குமாரதேவர்உன்மீதெதுத்துச் சண்டைகொடுக்கவர நி
னைக்கமாட்டார், மேலும்நாமிதுவனாயிற்செய்திருக்கின்ற சணக்கற்றகு
ற்றங்களையும் மனதில்நினையாமல் நாளைக்கேபூதப்படைகள் முதலானவ
ர்களுடன் பூலோகத்தைக்கடந்து திருக்கயிலைக் கெழுந்தருளுவர்- ஓஅ
ண்ணுவே,இதுகளனைத்தினையும் உறுதியாகநம்பி தெய்வபத்திவிசுவாசம்
சீவகாருண்ணிய முதலியநற்கருமங்களை யநுசரித்துவருஞ் சிரேஷ்டரா
கியதேவர்க்கள் காவலைநீக்காமல் சற்றுதாழ்ப்பீராகில் திரிபுராதிகளை ந
கைத்தெரித்த சிவபிரான்பெற்ற பாலசுப்பிறமணியதேவர் துரிதமாகவ
ந்துமடக்கிக்கொண்டு அவுணப்பூண்டில்லாமற் களைந்தெறிந்து கடையி
ல்நம்மையும் வெற்றிவேலினாற்பிளந்து கொல்வதுநிச்சயம் இதனைப்பி

சாகவெண்ணவேண்டுவதில்லை இதுகளைச் சத்தியமாகக்கருதி துரிதமாய்
நீயிழைக்கவேண்டும் மாற்கத்தைத் தேடிக்கொள்ளக் கடவையென்று ப
லபலவிதங்களைக் காட்டிச்செவிகளிற் சுறுக்கிடச்சொல்லி முடிந்தவுடன்
குலநாசகாலனாகிய சூரபதுமன் கோபங்கொண்டு சோடை யிடிகளைப்
போலச்சரங்களைத்தட்டி பெருமூச்செறிந்து சிங்கத்துக்கொப்பாகக்
கெற்சித்து கோரதந்தங்கள் பிறைகளைப்போல விளங்கநகைத்து பற்க
ளைக்கடித்துத் தேகமெங்கும் வியர்க்க நவரத்தினகசிதமாய் விளங்கியி
ருக்கின்ற கிரீடத்தைத்தாங்கிய சிரத்தையசைத்து தன்தமையனாகிய சி
ங்கமுகாசூரனைப்பார்த்து இதனைச்சொல்லத்தொடங்கினன், அடாதம்பிநல்
லமந்திராலோசனைகளைக்குறித்துக்காட்டினை வெகுநேத்தியாக விருக்கின்
றதுபற்கள்முழுமையும் யின்னமும்முளையாத பாலனுக்கும் நமதேவற்
றொண்டுகளைச் செய்துபயந்தோடி ஒளித்திருக்கின்ற இந்திரனுக்கும்
திருக்கயிலையைக் காத்திருக்கின்ற பூதப்படைகளுக்கும் அபலராகியதே
வர்களுக்கும் பயந்துதம்பிமதிமயங்கி யிப்படிக்கெல்லாம்சொன்னதா
சக்காணுகின்றது திரிமூர்த்திகளாலும் அசைக்கப்படாத புசபெலபராக்
கிரமமுள்ள உனக்குயிந்தயேழைமதி கிடைத்தகாரணமென்னமோ தெ
ரியவில்லை,ஆதியில்நாம்செய்த தவங்களுக்கிரங்கிப்பரமசிவமெழுந்தரு
ளிவரங்களைக்கொடுத்தகாலத்தில்நமக்குக்கடாட்சித்திருக்கின்ற சம்பத்
துகளுக்குமுடிவுயின்னகாலமென்றென்றைக்குறித்ததையும் தமதுசத்
திப்படையானது நம்மை வெல்லுமெனச்சொல்லிய வாக்கியங்களையும்
நான்கேட்டதேயில்லைஉனக்குமாத்திரம் தனித்துக்காட்டினரோ-தெரி
யாது அடாதம்பிவஞ்சகன்சூதுகளை நன்றாகச்சற்றுனை புதிதாகிய யேற்
பாடுகளைஉண்டுபண்ணுகின்றனை ஒருகாலம்யிந்தசம்பத்துகளை நாற்றெ
ட்டுகங்களனுபவிக்கக்கடவீர்களென்று சொன்னதாகவே யிருக்கட்டும்
அக்காலத்தில் கங்காசடாதரமூர்த்தியாகிய சிவபிரான் கடாட்சித் திருக்கி
ன்றஅழிவற்றவரப்பேறுகளை யாவரால்செயிக்கப்படும் லோகநாயகனாகி
யபரமசிவத்தின்வாக்கியம் பொய்படுவதுண்டோநல்லது அந்தசிவன்சத்
தியினாலல்லது மற்றயாவராலும்உங்களை வெல்லப்படாதென்று சொன்
னதாகவே யிருக்கட்டும் சத்திக்கும்சிவத்துக்கும் பேதமுண்டோ-ஆத
லால்,நாம்செய்ததவங்களுக்கிரங்கி மனதொருமித்துக் கொடுத்தவனே
அழிப்பனென்பதுதப்பிதம் இப்படிக்குப்பேசுவது வழக்கமல்லது நீ
தியமாவதன்று தாருகனனவன்நம்மைப்போலஅழிவுபடாத தவங்களை
ச்செய்யாத ஏதுவையினாற்சலனமற்றபேறுகளைப்பெற்றவனல்ல அக்கா
ரணத்தினாற் பாலனேவியவேலினால் மாண்டனன்,வச்சிரவாகுவும் சிறுபி
ள்ளையாதலால் தந்திரஉபாயங்களை யோசித்துப் போர்கொடாமல் மே

லைவிழுந்துபோராடியபடியால் தூதன்கையிலகப்பட்டுக்கொண்டிறந்தா
ன், காரணகாரியங்களினாற்சம்பவித்தயிவைகளும்ஒருகுறைபாடுகளோஅ
டாதம்பிரமனருளியபடிக்கு ஆயிரத்தெட் டண்டங்களையும் பெருகா
லமாக ஏகச்சக்கிறத்தை நடாத்தி அரசுசெலுத்தித் தேவர்க்கள் வம்சபரம்
பரையாய்அடித்தொண்டுகளைச் செய்யப்பெற்றேன் எத்தனையவல்லமை
சாலிகள்வந்தெதுத்துப் போர்செய்தபோதினும் சலனப்படாமல் வெல்
லவல்லேன்மேலும் எனக்கொப்பாகப்பேசத்தக்கசாமற்கியம்பெற்றவர்
களொருவருமில்லை, ஒருகாலங்கனவிலும் நினைக்கவேண்டாம் நவங்களைச்
செய்துழலுந்தேவர்க்களில் அரக்கர்களில்அவுணர்களில் மற்றுமெத்தனை
யர்களிலும்ஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டுகங்களாகஎதிரின்றிஅ
ரசுசெலுத்திவந்தவர்களுமுண்டோமேலும்அழிவற்றவயிரத்திரேகத்தை
யுந்திற்காயலைசயும்பெற்றவர்கள்யாவர்நான்பெருகாலமாய்த்தேவர்க்களைச்
சிறையிலடைத்திருப்பதைப் -பிரமன்-விஷ்ணு- முதலிய சிறந்தகடவுள
ர்கண்டிருந்தும் அதைக்குறித்தொன்றும் பேசப்படாதென்றஞ்சி தங்
கள்பணிவிடைகளைச்செய்துவருவர் அப்படிக்கிருக்கத் தனித்து வந்திரு
க்கின்ற சிறுபிள்ளையோ அழிவற்றவென்னுயிரைவாங்கவல்லவன் சலனமற்
றவச்சிரதிரேகத்தையும் அசைவற்றவலியையுமிறுதியில்லாத ஆயுளையும்
பெற்றிருக்கின்றவென்னை ஒருவராலும் பின்னப்படுத்தப்படாதெனிற்
சிவகுமாரனோ யெதுத்துநம்மைப் பொருதழித்துக்கொல்லவல்லன் ம
ழலைச்சொல் லருதபால னென்னை வெல்வனெனச்சொல்வதைப்பார்க்கு
மிடத்தில் உலகை விளக்கி வானத்திற் சஞ்சரித்திருக்கின்ற சூரியனைக்கனி
ந்தகனியென்றுகண்ணில்லாதவன்காட்டச்சைசயிற்றவன்மிகுத்த ஆவலுட
ன்பிடித்துண்டதற்குச்சமதையாகவிருக்கின்றதென்றுபற்பலதயிரியங்க
ளையும்பிறமாதவெண்ணங்களையுஞ்சூரபதுமன்காட்டிப்பேசியவனைத்தை
யுஞ்சிங்கமுகாசூரன்கேட்டுநல்லகாரியம்தமையனேயின்னஞ்சிலநீதிகளை
க்காட்டுகிறேன்கோபியாமற்கேட்டருள்கவென்றுசொல்லுவான் பவழம
லையையொத்த திருமேனியையும் கங்கைபிறைநகுவெண்டலைவிளங்குகி
ன்றசடாமண்டலத்தினையும் திரிநேத்திரங்களையும்சதுர்புயங்களையும்சா
ளகண்டம் என்புசற்பாபரணங்களையுந்தரித்து ஆதியந்தமற்றபரம்பொ
ருளாய் தேவதேவோத்தமனாய் சுயஞ்சோதிப்படிவத்தையும் பெற்றிருக்
கின்றசிவபிரான் மிக்கோலங்களைப்பெற்றிருப்பதற்குக் காரணங்களைக்
கேழ்ப்பையாக, சிருஷ்டி திதி சங்காரந் திரோபவம் அனுக்கிரகமெனச்
சொல்லநின்ற பஞ்சகிர்த்தியங்களையும்நடத்தி யிவ்வுலகத்தில் ஆதிதொட்
டிருக்கின்ற எறும்புமுதல் யானை யீறாகத்தோற்றும் எண்பத்திநான்கு
நூறுபிரசீவபேதங்களின் கர்மபேதங்களைமாற்றி மேலாகியமோட்ச

சாம்பிராச்சியத்தினைகடாட்சிக்கக்கிருபையுற்றதாகும் இத்தகையமங்கள குணாதிசெயங்களைப் பெற்றிருக்கின்றலோகநாயகனைச் சிந்தித்து பூர்வத்திலரியதவவிரதங்களைச்செய்தனை, அதற்கிரங்கி காட்சிதந்து ஒப்பற்றவரங்களையுங் கடாட்சித்து அதற்கிறுதிகாலத்தையும் நியமித்துப்போயினர், அந்தமகதைஸ்வரியங்களை அனுபவித்துவரும் மமதையினாற் சிவபிரான்கிருபைசெய்திருக்கின்ற கட்டளைகளைமறந்தனை—ஓ அண்ணலே, ஒருவரால் பெறுதற்கரியசெல்வத்தைக்கிடைத்திருக்கின்ற தேவரீர் தற்மமார்க்கத்தை யனுசரித்து அதற்கடுத்த செங்கோலைச்செலுத்தி சவுக்கியமாயிராமற்செல்வச்செருக்கையே பெரிதாகநினைத்து நமக்குத்தாயாதிகளாயும் சன்மார்க்கங்களைக் கடைப்பிடியாகநம்பி நடந்துகொள்ள வல்லவர்களாயும்சிவகாருண்ணியராயுமிருக்கப்பட்டதேவர்க்கள்மீதுவிருதாவாய்க்கோபித்துநினைவொன்றுமிரக்கமுமில்லாமல் பெருகாலமாய்அரியசிறையிலும் வைத்திருக்கின்றனை, அவ்வருத்தங்களைச்சகிக்கப்படாமல்அவர்கள்தீனதயாபரனே சற்வசிவகாருண்ணியனே எங்கும்பரிபூரணமாகநிறைந்திருக்கின்றபரமே நாங்கள்படுந்துயரத்துக்கிரங்கியாதுகாத்துரட்சிக்கவேண்டுமென்று முறையிட்டுக்கொள்ளுவதைத்திருச்செவிகளினேற்றுகிருபாநிதியாதலால் அவர்களை வருத்திவருகின்ற உன்வலிமையும் மதாங்காரத்தையும் அழித்துஉன்வம்சநாசமுஞ்செய்யப் பரமன்நினைந்திருந்தபோதிலும்நீதிமானாதலால்மேற்குறித்தபடிக்குச்சகலவளங்களையுங் கடாட்சித்ததாமே அதைமாறுவது தருமமல்லவென்றும் அதிகவரங்களைப் பெற்று பலஅண்டங்களைப் பரிபாலித்துவரும் உன்னைக்கொல்வதுசகலருக்குமரிதெனநினைந்து தமதருளுருவமாக விளங்குங் குமாரசுவாமியைக்கொண்டு அதப்படுத்தநிச்சயித்தவராய்ப் பூர்வீகமாகிய தமதுதிருக்கோலத்தைத்தாங்கி நுதல்விழிகளின்மூலமாய் 'செக்கர்வானத்தை நிகர்த்ததிருமேனியையும் பூரணச்சந்திரோதையத்தைநிகர்த்தசண்முகாரவிந்தங்களையும் நீண்ட பன்னிருபுயாசலங்களையும்பெற்ற ஆதிமூலமாகவிருக்கின்றபாலசுப்பிரமணியனைப் படைத்தனர், மக்கள்-மிருகம்- பறவைமுதலிய அழிபடுந்திரேகத்தைப்பெற்ற சீவராசிகளைப்போல நினைக்கவேண்டாம் சுயஞ்சோதிமயமாகியமூலகாரணக்கடவுளினது நுதலினிடத்தில் வேதங்களுமறிதற்கரியதேவன் அவதரித்திருக்கின்றனர், நல்லொழுக்கம்-அறிவு-ஞானமுதலிய சத்கருமங்கள் விளங்காத மனதைப்பெற்றபாமராளுக்கு எக்காலத்தினுந்தோற்றப்படாத சிற்பரமூர்த்தியைப் பாலன்பாலனெனப் பேசுகின்றனை, அப்பகவன் பெருமைகளிற்சிலகாரணங்களைத்தெரித்தவனாயிற் சொல்லக்கேழ்ப்பையாக- அஷ்டதிசைகளையும்மூடவல்ல கிளைகள்பெருத்த ஆலமரமானது, சிறியவிதையினிடத்தட

ங்கியிருப்பதைப்போல யிவ்வுலகங்களனைத்தும் அத்தேவன்நினைப்பிலு
திக்கும் மேலும்-அருவமாயும்- உருவமாயும்-அருவுருவாகவும்- வினை
ப்போகங்களாகவும்- அதற்குக்காரணமாகவும்-விளங்கி அண்டாண்டபு
வனங்களையும் அதிற்பட்ட சராசரங்களையும் மாயாவிலாசங்களினால் நட
ப்பிப்பர்,இத்தகையமகிமைகளையுடைய மூலகாரணக்கடவுளினது திரு
விளையாடல்களை யாவரால்நிதானித்துத் துதிக்கப்படும் ஆதிநூலாகவும்ச
கலபிராணிகளுக்கும் அறிவைவிளங்கச்செய்யும் ஆதாரசத்தியாகவும் வி
ளங்குகின்ற சதுர்வேதங்களின் நிச்சயங்களைப்பேசும் உபநிடதங்களின்
முடிவிற்சொல்லும் ஞானவுணர்ச்சிக்குமெட்டாமல் புதியரிற்புதியனாய்
தேவாதிதேவனாய்-மூலப்பொருளாய்- ஆதியந்தமாய்-உயிருக்குயிராய்
எள்ளினெண்ணெயைப்போலப் பிரபஞ்சங்களனைத்திலும் பரிபூரணமா
கநிறைவெய்திமணியின்பிரகாசத்தைப்போலவும்விளக்கினொளியாகவும்
ஒலியினோசையாகவும்விளங்கிஞானபாதத்தைத்தமதுருவாகப்பெற்றிருக்
கின்ற ஆதிகற்தன் குணாதிசெயங்களை அறிவினராகவும் அவன்மாய்கையி
த்பட்டுழலவல்ல பாபிகளாகிய நம்மையொத்தவர்கள் துதித்தற்கெளிய
தோ-மெய் - வாய்- கண்-மூக்குச்-செவி யென்னும் பஞ்சேந்திரிய வி
டையங்களை யடக்கியானெனதென்னும் பாசபெந்தங்களையறுத்து பரத்
தின்நிச்சயங்களைத்தெரிந்து ஒருமைப்பட்டமனதுடன்பரமனைக்கருத்தி
லிருத்தி யோகசாதனைகளைச் செய்யவல்ல தவச்சிரேஷ்டர்களும் யோகிய
ரும் சித்தர்களும் மற்றுமிருக்கின்ற ஞானவான்கள் மகத்துக்களும் அத்
தேவன் பெருமைகளைச்சற்றுந்தெரிந்தவர்களல்லர் விரித்துவிரித்துசொ
ல்லுவதென்னை தாமேதமது மகிமைகளைக் கண்டறியாதவராகவிருக்கின்
றனர்-இவையன்றியும் சைவத்துக்குப் புறம்பாகிய யிதர சமையங்களை
யனுசரித்து வருபவர்கள் அதனையே முக்கியமாக ஸ்தாபித்துவாதிக்கும்
மூடர்போதனைகளுக் குட்பட்டு நடந்துகொள்ளும் அறிவில்லாதவர்கள்
எக்காலத்திலும் அத்தேவன்செயல்களைக் கண்டறியமாட்டார்கள் பரிசுத்
தவான்களாய்ப்பரத்தின் நிச்சயங்களையுணர்ந்து தத்துவநிலையைச் சாதிக்
கும்பேரறிவினைப்படைத்த மகத்துக்கள் அவன் குணாதிசெயமகிமைகளி
ற்சிறிதறிவர்,சகலத்தையும்விளக்கும்அறிவும் அதனிடத்தில் விளங்கப்ப
ட்டவனும் அதைக்காண்பவனும் அதினாலுண்டாகுங் காட்சிப்பொருளு
ம்அதற்குக்காரணமாக விருக்கின்ற மனம் -புத்தி- சித்தம்- ஆங்காரமெ
ன்னும்நான்கு கரணங்களும்-சத்த-பரிச-ரூப- ரச-கெந்தமென்னும்ப
ஞ்சேந்திரியவிடையங்களும்நன்குதீங்கென்னும் யிருவினைகளும்-செல்
காலம்-நிகழ்காலம்-வருகாலமென்னும்-திரிகாலங்களும் -யிடம்-பொ
ரு-ளேவலென்னும்உபகரணங்களும் யிவைகளிலடங்கியபயன்களுமாய்

அந்ததேவன்விளங்கியிருப்பர், இதுவுமல்லாமல் ஆதிகாலத்தில்-மகாவிஷ்ணு-பிர்மதேவன்-யிவ்விருவரும் சிருஷ்டிதிதித்தொழிலை முடித்துவரும்மமதையினல்முத்தொழில்களையும்நடத்தவல்லயாம்பொருள் நாம்நாமெனவாதுதொடுத்து அந்ததேவன்மாய்கையிற்பட்டு பலகாலம்போர்செய்துகடையில்அவனனுக்கிரகத்தினல் மயக்கவாசனைகளை யொழித்துப்போற்றி பழையபடிக்குத்தங்கள்பதவிகளிற்சேர்ந்து தமக்குரியதொழில்களைநடத்தினர், ஆதியாகவிருக்கின்ற தத்துவங்களைக்கடந்து மேல்நிற்கப்பெற்ற கடவுள்அவனன்றிவேறில்லை- மேலும் சிவகாருண்ணியனய் வேதங்களின் மூலமாகியகுடிலையாய் அதன்பொருளாய்சராசரங்களடங்கியபுவனங்களும் அவற்றினல்நிறைந்திருக்கும்அண்டகோடிகளும்அதுகளினிடத்தில்விளங்குகின்ற பலபொருள்களும் அதற்குமேலாகவுமாகவுமிருப்பர், அவன்மாய்கைத்திறங்களைக் கடந்தவ ரொருவருமில்லை இன்னமும் வேதாகமங்கள் அவன் பெருமைகளைத் தெரியாமல் மயங்கித்தேடுகின்றது, இத்தகையசகலமங்கள குணதிசெயங்களையுடைய மூலகாரணக்கடவுளைப் பாலனென்றிகழ்ந்துபேசினை, யிந்த மகாபாதகத்தினல் அவுணர்கிளைகள் முற்றினும்மடியக் கொடுப்பதுமல்லாமல்வயிரத்திரோசத்தையும் சலனமற்றதிற்காயசையும் பெற்றிருக்கின்றனமென வீறியிருக்கின்றஉன்னையும் நொடிப்போதிற் கண்டித்துப்போடுவர்- அப்படிக்குச்செய்யாமற் சேனைகளைக்கூட்டிக்கொண்டு சகலாயுதபாணியாய்வந்த காரணமென்னெனில், யிக்காரணங்களைத் தெரிந்து நல்லறிவு விளங்கிபிழைப்பயென்னும் அனுக்கிரகத்தினல் யிச்சின்னங்களைப்பெற்று வந்ந்தாகநினைக்கக்கடவை ,அரசனே பரமசிவகடாட்சத்தினல் ஆயிரத்தெட்டண்டங்களையாளப்பெற்றனமென்று உள்ளமகிழ்திருக்கின்றனை, தத்துவ பேதாபேதங்கள்முழுமையு மறிந்தவனல்லை, அவன்நினைப்பில்பல கோடிஅண்டங்களுதித்தது அதுகளின்பெருமிதங்களைக் கேழ்ப்பையாகில்மதிமயங்கிவாடுவை இதுவுமல்லாமற்பிரணவப்பொருளிருபச்சத்தசாகரங்கள்முதலிய பற்பல வஸ்துக்களையுங்கொண்டு விளங்கும்அண்டங்களைக்குறிக்குமிடத்திற் கணக்கிலடங்காததெனப் பெரியோர்களா யிருப்பவர்கள் சொல்லக்கேட்டனம்-அதுகளினென்றி லடங்கியிருக்கும்புவனங்களின் நிலைமைகளையும் பெருமிதங்களையும் யாவரா லறியப்படும் முடிவற்றபொருள்களுக்குநியதிசொல்லப்படுவதோயித்தகைசிறப்பையுடையபலகோடி அண்டங்களையுந் தமதனுக்கிரகத்தினல் நிமைப்போதினுண்டாக்கவும் மீட்டுமவைகளையழிக்கவும்வல்லவனுகிய தேவதேவோத்தமன்அவனென்றறிந்து கொள்ளக்கடவை, உன்னுடன் சண்டைதொடுக்கவேண்டுமென்னுந் திருவிளையாடலைநினைத்து திருக்கயிலையைக் கடந்

ஞுபூலோகத்தில்வந்து திருச்செந்திலென்னுந் தலத்திற் சேர்ந்திருக்கின்ற
னர், வயிரத்திரேகத்தைப் பெற்றிருக்கின்றனமெனமிகவும்மகிழ்ந்திருக்கி
ன்றனை. இந்தகியாயகத்தைமறந்துவிடவேண்டும்மிருவினைகளின்காரண
ங்களின்படிக்குமன்னுயிரனைத்தும் பிறந்து அவ்வினைப்போகங்களைய
னுபவித்தபின்புமாண்டும் மீளவுமுதித்தும்இவ்விதத்திலலைந்துதிரியுமெ
ன்றுபேரறிவைப்படைத்த மகத்துக்கள் வசனிப்பர்- இதுகளைப்பார்க்
குமிடத்தில் நீ முடிவற்றிருப்பையோ பெருமையிற்சிறந்த தெய்வலோ
கத்தினும் பூமண்டலத்தினும் பிறந்தவர்கள்சிலகாலந் தாங்கள்செய்திரு
க்கின்ற வினைப்போகங்களையனுபவித்த பின்பு அரிதாகப்பெற்றயிவ்வு
டலைவிட்டிறந்துபோவது நிச்சயம் அதிசசிலாக்கியமாகச் சொல்லப்பட்
டஉமது வச்சிரதிரேகமும் பிறிதிவுசம்பந்தப்பட்டிருப்பதால் அழியா
மல் நீடித்திருக்குமோ பரமசிவகடாட்சத்தினாற் சலனமற்ற சிறந்தவர
ங்களைப்பெற்றிருக்கின்றனம் அதுகளையாவராலும் அசைக்க வொண்ணா
தென்றுபேசினை, அதற்குச்சிலதிஷ்டாந்திரத்தைச்சொல்லக் கேழ்ப்பை
யாக, சொற்கமத்தியபாதலமென்னுந் திரிலோகங்களினுமிருக்கின்றசீவ
ராசிகளைப்போல அற்பாயசாக வழிந்துபோகாமல் அளவற்றகாலமுன
துதிரேகமிருக்கும் சடையில் மற்ற பிராணிகளைப்போலவே நசித்துப்
போமல்லது சாச்விதமாகவிருக்கமாட்டாது மேலும் - பிரமன் - விஷ்
ணுமுதலிய சிறந்ததேவர்க்களை நிலைபெற்றவர்களாகப் பேசுவதுமுகஸ்து
தியல்லது வேறில்லை அந்ததேவதைகளும் சர்வசங்கார காலத்தில்நாசப்
படுவர், ஆதலால் நீபெற்றிருக்கின்றவயிரப்படிவமும் அழிவற்ற வரங்க
ளும் திரிலோகவாசிகளும் வணங்கிப்போற்ற பற்பல யுகங்களிருந்த பி
ன்புநாசமடைவதற்கையமில்லை, அரசனே நீ பொன்னுலக வாசிகளாகிய
தேவர்க்களை நீதிக்கிடையூறாகிய யீனத்தொழில்களைச் செய்யப்பணித்தது
மன்றியில்பெருகாலங்களாக அரியசிறையிலும்வைத்து வருத்துவதைநி
னைந்துதிருவுளமிரங்கி சர்வசீவ தயாபரமூர்த்தியாக விருக்கின்ற ஆதிதே
வன்சோபித்துபூர்வத்தி லுனக்குத்தர்மனுக்கிறகித்திருக்கின்ற வரப்பே
றுகளைத்தாமே நீக்கநினைந்தால்யிதுதகாதெனச்சொல்லி அவரைத்தடுப்ப
வர்கள் யாவரிருக்கின்றார்கள், ஆதலாற் சலனமற்ற யிந்தஅகண்டசாம்பி
ராச்சியச்செல்வத்தை யனுபவித்துக்கொண்டு நீயும் உன்புத்திர மித்திர
களத்திராதிகள் முதலாக அதப்பட்டுப்போகாமல் யின்னஞ்சிலகாலம் சுக
சீவிகளாக யிருப்பீர்களென நினைந்துயிப்போதுகுறித்தநற்கருமங்களை
த்தெரிவித்தேன்- அரசனே யிதுகள்உனக்குச் சம்மதப்படுமாகில் வாடி
வருந்திச் சுகியற்று துக்கசாகரத்திலழுந்தியிருக்கின்ற தேவர்க்கள் சிறை
யையிந்தநிமிஷத்தில் விடுதலைசெய்துவிட்டு சிவபிரானருளிய செல்வ

த்திற் சவுக்கியமாகயிருப்பீரொன்று விவேகசம்பன்னனாகிய சிங்கமுகன்
சொன்னகாரணங்களைச் செவிகளில்நாராசத்தைக்காச்சிச்சொருகியதைப்
போலச் சூரபதுமன்கேட்டமாத்திரத்தில் நவரத்தினகசிதமாயிராநின்ற
கிரீடமணிந்திருக்கும் முடியையசைத்து ரவுத்திராகாரமாகக்கோபித்து
த்தம்பியைப்பாத்துச்சிலவாசகங்களைப் பேசுவான், அறிவில்லாதவனே
கேள் காற்றினாற் றள்ளுண்டு அக்கினிச் சுவாலையிற்பட்டு கங்காநதியின்
அலைகளினால் மொத்துண்டுசரவணப்பொய்கையிற்சேர்ந்தலைச்சற்பட்டு
வேற்றுமாதர்கள் ஸ்தன்னியபானத்தையுண்டு பசியினால்வாடி வருந்திய
ழுதுவிளையாடியிருந்தநேத்தியப்பாலனையோ பரப்பிரம சொரூபமாக
நினைந்திருக்கின்றனை- வஸ்துநிச்சயத்தைச்சொல்லக் கேழ்ப்பையாக,
பலபாண்டங்களிலிருக்கின்ற செலத்தில்வானத்தில் விளங்குஞ் சூரியன்
வெவ்வேறாகக்காட்டுமாறுபோலப்பரப்பிற்மமென்கிறவொருபொருள்
அளவற்ற உயிர்களெனப் பேர்பெற்று பற்பல வுருவுகளைத்தாங்கித் தம
துமாய்கையின்விக்கத்தினால் அளவற்றபேதாபேதங்களாகநடிப்பர்,மே
லும்கடமானது உடைந்தகாலத்தில் அதிற்காட்டியவெளியானது ஆகாய
த்திற்கலந்து போவதைப்போல உடற்பேதங்களனைத்தும் முடிவெய்தி
யகாலத்திற் பழையபடிக்குமனோவாக்குக் கெட்டாதசோதியாகியகற்தனை
க்கலந்துஅபேதமாகவிளங்கும்-கடுக்கன்-மோதிரம்-சந்திராரம்-அரை
வடமெனச்சொல்லும் பலஆபரணங்களும்ஒருபொன்னினிடத்துண்டா
ய்விளங்கிமீட்டும்அதுகளையழித்தகாலத்திற் பழையபடிக்கொன்றுபடுவ
தைப்போல யிவர்பரமென்றும் யிவரல்லவொன்றும்பேதித்துயிருவகை
யாகநினைக்கவேண்டாம் தேகமாத்திரம் வேறல்லது பரப்பிற்மசொரூ
பமாகவிருக்கின்ற உயிரனைத்தும் ஒன்றாகவேயிருக்கும் அடாதம்பிஇப்
போது நான்சொல்லிய ரகசியங்களை நிதானித்துப்பாரீப்பையாகில்உண்
மையாகவே விளங்கும் யிதுநிற்கவீரமும் வலியுமில்லாதவர்கள் பலரு
ம்பிகழத்தக்கதாக தாழ்ந்தும் புசபலபராக்கிறமமும் அறிவுமுள்ளவ
ர்கள்சகலரையும்வென்று தன்வயப்படுத்திவாழ்வதும்யிவ்வுலகத்தில்சா
தாரணமாய்நடந்துவருகின்றது அவ்வாறேஅசைவற்றவபிரத்திரோகத்தை
யும்திற்ராயசையும்பெற்று சகலரையும்வென்று அரசுசெலுத்திவரும்நா
ன்மிகவுஞ் சிறந்தவனாகும்சண்முகனென்பவன் சிறியனாதலால்அவனைநா
ன்வெல்வது உண்மையாகும் யிதுவல்லாமற் பூற்விகமாக வாழ்ந்திருந்
தநம்முடையபெரியோர்களைக் கொன்று அவர்கள்செல்வங்களை அபகரி
த்துக்கொண்டபழம்பகைவராதலால்தேவர்களைவாட்டி யறிவற்றசிறை
யிலடைத்துவைத்திருக்கின்றனன்,யிதுபுதிதல்லசக்கிறவற்தியாக விருப்
பவன் கொடுமைசெய்யப்பட்டவர்களைத் தேடிப்பிடித்து தெண்டிப்ப

னுதருதியென்று நீதிசாஸ்திரங்களினுஞ் சொல்லுகின்றது, ஆதலாற்
பொன்னுலகவாசிகளாகிய தேவர்க்கள் சிறையையொருபோதும் விடமாட்
டேன்மேலும் ஓடியொளித்துத்திரிகின்ற இந்திரனையும் மற்றதேவர்க்க
ளையும் பிடித்துவந்து பாரவிலங்குகளைப்பூட்டிக்காவலிற்படுத்த விருக்
கின்றேன்பலபலசொல்லியாவதென்ன இதைக்குறித்துஏகநாயகனாகியப
ரமேஸ்பரனே கோபித்தெதுத்துவந்தாலும் தடையின்றிச்சண்டைசெய்
யக்காத்திருக்கின்றனன் - ஆசையால் யினியித்தகைய அவலமாகியசிறுவார்
த்தைகளைப்பேசாமலிருக்கக்கடவை தம்பிநானென்ன சொல்லப் போகி
றேன் ஒருதாய்வயிற்றி லென்னுடன் கூடப்பிறந்து என்னைப் போல
வேபலனாயும்வென்றுசெயசாலியாகவிருந்த நீ கடையில்நமதுவம்சபர
ம்பரையாய் வயிரிகளாக விருக்கின்றதேவர்க்களைவாட்டிகீர்த்தியைப்பெ
றாமல்அவர்களுக்குப்பயந்து யிப்படிச்சொத்தயிதங்களைப்பேசக்கற்ற
னை இவ்விதகீனனாகிய தம்பியிருக்கிறபோது எனக்குவேறொருபகைவரும்
வேண்டுமோ - அடா தம்பி பலகொடிமுடிகள் மகம்மேருவினிடத்தில்வி
ளங்குவதுபோல ஆயிரஞ்சிரங்களையும் ஆலின்விழுதுகளுக் கொப்பாக
யிரண்டாயிரம் நீண்ட கரங்களையும் அணிபடப் படைத்ததினாற் பிறை
யோசனமென்னை குலவண்மையையும் சவுரியத்தையும்அழித்து பயித்
தியக்காறனிலும் அறிவிழந்துமயங்குகின்றனை பூர்வீகமாய் வீறியிருந்
த அவுணர்வழிபாடுகளையும்வெற்றிகளையும்மறந்துபதிதர்களாகிய தேவர்
க்களைப்போலப் பிதப்பையானாய் அண்டங்களெங்கும் புகழநின்றகீர்
திப்பிறதாபங்களையும் புசபெல பராக்கிறமங்களையும் வீரத்தன்மையை
யுங்கொள்ளாய் ஆதலால் உன்னையொத்த குலயீனனுக்கு மேருகிரியை
யொத்த வில்லேன் வரமுயற்சிகளினாற் பெற்றிருக்கின்ற சிறந்த தேவாஸ்
திரங்களேன் அபேதவயிரக்கவசமேன் யிதுகள் சுமையாகக் காணுகின்றப
டியால் தலையைச்சுழற்றியெறிந்துபோட்டு மவுனதீட்சையைவகித்து அரி
யதவங்களைச்செய்தற்குக்கானகத்தை நோக்கிப்போய்விடக்கடவை, அடா
தம்பிமானாபிமானத்தையும் வயிரத்தையும் மறந்து புவனங்களெங்கனு
ம்கொண்டாடவல்ல அவுணராசர்கள் பிறபாவங்களையுஞ் செயங்களையும்
வீரபராக்கிறமங்களையும் நாசப்படுத்துவதாகத் - தான்வளர்ந்தகாட்டையழி
க்கநேர்ந்தகோடாலிக்காம்பைப்போலச் சிறந்தயிக்குலத்தைநீறுசெய்ய
ப்பிறந்தனை யிந்தராசயோக்கியமாகிய மரபிற் ஸ்ரேஷ்டியதற் கொருபய
னையுங்கிடைக்காமல் வியர்த்தனாய் அடா குலஅதமா நீயிருந்ததினாற்பய
னென்னைச்செற்றவனோடொத்தவனானை அல்லது உயிருடன்திரியும்பிண
த்துக்குச்சமதையாக நினைக்கவேண்டும் அடா தம்பி எதாகிலும்முக்கிய
மாயிருக்கின்ற காரியங்களைக்குறித்துமந்திராலோசனைகள்செய்யவேண்

மோகில் இதவனாயில் உன்னைச் சிரேஷ்டனாக மகித்திருந்தேன் இப்
யமைக்குப்பபப்பிருந்திசொள்ளுவையெனத் தெரியுமாகில் உன்னைத்த
ருவிக்கமாட்டேன் பரமசிவ கடாட்சத்தினாற்பெற்ற வீரவாளாயுதத்தை
க்களிகின்டுந் .துடுப்பைப்போல என்வீணிற் சுமக்கின்றனை, அதைவீ
சிப்போட்டு பிரமனைப்போலப் பஞ்சாங்கமொன்றை கரத்திற்கொண்
டுபிருதசாலத்தில் வீடுகள்தோறும நுழைந்து அவர்களுக் கிதம்பெறத்
தினச்சரியைகளைச்சொல்லி அவர்கள் தயைசெய்து கொடுக்கப்பெற்ற தி
யாகத்தைக்கொண்டு வயறுவளர்க்கிறது மெத்தவும் உத்தமமாகக்காணு
கின்றது, தனழைத்திருக்கின்ற கள்ளியின் கிளைகளைப்போல விளங்கும்சிர
ங்களிற் கிரீடமேன் புயங்களில் வாகுவலயங்க ளென்னத்துக்கு அடா
தம்பி இந்தபூமியானது வெகுகாலமாய்ச்சுமந்துவாடத்தக்கபருத்த உட
லையெடுத்துக்கெட்டாய் இனியென்செய்வை ஆதியில்விவேகம் விளங்கா
தபாலபருவமாதலால் மதிமயங்கி தீரனைச்சென்று எமனை வளைத்துக்
கொண்டு சாடிடும் வருணனைப் பொருதுபிடித்துவந்து விலங்குபூட்டி
ச்சிறைச்சாலையில்வைத்தம் தேவர்க்களை பெருங்காற்றிற்பட்ட பூளைப்
புஷ்பத்தைப்போலச் சின்னபின்னப்பட் டலையக்கலக்கியும் இவ்விதமாக
அளவற்றசெயங்களைப்பெற்று மரபையும் புகழையும் விளக்கினை, இப்
போது பேரறிவுதோற்றியபடியால் அவமாகிய பெண்களைப்போல
நாணிமயங்குகின்றனை, அடாதம்பி யினியுன்னைப் போடியாக நினைக்கு
ங்காலம் சம்பவித்தது நம்முடைய தாயாகிய மாயையானவள் வருந்தி
யுன்னைப்பெற்றபின்பு பலதலைகளைப்பெற்ற பிள்ளையான உன்புசபெ
லபராக்கிரமத்தையும் பிறதாபத்தையும் யின்னமும்வந்து பார்த்தவள
ல்லஇப்படிக்கொத்த சூரனைப் பார்க்கப்பெறாமல் அருவமாய்ப் போ
னதுதாய்செய்தகுறையோ அல்லாவிடில் உன்னைக்காணத்தான் சகிப்ப
ளோ பிடறிமயிரைப்பெற்றிருக்கின்ற சிங்காசன்தனக்குப்பகையாகிய
தொன்றைக்கண்டமாத்திரத்திற் பதைபதைத்துச்சீறி எழுந்துபாய்ந்து
அதனைச்சின்னபின்னப்படக் கண்டித்துக்கொல்லும் அத்தகையசூரத்தை
ப்பெற்றசிங்கமுகத்தைப்பெற்ற பலதலைகளைக் கிடைத்திருப்பது தம்பி
வினைகமுடிந்தது இனிபலபல சொல்லியாவதென்ன யிதோ நானேபோ
ய்வளைந்துகொண்டு செயசாலிகளாகிய பூதவெள்ளங்களையும் நவவீரர்மு
தலிய சேனைத்தலைவரையும் திரிபுரதகனனாகியசிவபி ரான் பிள்ளை பா
லசுப்பிரமணியனையும் அவனை நம்பிச்சூழ்ந்துவந்திருக்கின்ற - பிரமன் -
விஷ்ணு - இந்திரனுரிய தேவர்க்களையும் நிமைப்போதிற் சின்னபின்ன
ப்படச்சாடிவென்று செயசாலியாய்மீளவல்லேன் - ஆதலால் நீபயந்துசா
கவேண்டாம் துரிதமாய்உன்பட்டணத்தைச்சேர்ந்துமூலைவீட்டிற் பதலை

மாயொளித்திருக்கக்கடவை, அடாதம்பிமோசம்வரப்போகுது சீக்கிரமா
ய்நடநடவென்று சற்றும் விவேகமற்ற சூரபதுமனானவன் யிவ்விதங்க
ளில்அவமதித்துப்பேசியதறுவாயிற் சிங்கமுகாசூரனுக்கு அதிகவோபம்
பிறவேசித்து- அண்ணனுடன் விவேகமும் நீதியும் வெகுநேத்தியாகவிருக்
கின்றதென்றுநகைத்து விழிகளில்அனற்பொறிசிதறவும்மனங்கார்ந்திவே
கவும் சுவாசம்விடுந்தோறும்புகையுமனலும்விசவும்பொறுத்துமுடியா
மல்இதனைநினைக்கின்றனன், அவுணர்குல பெருமானாயிருக்கின்ற தமை
யனானவன் யிக்காலத்தில் நேர்ந்திருக்கின்ற யிடையூறுகளை நீங்கிப்பி
ழைத்திருக்கும்பொருட்டுபற்பல உறுதிகளைச்சொன்னேன் விவேகமற்
றவனாதலால் அதுகளினாற் கிடைக்க விருக்கின்ற பிறையோசனங்களைத்
தெரிந்துநடந்துகொள்ளவறியாமல்வீணில்என்னைத்தூறுகின்றனன், மே
ல்வருங்குறைபாடுகளை எவ்வளவும் நிதானித்துப்பார்க்கவில்லை சாகிற
தேதுணிபாகக்கொண்டிருக்கின்றனன், ஒருவன் நன்னெறிகளை புத்திமி
னனாக விருக்கின்றவனுக்குப்போதித்தால் அவைகளும் வியர்த்தமாய்த்
தானும் பயித்தியக்காறனாவானென்று பேரறிவாளர் சொல்லுவார்கள் அ
தைஉண்மையாகக்கண்டனம், வேம்பு- எட்டி- யிந்தமரங்களுக்குத் தே
னையும்- பாலையுங்- கலந்து விஸ்தாரமாக விட்டு வளர்த்தபோதினும் அத
ன்கைப்பருதுபோல அறிவீனருக்குப்போதிக்கும் நடுநிலைமைகளும்ப
ழிபட்டுப்போம் மேலும் சிறந்தமகதயில்பரியங்களையனுபவித்து வீறி
யிருக்கின்ற யிந்தசூரபதுமனுக்குப்பலஉண்மைகளையும் நல்லொழுக்கங்
களையுங்காட்டிப் போதித்தபோதினும் தான் நீடித்திருக்கின்றவகையற்று
நன்னெறியிற் றிரும்பாமற்பழையபடியே துணிந்திருக்கின்றனன், இ
தைப்பார்த்தமாகத் தெரிந்தும் வியற்தமாய்க்கெட்டுப்போறானென்கிற
பரிவினால்வருந்திச் சீர்படுத்த நினைத்தாலும் ஆவதொன்றையுங்காணே
ன்பிறூர்த்தவினையின் முயற்சிகளை ஒருவன்தந்திரத்தினால் கடக்கப்படுவ
தூண்டோ ஆழ்வினையின்படிக்குநற்காலம்நேர்ந்தமுன்னிலையிற்சகலமு
ம்லாபமாகவேமுடியும் அவ்வாறேதுற்காலம்சம்பவித்தபோதுர் தான
ருமையாகத் தேடிப்பதலப்படுத்தியிருந்த சிறந்தபதார்த்தங்க. ளனைத்து
ந்தனக்குத்தோற்றுமல் மறைந்துபோகத்தீனனாய் வாடுவன்- யிந்ததேவ
ரகசியங்களை யொருவராலுமறியவொண்ணாது தேவதேவோத்தமனாகியபர
மசிவத்துக்குமாத்திரம் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல விளங்கு
ம்செக்கரஞ்சடாமண்டலதாரியாகிய சிவபிரான் சூரபதுமனுக்குயிர்தசெ
ல்வத்தையனுக்கிரகித்தகாலத்திற்குறித்திருக்கின்றநியதியாகிய நூற்றெட்
டுகங்களுங்கழியுநாள்நெருங்கியிருக்கின்றது- ஆதலாற்சூரபதுமனும்யி
வ்விடத்திலிருக்கின்ற சகலரும்தடையின் றிமாள்வர்வெகுகாலம்பதினைய

யிழந்துவாடிமறைந்திருக்கின்ற இந்திராதியதேவர்கள் செய்துவரும்தவவிரதங்கள் விண்பட்டுப்போவதோ சகோதரசம்பந்தத்தினால் யின்னமுஞ்சிலகாலம் சுகசீவியாயிருக்கநினைந்து நன்னெறிகளைப் போதித்தபோதினும் முடிவுகாலம்நேர்ந்தபடியால் ராசாதிராசனாகிய தமையன் என்வாக்கியங்களை எவ்வளவும் உண்மையாகத்தம்பி யனுசரியாமல் தடுத்ததுமன்றியிற் பலநிந்தையாகிய வசனங்களையும் பேசினான், ஆதலால்நாம்தப்பித்துக்கொள்ளு மார்க்கமேதெனின்- அண்ணாசிறியனாதலால் யேதோதெரியாதபுத்தியினாற் சிலகருமங்களைச்சொன்னேன், அக்குற்றங்களைப்பொறுத்து ரட்சிக்கவேண்டுமென்று ராசாதிராசனைவேண்டிக்கொள்வதுதகுதியாகும் யினியேதொரு நன்கினைக்குறித்துந்தகுந்த மாறுத்தரம்பேசுவதழகல்லகிலதினத்தில் தேவதேவோத்தமனாகியகுமாரதேவர்கரத்தில்விளங்குகின்றவெற்றிவேலினால் நமதுதமையன்மாள்வதற் கையமில்லை அந்தகோரத்தைப்பார்ப்பது நம்மால்முடிவதன்று ஆதலால்இவனுக்கு முந்திநாம்மாண்டுபோவதே காரியமெனத் தீர்க்காலோசனை செய்துமுடித்துக்கொண்டு மனதைத்தேற்றிக்கோபத்தையாற்றி மானத்தையடக்கிச் சிங்கமுகாசூரனவன் சீக்கிரத்திலெழுந்து ஆயிரத்தெட்டண்டங்களுக்குஞ் சக்கிரவர்த்தியாகவிருக்கின்ற சூரபதுமன்பாதாரவிந்தங்களில்விழுந்து சேவித்தெழுந்து கரங்களைக்கூப்பிநின்று- ஓஅண்ணா அடியேன்மீதிற்கோபியாமற்ஷெமித்தருள்க, பேரறிவுவிளங்காதசொல்பக்கியானத்தைப்பெற்றிருக்கின்றஅடியேன்பேசியபிசகுகளைக்குறித்துப்பாராட்டாமற்கிருபைசெய்துரட்சிக்கவேண்டும்சிற்றுணர்வைக்கிடைத்திருக்கின்ற சிறியர்முடித்ததப்பிதங்களைப் பெரியோர்களாக விருப்பவர்கள்ஷெமித்துப்பழையபடிக்குப்பாதுகாத்துவருவது கடமையாதலால்,தம்பியாகியநான்செய்த தப்பிதங்களைப் பேரறிவு விளங்கியிருக்கின்றதேவரீரல்லது யிதரரால் மன்னிக்கப்படுவதோ ஆகையால் என்னறியாமையைப்பொறுத்து ஆதரிப்பதன்றியில் யிதைநினைந்துநினைந்து கோபித்து அடியேனையிகழவேண்டாம் தேவரீர் சித்தப்படியே யுத்தசன்னத்தனாயிந்த நிமிஷத்திற்போய் எதுத்துவருகின்ற சத்துராதிகளை வளைந்துகொண்டு பெருங்காற்றிற்பட்டபூளைப்புஷ்பத்தைப்போலச் சாடுவேன்அதைதேவரீர்கண்டு களிக்கப்போறீர் பாலசுப்பிரமணியன் முதலாகியபகைவர்மீதில் யிந்தநிமிஷத்தில்நடந்து வெற்றிபெற்றுவருவதற்குச்செலவு கொடுக்கவேண்டுமென்று சிங்கமுகாசூரன்வணங்கிக் கேட்டமாத்திரத்தில் மனம்பூரித்து திரோபரவசத்தனாய்ச் சந்தோஷசாகரத்தில் மூழ்கி அக்காலத்திலுண்டாகிய தயையினால் தம்பிவாவாவென் றழைத்து மார்பிலிறுகத்தழுவிக்கொண்டு இதனைச்சொல்லுவான், ஆயிரம்டணுடகு

டங்களைப்பெற்றிருக்கின்ற ஆதிசேஷன்வாசஞ்செய்யும் பாதலத்தினுஞ் சமுத்திரஞ்சூழ்ந்திருக்கின்ற பூமண்டலத்தினும் தெய்வலோகத்தினும் திசைகளினும் அளவற்றஅண்டங்களினும் நீபோய் சண்டைகொடுத்தத ருவாயில், ஐயனே உனக்கரியதொன்றிருந்ததோ உன்னுடைய புசபெ லபராக்கிரமங்களுக்கு ஒருவரை ஒப்புச்சொல்லப்படுவதோ குறைவற்ற சேழ்விகளையுடைய தம்பிமுன்னம் நீபேசியகாரணங்களனைத்தையும்பா ர்க்குமிடத்தில் என்மனத்துணிவையும் உறுதிப்பாட்டையுந் தெரிவதா கச்சோதித்ததைப்போற்காணுகின்றது உன்னிடபுசபெலபராக்கிரமமெ ன்னவெனக்குத்தெரியாததோ சத்திராதிகளென்னும் மதயானைக்கூட்டங்க ளைவாட்டும்வீரசிங்கத்தையொத்தவனல்லையோ பகைவரெதிர்ந்து வருகி ன்றனரொன்னும் வசனஞ்செவிகளிற் பட்டமாத்திரத்தில் வடவாமுகாக் கினியைப்போலச்சீறிப்போய் வளைந்துகொண்டு சாடிக்கொன்றுவது ச த்துராதிகள் வணங்கிக்கீழ்ப்பணிந்தகாலத்தல்லது நீ பெற்றிருந்த கோ பத்தைத்தணிவையோ அத்தகைய உன்சூரத்தையும் புயவன்மையையும் நான் நன்றாகத்தெரிந்தவனல்லனோ நீ முன்னம்பேசியபோது சற்றுமய ங்கினேன் ஆதலால் தம்பியிப்போது உன்பட்டணத்துக்குப்போய்த் திக் குதீபாந்திரங்களில் வாசஞ்செய்திருக்கின்ற உன்சதுரங்கச்சேனைப்பெ ருக்குகளையும் அழைப்பித்துக்கொண்டு செயத்துடன்களித்திருக்கச்சட வை ஒருகாலம் சிவகுமாரன் பூதப்படைகளுடன் சண்டையைக் குறித்து யிவடம்வருவனாகில் தட்சிணத்திற்சொல்லியனுப்புவேன் உடனே உன் சேனாசமுத்திரங்களுடன் வரவேண்டும் ஒருவேளை பாலசுப்பிரமணியனா னவன் உன்பட்டணத்தைநோக்கி வருவனாயில் நீயெதுத்துப்போவதற்கு முன்னம் அதிவேகமுள்ளதூதர்களைத் தூண்டிவையாகில் உடனே நமது சதுரங்கச்சேனைவெள்ளங்களனைத்தையும் கூட்டிக்கொண்டு வேகமாய் வந்துசத்துருக்களைச் செயங்கண்டு திரும்பக்கடவேனென்று அவுணரு க்கரசனாகிய சூரபதுமன்சொல்லியபோது- அண்ணாதேவரீர் குறித்தகா ரியங்கள்தகுதியானதெனக் கொண்டாடி நீர்கட்டளையிட்ட படிக்குச் செய்வேனெனச்சொல்லி வணங்கிச்செலவுபெற்றுக்கொண்டுபோய் தன் பதியைச்சேர்ந்து பழையபடிக்குச் சிங்கமுகாசூரன் அரசுசெய்திருந்த னன், இப்பிரகாரஞ்சம்மதித்து புசபெலபராக்கிரமசாலியாகிய சிங்கமு கன்மீண்டபின்பு சூரபதுமனனவன் தன்சபையிற் கூடியிருந்த- மந்தி ரிபிறதானிகள் சேனைத்தலைவர்கள் பிள்ளைகள் முதலானவர்களுக்குச் செ லவுகொடுத்தனுப்பிவிட்டுச் சபையைநீங்கி ராசபரிவட்டங்களுடன்செ ன்று நவரத்தினமயமாய் மேருகிரியைப்போல யாரித்துவிளங்குந் தன் னரமனையைச்சேர்ந்து இந்திரபோகத்தினுமேலான செல்வங்களையனுப

வித்திருந்தனன்-சவுனகாதிரிஷிகளே, அகண்டசாம்பிராச்சியச்செல்வவிபவங்களையனுபவித்திருக்கின்ற சூரபதுமன்சகலனையுந்தருவித்து மந்திராலோசனைகளைச் செய்ததையும்மற்றகாரணங்களையும் இதுபரியந்தம் சொன்னோம் யினி-இந்திரன்-பிரமன்-விஷ்ணு-முதலாகிய தேவர்க்கள்துணைவர்கள் முதலாகச்சூழ்ந்துபோற்றத்திருச்செந்திற் பதியென்னுந்தெய்விகஸ்தலத்தில் வீற்றிருந்த சரவணபவன்நடத்திய வெத்தனங்களையும்மற்ற கதாப்பிரசங்கங்களையுஞ் கேளுங்கோளென்றுசூதபுராணிகர்சொல்லத்துடங்கினர்,

---

## மயேந்திரகாண்டம்

## முற்றிற்று,

இரண்டாவதுபொஸ்தகமுடிவு.




---

சி-அண்ணாமலைமுதலியாரால்

அச்சிற்பதிக்கப்பட்டு

பிரசுரஞ்செய்யலாயிற்று.

| படலம். | பக்கம் |
|---|---|

## உற்பத்தியாகாண்டம்.



## மயேந்திரகாண்டம்.



முற்றும்.